# பாலைவன நீரோடைகள்




சார்ல்ஸ் இ. கௌமென் அம்மையார்

தமிழாக்கம்:

அன்புமணி ஜாண்




கிறிஸ்தவ இலக்கிய சங்கம்

# முன்னுரை



நாம் மோட்சப் பிரயாணிகள். நமது மோட்சப் பிரயாணத்தில் துன்பமாகிய பாலைவனத்தைக் கடந்து செல்லவேண்டியதிருக்கும். அப்பாலைவனத்தைக் கடக்குங்கால், இந்நூல் நீரோடைபோல் பெரிதும் பயன்படும்.

ஆத்ம சாந்தி தரும் ஜீவ தண்ணீர் இயேசு சுவாமியே.

'வனாந்தரத்திலே தண்ணீர்களும், கடுவெளியிலே ஆறுகளும் பாய்ந்தோடும்' (ஏசா. 35:6).

பதிப்பாளர்

## ஜனுவரி 1



'நீங்கள் சுதந்தரிக்கப்போகிற தேசமோ, மலைகளும் பள்ளத்தாக்குகளும் உள்ள தேசம்; அது வானத்தின் மழைத் தண்ணீரைக் குடிக்கும் தேசம்; அது உன் தேவனுகிய கர்த்தர் விசாரிக்கிற தேசம்; வருடத்துவக்க முதல் வருடத்தின் முடிவுமட்டும் எப்பொழுதும் உன் தேவனுகிய கர்த்தரின் கண்கள் அதன்மேல் வைக்கப்பட்டிருக்கும்' *(உபா. 11:11,12).*

பிரியமுள்ள சிநேகிதரே, இன்று நாம் அறியாத ஒன்றின் ஆரம்பத்திற்கு வந்திருக்கிருேம். ஒரு புது வருடம் நமக்கு முன்பாக இருக்கிறது; அதை நாம் சுதந்தரித்துக்கொள்ளப்போகிருேம். அதில் நாம் யாது காண்போம் என்று யார் சொல்லக்கூடும்? என்ன புது அனுபவங்கள், என்ன மாறுதல்கள் ஏற்படப்போகின்றன? என்ன தேவைகள் தோன்றப்போகின்றன? என்பதை அறியோம். ஆனுல் நமக்கு ஆறுதலளித்து ஆனந்தமுண்டாக்கும் இச்செய்தி நமது பரம பிதாவிடமிருந்து வருகிறது. 'உன் தேவனுகிய கர்த்தர் அதை விசாரிக்கிருர்,' 'வருடத்தின் முடிவுமட்டும் கர்த்தரின் கண்கள் அதன்மேல் வைக்கப்பட்டிருக்கும்.'

நமக்கு தேவையான யாவும் பரத்திலிருந்து அருளப்படுகின்றன. அங்கே வற்ருத நீரூற்றுக்களும், குறைவுபடாத ஊற்றுச்சுனைகளும், நீரோடைகளும் உள்ளன. கவலைகொண்டிருப்பவனே! இதோ, பரம்பிதாவின் கிருபை நிறைந்த வாக்குத்தத்தம் இருக்கின்றது. நாம் பெறுகின்ற கிருபைக்கு ஆதாரம் அவரேயாகையால் அது பொய்ப்பதில்லை. கர்த்தருடைய பட்டணத்தை மகிழ்ச்சியடையச் செய்யும் நீரோடை வெப்பத்திஞலோ மழையின்மையிஞலோ வற்றுவதில்லை. வெப்பமும் வறட்சியும் வற்றவைக்க முடியாது.

அந்தத் தேசம் மலைகளும், பள்ளத்தாக்குகளும் உள்ள தேசம். அது முழுவதும் இலகுவான சமமான பாதையன்று. வாழ்க்கை ஒரே சமபூமிபோன்று இருந்தால் நாம் சலித்துப்போவோம். நமக்கு மலைகளும் பள்ளத்தாக்குகளும் தேவை. மலைகள் பலன் தரத்தக்க அநேக பள்ளத்தாக்குகளுக்கு மழைத் தண்ணீரைச் சேகரிக்கின்றன. ஆம்! அதுபோலவே நம்முடைய அனுபவங்களும் இருக்கின்றன. மலைபோன்ற கஷ்டங்களே நம்மைக் கிருபாசனத்தண்டைக்கு ஓடச் செய்து மழைபோன்ற ஆசீர்வாதங்களைக் கொண்டுவரச் செய்கின்றன. நாம் வாழ்க்கையில் எந்த மலைகளைக் கண்டு ஆச்சரியப்பட்டு இவை வெறுமையானவை, பயனற்றவை என்று எண்ணுகிருேமோ அவைகளே மழையைக் கொண்டுவருகின்றன. மலைப்பாங்கான இடங்களில் வசித்துச் செழிப்பாய் வாழக்கூடிய எத்தனையோ மக்கள், வனந்தரப்பிரதேசத்தில் வாழமுடியாமல்

அழிந்து தங்கமயமான மணலால் மூடப்பட்டுப்போகின்றனர். கரடு முரடும், ஏறுவதற்குக் கடினமுமான மலைகள் இல்லாவிட்டால் எத்தனையோ மக்கள் கடும் பனியால் அழிக்கப்பட்டுப் பெருவாரிக் காற்றினால் நிலைகுலைந்து, மரங்களின் கனிகள் அற்றவர்களாய்ப் போயிருப்பார்கள். அதுபோல கர்த்தர் அனுப்பும் மலைகளான கஷ்டங்கள் நம்முடைய எதிரிக்கு முன்னாக நம்மைப் பாதுகாக்கும் அருள் மலைகளாகும்.

நமக்கு வரும் சோதனைகளும், கஷ்டங்களும் நமக்கு என்ன செய்கின்றன என்று சொல்லமுடியாது. நீ நம்பிக்கையோடே மாத்திரம் இரு. இன்று நம்முடைய வழியில் நம்முடைய கரத்தைப் பிடித்து வழிகாட்ட பிதா நம்மண்டையில் வருகிறார். இது நமக்கு நன்மையும் ஆசீர்வாதமுமான வருடமாயிருக்கும்.

'நாம் அறியாத பாதையில் நம்மை அழைத்துச் செல்கிறார். நம் நடை மெதுவானாலும் மேல்நோக்கி நடத்துகிறார். நாம் வழியில் களைத்துத் தங்குகிறோம்; இருட்டும் புயலும் பாதையை மறைக்கின்றன. ஆனாலும் மேகம் நீங்கினால் கர்த்தரின் நடத்துதலைக் காண்போம். கலக்கம் நிறைந்து இருக்கும் ஆண்டுகளிலும் நம்மை நடத்துகிறார். நம்முடைய நம்பிக்கை, பயம், சந்தேகம் ஆகியவற்றைத்தாண்டி, சேதம், கவலை நிறைந்த இருண்ட நாட்களிலும் நம்மை வழி நடத்துகிறார். அவர் சித்தம் நிறைவேறுகிறது. அவர் இன்னும் நம்மை நடத்துகிறார்.'

—என். எல். சின்செண்டார்

## ஜனுவரி 2

'உயர உயரச் சுற்றிலும் சுற்றுக் கட்டுகளுக்கு அகலம் அதிகமாயிருந்தது; ஆலயத்தைச் சுற்றிலும் உயர உயர ஆலயத்தைச் சுற்றி சுற்றி அகலம் வர வர அதிகமாயிருந்தது; ஆதலால் இவ்விதமாய்க் கீழ் நிலையிலிருந்து நடுநிலை வழியாய் மேல் நிலைக்கு ஏறும் வழி இருந்தது' (எசே. 41:7).

1 இன்னும் முன்னேறிச் செல்க உன் பாதை;
இன்று இதற்காக நான் ஜெபிக்கிறேன்
ஆண்டுகள் செல்லும்; காலம் மறையும்
ஈண்டும் மேல் நோக்கியே செல்லுக.

2 இன்னும் மேல் நோக்குக இவ்வாண்டிலும்
இன்னும் உன் பாதை அறியாதே
பின்னும் விடாது மேல் நோக்கியே செல்க
இன்ப நேசரின் பக்கமாய்.

3 துன்ப காலத்தும் மேல் நோக்குக
இன்ப மன்னர் இயேசுவுடன் நடந்தே
துன்பத்தால் நெஞ்சம் உடைந்திடினும்
மேன்மேலும் ஊக்கங் கொள்க.

4 இருள் நீங்கிக் கதிரவன் எழும் வரையிலும்
இருள் நிறைந்த நிழல் மறையும் வரையிலும்
அருள் நாட்டில் அன்று விழிக்கு மட்டும்
கிருபாசனமுன் நிற்குமட்டும் மேற் செல்லுக.

தாபோரின் மலே உச்சி நமக்கு முன்னுக இருக்கையில் நாம் பள்ளத் தாக்கில் பனியின் மறைவில் இளைப்பாறியிருத்தல் தகாது. மலைகளின் பனி எவ்வளவு சுத்தமானது. மலைகளின் காற்று உற்சாகம் ஊட்டக் கூடியது. மேலே உள்ளவர்களின் பங்கு இன்பமானது. அவர்கள் ஜன்னல்கள் வழியே புதிய எருசலேமைக் காணக்கூடியவர்களாயிருக் கிறார்கள். அநேக பரிசுத்தவான்கள் சூரியனைக் காணுதிருக்கிற நிலக்கரி சுரங்க வேலையாட்கள்போல் இருளில் வாழ்வதில் திருப்தி யடைந்திருக்கிறார்கள். அவர்கள் பரம தைலத்தை யணிந்து பொலிவு பெற்றிருக்கலாம். ஆனால் அதற்குப் பதிலாக அவர்கள் முகம் கண்ணீரினால் அழகு குன்றியிருக்கிறது. அநேக விசுவாசிகள் அரண்மனை மேல் மாடியில் உலாவி லீபனோனையும், பரிசுத்த பூமியை யும் காணவேண்டிய பொழுது, இருட்டறையில் துக்கித்துக்கொண் டிருப்பதைக் கண்டு நான் துக்கப்படுகிறேன். விசுவாசியே இந்தத் தாழ்ந்த நிலைமையிலிருந்து எழுந்திரு! கிறிஸ்தேசுவின் மேல் கொள்ளும் பரிசுத்த அன்பிற்கு இடையூரான சோம்பல், நிர்விசாரம் முதலிய எந்தத் தடைகளையும் களைந்து போடு! அவரை உன் ஆத்தும சந்தோஷத்தின் ஆரம்பமும், மத்தியும், அந்தமும் ஆக்கிக்கொள். நீ பெற்ற சிறிய நலன்கள் போதுமென்றிராதே. இன்னும் நிறை வுள்ள, மேன்மையான, உன்னத ஜீவியத்தை நாடித் தேடு. மோட் சத்தை நோக்கிச் செல். கடவுளண்டையில் இன்னும் நெருங்கிச் சேர்.

—ஸ்பர்ஜன்

நான் அவ்வளவு உயரமும் வரவேண்டும்
மகிமையின் பிரகாசத்தை அடையவேண்டும்
நான் மோட்ச லோகம் காணுமட்டும் இறைவனே
என்னை மேல் நோக்கி நடத்தும்.

நம்மாலான வரையில் உன்னத ஜீவியம் செய்ய நம்மில் அநேகர் முயற்சி எடுப்பதில்லை. மலை ஏறப் பயந்து, சமவெளியிலே தங்குகிற வர்களாக இருக்கிறோம். அதன் உயரமும், கரடு முரடான பாதை யும் நம்மைக் கலங்கச் செய்கின்றன. ஆகையால் பனி மூடியிருக்கும் பள்ளத்தாக்கில் தங்கி விடுகிறோம். மலையின் மாட்சிமையை அறியோம். நம்முடைய சுய இச்சைகளிலே ஆழ்ந்திருப்பதால்,

கஷ்டமான வழியில் நடந்து, உயரச் சென்று கர்த்தரிடத்தில் சேர்வது எவ்வளவு ஆனந்தம் என்று அறியாதிருக்கிறோம்.

—ஜே. ஆர். எம்.

'விண்மீனுக்கடியில் வீடு கட்டுகிறவன் வெகு தாழ்ந்த இடத்தில் வீடு கட்டுகிறான்.'

## ஜனுவரி 3

'எனக்கு முன் நடக்கிற மந்தைகளின் கால்நடைகளுக்கும், பிள்ளைகளின் கால் நடைக்கும் தக்கதாக மெதுவாய் அவர்களை நடத்திக்கொண்டு வருகிறேன்' (ஆதி. 33:14).

இந்த வசனம் யாக்கோபு தன் மந்தையையும், பிள்ளைகளையும் குறித்துக்கொண்ட யோசனையை எத்தனை ஆழமாய்க் காட்டியிருக்கிறது! ஒரு தினமேனும் அவர்களின் சக்திக்கு மிஞ்சி விரட்டப்பட அவனுக்குச் சம்மதம் இல்லை. ஏசாவைப் போன்ற பலசாலி எதிர்பார்க்கக்கூடிய அத்தனை வேகத்தில் அல்ல, அவர்களின் பலத்துக்கு தக்கப்படியே அவன் அவர்களை நடத்த விரும்புகிறான். ஒருநாளில் எவ்வளவு தூரந்தான் செல்லக்கூடும் என்பதைத் திட்டமாய் அறிந்திருக்கிறான். அதை முக்கியமாக மனதில்கொண்டே தன் பிரயாண ஒழுங்குகளைச் செய்தான். அநேக ஆண்டுகளுக்கு முன் அவன் அந்தப் பாலைவன வழியில் சென்றிருக்கிறான். ஆகையால் வழியின் தூரம், வெயிலின் கொடுமை, வருத்தம் யாவற்றையும் தன் அனுபவத்தில் அறிவான். ஆகையால் அவன் 'நான் அவர்களை மெதுவாய் நடத்திக்கொண்டு வருகிறேன்' என்றான். 'இதற்குமுன்னே நீங்கள் இந்த வழியாய் ஒருபோதும் நடந்துபோனதில்லை' (யோசு. 3:4).

நாம் இந்த வழியாய் முன்னே ஒருபோதும் நடந்துபோனதில்லை. ஆனால் இயேசு இரட்சகர் சென்றிருக்கிறார். இது நாம் முற்றும் நடவாததும் அறியாததுமான பாதை. ஆனால் நம் தேவனுக்கு அனுபவத்தால் அவையாவும் தெரியும். அங்கே நமக்கு மூச்சுத் திணறக்கூடியதான செங்குத்தான இடமும் உண்டு. நமது பாதங்களை நோகச்செய்யக்கூடிய கூரிய கற்கள் உண்டு. புரண்டோடும் ஆறுகளை நாம் கடக்க நேரிடும். இவை யாவற்றையும் இயேசு கிறிஸ்து கடந்திருக்கிறார். அவர் தமது பயணத்தால் களைப்படைந்திருக்கிறார். வெள்ளம் பல தடவை அவர்மீது புரண்டோடிற்று. ஆனால் அது அவருடைய அன்பை அழித்துப்போடவில்லை. அவர் தாம் சகித்த பாடுகளின் மூலமாய்ச் சிறந்த தலைவர் ஆனார். நம்முடைய உருவம் இன்னதென்று அவர் அறிவார். நாம் மண்ணென்று நினைவுகூருகிறார். அவருடைய நடத்துதல் இரக்கமுள்ளதாவென்று நீ சந்தேகிக்கும்போது, இதை நினைவிற்கு கொண்டுவா. அவர் எப்பொழுதும் நினைத்துக்கொண்டேயிருக்கிறார். உன் பாதங்கள்

சகிக்கக்கூடிய அளவிற்கு மேல் உன்னை ஒரு அடியும் எடுத்துவைக்கச் செய்யமாட்டார். அடுத்த அடி எடுத்து வைக்க இயலாது என்று நீ கவலைகொள்ளாதே. கர்த்தர் உன்னைப் பலப்படுத்துவார். அல்லது திடீரென்று அடுத்த அடி எடுத்து வைக்கத் தேவை இல்லாதபடிச் செய்வார்.

—பிரான்செஸ் ரீட்லி ஹாவர்கல்

எப்போதும் புல் வெளிகளிலா? அல்ல
சில வேளை தம் அன்பினால்
யாவும் அறிந்தவர் என்னை நடத்துகிறார்
இருள் நிறைந்த கஷ்ட பாதையில்
உயரமும் அழகுமுள்ள மலை உச்சியானாலும்
வெளிச்சமற்ற பள்ளமானாலும்
அங்கு நான் வசித்தல் நல்லதே ஏன்?
என் இயேசு நாதர் அங்கும் இருக்கிறார். —பாரி

## ஜனுவரி 4

'இயேசு அவனை நோக்கி, நீ போகலாம். உன் குமாரன் பிழைத்திருக்கிறான்' என்றார். அந்த மனுஷன், இயேசு சொன்ன வார்த்தையை நம்பி போனான்' *(யோ. 4:50)*. 'நீங்கள் ஜெபம்பண்ணும்போது, விசுவாசியுங்கள்' *(மா. 11:24)*.

குறிப்பிட்டு ஜெபிக்கவேண்டிய ஒரு காரியம் இருக்கும்பொழுது, கர்த்தரை நம்பி உங்கள் ஜெபத்திற்கு விடையைப் பெற்று அதற்காக அவருக்கு நன்றி செலுத்தும் தருணம் வரும் வரையில் ஜெபியுங்கள். ஜெபத்திற்கு விடை வெளியரங்கமாய் கிடைக்கத் தாமதமாகும்பொழுது அது கிடையாது என்று அறிந்துகொண்டதுபோல் ஜெபிக்கக்கூடாது. அப்படிப்பட்ட ஜெபம் அனுகூலமாயிராது. பிரதிகூலமாய் தடையாயிருக்கும். அவ்வாறு ஜெபித்தால், ஜெபித்து முடிக்கும்போது உங்கள் விசுவாசம் பலம் குன்றியதாக, அல்லது முழுவதும் அற்றுப்போய் விட்டதாகவோ மாறக் காண்பீர்கள். இத்தகைய அவசரமான ஜெபத்திற்கு தூண்டுதல் தன்னலமேயாகும். விசுவாசம் அற்றுப்போகும் விதமாய் ஜெபியாதீர்கள். மேலும் அக்காரியத்தைக் கர்த்தரிடத்திற்கு கொண்டு வந்து விசுவாசத்தோடு ஜெபியுங்கள். நீங்கள் அவரிடம் பதிலுக்கு காத்திருப்பதாகவும், அவரை இன்னும் நம்புவதாகவும், சொல்லி கிடைக்கப்போகிற அப்பதிலுக்காக நன்றி செலுத்துங்கள். நாம் பெற்றுக்கொள்வோம் என்கிற நம்பிக்கையோடு அவருக்கு ஸ்தோத்திரம் செலுத்துவது நம் விசுவாசத்தை ஸ்திரப்படுத்தும். நம்முடைய விசுவாசம் குறையத்தக்கதாய் ஜெபிக்கும் ஜெபம், கர்த்தருடைய வசனங்களிலுள்ள வாக்குத்தத்தங்களையும் அவர் நம்முடைய இருதயங்களில் 'ஆகும்' என்றுரைக்கும் மெல்லிய சத்தத்தையும் மறுப்ப

தாகும். அத்தகைய ஜெபங்கள் மனத்தின் அமைதியின்மையைக் காட்டும். அமைதியின்மை அவிசுவாசத்தின் அறிகுறி. 'விசுவாசித்த வர்களாகிய நாமோ இளைப்பாறுதலில் பிரவேசிக்கிறோம்'(எபி. 4:3). நாம் ஜெபிக்கும் காரியம் கிடைப்பது கடினம் என்ற எண்ணத்தையே முக்கியமாகக்கொண்டு கடவுளுடைய வாக்குத்தத்தத்தை நினை யாமல் போவதால் விசுவாசம் அற்றுப்போகச் செய்யும் ஜெபம் செய்கிறோம். 'ஆபிரகாம் தன் சரீரம் செத்துப்போனதை எண்ணு திருந்தான். தேவனுடைய வாக்குத்தத்தத்தைக்குறித்து அவன் அவிசுவாசமாய்ச் சந்தேகப்படாமல் இருந்தான்' (ரோ. 4:10, 20). நம் விசுவாசம் அற்றுப்போகத்தக்கதாய் ஜெபியாதபடிவிழித்திருந்து ஜெபம்பண்ணவேண்டும்.

விசுவாசம் அறிவுமல்ல, காண்பதுமல்ல, பகுத்தறிவுமல்ல, கர்த்த ருடைய வார்த்தைகளை அப்படியே நம்புவதே—(எவான்ஸ்).

நாம் கவலைகொள்ள ஆரம்பிப்பதே விசுவாசத்தின் இறுதி. கவலையின் இறுதியே விசுவாசத்தின் ஆரம்பம்—(ஜியார்ஜ் முல்லர்).

நமக்கு சகலமும் சௌகரியமாயிருக்கும்போது நாம் விசுவா சத்தைப்பற்றி அறியமாட்டோம். அமைதலான வேளையில் கர்த்தர் வாக்குத்தத்தங்களை அருளுகிறார். அவர் தம்முடைய உடன்படிக் கைகளைப் பெரிய கிருபை நிறைந்த வார்த்தைகளால் முத்திரையிடு கிறார். பின்பு நாம் எவ்வளவாய் விசுவாசிக்கிறோம் என்று பார்க்கிற தற்கு சோதனைகளை வரவிடுகிறார். அச்சோதனைகள் அவர் வாக் களித்தவைகளுக்கெல்லாம் நேர்மாறாயிருப்பதுபோல் தெரியும். அச் சமயத்தில்தான் விசுவாசி தன் கிரீடத்தைப் பெறுவான். புயலிலும் நடுக்கத்திலும் இருக்கும் அச்சமயமே கப்பலோட்டிகள், 'கர்த்தாவே நீர் சொல்ல ஆகும் என்று நான் விசுவாசிக்கிறேன்' என்று சொல்லு வதற்கேற்ற சமயம். அவரை நம்பி அவரையே பற்றிக்கொள். விண்மீனின் வெளிச்சத்திலும் சூரியனின் ஒளியிலும், வாழ்வினும் சாவிலும், உயிரிலும் உள்ளத்திலும் அவரது அறிவு நிறைந்த இரவில் விண்மீன்கள் ஒளிர்வதுபோலத் துன்பத்தின் நடுவிலும் அவரது தெய்வீக நோக்கம் பிரகாசிக்கும்.

## ஜனுவரி 5

*'கர்த்தாவே, உம்மைத் தவிர எங்களுக்குச் சகாயம் செய்வார் ஒருவரும் இல்லை' (2 நாளா. 14:11).*

பொறுப்பு எல்லாம் அவரைச் சேர்ந்ததே என்று கடவுளுக்கு ஞாபகமூட்டுங்கள். 'உம்மைத் தவிர எங்களுக்குச் சகாயம் செய் வார் ஒருவரும் இல்லை.' ஆசாவிற்கு விரோதமாய் வந்தவர்கள் அநேகர். பத்து இலட்சம்பேர் சேர்ந்த சேனையும் முந்நூறு இரதங்

களும் அவனுக்கு விரோதமாய்ப் புறப்பட்டு வந்தன. அத்துணை பெரிய சேனையை எதிர்த்துச் செல்வது அவனுக்கு முடியாத காரிய மாய்த் தோன்றிற்று. அவனுக்கு துணை நிற்கக்கூடிய நேசப் படை களுமில்லை. ஆகையால் கர்த்தர் ஒருவரையே அவன் நம்பவேண்டி யிருந்தது. சிறிய துன்பங்கள் ஏற்படும்பொழுது நீ மற்றவர்களிட மிருந்து உதவி பெற்றுக்கொள்ள முடியும். மக்களிடமிருந்து உதவி பெறும் எண்ணத்தைக் கைவிடச் செய்து உன்னை எல்லாம் வல்ல இறைவனிடம் அடைக்கலம் புகச் செய்வதற்காகவே அவ்வளவு பெரிய பயங்கரமான கஷ்டங்கள் உனக்கு உண்டாகியிருக்கலாம்.

உனக்கும் உன் சத்துருவுக்கும் நடுவே கர்த்தரை நிறுத்து. ஆசா வின் விசுவாசத்தினால் கர்த்தர் அதிக பலமுள்ள சேனைக்கும், பலமற்ற தனக்கும் மத்தியில் நிற்பதாக அவனுக்கு தோன்றுகிறது. அது சரியான எண்ணமே. கர்த்தருக்கும் அவருடைய சேனைக்கும் முன் பாக எத்தியோப்பியர் அழிந்துபோனார்கள் என்று சொல்லப்பட்டிரு கிறது. வானுலகின் வீரர்கள் (தேவதூதர்) பகைவர்களை எதிர்த்து துரத்தியடித்ததுபோலவும் இஸ்ரவேலர் இலகுவில் வெற்றியடைந்து பகைவர்களைத் தொடர்ந்து சென்று அவர்கள் விட்டுப்போன பொருளைக் கைப்பற்றிக்கொண்டதுபோலவும் சொல்லப்படுகிறது. யெகோவா சேனைகளின் கர்த்தர். எந்த நிமிடத்திலும் தம்முடைய ஜனங்களுக்காக எதிர்பாராத உதவியை வரவழைக்க வல்லவர். அவர் நமக்கும் நம் துன்பங்களுக்கும் இடையே இருக்கிறார் என்பதை விசுவாசி. உன்னைக் கலங்கச் செய்யும் காரியங்கள் அவருக்கு முன் பாக பெருங்காற்றின் முன்பாக மேகம்போல் பறந்துபோகும்.

நீ சார்ந்து கொள்ள ஒன்றும் இன்றி
அரண்கள் இடிந்து தூளாகும் போது—
கடவுள் ஆட்சியை தவிர்த்து
வேறு ஒன்றும் நிச்சயம் இல்லாத போது
அதுவே அவரை நம்ப ஏற்ற சமயம்.

காண்பதைவிட விசுவாசித்து நடப்பதே நமது பாதைக்கு ஏற்றது.

காரிருள் நிறைந்து ஒளியற்ற நேரமே விசுவாசம் ஒளி வீசுவதற்கு ஏற்ற நேரமாகும்.

ஆபிரகாம் கடவுளை நம்பினான். அவன் கண்டறியுந் தன்மையைப் 'பின்னால் போ' என்றும், இயற்கையின் விதிகளை 'அமைதியாயிருங் கள்' என்றும், சந்தேகிக்கும் தன் மனதை 'பொய் சொல்லி என்னைச் சோதிக்கும் உள்ளமே, சும்மா இரு' என்றும் சொன்னான். அவன் கடவுள்மேல் நம்பிக்கை உள்ளவன் ஆனான்.

## ஜனுவரி 6

*'நீ தண்ணீர்களைக் கடக்கும்போது . . . அவைகள் உன் மேல் புரளுவதில்லை' (ஏசா. 43:2).*

கடவுள் நாம் வருவதற்கு முன்னே பாதைகளை திறந்து வைக்கிற தில்லை. நமக்கு உதவி தேவையாயிருப்பதற்கு முன்னே உதவி செய்வேன் என்று வாக்களிக்கிறதில்லை. நம்முடைய வழிகளிலுள்ள தடைகளையும் நாம் அடையுமுன்னே அவைகளை நீக்குவதில்லை. ஆனால் அவசியமானபோது நமக்கு ஆதரவளிக்கும் பொருட்டுக் கடவுள் கைகளை நீட்டுகிறார்.

அநேகர் இதை மறந்து தங்களுக்கு எதிர்காலத்தில் வரக்கூடும் என்று நினைக்கிற கஷ்டங்களுக்காக எப்பொழுதும் கவலை கொள்ளு கிறார்கள். அவர்கள் கடவுள் தங்களுடைய பாதையை அநேக மைல்களுக்கு முன்னதாகவே தெளிவாகவும், விளக்கமாகவும் காட்டு வார் என்று எதிர்பார்க்கிறார்கள். ஆனால் கர்த்தரோ படிப்படியாய்த் தேவைக்குத் தக்கவாறு உன்னை நடத்துவேன் என்று வாக்களித் திருக்கிறார். நீ அவருடைய வாக்குத்தத்தத்தை உரிமையுடன் கேட்குமுன் தண்ணீர்களுடேயும் வெள்ளங்களுடேயும் செல்ல வேண்டும். அநேகர் சாவிற்கு அஞ்சுகிறார்கள். தங்களுக்குச் சாகும் தைரியம் இல்லையென்று புலம்புகிறார்கள். மரணத்துக்கு இன்னும் அதிக காலமிருக்கிறது. கடமைகளிடையே உடல் நலத்தோடு வாழ்கிறார்கள். அப்பொழுது சாவிற்குரிய கிருபை அவர்களுக்குக் கிட்டாது. அச்சமயத்தில் அது எதற்கு? வாழ்க்கையில் ஈடுபட்டுக் கடமைகளைச் சரிவரச் செய்ய வாழ்விற்குரிய கிருபையல்லவா வேண்டும். மரணம் நெருங்கும் சமயம் அதற்குரிய கிருபையும் கிட்டும்.

'நாம் தண்ணீர் பெருக்கைக் கடக்கும்பொழுது அது ஆழமாகவும் குளிராகவும் இருக்கலாம்.

ஆனால் கர்த்தர் நமக்கு அடைக்கலமாயிருப்பார். அவர் வாக்கு நமக்கு ஊன்றுகோலாகும்.

என்றும் மாறாதவரும் உண்மையுள்ளவருமாகிய கடவுளே நமக்கு இவ்வாறு வாக்களிக்கிறார்.

நீ தண்ணீர்ப் பெருக்கின் அருகில் வந்தால் அதில் அமிழ்ந்து போகாமல் அதைத் தாண்டிச் செல்வாய் என்றார்.

துக்கம் கஷ்டம் மிகுந்த மனக்கலக்கம் கடுந்துன்பம் இவையெல் லாம் கடல்போல் வந்தாலும்,

அலை அலையாகச் சோதனைகள்
இதயத்தையும் உள்ளத்தையும் தாக்கினாலும்
அவையெல்லாம் நம்மை மேற்கொள்ள மாட்டா
கடவுளின் வாக்கு உண்மையானது
வெள்ளத்தையும் அலைகளையுந் தாண்டி
அவர் நம்மை அழைத்துச் செல்வார்.

அழிக்கக்கூடிய பேர் அலைகள் நம்மைத் தாக்கினாலும், அவிசுவாசம் நம்மைக் கீழ்நோக்கி இழுத்தாலும் அவை நம்மைத் தாழ்த்த மாட்டா; துக்க ஆழியில் அமிழ்த்தவும் மாட்டா. கர்த்தருடைய வார்த்தையே நம்மைத் தாங்கி நிற்கும். உண்மையுள்ள அவரையே போற்றுவோம். நாம் கீழே தண்ணீரில் அமிழ்ந்துபோகமாட்டோம் அதைத் தாண்டிச் செல்வோம் என்றே அவர் சொல்லுகிறார்.

## ஜனுவரி 7

'நான் எந்த நிலைமையிலிருந்தும் மனரம்மியமாயிருக்கக் கற்றுக்கொண்டேன்' *(பிலி. 4:11).*

பரி. பவுல் அப்போஸ்தலன் யாதொரு சௌகரியங்களும் அற்ற சிறையிலிருக்கும்போது மேற்கண்ட வார்த்தைகளை எழுதினார். ஒரு நாள் அதிகாலையில் ஓர் அரசன் தன் தோட்டத்திற்குச்சென்றபோது யாவும் காய்ந்து வாடிப்போயிருந்ததாகக் கண்டான். அவன் வாயிலண்டை நின்ற ஒரு மரத்தை நோக்கி அதன் காரணத்தை வினவினான். அம்மரம்தான் 'பைன்' மரத்தைபோல் உயரமாயும், அழகாயும் இல்லாததால் மனம் குன்றிச் சாகவேண்டுமென்று தீர்மானித்ததாகச் சொல்லிற்று. 'பைன்' மரம் தான் திராட்சையைப் போல் இனிய பழங்களைக் கொடுக்க முடியாததால் ஏங்கியிருந்தது. திராட்சைக் கொடி 'பீச்' மரத்தைப்போல் நேரே நின்று நேர்த்தியான கனிகளைக் கொடுக்க முடியாததால் தன் உயிரை மாய்த்துக்கொள்ள ஆசையாயிருந்தது. 'சாமந்தி' தான் சம்பங்கியைப்போல் வளர்ந்தும் தன்னிடம் வாசம் இல்லையே என்று கவலைகொண்டிருந்தது. இவ்வாறு தோட்டத்தின் செடிகளெல்லாம் அதிருப்தியால் நிலைகுலைந்திருந்தன. மகிழம் பூ மாத்திரம் சந்தோஷம் மிளிரும் வதனத்தோடு தோன்றிற்று. அரசன் அதைக் கண்டு, 'நல்லது! மகிழம் பூவே, யாவும் மனச்சோர்வுடன் இருக்கையில் ஒரு சின்ன மலர்ந்த பூவைக் கண்டது எனக்கு மிக மகிழ்ச்சி. நீ மனம் கசந்துபோனதாக எனக்குத் தோன்றவில்லை' என்றான். 'எனக்கு மனக்கசப்பு இல்லை. நான் ஒரு விசேஷித்த பூ அல்ல. ஆனால் நீர் விரும்பினால் என் இடத்தில் ஓர் பைன், பீச், அல்லது ஓக்கு மரத்தை நாட்டியிருக்கலாம். நீரோ மகிழம் பூவை விரும்பியே என்னை உண்டாக்கினீர் என்று நினைத்தேன்; ஆகையால் உமக்குகந்த அழகியசிறு 'மகிழம்' பூவாயிருக்கத் தீர்மானித்தேன்' என்றது.

பிறர் பெரிய காரியங்களைச் செய்யலாம்
  நீ செய்ய வேண்டிய கடமையுமுண்டு
கடவுளுடைய இராஜ்யத்தில்
  நீ மாத்திரமே அதை நன்றாய்ச் செய்யமுடியும்.

முற்றிலுமாய்த் தங்களை கர்த்தருக்கு ஒப்படைத்தவர்கள் எந்த நிலைமையிலும் திருப்தியாயிருப்பார்கள். ஏனெனில் கடவுளின் சித்தமே அவர்களின் சித்தம்; அவர்கள் எதைச் செய்யவேண்டும் என்று கடவுள் விரும்புகிறாரோ அதையே அவர்களும் நாடுகிறார்கள். எல்லாவற்றையும் தியாகம் செய்து ஒன்றுமில்லாதிருக்கிறார்கள். அந்த நிலையில் தாம் இழந்த அனைத்தும் நூறுமடங்காகத் தங்களுக்கு திரும்பவும் கொடுப்பதை உணர்கிறார்கள்.

## ஜனுவரி 8

'நான் ஏற்ற காலத்திலே மழையைப் பெய்யப்பண்ணுவேன். ஆசீர்வாதமான மழைகள் பெய்யும்' (எசே. 34:26).

இன்று காலை உன் கால நிலை என்ன? வறட்சியான காலமா? அப்படியானால் மழை பெய்யவேண்டிய காலம் அதுவே. அதிக பாரமான கரியமேகங்கள் சூழ்ந்த காலமா? அவ்வாறாயின் அதுவே மழைக்காலம். 'உன் நாளுக்குத்தக்கதாக உன் பலமும் இருக்கும். 'நான் ஆசீர்வாதமான மழைகளைக் கொடுப்பேன்.' 'மழைகள்' என்று பன்மையிலே கூறப்பட்டது சகலவிதமான ஆசீர்வாதங்களும் கடவுள் நமக்கு அருளுவார் என்பதைக் குறிக்கிறது. கடவுளின் ஆசீர்வாதங்கள் யாவும் தங்க ஆபரணத்திலுள்ள சங்கிலிகள்போல் தொடர்ச்சியாயிருக்கும். மனந்திரும்பும் . கிருபையோடே மன ஆறுதலடையும் கிருபையையும் அளிப்பார். 'ஆசீர்வாதமான மழைகளை அருளுவார்.' தண்ணீரற்ற வறண்ட செடியே, உன் பூக்களையும் இலைகளையும் பரதீசின் தண்ணீருக்காக திறந்து வை. உன் இருதயம் தாழ்ந்த பள்ளத்தாக்காகட்டும். கடவுள் மழை நீர் வழிந்தோடும் வரை அதை நிரப்புவார்.

—ஸ்பர்ஜன்

ஆண்டவரே, நீரே என் முள்ளை
  மலராக்க கூடியவர்; என் முள்
மலராகவேண்டும் என்றே நான் விரும்புகிறேன்.
  யோபு துன்பத்திற்குப்பின் இன்பம் அடைந்தான்
மழைக்குப் பின் கதிரவன் ஒளி கண்டான்
  ஆனல் அவன் துன்பமெல்லாம் வீணாயிற்றா?

இந்த மழைக்கும் ஒளிக்கும் என்ன தொடர்பு என்பதை அறியவே யோபு விரும்பினான். நானும் அதையே அறிய விரும்புகிறேன்.

நீர் அதைக் கூறக் கூடும்—உம்
சிலுவை அதைக் கூறக் கூடும்—உம்
துன்பத்திற்கு நீர் முடி சூட்டினீர்
கர்த்தாவே இது என் பொன் முடியாகட்டும்
மழையின் நடுவிலும் ஒளியைக் கண்ட பின்னரே
தான் உம்மில் வெற்றி பெறுவேன். —ஜியார்ஜ் மத்தீசன்

பலனளிக்கும் வாழ்க்கை கதிரவனொளியை மட்டுமன்று, மழையையும் தேடும்.

நிலம் முழுவதும் சூரிய வெப்பத்தினுல் காய்ந்து கருகியிருக்கும் பொழுது, அதற்கு புத்துயிரளிக்க மேகங்களே வேண்டும். பனி மரங்களையும் மலர்களையும் இலைகளையும் நனைக்கலாம். ஆனுல் மேகங்கள் பொழியும் மழை நீரே நில முழுவதையும் பசுமை பெறச் செய்யும்.

நமது வாழ்க்கையாகிய நிலமும் இதுபோலவே இருக்கிறது. பனி போன்ற சிறிய துன்பங்கள் வாழ்க்கையில் அதிக மாறுதல்களை செய்வதில்லை. சிறிய தூபத்தை நெருப்பிலிட்டால் அதன் நறுமணம் சிறிது நேரம் காற்றில் கலந்திருந்து பின்பு மறைந்துவிடுகிறது. அதுபோலவே சிறிய துன்பங்களினுல் வரும் பலனும் நாளடைவில் மறைந்துவிடுகிறது. ஆனுல் பெருந்துன்பங்கள் தாங்க முடியாத பாரங்களாகத் தோன்றினுலும் அவை நிலத்தைக் குளிர்விக்கும் மழை போன்றவை. அவைகளே, ஒட்டகங்கள் நடந்து செல்லும் பாலைவனத்தைச் செழிப்பு மிகுந்த நிலமாக்குவதுபோல், நமது வாழ்வைச் சீர்திருத்தக்கூடியவை.

ஆகையால் நாம் துன்பமாகிய மேகங்களைக் காணும்பொழுது அவைகளே நமக்கு ஆசீர்வாதங்களைக் கொடுக்கும் என அறிய வேண்டும். பரி. பவுல் சொன்னபடி எல்லாம் நமக்கு நன்மையாகவே முடியும். நாம் அஞ்சவேண்டியதில்லை, எனினும் நம்ப வேண்டும்.

## ஜனுவரி 9

'ஆதலால் இக்காலத்துப் பாடுகள் இனி நம்மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு ஒப்பிடத்தக்கவைகள் அல்லவென்று எண்ணுகிறேன்' (ரோ. 8:18).

ஒரு பட்டுப் பூச்சியின் கூட்டை ஒரு ஆண்டுவரை வைத்திருந்தேன். அதன் அமைப்பு விநோதமாயிருந்தது. அந்தக் கூட்டின் முகப்பில் ஒரு சிறு பிளவு இருந்தது. அதன் வழியாய் அதன் உடல் சிரமத்தோடு வெளிவரும். அது வெளியேறியபின் அந்தக் கூடு, புழு உள்ளே இருக்கும் கூடுபோன்று ஒரு சேதமுமின்றியிருக்கும்; நூல் கிழிந்து சிக்கியிருக்காது. அதன் உள்ளிருந்து வரும் புழுவின்

உடம்பையும், வெளியேறும் பிளவின் அளவையும் பார்த்தால் அதன் வழியாய் அந்த உடல் வருவது எவ்வளவு கடினம் என்பது தெளிவாகும். அது அதிக கஷ்டத்தோடுதான் வெளிவரும். இதன் காரணம் யாதென்ருல் அதன் உடல் வெளியேறும்போது அதன் இறக்கைகள் சரிவர வளர்ந்திருக்கமாட்டா. சிறு துவாரத்தின் வழியாக வெளியேறும்போது, அதன் உடல் நெருங்கி அதிலுள்ள சத்து இறக்கைகளுக்கு அனுப்பப்பட்டு அவை பூரண வளர்ச்சியடையும்.

என்னிடமிருந்த பட்டுப் பூச்சி, கூட்டைவிட்டு வெளியேறும்போது நான் பார்த்தேன். ஒருநாள் முற்பகல் பூராவும் அடிக்கடி அதைக் கவனித்தேன். அது வெளியேற முனைந்து கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தது. கொஞ்சந் தூரம் வெளிவந்து பின் வரமுடியாமல் திணறிக்கொண்டிருந்தது. நான் பொறுமையிழந்தேன். இயற்கைப்படி பனிகாலம் பூராவும் புல்லில் இருந்திருந்தால் அதன் கூடு இவ்வளவு காய்ந்து இடைவிலகாமலிருக்காது என்று எண்ணினேன். நான் சிருஷ்டிகரைவிட மிகுந்த இரக்கமும், ஞானமும் உள்ளவன் என்று எண்ணி அதற்கு உதவிபுரிய முற்பட்டேன். கத்தரிக்கோலால் இறுகியிருந்த நூல் கட்டை வெட்டி அதன் பாதையை சற்று எளிதாக்கினேன். உடனே பட்டுப் பூச்சி வெகு சுலபமாய் வெளியே வந்தது. அதற்குப் பெருத்த உடம்பும், சுருங்கிய இறக்கைகளுமிருந்தன. அதன் உடலும் இறக்கைகளும் அழகிய நிறங்களும் இயற்கை வடிவமும் அடைவதைப் பார்க்க நான் ஆசைப்பட்டேன். நிறங்களும் கோடுகளும் சிறிதளவு இருந்தன. ஆனுல் பூரண அழகு பொலிந்து விளங்கவில்லை. அழகாகப் பறந்து செல்லுமென்றே கூர்ந்து கவனித்தேன். ஆனுல் அது தன் இயற்கை வனப்பை பெறவில்லை. என் தப்பிதமான இரக்கம் அதன் வளர்ச்சியைத் தடுத்துவிட்டது. அது அரைகுறை பிறவியாகவே இருந்தது. வானவில் போன்ற அழகான இறக்கைகள் பெற்று, சொற்ப ஆயுளை ஆனந்தமாய்க் கழிக்கவேண்டிய அந்த பூச்சி தன் ஜீவியம் பூராவும் வேதனையோடு ஊர்ந்து திரிந்தது. துக்கப்பட்டு வேதனையடைந்து, துயரத்தோடிருப்பவர்களைப் பார்த்து, அவர்கள் வேதனையை மாற்ற விரும்பும்போது அடிக்கடி இதை நான் நினைத்துக்கொள்வேன். குறுகிய அறிவுள்ள மானிடனுகிய நான், இந்த வேதனை, துயரம் எல்லாம் அவசியம் என்று எப்படி அறிவேன். பின்வரும் காரியங்களை அறிந்துள்ள பூரண அன்புள்ள சிருஷ்டிகர், சிருஷ்டிகளின் பூரண வளர்ச்சியை நாடுகிறவர்; மாறிப்போகும் தற்காலிகமான வருத்தங்களைப் பார்த்து பலவீனமாகப் பின்வாங்கார். நம்முடைய பிதாவின் அன்பு அதிக உண்மையானது. ஆகையால் அதில் பலவீனம் இல்லை. அவர் தம் பிள்ளைகளை நேசிப்பதால் தம்முடைய பரிசுத்தத்திற்குப் பங்குள்ளவர்களாக அவர்களைச் சிட்சிக்கிருர். இந்த மகிமையான நோக்கத்தை முன் வைத்து அவர்கள் கூப்பிடும் போது இரங்காதிருக்கிருர். கடவுளின் புத்திரர் துன்பங்களின்

வழியாய் நம் மூத்த சகோதரன் இயேசுபோல் பூரண சற்குணராகி, கீழ்ப்படிதலில் பழகி, அநேகம் பாடுகளின் வழியாய் மகிமைக்குக் கொண்டுவரப்படுகிறார்கள்.

## ஜனுவரி 10

'அவர்கள் ஆசியாவிலே வசனத்தை சொல்லாதபடிக்குப் பரிசுத்த ஆவியினாலே தடைபண்ணப்பட்டார்கள்' (அப். 16:6).

ஆதிகாலத்து சுவிசேட பிரசங்கிகள் கர்த்தரால் நடத்தப்பட்ட முறைகளைப் பார்த்தால் ஆச்சரியமாயிருக்கிறது. தவறான வழியில் செல்ல முயன்றபோதெல்லாம் தடைபண்ணப்படுவதே பெரும்பாகமாயுள்ளது. அவர்கள் இடப்புறம் திரும்பி ஆசியா நாட்டிற்குப் போக ஆசைப்பட்டபொழுது தடைபண்ணினார். பின்வரும் காலங்களில் அநேக பிரதேசத்தில் பவுல் தம்முடைய பெரிய வேலைகளைச் செய்யப்போகிறார். ஆனால் அந்தச் சமயத்தில் பரிசுத்த ஆவியால் தடைப்பண்ணப்பட்டார்கள். தகர்க்க முடியாத சாத்தானின் கோட்டையை எதிர்க்க இன்னும் ஏற்ற சமயம் வரவில்லை. வழியுண்டாக அப்பொல்லோ வேலை செய்தாகவேண்டும். பவுலும் பர்னபாவும் வேறொரு இடத்திற்கு அவசரமாய்ப் போகவேண்டியிருந்தது. அந்தப் பொறுப்பான வேலையை ஏற்றுக்கொள்ளுமுன் அவர்களுக்குக் கொஞ்சம் பயிற்சி தேவையாயிருந்தது!

சிநேகிதனே! உன் வழியைக் குறித்து உனக்குச் சந்தேகம் ஏற்படும்பொழுது, உன் நினைவுகளைக் கர்த்தரின் பரிசுத்த ஆவிக்கு ஒப்படைத்துவிட்டு, அவரை நோக்கிச் சரியான வழி தவிர மற்ற எல்லா வழிகளையும் அடைக்கும்படி வேண்டிக்கொள்.

'பரிசுத்த ஆவியானவரே கடவுளுடைய சித்தமில்லாத எந்தப் பாதையையும் எனக்கு முன் அடைத்துவிடும் பொறுப்பை உம்மேல் போட்டுவிடுகிறேன். நான் வலப்புறம் இடப்புறம் திரும்பும்போது, உமது சத்தத்தைக் கேட்கத் தயவு செய்யும்' என்று ஜெபி.

இதற்கிடையில் இதுவரை நடந்துகொண்டிருந்த பாதையில் சென்றுகொண்டிரு. நீ மற்றொன்றைச் செய்யும்படி திட்டமாய் அழைக்கப்படும்வரை, உன் முந்தின அழைப்பின்படி செய்துகொண்டிரு. பரிசுத்த ஆவியானவர் பவுலை எவ்வாறு நடத்தினாரோ அவ்வாறு உன்னையும் நடத்தச் சித்தமாயிருக்கிறார். அவர் சிறிது தடை செய்தாலும் அதைக் கவனித்துக்கொள். நம்பிக்கையோடு ஜெபம் செய்த பிறகு, அவர் உன்னைத் தடுப்பதாகத் தோன்றுவிட்டால், நீ நிறைந்த உள்ளத்துடன் முன்னேறிச் செல்லலாம். ஜெபத்துக்கு விடையாகத் தடைகள் தோன்றினாலும் நீ கலங்காதே. வலப்புறமும், இடப்புறமும் வாசல் அடைக்கப்பட்டிருக்குமென்றால் துரோவாவுக்கு நீ செல்லவேண்டிய பாதை ஒன்று திறக்கும். அங்கே

லூக்கா காத்திருக்கிறார். பெரிய ஊழியம் செய்யச் சமயமும், நம்பிக்கையான தோழரும் காத்திருக்கிற இடத்திற்குத் தரிசனம் உன்னை வழிநடத்தும். —பவுல் மேயர்

உனக்குப் புரியாத தொன்று உன்வாழ்வில் உண்டானால்,
நீ செல்ல வேண்டிய வழியை அறியாயானால்,
கர்த்தர் அறிவார்; விளங்கச் செய்வார்;
அவரிடம் திறவு கோல் உண்டு.
நீ திறந்திருக்கும் என்று எண்ணின பாதை,
பிதாவின் கரத்தால் அடைப்பட்டிருந்தால்
கர்த்தரை நம்பிக் காத்திரு!
ஏனெனில் அவரிடம் திறவு கோல் உண்டு.
உன் ஜெபத்திற்குப் பதில் இல்லாவிட்டால்,
நீ நினைத்தப்படி பதில் கிடையா விட்டால்,
பின்னால் தம் நோக்கம் காணச் செய்வார்
அவரிடம் திறவு கோல் உண்டு.
உன் பொறுமையுள்ள கர்த்தருக்குக் காத்திரு!
யாவும் அறிந்த ஞானபிதா காரணமின்றித் தாமதியார்,
உன் வருங்காலமாகிய வாசலுக்கு
அவரிடமே திறவு கோல் உண்டு.
அறியாத ஆறுதலும் இனிமையான இளைப்பாறுதலும்
அவரிடம் திறவு கோல் உண்டு என்பதை அறிவது தான்.
அவர் நமக்கு நல்லதென்று தோன்றும் வேளையில்
அதை நம்மிடம் தருவார்.

## ஜனுவரி 11

'என் ஜனத்தை ஆற்றுங்கள், தேற்றுங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்' (ஏசா. 40:1).

ஆற்றுவதும் தேற்றுவதுமே தீர்க்கதரிசியின் ஊழியம். உலகம் எண்ணில்லாத ஆறுதலற்ற இருதயங்களால் நிறைந்திருக்கிறது. நீ இந்த ஊழியத்தைச் செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுமுன் அதற்குத் தக்க பயிற்சி அடையவேண்டும். இந்தப் பயிற்சி மிகக் கடினமானது. இந்த ஆறுதலைப் பூரணமாய் நீ அளிப்பதற்கு முன்னதாக, எண்ணிறந்த இருதயங்களிலிருந்து, இரத்தக் கண்ணீர் வடியச் செய்யும் அதே கஷ்டங்களை நீ அனுபவிக்கவேண்டும். இவ்விதமாய் உன் சொந்த ஜீவியமே ஆறுதலளிப்பதாகிய தெய்வீக செய்கையை நீ கற்றுக்கொள்ளும் வைத்தியசாலை ஆகும். உன் காயங்களை அந்தப் பரம வைத்தியர் கட்டும் விதத்தைப் பார்த்து, எங்குமுள்ள காயப்பட்டோருக்கு நீ முதலுதவி செய்யக் கற்றுக் கொள்ளவேண்டும். அதற்காகவே நீ காயப்படுத்தப்படுகிறாய். நீ

ஒரு குறிப்பிட்ட துக்கத்தை ஏன் அனுபவிக்கிறாய் என்பதைப்பற்றி உன் இருதயத்தில் கேள்வி எழும்புகிறதா? ஒரு பத்து வருடம் காத்திரு. உன்னைப்போல் கஷ்டம் அனுபவிக்கிற அநேகரை நீ காண்பாய். அவர்களிடம் நீ எப்படி வருத்தமடைந்து தேற்றப் பட்டாய் என்பதை உரைப்பாய். உன் அனுபவத்தைச் சொல்லி, கர்த்தர் உனக்கு ஈந்த ஆறுதல் என்னும் தைலத்தை அவர்களுக்கும் அளித்து, வருந்துவோரின் இதயத்தில் நம்பிக்கை உண்டாக்க, அவ்வாறு அவநம்பிக்கை என்னும் இருள் அவர் இதயத்தினின்றும் விலகும்போது நீ அதைக்கண்டு கடவுள் ஏன் உன்னை வருத்தத்திற் குள்ளாக்கினார் என்று அறிவாய். அப்பொழுது உனக்கு நிறைந்த அனுபவத்தையும் உதவி செய்யுந் தன்மையையும் அளிப்பதற்காக உன்னைச் சிட்சித்த கடவுளை எண்ணி அவருக்குத் துதி செலுத்து வாய்.

கடவுள் நம்மைச் சௌகரியமாயிருக்க அல்ல; மற்றவர்களை ஆற்றித்தேற்றும் ஏதுகரங்களாகவே ஆற்றித் தேற்றுகிறார்.

ரோஜாவின் மணத்தைப் பெற
அதைக் கசக்கி வருத்த வேண்டும்
வானம் பாடியின் இனிய கீதம்.
வருந்தும் போதே யுண்டாகும்
அன்பினால் வருந்துவதும் சிநேகத்தால் அழுவதும்
அன்பின் ஆழம் அறியவே,
உன்னத காரியம் யாவும்
வருத்தத்தின் பயனே.

## ஜனுவரி 12

'என் சகோதரரே, நீங்கள் பலவிதமான சோதனைகளில் அகப்படும்போது, உங்கள் விசுவாசத்தின் பரீட்சையானது பொறுமையை உண்டாக்குமென்று அறிந்து, அதை மிகுந்த சந்தோஷமாக எண்ணுங்கள்' (யாக். 1:2,3).

கடவுள் தம் ஜனத்தை பாதுகாக்க அவர்களைச் சுற்றி ஒரு வேலியை உண்டாக்குகிறார். ஆனால் அவர்கள் அதைத் தப்பாக அர்த்தப் படுத்தி அவருடைய செயலை அறியாதிருக்கிறார்கள். யோபினுடைய அனுபவமும் இதுவே (யோபு 3:23). சாத்தான் இந்த வேலியின் உபயோகத்தை அறிந்திருந்தான் (யோபு 1:10). துன்பங்களாகிய இலைகள் ஒளியை ஓரளவு மறைத்தாலும் அவற்றினிடையே ஒளிவர வழியுண்டு. முள்ளின்மேல் நீ சாய்ந்தாலன்றி அது உன்னைக் குத்தாது. அவற்றுள் ஒன்றும் இயேசு அறியாமல் உன்னைத் தொடு வதில்லை. உன்னை வேதனைப்படுத்திய வார்த்தை, உனக்கு மனச் சோர்வுண்டாக்கிய கடிதம், உன் சிநேகிதனால் உனக்குண்டான மனப்புண், உனக்குப் பொருளின்மையால் வரும் கஷ்டம் எல்லாம்

அவருக்குத் தெரியும். மற்றவர்களின் இரக்கத்திற்கு மேலாக அவர் உன்மேல் இரக்கங்கொள்ளுகிறார். இவைகள் எல்லாவற்றிலும் தம்மை முழுவதும் நம்பும் தைரியம் உனக்கு இருக்கிறதா என அவர் கவனிக்கிறார்.

நம்மைத் தடுக்கும் முள் வேலி
வெறுமையாய்ப் பயங்கரமாய்த் தோன்றுகிறது
குளிர் காலத்தில் இலை உதிர்ந்து முள் மாத்திரம் இருக்கும்
அது நம்மைக் கிழித்துப் புண் படுத்தும் போலிருக்கிறது
வசந்த காலம் வரும்போது ஆரோனின் கோல்போல்
ஒவ்வொரு கிளையும் துளிர்த்துப் பச்சிலைகளால் நிறைந்திருக்கும்.
முன்பு முள்மட்டும் இருந்த இடம் இப்பொழுது
பசு மெத்தை போல் ஆகும்.
நம்மைக் கவலைக் குள்ளாக்கும் வருத்தங்கள்
அநேக தீமையின்று நம்மைக் காக்கும்.

நம்மை வழி தவறிச் செல்லாதவாறு தடுக்கும் அருளின் வடிவங்கள் அவைகளே.

குழியில் விழாதவாறு நம்மைக் காக்க மெல்லிய மலர்களாகிய வேலிபோதாது. முள் வேலி போன்ற தடைகளே நம்மைத் தடுத்து நிறுத்தக்கூடும்.

நாம் இந்த முள் வேலியில் மோதிக் காயப்பட்டு, நம்முடலினின்றும் இரத்தம் சொரியும்பொழுது, கடவுள் நமக்காக நிறுத்திய இத்தடைகள் மிகக் கடினமாகவே நமக்குத் தோன்றும்.

மறைவாயுள்ள குழிகளில் நாம் விழாதவாறு கர்த்தரால் பாதுகாப்பமைக்கப்பட்ட பாதையில் செல்லும்பொழுது, அவருடைய அறிவையும் இரக்கத்தையும் எண்ணி நாம் அழகிய துதிப்பாடல்கள் பாடுவோம்.

கர்த்தரின் ஆசீர்வாதமான
வசந்தகாலம் வரும் போது
முள் வேலி பசுமையாகமாற, நம்
உள்ளமும் சமாதானம் பெறுகிறது.

## ஜனுவரி 13

'இவை யாவற்றிலும் நாம் நம்மில் அன்புகூருகிறவராலே முற்றிலும் ஜெயங் கொள்ளுகிறவர்களாயிருக்கிறோம்' (ரோ. 8:37).

இதுவே ஜெயத்துக்கெல்லாம் மேலான ஜெயம். நாம் தோல்வியினின்றும், சேதத்தினின்றும் தப்பித்துக்கொண்டது மாத்திரமல்ல, நம் சத்துருக்களை அழித்து உச்சிதமான கொள்ளைப்பொருள்களைப்

பெற்று, இந்தப் போர்ராட்டம் வந்ததற்காகக் கர்த்தரை துதிக்கக் கூடியவர்களாயுமிருக்கிறோம். எப்படி நாம் வெற்றி வீரருக்கு மேலாவோம்? இந்தப் போராட்டத்தினால் ஆவிக்குரிய சிட்சை பெறுகிறோம். அது நமது விசுவாசத்தைப் பலப்படுத்தி ஆவிக்குரிய நற்குணங்களை நிலைநாட்டுகிறது. நம்மை ஆவிக்குரிய ஜீவியத்தில் ஒருமுகப்படுத்தி நிலைநாட்டச் சோதனைகள் அவசியம். அவை மட்பாண்டங்களில் பூசப்பட்ட வர்ணங்களைத் திடமாக அமைக்கும் நெருப்பைப்போலவும் மலைமீதிலுள்ள கேதுரு மரங்களைப் பலமாய் வேரூன்றச் செய்யும் பெருங் காற்றைப் போலவுமிருக்கின்றன. ஆவிக்குரிய போராட்டம் நமக்கு மிக ஆசீர்வாதமானதாகும். நமது பெரிய சத்துருவே இறுதியில் நாம் அவனை மேற்கொள்ள நம்மைப் பயிற்றுவிக்கிறான். ஆதிகாலத்தில் பிரிகியர்களுக்குள் ஒரு கதை இருந்தது. ஒரு வீரன் தன் சத்துரு ஒருவனை மேற்கொள்ளுந் தோறும், மேற்கொள்ளப்பட்டவனின் சரீர பலத்தை உட்கொண்டு தன் பலத்தையும், தைரியத்தையும் அதிகப்படுத்திக்கொள்கிறான் என்று சொல்லப்பட்டது. ஜெயிக்கப்பட்ட சோதனை நம்முடைய ஆவிக்குரிய பலத்தையும், சத்துவத்தையும் இரட்டிப்பாக்குகிறது. நம்முடைய சத்துருவை மேற்கொள்வது மாத்திரமல்ல, அவனைச் சிறைப்பிடித்து நம் சார்பில் போரிடப்பண்ணவும் கூடும். ஏசாயா தீர்க்கதரிசி (ஏசா. 11:14இல்) இஸ்ரவேலர் பெலிஸ்தியரின் தோள்களின்மேல் ஏறிச்செல்வார்கள் என்று சொல்லியிருக்கிறார். பெலிஸ்தியர் அவர்களுடைய தீராப்பகைஞர். ஆனால் ஏசாயா இஸ்ரவேலர் பெலிஸ்தியரைத் தோற்கடிப்பது மாத்திரம் அல்ல, அவர்களை ஜெயமடைந்தோர் இன்னும் ஜெயமடையத் தங்கள் தோள்கள்மேல் தூக்கிச் செல்லவும் செய்வார்கள் என்கிறார். தனக்கு எதிரான காற்றைச் சாதகமாக ஆக்கிக்கொள்கிறானே அதுபோல் நமக்கு ஆவிக்குரிய ஜீவியத்தில் ஜெயமளித்த கர்த்தரின் கிருபையால் நமக்கு பாதகமாக தோன்றுகின்ற காரியங்களையே சாதகங்களாக்கிக்கொள்ளலாம். 'எனக்கு விரோதமாக நடந்த காரியங்களெல்லாம் சுவிசேடம் அதிகம் பரவ ஏதுவாயிற்று' என்று சொல்லலாம்.

முன்காலத்தில் கப்பற் பிரயாணிகள் பவளத்தீவைக் கட்டும் சிறு பிராணிகள் தங்களுடைய பாதுகாப்புக்காக அதைக் கட்டுகின்றன என்று நினைத்தார்கள். ஆனால் தற்போது விஞ்ஞான சாஸ்திரி ஒருவர் அது அவ்வாறன்று; திறந்த சமுத்திரத்திலே அலைகளுக்கும் நுரைகளுக்குமிடையே வாழ்வதினாலேயே அப்பிராணிகள் தக்க வளர்ச்சியடைய முடியுமென்று கண்டுபிடித்திருக்கிறார். பொதுவாகப் பாதுகாக்கப்பட்ட ஜீவியமே வளர்ச்சிக்கு ஏற்றது என மக்கள் கருதுகிறார்கள். ஆனால் அந்த வல்லமை நிறைந்த உன்னத ஜீவியம் செய்தவர்களின் வாழ்க்கையை நோக்கினால் துன்பங்களைச் சகிப்பதே அவர்கள் உன்னத ஜீவியம் செய்ய வழியாயிற்று என்று அறிகிறோம். அதுவே மனிதனுடைய சாதாரண ஜீவியத்தை வேறுபடுத்துவது. துன்பங்கள் நற்குணத்தை உண்டாக்கும்.

'கிறிஸ்துவுக்குள் எப்பொழுதும் எங்களை வெற்றி சிறக்கப்பண்ணி, எல்லா இடங்களிலேயும் எங்களைக்கொண்டு அவரை அறிகிற அறிவின் வாசனையை வெளிப்படுத்துகிற தேவனுக்கு ஸ்தோத்திரம்' (2 கொ. 2:14).

## ஜனுவரி 14

'அவன் தன்னுடைய ஆடுகளை வெளியே விடுகிறான்' (யோ. 10:4).

இது நமக்கும் கர்த்தருக்கும் கசப்பான வேலை. வெளியே போவது நமக்குக் கசப்பு. நமக்கு வேதனை உண்டாகச் செய்வது கடவுளுக்குக் கசப்பு. ஆனால் வேதனை கொடுக்கப்படவேண்டியது அவசியம். எப்பொழுதும் சந்தோஷமான, சௌகரியமான இடத்திலேயே தங்கி விடுவது நம்முடைய நல்வாழ்விற்கு ஏற்றதல்ல. ஆகையால் அவர் நம்மை வெளியே விடுகிறார். ஆடுகள் தொழுவத்தை விட்டுச் சென்று மலைச்சரிவுகளில் அலைந்து திரிவதாலேயே பலம் பெறுகின்றன. மக்கள் வீட்டை விட்டுச் சென்று வயலில் அறுவடை செய்வதனாலேயே தானியங்கள் அழியாமல் காக்கப்படுகின்றன.

நாம் வெளியேறிச் செல்லவேண்டுமென்று கடவுள் தீர்மானிக்கும் போது பின்தங்கிவிடுவது நன்மை பயக்காது. கர்த்தரின் அன்புள்ள கரம் நம்மை வெளியே விடும்போது, அது நமக்கு நன்மையாகவே இருக்கும். இந்த நினைவு நமக்கு தைரியம் அளிக்கவேண்டும். அவருடைய சித்தத்தை நிறைவேற்ற புல்லுள்ள இடத்திற்கும், அமர்ந்த தண்ணீர்களண்டைக்கும், மலை உச்சிக்கும் செல்வோம். அவர் உனக்கு முன்னால் போகிறார். நமக்கு வரக்கூடியதெல்லாம் அவர் முன்னதாகவே அறிந்திருக்கிறார். விசுவாசத்தோடு நோக்கும் கண்கள், கர்த்தர் எப்பொழுதும் தம்முன்னே இருக்கிறார் என்பதை அறிகின்றன. இதை அறியாதபோது முன்னேறிச் செல்வது அபாயத்திற்கு இடமாகும். இரட்சகர் நம்மை அடையச் செய்யும் சகல அனுபவங்களையும் தாம் கடந்தார் என்ற சத்தியத்தை உன் இருதயத்தின் ஆறுதலாகக் கொள். உன் கால்களுக்கு கஷ்டமில்லாத பாதை என்றும், உன் பலத்திற்கேற்ற வேலை என்றும் அறிந்தே உன்னை அவற்றில் வழிநடத்துகிறார்.

நமக்கு முன்னே உள்ளவைகளை அறியவேண்டுமென்ற அபிலாஷையும், அடுத்த வினாடியைக் குறித்த கவலையையும், நம் வழியைத் தெரிந்தெடுக்க ஆவலும் இல்லாதிருத்தல் வேண்டும். எதிர்காலத்தைக் குறித்த பொறுப்பின் பாரத்தால் அமிழ்த்தப்படாமல், ஒவ்வொரு வேளையிலும் ஒவ்வொரு அடியாக மேய்ப்பனின் பின்னால் அமைதியாய்ப் பின்செல்லும் ஜீவியமே பாக்கியமுள்ள ஜீவியம்.

1 வானம் கறுத்திருக்கிறது, வருங்காலத்தை நான் அறியேன்
இரவு முடியவில்லை பாதை இருட்டே
நான் பாதையின் சிறுபகுதியும் காணுதிருக்கிறேன்
அவர் என்முன் செல்கிறுர், என்பதொன்றே அறிவேன்.

2 அபாயம் நெருங்குகிறது, பயம் உள்ளத்தை நடுங்கச் செய்கிறது
என்ன நேரிடுமோ என்ற திகில் என்னைப் பிடிக்கிறது
ஆனுல் நான் அவருடையவன்; என் வழியை அவர் அறிவார்
அவர் என்முன் செல்கிறுர் என்றறிவேன்.

3 சந்தேகம் என் மேல் நிழலிடுகிறது
என் ஜீவனின் நலம் முடிந்தது என்று சில சமயம் எண்ணுகிறேன்
ஆயினும் அவர் வார்த்தை என் பலம், என் இரட்சிப்பு
நிச்சயம் என் தேவன் என் முன் செல்கிறுர்.

4 'அவர் என் முன் செல்கிறுர்' இதுவே என் ஆறுதல்
'அவர் என் முன் செல்கிறுர்' என்பதே என் தியானம்
'அவர் என் முன் செல்கிறுர்' அதால் இரட்சிப்பு நிச்சயம்
'அவர் என் முன் செல்கிறுர்' அதால் எல்லாம் நலமே.

—ஜே. டி. ஸ்மித்.

மேய்ப்பன் தன் ஆடுகளுக்கு முன் செல்கிறுன். மந்தையைத் தாக்குபவன் அவனை முதலில் தாக்கி ஆகவேண்டும். கர்த்தர் முன்னுல் நிற்கிறுர். வருங்காலத்திலும் நிற்பார். எதிர்காலமே நம்மைப் பயமுறுத்துகிறது. ஆயினும் நம்முடைய எதிர்காலச் சம்பவங்கள் அவரைத் தாண்டியே நம்மண்டை வரவேண்டும். —F.B.M.

கர்த்தர் வருங்காலத்தில் என்னேடிருப்பார்
ஆகையால் நான் இன்றைக் கென்றே ஜீவிப்பேன்
சூரியன் உதிக்கும் அதிகாலையில்

ஒவ்வொரு நாளின் தொடக்கத்திலும் அவர் பலம் தந்து எனக்கு வழிகாட்டுவார்.

பலவீனமான நேரத்தில் எனக்குச் சக்தியைக் கொடுப்பார், நோயுற்றிருக்கையில் நம்பிக்கை தருவார்.

துன்பச் சமயத்தில் ஆறுதலளிப்பார். மழைக்குப்பின் வெயிலெரிக்கச் செய்வார்.

## ஜனுவரி 15

*'அன்று இராத்திரியில் கர்த்தர் ஈசாக்குக்குத் தரிசனமானுர்' (ஆதி. 26:24).*

ஈசாக்கு பெயர்செபாவுக்குப் போன அன்றிரவே கடவுள் தரிசனமானுர். அத்தரிசனம் தற்செயலாய்க் கிடைத்ததென்று நீ எண்ணுகிறுயா? அன்றிரவைப்போல் வேறு எந்த இரவிலும் நடந்திருக்க

லாம் என்று நினைக்கிருயா? அப்படியானுல் நீ எண்ணுவது தவறு. ஈசாக்கு பெயர்செபாவுக்குச் சென்ற அன்று இரவில் அவர் வெளிப் படுவானேன்? ஏனென்ருல் அன்றிரவுதான் அவன் துன்பப்பட்டிருந் தான். அற்பக் கிணறுகளின் உரிமையைக் குறித்து அடுத்தடுத்துப் பன்முறை சின்னஞ்சிறு மனஸ்தாபங்கள் ஏற்பட்டன. சிறு கவலைகள் அடிக்கடி ஏற்படும்பொழுது அதிகக் கவலையைப் பிறப்பிக்கும். இதை ஈசாக்கு அறிந்தான். சண்டை ஓய்ந்த பின்னும் அந்த இடத் தில் அதைக் குறித்த எண்ணம் உண்டாகிக்கொண்டேயிருக்கும். ஆகையால் அவன் அந்த இடத்தை விட்டுச் செல்லத் தீர்மானித்தான். முன்பு சண்டை ஏற்பட்ட இடத்திற்கு அப்பால் சென்று தன் கூடாரத்தை அடித்தான். அந்த இரவே அவனுக்கு காட்சி கிடைத் தது. உள்ளத்தில் கலக்கம் இல்லாதபோது கர்த்தர் பேசினுர். அவன் மனம் குழம்பியிருக்கும்போது அவர் பேச முடியவில்லை. அவர் சத்தத்தைக் கேட்க ஆத்துமத்தில் அமைதி வேண்டும். ஆவி அமைதியாய் இருக்கையில் ஈசாக்கு கர்த்தரின் வஸ்திர சப்தத்தை கேட்டான். அவன் அமைதலாயிருந்த இரவே அவனுக்கு ஒளி நிறைந்த இரவாயிற்று.

என் ஆத்துமாவே! 'அமர்ந்திருந்து அறிந்துகொள்' (சங். 46:9). இவ்வார்த்தைகளை நீ ஆராய்ந்ததுண்டா? குழப்பம் நிறைந்த வேளையில் ஜெபத்திற்கு விடை நமக்குக் கேட்காது. அநேக தடவை களில் ஜெபத்திற்குப் பதில் பிந்திவருவதுபோல் தோன்றுகிறது. இருதயம் அங்கலாய்த்து, அது பலவிதமாகக் கலக்கமுறும்பொழுது அதற்குப் பதில் கிடையாது. அமைதலாகும்பொழுது, அங்கலாய்ப்பு அமரும்போதும், மற்றவர்கள்மேலுள்ள பட்சபாதம், உன் அங்க லாய்ப்பை மாற்றும்பொழுதும், நீண்ட காலமாய்த் தாமதித்து பதில் கிடைக்கும்.

என் ஆத்துமாவே! உன் ஆசை நிறைவேற அமர்ந்திருக்கவேண்டும். உன்னைக் குறித்த கவலை என்னும் நாடித்துடிப்பை தன்னிலைப்படுத்து. மற்றவர்களின் துன்பத்தை எண்ணி, உன்னை மாத்திரம் பாதிக்கும் வருத்தங்களை மறந்துவிடு. அதே இரவு கர்த்தர் உனக்குத் தரிசன மாவார். வடிகின்ற வெள்ளத்தின்மேல் வானவில் தோன்றும்; உன் அமைதியில் பேரின்ப கீதம் கேட்கும் —ஜியார்ஜ் மத்தீசன்.

உன் பாதையில் தனியே நடந்து
அமர்ந்து தைரியத்தோடிரு—அப்போது
முன்பு ஒருவரும் உனக்குச் சொல்லியிராத
புதுமையான சத்தியங்களைக் கேட்பாய்.
சாதாரண மக்கள்
வீணுன சிற்றின்பத்தைப் பற்றுகையில்
நீ இனிமையான தெய்வீக சங்கீதம் கேட்கும்
புது உலகம் உருவாகக் காண்பாய்.

தூசி நிறைந்த பாதையை ஏனையோர் நாடினும்
சூரியன் மறையும் பொழுதில்
கடலில் தோன்றும் எழிலைப்போல உன் இதயத்தில்
பரிசுத்தம் ஒளிரட்டும்.

## ஜனுவரி 16

'அங்கே பலத்த சுழல் காற்று உண்டாயிற்று' (மா. 4:37).

ஜீவியத்தின் சுழல் காற்றுகள் திடீரென்று வருகின்றன. ஒருபெரிய துக்கம், மிகுந்த ஏமாற்றம் அளிக்கும்படியான தோல்வி இவை போன்றவை எதிர்பாராதவாறு வருகின்றன. சில மெதுவாக வரும். தொடக்கத்தில் ஒரு மனிதனின் கையளவு மட்டுமே எனத் தோன்றுகின்ற அற்பமான துன்பம் ஆகாயத்தை மூடுமளவு பரவி நம்மை நிலைகுலையச் செய்யும்.

ஆயினும் இந்தச் சுழல் காற்றில்தான் கடவுள் நம்மைத் தம் சேவைக்கு ஆயத்தப்படுத்துகிறார். கடவுளுக்கு ஒரு தேக்கு மரம் தேவையாயிருக்கும்போது, அதைச் சுழல் காற்று வீசி, மழை மோதியடிக்கும் வெற்று நிலத்தில் நாட்டுகிறார். இதனாலேயே அம்மரம் பஞ்ச பூதங்களுக்கும் எதிர்த்து நின்று போராடிப் பலத்த நார்களைப் பெற்றுக் காட்டு இராஜாவாக விளங்குகிறது.

கர்த்தர் தம் சேவைக்குகந்த ஆளை ஆயத்தப்படுத்தச் சுழல் காற்றினிடையே அவனை அனுப்புகிறார். பூரண புருஷனாக விளங்குவது எளிதல்ல; புயலை எதிர்த்து நின்று, 'இறைவனே, என்னை ஏற்றுக் கொள். கஷ்டங்களின் மூலமாய் என்னைச் சீர்திருத்து' என ஜெபம் செய்து, அந்த ஜெபத்தின் பயனையும் அடையும் வரையில் ஒரு மனிதன் வாழ்வு நிறைவடைவதில்லை.

ஒரு பிரஞ்சு சித்திரக்காரன் 'சர்வலோக கலைஞர்' என்னும் பெயர் கொண்ட ஒரு காட்சியைச் சித்தரித்தான். அதில் வாக்கு வல்லவர்களும், தத்துவ ஞானிகளும், இரத்தச் சாட்சிகளும், உலகில் ஏதாவது ஒரு காரியத்தில் மேன்மை பெற்றவர்கள் யாவரும் இருக்கிறார்கள். அப்படத்தின் விசேஷம் யாதெனில் அதில் சித்தரிக்கப்பட்ட ஒவ்வொருவரும் முற்காலத்தில் பாடனுபவிப்பதில் முதன்மையிடம் பெற்றவர்கள். முன்னால் நிற்பவர் வாக்களிக்கப்பட்ட தேசத்தைக் காணமாட்டாய் என்ற தண்டனை பெற்ற மோசே. அவருக்குப் பக்கத்தில் நிற்கிறார் தம் வழியை தடவிப் பார்த்து அறிந்துகொள்ளும் குருடரான ஹோமர். குருடனும் துக்கம் நிறைந்தவருமான மில்டனும் நிற்கிறார். இவர்களுக்கெல்லாம் மேலாக ஒருவர் நிற்கிறார். அவருடைய குணாதிசயமென்ன? அவருடைய முகம் மற்ற முகங்களைவிட அதிகக் கஷ்டம் அனுபவிப்பதைக் காட்டுகிறது.

அந்தச் சித்திரக்காரன் அந்தச் சித்திரத்திற்குப் 'புயல்' என்று பெயரிட்டிருந்தால் பொருத்தமாயிருக்கும்.

இயற்கையின் அழகு புயலுக்குப்பின் உண்டாகிறது. கரடுமுரடான மலையின் அழகு புயலினால் உண்டாயிற்று. வாழ்க்கையில் வீரர்களாயிருப்பவர்கள் புயலில் அடிபட்டு யுத்தத்தில் காயமடைந்தவர்களே.

நீயும் புயல்களையும், பெருங் காற்றுகளையும் அனுபவித்திருக்கிறாய். அவைகளின் பலாபலன் யாது? துன்பங்கள் உன்னை மனங் குன்றியவனாக்கித் தோல்வியடையச் செய்து பள்ளத்தாக்கில் விட்டு விட்டனவா? அல்லது நிலையானதும், அறிவு நிறைந்ததும், நற்குறி உள்ளதுமான 'பெண்மையையோ' அல்லது 'ஆண்மையையோ' அளித்து சூரிய ஒளி நிறைந்த மலையுச்சியை அடையச் செய்தனவா? துன்பமாகிய 'புயலில்' அடிபட்டவர்களுக்கு உன்னைப் பட்சாதாபம் காட்டக்கூடியவனாக்கினவா?

1 கர்த்தர் வைத்த தருக்களை
காற்று ஒருக்காலும் அழிக்காது;
காற்றுக் கிழக்கு மேற்குமாக அடிக்கிறது,
மரங்களின் இலைகளுக்கு ஓய்வு இல்லை,
ஆனால் கர்த்தர் வைத்த தருக்களுக்கு
எந்தக் காற்றும் நல்லதே.
அவைகள் ஆழமாய் வேர் வைத்து வளர்ந்து,
அகலக் கிளைகள் விட்டு நிற்கும்,
கர்த்தர் அவற்றின் தேவைகளைப் பூர்த்தி செய்வார்.

2 கர்த்தர் அறிந்த தருவை
எந்தப் புயலும் முறிக்காது;
அதிரும்படியும், பலத்த மழையும்,
எரிக்கும் மின்னலும், பெருங்காற்றும்,
முடிந்த பின்னும் அது நிற்கும்
கர்த்தர் அறிந்த தருவானது
எல்லாப் புயலையும் தாங்கி
தொடக்கம் முதல் முடிவு வரை
அழகு பெற்று ஓங்கும்.

## ஜனுவரி 17

'தானியேலே! ஜீவனுள்ள தேவனின் தாசனே! நீ இடைவிடாமல் ஆராதிக்கிற உன் தேவன் உன்னைச் சிங்கங்களுக்குத் தப்புவிக்க வல்லவராயிருந்தாரா? (தானி. 6:20).

'ஜீவனுள்ள தேவன்' என்ற வார்த்தைகளை வேத புத்தகத்தில் அநேகமுறை வாசிக்கிறோம். ஆனால் அதைத்தான் நாம் அடிக்கடி மறந்துபோகிறோம். 'ஜீவனுள்ள தேவன்' என்று எழுதியிருக்கிறது.

ஆனால் நம்முடைய அன்றாட வாழ்க்கையில் நாம் அதை மறந்து விடுவதுபோல் முற்றிலுமாக வேறெதையும் மறக்கவில்லை. மூவாயிரம் அல்லது நாலாயிரம் ஆண்டுகளுக்குமுன் அவர் எப்படியிருந்தாரோ, அப்படியே இப்பொழுதும் அவர் ஜீவனுள்ள தேவனாயிருக்கிறார். அவர் மாறாத ஜீவனுள்ள தேவனானபடியால் நாலாயிரம் ஆண்டுகளுக்குமுன் இருந்தபிரகாரமே இந்நாளிலும் அவருக்கு ராஜரீகம் உண்டு. அவரை நேசித்துத் தொண்டு புரிபவர்களை அவர் நேசிக்கிறார். ஆகையால் நாம் அவரிடம் எவ்வளவு நம்பிக்கை கொள்ளவேண்டும்! நம்முடைய இக்கட்டுகளினிடையே அவர் இருக்கிறார். ஜீவனுள்ள தெய்வமாகவே இருக்கிறார் என்ற எண்ணத்தை நாம் மறக்கக்கூடாது.

அவரோடு நடந்து அவரையே உன் ஆதரவாகக்கொண்டு அவரிடமிருந்து உதவியை எதிர்பார்த்தால், அவர் உன்னை ஒருபோதும் கைவிடமாட்டார் என்பதை நிச்சயமாக்கிக்கொள். நாற்பது வருடகாலமாய்க் கர்த்தரை அறிந்துள்ள ஒரு மூத்த சகோதரன் நம்மைத் திடப்படுத்துமாறு, கர்த்தர் தம்மை ஒருபோதும் கைவிட்டதில்லை என்கிறார். பின்னும் அவர் 'என்னுடைய பெரிய கஷ்டங்களிலும், மிகுந்த சோதனை காலங்களிலும், தரித்திரத்திலும், தேவையிலும், என்னை ஒருபோதும் கைவிட்டதில்லை. நான் அவருடைய சுத்த கிருபையால் அவரை நம்பக்கூடியவனாயிருந்தமையால் என் உதவிக்கு எப்போதும் வந்துள்ளார். அவர் நாமத்தைக் குறித்துப் புகழ்பாட என் ஆத்துமா ஆனந்தம் கொள்ளுகிறது' என்றார்.

—ஜார்ஜ் முல்லர்

ஒரு தடவை லுத்தர் சாஸ்திரியாருக்கு ஏதோ ஆபத்து நேரிட்டது. கலக்கமும் திகிலும் நிறைந்த அவ்வேளையில், காணப்படாத இறைவனின் சக்தியே பற்றுக்கோடாகக் கொள்ளவேண்டியிருக்கும் பொழுது, அவர் தம்மை யறியாது மேஜையில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். அதைக் கவனித்தவர்கள் அங்கு 'அவர் (கடவுள்) ஜீவனோடிருக்கிறார். அவர் ஜீவனோடிருக்கிறார்' என எழுதியிருக்கக் கண்டார்கள். நமக்கும் மானிடவர்க்கத்திற்கும் நம்பிக்கை அது ஒன்றே. மனிதர் தோன்றி மறைகிறார்கள். தலைவர்களும், குருக்களும், ஞானிகளும், சிலகாலம் உழைத்துப் பின்பு சக்தியற்று ஓய்ந்துவிடுகிறார்கள். ஜீவனுள்ள தேவன் நிலைத்திருக்கிறார். அவர்கள் மறைந்தார்கள். அவர்கள் பொருத்தப்பட்ட விளக்குகளே. ஆகையால் எப்போதாவது ஒரு நேரம் அணைந்துபோவார்கள். அவரே மெய்யான ஒளி. அவரிடமிருந்தே ஏனையோர் பிரகாசம் பெற்றுக் கொள்கின்றனர். ஆகையால் அவர் எப்பொழுதும் சதாகாலமும் பிரகாசிக்கிறார்.

ஜான் டக்லஸ் அலெக்சாண்டர் மக்லர்ன் என்பவரைக் குறித்துப் பின்வரும் குறிப்புகளை ட்ரம்புல் என்பார் எழுதியுள்ளார். ஜான் டக்லஸ் என்பவர் எனக்கு அறிமுகமானார். இயேசுவின் பிரசன்னம்

தம்மோடு இருப்பதாக உணர்ந்த அந்த மாருத உணர்ச்சியே அவ ருக்கு ஆவிக்குரிய ஆதாரமாயிருந்தது என்பதை நான் அறிந்தேன். இயேசுவின் பிரசன்னம் சதா தம்மோடு இருக்கிறது என்ற அறிவே அவருக்கு ஊக்கமளித்தது. ஏசுவின் பிரசன்னம் தமது உணர்ச்சியை யும் தகுதியையும் எண்ணங்களையும் பொறுத்ததல்ல; இவற்றிற்கு அப்பாற்பட்டது என்பதை அவர் அறிந்தார்.

அதுவுமின்றி அவர் கிறிஸ்துவே தம் யோசனைக்கு உறைவிடம் என்றார். தம் மனது இதர காரியங்களிலிருந்து எப்பொழுது விடுபடு கிறதோ அப்பொழுதெல்லாம் கிறிஸ்துவினிடம் திரும்பும் என்கிறார். தம் மானிட நண்பனோடே பேசுவதுபோல் வீதியில் தனியாய்ச் செல்லும்போது, எளிதாய், சுலபமாய் கிறிஸ்துவோடு பேசிக் கொண்டு செல்லுவார். இயேசுவின் பிரசன்னம் அவருக்கு அவ்வளவு மெய்ம்மையானதாய் இருந்தது.

## ஜனுவரி 18

*'கிறிஸ்துவுக்குள் எப்பொழுதும் எங்களை வெற்றி சிறக்கப்பண்ணுகிற தேவனுக்குத் தோத்திரம்' (2 கொ. 2:14).*

வெளித்தோற்றத்திற்குத் தோல்வியாகக் காணப்படுபவைகளி லிருந்தே கர்த்தர் சிறந்த வெற்றியைப் பெறுகிறார். அநேக முறை களில் சத்துரு சிறிது காலம் மேற்கொள்ளுகிறான். கர்த்தரே அப்படிக் காணப்படச் செய்கிறார். சத்திய வேதத்தில் கூறப்பட்டுள்ளபடி துன்மார்க்கனின் வழிகளைத் தலைகீழாக மாறச் செய்கிறார். இவ்வித மாக நம்மைச் சிறந்த வெற்றியடையச் செய்கிறார். தொடக்கத்தில் சத்துரு பார்வைக்கு ஜெயம் பெறுவதுபோல் இல்லாவிட்டால் நாம் இவ்வளவு சிறந்த வெற்றியை அடையமாட்டோம்.

எபிரேய வாலிபர்கள் மூவர் எரிகின்ற அக்கினியில் போடப்பட்ட கதை நம் எல்லாருக்கும் தெரிந்ததே. அது தானியேல் 3ஆம் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது. வெளிப்படையாகச் சத்துரு ஜெயம்கொண்டதுபோல் தோன்றிற்று. ஜீவனுள்ள தேவனின் மக்கள் பெருத்த தோல்வியடைந்ததுபோல் காணப்பட்டது. நம் ஜீவியத்தில் அநேக தடவைகளில் நாம் தோல்வியடைந்தது சத்துரு எக்களிப்புக்கொள்வதுபோல் தோன்றியதுண்டு. அவர்கள் நெருப் பில் விழுந்தார்கள். சத்துருக்கள் அவர்கள் பெரிய அக்கினியில் எரிவதைக் காண வந்து நின்றார்கள். ஆனால் அவர்கள் அக்கினியில் நடந்து களிகூருவதைக் கண்டு வெகுவாய் ஆச்சரியமடைந்தார்கள். நேபுகாத்நேச்சார் அவர்களை நெருப்பிலிருந்து வரும்படி கட்டளையிட் டான். தலையின் ஒரு ரோமமும் கருகவில்லை. அவர்களுடைய வஸ்திரத்தில் அக்கினியின் மணமும் இல்லை. இவ்விதமாய் காப்பாற் றக் கூடிய தெய்வம் வேறொன்றுமில்லையல்லவா?

இந்த வெளியரங்கமான தோல்வி ஆச்சரியமான வெற்றியை யளித்தது. மூன்று வாலிபர்களும், தங்கள் தைரியத்தையும் விசுவாசத்தையுமிழந்து, கடவுள் ஏன் எங்களை இந்நெருப்பிலிருந்து காப்பாற்றவில்லை என்று முறுமுறுத்திருப்பார்களானால், அவர்கள் எரிந்து சாம்பலாகியிருப்பார்கள். கர்த்தர் மேன்மையடைந்திருக்க மாட்டார். இன்று உனக்குப் பெரிய கஷ்டம் ஒன்று ஏற்பட்டால் அதை நீ தோல்வியாக எண்ணாதே. வெற்றியிலும் மேலான பேற்றை உனக்கு அளிக்கும் இறைவனை நம்பி அதை வெற்றியாக நினை. சிறந்த வெற்றி சீக்கிரம் வெளிப்படும். நமக்கு கர்த்தரால் வரும் துன்பங்கள் யாவும் பாக்கியமான பலனையளிக்கவும், அவருடைய நாமத்தை மகிமைப்படுத்தவும், நம்முடைய விசுவாசத்தைப் பயன் படச் செய்யவும் ஏற்ற உன்னத சமயங்கள் என்று அறிவோமாக!

ஆத்துமத்தை அலைத்து அதன் மகிமையை வெளியேற்ற வெற்றியும் தோல்வியும் உதவும்.

பெரிய தேக்கு மரம் காற்றால் அடிபடும்போது
அதன் கிளைகள் புது அழகு பெறும்
அதன் வேர் ஆழமாய்ச் செல்லும்
அதிகத் துக்கம் கண்ட ஆத்துமாவே
ஆழ்ந்த ஆனந்தம் காணக்கூடும்
துக்கம் இருதயத்தை ஆனந்தம் அடையும்படி விரிவாக்கும்.

## ஜனுவரி 19

'சோர்ந்துபோகாமல் எப்பொழுதும் ஜெபம்பண்ணவேண்டும்' (லூ. 18:1).

'எறும்பினிடம் செல்.' தாமர்லேன் என்பவர் தம் இளவயதில் நடந்த ஒரு விஷயத்தை தம் சிநேகிதருக்குச் சொல்லி வந்தார். அவர் சொன்னதாவது: நான் ஒரு முறை சத்துருவிடமிருந்து தப்ப ஓர் இடிந்த கட்டடத்தில் அடைக்கலம் புகவேண்டியதாயிற்று, நான் அவ்விடத்தில் அநேக மணி நேரம் தனித்து உட்கார்ந்திருந்தேன். என் மோசமான நிலைமையை எண்ணி வருந்துவதை மாற்றத் தன்னைவிட பெரிய தானிய மணியை இழுத்துக்கொண்டு, உயர்ந்த சுவரின்மேல் ஏறின ஓர் எறும்பைக் கவனித்தேன். அது தன் எண்ணம் நிறைவேற எத்தனைமுறை முயன்றது என்று பார்த்துக் கொண்டிருந்தேன். அத்தானிய மணி அறுபத்தொன்பது முறை கீழே விழுந்தது. பின்னும் அப்பிராணியின் விடாமுயற்சியின் பயனாக எழுபதாவது முறை உச்சியை யடைந்தது. இந்தக் காட்சி அந்த வேளையில் எனக்கு ஊக்க மளித்தது. இதுவரை அந்தப் பாடத்தை நான் மறந்ததில்லை.

முந்தின ஜெபங்கள் கேட்கப்படவில்லை என்ற காரணத்திற்காக ஜெபத்தில் ஊக்கம் குன்றினால் அந்த ஜெபம் விசுவாசமற்ற ஜெப

மாகிறது. விசுவாசத்தோடு செய்யும் ஜெபத்திற்கு உடனே பதில் வராவிட்டாலும் அது விரைவிலேயே வரும் என்று நம்பலாம். மறுபடியும் மறுபடியும் ஜெபித்துத் தினமும் புதிதாக வேண்டுதல் செய்து முந்தின வேண்டுதல்களிலிருந்து பலனடைந்து ஜெபியா விட்டால் அதனுல் பயனில்லை என்று நம்முடைய கர்த்தராகிய இயேசு நமக்குக் கூறியிருக்கிருர்; முன் மாதிரி காட்டியுமிருக் கிருர்.

— வில்லியம் ஆர்தர்

ரூபன் ஸ்தீன் என்னும் சங்கீத வித்துவான் பின்வருமாறு கூறியுள் ளார்: 'நான் ஒருநாள் பயிற்சி செய்யாவிட்டால் அதனுல் ஏற்படும் குறை நான் உணரத்தகுந்ததாயிருக்கும். இரண்டு நாள் பயிற்சி செய்யாவிட்டால் என் சிநேகிதர் என் குறைவை அறிந்துகொள் வார்கள். மூன்று நாள் பயிற்சி செய்யவிட்டால் பொது ஜனங்களே அறிந்துகொள்வார்கள். 'பயிற்சியே பூரணப்படுத்தும்' என்ற பழ மொழியுண்டு. நான் விசுவாசித்துக்கொண்டும், ஜெபித்துக்கொண் டும், கர்த்தருடைய சித்தத்தை நிறைவேற்றிக்கொண்டும் இருக்க வேண்டும்.எந்தக் கலையிலும் ஒழுங்கான பயிற்சி இல்லையெனில் என்ன நேரிடும் என்று நமக்குத் தெரியும். அந்த அறிவை நம் மார்க்கத் திற்கும் உபயோகித்து, நம்முடைய அன்ருட ஜீவியத்தில் பழகிக் கொண்டேவந்தால் பூரணமடைவோம்.

டேவிட் லிவிங்ஸ்டோனின் இலட்சிய வாக்கியமாவது: 'நான் என் காரியத்தை அடையும் பரியந்தம் முடிவுவரை தொடர்ந்து செய் வேன் என்று தீர்மானித்தேன்' என்பதே. விசுவாசத்தினுலும், விடாமுயற்சியான ஜெபத்தினுலும் அவர் வெற்றி பெற்ருர்.

## ஜனுவரி 20

'நகைப்பைப் பார்க்கிலும் துக்கிப்பு நலம்; முக துக்கத்தினுலே இருதயம் சீர்ப்படும்' (பிர. 7:3).

கர்த்தரின் கிருபையினுல் துக்கம் வரும்பொழுது அது நமது ஜீவியத்திற்கு ஏராளமான நன்மையைத் தருகிறது. துக்கம் இருத யத்தின் ஆழத்தைத் தெரியப்படுத்தி, இதுவரை மறைந்திருந்த ஊழியம் செய்யும் தன்மையை வெளிக்குக் கொண்டுவருகிறது. அற்ப சந்தோஷத்தின் ஆத்துமத்தில் ஆழமில்லை. அவர்களுடைய இயற்கையிலுள்ள அற்பத்தனத்தை அவர்கள் அறியார்கள். நமக் குண்டாகும் துக்கங்கள் இருதயத்திலிருந்து நற்கனியுண்டாக்க அதன் அடி மண்ணைக் கிளப்பி உழும் கடவுளுடைய கரத்திலுள்ள ஏர்களாகும். நாம் ஒருபோதும் பாவம் செய்யாதவர்களாக உன்னத நிலையில் இருந்திருந்தால் தெய்வீக சந்தோஷம் நீரோட்டத்தைப் போல நமது உள்ளத்தில் பாய்ந்து நமது ஆத்தும சக்திகளை வெளிப்

படுத்தும். ஆனல் பாவத்தில் விழுந்துபோன இந்த உலகத்தில், துக்கம் நமக்கு நன்மையைத் தரும் சக்தியாகும். எனவே துக்கமே நம்மை ஆழ்ந்து யோசிக்கச் செய்கிறது.

துக்கமானது நம்மை நம்முடைய நோக்கங்களையும், நிலைமையை யும் ஆராய்ந்து மெதுவாய் சாவதானமாய் போகச் செய்கிறது. துக்கமே நம்மைப் பரலோக ஜீவியம் செய்யும் வன்மை உடையவர் களாக்குகிறது. துக்கமே நமது சக்தியை உபயோகித்து, நமது கடவுளுக்கும், நம் அயலகத்தாருக்கும் கடல் போன்ற எல்லையற்ற அளவில் ஊழியம் செய்ய நம்மை மனமுள்ளவர்களாக்குகிறது.

ஒரு மலைத்தொடரின் அடிவாரத்தில் சுகஜீவியத்தையே விரும்பும் ஒரு வகுப்பார் வசிப்பதாக வைத்துக்கொள்வோம். அவர்கள் அம் மலைத்தொடரில் உள்ள பள்ளத்தாக்குகளையும், வெடிப்புகளையும் கண்டுபிடிக்க முன்வரவில்லை. ஒருநாள் புயலும் இடியும் உண்டாகும் போது அம்மலையின் பள்ளத்தாக்குகளில் எதிரொலி எழுகிறது. அவ்வொலி மலைகளினிடையே பெரும் பள்ளங்கள் உள்ளன என் பதைக் காட்டுகிறது. மலைக்குச் சமீபத்தில் வசித்து வந்தும் மலை அடிவாரத்தில் உள்ளவர்கள் இதுவரை அம்மலையில் தாங்கள் கண்டு பிடியாத கெடுபாதாளங்கள் உள்ளன என்று அறிந்து ஆச்சரியப்படு கிருர்கள்.

தங்களுடைய தன்மையின் வெளி ஓரங்களை மட்டும் அறிந்து, அவற்றிலேயே ஜீவித்துவரும் அநேக ஆத்துமாக்கள் உண்டு. இடியும், புயலும் போன்ற துக்கங்கள் இருதயத்தில் ஆழ்ந்து மறைந் துள்ள சக்திகளை வெளிப்படுத்தும்வரை அவற்றை அவர்கள் உணரா திருக்கிருர்கள்.

கர்த்தர் ஒருவனை மிகுதியாய்ப் பயன்படுத்தும் முன் அவனைச் சுக்குநூருக உடைத்துச் சின்னபின்னமாக்குகிருர். யோசேப்புக்குத் தன் சகோதரரெல்லாரைப் பார்க்கிலும் அதிக துன்பமுண்டாயிற்று. அது அவனை எல்லா ஜாதிகளையும் போஷிக்கும் ஊழியத்திற்கு வழிநடத்திற்று. இக்காரணத்திற்காகவே பரிசுத்த ஆவியானவர் அவனைக் குறித்து 'யோசேப்பு கனிதரும் செடி, அவன் நீரூற்றண்டை யிலுள்ள கனிதரும் செடி; அதன் கொடிகள் சுவரின்மேல் படரும்' என்று கூறுகிருர் (ஆதி. 49:22). துக்கம் ஆத்துமத்தை விவரிக்கும்.

கறுப்பு மண் தரை ஏரால்
உழப்பட்டு கிளம்பும்—இதனல்
நான் ஒரு பாடம் படித்தேன்
என் ஜீவியம் வானத்தின் கீழ்
கனிதரவேண்டிய கர்த்தரின் வயல்போன்றதே
தங்கக் கதிர் மணி எங்குண்டு?
விசுவாசம் பட்சாதாபம் எங்குண்டு?

'துன்பத்தால் உழப்பட்ட உள்ளத்திலேயே' துன்பம் என்னும் கர்த்தரின் பள்ளியில் ஒவ்வொரு ஆளும், ஒவ்வொரு ஜாதியும் கற்றுக் கொள்ளவேண்டும். 'இரவு பாக்கியமான வேளை. ஏனென்றால் நாம் அப்போது விண்மீன்களைக் காண்கிறோம்' என்று நாம் சொல்லக் கூடும். அதுபோல் துன்பங்கள் பாக்கியமானவை. ஏனென்றால் அவை கர்த்தரின் ஆறுதலைக் காணச் செய்கின்றன என்று சொல்ல லாம்.

வெள்ளம் வந்து ஓர் ஏழை மனிதனுடைய வீடு, ஆலை முதலிய அவனுக்குரிய யாவற்றையும் வாரிச்சென்றது; வெள்ளம் வடிந்த பின், அவன் தைரியம் இழந்து மனச்சோர்வுடன், தான் இழந்த இடத்தைப் பார்த்துக்கொண்டிருக்கையில் தண்ணீர் அடித்து வெறு மையாக்கிச் சென்ற தரையில் ஏதோ ஒன்று மின்னுவதைக் கண்டான். 'அது தங்கம்போலிருக்கிறது' என்று அவன் சொன் னான். அது தங்கமாகவே இருந்தது. அவனைப் பிச்சைக்காரனாக்கிய அதே வெள்ளம் அவனை ஐசுவரியவானாக்கியது. உன் ஜீவியத்திலும் இப்படி அநேக தடவைகளில் நடக்கிறது. — எச். சி. டர்ன்புல்

## ஜனுவரி 21

'அவை ..ில் ஒன்றையுங் குறித்துக் கவலைப்படமாட்டேன்' (அப். 20:24).

'எபிரோனில் தாவீது முடிசூட்டப்பட்டவுடன் பெலிஸ்தியர் அனை வரும் தாவீதைத் தேடி வந்தார்கள்.' என்று சாமுவேலின் புத்த கத்தில் எழுதியிருக்கிறது (2 சாமு. 5:17). கர்த்தரிடத்திலிருந்து விசேஷமாக ஏதாவது ஒன்றைப் பெற்றுக்கொள்ளும்போது சாத் தான் நம்மைத் தேடி வருகிறான்.

நாம் கர்த்தருக்காக செய்யும் எந்தச் ஊழியத்தின் ஆரம்பத்திலும், சத்துரு நம்மைச் சந்தித்தால் அது இரட்சிப்புக்கு முன் அடையாளம் என்று எண்ணி, இரட்டிப்பான ஆசீர்வாதம், சக்தி, வெற்றி இவை களைக் கொடுக்கும்படி இறைவனை வேண்டுவோமாக. சக்தி எதிர்ப் பினால் உண்டாக்கப்படுகிறது. வெடிக்கும் சக்தி, எதிர்ப்பைத் தாண்டிச் செல்வதால் பீரங்கிக்குண்டு இரண்டு மடங்கு தூரத்திற்குச் செல்கிறது. மின்சார சக்தி செய்கிற உற்பத்திசாலையில், சுழலும் சக்கரங்கள் உரசுவதால் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. சாத்தானும் நாம் கர்த்தரின் ஆசீர்வாதம் பெற ஏதுகரமானான் என்று ஒரு சமயம் காண்போம்.

வீரனின் ஆகாரம் இனிய பொருளல்ல
அவன் இருதயத்திலுள்ள துன்ப உணர்ச்சியே அவன் உணவு;
மேன் மக்களின் அரண்மனை சிறையே,
பெரிய கப்பலுக்கு எதிர் காற்றே உதவியாம் —எமர்சன்

வெற்றிக்கு வழி வேதனேயே. பள்ளத்தாக்கின் வழி இராஜ பாதையில் போய்ச்சேரும். எல்லா உன்னதப் பொருள்களிலும், வேதனேயின் அச்சடையாளம் உண்டு. உலேயில்தான் கிரீடம் வார்க்கப்படுகிறது. கர்த்தரின் பாதங்களேச் சுற்றி வளேந்துவரும் நற்குணமென்னும் சங்கிலி பூலோக நெருப்பில் வார்க்கப்பட்டதே. துக்கமாகிய திராட்சை ஆலேயை மிதியாதவன் ஒருவனும் சிறந்த வெற்றி வீரஞகமாட்டான். நெற்றியில் ஆழ்ந்த வேதனேயால் சுருக்குகள் காணப்படும். 'துக்கம் நிறைந்த மனிதன்' என்னப்பட்ட கிறிஸ்து, 'இந்த உலகத்தில் உங்களுக்கு துன்பங்கள் உண்டு' என்று சொன்ஞர். இந்தத் துக்கம் நிறைந்த வார்த்தைகளுக்குப்பின் 'ஆஞலும் திடன்கொள்ளுங்கள்', 'நான் உலகத்தை ஜெயித்தேன்' (யோ. 16:83) என்ற வார்க்குத்தத்தமான கீதம் உண்டாகிறது. சிம்மாசனத்திற்குப் போகும் பாதையில் இரத்தக் கறைகளுண்டு. தழும்புகளே செங்கோலின் கிரயம். நாம் எதிர்த்துப் போராடும் அரக்கனிடமிருந்து கிரீடங்களேப் பறித்துக்கொள்ளலாம். மேன்மை யடைய துக்கம் அவசியம். இது வெளிப்படையான இரகசியமே.

வேதனேயை பொறுக்கும் தன்மையே,
குணத்தின் மேன்மையை அளவிடும்;
பாடுவோனின் உள்ளத் துயரமே,
இனிய கீதம் உண்டாக்கும்.

உண்மையான புரட்சி வீரனின் வழியெல்லாம் வெகு வேதனே நிறைந்ததே. புரட்சியாளர்களாகிய பவுல், லுத்தர், சாவநரோலா, நாக்ஸ், வெஸ்லி என்பவர்கள் சரிதையே இதற்கு அத்தாட்சி. அவர் களுடைய சிறந்தமேன்மைக்குக்காரணம் அவர்களடைந்த துன்பமே.

ஒவ்வொரு சிறந்த புத்தகமும் ஆக்கியோனின் இரத்தத்தைக் கொண்டு எழுதப்பட்டிருக்கிறது. 'இவர்கள் மிகுந்த உபத் திரவத்திலிருந்து வ ந் த வ ர் க ள்' (வெளி. 7:14). ஒப்புயர் வற்ற கிரேக்க கவிஞர் யார்? ஹோமர். ஆஞல், அப்பெயர் பெற்ற கவிஞர் குருடராயிருந்தார். ஒ ரு பொ ா து ம் மங்காப் புகழமைந்த தரிசனமாகிய 'மோட்சப் பிரயாணம்' என்னும் புத்த கத்தை எழுதியவர் யார்? இராஜ வஸ்திரந்தரித்து, சௌகரியமான படுக்கையில் படுத்திருந்தவரா? அல்ல. அந்த மகிமையான காட்சியின் பிரகாசம், பெட்போர்ட் ஜெயிலின் இருண்ட சுவர்களின் மீது காணப்படுகையில், பிரபுத்தன்மைவாய்ந்த ஒரு கைதியும் மகிமையான கலேஞனும் ஆகிய ஜான் பனியனே அக்காட்சியை பதிவுசெய்தார்.

ஜெயிப்போன் மேலானவனே;
எனினும் படுகாயமடைந்து,
இரத்தம் சிந்திக் களேத்து,
சண்டையிட்டே மடிவோன்,
அவனிலும் பெரியோன்.

## ஜனுவரி 22

'இயேசு வனந்திரமான இடத்திற்குத் தனியே போனர்' (மத். 14:13).

இளைப்பாறுதலில் சங்கீதம் இல்லை. ஆனல் சங்கீதம் உண்டாக்கக் கூடிய ஏது இருக்கிறது. நம்முடைய ஜீவியமாகிய பாதையின் இடையில் சில சமயங்களில் சங்கீதம் நின்றுவிடுகிறது. அப்பொழு தெல்லாம் நாம் கீதம் முற்றிற்று என்று எண்ணுகிறேம். கடவுள், வியாதி, நம் எண்ணம் கைகூடாமை, நம் முயற்சிகள் வீணுதல் ஆகியவற்றினல் நம்மைச் சில சமயங்களில் கட்டாயமாக ஒய்வு எடுக்கச் செய்கிறர். நம்முடைய ஜீவிய கீதம் திடீரென்று நிறுத்தப் படுகிறது. சிருஷ்டிகருக்கு ஓயாது ஏறெடுக்கப்படும் கீதத்தில், நம் சப்தம் கேட்கப்படாமல் போயிற்றென்று துக்கிக்கிறேம். இன்னிசை வருவிப்போன் நிறுத்தவேண்டிய இடங்களில் எவ்வாறு நிறுத்து கிறன்? நிறுத்தவேண்டிய இடத்திலும் தொடர்ந்து தாளத்தை விடாமல் அடித்து, அடுத்த சுதியை விடாது தொடங்குகிறன். இடையில் நிறுத்தாது தொடர்ந்து இராகம் வந்ததுபோலவே வாசிக்கிறன் அல்லவா?

நம்முடைய ஜீவியமாகிய இசையை முறையின்றி கர்த்தர் எழுத வில்லை. நிறுத்தல்களைக் குறித்துக் கவலைகொள்ளாமல் இராகத் தைப் படிக்கவேண்டியது நமது கடமை. நிறுத்தல்களை விட்டு விட்டாவது, சிறிதளவு நிறுத்தியும், நிறுத்தாமலும் இருந்து இன்னிசையைக் கொடுத்தாவது, சுதியை மாற்றக்கூடாது. நாம் மேல்நோக்கிப் பார்த்தால் கர்த்தரே இசைவிட்டுப் போகாமல் தாளம் தட்டிக்கொண்டிருப்பதைக் காணலாம். அவர்மேல் நம் கவனத்தைச் செலுத்தி அடுத்த அடியை விடாது நேர்த்தியாய், தெளிவாய் எடுக்கலாம். நிறுத்தும் இடத்தில் இசை இல்லை என்று நமக்குள் சொல்லுகிறேம். 'நிறுத்தும் இடத்தில் இசை இல்லா விட்டாலும் அதில் இராகத்தின் தொடர்ச்சி உண்டு' என்பதை மறந்துவிடக்கூடாது. ஜீவியத்தில் இன்னிசை உண்டுபண்ணுவது வருத்தத்தோடு மெதுவாய் செய்யக்கூடிய காரியம்தான். கடவுள் நம்மைப் படிப்பிக்க எவ்வளவு பொறுமையாயிருக்கிறர். அவர் கற்பிக்கும் பாடத்தை நாம் படிப்பதற்கு நீண்ட காலம் காத்திருக் கிறர்.

1 உன்னுடைய ஆனந்த ஊழியத்தினின்றும்
உலக கலக்கம் கவலையினின்றும்
நிழலுக்கும் அமைதிக்கும் என்றுமே
பரம வழி காட்டியின் காக்கும் கரத்தினல்
சிறிதுபோது—நீ அப்பால் அழைக்கப்படுகிறய்.

2 உன்னை இருண்ட் தனியான தோட்டத்துள்
அழைத்தாலும், அவர்கூட இருப்பதால் நீ.தனியாயில்லை
அவர் தமது இனிய குரலில் பேசி
'பிள்ளையே என்னோடு ஒரு மணி நேரம் தனித்திரு' என்கிறார்
அப்பால் உன்னை அழைக்கிறார்.

3 மறைந்துள்ள பாதையில் கர்த்தரோடு நடக்கவும்
ஆழ்ந்த ஊற்றின் தண்ணீர் அருந்தவும்
அவரோடு அன்புள்ள ஐக்கியத்திலிருக்கவும்
மோட்ச வீட்டை நெருங்கவுமே அவர் உன்னை—அப்பால்
அழைக்கிறார்.

4 அவரோடு தனித்திருந்தால் அறிவு பெருகும்,
அந்தகாரத்தில் அவர் அன்பு விளங்கும்
அந்தகாரத் துன்பவேளையில்—அவரின்
அன்பெனும் அரிய பாடம் படிக்கவே
நீ அப்பால் அழைக்கப்படுகிறாய்.

5 நிழலுக்கும் அமைதிக்கும் உம்மைத் துதிக்கிறோம்
உம்மோடு அழுது தரித்திருந்த
உன்னத கெத்செமனேக்காக உம்மைத் துதிக்கிறோம்
அப்பால் அழைக்கப்படுகிறோம்,

6 அவர் காரியங்களை நலமாய் நடத்துவார்
அவரோடு தனித்திருத்தல் பாக்கியமே
உம் சிலுவையின் நிழலிலே மறைந்திருக்க
அப்பால் அழைத்த அன்புக்குத் துதியே
அப்பால் அழைக்கப்படுகிறோம்.

## ஜனுவரி 23

'கர்த்தாவே ஏன் தூரமாய் நிற்கிறீர்' (சங். 10:1). 'தேவன் ஆபத்துக் காலத்தில் அனுகூலமான துணையுமானவர் (சங். 46:1).

ஆனாலும் நம்முடைய பிரயாசத்தின் இறுதியை அடைந்து இருளின் நன்மையை அறிந்து துன்பத்தின் மூலம் உண்டாகும் அள விடக்கூடாத ஆதாயத்தை அடையும்படி அவர் கவனியாதவர் போல் துன்பம் நம்மைத் தொடர விடுகிறார். துன்பங்களை வர விடுகிறவரும் அவற்றில் 'நம்மோடு இருக்கிறார், என்பது நிச்சயமே. ஒருவேளை துன்பங்கள் நம்மை விட்டு விலகும்போது மாத்திரமே நாம் அவரைப் பார்க்கக்கூடியதாக இருக்கலாம். ஆனால் அவர் நமக்குச் சோதனை நேரிடும்போது அருகிலிருக்கிறார் என்று நிச்சய மாய் நம்பவேண்டும். நம்முடைய கண்கள் இருளாகி, நம்முடைய ஆத்துமா நேசிக்கும் நண்பரைக் காணக்கூடாதிருக்கலாம். கண்கள்

கட்டப்பட்டு இருளடைந்திருக்கலாம். அதினுல் நம்முடைய பிரதான ஆசாரியன் காணப்படவில்லை. ஆனுல் நமக்காய் மன துருகுகிறவராய் அவர் அங்கேயிருக்கிருர். நம் உணர்ச்சியல்ல, அவருடைய மாருத அன்பினுல் நம்பிக்கை வைப்போமாக! அவரைக் காணுவிட்டாலும் அவரோடு சம்பாஷிப்போமாக. அவர் நம்முன் நிச்சயம் இருப்பதுபோல நாம் பேச ஆரம்பித்தால் அவருடைய சமுகம் மறைந்திருந்தாலும், உடனே பதில் சொல்லும் அவரது குரல் கேட்கிறது. இது அவர் மறைவிலிருந்து தமக்குரியவர்களாகிய நம்மைக் கவனிக்கிருர் என்று காட்டுகிறது. திறந்தவெளியில் செல்லுகையில் உன்னுேடிருப்பது போலவே, உன் பரமபிதா, நீ இருண்ட குகை வழியாய்ப் போகும்போது உன்னுேடிருக்கிருர்.

பாதை அறியாததாயிருந்தாலென்ன?
வழி கஷ்டமானுலென்ன?
உமது காலடி ஓசை சமீபத்தில் இருக்கையில்
இருண்ட இடத்தில் நான் தனித்திருக்கவில்லை.

## ஜனுவரி 24

'அந்தப் புரு தன் உள்ளங்கால் வைத்து, இளைப்பாற இடமில்லாமல் திரும்பிப் போகையில் அவனிடத்தில் வந்தது.' '. . . அந்தப் புரு சாயங்காலத்தில் அவனிடத்தில் வந்து சேர்ந்ததும் இதோ அது கொத்திக்கொண்டு வந்த ஒரு ஒலிவ மரத்தின் இலை அதின் வாயிலிருந்தது' (ஆதி. 8:9,11).

நம்மைத் தைரியப்படுத்தும் அடையாளங்களை எப்பொழுது கொடுக்கவேண்டும், எப்போது கொடாதிருக்கவேண்டும் என்று கர்த்தர் அறிவார். நாம் எப்படியும் அவரை நம்பலாம் என்பது எத்துணை நலமானது! அவர் நம்மை நினைவுகூருகிருர் என்பதற்கு யாதொரு ஆதாரமும் காணுதிருப்பதுவே சிறந்த காரியம்: நம்து புலன்களால் உணரப்படும் அடையாளங்களைவிட அவருடைய வார்த்தை, 'நினைவுகூருவோம்' என்ற வாக்குத்தத்தம் இவைகளே உறுதியும் நம்பிக்கையானவை என்பதை நாம் அறியவேண்டுமென்று அவர் விரும்புகிருர்!

—சி. ஜி. டர்ன்புல்

நாம் காணத்தக்க அடையாளங்களை நமக்குக் கட்டளையிட்டால், அதுவும் நல்லதே. அடையாளங்களின்றியே அவரை நம்பின நாம், அவற்றை இன்னும் அதிக மேன்மையாக ஏற்றுக்கொள்வோம். அவருடைய வார்த்தையையன்றி வேருெரு அத்தாட்சியும் தேடாதோர் அவருடைய அன்பின் அத்தாட்சிகள் அநேகம் காணுவர்.

—சி. ஜி. டர்ன்புல்

1 புயல் முகில் இருண்டு வந்தாலும்
வானம் வெண்கலம்போல் அசைவற்றிருந்தாலும்,
அவர் ஒவ்வொரு ஜெபத்திற்கும் செவி சாய்ப்பார்
கீழே விழும் சிறுசிட்டின் சத்தமும் கேட்பார்—அவரை நம்பு.

2 துக்கம் பாரம் நெருங்கும்போதும்
அருமையான பொருளை இழக்கும்போதும்
அவரை நம்பு, அப்போது நம் கஷ்டம் லாபமே
நமக்குரியதெல்லாம் அவரிடம் உண்டு—அவரையே நம்பு.

3 நம் கரம் அவர் கையில் வைக்குங்கால்
வழி தூரமானாலும், அறியாது பயந்திடினும்
நம்மை நேர் வழி நடத்துவார்
நம்மை அருகில்வைக்க—நம்கரம் பிடித்துள்ளார்.

4 உன் வழி அடைப்பட்டு நீ வெருண்டிருக்கையில்
அழகிய உலகப்பொருள்கள் நீங்குகையில்
அவர் உன்னோடு தங்கித்தரிக்க வருகிறார்
நம்பிக்கையோடு அமர்ந்திரு—திருப்தியாயிரு.

தாமதம், நம் விண்ணப்பம் தள்ளப்பட்டது என்பதைக் குறிப்பதல்ல. நம்முடைய அநேக ஜெபங்கள் பதிவுசெய்யப்பட்டு, அவற்றினடியில் கீழ்க்கண்டபடி எழுதப்பட்டுள்ளது: 'என் வேளை இன்னும் வரவில்லை.' கர்த்தர் ஒரு நோக்கத்தையும், அது நிறைவேறும் காலத்தையும் குறித்து வைத்துள்ளார். நம்முடைய வாசஸ்தலத்தின் அளவைக் குறிப்பிட்ட தேவன் விடுதலையை அடையும் வேளையையும் குறிப்பிட்டுள்ளார்.

## ஜனுவரி 25

'உமது கோலும் உமது தடியும் என்னைத் தேற்றும்' (சங். 23:4).

கிராமத்தில் என் தகப்பனார் வீட்டில் புகைப்போக்கி அருகில் ஒரு சிறு அறை உண்டு. எங்கள் குடும்பத்தில் அநேக தலைமுறைகளாய் உபயோகிக்கப்பட்ட தடிகளும், கை பிரம்புகளும் அங்கு வைக்கப்பட்டிருக்கின்றன. நான் என் பூர்வீக வீட்டிற்குச் செல்லும் பொழுது, என் தகப்பனாரும் நானும் உலாவச் செல்லுகையில், அவ்வறைக்குச் சென்று, அச்சமயங்களுக்கேற்ற இஷ்டமான பிரம்பை எடுத்துச் செல்வோம். இதில் எனக்குக் கர்த்தரின் வார்த்தை உபயோகமான கைத்தடிக்குச் சமானம் என்ற நினைவு வருவதுண்டு.

அபாயம் எந்தச் சமயத்திலும் உண்டாகலாம் என்று மனதைரியம் அற்றிருந்த யுத்த காலத்தில் பின்வரும் வசனமே அநேக துக்க நாட்

களில் என் கோலும் என் தடியும்போல் உதவிற்று. 'துர்ச்செய்தியை கேட்கிறதினால் பயப்படான்; அவன் இருதயம் கர்த்தரை நம்பித் திடனாயிருக்கும்' (சங். 112:7).

எங்களுடைய பிள்ளை மரித்துப்போனதால் நாங்கள் மன முடைந்து இருக்கும்பொழுது பின்வரும் வாக்குத்தத்தமே என் கோலாய் உதவிற்று. 'சாயங்காலத்தில் அழுகை தங்கும், விடியற் காலத்தில் களிப்புண்டாகும்' (சங். 30:5).

தேக அசௌக்கியத்தால் ஒரு வருட காலமாக என் சுய நாட்டை விட்டு, அயல் நாடு சென்றேன். அப்பொழுது நான் வீடு திரும்பி, என் ஊழியத்தைத் தொடர்ந்து நடத்தக்கூடுமோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. பின்வரும் வசனமே சதா என் ஆதரவு கோலாயிற்று. 'அவர் என் பேரில் நினைக்கிற நினைவுகளை அவர் அறிவார்; அவைகள் தீமைக்கல்ல, சமாதானத்துக் கேதுவான நினைவுகளே' (எரே. 20:11).

அபாயம் நெருங்கும்பொழுதும் உள்ளத்தில் சந்தேகம் தோன்றும் பொழுதும் என் அறிவு கலக்கமுறும்பொழுதும் பின்வரும் வசனமே எனக்கு ஊன்றுகோல்போல் உதவிற்று. 'அமரிக்கையும், நம்பிக்கை யுமே உங்கள் பெலனாயிருக்கும்' (ஏசா. 30:15).

காரியத்தை நிதானமாக நடத்தக்கூடாத அவசர காலங்களில், பின்வரும் வசனம் என்னைத் தயங்கவிடாது கைகொடுக்கும், 'விசு வாசிக்கிறவன் பதறான்' (ஏசா. 28:16).

—பென்ஜமின் வாசகம் ஆபேட்

மார்ட்டின் லுத்தரின் மனைவியார் பின்வருமாறு கூறியுள்ளார்: 'கர்த்தர் எனக்குச் சில துன்பங்களைக் கொடாதிருந்தால் சங்கீதங் களின் பொருளையும் பரிசுத்த ஆவியின் வரத்தையும் ஒருபோதும் அறிந்திருக்கமாட்டேன்.' கர்த்தரின் கோல் உபாத்தியாயர் கையி லிருக்கும் சுட்டுக்கோல் போன்றது. உபாத்தியாயர் அக்கோல்லால் மாணவர் நன்றாய் கவனிக்கும்படி எழுத்துக்களைச் சுட்டிக்காட்டு கிறார். அவ்வாறே கர்த்தரின் கோல் இருக்கிறது. அதனால் நாம் படிக்கக்கூடிய அநேக காரியங்களைக் குறிப்பால் அறிகிறோம்.

'கர்த்தர் தமது கோலோடு தடியையும் அனுப்புகிறார்.' 'இரும்பும், வெண்கலமும் உன் பாதரட்சையின் கீழிருக்கும்; உன் நாட்களுக்குத் தக்கதாய் உன் பெலனுமிருக்கும்' (உபா. 33:25).

கர்த்தர் நம்மைக் கல்லான பாதையில் அனுப்பினால் நமக்கு உறுதி யான பாதரட்சையும் அனுப்புவார் என்று நிச்சயமாய் நம்பலாம். சகல ஆயத்தத்தோடுமன்றி ஓரிடத்திற்கும் நம்மை அனுப்ப மாட்டார்.

—மெக்லர்ன்

## ஜனுவரி 26

'உனக்கு ஒப்புக்கொடுக்கிறேன் . . . சுதந்தரித்துக்கொள்' (உபா. 23:7).

கர்த்தருக்குக் காத்திருத்தலைக் குறித்து, வேத புத்தகத்தில் அதிகமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. கர்த்தர் தாமதித்தால் நாம் இலகுவில் பொறுமையை இழக்கிறோம். நம் ஜீவியத்தில் பொறுமையிழந்து, பயனை ஆராயாது ஆத்திரப்படுவதால் அநேக கஷ்டங்கள் உண்டாகின்றன. காய் கனியக் காத்திராமல் பச்சைக் காயைப் பறிக்கவேண்டும் என்கிறோம். நான் கேட்கும் காரியம் ஆயத்தமாக அநேக ஆண்டுகள் அவசியமிருக்கலாம். ஆனாலும் நாம் அந்தக் காரியம் கிடைப்பதற்காக ஜெபித்துக் காத்திருக்க முடியாதவர்களாயிருக்கிறோம். கர்த்தரோடு நடக்கும்படி போதிக்கப்படுகிறோம். ஆனால் அநேகம் தடவைகளில் அவர் நம்மை வெகு மெதுவாய் நடத்துகிறார். அதில் மற்றொரு படிப்பினையுமுண்டு. அநேக தடவைகளில் கர்த்தர் நமக்காகக் காத்திருக்கிறார்.

அநேக தடவைகளில் கர்த்தரோடு முன்னேறிச் செல்லாததால் அவர் நமக்கென்று வைத்திருக்கும் பாக்கியங்களைப் பெறாதிருக்கிறோம். கர்த்தருக்கென்று காத்திராமல் அநேக பாக்கியங்களை இழப்பது மாத்திரமல்ல, வேண்டியதற் கதிகமாய்க் காத்திருந்தும் இழந்துவிடுகிறோம். சில வேளைகளில் காத்திருப்பதுவே நமக்குப் பெலனாகும். ஆனால் சில வேளைகளில் நாம் தைரியமாய் முன்னேறிச் செல்லவேண்டியவர்களாயிருக்கிறோம்.

நாம் சில காரியங்களைச் செய்தால்தான் நமக்கு வேண்டியது கிடைக்கும் என்பதான தெய்வீக வாக்குத்தத்தங்கள் உண்டு. நாம் கீழ்ப்படிய ஆரம்பித்தவுடன் கர்த்தர் நம்மை ஆசீர்வதிக்க ஆரம்பிக்கிறார். ஆபிரகாமுக்கு அநேக காரியங்கள் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டிருந்தன. அவன் கல்தேயாவில் தரித்திருந்தால் அவைகளில் ஒன்றையாகிலும் பெற்றிருக்கமாட்டான். அவன் தன் வீடு தேசம் உறவு ஆகியவற்றைவிட்டுப் புதிய இடங்களில் சென்று தவறாது கீழ்ப்படிந்ததனாலேயே பல வாக்குத்தத்தங்களைப் பெற்றான். பத்துக் குஷ்டரோகிகளுக்குத் தங்களை (லூா. 17:12—19) ஆசாரியரிடம் காண்பிக்கும்படி இயேசு கட்டளையிட்டார். 'அவர்கள் போகையில் சொஸ்தமானார்கள்.' தங்கள் சரீரம் சுத்தமாகக் காத்திருந்தார்களானால் சொஸ்தமாகியிருக்கமாட்டார்கள்; கர்த்தர் அவர்களைச் சொஸ்தமாக்க ஆயத்தமாயிருந்தார். அவர்கள் விசுவாசம் கிரியை செய்ய ஆரம்பித்தவுடன் ஆசீர்வாதம் பெற்றார்கள்.

செங்கடலினருகில் இஸ்ரவேலருடைய சத்துருக்கள் அவர்களை நெருங்குகையில், புறப்படுங்கள் என்று இஸ்ரவேல் புத்திரருக்கு கட்டளை பிறந்தது. இனிமேல் காத்திராமல் ஜெபத்திலிருந்து

எழுந்து விசுவாசத்திலுண்டாகும் தைரியத்தோடு முன்னேறிச் செல்வதே அவர்கள் கடமையாயிற்று. மற்றொரு முறை யோர்தான் நதி கரைபுரண்டு ஓடிக்கொண்டிருக்கும்போது யோர்தானைக் கடந்து செல்லக் கட்டளை பெற்றார்கள். இவ்விதமாய் அவர்களைத் தங்கள் விசுவாசத்தைக் காட்டும்படி கர்த்தர் ஏவினார். வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட நாட்டின் வாசலைத் திறக்கும் திறவுகோல் அவர்கள் கையில் இருந்தது. அதை நெருங்கித் திறவாவிடில் அது அசையாம லிருக்கும். அந்தத் திறவுகோல் விசுவாசமே. நாம் ஜெயமடைய முடியாது, சத்துருக்களை மேற்கொள்ள முடியாது என்று சொல்லு கிறோம். ஆனால் அப்போராட்டத்தில் ஈடுபடும்பொழுது, ஒருவர் வந்து நம் சார்பில் போரிடுகிறார். அவர் மூலம் நாம் சிறந்த வெற்றி வீரராகிறோம். நாம் பயந்து நடுங்கி நம் துணைவர் வரும்வரை போராட்டத்தில் ஈடுபடாமல் காத்திருந்தால் அவர் ஒருபோதும் வரார். இது அவிசுவாசத்தால் தேவைக்கு மிஞ்சிக் காத்திருத்த லாகும். ஆண்டவர் உன்மேல் திரண்ட ஆசீர்வாதங்களை வருஷிக்கக் காத்திருக்கிறார். திடநம்பிக்கையோடு முன்னேறிச் சென்று உன் உரிமையைப் பெற்றுக்கொள், 'உனக்கு நான் கொடுக்க ஆயத்தமா யிருக்கிறேன் சுதந்தரித்துக்கொள்.

—ஜே. ஆர். மில்லர்

## ஜனுவரி 27

'கர்த்தர் தாமே உங்களை ஸ்திரப்படுத்தி, பலப்படுத்தி, நிலைநிறுத்துவாராக' *(1 பே. 5:10).*

நாம் கிறிஸ்துவை நமக்கு உரிமையாக்கிக்கொள்ளுமுன், அவர் நமக்கு எப்படியும் உரிமையாவார் என்று மனமாற ஒப்புக்கொள்ள அறிவென்னும் ஒளி தேவை. அது சாத்தியமா என்னும் கேள்வியே நம்பிக்கையை ஒழிக்கும். இவ்வறிவைப் பெற்றபின் நாம் முன் னேறிச் செல்லவேண்டும். பூமியில் ஊன்றப்பட்ட மரம் வேரூன்று வதுபோலவும், கல்யாணத்தின்போது மணமகள் தன்னை முழுவது மாய் ஒப்புக்கொடுத்து விடுவதுபோலவும் நாம் நன்கு தேர்ந்து தெளிந்து அவரிலேயே நிலைத்திருக்கவேண்டும். சர்வ காலமுமாய் சர்வாங்கமுமாய்ச் சமர்ப்பிக்கப்படவேண்டும்.

பின்பு அவர் நம்மை ஸ்திரப்படுத்தி, நிலைநிறுத்தச் சோதிப்பார். நாம் அவரில் நிலைக்கும் சம்பந்தம் உறுதிப்படும் காலம்வரை நாம் அமர்ந்திருக்கவேண்டும். அது ஒடிந்த கையைச் சீர்ப்படுத்த வைத்திய னிடம் ஒப்படைப்பதுபோலாகும். தெப்பைவைத்து அசையாமல் கட்டுகிறான். கடவுளும் ஆவிக்குரிய கட்டுகளை வைத்து இருக்கிறார். விசுவாசத்தின் முதல் படியைக் கடக்கும்வரை நாம் அமர்ந்திருக்க இந்தக் கட்டுகள் பயன்படுகின்றன. இது நமக்கு எளிதாக தோன்றாது. கிறிஸ்துவுக்குள் நம்மை நித்திய மகிமைக்கு அழைத்த

கிருபையுள்ள தேவன் நாம் சிறிதுகாலம் பாடனுபவித்தபின் நம்மை ஸ்திரப்படுத்தி, பலப்படுத்தி நிலைப்படுத்துவார். —எ. பி. சிம்ஸன்

பாவம் வியாதி; இவை சம்பந்தமான ஒரு இயற்கை விதியுண்டு. நாம் சமயத்திற்கேற்றாற்போல் கவலையின்றி நடந்தால் நாம் கீழே தள்ளப்பட்டுச் சாத்தானின் வல்லமைக்கு அடங்கினவர்களாவோம். ஆனால் கிறிஸ்துவில் உடல் உயிர் இரண்டுக்குமே வேறொரு நியதி கூண்டு. இதின்படி நடந்தால் இதன்மூலமாய் நாம் முன்கூறிய இயற்கை விதியை மேற்கொள்ளலாம்.

ஆனால் அச்சட்டப்படி நடக்க ஆவிக்குரிய சக்தியும், ஒரே நோக்கமும், நிலையான நடவடிக்கையும், விசுவாசிக்கும் பழக்கமும் தேவை. இது இயந்திரசாலையில் சக்தியை உபயோகிப்பது போன்றதே. சுற்றும் தோல்பட்டையைத் திருப்பிவிட்டுச் சுற்றிக்கொண்டேயிருக்கச் செய்யவேண்டியதுதான். சக்தி அங்கேயே இருக்கிறது. அதை இணைக்கவேண்டியதுதான் நமது கடன். இணைக்கும்பொழுது பெரிய சக்தி வேலைசெய்து முழு இயந்திரமும் தொழிலில் ஈடுபடும்.

நம்மைப் பரிசுத்தப்படுத்துவதிலும் குணமாக்குவதிலும் தேவையான பரிசுத்த ஆவியின் கிரியைக்குத் தெரிந்தெடுத்தல், நம்புதல், தரித்திருத்தல், கர்த்தரோடு இடைவிடாது சஞ்சாரம் செய்தல் என்ற ஆவிக்குரிய விதி உண்டு.

## ஜனுவரி 28

உங்களுக்காக தேவ வைராக்கியமான வைராக்கியங்கொண்டிருக்கிறேன்' (2 கொ. 11:2).

கைதேர்ந்த வாத்தியக்காரன் தன் வாத்தியக் கருவியின்மேல் பிரேமையுள்ளவனாயிருக்கிறான். தன் மடியிலுள்ள குழந்தையைப் போல் அதைக் கொஞ்சிக்குலாவுகிறான். அவன் ஜீவனே அதோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. இராகங்களை உண்டாக்க அவன் அதைச் சீர் செய்வதைக் கவனி. அதை இறுகப்பிடித்து ஒரு நாணைப் பலமாய் அடிக்கிறான். அது வேதனைப்படுவதுபோல் நடுங்கும்போது அதில் உண்டாகும் முதல் சுருதியைக் கவனிக்க அதனருகில் சாய்கிறான். அவன் அஞ்சியவாறே அது கடூரமாய்த் தவறாயிருக்கிறது. அந்த நாணை ஒரு சாவியின் உதவியால் திருகி விறைப்பாய் இருக்கச் செய்கிறான். அது விறைப்பாய் அறுந்துபோவதுபோல் தோன்றுகிறது. முன்போல் அடித்து அதன் ஒலியைக் கேட்க அருகில் குனிகிறான். இறுதியில் அதிலிருந்து சரியான சப்தம் கேட்டவுடன் அவன் முகம் மலருகிறது.

இவ்விதமாகவே கர்த்தர் நமக்கும் செய்கிறார். எந்தச் சங்கீதப் பிரியனும் தன் வாத்தியக் கருவியின்மேல் வைத்துள்ள அன்பை

அவர் நம்மேல் வைத்திருக்கிருர். அவர் நம்மில் கடூர ஒலியை உண்டாக்கும் அநேக குணங்களேக் காண்கிருர். அவர் நமது இருதய நாண்களேத் துன்பங்களால், வேதனேகளால் முறுக்குகிருர். அடித்த பின்பு நம்மிடம் பட்சமாய்ச் சாய்ந்து கவனிக்கிருர். இன்னும் கடூரத் தொனியைக் கேட்டு அவர் உள்ளம் உடைகிறது. 'என் சித்தத்தின்படி அல்ல, உமது சித்தத்தின்படியே ஆகட்டும்' என்று சொல்லும் இனிய தொனியைக் கேட்க அவருடைய செவிகள் கவனித்திருக்கின்றன. அவருடைய செவிக்கு அதுவே தூதரின் கீதங் களேப் பார்க்கிலும் இனிமையானது. சிட்சிக்கப்பட்ட உன் இருதயம் அவரோடு புனிதமான அன்பினுல் ஒன்ருகும்வரை அவர் அடித்துக் கொண்டேயிருப்பார்.

1 வீணேயின் நாண்களெல்லாம் ஒன்ருய்
சேர்ந்திசைத்தால் மா இனிமையே;
ஒன்று உடைந்தால், நெகிழ்ந்தால்
அதின் ஒலி காண கடூரமே.

2 அன்பின் ஆனந்தம் அழிவின் வேதனேயோடு இணேந்ததே;
அரச கிரீடம் தூக்கும் கை அநேக சிலுவை சுமக்குமே;
எனினும் போராட்டம் இன்றி வெற்றியில்லேயே
உழைப்பாளியே ஓய்வின் இன்பம் அறிபவன்.

3 மலே அழகும் விந்தைப் பிரகாசமும்
அடிக்கும் புயலினுாடே தோன்றுமே,
சிறந்த வெயில் உள்ள நாட்களில்
அவ்வழகை தூசி மறைக்குமே.

4 உன்னத ஆனந்தம், மனம் தாங்கா வேதனே
இவ்விரண்டையும் சேர்த்து விரும்புவோர் யார்?
தாங்கா வேதனே அடைவோரே உன்னத ஆனந்தம் பெறு வார்
துக்கம் அறியா மனம் மகிழ்ச்சி அனுபவியாதே.

## ஜனுவரி 29

'தேவன் அதின் நடுவிலிருந்து அது அசையாது. அதிகாலேயிலே தேவன் அதற்குச் சகாயம்பண்ணுவார்' (சங். 46:1–5).

'அது அசையாது' என்பது எவ்வளவு உற்சாகம் தரக்கூடிய வார்த்தை. இவ்வுலகக் காரியங்கள் நம்மை வெகு எளிதில் அசைக் கின்றன. ஆனுல் ஒன்றும் நம்மை அசைக்காத, ஒன்றும் நம் அமை தலேக் கலேக்காத ஓர் இடத்தை நாம் அடைய முடியுமா? ஆம், அது கூடும். பவுல் அப்போஸ்தலன் அதை அறிந்தார். தமக்குக் கட்டு களும், கஷ்டங்களும் வரும் என்று எதிர்பார்த்து எருசலேமுக்குப்

போகும் வழியில் 'இவைகளில் ஒன்றும் என்னை அசைக்காது' என்று வீரதீரமாய்ச் சொல்லக்கூடியவராயிருந்தார். பவுலின் அனுபவத்திலும், ஜீவியத்திலும், அசைக்கப்படக்கூடியதெல்லாம் அசைக்கப்பட்டாயிற்று. தம் ஜீவனையும், தம் ஜீவனுக்குரிய எதையும் அவர் தமக்கு அருமையானதாக எண்ணவில்லை. கர்த்தர் தம்முடைய சித்தத்தின்படி நம்மை நடத்தும்படி விட்டுவிடுவோமானால் நாமும் அப்பேர்ப்பட்ட ஒரு நிலைமையை அடைவோம். கர்த்தரைச் சார்ந்திருக்கப் படித்தவர்களுக்குண்டாகும் அறிவுக்கெட்டாத சமாதானம் நமக்கும் உண்டாகும். அப்போது நமது வாழ்க்கையில் சிறிய விஷயங்களினாலுண்டாகும் கவலைகளோ பெரிய சோதனைகளோ ஒன்றும் நம்மை அசைக்கமாட்டா.

'ஜெயங்கொள்ளுகிறவனெவனோ, அவனைக் கர்த்தரது ஆலயத்தில் தூணாக்குவேன். அதினின்று அவன் ஒருக்காலும் விலகுவதில்லை' (வெளி. 3:12). கர்த்தரின் வீட்டிலிருக்கும் தூணைப்போல் அசையாமலிருக்கும் நிலையடைய எத்தனை அசைவையும், சந்தோஷமாய் ஏற்றுக்கொள்ளலாம். —வொய்ட்ஹால் சிமித்

கர்த்தர் ஒரு இராஜ்யம் அல்லது ஒரு பட்டணத்தின் மத்தியில் இருக்கும்பொழுது, பெயர்க்கப்படாத சீயோன் மலையைப்போல் அதை உறுதியாக்குவார். அவர் ஒரு ஆத்துமாவின் மத்தியில்இருக்கும் போது, அதைச் சுற்றிலும் எல்லாப் பக்கத்திலும், கவலைகள் நெருங்கிக் கடலலைகளைப்போல் கொந்தளித்தாலும், அந்த ஆத்துமத்தில் உலகம் தரக்கூடாததுபோலவே எடுத்துக்கொள்ளவும் கூடாத ஒரு நிலையான அமைதி ஏற்படுகிறது. மனிதருடைய ஆத்துமத்தில் கடவுளை வைக்காமல் அதற்குப் பதில் உலகத்தை வைப்பதால், அது அவர்களைத் துன்பமாகிய புயல் வீசுகையில் இலைகளைப் போல் பயந்து நடுங்கச் செய்கிறது.

'கர்த்தரை நம்புகிறவர்கள் அசைக்கப்படாது என்றென்றுமுள்ள சீயோன் பர்வதத்தைப்போல் இருப்பார்கள்.' நம்முடைய இருதயத்தில் இரும்புபோன்ற உறுதியை அளிக்கக்கூடிய கவி ஒன்று உண்டு.

கர்த்தரை முழுவதுமாய் நம்பி ஒட்டிக்கொள்ளுவோன்
சீயோன் பர்வதத்தைப்போல் தன் நீதியில்
சற்றேனும் அசையாது, ஆடாது,
உருக்கைப்போல் உறுதியாய் நிற்பான்.

## ஜனுவரி 30

'நான் இஸ்ரவேலுக்குப் பனியைப்போலிருப்பேன்' (ஓசி. 14:5).

பனி பூமியைச் செழிப்பாக்கும். இது பூமியின் செழிப்பைப் புதுப்பிக்க இயற்கையின் வழி. இது இரவில் பெய்கிறது. இது பெய்யாவிட்டால் தாவரங்கள் மடிந்துபோம். பனியின் இந்த ஒப்பற்ற

பயனே வேத புத்தகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது ஆவிக்குரிய புது ஜீவனின் அடையாளமாக நிற்கிறது. இயற்கை பனியால் மூடப்படுவதுபோல் கர்த்தர் தமது ஜனத்தைப் புதுப்பிக்கிறார். தீத்து 3:5இல் 'பரிசுத்த ஆவியின்'புதிதாக்குதல்' என்று கண்டுள்ளதால், ஆவிக்குரிய புதிதாக்குதல் பரிசுத்த ஆவியின் வேலையாகத் தெரிகிறது.

அநேக கிறிஸ்தவர்கள் உன்னத பனி தங்கள் ஜீவியத்திற்கு அவசியம் என்பதை உணர்வதில்லை. அதன் பயனாகப் புதிதாக்குதலும், புதுப்பலமும் அற்றவர்களாயிருக்கிறார்கள். அவர்களின் ஆவி, இன்மையால் தொய்ந்து போகிறது.

என் பிரிய உடன் ஊழியனே, சாப்பிடாமல் ஒரு நாளின் வேலையை செய்ய ஆரம்பிப்பவனின் மதியீனத்தை நீ அறிவாயல்லவா? அதே போல் உன்னதத்திலிருந்து வரும் மன்னாவை உட்கொள்ளாமல் ஊழியம் செய்யப்போகும் கர்த்தருடைய ஊழியக்காரனின் மதியீனத்தை உணருகிறாயா? ஆவிக்குரிய போஜனம் எப்போதாவது ஒரு தடவை கிட்டினால் போதாது. ஒவ்வொரு தடவையும் பரிசுத்த ஆவியின் புதிதாக்குதலை நீ பெறவேண்டும். புதுப்பலம் புதிதாக உனக்குள் பாயும்பொழுதும் அது உனக்குத் தெரியும். அமர்ந்திருந்து உட்கொள்ளும்பொழுது பனி கிடைக்கும். இரவில் இலைகள் அசையாதிருக்கும்பொழுது தாவரங்களின் துவாரங்கள், புத்துயிரும் புதுப்பெலனும் அளிக்கும் ஸ்நானத்தைப்பெறத் திறந்திருக்கின்றன. அதுபோலவே கர்த்தருடைய சந்நிதானத்தில் அமர்ந்து காத்திருந்தால் ஆவிக்குரிய பனி கிடைக்கும். அவர்முன் அசையாதிரு. ஆத்திரப்பட்டால் நீ அப்பனியை அடையமாட்டாய். அவருடைய பிரசன்னத்தால் நீ திருப்தி அடையும்வரை கர்த்தர்முன் காத்திரு. பின்பு உன்னில் புதுப்பெலன், புத்துயிர் உண்டானதை உணர்ந்து உன்னுடைய அடுத்த கடமைகளைச் செய்யச் செல்.

—டாக்டர் பார்டிஸ்டன்

காற்றாவது, உஷ்ணமாவது இருக்கையில் ஒருபோதும் பனித்துளிகள் அண்டா. உஷ்ணநிலை குறையவேண்டும். காற்று நிற்கவேண்டும். ஆகாயம் குளிர்ந்து அசையாதிருக்கும் நிலையை அடையவேண்டும். அப்போதுதான் ஆகாயத்தின் கீழேயுள்ள பூண்டுகளுக்கும், புஷ்பங்களுக்கும் கண்ணுக்குத் தோன்றாத ஈரப்பசையுள்ள திவலை கிடைக்கும். அதுபோலவே ஆத்துமா முற்றிலும் அமர்ந்திருந்த நிலைமையில்தான் கர்த்தருடைய கிருபை கிடைக்கும்.

இறைவனே, எங்கள் வீண் முயற்சிகளெல்லாம் அடங்கும்படி உள் அமைதியாகிய பனித்துளியை எங்கள்மேல் தெளி.

எங்கள் வாழ்விலுள்ள கவலைகள் சச்சரவுகள் யாவற்றையும் நீக்கி உள் அமைதியின் அழகை அதில் பிரதிபலிக்கச் செய்.

வீண் ஆசைகளினுல் அலையும் எங்கள் உள்ளம் அடங்கும்படி அதைக் குளிர்மை பெறச் செய்யும் மருந்தைக்கொடு. எங்கள் புலன்கள் அனைத்தும் அடங்கியிருக்கட்டும். எங்கள் வாழ்வின் புயல்களுக்கு மத்தியில் உனது அமைதியான இனிமையான குரல் கேட்கட்டும்.

## ஜனுவரி 31

'அவர் சமாதானம் அருளுகிருர்' (யோபு 34:30).

புயலினூடே அமைதல் உண்டாகிறது. அவரோடு இன்னும் ஏரியில் படகைச் செலுத்துகிரேம். கரையைவிட்டு வெகுதூரம் சென்று ஜலத்தின் மத்தியையடையும்போது, நடுநிசியில் சடுதியில் புயல் உண்டாகிறது. பூலோகமும், பாதாளமும் நமக்கு எதிர்த்து நிற்பதுபோல் தோன்றுகிறது. அலைகள் நம்மை ஆழ்த்திவிடும் என்று பயப்படுகிரேம். அப்போது அவர் தமது நித்திரையைவிட்டு எழும்பிக் காற்றையும், கடலையும் அதட்டுகிருர். அவர் கரம் கொந்தளிக்கும் பஞ்ச பூதங்களையும் அமரச்செய்கிறது.

'அமர்ந்திரு' என்ற இயேசுவின் சப்தம் காற்றின் இரைச்சலுக்கும் குமுறும் அலைகளுக்குமேல் கேட்கிறது. நீ அதைக் கேட்டதில்லையா? உடனே அங்குப் பெரிய அமைதல் உண்டாகிறது. 'அவர் சமாதானம் அருளுகிருர்.' உள்ளத்தில் ஆறுதலற்றிருக்கும் வேளையில் சமாதானம் உண்டாகிறது. இந்தச் சமாதானத்தை அவர் சில சமயங்களில் எடுத்துக்கொள்கிருர். ஏனென்ருல் நாம் அதைக் குறித்துப் பெருமிதம் கொள்ளுகிரேம். நம்முடைய சந்தோஷங்களையும், உன்னத ஆனந்தத்தையும் நமக்கு இயற்கையாய்க் கிடைப்பதுபோல் ஏற்றுக்கொள்ளுகிரேம். ஆகையால் நம் அன்பைப் பெற நம்மில் முந்தி அன்புகூர தேவன் அச்சந்தோஷங்களைத் திரும்ப எடுத்துக்கொள்ளுகிருர். தம்மையும் இதர சந்தோஷங்களையும் வேறுபடுத்திக் காண்பிக்கிருர். அருகில் வந்து தமது பிரசன்னத்தின் நிச்சயத்தை நமக்கு இரகசியமாய்ச் சொல்லுகிருர். இவ்விதமாக முடிவில்லா அமைதி நம் மனதிலும் இருதயத்திலும் உண்டாகிறது.

நமது மூத்த சகோதரன் நமக்கு அமைதியைத் தருகிருர். அவர் நமக்காக வீடின்றி அலைந்து திரிந்தவர். நமது துன்ப பாரத்தை அவரது கரங்கள் தாங்கின. நாமும் துன்பங்களினூடே நன்மை காணுமாறு அவர் இவற்றைச் செய்தார்.

நீர் எண்ணற்ற நன்மைகளையும் ஆறுதல்களையும் அளிக்கிறீர். ஆனல் நான் கேட்பது இது ஒன்றே. அல்லலுறும் வேளையிலெல்லாம் நான் உமது குரலைக் கேட்கவேண்டும். நீர் அளிக்கும் அமைதியில் ஆறுதல் பெறவேண்டும்.

நான் உம்மில் அசைவற்ற விசுவாசம் வைக்கக்கூடுமானால் உலகக் கவலைகள் என்னை அலைக்கமாட்டா. நான் உமது கரத்தைப்பற்றி உம்மோடு சென்றால் துயரம் என்னை அசைக்காது. வழியில் இருள் நிறைந்தாலும் அஞ்சமாட்டேன்.

பொழுது புலரும்போது இருளினின்றும் விடுதலையடைவேன். காலையின் அழகைக் காணும்வரையில் பொறுமையாகக் காத்திருப்பேன். நீரே எனக்கு அமைதி நல்கும்பொழுது வேறு யார் என்னை கலக்கக்கூடும்.

## பெப்ருவரி 1

'என்னாலே இக்காரியம் நடந்தது' (1 இரா. 12:24).

வாழ்க்கையில் ஏமாற்றங்கள் உண்மையில் அன்பினால் அருளப்படுபவையே என்று சி. ஏ. பாக்ஸ் எழுதுகிறார்.

என் அன்பிற்குரிய பிள்ளையே! இன்று உனக்கு ஒரு செய்தி சொல்லுகிறேன். இதை மெதுவாக உன் காதில் சொல்கின்றேன். இச்செய்தி இருண்ட மேகங்களைப் பிரகாசிக்கச் செய்யவும் கரடுமுரடான பாதைகளைச் சமமாக்கவும் வல்லது. இது நாலு வார்த்தைகள்கொண்ட சின்னச் செய்திதான். ஆனால் அதை உன் இருதயத்தின் ஆழத்தில் பொதிந்துவை. அதை நீ களைத்து இருக்குங்கால் உன் தலைக்குத் தலையணையாக உபயோகப்படுத்து. அச்செய்தி இதுவே. 'இந்தக் காரியம் என்னாலே நடந்தது.'

உனக்கடுத்ததெல்லாம் எனக்கடுத்தது என்பதை நீ யோசித்திருக்கிறாயா? ஏனென்றால் உன்னைத் தொடுகிறவன் என் கண்மணியைத் தொடுகிறான் (சக. 2:8). 'நீ என் பார்வைக்கு அருமையானவன்' (ஏசா. 43:4). ஆகையால் உன்னைப் படிப்பிப்பதே என் ஆனந்தம்.

சோதனைகள் உன்னைத் தாக்குகையில், சத்துரு வெள்ளத்தைப் போல் உன்மீது வருகையில், அந்தக் காரியம் என்னாலே நடந்தது, உன் பலவீனத்தில் என் பெலன் தேவை, என்னை உனக்கு பதிலாக போரிட அழைத்தால், நீ பத்திரமாயிருப்பாய் என்பதை நீ படிக்க விரும்புகிறேன்.

உன்னை அறிந்துகொள்ளாதவர்களும், உன் விருப்பத்தின்படி செய்யத்தேடாமல் உன்னை அற்பமாக எண்ணுகிறவர்களும் ஆகியவர்கள் மத்தியில், நீ கஷ்ட நிலையிலிருக்கிறாயா? அந்தக் காரியம் என்னாலே நடந்தது. சமய சந்தர்ப்பங்களின் தெய்வம் நான். நீ தற்செயலாய் இவ்விடத்திற்கு வரவில்லை. இயேசு நீ இருக்கவேண்டுமென்று குறித்த இடம் இதுவே.

நீ தாழ்மையிலிருக்கவேண்டுமென்று நீயே கேட்கவில்லையா? அதே பாடம் கற்பிக்கும் பள்ளியில் நீ வைக்கப்படவில்லையா? என்று பார்.

உன் சுற்றுப்புறம் உன் கூட்டாளிகளும் என் சித்தத்தின் கிரியைகளே. பணக்கஷ்டம் உனக்குண்டா? வரவிற்கும் செலவிற்கும் கட்டிவரவில்லையா? இக்காரியம் என்னுலே நடந்தது. ஏனென்ருல் நானே பொக்கிஷதாரி. நீ என்மேல் சார்ந்து என்னிடமிருந்து பெற்றுக்கொள்வதே என் சித்தம். 'நானே ஐசுவரியவான்' (பிலி. 4:19). என் வாக்குத்தத்தங்கள் உண்மையா? என்று சோதித்தறி (உபா. 1:33). 'இந்தக் காரியத்தில் நீங்கள் அவரை விசுவாசியாமற் போவீர்கள்' என்பது உன்னைக் குறித்துச் சொல்லப்படாமல் இருக்கட்டும்.

துக்கமான ஓர் இரவைக் கழிக்கிருயா? இந்தக் காரியம் என்னுலே நடந்தது. நான் துக்கமுள்ள மனிதன், வியாகுலத்தை நான் அறிவேன். என்னிடம் திரும்பி நித்திய ஆறுதலைப் பெற்றுக்கொள்ளுமாறு உலக மனிதர் உனக்கு ஆறுதல் அளிக்க வராதபடி தடுத்தேன் (2 தெச. 2:16,17). 'நீ எனக்காகப் பெரியதொரு காரியத்தைச் செய்ய எண்ணியிருக்கையில், அதற்குப் பதிலாக வேதனையிலும், பலவீனத்திலும், படுத்த படுக்கையிலும் இருக்கிருயா?' இந்தக் காரியம் என்னுலே நடந்தது. நீ அவசர வேலையில் இருந்த நாட்களில் நான் சொல்வதைக் கவனிக்கச் செய்யமுடியவில்லை. என்னுடைய நுட்பமான பாடங்களில் சிலவற்றை நீ கற்கவேண்டுமென விரும்புகிறேன். 'நின்று காத்திருப்பவர்களும் ஊழியம் செய்பவர்களே.' வேறு ஊழியத்தில் ஈடுபடமுடியாத நிலையிலிருந்தும் ஜெபம் என்னும் கருவியைக் கையாள பழகியதனுல் சிலர் எனக்குச் சிறந்த ஊழியர்கள் ஆகியிருக்கிருர்கள்.

இன்றைதினம் இந்தப் பரிசுத்த எண்ணெய்ச் சட்டியை உன் கரத்தில் வைக்கிறேன். என் பிள்ளையே, நீ அதைத் தாராளமாய் உபயோகி. உனக்கு வேதனை கொடுக்கும் ஒவ்வொரு வார்த்தையிலும், உன்னை அவசரப்படச் செய்யும் ஒவ்வொரு தடங்கலிலும், ஒவ்வொரு பலவீனத்திலும் இவ்வாறு ஏற்படும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அந்த எண்ணெயை நன்ருய் ஊற்று. எல்லாக் காரியங்களிலும் என்னைக் காண நீ கற்றுக்கொள்வதால் அவைகள் உனக்கு வேதனையை உண்டாக்கமாட்டா.

—எ. பார்டர்ஸ்ஞே

என் மீட்பர் குனிந்து என் நெற்றியில் முத்தமிட்டு 'இது என்னுல் நடந்தது' என்று கூறினுர்.

உன்னை நேசிக்கும் ஒருவரே இவ்வாறு செய்துள்ளார். நீ என்னை நம்பிப் பொறுமையாயிரு. இது உனக்கு அவசியம் என்பதை தந்தை அறிவார். உனக்கு ஒருவேளை அது தெரியாமல் இருக்கலாம். ஆகையினுல் நீ 'இழந்த பொருளுக்காக வருந்தாமல் நான் உனக்குத் தருவதே சிறந்தது என எண்ணியிரு' என்ருர்.

அப்பொழுது நான் கலங்கிய கண்களுடன் அவரைப் பார்த்து, 'கடவுளே என்னை மன்னியும்' என மன்ருடினேன். 'இந்த வழிகளில் நீர் எனக்கு முன்னுல் நடந்திருக்கிறீர். ஆகையினுல் இவை எனக்கு கடினமாக இரா. இது எனக்குத் தெரியவில்லையே' என்றேன். இது என் நன்மைக்கே. ஒவ்வொரு 'சோதனையிலும் அவர் கிருபை எனக்குப் போதுமானதாயிருக்கும். ஆகையால் நாம் எப்பொழுதும் 'கடவுள் என்னை நடத்திச் செல்கின்ற வழிகளே சிறந்தவை' என்று பாடுவேன்.

## பெப்ருவரி 2

'தமது கரத்தின் நிழலினுல் என்னை மறைத்து என்னைத் துலக்கமான அம்பாக்கி, என்னைத் தமது அம்பருத்தூணியில் மூடிவைத்தார்' (ஏசா. 49:2).

எப்போதாவது ஒரு சமயத்தில் நிழலில் செல்லத்தான்வேண்டும். பகலின் வெளிச்சம் அதிகப் பிரகாசமாய் இருக்கிறது. அதனுல் நமது கண்கள் நோயுற்றுள்ளன. ஆகையினுல் நிறங்களின் துல்லிய ரகங்களை—நோயாளியின் அறையிலும் துக்கம் நிறைந்த வீட்டிலும் ஒளியிழந்த வாழ்விலும் உள்ளவைகளை—அறியமுடியாதவர்களாயிருக்கிறோம்.

ஆனுல் பயப்படத்தேவையில்லை! அது கடவுளின் கரத்திலுள்ள நிழலே. அவர் உன்னை நடத்துகிருர். அங்குமட்டுமே நாம் கற்றுக்-கொள்ளக்கூடிய சில விஷயங்களுண்டு.

அவருடைய முகரூபம் இருட்டறையில்தான் பதிவு செய்யக்கூடும். ஆனுல் அவர் உன்னை அற்பமென்று எண்ணிக் கைவிட்டார் என்று எண்ணுதே. அவர் உன்னை தமது அம்பருத்தூணியில் வைத்திருக்கிருர். ஒன்றுக்கும் உதவாதென்று உன்னைத் தூர எறிந்துவிடவில்லை.

அவர் உன்னைத் தீவிரமாகவும் நிச்சயமாகவும் தாம் மகிமைப்படக்கூடிய வேலைக்கு அனுப்பக்கூடிய வேளை வரும்வரை அடைத்து வைக்கிருர். தனிப்பட்டுத் துக்க நிழலில் தனித்து இருப்போனே, வீரன் தன் அம்புகளை முதுகில் கட்டி எளிதில் எடுக்கக்கூடிய இடத்தில் வைத்து எத்தனை அருமையாய் அவைகளைப் பாதுகாக்கிருன் என்பதைக் கவனி.

சில இராசிகளில் நிழலில் உள்ள செடிகளே, நன்ருய் வளர்கின்றனவாம். இந்திய சோளச்செடி மித உஷ்ண கோடை இரவில் வெகு விரைவாய் வளருமாம். மதியம் தகிக்கும் வெயிலில் அவைகளின் இலைகள் சுருண்டிருக்குமாம். ஒரு மேகம் ஆகாயத்தில் கடந்து செல்கையில் அவை சடுதியாய்த் திறக்குமாம். ஒளியில் இல்லாத ஒரு உதவி நிழலிலிருக்கிறது. உலகில் நட்சத்திர அழகு, இருள் ஆகாயத்தில் சூழும்போதுதான் காணப்படுகிறது. வெயிலில் பூக்காத

பல செடிகள் நிழலில் நன்ருய்ப் பூக்கும். மூடுபனியும் மேகமும் நிழலுமுள்ள நாட்டில் பச்சை அதிகமுண்டு. பூக்காரர்கள் விடி வெள்ளி என்ற பூ மாத்திரமல்ல, அந்திமந்தாமரை என்ற பூவும் வைத்திருக்கிருர்கள். அந்திமந்தாமரை, சூரியனுள்ள மத்தியா னத்தில் ஆழகாய் விளங்காது. சாயங்கால நிழலுண்டாகும்போது அழகாய் மலரும்.

நமது ஜீவியம் முழுவதிலும் சூரிய ஒளியே நிறைந்திருந்தால், நமது முகங்கள் ஒரு முறையாவது குளிர்ந்த மழைத்துளிகள் நம்மேற்பட மாட்டாவா என ஏங்கி நிற்கும். — ஹென்றி வான்டைக்

## பெப்ருவரி 3

'உடனே ஆவியானவர் அவரை வனுந்தரத்திற்குப் போகும்படி ஏவினுர்' (மா. 1:12).

இது தெய்வ தயவிற்கு அத்தாட்சியான ஒரு விந்தையான காரிய மாய்த் தோன்றிற்று. 'உடனே' அதற்குப்பின் உடனே வானங்கள் திறந்து தெய்வீகச் சாந்தி புருவைப்போலிறங்கி, 'இவர் என் னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன்' என்ற சப்தமும் கேட்டவுடன், இது இயற்கைக்கு மாருனதல்ல, என் ஆத்துமாவே! நீயும் இவ்வழி சென்றிருக்கிருய். நீ ஆனந்தமாய் உயரப்பறக்கும் சந்தர்ப்பத்தை அடுத்து உனக்கு அதிக மனத் தாங்கல் உண்டானதில்லையா? நேற்று நீ சந்தோஷத்தின் செட் டையை விரித்து, ஆகாயத்தில் பறந்து காலையில் மகிமையாய் பாடி ஞய். இன்று உன் செட்டைகள் மடங்கி, உன் பாடு அடங்கியிருக் கிறது. பகலில் உன் பரம பிதாவின் புன்சிரிப்பாகிய சூரிய வெளிச் சத்தில் லயித்திருந்தாய். சாயங்காலம் வனுந்தரத்திலிருந்து, 'என் வழிகள் கடவுளுக்கு மறைக்கப்பட்டிருக்கின்றன' என்கிருய். ஆனுல் என் ஆத்துமாவே, திடீரென வந்த இம்மாறுதல் புரட்சிகரமான தல்ல.

'உடனே' என்ற வார்த்தையின் ஆறுதலை நீ அறிந்திருக்கிருயா? ஆசீர்வாதங்களுக்குப்பின் கஷ்டம் உடனே உண்டாவதேன்? இது ஆசீர்வாதத்திற்கு அடுத்தது என்று காட்டவே.

ஜீவியத்தின் பாலைவனங்களுக்கும், கெத்சேமனேகளுக்கும், கல் வாரிகளுக்கும், உன்னை ஏற்றவனுக்கவே, கர்த்தர் உன்மேல் பிரகாசிக்கிருர். நீ இன்னும் தாழப் போவதற்குப் போதிய பெல னளிக்கவே, அவர் உன்னை உயரத்தூக்குகிருர். உன்னை இரவில் செல்லச் செய்யவும், உதவியற்றவர்களுக்கு நீ உதவி செய்யவும் தக்கதாய் உன்னைப் பிரகாசிப்பிக்கிருர். எல்லா சமயங்களிலும் நீ வனுந்தரத்துக்குச் செல்லக்கூடியவன் அல்ல. யோர்தானின்

மகிமைக்குப் பின்பு மாத்திரமே வனாந்தரத்துக்குத் தகுதியுள்ள வனாய்; குமாரனின் தரிசனமே உன்னை ஆவியின் பாரத்திற்குத் தகுதியுள்ளவனாக்குகிறது. ஞானஸ்நானத்தின் மகிமையே வனாந்த ரத்தின் பசியைத் தாங்கச் செய்யும்.

—ஜார்ஜ் மாதிசன்

ஆசீர்வாதத்திற்குப் பின்பே போர் ஆரம்பமாகும். ஆவிக்குரிய ஜீவியத்திற்கென்று குறிப்பிட்டு, ஆத்துமாவைச் சக்தி நிறைந்த தாக்கும். சோதனைக் காலம் சாமானியமானதல்ல. அக்காலத்தில் பாதாளம்கட்டவிழ்த்துவிடப்பட்டிருப்பதுபோலவும், நமது ஆத்துமா ஒரு வலையில் சிக்குண்டிருப்பதுபோலவும், கர்த்தர் நம்மைச் சாத் தானின் கையிலேயே விட்டிருப்பதுபோலவும் நமக்குத் தோன்றும். ஆனால் கர்த்தரிடத்தில் தங்கள் ஆத்துமாவை ஒப்புவித்தவர்களுக்கு அந்தக் காலம் வெற்றிகரமாக முடிகிறது. பின் அக்காலம் ஆச்சரிய மான விதமாய் நூறு மடங்கு பயனுடையதாகிறது.

—அப்ரா வொய்ட்

## பெப்ருவரி 4

'பூமியின் உயர்ந்த இடங்களில் உன்னை ஏறி இருக்கும்படி பண்ணுவேன்' (ஏசா. 58:14).

ஆகாய விமானத்தில் ஆகாயத்தில் பறப்பவர்கள், காற்று முகமாக விமானத்தைத் திருப்பிக் காற்றுக்கு எதிர்த்துப் பறப்பதே அவர்கள் படிக்கும் முதல் பாடம் என்று சொல்லுகிறார்கள். காற்று விமானத்தை அதிக உயரத்திற்குத் தூக்குகிறது. இதை அவர்கள் எப்படி அறிந்தார்கள். இதைப் பட்சிகளிடமிருந்தே கற்றுக்கொண் டார்கள். ஒரு பறவை தன் இன்பத்திற்காகப் பறந்து சென்றால், காற்றோடு செல்லும். ஆனால் அது உயர எழும்பிப் பறக்கக்கூடும். உயரச் சூரியனுக்கு நேரே பறக்கிறது.

கஷ்டங்கள் கர்த்தருடைய காற்றுகள். நமக்கு எதிர்முகமாக வீசும் அவருடைய காற்று அதிக பலமாய் வீசுகிறது. ஆனால் அவைகள் மனிதனை உயர்த்துகின்றன. பரத்துக்கு நேராக அவனைக் கொண்டு செல்கின்றன. சில கோடை நாட்களில் வெப்பத்தின் அதிகரிப்பினால் மூச்சுக்கூட விடமுடியாதபடி திணறுகிறோம். மேற்கு அடிவானத்திலிருந்து தோன்றும் சிறிய மேகம், அப்பேர்ப்பட்ட சமயங்களில் பெரிதாகிப் பூமிக்கு மிகுந்த ஆசீர்வாதத்தைப் பொழி யும். புயல் எழும்பி, மின்னல் மின்னி இடி குமுறுகிறது. புயல் பூமியை மூடுகிறது. பின்னர் ஆகாயம் தெளிவாகிறது. காற்றில் புத்துயிர் தோன்றுகிறது. உலகம் மாறுதலடைகிறது.

மனுஷனுடைய ஜீவியமும் இத்தகைய இயற்கை விதிப்படியே அமைக்கப்பட்டிருக்கிறது. புயல் உண்டாகும்போது ஆகாயம் மாறிச் சுத்தப்படுத்தப்பட்டு, புது ஜீவனுல் நிரப்பப்படுகிறது. மோட்ச மகிமை உலகிற்கு ஒருவாறு கொண்டுவரப்படுகிறது.

தடங்கல்கள் நம்மைப் பாடச் செய்யவேண்டும். காற்று திறந்த சமுத்திரத்தின்மேல் வீசுகையில், சப்தம் செய்கிறதில்லை. உயர்ந்த மரங்களின் அகன்ற கிளைகளில் மோதும்போதும், யாழ் என்னும் மாருதி வாத்தியக் கருவியின் மெல்லிய நரம்புகளில் மோதுகையிலும், சப்தம் செய்கிறது. அப்பொழுது அது பலமும், இனிமையும் நிறைந்த கீதங்களைப் பாடுகிறது. விடுதலையான உன் ஆத்துமாவை ஜீவியத்தின் தடங்கல்களுக்கு மாருகவும், காடு போன்ற வேதனைகளுக்கு எதிராகவும், வாழ்வில் வரும் சிறு கஷ்டங்களுக்கு முன்னுகவும் போகச்செய். அப்பொழுது அது கீதம் பாடும்.

பறந்து வருகின்ற பறவை ஒரு சமயம் மிகச் சிறிய கிளையில் சென்று அமரும்படி நேரிடலாம். அப்பொழுது கிளை அதன் பாரம் தாங்காது ஒடிந்தாலும் அப்பறவை தனக்குச் சிறகுகள் உண்டு என்ற தைரியத்தினுல் பாடிக்கொண்டே பறந்து செல்லும். நீயும் அதுபோலிரு.

## பெப்ருவரி 5

*'நீங்கள் தீவிரித்துப் புறப்படுகிறதில்லை' (ஏசா. 52:12).*

அமைதியிலிருக்கும் ஆச்சரியமான சக்தியை நாம் அறிந்திருக்கிறோம் என்று சொல்லமுடியாது. நாம் அவசரப்படுகிறோம். கடவுள் கிரியை செய்ய இடம் கொடாமல் நாம் வேலை செய்துகொண்டே போகிறோம். கடவுள் தாம் ஏதாவது செய்ய முயன்ருலன்றி ஒருபோதும் 'அமர்ந்திரு', 'சும்மா இரு', 'ஒன்றும் செய்யாதே' என்று சொல்லமாட்டார்.

இதுவே நம் கிறிஸ்தவ ஜீவியத்திலுண்டாகும் சங்கடம். அவ்ர் நம்மில் கிரியைசெய்ய நாம் இடங்கொடுக்கவேண்டிய வேளையில், நாமே கிறிஸ்தவர்களாயிருக்கவேண்டும் என்பதால் ஏதாவது முயற்சிசெய்ய நாடுகிறோம். உன் உருவச் சித்திரம் சித்தரிக்கப்படுகையில் நீ எவ்வளவு அசைவின்றி அமர்ந்திருக்கவேண்டுமென்று உனக்குத் தெரியுமா?

நம்மைக் குறித்து கர்த்தர் ஒரு எண்ணம் கொண்டிருக்கிருர். அதாவது நாம் அவரின் திருக்குமாரனைப் போலிருக்கவேண்டுமென்பதே. இந்த எண்ணம் ஈடேற நாம் செயலற்றிருக்கவேண்டும். செய்கை என்பதைக் குறித்து நாம் எவ்வளவோ கேள்வியுறுகின்றோம். அமைதலாயிருத்தலைக் குறித்து நாம் அறியவேண்டிய அவசியமுண்டு.

—க்ரம்ஸ்

அமைதியாக இரு. என் மகனே, வேறொன்றும் செய்யாது அமர்ந்து காத்திரு. இவ்வாறு காத்திருக்கவேண்டிய நாட்களை தீயவை என்று எண்ணாதே. உன்னை அதிகமாக நேசித்து உன் வழிகளையெல்லாம் ஒழுங்கு செய்பவர் உனக்கு வேண்டியதென்ன என்பதை மறந்து விடமாட்டார். அவர் தாமதித்தாரானால் அதுவும் தம் அன்பைச் சிறு குழந்தையாகிய உனக்குக் காட்டுவதற்கேயாகும்.

அமைதியாக இரு. என் மகனே, அமர்ந்து காத்திரு. அவர் உனக்கு வழி விடும் வரையில் நீ ஒரு அடி எடுத்துவைக்கவும் வேண்டாம். வழி விட்டவுடன் நீ எவ்வளவு இன்பத்தோடும் பலத்தோடும் எவ்வளவு விரைவாகவும் செல்வாய் என்பதை எண்ணிப்பார். அப்பொழுது காத்திருந்த நாட்கள் அதிகம் என்று தோன்றுதல்லவா?

அமைதியாக இரு. என் மகனே, அமர்ந்து காத்திரு. இதைவிட வேறு என்ன உயர்வான சேவை நீ கடவுளுக்குச் செய்யக்கூடும். இது கடினமானதுதான். ஆனால் நல்ல பொருள்களுக்கு விலையும் அதிகம் அல்லவா? இது கடினமாக இருப்பினும் இதையே இனிமையானதாக எண்ணுவதற்கு அவர் உனக்குக் கிருபை செய்வார்.

—ஜெ. சிமித்

## பெப்ருவரி 6

'கடலை உலர்ந்த தரையாக மாற்றினார், ஆற்றைக் கால் நடையாய்க் கடந்தார்கள், அங்கே அவரில் களிகூர்ந்தோம்' (சங். 66:6).

வெள்ளத்தைக் கடக்கையில் 'அங்கே அவரில் களிகூர்ந்தோம்' என்று சங்கீதக்காரன் சொல்லுகிறார். நடுக்கமும் பயமும் வேதனையும் கொள்வார்களென நாம் எதிர்பார்க்கக்கூடிய இடம் அது. ஆனாலும் அவர்கள் களிகூர்ந்தார்கள்.

இவ்விதமாக தங்கள் அனுபவத்தில் கண்டவர்கள் அநேகருண்டு. துக்கமும் கலக்கமுமான காலங்களில் அவர்கள் அவற்றை மேற்கொள்ளவும் மகிழவும் கூடியவர்களாயிருக்கிறார்கள்.

உடன்படிக்கையில் கர்த்தர் எத்தனை சமீபமாயிருக்கிறார். அவருடைய வாக்குத்தத்தங்கள் எத்தனை பிரகாசமாய்த் தோன்றுகின்றன. நாம் சௌக்கியமாயிருக்குங் காலங்களில் இந்த மகிமையை காணமாட்டோம். பகலில் நாம் நட்சத்திரங்களை பார்க்கக்கூடாதபடி சூரியன் மறைத்துக்கொள்வதுபோல் அவைகள் மறைக்கப்படுகின்றன. துக்கமாகிய இருண்ட இரவு வரும்போதுதான், ஆறுதல் நம்பிக்கை என்ற நட்சத்திரக் கூட்டங்கள் வேதாகமத்தின் மூலம் நெருங்கித் தெரிகின்றன.

யாபேக்கில் யாக்கோபு கண்டதுபோல் உலக சூரியன் அஸ்தமித்த பின்தான் தேவ தூதன் வருகிறான். அவனோடு நாம் போராடி மேற்கொள்ளுகிறோம்.

'சாயங்காலத்தில்' ஆரோன் தேவாலயத்தின் விளக்குகளை ஏற்றினான். துன்பமாகிய இரவில்தான் நம்புகிறவன் பிரகாசமான விளக்குகளை ஏற்றுகின்றான்.

தேசப்பிரஷ்டனாகித் தனித்திருக்கும்போதுதான் யோவான் இரட்சகரைக் குறித்து மகிமையான தரிசனங்கண்டான். இப்பொழுதும் அத்தகைய பத்மு தீவுகள் அநேகம் உண்டு. அவற்றை நினைக்கும்போதெல்லாம் கடவுளின் பிரசன்னமும், கைதூக்கும் கிருபையும் நாம் தனிமையிலும் துன்பத்திலும் இருக்கும்பொழுது அவர் நமக்குக் காட்டிய அன்புமே நமது நினைவுக்கு வருகின்றன.

இவ்வுலக துன்பங்களாகிய 'யோர்தானையும் சமுத்திரத்தையும்' இப்பொழுதும் கடந்து செல்லும் யாத்ரீகர்கள் கர்த்தரின் கிருபைகளை நினைவுகூருகிறார்கள். நாங்கள் ஆறுகளைக் கால்நடையாய்க் கடந்தோம், அங்கே துன்பமாகிய அலை எங்கும் எழும்பி மோதுகையில் 'அங்கே அவரில் களிகூர்ந்தோம்.'

—டாக்டர் மாக்டப்

'அவளுக்கு திராட்சத்தோட்டங்களையும் நம்பிக்கையின் வாசலாகும்படி துன்பத்தின் வாசலையும் கொடுப்பேன். அவள் அங்கே பாடுவாள்' (ஓசி. 2:15).

## பெப்ருவரி 7

*'என் ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்' (சங். 43:5).*

நாம் துக்கித்துத் திரிய என்ன நியாயமுண்டு? இரண்டே காரணங்கள் உண்டு. நாம் இதுவரை மனந்திரும்பாவிட்டால் துக்கிக்க வேண்டும். இன்னும் பாவத்தில் ஜீவித்தால் துக்கிக்கவேண்டும்.

இவை இரண்டையும் தவிர துக்கிக்க ஒரு காரணமுமில்லை. மற்ற யாவற்றையும் ஸ்தோத்திரத்தோடுகூடிய வேண்டுதலாய்க் கர்த்தருக்கு முன்பாக ஜெபத்தில் ஏறெடுக்கலாம். நம்முடைய சகல தேவைகட்கும், கர்த்தரின் சக்தியின் பேரிலும், அவர் அன்பின் பேரிலும் உள்ள விசுவாசத்தைப் பயன்படுத்தலாம். 'நீ கர்த்தரில் நம்பிக்கையாயிரு.' இதை நினைவுகூருங்கள். எல்லா வேளைகளிலும், கர்த்தர்பேரில் நம்பிக்கையை வைக்கலாம். நம்முடைய தேவை எதுவாயிருந்தாலும், நம் கஷ்டங்கள் எத்தனை பெரிதாயிருந்தாலும், பார்வைக்கு உதவிசெய்வது அரிதாகக் காணப்படினும், நாம் கர்த்தர்மேல் நம்பிக்கைவைப்பதே நமது கடன். அது வீணல்ல

என்று பின்பு காண்போம். கர்த்தரின் உதவி ஏற்ற வேளையில் கிட்டும்.

கடந்த 70 வருடம் 4 மாதங்களாகிய என் ஜீவிய நாட்களில் எத்தனையோ ஆயிரம் வேளைகளில் இது உண்மை என்று கண்டிருக்கிறேன்.

உதவி கிடைப்பது அரிது என்று எனக்குத் தோன்றினபோது உதவி கிடைத்தது. ஏனென்றால் கடவுள் தமக்குரிய வழிவகைகள் உடையவராயிருக்கிறார். அவர் ஓர் எல்லைக்குட்பட்டவரல்ல. பத்தாயிரம் சமயங்களில் பத்தாயிரம் வித்தியாசமான வகைகளில் கர்த்தர் நமக்கு உதவி செய்வார். நம் காரியத்தை பிள்ளைத் தன்மையின் நம்பிக்கையான மனதுடன் கடவுள் முன்னிலையில் வைத்து நம் இருதயத்தின் ஆவலை அவருக்கு அர்ப்பணம் செய்து, 'நீர் என் விண்ணப்பத்தைக்கேட்டு விடையளிக்க நான் அபாத்திரன், ஆனாலும் என் அருமை இரட்சகர் நிமித்தம் என் ஜெபத்திற்கு விடையளியும். விடையளிக்கும்வரை அமைதியாய்க் காத்திருக்கவும் கிருபையளியும், ஏனென்றால் உமக்குகந்த வேளையில், உமக்குகந்த முறையில் பதில் அளிப்பீரென்று நம்புகிறேன்' என்று சொல்வதே நம் கடமை.

'நான் இன்னும் அவரைப் புகழுவேன்.' அதிகமாய் ஜெபித்து விசுவாசத்தைப் பயன்படுத்தி அதிகப் பொறுமையோடு காத்திருந்தால் மிகுதியான ஆசீர்வாதம் பெறுவோம். அநேகந் தடவைகளில் என் ஜீவியத்தில் நான் இச்சத்தியத்தை உண்மையென்று கண்டுள்ளேன். ஆகையால் நான் எனக்குள்ளே அடிக்கடி 'கர்த்தர்மேல் நம்பிக்கை வை' என்று சொல்லிக்கொள்வேன்.

—ஜார்ஜ் முல்லர்

## பெப்ருவரி 8

'இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் உங்களுடனேகூட இருக்கிறேன்' *(மத். 28:20).*

இந்த ஜீவியத்தின் மாறுதல்களுக்கும், சந்தர்ப்பங்களுக்கும் பயப்படாதே. உன்னை ஆட்கொண்ட கர்த்தர் ஏற்ற வேளையில் உன்னை விடுவிப்பார் என்று முழு நம்பிக்கையோடு அவைகளை நோக்கு. அவருடைய கரத்தை உறுதியாய் பற்றிக்கொள். அவர் உன்னை எல்லாக் காரியங்களிலும் பத்திரமாய் நடத்தியிருக்கிறார். இன்னும் நடத்துவார். நீ நிற்கமுடியாதபோது உன்னைத் தமது கரத்தில் ஏந்துவார்.

நாளை என்ன சம்பவிக்குமோ என்று கவலைகொள்ளாதே. இன்று உனக்காகக் கவலைப்படும் மாறாத பிதா நாளையும், ஒவ்வொரு நாளும் உன்னைக் கவனித்துக்கொள்வார். உன்னைக் கஷ்டத்தி

லிருந்து காப்பார்; அல்லது கஷ்டத்தைத் தாங்க பெலன் ஈவார். எல்லா மனுஷீக கவலைகளையும், எல்லாக் கவலையான எண்ணங்களை யும் தள்ளிச் சமாதானமாயிரு.

'கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்.' இருந்தார் என்று அல்ல. இருக்கலாம் என்று அல்ல. இருப்பார் என்று அல்ல. 'கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஞாயிறு, திங்கள் எல்லாத் தினங்களிலும் கடவுள் நம்மோடிருக்கிறார். ஜனுவரி, பெப்ருவரி, டிசம்பரிலும் நம்மோடிருக்கிறார். வீட்டிலும், வெளியிலும், போரிலும், சமாதானத்திலும், வாழ்விலும், தாழ்வி லும் அவர் மேய்ப்பராயிருக்கிறார். —ஜே. ஹட்சன் டெய்லர்

அவர் மௌனமாக உனக்கு வேண்டியவற்றை ஒழுங்கு செய்வார். நீ அவரது எல்லையற்ற அறிவினால் கண்காணிக்கப்படும் பொருளாக இருக்கிறாய். மறைவான கண்ணிகளினின்றும் உன்னை தப்புவிப் பதற்கு அவரே வழிகாட்டியாவார்.

அவர் நிச்சயமாக எல்லாவற்றையும் மௌனமாக ஒழுங்கு செய் வார். அவர் ஒருபோதும் தவறமாட்டார். அவர் உண்மையுள்ள வர் என்பதை நம்பியிரு. அவர் உதவியால் நீ நிச்சயம் வெற்றி பெறுவாய்.

மௌனமாகவே அவர் யாவற்றையும் ஒழுங்கு செய்வார். அவர் உனக்காக ஆயத்தம் செய்தவற்றைக் கண்கள் கண்டதில்லை. செவி களுக்கு கேட்டதில்லை. அவர் அன்பின் செய்கை உனக்கு ஆச்சரிய முண்டாக்கக்கூடியதாக இருக்கும்.

எல்லாவற்றையும் அவர் மௌனமாக ஒழுங்கு செய்வார். அவ ருடைய குறிக்கோள்களனைத்தும் ஒருநாள் உனக்குத் தெளிவாகும். சிக்குண்ட நூல் அழகிய வேலைப்பாடமைந்த பொருளாக மாறுவது போல், இப்பொழுது சிக்கலாகத் தோன்றுவதெல்லாம் அப்போது ஒளி பெறும்.

அவர் உனக்காகவே மௌனமாக யாவற்றையும் ஒழுங்கு செய் வார். தந்தையால் கவனிக்கப்படுகின்ற சந்தோஷமான குழந்தையே நீ. நீ ஒருவன்தான் அன்புக்குரியவனாய் இருப்பதுபோல் உன்னை அவர் பாதுகாத்து வருகிறார்.

## பெப்ருவரி 9

*'அவனுக்குப் பிரதியுத்தரமாக, அவர் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை' (மத். 15:23). 'அவர் தமது அன்பினிமித்தம் அமர்ந்திருப்பார்' (செப். 3:17).*

இதை வாசிக்கும் கர்த்தருடைய பிள்ளையே நீ கனத்த வருத்தம் அடைந்திருக்கலாம். நீ எதிர்பாராத இடத்திலிருந்து மனச்சோர் வுண்டாக்கும் காரியம் உனக்கு நேரிடலாம். உன் பரம எஜமான்

'சந்தோஷமாயிரு' என்று சொல்லும் சப்தத்தைக் கேட்க நீ ஆசை கொண்டிருக்கலாம். 'அவளுக்குப் பிரதியுத்தரமாக அவர் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.'

கர்த்தரின் உருக்கமான மனம் நம்முடைய குறை கூறும் துக்கம் நிறைந்த முறைப்பாட்டைக் கேட்டு அதிக வேதனை அடைகிறது. நம் நன்மைக்காகவே அவர் விடையளிக்காமலிருக்கிறார். அல்லது கண்ணீரால் மங்கிய கண்களால் தூரதிருஷ்டியின்றி நாம் நன்மை யென்று எண்ணுவதையன்றி வேறொன்றைச் செய்கிறார். இதை யறியாமல் நமது பலவீனத்தில், நமது ஆத்திரத்தில் முறையிட்டு அவர் மனதை வருத்துகிறோம்.

இயேசுவின் மௌனம் அவர் பேச்சைப்போல் அழகு வாய்ந்தது. அது அவர் நமது ஜெபத்தை தள்ளுகிறதற்கல்ல. ஏற்றுக்கொண்டு ஆசீர்வதிப்பதற்கே ஏதுவாயிருக்கிறது.

'என் ஆத்துமாவே ஏன் எனக்குள் தயங்குகிறாய்.' அவருடைய மௌனத்திற்காகவும் நீ அவரை துதிப்பாய். ஒரு கிறிஸ்தவ அம்மாள் சொப்பனத்தில் தம்முடன் ஜெபிக்கிற மூவரைக் கண்டார் கள் என்ற ஒரு பழங்கதையுண்டு. அவர்கள் முழந்தாளிட்டதும் கிறிஸ்து சமீபத்தில் வருகிறார்.

அம்மூவரில் முதல்வரண்டை வந்தவுடன் அவர் குனிந்து, உருக்கத் தோடும், கிருபையோடும், அன்பு தவழும் புன்னகையோடும், சுத்த இனிமையான கானத்தில் அவளோடு பேசினார்.

அவளைவிட்டு அடுத்த பெண்ணண்டை வந்தார். அவளுடைய குனிந்த தலையை தடவி அன்போடு ஏற்றுக்கொள்ளும் பாவனையில் புன்னகை பூத்தார்.

மூன்றாவது பெண்ணைவிட்டு, சடுதியாய், தீவிரமாய் ஒரு வார்த்தை யாவது, ஒரு பார்வையாவது கொடாமல் கடந்து சென்றார். சொப்பனங் கண்ட பெண், சொப்பனத்தில் தமக்குள்ளே 'முதல் பெண்ணை எத்தனையாய் நேசிக்கிறார். இரண்டாம் பெண்ணை ஏற்றுக் கொண்டார். ஆனால் முதலிலிருந்தவளிடம் காட்டிய அன்பின் அடையாளங்கள் இவ்விடம் காட்டப்படவில்லை. மூன்றாம் பெண் கடவுளைத் துக்கப்படுத்தியிருக்கவேண்டும். ஏனென்றால் அவளோடு வார்த்தையாடவுமில்லை, பார்க்கவுமில்லை' என்று சொல்லிக் கொண்டாள்.

'அத்தனை வித்தியாசம் காட்ட அவள் என்ன செய்திருப்பாள்' என்று ஆச்சரியப்பட்டாள். ஆண்டவருடைய இந்தச் செய்கைக்கு அவள் காரணம் தேடிக்கொண்டிருக்கையில், அவர்தாமே அருகில் நின்று, 'அம்மா நீ என்னை எவ்வளவு தவறாக அர்த்தப்படுத்திக் கொள்கிறாய். முழங்கால்படியிட்டிருக்கும் முதல் பெண்ணின் கால் களை என்னுடைய நெருக்கமான வழியில் நிறுத்த, அத்தனை உருக்க

மும் தேவையாயிருந்தது. நாளின் ஒவ்வொரு விநாடியிலும் என் யோசனையும், உதவியும் அவளுக்குத் தேவை. அது இல்லாவிடில் அவள் விழுந்து மடிந்துபோவாள்.'

'இரண்டாம் பெண் ஆழ்ந்த அன்பும், பலமான விசுவாசமும் உள்ளவள். காரியம் எப்படி நடந்தாலும், ஜனங்கள் என்ன செய்தாலும் என்னை நம்புவாள் என்று எதிர்பார்க்கலாம்.'

'நான் கவனியாது விட்டுவிட்டதுபோன்று தோன்றியவள், திவ்ய குணலட்சணமான அன்பும் விசுவாசமும் உள்ளவள். கடுமையான முறையில், அவளை உன்னதமும், மகா பரிசுத்தமுமான ஊழியத்திற்குப் பயிற்சிக்கிறேன்.

'என் வார்த்தை, பார்வைபோன்ற வெளியரங்கமான ஏற்றுக்கொள்ளுதல் இல்லாமலே என்னை முற்றிலும் நம்பக்கூடிய அளவு என்னை நன்றாய் அறிந்திருக்கிறாள். அவள் கடக்கவேண்டுமென்று நான் ஒழுங்கு செய்கிற எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பயப்படாதிருப்பாள். இயற்கையான இருதய உணர்ச்சி, புலன், அறிவு யாவும் மாறாக இருந்தாலும் அவள் என்னை நம்புவாள். ஏனென்றால் நான் அவளில் நித்தியத்திற்காய்க் கிரியை செய்கிறேனென்றும், நான் செய்வது இப்போது விளங்காவிடினும், பின்பு யாவும் தெளிவாய் விளங்கும்' என்றும் அவள் அறிந்திருக்கிறாள்.

'நான் என் அன்பில் மௌனமாய் இருக்கிறேன். ஏனென்றால் என் அன்பு சொல்லுக்கடங்காது. மனித அறிவுக்கு எட்டாது. அதுவுமன்றி, நீங்கள் யாவரும் ஆவியானவரால் அன்பாய்ப் போதிக்கப்பட்டு, தாமாகவே என்னை நேசித்து நம்பியிருக்கப் படிக்குமாறு நான் மௌனமாயிருக்கிறேன்' என்றார்.

அவர் 'அதிசயங்களை நடப்பிப்பார்.' எப்பொழுது? அவருடைய அமைதியின் இரகசியத்தை அறிந்து, அவருடைய ஈவுகளை அவர் திரும்ப எடுத்துக்கொள்ளும்போது நீ இன்னும் அவரை அதிகமாக நேசித்தால் அவர் அதிசயங்களை செய்வார்.

## பெப்ருவரி 10

'பிரியமானவர்களே, நீங்கள் பழிவாங்காமல் கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள் *(ரோ. 12:19)*.

கிரியை செய்வதைவிட அமர்ந்திருப்பதற்கு அளவிடக்கூடாத அதிகமான பெலன் அவசியமாயிருக்கிறது. அமர்ந்திருத்தலே சக்தியின் உன்னத பயனாகிறது. இயேசுவிற்கு விரோதமாகத் தீமையான குற்றங்களைச் சாட்டினபோது, அவருடைய பதில் ஒரே அமைதியான மௌனமே. இது நீதிபதிகளையும், பார்த்துக்கொண்டிருந்தவர்களை

யும் திகைக்கச் செய்தது. இருதயத்திலும் கோபத்தை உண்டாக்கக் கூடியவாறு அவ்வளவாகத் தூஷித்தும்; கொடுமைப்படுத்தியும்; கேலி செய்வதும்; அவர்கள் அவரைத் துன்புறுத்தியபோது அவர் செய்த பதில் சப்தமின்றி அமர்ந்திருந்ததேயாகும். அநியாயமாய்க் குற்றஞ்சாட்டப்பட்டவர்கள், முகாந்தரமின்றிக் கொடுமையாய் நடத்தப்பட்டவர்கள், கர்த்தருக்குமுன் அமைதியாய் இருப்பதற்கு எத்தனை அபாரமான பலன் தேவை என்பதை அறிவார்கள்.

மனிதர் உன் நோக்கத்தைத் தவருக அர்த்தப்படுத்தி
உன்மேல் குற்றமுண்டு என்று சொல்வார்கள்
நீ தவறு செய்தாய் என்று சொல்வார்கள்,
நீ அமர்ந்து உன் வழியே செல்!
அவர்களல்ல, கிறிஸ்துவே உன் நீதிபதி
திடன்கொள், பயப்படாதே.

பரிசுத்த பவுல் 'இவைகள் ஒன்றும் என்னை அசைப்பதில்லை' என்று சொல்லியிருக்கிருர்.

இவைகளில் ஒன்றும் என்னைச் சேதப்படுத்தாது என்று அவர் சொல்லவில்லை. அசைக்கப்படுவதும், சேதப்படுத்துவதும் வெவ்வேறு வித்தியாசமான காரியங்கள். பரி. பவுல் வெகு இளகிய மன முடையவர். பரி. பவுல் அழுததுபோல் வேறு எந்த அப்போஸ்தல னும் அழுததாகச் சொல்லப்படவில்லை. அதிகப் பலனுள்ள மனுஷனே அழுகிருன். மனிதர் எல்லாரிலும் புருஷத்துவம் நிறைந்த மனிதனு கிய இயேசு கண்ணீர் விட்டார். ஆகையால் இவைகளில் ஒன்றும் என்னைச் சேதப்படுத்தாது என்று சொல்லப்படவில்லை. ஆனுல் அந்த அப்போஸ்தலன் தம் நம்பிக்கையினின்றும் சிறிதளவும் அசையா திருக்க உறுதி செய்துகொண்டார். நாம் எண்ணுகிற பிரகாரம் அவர் எண்ணவில்லை. சௌகரியத்தை அவர் தேடவில்லை. இந்த அழிந்துபோகிற உயிருக்காகவும் அவர் கவலைகொள்ளவில்லை. கிறிஸ்துவின்மேல் பக்திவைராக்கியமாயிருப்பதுவும், அவருடைய புன்னகையைப் பெறுவதுமே அவருடைய எண்ணங்களாயிருந்தன. கிறிஸ்துவுக்கு ஊழியம் செய்வதே அவருக்கு ஊதியமாகவும், கிறிஸ் துவின் புன்னகையே அவருக்கு மோட்சமாகவுமிருந்தது.

## பெப்ருவரி 11

*'ஆசாரியர்களின் உள்ளங்கால்கள் யோர்தானின் தண்ணீரில் பட்டமாத்திரத்தில் தண்ணீர் ஓடாமல் ஒரு குவியலாக நிற்கும்' (யோசு. 3:13).*

வழி திறக்கும்வரை ஜனங்கள் தங்கள் கூடாரங்களில் காத்திரா மல் விசுவாசத்துடன் நடக்கவேண்டியதாயிருந்தது. கூடாரங்களை அவிழ்த்துச் சாமான்களைக் கட்டி முன்னேறிச் செல்ல வரிசையாய்

நின்று ஆற்றில் பாதை உண்டாக்கு முன் ஆற்றங்கரைக்குச் செல்ல வேண்டும்.

அவர்கள் ஆற்றங்கரைக்குச் சென்று, ஆற்றினுள் இறங்குமுன் தண்ணீரின் ஓட்டம் நின்று குவியக் காத்திருப்பார்களானுல் அது வீணுய்க் காத்திருந்ததாகும். ஆனுல் தண்ணீர் குவியுமுன் அவர்கள் ஆற்றினுள் அடி எடுத்து வைக்கவேண்டும்.

நாம் முன்னேறிச் செல்லும் வழியை அறியாவிட்டாலும் கர்த்தருடைய வார்த்தையையே நம்பி நம் கடமைகளை நிறைவேற்றிக் கொண்டே முன்னேறிச் செல்லப் பழகவேண்டும்.

கஷ்டங்கள் நீங்கினபின் கடந்துசெல்வோமென்றிருப்பதால், கஷ்டங்களால் நாம் தடைப்பட்டுப் போகிறோம். நம்பிக்கையோடு நாம் முன்னேறிச் சென்றால் நமக்கு முன்பாகப் பாதை திறக்கப்படும். தடங்கலில்லாததுபோல் முன்னேறிச் செல்லவேண்டிய சமயம் தடங்கல் நீங்கட்டும் என்று நாம் செயலற்று நிற்கிறோம்.

மிகுந்த கஷ்டங்களுக்குள்ளும் விடாமுயற்சி என்ற சிறந்த பாடத்தைக் கொலம்பஸ் உலகத்திற்குக் கற்றுக்கொடுத்தான்.

அவருக்குப்பின் ஆசோர் தீவும்
'ஹெர்க்குலீஸ் வாசல்' என்ற மலையும் இருந்தன;
முன்னுல் கரையேதும் காணவில்லை;
கரையற்ற கடலைக் கண்டான்.
உதவித் தலைவன் இதோ இருண்டுவிட்டது.
இப்போது நாம் ஜெபிக்கவேண்டும்; பேசும்
தலைவரே, நான் என்ன சொல்லட்டும்?' என்றான்.
'மேன்மேலும் கப்பலோட்டிச்செல்' என்றான் தலைவன்.
'என் மனிதர் கலகம் செய்கிறார்கள்,
அவர்கள் மெலிந்து பலமற்றுப் போனார்கள்'
உறுதியான மனமுடைய உதவித்தலைவனும்
வீடுபோக மனதாகிக் கண்ணீர் விட்டான்.
'பொழுதுவிடியும்வரை கடலன்றி கரை காணுவிடில்
தலைவரே, நான் என்ன சொல்லட்டும்?' என்றான்.
'மேன்மேலும் கப்பலை ஓட்டிச்செல்'
'இன்று விடியும்போது நீ சொல்' என்றான் தலைவன்.
அவர்கள் பயணம் செய்தனர். மேன்மேலும் சென்றனர்.
இந்தப் பயங்கரக் கடல் கடூரமாயிருக்கிறது
தன் உதட்டைக் கடித்துப் பல்லைக்காட்டிக்
கடிப்பதற்குக் காத்திருக்கிறது
தைரியமுள்ள தலைவரே! நம்பிக்கையிழந்தபின்
நாம் என்ன செய்வென்று ஓர் நல் வார்த்தை சொல்க
என்றலும்

பாயும் பட்டயம்போல் 'முன்னேறிச்செல்' எனும் பதில் வந்ததே.
களைப்புடன் பயந்து கப்பலை ஓட்டினுன்
இரவின் இருளினூடே நோக்கினுன்
அந்தகாரமான இரவிலே ஓர் ஒளி!
ஓர் ஒளி! ஓர் ஒளி கண்டான். அது
நட்சத்திரக் கொடியாய் விரிந்தது
பொழுது விடியும் வேளையாயிற்று
அவன் ஒரு புது உலகைக் கண்டுபிடித்து
'மேன்மேலும்' செல்லுங்கள் என்ற போதனை கொடுத்தான்.

முன்னேறிச் செல்லும் விசுவாசம் வெற்றிகொள்ளும்.

—யோயாக்கீன் மில்லர்

## பெப்ருவரி 12

'உங்கள் பரமபிதா அறிந்திருக்கிறார்' (மத். 6:32).

ஒரு ஊமைப் பிள்ளைகள் பள்ளியைப் பார்வையிடச் சென்ற ஒருவர், கரும்பலகையில் அநேகக் கேள்விகளை எழுதினுர். அதிலொரு கேள்வி, 'என்னைப் பேசவும் கேட்கவும் கூடியவனுகவும், உங்களைப் பேசவும் கேட்கவுங் கூடாதவர்களாகவும் கடவுள் ஏன் படைத்தார்?' என்றிருந்தது.

இக் கேள்வி அவர்களை முகத்திலறைந்தாற்போல் இருந்தது. ஏன்? என்ற கேள்விக்கு விடையளியாது மரத்துப்போனதுபோல் செயலாற்றவாளா யிருந்தனர். பின்பு ஒரு சிறு பெண் எழுந்தாள். அவளுடைய உதடுகள் துடித்தன. அவள் கண்களில் நீர் நிரம்பிற்று. அவள் கரும்பலகை அண்டை நேரே சென்று சீமைச்சுண்ணும்புத் துண்டை எடுத்து, நடுக்கமின்றி பின்வரும் அருமையான வசனத்தை எழுதினுள். அதாவது 'இதுவும் கர்த்தாவே உமது பார்வைக்கு நலமாயிருக்கிறது.' என்ன ஆச்சரியமான பதில்! இது அழிவில்லாத ஒரு சத்தியத்தைத் தெரிவிக்கிறது. விசுவாசத்தில் உறுதியடைந்தவர்கள் மட்டுமின்றிக் கர்த்தரின் இளம்பிள்ளைகள்கூட அதனுல் ஆறுதல் பெறலாம். கடவுள் நமது பிதா என்ற சத்தியமே அது.

உனக்கு அந்தச் சத்தியம் தெளிவாகின்றதா? நீ அதை முற்றிலும் நம்புவாயா? நீ நம்புவாயாகில் விசுவாசமாகிய புரு ஓய்வின்றி அலைந்து திரியாமல் சாந்தி நிறைந்த இடத்தில் நித்தியமாய்த் தங்கித் தரிக்கும். இப்பொழுது நாம் அனுபவிக்கும் துன்பங்கள் நமது வாழ்வை இருளாக்குகின்றன. ஆயினும் இவை மா உன்னதமான ஆனந்தம் நிறைந்த ஒரு நிலையில் நம்மைக் கொண்டு சேர்ப்

பதற்கு அவசியமானவையே. இதை நாம் அனைவரும் அறியக்கூடிய ஒரு காலம் வருமென நம்புகிறேன். அப்போது நாம் அதிக வியப்பும் மகிழ்ச்சியும் அடைவோம். —ஆர்தர் கிறிஸ்தோபர் பேகன்

இது தற்செயலாய் ஏற்பட்டதல்ல
இது கர்த்தரின் கையினுல் ஆனது ஆகையால் பொறுத் திருப்பேன்
நான் காணக்கூடாததை அவர் காண்கிருர்
ஒவ்வொரு வேதனையும் அவசியமாய்த் தேவையுண்டு
இவ்வுலக நஷ்டம் உண்மையில் லாபமேயென்று
அவர் ஒருவரே விளங்கச் செய்வார்
நாம் வேலை செய்யும் ஒரு துணி
பின்னுல் திரும்பிப் பார்க்குங்கால்
ஒரே ஒழுங்கீனமாயிருப்பினும்
முன்னிருக்கும் சித்திரத்தின் அழகு
வேலைத்திறனையும், பெருமையையும் காட்டி
உழைப்புக்கேற்ற பயன் அளிக்கும்
கர்த்தாவே அதுபோல் உம் சாயலை
உம் நாம மகிமைக்காய் என்னில் பூர்த்தி செய்யும்.

## பெப்ருவரி 13

*'மலைத்தேசமும் உங்களுடையதாயிருக்கும்' (யோசு. 17:17).*

எப்பொழுதும் மேலே இடமுண்டு. பள்ளத்தாக்கு முழுவதிலும் உன் முன்னேற்றத்தைத் தடைபண்ணும் இரும்பு இரதங்களோடு, கானானியர் நிரம்பியிருக்கும்போது நீ மலைமீது ஏறிச்சென்று உயர்ந்த இடங்களைப் பிடித்துக்கொள். உன்னுல் கர்த்தருக்கு ஊழியம் செய்ய முடியாவிட்டால் அவருக்கு ஊழியம் செய்யக்கூடியவர்களுக் காக ஜெபி. உன் பேச்சுத் திறமையால் உலகத்தை அசைக்க உன்னுல் முடியாவிட்டால் நீ மோட்சத்தையே அசைக்கலாம். ஊழியம் செய்யச் சந்தர்ப்பங்கள் வாய்க்கவில்லை அல்லது உறவினரைப் பராமரிக்கவேண்டியிருப்பதால் வேறு ஊழியத்திற்குச் செல்ல முடிய வில்லை என்ற இவ்விதத் தடைகள் உனக்கு ஏற்படலாம். இவற்ருல் இத்தகைய விஷயங்களில் உன் வாழ்க்கையின் முன்னேற்றம் தடை பட்டாலும், காணமுடியாததும் அழிவில்லாததுமாகிய தெய்வீக நெறிகளில் நீ முன்னேறிச் செல்லலாம்.

விசுவாசம் காடுகளை அழிக்கக்கூடும். காடுகளுக்கப்பால் பொக் கிஷம் உண்டு என்று ஜனங்கள் அறிந்திருந்தாலும், மலைபோல் வளர்ந்திருக்கும் காடுகளை அழித்தல் சாத்தியம் என்று எண்ணி இருக்கமாட்டார்கள். ஆனுல் கடவுள் அவ்வேலையைக் குறிப்பிட்ட தால், அவர்களுக்குச் சக்தி உண்டு என்பதை நினைப்பூட்டினுர்.

இதைப்போலவே செய்வதரிதென்று தோன்றும் காரியங்கள் நமக்கும் காட்டப்படுகின்றன. இது நம்மைக் கேலி செய்வதற்கல்ல. கர்த்தர் நம்மோடு வசித்து நமக்குக் கொடுக்கும் பலத்தினுலன்றி நாம் இவற்றைச் செய்ய முடியாது. ஆனுல் அத்தகைய பலத்தைப் பெற்று பெருஞ் செயல்களைச் செய்ய நம்மைத் தூண்டுவதற்கே இவை நமக்குக் காண்பிக்கப்படுகின்றன.

ஜெபித்துக் கிரியை செய்யும் விசுவாசத்தின் பயனை எடுத்துக் காட்டவே, நமக்கு துன்பங்கள் அனுப்பப்படுகின்றன. நீ பள்ளத் தாக்கில் நெருக்கப்படுகிருயா? அப்பாலே மலைகளுக்குப்போய் அங்கு வசி. பாறைகளில் தேனையும் காடாய் மறைந்திருக்கும் சாரலில் ஆஸ்தியையும் பெற்றுக்கொள்.

கடக்கமுடியாது என்று சொல்லப்படும் நதியுண்டா?
சுரங்கவழி வெட்டமுடியாது என்று சொல்லப்படும் மலை உண்டா?
செய்யமுடியாதவற்றைச் செய்வதில் நாங்கள் கைதேர்ந்தவர்கள்
'முடியாது' என்று பிறர் சொல்வதை நாம் செய்வோம்.

## பெப்ருவரி 14

'சந்தோஷமாயிருங்களென்று மறுபடியும் சொல்லுகிறேன்' (பிலி. 4:4).

இயேசுவில் சந்தோஷமாயிருத்தல் வெகு உசிதமான காரியம். நீ இதைச் செய்ய முயலும்போது முதல் தடவை தவறுவதுபோல் காணப்படலாம். பரவாயில்லை. சந்தோஷம் உண்டாகாதபோது, உனக்குள் மகிழ்ச்சியில் ஊற்றில்லாதபோது, காணக்கூடிய தைரியமோ ஆறுதலோ இல்லாதபோது இன்னும் முயன்று இன்னும் சந்தோஷப்படு. அவைகளை எல்லாம் சந்தோஷம் என்று எண்ணு. கர்த்தர் உன் எண்ணத்தை நிறைவேற்றுவார். பற்பலவிதமான சோதனைகள் சூழும்போது அவைகளைச் சந்தோஷம் என்று எண்ணு. கர்த்தர் உன்னை வெற்றிக்கொடியையும் ஆனந்தக்கொடியையும், போர்முனைக்கு எடுத்துச்செல்ல அனுமதித்து, பின்பு சத்துரு உன்னைப் பிடிக்கவோ, மேற்கொள்ளவோ விட்டுவிட்டுச் சும்மா இருப்பாரோ? ஒருபோதும் இரார். உன் முயற்சியில் பரிசுத்த ஆவியானவர் கை கொடுத்து, உன் இருதயத்தைத் துதியாலும், மகிழ்ச்சியாலும் நிரப்புவார். உன் இருதயம் உள்ளே புதுப்பிக்கப் படுவதையும் உற்சாகமடைவதையும் நீ காண்பாய். உம்மில் சந்தோஷமாயிருக்க 'எப்போதும் சந்தோஷமாயிருக்க' எனக்குக் கற்பியும்.

'துதியின் சத்தத்தோடு சாத்தானை எதிர்த்தால்
பலவீனமான பக்தனும் அவனைத் தோற்கடிப்பான்.'

'ஆவியால் நிறைந்து . . . உங்கள் இருதயத்தில் கர்த்தரைப் பாடிக் கீர்த்தனம் பண்ணுங்கள்' (எபே. 5:18,19).

ஆவிக்குரிய ஜீவியத்தை உற்சாகப்படுத்த ஏதுகரமாகப் பாடல்களை உபயோகிக்கும்படி ஏவுகிறார். தம்முடைய தாசர்களை மாம்சத்திலல்ல, ஆவியில் உற்சாகமடையச் சொல்லுகிறார். மாம்ச எழுப்புதல் அல்ல, ஆவியின் எழுப்புதல் தேவை.

'கிறிஸ்தவன் பாடுகையில்
சிலவேளை ஓர் ஒளி காண்கிறான்.'

பாட விருப்பம் இல்லாதபோதும் பாடுவோமாக. இதனால் சோர்ந்த ஆவிக்கு உற்சாகமளித்து, களைப்பைப் பலனாக மாற்றலாம்.

—ஜே. எச். ஜொவ்

'நடு இராத்திரியிலே, பவுலும் சீலாவும் ஜெபம்பண்ணி தேவனைத் துதித்துப் பாடினார்கள். காவலில் வைக்கப்பட்டவர்கள் அதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்' (அப். 16:26).

'கிறிஸ்துவின் அச்சடையாளங்களைச் சரீரத்தில் பெற்றிருந்த பவுலே! நீர் இவ்வாறு தேவனை மகிமைப்படுத்தியதால் நீரே மந்தைக்கேற்ற முன்மாதிரி. ஏறக்குறைய சாகும் தறுவாயை அடையும்படி கல்லெறியப்பட்ட காயங்கள்; மூன்றுதரம் இம்சையடிப்பட்ட தழும்புகள்; யூதரால் உம்மேல் சுமத்தப்பட்ட 195 அடிகளின் தழும்புகள்; இரத்தம் பீரிட்டுக் கழுவும்படியான பிலிப்பி நகர் சிறையில் பட்ட அடிகள். இத்தனை உபத்திரவத்தின் மத்தியில் உம்மைப் பாடும்படி செய்த கிருபை நிச்சயமாகவே எல்லாவற்றிற்கும் போதுமான கிருபை.

—ஜே. ரோச்

சாத்தானின் அம்புகள் பாயுங்கால்,
கர்த்தரில் சதா சந்தோஷமாயிருப்போம்,
நம்முடைய பெருமூச்சை விடப் பாட்டே
ஆதியிலிருந்ததுபோல் சாத்தானைப் பயப்படுத்தும்.

## பெப்ருவரி 15

'எரிச்சலடையாதே' (சங். 37:1).

காரியங்களைக் குறித்து மூர்க்கம் அடையாதே. எப்போதாவது எரிச்சலடைவது சரியென்றால் இந்தச் சங்கீதத்தில் தொகுத்துள்ள காரியங்கள் எரிச்சலடையத்தக்கவைகளே. தீமை செய்பவர்கள் நீலாம்பரமும் மெல்லிய வஸ்திரமும் தரித்துச் செழித்திருந்தார்கள். பொல்லாப்புச் செய்பவர்கள் அதியுன்னத பதவியடைந்து துர் அதிர்ஷ்டசாலிகளான தங்கள் சகோதரரைக் கொடுமையாய் நடத்தினார்கள். ஜீவனத்தின் பெருமையோடும், திரளான ஐசுவரி

யத்தினுலுண்டாகும் சுகபோகத்தோடும், பாவிகளான ஆண்களும், பெண்களும் வீதிகளில் பெருமிதமாய் நடந்தார்கள். சற்குணமான மனிதர் வருத்தப்பட்டு எரிச்சலடைந்தார்கள்.

'எரிச்சலடையாதே', அதிகமாய்க் கோபுங்கொள்ளாதிருப்பாயாக. அமைதியாயிரு; நல்ல காரியங்களைச் செய்வதற்கும் எரிச்சல் ஏற்றதல்ல. எரிவு யாவற்றையும் உஷ்ணப்படுத்துகிறது. அது நீராவியை உண்டாக்குகிறதில்லை. புகைவண்டியின் அச்சுகளில் உஷ்ணம் ஏறுவதனுல் பயனென்றும் இல்லை. அது ஒரு தடையாகவே இருக்கிறது. இவ்வாறு நிகழ்வதன் காரணமென்ன? உலர்ந்த பாகங்கள் ஒன்ருேடொன்று உராய்கின்றன. இப்படி உராயாமல் இடையில் மெத்தென்றிருக்க எண்ணெய் போடவேண்டும்.

ஆங்கிலத்தில் 'எரிச்சல்' என்பது தேய்த்தல் அல்லது உராய்தல் என்ற வார்த்தையும் ஒரே அடியிலிருந்து பிறக்கின்றன. இது அவற்றின் பொருளிலுள்ள ஒற்றுமையைக் காண்பிக்கிறது.

நமக்கு எரிச்சல் ஏற்படும்பொழுது சுரசுரப்பான ஏதோ ஒன்று ஏமாற்றமோ, பிறர் நன்றியில்லாமலோ, அவமரியாதையாகவோ நடந்து கொள்கிருர்கள் என்ற எண்ணமோ, நம்முன் புகுந்து கொண்டு நமது ஜீவிய ஓட்டத்தை சௌக்கியமாகச் செல்லாதபடி தடை செய்கிறது. இயந்திரத்தில் அதிக உஷ்ணம் ஏற்படுவது அபாயம். அதுபோலவே நமது வாழ்விலும் எரிச்சல் தீமையையே விளைவிக்கும். இவ்வாறு ஏற்படாதபடி உன்னைக் காத்துக்கொள். அதிக எரிச்சலினுல் நீயும் தீமை செய்பவனுவாய். எரிச்சலுடையவனென்றெண்ணப்படாதபடி கர்த்தரின் தைலம் உன்னை அமர்ந்திருக்கச்செய்யட்டும்.

1 அலட்டும் இருதயமே, எரிச்சலாகாதே;
கர்த்தர் தம் அன்பையும், உதவியையும் ஆயிரம் வகைகளில் காட்டுவார்.
அவர் சித்தம் உணரும்வரை நம்பு, நம்பு, நம்பு.

2 அலட்டும் என் இருதயமே, அமைதியாயிரு; அவர் புன்னகை உன் சமாதானமே
அவர் அன்பு சகல தப்பிதங்களையும் துக்கங்களையும் சீர்ப்படுத்தும்
அவரை நேசித்து நேசித்துப் பொறுமையாய்க் காத்திரு.

3 அலட்டும் என் இருதயமே, தைரியப்படு; துக்கிக்காதே
அடிக்கும் குளிர்காற்றிலும் அவர் பட்சமுண்டே
நீ தைரியம் அடையும்வரை நம்பு, நம்பு, நம்பு.

4 அலட்டும் இருதயமே, அவர் மார்பில் சாய்ந்து இளைப்பாறு;
அவர் சக்தியில் இளைப்பாறு, இளைப்பாறு, இளைப்பாறு.

5 அலட்டும் இருதயமே, அமைதியாயிரு—விடுதலைபெற
விழையாதே
காணக்கூடிய விசுவாசம் கிடைக்கும்வரை ஜெபி, ஜெபி, ஜெபி.

## பெப்ருவரி 16

'உன்னை நான் சிறுமைப்படுத்தினேன், இனி உன்னைச் சிறுமைப்படுத்தாதிருப்பேன்' (நாகூம் 1:12).

துன்பங்களுக்கு ஓர் அளவு உண்டு. கர்த்தர் அதை அனுப்பி அதை விலக்குகிறார். 'எப்பொழுது அது விலகும்' என்று பெருமூச்சுடன் நீ கேட்கிறாயா? கர்த்தர் வரும் வரை அமைதியாய்க் காத்திருந்து, பொறுமையாய்ச் சகிப்போமாக. தாம் கொண்ட எண்ணம் முழுவதுமாய் நிறைவேறும்போது அவர் கஷ்டங்களை நீக்கிப்போடுவார்.

துன்பங்கள் நம்முடைய நற்குணங்களால் கர்த்தரை மகிமைப்படுத்துவதற்கான பரீட்சைகளானால், அவை அவருக்குத் துதி உண்டாக நம்மை சாட்சி பகரச் செய்வதுடன் விலகிப்போம்.

நம்முடைய துன்பங்களின்மூலம் நாம் கொடுக்கக்கூடிய மகிமை யாவையும் பெற்றுக்கொள்ளும்வரை அவை நீங்கவேண்டுமென்று கர்த்தர் விரும்பமாட்டார். ஆனால் இன்றைய தினமே 'ஓர் அமைதி' உண்டாகலாம். கொந்தளிக்கும் அலைகள் அமர்ந்து, எந்த வேளையில் கடல் கண்ணாடிபோலிருக்குமென்று அறியோம்.

அநேக உபத்திரவங்களுக்குப்பின், கதிரடிதடி தொங்கவைக்கப் பட்டதும் கோதுமை மணிகளும் களஞ்சியத்தில் சேர்க்கப்படும். சில மணி நேரங்களுக்குள் நாம் இப்போது எவ்வளவு துக்கமாயிருக்கிறோமோ அவ்வளவு சந்தோஷமாயிருக்கலாம்.

இரவைப் பகலாக்குவது கடவுளுக்குக் கடினம் அல்ல. மேகங்களை அனுப்புகிறவர், அவைகள் எளிதாய் விலகிப்போகவும் செய்யக்கூடும். நாம் சந்தோஷமாயிருப்போமாக. பின்னால் அது நன்மை பயக்கும், நன்மை வரும் என்று எதிர்பார்த்து துதி கீதம் பாடுவோமாக.

—சி. எச். ஸ்பர்ஜன்

நமது ஒப்பற்ற சமுசாரி எப்பொழுதும் போரடிக்கிறவரல்லர். சோதனை சொற்பகாலத்திற்கே. கெடுமழை சீக்கிரம் விலகிச் செல்லும். குறுகிய கோடை இரவுபோல சிலநேரத்திற்கே அழுகை தங்கியிருக்கும்; விடிந்தவுடன் அது நீங்கிப்போகவேண்டும். நமது அற்ப துன்பம் சொற்ப நேரத்தியதே. சோதனை யாதாவதொரு காரியத்திற்காகவே வரும், அதுவும் அவசியமானால்.

நமக்குச் சோதனைகள் உண்டாவதே, கடவுளுக்குப் பிரியமான ஏதோ ஒன்று நம்மிலிருக்கிறது என்பதற்கு அத்தாட்சியாகும். அன்றி, அவர் அத்தனை சிரமம் எடுத்து நமக்காக நேரத்தைச் செலவிடமாட்டார். நம்முடைய கற்பாறை போன்ற தன்மையில், விலைமதிப்பற்ற விசுவாசம் என்ற தங்கம் கலந்துள்ளது என்று அவர் காணுவிட்டால் நம்மை அவர் பரீட்சை பாரார். இந்தத் தங்கத்தைச் சுத்தப்படுத்தி, அழகுபடுத்தத்தான் நெருப்பை யொத்த சோதனைகளின் வழியே நம்மை நடத்துகிறார்.

உபத்திரவப்படுவோனே சகித்திரு! அதன் பயனாக, மிகுதியான மகிமையுண்டாகும்பொழுது சோதனைகளுக்கு மேலான ஈடு கிடைத்தது என்று உணருவாய். கர்த்தரால் புகழப்படுவதும், பரிசுத்தத் தூதருக்குமுன் கண்ணியமடைவதும், கிறிஸ்துவின் மகிமையைக் கிறிஸ்துவுக்காக உபயோகித்து, நாம் கிறிஸ்துவுக்குள் மகிமையடைவதும் கஷ்டங்களுக்கு எத்தனையோ மடங்கு பயனடைந்ததாகும்.

கடிகாரத்தின் பாகங்கள் அது சரியாய் ஓடுவதற்கு ஏதுவாயிருப்பதுபோலவும் கப்பலின் மணற் சாக்குகள் தன்னிலையில் அது மிதக்க உதவுவதுபோலவும், ஆத்தும ஜீவியத்திற்குத் துன்பங்கள் அவசியமாயிருக்கின்றன. சிறந்த மலர்களை அமுத்துவதினாலேயே, மிகுந்த வாசனையடையலாம். ஆல்ப்ஸ் மலையில் பனிசூழ்ந்த தனி இடங்களில் வெகு அழகிய புஷ்பங்கள் மலருகின்றன. அழகிய வைரங்கள், வைரம் செதுக்குவோரின் சக்கரத்தில் வெகுவாய் பாடுபடுகின்றன. அதிகமாய்ச் சிற்பியின் உளியால் வெட்டப்பட்ட சிலையே அழகமைந்ததாயிருக்கிறது. எல்லாம் சட்டத்திற்குக் கீழடங்கியே இருக்கிறது. முழுக்கவலையோடும் முன்னறிவோடும் குறிக்கப்படாத ஒன்றும் நடைபெறுவதில்லை.

## பெப்ருவரி 17

'இஸ்ரவேல் புத்திரருக்கு நான் கொடுக்கும் தேசம்' *(யோசு. 1:12).*

இவ்விடத்தில் கர்த்தர் நிகழ்காலத்தில் பேசுகிறார். அது அவர் பின்னால் செய்யப்போகிற ஒரு காரியமல்ல. இப்பொழுதே செய்கிற காரியம். விசுவாசம் எப்பொழுதும் இப்படியே பேசும். இப்படியே கர்த்தர் எப்பொழுதும் கொடுக்கிறார். இந்தப்படியே கர்த்தர் இன்றைய தினத்தில் இந்த நிமிடத்தில் உன்னைச் சந்திக்கிறார். இதுவே விசுவாசத்தின் பரீட்சை. யாதாவதொரு காரியம் நடக்கும் என்று எதிர்பார்த்துக்கொண்டு காத்திருந்தால் நீ விசுவாசிக்கவில்லை. அது நம்பிக்கையாயிருக்கலாம். ஊக்கமான விருப்பமாயிருக்கலாம். ஆனால் அது விசுவாசமல்ல. ஏனென்றால் விசுவாசம் 'எதிர்பார்த்தலின் நிறைவேறுதலும், காணப்படாதவைகளின்

நிச்சயமுமாயிருக்கிறது.' நம்பிக்கையான ஜெபத்தைக் குறித்த கட்டளை நிகழ்காலத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. 'நீங்கள் ஜெபம்பண்ணும்போது 'எவைகளைக் கேட்டுக்கொள்வீர்களோ, அவைகளைப் பெற்றுக்கொள்வோமென்று விசுவாசியுங்கள். அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும்' (மா. 11:24). நாம் அப்படிப்பட்ட நேரத்திற்கு வந்துவிட்டோமா? சதாகாலமும் இருக்கிற கர்த்தர் என்று விளங்கிக்கொண்டோமா? —சிம்ப்ஸன்

உண்மையான விசுவாசம் கடவுள் செய்வார் என்று உறுதிக்கொண்டு காணுமுன் விசுவாசிக்கிறது. நம்முடைய விண்ணப்பங்கள் நாம் நம்புமுன்னே கொடுக்கப்படுகின்றன என்பதற்கு அத்தாட்சி கேட்பது இயற்கையே. விசுவாசித்து நடக்கும்போது கர்த்தருடைய வார்த்தையின்றி, வேறொரு அத்தாட்சியும் தேவையில்லை. நம்முடைய விசுவாசத்தின்படியே ஆகுமென்று அவர் சொல்லியிருக்கிறார். நாம் நம்புவதை நாம் காணுவோம். நம்மைச் சூழ எல்லாம் கர்த்தருடைய வார்த்தைக்கு மாறாக இருப்பினும், வெகு கஷ்டமான கட்டத்திலும் இதுவே நம்முடைய விசுவாசத்திற்கு ஆதாரமாக இருக்கும்.

சங்கீதக்காரர் 'நானோ ஜீவனுள்ளோர் தேசத்திலே கர்த்தருடைய நன்மையைக் காண்பேன் என்று விசுவாசியாதிருந்தால் கெட்டுப்போயிருப்பேன்' (சங். 27:13) என்கிறார். அவர் தம்முடைய ஜெபங்களுக்குக் கர்த்தருடைய பதிலை இதுவரை காணவில்லை. ஆனால் அவர் காணுவேன் என்று நம்பினார். இந்த நம்பிக்கை அவரைக் கெட்டுப்போகாதிருக்கச் செய்தது.

காணுவோம் என்ற நம்பிக்கை நிறைந்த விசுவாசம் நமக்குண்டானால் நாம் மனம் தளர்ந்துபோகமாட்டோம். 'செய்யமுடியாதது' என்று சொல்லப்படுகின்ற காரியங்களைக் குறித்து நகைப்போம். ஒரு கஷ்டத்தில் யாதொரு மனித உதவியும் ஒன்றும் செய்ய முடியாதபொழுது கர்த்தர் எப்படி செங்கடலினூடே வழி உண்டாக்குவார் என்று மகிழ்ச்சியோடு கவனித்திருப்போம். கடுமையான பரீட்சை உண்டாகும்போது நமக்கு விசுவாசம் வளர்ந்து பலப்படுகிறது.

துன்பமடையும் என் பிரிய சகோதரனே! பல நாட்களும் நீண்ட இரவுகளும், கர்த்தருக்குக் காத்திருந்து, கர்த்தர் உன்னை மறந்தாரென்று சந்தேகிக்கிறாயா? இப்பொழுதும் உன்னை நாடி வந்து கொண்டிருக்கும் இரட்சிப்பிற்காக நீ உன் தலையை நிமிர்த்தி கர்த்தரை துதிக்கத் தொடங்கு.

## பெப்ருவரி 18

*நீங்கள் ஜெபம்பண்ணும்போது எவைகளைக் கேட்டுக்கொள்வீர்களோ அவைகளைப் பெற்றுக்கொள்வோம் என்று விசுவாசியுங்கள். அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும் (மா. 11:24).*

என் சின்ன மகன் பத்து வயதாயிருக்கும்போது, அவனுடைய பாட்டியம்மாள் அவனுக்கு கிறிஸ்மஸ் இனமாகத் தபால் பில்லைகள் சேர்த்துவைக்கும் ஓர் புத்தகம் கொடுப்பதாக வாக்களித்தார்கள். கிறிஸ்மஸ் வந்தது; பாட்டியம்மாளிடம் இருந்து தபால் பில்லை புத்தகம் வரவில்லை. அதைக் குறித்து ஒரு செய்தியும் வரவில்லை. நாங்கள் அக்காரியத்தைக் குறித்துப் பேசவுமில்லை. அவனுடைய கிறிஸ்மஸ் வெகுமதிகளைப் பார்க்க, அவனுடைய சிநேகிதர் வந்தபோது, அவனுக்குக் கிடைத்த ஒவ்வொரு வெகுமதியையும் பேர் பேராகச் சொல்லி, கடைசியில் 'பாட்டியம்மாளிடமிருந்து தபால் பில்லை புத்தகம் ஒன்று' என்று சொன்னபோது எனக்கு ஆச்சரியமாயிருந்தது.

இப்படி அநேக முறை அவன் செல்லக் கேட்டேன். பின்பு அவனை நான் என்னிடமழைத்து, 'ஜியார்ஜ்! பாட்டியம்மாளிடமிருந்து உனக்குத் தபால் பில்லை புத்தகம் வரவில்லையே. ஏன் வந்ததாகவே சொல்லுகிறாய்' என்று கேட்டேன்.

நான் அவ்வாறு கேட்பது அவனுக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளித்ததுபோல் அவன் முகக்குறி காட்டிற்று. அவன் என்னைப் பார்த்து: 'அம்மா! பாட்டியம்மாள் சொன்னார்கள். ஆகையால் அது வந்ததுபோல்தானே' என்றான். அவனுடைய விசுவாசத்தைத் தடை பண்ண என்னால் ஒரு வார்த்தையும் சொல்ல முடியவில்லை.

ஒரு மாதம் கழிந்தது. இன்னும் அப்புத்தகத்தைக் குறித்து ஒரு செய்தியும் வரவில்லை. கடைசியாக என்னுள்ளத்தில் ஏன் அப்புத்தகம் வரவில்லை என்று வினவிக்கொண்டு பையனுடைய விசுவாசத்தைப் பரீட்சிக்க எண்ணி, 'ஜியார்ஜ், உன் பாட்டியம்மாள் உனக்குத் தான் கொடுத்த வாக்கை மறந்துவிட்டார்கள் என்று நினைக்கிறேன்' என்றேன். உடனே அவன் அதற்குப் பதிலாக உறுதியுடன், 'அப்படியல்ல அம்மா! அவர்கள் மறக்கவில்லை' என்றான். அவன் முகம் நான் சொன்னது சரியே என்று யோசிப்பதுபோல சிறிது நேரம் காட்சியளித்தது. கடைசியாக அவன் முகத்தில் ஒரு பிரகாசம் தோன்றிற்று. அவன் என்னை நோக்கி, 'அம்மா நான் பாட்டியம்மாளுக்கு நன்றி சொல்லி ஓர் கடிதம் எழுதினால் நன்மை உண்டாகுமா' என்று கேட்டான்.

நான் 'அது எனக்குத் தெரியாது, நீ செய்து பார்க்கலாம்' என்றேன். என்னுள்ளத்தில் ஒரு பெரிய ஆவிக்குரிய சத்தியம் புலப்பட்டது. சில நிமிடத்தில் அவன் ஒரு கடிதம் எழுதித் தபாலில்

போட்டான். தன் பாட்டியம்மாள் பேரிலுள்ள நம்பிக்கையால் உஜாராய்ச் சென்ருன். வெகு சீக்கிரம் ஒரு கடிதம் வந்தது.

'என் பிரிய ஜியார்ஜ்! நான் உனக்குத் தபால் பில்லைப் புத்தகம் தருவதாக வாக்களித்தேன். அதை மறந்துபோகவில்லை. நீ விரும்பியபடி புஸ்தகத்தை வாங்கப் பிரயாசப்பட்டேன். ஆனால் அவ்விதமான புத்தகம் கிடைக்கவில்லை. நியூயார்க் பட்டணத்திற்கு எழுதியிருந்தேன். கிறிஸ்மஸுக்குப் பின்தான் அப்புத்தகம் கிடைத்தது. அது நீ விரும்பிய மாதிரி புத்தகமல்ல. வேறொன்று அனுப்பும்படி எழுதினேன். அது இதுவரை வராததால் நீயே சிக்காகோ சென்று வாங்கிக்கொள்ள உனக்கு மூன்று டாலர் அனுப்புகிறேன். இப்படிக்கு உன் அன்புள்ள பாட்டியம்மாள்' என்று எழுதியிருந்தது.

அக்கடிதத்தை அவன் வாசித்தபோது அவன் முகம் ஓர் வெற்றி வீரனின் முகம்போல் விளங்கியது. பாட்டியம்மாளின் வாக்கை ஒருபோதும் சந்தேகியாத அப்பையன், 'பார்த்தீர்களா அம்மா! நான் உங்களுக்குச் சொல்ல வில்லையா?' என்ருன். அவன் நம்பிக்கைக்கு இடம் இல்லாதபோதும் நம்பினன். அவன் நம்பிக்கொண்டிருக்கையில் பாட்டியம்மாள் அவனுக்காகப் பிரயாசம் எடுத்துக் கொண்டார்கள். ஏற்ற வேளையில் விசுவாசம், காணும் பொருளாக மாறிற்று.

கர்த்தருடைய வாக்கை முன்னிட்டுச் செல்கையில் உறுதிக்கு அடையாளம் காணத்தேடுவது மனித இயற்கை. இரட்சகரைப் பின்பற்றின சந்தேகங்களில் ஒருவரான தோமாவைப் பார்த்து அவர் 'காணுமல் விசுவாசிக்கிறவன் பாக்கியவான்' என்ருர்.

—ரவுண்டஸ் அம்மையார்

## பெப்ருவரி 19

*'கனி கொடுக்கிற கொடி எதுவோ அது அதிகக் கனிகளைக் கொடுக்கும்படி அதைச் சுத்தம் செய்கிருர்' (யோ. 15:2).*

தன்னையே குறியாகக்கொண்டுவந்த அநேக உபத்திரவங்களைக் கண்டு ஒரு கர்த்தருடைய பிள்ளை மலைத்துப்போனுள். காற்றுக் காலத்தில் அப்பெண் ஒரு திராட்சத் தோட்டத்தைக் கடந்து சென்ருள். அந்தத் தோட்டம் சுத்திச் செய்யப்படாமல் கொடிகளில் குழை மோதிக் கிடப்பதையும் அவ்விடம் முழுவதும் கவனிக்கப்படாமல் பாழாய்க் கிடப்பதையும் கண்டாள். அப்போது தெய்வீகத் தோட்டக்காரனுகிய கடவுள் அவளுக்கு ஓர் உண்மையைத் தெரிவித்தார். அதை அவள் மற்றவர்களுக்குக் கூற விரும்புகிருள்.

'என் அருமைப் பிள்ளையே உன் ஜீவியத்தில் கஷ்டங்கள் அடுத் தடுத்து வருவதைக் குறித்து மலைக்கிறாயா? இந்தத் திராட்சத் தோட்டத்தைப் பார்த்து ஒரு பாடம் நீ கற்றுக்கொள். ஒரு திராட்சத் தோட்டத்திலிருந்து அவ்வருடம் ஒரு பயனும் கிடை யாது என்று காண்பதினால், தோட்டக்காரன் அதை வெட்டாமலும் சுத்திகரியாமலும், கொத்திவிடாமலும்; களை எடுக்காமலும் விட்டு விடுகிறான். அதன் கனிதரும் காலம் கடந்துபோயிற்று. மேலும் பாடுபடுவதால் பயனில்லை என்பதால் அது சும்மா விட்டுவிடப் பட்டது. பயனற்ற ஜீவியத்திற்குப் பாடு கிடையாது. இச்சத்தி யத்தை அறிந்தபின் நான் உன்னைச் சுத்திகரிப்பதை விட்டுவிட விரும்புகிறாயா? நான் உன்னைக் கஷ்டப்படுத்தாது விட்டுவிடட்டுமா என்பதே அச்செய்தி. இச்செய்தியால் ஆறுதலடைந்த அவள் மனம் 'உபாதிகள் நீங்கவேண்டாம்' என்று சொல்லிற்று.

—எச். எச். டிக்ஸன்

1 கனி கொடுக்கும் கொடியே கத்திக் கிரையாகும்,
கத்தியால் வெட்டப்பட்டே அது புத்துயிர் பெறும்.

2 துளிர்க்கும் ஒவ்வொரு துளிரும் வெட்டப்பட்டாலும்
துளிர்க்கும் இலையும், பற்று நரம்பும் அழிக்கப்படினும்

3 உன் ஆசையும் கனவும் உன் ஒவ்வொரு நம்பிக்கையும்
மாண்டுபோயினும் கர்த்தரின் அன்பின் கரம் இதைச்
செய்தது என்று மகிழ்ந்திரு

4 வெட்டினாலும் உடைத்தாலும், முன்பு சிறிது கனி
கொடுத்த நீ
இன்னும் அதிகப் பயன் தரவே இவை யாவும் செய்யப்
பட்டன.

—ஆனி. ஜான்வன் பிலின்ட்

## பெப்ருவரி 20

'உங்களால் கூடாத காரியம் ஒன்றுமிராது' (மத். 17:20).

நம்மைக் காப்பாற்றவும், வெற்றியளிக்கவும், கர்த்தருடைய வல்லமையுண்டு என்று எண்ணுகிறவர்களுக்குக் கர்த்தருடைய வாக்கு அனுபவ உண்மையானது என்று காட்டக்கூடிய வாழ்க்கை நடத்துவது சாத்தியமாகும்.

தினமும் நம்முடைய கவலைகளை அவர்மீது போட்டுவிட்டு, ஆழ்ந்த சமாதானத்தைப் பெறவும் கூடும்.

அந்த வார்த்தையில் அடங்கியிருக்கும் பொருளின் பிரகாரம், நம்முடைய எண்ணங்களேயும், யோசனைகளேயும் சுத்திகரித்துக் கொள்வது சாத்தியமாகும்.

கடவுளின் சித்தத்தை யாவற்றிலும் கண்டு, துக்கத்தோடும், புலம்பலோடும் அல்ல, சங்கீதத்தோடும் களிப்போடும் பெற்றுக் கொள்வதும் சாத்தியமாகும்.

தெய்வீகச் சக்தியில் பூரணமாய்ச் சரண் புகுந்து, அதனுல் மேன் மேலும் பலனடையலாம். நமது பலவீனத்தில் நாம் பொறுமையா யிருக்கத் தீர்மானித்திருக்கும்போது, பொறுமையை இழந்துவிடு கிறேம். தாழ்மையாய்த் தூய்மையாயிருக்க நினைக்கும்போது, தவறுகிறேம். இந்த நிலைமை ஒரு சந்தர்ப்பத்தை யளிக்கிறது. நம்மை நேசிப்பது நம்மில் தம்முடைய சித்தத்திற்கு இணங்கும் தன்மையை உண்டு பண்ணினவர் மூலமாய் அவ்வருடைய பிரசன்னத் தையும், சக்தியையும் உணரும் பாக்கியத்தை அருளிச்செய்ய, அது ஏற்ற சந்தர்ப்பமாகிறது. பாவம் நம்மை மேற்கொள்ளாது.

இவைகள் தெய்வீகச் சாதனங்கள். ஏனென்றல் அவை அவரின் கிரியைகளே. அவைகளே அனுபவத்திற்குக் கொண்டுவரும்போது, நம்மை அவருடைய பாதத்தண்டை தாழவும் இன்னும் அதிகம் அதிகமாய் அவர்மேல் ஆவல்கொள்ளவும் கற்றுக்கொள்ளச் செய் கின்றன.

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணி நேரமும், ஒவ்வொரு விஞடி யும்; பரிசுத்த ஆவியின் உதவியினுல் கிறிஸ்துவில் தங்கி, 'தேவனேடு நடந்தாலன்றி' வேறென்றும் நம்மைத் திருப்திபடுத்தாது.

—எச். சி. ஜீ. மோல்

நாம் விரும்பும் அளவு தேவன் நம்மோடிருப்பார். பொக்கிஷ அறையின், திறவுகோலே இயேசு நமது கையில் அளித்து நமக்குத் தேவையானதை எல்லாம் எடுத்துக்கொள்ளும்படி சொல்லுகிறர். ஒரு மனிதனைச் சேமநிதியில், தங்கம் வைக்கும் அறையில் புகுந்து வேண்டியவற்றை எடுத்துக்கொள்ளச் சொல்லியும், ஒரு பைசா மாத்திரம் எடுத்துக்கொண்டு திரும்பினுல் அது யாருடைய தவறு? கர்த்தருடைய விலையில்லாப் பொக்கிஷத்தில் ஒரு சிறு பகுதியே உடையவர்களாக கிறிஸ்தவர்கள் இருப்பார்களாகில் அதுயாருடைய தவறு?

—மெக்லெர்ன்

## பெப்ருவரி 21

'கர்த்தரை நோக்கி அமர்ந்து அவருக்குக் காத்திரு' (சங். 37:7).

நீ திரும்பத்திரும்ப ஜெபித்து, கர்த்தருக்குக் காத்திருந்தும், இன்னும் நீ ஒரு காட்சியும் காணவில்லையா? நீ ஒன்றும் நடக்கக் காணுததால் ஒய்ந்துபோனுயோ? நீ எல்லாவற்றையும் வீண் என்று

விட்டுவிடும் தறுவாயிலிருக்கிருயா? நீ ஒருவேளை சரியான முறையில் காத்திராதிருக்கலாம். அப்படியானுல் நீ அவரைச் சந்திக்கக்கூடிய சரியான இடமில்லாதிருக்கலாம்.

'பொறுமையாய்க் காத்திரு' (ரோ. 8:25). பொறுமை கவலையைப் போக்குகிறது. அவர் வருவேன் என்று சொன்ஞர். அவரின் வாக்கு அவர் பிரசன்னத்திற்குச் சமம். பொறுமை கண்ணீரைத் துடைக்கிறது. ஏன் விசனமாய், நம்பிக்கையற்றிருக்கவேண்டும்? உன் தேவை உனக்குத் தெரிவதைவிட அவருக்கு நன்ருய்த்தெரியும். அவற்றிலிருந்து இன்னும் மிகுதியான மகிமை கொண்டுவருவதே அவருடைய நோக்கம். பொறுமை சுயமாய் வேலை செய்வதை நீக்குகிறது. நம்பிக்கையே அவர் உன்னிடம் விரும்பும் காரியம் (யோ. 6:29). நீ நம்பும்போது யாவும் நலம் என்று காண்பாய். பொறுமை தேவையைப் போக்குகிறது. நீ விரும்பும் காரியம் வாய்க்கவேண்டும் என்னும் ஆசை, அக்காரியம் கிடைப்பதில் கர்த்தருடைய சித்தம் நிறைவேறவேண்டும் என்ற ஆசையைவிடப் பலமாயிருக்கலாம்.

பொறுமை பலவீனப்படுதலைப் போக்குகிறது. கர்த்தர் தாமதம் செய்வதில்லை. அன்றி, அக்காலங்களில் உனக்கு அதிக ஆதரவுதேடி உன்னையும் ஆயத்தமாக்குகிருர். 'பொறுமை நிலை தடுமாறுதலைத் தடுக்கும்.' 'நான் காலூன்றி நிற்கும்படி செய்யும்' (தானி. 8:28). கர்த்தரின் அஸ்திபாரங்கள் உறுதியாயிருக்கும். அவருடைய பொறுமை நமக்குள் இருக்கும்போது, நாம் காத்திருக்கும்போது உறுதியாயிருப்போம். பொறுமையாயிருக்கும்போது நாம் பிரார்த்தனை செய்வோம். சில சமயங்களில் பொறுமையினுல் நீடிய சாந்தத்தோடும் மகிழ்ச்சியோடும் இருக்கிருேம். அதுவே சிறந்த தன்மையாய் இருக்கிறது (கொலோ. 1:11). பொறுமையானது மேற்கூறிய எல்லா வகையிலும், பூரணக்கிரியை செய்யக்கடவது (யாத். 1:4). நீங்கள் பொறுமையாய்க் காத்திருக்கையில் அதிகம் பெற்றுக்கொள்வீர்கள்.

உள்ளான பாடம் படிக்கும்படி
நீதியினூடே சென்ருலும்,
அதன்றி வேறே வழியில்லை
பொறுமை பூரணக் கிரியை செய்யட்டும். —எல். எஸ். பி.

## பெப்ருவரி 22

நீ விசுவாசிக்கக் கூடுமானுல் ஆகும். விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும்' (மா. 9:28).

எங்களுடைய கூட்டங்கள் ஒன்றில் ஒரு வாலிபன் எழுந்து 'அவசியமான உதவி செய்யக் கர்த்தரை எப்படி எதிர்பார்க்கலாம்?' என்று

கேட்டான். அக்கேள்விக்கு வயதான ஒரு நீக்ரோப் பெண் அளித்த பதில் அதிக விசேஷமானது. விசுவாசம் இன்னது என்பதை இதை விட நன்றாய்ச் சொல்ல முடியாது.

அவள் எழுந்து அந்த மனிதனுக்கு நேரே தன் விரலை நீட்டி அழுத்தம் திருத்தமாய், 'அவர் செய்துவிட்டார் என்று நம்பவேண்டியதே. அப்போதே அது செய்து ஆகிவிடும்' என்றார். கடவுளை நமக்காய் ஒரு காரியம் செய்யும்படி வேண்டிக்கொண்டபின், அதை அவர் செய்தாயிற்று என்று நாம் நம்புகிறதில்லை. அவருக்கு நாம் உதவி செய்துகொண்டும், மற்றவர்களை அவருக்கு உதவிசெய்யத் தூண்டிக்கொண்டும் இருக்கிறோம். அவர் எப்படி அதை நடத்தப் போகிறார் என்று பார்ப்போம் என்று காத்திருக்க தேவையில்லை. இதுவே நாம் அடிக்கடி செய்வது.

விசுவாசம், கர்த்தர் 'ஆம்' என்று சொல்லுகையில், 'ஆமென்' அப்படியே ஆகக்கடவது என்று சொல்லிப் பின் தன் கரத்தை அதினின்றும் எடுத்துவிட்டு கர்த்தரே அந்த வேலையை முடிக்க விட்டு விடுகிறது. விசுவாசி சொல்வதென்னவென்றால் 'உன் வழிகளைக் கர்த்தருக்கு ஒப்புவித்து அவர்மேல் நம்பிக்கையாயிரு. அவர் கிரியை செய்கிறார்' என்பதே.

அவர் வார்த்தையை அப்படியே நம்புவேன்
என் ஜெபம் கேட்கப்பட்டதென்று துதிப்பேன்
என் ஜெபத்திற்குப் பதிலை உரிமையுடன் கேட்பேன்
அவர் நான் வேண்டிக்கொண்டதைச் செய்வார் என்றே
நம்புவேன்.

கர்த்தரின் வாக்குத்தத்தங்கள் கையிலிருக்கும் பணத்தைப்போல் அத்தனை நிச்சயமானதால், அவருடைய வாக்கு இதுவரை நிறைவேறாவிட்டாலும், அதற்காக நன்றி செலுத்துவது உயிருள்ள விசுவாசம்.
—மத்தேயு ஹென்றி

உயிரற்ற விசுவாசம் கர்த்தரின் வார்த்தையை நம்புகிறது. ஆனால் ஒன்றும் செய்வதில்லை. உயிருள்ள விசுவாசமோ வேலையைச் செய்யத் தொடங்கி அதனால் தன்னை நிரூபிக்கிறது. 'நான் கர்த்தரின் வார்த்தை ஒவ்வொன்றையும் நம்புகிறேன். அவர் தான் செய்ய முடியாததைச் செய்வேன்' என்று சொல்லமாட்டார். அவர் என்னை 'முன்னால் போ' என்று சொன்னார். ஆனால் வழியோ அடைப்பட்டிருக்கிறது. தண்ணீரினிடையே பாதை உண்டான பின்பு நான் கானான் நாட்டிற்குச் செல்வேன். 'எழுந்திரு உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட' என்று அவர் குரல் சொல்வது எனக்குக் கேட்கிறது. இன்னும் 'சூம்பின உன் கையை நீட்டு' என்றும் சொல்லுகிறார். 'நான் பலமடைந்த பின்பு எழுந்திருப்பேன் என்றும், கை சுகமான பின்பு நீட்டுவேன் என்று நம்புகிறேன். கடவுள் இவையெல்லாவற்றையும் செய்யக்கூடியவராயும் செய்ய விரும்புகிறவரா

யும் இருக்கிறார். எப்பொழுதாவது இவையெல்லாம் எனக்குக் கை கூடும்' என்று உயிரற்ற விசுவாசம் சொல்லிக்கொண்டிருக்கும்.

ஆனால் உயிருள்ள விசுவாசமோ, 'நான் கடவுளுடைய வார்த்தைகளை இப்பொழுதே ஏற்றுக்கொள்வேன்' என்கிறது. 'நான் கேட்டுக் கொண்டிருக்கும்பொழுதே கர்த்தர் தமது வார்த்தைகளை உண்மையாகும்படி செய்வார். ஆகையினால் நான் உடனே தண்ணீருக்குள்ளும் நடந்து சென்று அங்கு ஓர் பாதையை காண்பேன். முன்னேறிச் சென்று அந்த நாட்டையும் பெற்றுக்கொள்வேன். அவர் சொன்னவுடன் எழுந்திருந்து உற்சாகமாக நடப்பேன். சூம்பியிருக்கும் என் கையும் நீட்டும்பொழுதே சுகம் பெறும். அவருடைய வார்த்தையைத் தவிர என்க்கு வேறு ஒரு அடையாளமும் வேண்டாம். கடவுள் எல்லாவற்றையும் செய்ய வல்லவர். இப்பொழுதே அவர் சொல்லிய யாவும் உண்மையாகும். 'இவ்வாறு உயிருள்ள விசுவாசம் கூறுகிறது.'

உயிரற்ற விசுவாசம் பகலில் ஒளியுள்ள நேரத்தில் மட்டும் கர்த்தருக்குத் துதி செலுத்தும். உயிருள்ள விசுவாசமோ இருள் நிறைந்த இரவிலும் அவ்வாறே செய்யும். உன்னுடைய விசுவாசம் எத்தகையது?

—தேர்ந்தெடுக்கப்பட்டது

## பெப்ருவரி 23

'ஒரு முறை ஒரு சிங்கம் வந்தது' (1 சாமு. 17:34).

பாலியனான தாவீது கர்த்தரை நம்புவதைப்பற்றி நாம் படிக்குந்தோறும் நமக்கு அது உற்சாகத்தையும், பலனையும் கொடுக்கிறது. கர்த்தர்மேல் வைத்த நம்பிக்கையினால், அவன் ஒரு சிங்கத்தையும்; ஒரு கரடியையும், பின்பு பலவானான கோலியாத்தையும் வென்றான். சிங்கம் மந்தையை அழிக்க வந்தபோது அது தாவீதிற்கு ஆச்சரியமான தருணமாயிற்று. அத்தருணத்தில் அவன் பயந்தோ அல்லது தவறியோ போயிருந்தால், இஸ்ரவேலின் அரசனாக அவன் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கமாட்டான். 'ஒரு விசை அங்கு ஒரு சிங்கம் வந்தது.'

ஒரு சிங்கம் வருவது தேவனிடத்திலிருந்து வரும் ஒரு விசேஷித்த பாக்கியமென்று ஒருவன் எண்ணமாட்டான். அது பயம் தரக்கூடிய ஒரு சமயம் என்றே எண்ணுவான். அந்தச் சிங்கம் கர்த்தர் அனுப்பிய மாறுவேடமுள்ள தருணம். நமக்கு வரும் ஒவ்வொரு கஷ்டத்தையும், தகுந்தவிதமாய் நாம் ஏற்றுக்கொண்டால், அதுவே கர்த்தர் கொடுக்கும் தருணமாகும். நமக்குண்டாகும் ஒவ்வொரு சோதனையும் ஒரு தருணமே.

'சிங்கம்' வரும்பொழுது அது தோற்றத்திற்கு எத்தனே கோரமாய் காணப்பட்டாலும், அதில் கர்த்தருடைய தருணத்தை உணர முயற்சி செய். கர்த்தருடைய வாசஸ்தலம், நீர்நாய்த்தோல், ஆட்டுரோமம் இவைகளால் மூடப்பட்டுள்ளது. அங்கு மகிமை இருக்குமென்று யாரும் எண்ணமாட்டார்கள். தேவனுடைய வாசஸ்தலம் அவ்வாறு மூடப்பட்டிருந்தது. துன்பத்திலும், நிர்ப் பாக்கியத்திலும், சோதனேயிலும் அவரைக் காண அவர் நம்முடைய கண்களேத் திறப்பாராக.

## பெப்ருவரி 24

'யோவான் ஒரு அற்புதத்தையும் செய்யவில்லே. ஆகிலும் இவரைக் குறித்து யோவான் சொன்னதெல்லாம் மெய்யாயிருக்கிறது' (யோ. 10:41).

நீ உன்னேக் குறித்து வெகு அதிருப்தியுடையவனுயிருக்கலாம். நீ ஒரு கவிஞன் அல்ல, உன்னதமானவர்களில் ஒருவனல்ல, யாதொரு பெரிய காரியமும் நீ செய்யாதிருக்கலாம். ஒன்றிலும் நீ சிறந்தவ னல்ல, சாமானியமானவனே. உன் வாழ்க்கை ஒரு தன்மையுடைய தாய் ருசிகரமற்றதாய் இருக்கலாம். ஆகிலும் நீ உன்னத ஜீவியம் நடத்தலாம்.

யோவானும் ஒரு அற்புதமும் செய்யவில்லே. ஆனுல் இயேசு அவனேக் குறித்து ஸ்திரீகளிடம் பிறந்த மனிதரிலே இவனேவிடப் பெரிய மனிதன் இதுவரை தோன்றினதில்லே என்று சொன்னுர்.

யோவானின் முக்கிய வேலே ஒளியைக் குறித்துச் சாட்சி சொல்லு வதே. இதுவே உனக்கும் எனக்கும் வேலேயாயிருக்கட்டும். மனிதர் இயேசுவைக் குறித்து நினேக்கவேண்டுமென்பதே அவன் ஆவல். தான் வனுந்திரத்தில் கூப்பிடும் ஒரு சப்தமாக இருந்துகொள்வதே அவனுக்குத் திருப்தியளித்தது.

கேட்கவேண்டியதேயன்றிப் பார்க்க முடியாத சப்தமாக மாத் திரமே இருக்க நீ சித்தமாயிரு. சூரியனின் கண் கூசும் ஒளியைப் பிரதிபலிப்பதால் தான் காணப்படாத கண்ணுடி போலவும், அதி காலேயில் பொழுது புலரச் சிறிது நேரமிருக்கையில் எழும்பி 'வைகறை! வைகறை' என்று அறிவித்து மறைகிற மெல்லிய காற்று கவும் இருக்க ஆசைப்படு.

சாதாரணமான, வெகு அற்பமான காரியத்தையும் அவர் முன்னிலேயில் செய்வதுபோல், செய். கூட்டுறவிற்குத் தகாத ஜனங் கள் மத்தியில் நீ வசித்தாலும் அவர்களே அன்பினுல் வசப்படுத்தப் பிரயாசப்படு. உன் ஜீவியத்தில் பெரிய தவறு செய்துவிட்டாலும் அது உன் ஜீவிய முழுவதையும் இருளாக்க விடாதே. ஆனுல் அந்த இரகசியத்தை உன் இருதயத்தில் பூட்டிவைத்துக்கொண்டு அது பலத்தையும் இன்பமான தன்மையையும் கொடுக்கச் செய்.

நாம் அறிந்திருக்கிறதைவிட அதிக நன்மை நாம் செய்துகொண்டிருக்கிறோம். நாம் சுவிசேட விதைகளை விதைத்து அவற்றைப் போஷிக்கும் சிற்றோடைகளையும் உண்டுபண்ணுகிறோம். அதாவது கிறிஸ்துவைப்பற்றிய உண்மைகளைப் பலருக்குத் தெரிவிக்கிறோம். பின்னொரு காலத்தில் அவர்கள் நம் வார்த்தைகளே அவர்களை முதன் முதலாகக் கிறிஸ்துவைப்பற்றிச் சிந்திக்கத் தூண்டின என்று சொல்வார்கள். என்னைக் கேட்டால் என் கல்லறையின்மேல் ஒரு பெரிய சமாதி எழுப்புவதைவிட அதைச் சுற்றி எளிமையானவர்கள் நின்று 'அவர் நல்ல மனிதன், அவர் அற்புதங்கள் செய்யவில்லை. ஆனால் நான் இயேசுவை அறியத்தக்கதாய் என்னிடம் கிறிஸ்துவைப்பற்றிப் பேசினார்' என்று சொன்னால் அதுவே எனக்குப் பரம திருப்தி யளிக்கும்.

—ஜார்ஜ் மெத்தீசன்

உமது மறைவிலிருக்கிறவர்கள் (சங். 83:3)

1 வசந்த காலம் வந்தது
தரையிலிருந்து பச்சிலைகள் தோன்றின
கோடை காலத்தின் மலர்கள்
மணங் கமழுகின்றன
இலைகளினடியிலிருந்து.

2 இலைகளைத் தூக்கு! அவற்றிற் கடியில் சிறந்த
வனப்பு நமது கண்ணுக்கு மறைந்திருக்கிறது
ரோஜா நிறமும் வெண் நிறமுமான
கோடை மலர்கள் வெயிலைக் காணத் தலை தூக்குகின்றன
இலைகளினடியிலிருந்து.

3 நோக்கங்களையும், செய்கைகளையும் காண்போரன்றி
வேறொருவரும் காணாதவாறு பலரின் ஜீவியமும்
பரிசுத்த கிரியைகளும் அமைதியாய் வளர்ந்து
அழகுபெற மலர்ந்து நிற்பதில்லையா?
இலைகளுக்கடியிலிருந்து.

4 நம்பிக்கையும் விசுவாசமுமாகிய வெண் மலர்கள்
உடைந்த உள்ளத்தினின்று உதிக்கும்
அழகு நிறமுள்ள அன்பென்னும் மலரும்
அத்தனின் கரத்தால் அழகுற்று வளரும்
இலைகளினடியிலிருந்து.

5 கடமையினின்றுதிக்கும் புதிய பூக்கள்
நிழலில் வளர்ந்தாலும் வனப்புள்ளவைகள் ஆகின்றன
அற்புத அரிய, இன்ப மனம்
அப் பூக்களினின்றும் வெளி வரும்
இலைகளுக்கடியிலிருந்து.

6 நம் கண்ணுக்குத் தோன்ருவிடினும்
மொட்டையும் மலரையும் அவர் காண்பார்
அவருடைய தெய்வீக ஒளிக்காக நாம் காத்திருப்போம்
அவரே வந்து இலைகளைத் தூக்கும் வரை காத்திருப்போம்.

கர்த்தர் தம்முடைய அருமையான ஊழியர்களை, அறியாத கூட்டத்திலிருந்து அழைக்கிருர் (லூ. 14:23).

## பெப்ருவரி 25

'உங்கள் காலடி மிதிக்கும் எவ்விடத்தையும் உங்களுக்குக் கொடுத்தேன்' (யோசு. 1:3).

கிறிஸ்துவுக்காகச் சேர்க்கப்படாத நாடுகளன்றி, உரிமையாக்கிக் கொள்ளப்படாத, தெய்வீக வாக்குத்தத்தங்களும் உண்டு. கர்த்தர் யோசுவாவுக்குக் கொடுத்த வாக்கு என்ன? 'உங்கள் காலடி மிதிக்கும் எவ்விடத்தையும் உங்களுக்குக் கொடுத்தேன்' என்பதே. அவர் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பூமியின் எல்லையை வரையறுக்கிருர். அவைகள் யாவும் ஒரு நிபந்தனையின்பேரில் அவர்களுடைய தாகும். அதன் நீளத்தையும், அகலத்தையும் நடந்து கடக்க வேண்டும். அதன் அளவை அவர்கள் பாதங்களால் அளக்க வேண்டும்.

அவர்கள் அந்தப் பூமியில் மூன்றில் ஒரு பாகம்தான் நடந்தார்கள். ஆகையால் அவர்களுக்கு அவ்வளவிற்குமேல் கிடைக்கவில்லை. அவர்கள் அளந்த அவ்வளவுதான் அவர்களுக்குக் கிடைத்தது.

2 பேதுருவில் நமக்காகத் திறந்திருக்கும் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பூமியைப்பற்றி வாசிக்கிரேம். கீழ்ப்படிதலோடு கூடிய நம்பிக்கை விசுவாசம் என்னும் கால்களால் அளந்து அதை உரிமையாக்கிக்கொள்ள வேண்டுமென்பது கர்த்தருடைய சித்தமாயிருக்கிறது.

கர்த்தருடைய வாக்குத்தத்தங்களைக் கிறிஸ்துவின் நாமத்தில் உரிமையாக்கிக் கொண்டவர்கள் நம்மில் எத்தனையோ பேர் உண்டு.

விசுவாசத்தால் நீளத்தையும் அகலத்தையும் நடந்து பெற்றுக் கொள்ளக்கூடிய ஒரு உன்னதப் பிரதேசம் இங்குண்டு. ஆனுல் விசுவாசம் இன்னும் அதைச் செய்யவில்லை.

நம்முடைய பிறப்பு உரிமைக்குள் புகுவோமாக. உன் கண்களை ஏறெடுத்து வடக்கு, தெற்கு; மேற்கு திசைகளில் பார். 'நீ பார்க்கிற அவ்வளவு பூமியையும் நான் உனக்குத் தருவேன்' என்று கர்த்தர் சொல்வதைக் கேட்போமாக. —ஏ. டி. பியர்ஸன்

யூதா எங்கெங்குக் கால் மிதித்தானே அதெல்லாம் அவனுடைய தாகும். பென்யமீன் எங்கெங்குக் கால் வைத்தானே அதெல்லாம் அவனுடையதாகும். ஒவ்வொருவனும் தானே நடந்து சென்று தன் பங்கைப் பெறவேண்டும். இருவரும் தங்கள் காலை எடுத்து வைத்தவுடன் இந்தப் பூமி என்னுடையது' என்று உணர்ந்திருப் பார்களல்லவா?

கிருபை பெற்று ஆச்சரியமான அனுபவங்களை அடைந்த ஒரு மனிதனை ஒருவன், 'தானியேலே! மார்க்கத்தில் உனக்கு இத்தனை ஆனந்தமும் சமாதானமும் ஏற்பட்டது காரணம் என்ன?' என்று வினவினன். அதற்கு அம்மனிதன், 'கர்த்தருடைய அபூர்வமான, விலைமதியாத வாக்குத்தத்தங்களின்மேல் முழுவதுமாய்ச் சார்ந் திருப்பதால், அவைகளில் சொல்லப்பட்டிருப்பதெல்லாம் எனக்குக் கிடைக்கிறது. கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக' என்ருன். வாக்குத்தத்தங்களின்மேல் முற்றிலுமாய் நம்பிக்கை கொண்டவர் கள் அவை தங்களுக்குக் கிட்டுவதைக் காண்பார்கள்.

சாலிஸ்பரி பிரபுவை, அவருடைய குடியேற்ற நாட்டுக்குத் திட்டத்தைக் குறித்து குறைகூறினபோது, 'அன்பர்களே, உலகப் படத்தைப் பெரிதாக்குங்கள்' என்ருராம்.

## பெப்ருவரி 26

'என் கிருபை உனக்குப் போதும்' (2 கொ. 12:9).

முன்னொரு நாள் சாயங்காலம், நாள் முழுவதும் வருத்தமான வேலை செய்துவிட்டு, என் குதிரையிலேறி வீடு திரும்பினேன். நான் அதிகமாய்க் களைத்துச் சோர்ந்திருப்பதாக உணர்ந்தேன். அச் சமயத்தில், ஓர் மின்னல்போல் வெகு விரைவில் 'என் கிருபை உனக்குப் போதும்' என்கிற திவ்ய வசனம் என் மனதில் தோன்றிற்று. நான் வீடு சென்று வேத புத்தகத்தில் அவ்வசனத்தை வாசித்தேன். என் கிருபை உனக்குப் போதும்; என்றெழுதியிருப்பதை வாசித்தேன். அப்போது நான், 'ஆம் ஆண்டவரே! அது சரிதான் என்று நினைக் கிறேன்' என்று சொல்லிக்கொண்டு பூரிப்படைந்து சிரித்தேன். ஆபிரகாமின் பரிசுத்தச் சிரிப்பு இன்னதென்று அதுவரை நான் அறிந்ததில்லை. அந்தச் சிரிப்பு, அவநம்பிக்கை எவ்வளவு கேலிக் கிடமானது என்று காட்டிற்று. 'அது ஒரு சிறு மீனே! என்னிலுள்ள ஜலம் உனக்குப் போதும்' என்று சொல்வது போலும், அல்லது ஏழு செழிப்புள்ள வருடங்களுக்குப்பின், ஒரு எலி தான் பஞ்சத்தால் சாகவேண்டியதுதான் என்று பயப்பட, யோசேப்பு எலியை நோக்கி, 'கவலைகொள்ளாதே சிறு எலியே என் களஞ்சியங்கள் உனக்குப் போதும்' என்று சொல்லுவதுபோலுமிருக்கிறது. இன்னும் உயர்ந்த மலையின்மேல் இருக்கும் ஒரு மனிதன் தனக்குத்தானே, 'நான்

வருடந்தோறும், இத்தனை கன அடி ஆகாயம் சுவாசிக்கிறேனே, நான் ஆகாயத்திலுள்ள அத்தனை வாயுவையும் செலவழித்துவிடுவேனு' என்று சொன்னுல் பூமி அம்மனிதனை நோக்கி, 'நன்ருய் தாரளமாய் சுவாசி' உன் சுவாசத்தை நிரப்ப என் காற்று உனக்குப் போதும் என்று சொல்வதுபோலுமிருக்கிறது. சகோதரரே, பெரிய விசுவாசிகளாயிருங்கள். கொஞ்ச விசுவாசம் உங்கள் ஆத்துமாக்களை மோட்சத்திற்கு எடுத்துச் செல்லும். பெரிய விசுவாசமோ மோட்சத்தை உங்கள் ஆத்துமாவிற்குள் கொண்டுவரும்.

—சி. எச். ஸ்பர்ஜன்

வாழ்வில் வரும் பெருந்துன்பங்களைத் தாங்க அவர் கிருபை போதும். பேரலைகள்போல் துயரம் உள்ளத்தை அலைக்கும்போதும், நம்மைத் திடுக்கிடச் செய்யும் கஷ்டங்கள் வரும்போதும், நமது சக்திக்கு மீறிய துன்பப் புயல்கள் நம்மைத் தாக்கும்போதும் அவர் கிருபை போதும்.

சிறு துன்பங்களை மேற்கொள்ளவும் அவர் கிருபை போதும். நமக்குச் சினமூட்டும் சிறு சிறு கஷ்டங்களையும் பூச்சிகள்போல் நம்மை அலைக்கழிக்கும் சிறு கவலைகளையும், சந்தோஷத்தின் நடுவில் வந்து அதைக் கெடுக்கின்ற சிறு துன்பங்களையும் பொறுத்துக் கொள்ள அவர் கிருபை போதும். —ஆனி ஜான்ஸன் பிளிண்ட்

நாம் விசுவாசத்தைப் பயன்படுத்திப் பெற்றுக்கொள்ளக்கூடிய உச்சிதமான பொருள்கள் பரலோகத்தில் நமது பேரில் உண்டு. இந்தச் சேம நிதியிலிருந்து ஏராளமாய் எடுத்துக்கொள்வோமாக.

## பெப்ருவரி 27

*'அப்பொழுது ஒரு புருஷன் விடியுமளவும் அவனுடனே போராடினுர்' (ஆதி. 32:24).*

'தனித்திருந்தான்' நம்முடைய மனதில் இவ்வார்த்தைகள் வெவ்வேறு எண்ணங்களைக் கொண்டுவரலாம். சிலருக்கு அது யாருமின்றித் தனித்திருத்தலாகும். வேறு சிலருக்கு அமைதலும் ஓய்வும் என்று தோன்றும். கர்த்தரின்றித் தனித்திருத்தல், சொல்லக்கூடாத நிர்ப்பந்த நிலைமை. ஆனுல் அவரோடு தனித்திருத்தல், பரலோக மாட்சிமையை முன் ருசித்தலாகும். அவரைப் பின்பற்றுகிறவர்கள் இன்னும் அதிக நேரம் அவரோடு தனித்திருந்தால் நமக்குள் ஆவிக்குரிய பெரும் வலிமையடைந்தவர்களாய் இருப்பார்கள்.

நமது எஜமான் முன்மாதிரி காட்டினுர். அவர் எத்தனை தடவை பிதாவோடே தனித்திருக்கச் சென்ருர் என்பதைக் கவனி. 'நீ ஜெபம்பண்ணும்போதும் உன் அறைவீட்டில் பிரவேசித்து கதவைப்

பூட்டி ஜெபி' (மத். 6:6). இக்கட்டளையில் பெரியதொரு நோக்கம் அடங்கியுள்ளது.

எலியா, எலிசா என்பவர்களின் மாபெரிய அற்புதங்கள், அவர்கள் கர்த்தரோடு தனித்திருக்கும்போதுதான் உண்டாகின்றன. கர்த்தரோடு தனித்திருக்கும்பொழுதுதான் யாக்கோபு இளவரச ஞனன். அங்குதான் நாமும் 'ஆண்களும் பெண்களும் ஆச்சரிய மடையக்கூடிய' இளவரசர்கள் ஆகலாம் (சக. 3:8). யோசுவாவிடம் கர்த்தர் வந்தபோது அவன் தனித்திருந்தான் (யோசு. 1:1). கிதியோனும், எப்தாவும் இஸ்ரவேலரை மீட்கும் வேலையை அடையும்போது தனித்திருந்தார்கள் (நியா. 6:11–29). வனந்தரத்தில் முட்செடியினருகில் மோசே தனித்திருந்தான் (யாத். 3:1–5). தேவதூதன் அவனிடம் வரும்போது கொர்நெலியு தனித்து ஜெபித்துக்கொண்டிருந்தான் (அப். 10:9). யோவான்ஸ்நானகன் வனந்தரத்தில் தனித்திருந்தான் (லூ. 1:80). அன்புள்ள சீடனுகிய யோவான் பத்மு தீவிலே தனித்துச் சிறையிலிருக்கும்போது ஆண்டவரண்டை அதிகம் நெருங்கியிருந்தான்.

ஆண்டவரோடு தனித்திருக்க ஆசைக்கொள். நாம் ஆசீர்வாதத்தைப் பெறுங்கால், ஏனையோருக்கு ஆசீர்வாதம் கொடுக்கக்கூடியவர்களாயிருப்பதால், நாம் ஆண்டவரோடு தனித்திருத்தலைக் குறித்து கவனமின்றியிருந்தால், நாம் நம்மை மட்டுமல்ல, மற்றவர்களையும் ஆசீர்வாதம் அற்றவர்களாக்குகிறோம். தனித்திருத்தல், வேலையைக் குறைத்துக்கொள்வதாயிருக்கலாம். ஆனுல் அதனுல் அதிக சக்தியுண்டாகிறது. அதன் விளைவாக 'அவர்கள் ஏசுவையன்றி வேறொருவரையும் காணவில்லை' என்பதுபோலாகும்.

கர்த்தரோடு தனித்திருந்து ஜெபிப்பதன் மகிமையைக் குறித்து எவ்வளவு சொன்னுலும் மிகையாது. தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் அவரோடு தனியே இருந்திருக்காவிட்டால் அமைதியாய்க் கர்த்தருக்கு வாசலைத் திறந்திருக்காவிட்டால் பெரியதொன்றும் செய்திருக்கமாட்டார்கள்.

## பெப்ருவரி 28

*'அவருடைய நாமத்தைத் துதிக்கும் உதடுகளின் கனியாகிய ஸ்தோத்திரப் பலியை அவர் மூலமாய் எப்போதும் தேவனுக்குச் செலுத்தக்கடவோம்' (எபி. 13:15).*

ஒரு நகரத்தில் ஊழியம் செய்து வந்த ஓர் உத்தம சுவிசேடகர் ஒரு தினம் ஓர் எளிய மாதின் குடிசைக்குச் சென்றுர். அவளுடைய குடிசைக்குச் செல்லும் பாதை இருண்டு குப்பைக் கூளம் நிறைந்திருந்தது. அதைச் சிறிதும் பாராட்டாமல் அவர் அக்குடிசைக்குள் புகுந்தார். இருண்ட குடிசையில் ஒன்றும் தெரியவில்லை. ஆயினும் ஒருவர் உள்ளே நுழையும் சப்தத்தைக் கேட்டுக் குடிசை மூலையில்

படுத்துக்கொண்டிருந்த நீக்ரோவப் பெண் தன்னைத் தேடி எவரோ ஒரு பெண்மணி வந்திருக்கிறுளென நினைத்து, 'கண்மணி! நீ யாரம்மா?' என்று மிகவும் கனிந்த குரலில் கேட்டாள்.

குருவானவர் ஒரு நெருப்புக்குச்சியைக் கொளுத்தி அதன் வெளிச்சத்தில் உள்ளே கூர்ந்து பார்த்தார். அவர் அங்குக் கண்ட காட்சி மனத்தை உருக்கும் காட்சி. அந்தப் பெண்ணின் முகம் பசியினுல் வாடி நலிந்து சுருங்கிய முகம். ஆயினும், கண்களில் நம்பிக்கையின் ஒளி வீசியது. அவள் வாழ்க்கை தரித்திரமும் துன்பமும் நிறைந்தது. அவள் படுக்கைக் கிழிந்த கந்தையாலாயது. குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தாள். வீட்டில் நெருப்பில்லை, வெளிச்சமில்லை; ஆகாரமில்லை. முடக்குவாதமும் விசுவாசமும் தவிர வேறெதுவும் அவளுக்கு உரிமையானதாகவில்லை. ஆயினும் அவள் பாடிய பாட்டு என்னவெனில்:—

இயேசுவன்றி என் கஷ்டம்
யாருமறியார், யாருமறியார்;
எனது துன்பம் யாருமறியார்,
அல்லேலூயா துதி பாடுவேன்.
சிலவேளை உயர்வேன் சிலவேளை தாழ்வேன்,
சிலவேளை சம நிலையிலிருப்பேன்.
சிலவேளை என்னைச் சுற்றி மகிமை பிரகாசிக்கும்
அல்லேலூயா துதி பாடுவேன்.

இவ்விதமாய்ப் பல கவிகள் பாடிக்கொண்டிருந்தாள். 'நான் செய்யும் வேலை யாருமறியார், என் துக்கம் யாருமறியார்'. என்று பாடினுள். ஒவ்வொரு கவிக்கும் பல்லவி 'அல்லேலூயா துதி பாடுவேன்' என்பதே கடைசிச் சரணமாக அவள்

'என்னுள்ளத்திலுள்ள பேரானந்தம்
யேசு அன்றி யாருமே அறியார்'

என்று பாடினுள். 'துன்பமடைந்தாலும், துக்கமடையாமல் கலங்கியும், நம்பிக்கை யிழந்துபோகாமல், உபத்திரவப்பட்டும், கைவிடப்படாமல், கீழே தள்ளப்பட்டும், அழிக்கப்படாமல்' என்ற வேத வாக்கியத்தினுல்தான் அந்த நீக்ரோப் பெண்ணின் மன நிலைமையை வர்ணிக்கலாம்.

லூத்தர் மரணப்படுக்கையில் இருக்கையில் உபாதைகளினிடையில் பின்வருமாறு பிரசங்கித்தார்: 'இங்குள்ள இந்த வேதனைகளும், கஷ்டங்களும், அச்சிடுவோனின் அச்சுக்கோர்வைபோலிருக்கிறது. இப்பொழுது இருக்கிற நிலைமையில் அதைப் பின்னுலிருந்து வாசிக்கவேண்டும். அதில் ஒரு கருத்தும் புலனுகவில்லை. ஆனுல், மேலோகம் சென்ற பிறகுதான் அச்சிடப்பட்ட புத்தகம் விளங்குவது போல் இவ்வுலகத்தின் அனுபவங்களின் அர்த்தமும் விளங்கும்.' ஆனுல் அதுவரை நாம் வீசும்பொழுது கப்பலின் மேல்தட்டில் நடந்து

கொண்டு தைரியமாயிருக்கச் சொல்லி, கப்பலினுள்ள ஜனங்களை ஊக்குவித்த பவுலையும், லூத்தரையும், அந்த வயது சென்ற நீக்ரோப் பெண்ணையும் நினைத்துப் பாருங்கள். அவர்கள் யாவரும் சூரியகாந்திப் பூக்களைப் போன்றவர்கள். —வில்லியம் சி. கார்னட்

## பெப்ருவரி 29

*'ஆழத்திலே தள்ளிக்கொண்டு போங்கள்' (லூ. 5:4).*

எவ்வளவு ஆழத்தில் என்று அவர் சொல்லவில்லை. நாம் போகும் ஆழம், எவ்வளவு தூரமாய்க் கரையை விட்டு நீங்குகிறோம் என்பதையும், நம்முடைய தேவையின் அவசியத்தையும், நம்முடைய ஊக்கத்தையும் பொறுத்திருக்கிறது. மீன்கள், ஆழமற்ற தண்ணீரிலல்ல; ஆழமான தண்ணீரிலேயே இருக்கும்.

நம்மிலும் அப்படியே ஆழ்ந்த அனுபவங்கள் மூலம்தான் ஆண்டவர் நம்முடைய தேவைகளை நீக்குகிறார். அவருடைய வார்த்தைகளை ஆழ்ந்து சிந்தித்தல் அவசியமென்பதைக் குறித்தே 'ஆழத்தில் தள்ளிக்கொண்டு போங்கள்' என்கிறார். பரிசுத்த ஆவியே இதுவரை நாம் கண்டிராத சத்தியங்களை நமக்கு வெளிப்படுத்தும்.

கிறிஸ்துவின் விலைமதிப்பற்ற இரத்தம், ஆவியானவரால் பிரகாசிக்கப்பட்டு நமக்குச் சர்வ வல்லமையுள்ள தைலமாகவும், ஆத்துமாவுக்கும் உடலுக்கும் மருந்தாகவும், ஆகாரமாகவும் ஆகுமட்டும் அவரது பிராயச்சித்தத்தின் ஆழ்ந்த அர்த்தத்தை நாம் அறியமாட்டோம்.

ஆண்டவருடைய ஆழ்ந்த சித்தத்தையும், அளவில்லாத கருணையையும், கரிசனையையும் நாம் உணரும் வரை ஆழ்ந்து தியானிக்க வேண்டும்.

பரிசுத்த ஆவியைப் பிரகாசம் பொருந்தியவராய், இன்பமானவராய், ஆழமறியக்கூடாத கடலாகக் காணுமட்டும், அவரில் நாம் மூழ்கிக் களித்து, சுவாசித்து, அவரின் பிரசன்னத்தின் நித்திய அமைதியிலும், சமாதானத்திலும், நம்மையும், நம்முடைய துக்கங்களையும், முற்றிலும் மறக்குமட்டும், பரிசுத்த ஆவியின் வல்லமையை ஆழ்ந்து அனுபவிக்கவேண்டும். கர்த்தருடைய நோக்கத்தையும் இராஜ்யத்தையும் குறித்து நாம் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். அப்பொழுது கர்த்தரின் இரண்டாம் வருகையையும் ஆட்சியையும் குறித்து நாம் அறிவோம். அதற்கப்பால் மதிமயங்கச்செய்யும் பிரகாசமான யுகாயுகங்களைக் காண்போம். இவை நிகழும்போது கிறிஸ்துவோடு நாம் அனுபவிக்கப்போகும் உன்னத ஆனந்தத்

தையும் மகிமையையும் அறிவோம். இவற்றை நாம் மனக்கண்ணி ஞல் காணும்பொழுது நமது இருதயம் மகிழ்ச்சியால் நிறையும்.

இத்தகைய சிந்தனைகளில் ஆழ்ந்து செல்ல இயேசு நமக்குக் கட்டளையிடுகிருர். நம்மையும் இந்த ஆழத்தையும் உண்டாக்கி னவர் அவரே. நம்முடைய ஆசையையும், சக்தியையும், இந்த ஆழத்திற்கு ஏற்ற விதமாகவே அமைத்துள்ளார்.

'அதன் தண்ணீர் சிருஷ்டி யாவற்றையும் சென்றடையும் அவ்வளவு அதிகம் நீர் அங்குச் சேர்க்கப்பட்டுள்ளது. ஒவ்வொருவருக்கும் அனே வருக்கும் என்றென்றைக்கும் போதுமானதே.'

பரிசுத்த ஆவி என்னும் ஆழ்ந்த தண்ணீர் நாம் அடையக்கூடி யதே. ஏனென்ருல், அது எப்போதும் பாய்ந்துகொண்டேயிருக் கும். இந்த ஜீவ தண்ணீரில், தினமும் புதிதாக மூழ்கி, இன்புற ஆசைப்படமாட்டாயா? எசேக்கியேல் கண்ட தரிசனத்தின்படி முதல் முதல் அத்தண்ணீர் ஆலயத்தின் கதவுகளின் அடியிலிருந்து, கசிந்து வந்தது. ஆழத்தை அளந்த மனிதன் அது கணுக்கால் அளவே என்று கண்டான். இன்னும் சற்று தூரம் செல்ல தண்ணீர் முழங்கால்வரை இருந்தது. மறுபடி அளந்தபோது, இடுப்பளவு தண்ணீர் இருந்தது. பின்பு நீந்துமளவு தண்ணீர் வந்தது. பின் கடக்க முடியாத பிரகாசமான நதியாயிற்று (எசேக்கியேல் 47 அதிகாரம் வாசி). இந்த ஜீவ நதியில் நாம் எவ்வளவு தூரம் முன்னேறி யிருக்கிருேம்? தன்னை முற்றிலுமாய் அழித்தவனையே பரிசுத்த ஆவி யானவர் தேடுகிருர். கணுக்கால் ஆழம், முழங்கால் ஆழம், இடுப் பளவு ஆழம் மாத்திரமல்ல. ஆளை மறைக்கும் ஆழம், நாமும் மற்ற வர்கள் பார்வைக்கு, மறைந்து இந்த ஜீவ ஓடையில் மூழ்குகிருேம், கரையோரங்களை விட்டு, ஆழத்திற்குப் போவோமாக. அளவு கோலை யுடையவர் நமது அருகிலேயே இருக்கிருர் என்பதை இந்த நாளில் நாம் மறந்துவிடக்கூடாது. — ஜே. ஜீ. எம்

## மார்ச்சு 1

'தேவனுடைய செயலைக் கவனித்துப் பார், அவர் கோணலாக்கினதை நேர்மை யாக்கத்தக்கவன் யார்?' (பிர. 7:13.)

அடிக்கடி கர்த்தர் தமது பிள்ளைகளைத் தப்ப வழியில்லாதபடி இடுக் கத்தில் நிறுத்துகிருர். இப்படிப்பட்ட இடுக்கண்களுக்கு மனுஷீக நிதானம்ஒருபொழுதும் இடங்கொடுத்திராது. மேகங்களே அவர்களை இந்நிலைமைக்கு வழி நடத்துகின்றன. ஒருவேளை இந்த நேரத்தில் நீ அப்படிப்பட்ட நிலைமையிலிருக்கலாம்.

அது நம்மைக் கலங்கச் செய்வதாயும், வெகு கவலைக்கிடமாயுமிருக் கலாம். ஆனல் அது அப்பழுக்கற்ற சரியான காரியமே, அதின் பயன்

உன்னை இவ்வழிக்கு நடத்தியவர் செய்தது சரி என்று காட்டக்கூடும். அது அவருடைய சர்வ வல்லமையுள்ள ஆற்றலையும் கிருபையையும் எடுத்துக்காட்டும் பீடமாகும்.

அவர் உன்னை விடுவிப்பது மாத்திரமல்ல. நீ மறக்கக்கூடாத ஒரு பாடமும் கற்பிப்பார். இந்தப் பாடத்தை நீ சங்கீதங்களாகவும், கீதங்களாகவும் திரும்பத் திரும்ப பாடுவாய். அவர் அவ்வாறு செய்ததற்காக ஏற்ற விதமாய் நன்றி செலுத்த உன்னால் முடியாது.

'இயேசு ஆளுகிறார் என்பதை நாம் அறிந்தவர்களானால்
அவர் விளங்கச் செய்யும் வரை பொறுத்திருப்போம்'
எனக்கு விளங்கவில்லை ஆனால் கர்த்தாவே நீர் அறிவீர்
கோணலான இந்த விஷயத்தை ஓர் நாள் எனக்கு விளங்கச்
செய்வீர்
அதுவரை அது நன்மையே செய்தது என எண்ணியிருப்பேன்.
அதின் கோணலே என்னை உம்மோடு இணைத்தது
விலகித் திரியும் என் கண்கள் உம்மேல் திரும்புமாறு
என் வழியை அடைத்துக் கோணலாக்கி
நான் தாழ்மையும் பொறுமையும் உடையவனாகி
உலக நேசத்தை விட்டு உம்மை நேசிக்குமாறு செய்தீர்
புரியாத புதிர்போன்ற இவ்விஷயத்திற்காக உம்மைத்
துதித்துப் போற்றுவேன்.
எனக்கு விளங்காத இடத்தில் உம்மை நம்புவேன்
என்னைச் சோதிக்கப் பாத்திரனாக எண்ணியதால் மகிழ்வேன்
நடத்தும் உம் கரத்தையே என்றும் பற்றிக்கொள்வேன்.

## மார்ச்சு 2

'விடியற்காலையில் நீ ஆயத்தமாகி மலையுச்சியில் என் சமுகத்தில் வந்து நில். உன்னோடே ஒருவனும் அங்கு வரக்கூடாது' (யாத். 34:23).

காலைத் தியானம் வெகு அவசியமானது. நீ கர்த்தரைப் பார்க்குமுன் அந்த நாளைப் பார்க்காதே. கர்த்தரின் முகத்தைக் காணுமுன் மற்றவரின் முகத்தைப் பார்க்காதே.

உன் சுய பலத்தைக்கொண்டே நீ ஒரு நாளைத் தொடங்கினால் நீ வெற்றியை எதிர்பார்க்கமுடியாது. உன் இருதயத்தில் கர்த்தரைத் தியானித்து அவரோடு சில நிமிடங்களேனும் அமைதியாய்த் தரித்திருந்து அதனால் ஏற்படும் சிற்சில யோசனைகளின் சக்தியோடு உன் அன்றாட வேலையைத் தொடங்கு. உன் மேன்மையுள்ள விருந்தாளியும், உன் மதிப்பிற்குரிய உயிர்த்தோழனுமான இயேசுகிறிஸ்துவைச் சந்திக்கும்வரை உன் வீட்டார், நண்பர், வேறெந்த மனிதரையும் சந்தியாதே.

அவரைத் தனிமையில் சந்தி. அவரை ஒழுங்காய் ஒவ்வொரு காலேயும் சந்தி. அவருடைய ஆலோசனைப் புத்தகத்தைத் திறந்து வைத்து அவரைத் தரிசனம் செய். அவருடைய பிரசன்னத்தின் சக்தி உன் கிரியைகளைத் திட்டமாய் நடத்தும். ஒழுங்கானவையும், ஒழுங்கற்றவையுமான உன் கடமைகளை நிறைவேற்ற அவருடைய வல்லமையோடு செல்.

1 கர்த்தரோடு உன் நாளைத் தொடங்கு.
அவரே நாளும் ஞாயிறுமாம்,
அவரே உன் காலே ஒளி,
அவர் மீதே உன் கீதம் பாடு.

2 காலையில் புதுப்பாட்டு பாடு,
மலேயோடும், காட்டோடும் சேர்ந்து பாடு,
புதுக்காற்று, கடல், வெளி இவற்ருேடும்
ஒளி, மலரோடும், சிறு ஓடையோடும் பாடு.

3 உன் முதல் பாட்டைக் கர்த்தருக்கே பாடு,
உன் போன்ற மானிடருக் கன்று,
அவருடைய சிருஷ்டிகளுக் கன்று,
மாட்சிமை பொருந்திய அவருக்கே பாடு.

4 முதல் முதலில் கடவுளோடு நட,
அவர் உன்னுடன் கூடவே வரட்டும்
ஓடையோ, கடலோ, மலேபாதையோ,
எதிலும் அவர் துணையையே நாடு.

5 உன்னத கர்த்தருடனேயே
உன் முதல் ஜோலி இருக்கட்டும்
அதனுல் உன் தொழிலனைத்தும் ஓங்கி வளரட்டும்
நாள் முழுதும் அன்பு நிறைந்ததாய் இருக்கட்டும்.

—ஹொரேஷியஸ் போனர்

கர்த்தருக்கு இவ்வுலகில் அதிகச் சேவை செய்தவர்கள் அதிகாலேயில் முழங்காலில் நின்றவர்களே.

மத்தேயு ஹென்றி என்பவர் காலே நான்கு மணி முதல் எட்டு மணிவரை தம் வாசகச் சாலேயிலிருப்பர். காலே போஜனமும், குடும்ப ஜெபமும் முடிந்த பின் அவர் அந்த அறையில் மதியம் வரை இருப்பார். நடுப்பகல் போஜனம் அருந்தியபின் நான்கு மணிவரை அங்கேயிருப்பார். மிகுதியான நேரத்தைத் தம் சிநேகிதரைச் சந்திப்பதில் செலவிடுவார்.

டாட்ரிஜ் என்பவர் தமது 'குடும்ப விளக்கம்' என்னும் நூல் காலே ஐந்து மணிக்கு எழுந்தரிப்பதற்கும் ஏழு மணிக்கு எழுந்தரிப்பதற்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டும் என்று கூறியுள்ளார்.

நாற்பது வருடகாலம் காலை ஐந்து மணிக்கு எழுந்துகொண்டிருப் போமானால் பத்து வருடம் அதிகமாய் ஜீவித்தவர்களாவோம்.

டாக்டர் ஆதாம் கிளார்க் என்பவரின் 'வேத விளக்க நூல்' முக்கியமாக அதிகாலையில் எழுதப்பட்டது.

பார்ன்ஸ் என்பவரின் அதி உபயோகப் பெயர் பெற்ற 'வேத விளக்க நூலும்' அவர் அதிகாலையில் எழுந்ததின் பயனாகும்.

சைமன் என்பவரின் குறிப்புகளின் மிகுதியான பாகம் காலை நான்கு மணி முதல் எட்டு மணி வரை தயாரிக்கப்பட்டது.

[இந்த மொழிபெயர்ப்பும் அதிகாலை ஐந்து மணி முதல் ஏழு மணி வரையுள்ள என் ஓய்வுநேரத்தில் எழுதப்பட்டதே.]

## மார்ச்சு 3

'அப்பொழுது அந்த அசுத்த ஆவி சத்தமிட்டு அவனை மிகவும் அலைக்கழித்துப் புறப் பட்டுப்போயிற்று' (மா. 9:26).

தீமை அலைக்கழியாமல் நம்மை விட்டுப்போகாது. சந்தோஷமான வன போஜனத்திற்குரிய முயற்சியினால் நாம் பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறமுடியாது. எப்போதும் போர் செய்தே பெற வேண்டும். ஆத்துமாவின் இரகசிய இராச்சியத்தில் இப்படியே நடந்துவருகிறது. நமது உள்ளத்தில் ஒவ்வொரு சக்தியும் மிகுந்த துன்பத்தின் மூலமாகவே ஆவிக்குரிய விடுதலையை அடைகிறது. மரியாதையான விண்ணப்பத்தினால் அப்போலியனை ('மோட்ச பிரயாணம்' என்னும் நூலில் கிறிஸ்தியானை எதிர்த்த பிசாசை) அப்பால் போகச்செய்ய இயலாது. அவன் வழியை மறைத்துக் காலை விரித்துக்கொண்டிருக்கிறான். நாம் முன்னேறிச் செல்லும் வழியில் இரத்தமும் கண்ணீரும் சிந்தப்படவேண்டும். இதை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். இல்லாவிடில் நாம் ஜீவியத்தின் ஏனைய கஷ்டங்களோடு, 'தப்பர்த்தப்படுத்திக்கொள் ளுதல்' என்ற கஷ்டத்தையும் கூட்டிக்கொள்ளுகிறவர்களாவோம். மிருதுவான, பாதுகாப்பான சிறுவர் அறையில் நாம் மறுபடியும் பிறப்பதில்லை. புயலில் பயங்கரமான திறந்த வெளியில் பிறக் கிறோம். அநேகத் துன்பத்தின் வழியாய் நாம் தேவனுடைய இராச்சி யத்தில் பிரவேசிக்கவேண்டும். —டாக்டர் ஜே. எச். ஜோவெட்

நம் முன்னோர்களின் விசுவாசமே சிறைக்கும் நெருப்புக்கும் வாளுக்கும் தப்பி நீ இன்னும் அழியாதிருக்கிறாய்.

விசுவாசம் என்ற சொல்லைக் கேட்கும்போதே நம் இதயங்கள் களிப்பால் நிரம்புகின்றன. நம் முன்னோர்கள் விலங்கிடப்பட்டுச் சிறையிலிருந்தாலும் தம் இதயத்திலும் மனசாட்சியிலும் சுதந்திர

முள்ளவர்களாயிருந்தார்கள். அவர்கள் பிள்ளைகளாகிய நாமும் கிறிஸ்துவுக்காக நம்முயிரையும் கொடுக்கக்கூடியவர்களாக இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்.

## மார்ச்சு 4

'பொறுமையாய்க் காத்திருந்து வாக்குத்தத்தம் பெற்றவர்களைப் பின்பற்றுகிறவர்கள்' (எபி. 6:15).

தாங்கள் அடைந்துள்ள உன்னதப் பதவியிலிருந்து விசுவாச வீரர்கள் நம்மைக் கூப்பிட்டு, ஒரு தடவை மனிதன் செய்ததைத் திரும்பவும் செய்யக்கூடும் என்கிறார்கள். விசுவாசம் தேவை என்று மாத்திரமல்ல, விசுவாசம் பூரணமாய்க் கிரியை செய்யப் பொறுமையுங்கூடவேண்டும் என்கிறார்கள். நாம் சந்தேகப்படுவதினாலும் உற்சாகம் இழந்துபோவதினாலும் சில வேளைகளில் கர்த்தரின் கையிலிருந்து விலகிப்போகிறோம். அவர் நமக்குக் கற்றுக்கொடுக்க இருக்கும் போதனைகளை இழந்துவிடுகிறோம். இவ்வாறு நிகழாதபடி நாம் எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

'குப்பைத் தொட்டியில் போடப்படுவதற்கு மாத்திரமே நான் பயப்படுகிறேன்' என்று ஒரு கொல்லன் சொன்னான்.

நான் ஒரு உருக்குத் துண்டைத் துவைத்து உறுதிப்படுத்தும் பொழுது, அதைக் காய்ச்சிச் சம்மட்டியால் அடித்து, சீக்கிரமாக அதைக் குளிர்ந்த தண்ணீருள்ள வாளியில் அமுக்குவேன். சீக்கிரமாகவே அது உறுதிப்படக்கூடியதா அல்லது உடைந்துபோகுமா என்பதைக் கண்டுக்கொள்ளுவேன். இவ்வாறு இரண்டோருதரம் பரீட்சித்து உறுதிப்படுத்த இடங்கொடுக்காது என்று கண்டால் அதைக் குப்பை தொட்டியில் போட்டுக் கழிவுப்பொருள் வாங்குபவனுக்கு இராத்தல் ஆறு காசு வீதம் விற்றுவிடுவேன்.

'இவ்விதமாகவே கர்த்தர் என்னைத் தீயினாலும், தண்ணீரினாலும், சம்மட்டி அடிகளினாலும் சோதிக்கிறார் என்று அறிகிறேன். நான் பரீட்சையில் தவறினால் அல்லது உறுதிப்படுத்தக்கூடாத வஸ்துவாகக் காணப்பட்டால் அவர் என்னைக் குப்பை தொட்டியில் போட்டுவிடுவார் என்று பயப்படுகிறேன்' என்றான்.

அக்கினி அதிக உஷ்ணமாயிருக்கும்பொழுது உறுதியாய் நில். 'பின்னால்' பாக்கியமடைவாய். யோபைப் போல் 'அவர் என்னைப் புடமிட்டபின் தங்கமாக வெளியேறுவேன்' என்று நீயும் சொல்லக்கூடும்.

—தெரிந்தெடுத்தது

துன்பத்தின் வழியாய்த்தான் பரிசுத்தராகலாம். பியானோவில் ஒரு விசையை சீர்ப்படுத்த பதினொரு டன் நிறையுள்ள அழுத்தம்

தேவை. அதுபோலவே நாமும் சோதனையைச் சகித்தால் கர்த்தர் தெய்வீக இன்னிசையோடு நம்மை இணையச் செய்வார்.

நம்மை வருத்தி நிலை கலங்கச் செய்யும் அனுபவங்களே கர்த்தரை நன்றாய்த் துதிக்க நம்மை ஆயத்தப்படுத்துகின்றன. கஷ்டமும் பாரமும் அழிவுமே, மகிழ்ச்சி நிறைந்த நாட்களைவிட நமக்கு அதிகம் நன்மை செய்கின்றன.

## மார்ச்சு 5

'நாம் ஆரம்பத்தில் கொண்ட நம்பிக்கையை முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக் கொண்டிருப்போமாகில், கிறிஸ்துவிடத்தில் பங்குள்ளவர்களாயிருப்போம்' (எபி. 43:1).

நாம் கடைசியாக எடுத்துவைக்கும் அடியே நமக்கு வெற்றியைக் கொடுக்கிறது. மோட்ச பட்டண வாசலண்டை நெருங்குகையில் தான் அநேகத் தீமைகள் நெருங்கிவருவதாக 'மோட்ச பிரயாணம்' என்னும் நூலில் எழுதப்பட்டிருக்கிறது. அங்கேதான் 'சந்தேகம்' என்ற மாளிகையிருந்தது. 'களைத்த பிரயாணியை மயக்கி, சாவென்னும் நித்திரைக்குள்ளாகும்படியான மயக்க பூமியும்' அங்கே தான் இருந்தது. மோட்சவாசல் நாம் காணத்தக்கதாக இருக்கும் போதுதான் நரக வாசல் அதன் சகல மோசங்களோடு நம்மைக் கிட்டிச்சேருகிறது. 'நாம் நன்மை செய்வதில் சோர்ந்துபோகாம லிருப்போமாக, சோர்ந்துபோகாமலிருந்தால் ஏற்ற வேளையில் பயனை அடைவோம்' 'நீங்கள் அதை அடையத்தக்கதாக ஓடுங்கள்.

துன்பக் கடலின் அலைகளினால் நான் அலைக்கழிக்கப்படுகிறேன். 'சந் தேகம்' என்னும் கரையினின்றும் வீசும் காற்று என்மேல் மோது கிறது. விசுவாசம் என்னும் நங்கூரம்கூட அக்காற்றினால் அசைக் கப்படுகிறது. ஆனால், நானோ அமைதியாய்ப் பொய்யாத பொருள் களைப் பற்றிக்கொண்டிருக்கிறேன்.

பேய்கள் கோரமாய்ப் போரிட்டாலும் தேவதூதர்கள் அதிக நேரம் மறைந்திருந்தாலும் உண்மையும் நேர்மையும் உலகனைத்தையும் வெல்லும் என்பதை நான் அறிவேன். விண் மீன்களுக்கும் அப்பால் மேலான அன்பர் ஒருவர் உள்ளார். இரவின் கதவுகள் திறக்கும் பொழுது அவரைக் காண்பேன். அதுவரை பொறுத்திருப்பேன். கடைசி அரைமணி நேரத்திலும் சோர்ந்துபோகாமல் நின்றால் தேவ னிடமிருந்து மேலான காரியங்களைப் பெறலாம்.

—தெரிந்தெடுக்கப்பட்டது

## மார்ச்சு 6

'நாங்கள் நம்பியிருந்தோம்' (லூ. 24:21).

எம்மாவூருக்குப் போகும் வழியில் சீடர்கள் இயேசுவிடம் 'நாங்கள் இன்னும் நம்பியிருக்கிறோம்' என்று சொல்லவில்லையே என்று நான் அதிக விசனமடைவதுண்டு. இது முடிவடைந்த காரியம். அதிக வருந்தத்தக்க காரியம்.

அவர்கள் அவரிடம் 'எல்லாம் நாங்கள் நம்பியிருந்ததற்கு மாறாக இருக்கிறது. எங்கள் நம்பிக்கை வீணானதுபோல் தோன்றுகிறது. ஆனாலும், நாங்கள் நம்பிக்கையை விடோம். அவரைத் திரும்பக் காண்போம் என்று நம்புகிறோம்' என்று சொல்லியிருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும். அப்படியல்ல, அவர்கள் தாங்கள் இழந்து போன விசுவாசத்தை எடுத்துரைத்துக்கொண்டு அவரோடு நடந்து சென்றார்கள். இயேசு அவர்களைப் பார்த்து 'நம்பிக்கையில்லாத அறிவீனர்களே' என்று சொல்லவேண்டியதாயிற்று.

நம்மைப் பார்த்தும் கர்த்தர் இதே வார்த்தையைச் சொல்லக் கூடிய நிலைமையில் நாமில்லையா? கர்த்தரின் அன்பு, உண்மை இவைகளின்மேல் நம்பிக்கை உண்டென்றால் பிறகு எதன்பேரில் நம்பிக்கையற்றுபோனாலும் பரவாயில்லை. நம்முடைய விசுவாசத்தைக் குறித்துப் பேசுகையில் சீடரைப்போல் பேசாதிருப்போமாக. அவர்கள் 'நம்பினோம்' என்றார்கள். நாம் எப்பொழுதும் 'நம்பிக்கொண்டிருக்கிறோம்' என்று சொல்வோமாக. —துணுக்குகள்

அப்பொழுது இனிமையான இளவேனிற்காலம் ஒளி நிறைந்திருந்தது. ஒவ்வொரு கிளையிலும் அழகிய பூக்கள் மலர்ந்திருந்தன. அப்பொழுது அவரை நம்பினேன். இப்பொழுதும் அவரை நம்புகிறேன்.

இப்பொழுது ரோஜாப்பூக்கள் மலரவில்லையென்பதனால் என் நம்பிக்கையும் கலங்குமானால் அது மிகவும் அற்பமானதே.

புயல் மேகங்கள் கனத்துவரும் இவ்வேளையில் நான் விசுவாசமிழந்து அவர் அன்பைச் சந்தேகித்தேனானால் என் விசுவாசம் பலனற்றதே.

## மார்ச்சு 7

'நாங்கள் எப்பக்கத்திலேயும் உபத்திரவப்பட்டோம்' (2 கொ. 7:5).

கர்த்தர் ஏன் இவ்வாறு ஓயாத கொடிய உபத்திரவங்களைக் கொடுத்து எங்களைச் சோதித்தார்? ஏனெனில் வனாந்திரத்துக்கும் சோதனைக்கும் விலகியிருக்கும்போது, நாம் அறிவதைவிட இப்பொழுது இன்னும் நன்றாய் அவருடைய பலத்தையும், கிருபையை

யும் அறிகிறோம். 'பொக்கிஷம் மண்பாண்டங்களில் இருக்கிறது. பலத்தின் மகிமை கர்த்தருடையதேயன்றி நம்முடையதல்ல.' இது நாம் அவர்மேல் சார்ந்திருப்பதை நன்றாய் உணரச் செய்கிறது. நாம் அவரையே சார்ந்திருப்பதற்கும், நம்மை முற்றிலும் அவர் கரத்தில் ஒப்படைப்பதற்கும், அவருடைய கரிசனையின் பேரில் சதா சார்ந்து கொள்வதற்கும் அடிக்கடி கர்த்தர் நமக்கு போதித்து வருகிறார். நமது சுய பலத்தில் சாராது அவர் கரத்தின் ஆதரவின்றி தனியே ஒரு அடியும் எடுத்துவைக்க முயலாதபடி இயேசு, தாம் பிதாவின் கட்டளைப்படி நடந்தபடியே நாம் இருக்க விரும்புகிறார். இது நமக்கு நம்பிக்கையை போதிக்கிறது.

சோதனையின்றி விசுவாசத்தைக் கற்றுக்கொள்ள முடியாது. சோதனைகள் கர்த்தரின் விசுவாசப் பள்ளிக்கூடம். நாம் வாழ்க்கையை ருசிப்பதைவிடக் கர்த்தரை நம்பப் படிப்பதே மேல்.

விசுவாசிப்பதை ஒருமுறை கற்றுக்கொண்டுவிட்டால் அது நித்திய பொக்கிஷம். நம்பிக்கையில்லாவிட்டால் திரண்ட ஆஸ்தியும் நம்மை ஏழையாய் விட்டுச் செல்லும்.

ஏனையோர் களித்துப் பாடுகையில் நான் ஏன் துதிக்கிறேன்?
பாடுகளின் ஆழத்தை காணவே
ஏனையோர் ஓய்ந்திருக்க நான் உழைப்பதேன்?
கர்த்தரின் தேவைக்காய் என் பலனைப் பயன்படுத்தவே!
ஏனையோர் செழிக்கையில் நான் நஷ்டமடைவதேன்?
தோல்வியின் கூரிய வேதனையை உணரவே!
உன் நிலை நன்றாயிருக்கையில்,
நான் நிஷ்டூரப்படுவானேன்?
கர்த்தர் நான் நிச்சயம் அடையும்படி வழி காட்டவே.

## மார்ச்சு 8

'தேவரீர் சொன்னபடியே செய்தருளும்... உமது நாமம் என்றைக்கும் மகிமைப் படவும் கடவது' (1 நாளா. 17:23,24).

இதுவே பாக்கியமான ஜெபம். அநேகத் தடவைகளில் திட்டவட்டமான வாக்குத்தத்தங்கள் இல்லாத காரியங்களைக் கேட்கிறோம். நாம் சிறிது காலம் கேட்டுக்கொண்டேயிருந்த பின்னர் அதைக் குறித்து நிச்சயம்கொள்கிறோம். கர்த்தருடைய சித்தத்திற்கு இசைந்ததா என்று இலகுவில் நாம் அறிந்துகொள்கிறதில்லை. தாவீது தன் ஜீவியத்தில் கண்டதுபோல் சில சமயங்களில் நாம் கேட்பது கர்த்தருடைய சித்தத்திற்கு ஏற்றதுதான் என்று நம்பத்தக்க காரியங்களுண்டு. வேதாகமத்திலிருந்து அது நமக்கென்று விசேஷ செய்தியாய் அமைந்திருப்பதாகக் கண்டு, அவர் வாக்குத்தத்தத்தை நிறைவேற்றக் கெஞ்சும்படி ஏவப்படுகிறோம். அச்சமயங்களில்

ஜெபத்தில் உறுதியான விசுவாசம் உண்டு. நாம் 'தேவரீர் சொன்ன படியே செய்தருளும்' என்று ஜெபிக்கிறேம். நமது தேவைக்கேற்ற வாக்குத்தத்த்தைக் குறித்துக் காட்டி அதை நிறைவேற்றும்படி கெஞ்சுவது போன்ற வெகு அழகான வல்லமையான ஜெபம் வேறொன்றுமில்லை. வேதனையும், போராட்டமும், சஞ்சலமும் வேண்டியதில்லை. பணச்சீட்டை நீட்டிப் பணம்பெறுவதுபோல், வாக்குத்தத்தத்தைக் காட்டி நிறைவேறுதலைப் பெறுகிறேம். அதன் பயனைக் குறித்துச் சந்தேகமும் வேண்டியதில்லை. திட்டமான ஜெபம், ஜெபத்தில் ஆவலையுண்டாக்கும். பல காரியங்களைப் பொது வாய்க் கேட்பதைவிடச் சில காரியங்களைக் குறிப்பாய் கேட்பது நல்லது. —எப். ஏ. மேயர்

வேதத்தில் ஒவ்வொரு வாக்குத்தத்தமும் கர்த்தரின் எழுத்து. அதை நாம் காரணமாகக் காட்டி வேண்டுதல் செய்யலாம். 'தேவரீர் சொன்னபடி செய்தருளும்' என்று ஜெபி. சிருஷ்டிகர் தமது உண்மையின்மேல் சார்ந்திருக்கும் சிருஷ்டியை ஏமாற்றமாட்டார். பரம தகப்பன் தம் சொந்தப் பிள்ளைக்குக் கொடுத்த வாக்கை முறிக்க மாட்டார்.

'நான் நம்பும்படி செய்த உம்முடைய வாக்கை அடியேனுக்காக நினைத்தருளும்' என்ற ஜெபம் நமக்கு விடை அருளக் கெஞ்சுவதாகும். இதில் இரட்டை நியாயம் உண்டு. இது உம்முடைய வார்த்தை. இதை நீர் நிறைவேற்றுவீரா? நீர் நிறைவேற்ற மனதில்லாவிடில் ஏன் அதைச் சொன்னீர்? என்னை ஏன் அதை நம்பச் செய்தீர்? என்னில் நீர் உண்டாக்கின நம்பிக்கை அபத்தமாகச் செய்வீரா? —சி. எஸ். ஸ்பர்ஜன்

'தேவன் வாக்குத்தத்தம் பண்ணினதை நிறைவேற்ற வல்லவராயிருக்கிறரென்று முழு நிச்சயமாய் நம்பு' (ரோ. 4:21).

கர்த்தரின் மாருத உண்மையே வேத்த்தை 'மா உன்னத விலை மதிக்கமுடியாத' வாக்குத்தத்தம் ஆக்குகிறது. மானிடரின் வாக்குகள் ஒன்றுக்கும் உதவாதவை. வாக்கு மாறினதால் மனமுடைந்தவர்கள் அநேகர். இவ்வுலக ஆரம்பமுதல், கர்த்தர் தம் பிள்ளைகளுக்குத் தாம் கொடுத்த வாக்குகள் ஒன்றிலும் தவறினதில்லை.

பிள்ளை தகப்பனின் வீட்டினுட் செல்வதுபோலக் கிறிஸ்தவர்கள் உரிமையுடன் வாக்குத்தத்தமாகிய கதவினுட் செல்லக்கூடும். ஆனல் அவர்கள் அவ்வாறு செய்ய அஞ்சியவர்களாய்த் துன்பமாகிய இரவில் வெளியில் நிற்பது பரிதாபமே.

ஒவ்வொரு வாக்குத்தத்தமும் நான்கு தூண்களின்பேரில் கட்டப்பட்டிருக்கிறது. வஞ்சிக்கவிடாத கர்த்தரின் நீதி, அவரது பரிசுத்தம்; மறக்கவிடாத அவர் கிருபை, அல்லது அன்பு; மாருமல் தாம் சொன்னவற்றை முடித்துவிடச்செய்யும் அவரது உண்மை இவைகளே அந்த நான்கு தூண்கள்.

## மார்ச்சு 9

'கொடுமுடியிலிருந்து கீழே பார்' (உன். 4:8).

அழுத்தம் பாரம் கிறிஸ்தவனுக்கு இறக்கையை அளிக்கிறது. இது எதிர்மாமுன வார்த்தைபோல் தோன்றினுலும் அதுவே பாக்கியமான சத்தியம். தாவீது கசப்பான கஷ்டத்தை அனுபவிக்கையில், 'ஆ என்க்குப் புருவைப்போல் சிறகுகள் இருந்தால் நான் பறந்து போய் இளைப்பாறுவேன்' (சங். 55:6) என்று கதறினன். இவ்விதமாக எண்ணத்தை எண்ணுகையில் தன் விருப்பம் கைகூடி வரக் கூடியதே என்று உணர்ந்ததாகத் தெரிகிறது. ஏனென்றால் அவன் 'கர்த்தர்மேல் உன் பாரத்தை வைத்துவிடு அவர் உன்னை ஆதரிப்பார்' (சங். 55:22) என்று அதே அதிகாரத்தில் சொல்லுகிறன்.

'பாரம்' என்ற வார்த்தையை 'யொகோவா உனக்கு ஈந்தது' என்று வியாக்கியானப்படுத்தி வேதாகமத்தில் குறிப்பு எழுதப் பட்டுள்ளது. பக்தியுள்ளவனுடைய பாரங்கள் கர்த்தரால் கொடுக்கப்பட்டவை. அவை அவனைக் 'கர்த்தருக்கு காத்திருக்க' நடத்துகின்றன. அது முடிந்தவுடன் அந்தப் பாரம், நம்பிக்கை என்னும் மந்திரத்தால் சிறகுகளாக உருமாறுகின்றது. பாரம் ஏற்றப்பட்டவன் 'கழுகுகளைப்போல் செட்டை அடித்து எழும்புவான்.'

ஒருநாள் தெருவழியே நடந்து செல்லும்போது என் வேலைகளைப் பற்றி நினைத்தேன். நூறு கவலைகள் மழை பொழிய ஆயத்தமான மேகங்கள்போல் என் உள்ளத்தில் கவிழ்ந்தன. என்மேல் நானே இரக்கங்கொண்டேன். 'நீ ஏழை இரங்கத்தக்கவன். உனக்கு அளவுக்கு மீறிய வேலைகள் உள்ளன. உன் வாழ்க்கை மிகவும் கஷ்டமானது. இந்தப் பாரம் உன்னை நசித்துவிடும்' என்று எனக்கு நானே சொல்லிகொண்டேன். என் மனத்தில் துக்கம் நிறைந்தது. வெளியில் எரிக்கும் வெயில்கூட அதிக வெப்பத்தால் என்னைத் தாக்குவதுபோல் தோன்றிற்று. தெருவில் புழுதியும் கார்கள் ஓடும் சப்தமும் எனக்கு சினமூட்டின. களைத்து அலுத்துப்போயிருந்த என் உள்ளத்துக்கு இதுவே என் கழுத்தையொடிக்கும் கடைசி சுமை என்று தோன்றிற்று.

'என் போன்றவர்களால் அளவற்ற கவலைகளைத் தாங்க முடியாது. இவற்றின் பாரத்தினல் என் வாழ்க்கை உடைந்து நொறுங்கிப் போகும்' என்று எண்ணி என் துன்பத்திலேயே அழுந்தினேன். அப்போது அமைதியான மெல்லிய குரல் ஒன்று 'இவை உன்னைத் தாழ்த்த அல்ல. உயர்த்தவே அனுப்பப்பட்டவை' என்று தெளிவாகச் சொல்லிற்று. அப்போது நான் என் பிழையை உணர்ந்தேன். நான் துன்பப் பாரத்தினல் அழுத்தப்படாமல் அதற்கு மேலாக உயர வேண்டும். நான் இவற்றை தாங்கவேண்டுமென்றே கடவுள் எண்ணுகிறர். என் பலவீனத்தை அவர் அறிவார். வெயில் மழை

ஆகியவற்றை வேண்டி நிற்கும் சிறு கிளைகள்போல் நான் அவர் கிருபையையும் பணியாற்றும் சக்தியையும் வேண்டி நிற்பதை அவர் கண்டார். ஆகையினால் நான் வளரக்கூடிய இடத்தில் அவர் அன்போடு என்னை வைத்தார். துன்பப் பாரத்தின்கீழ் வீழ்ந்து கிடந்தால் அதன்பால் மரணம். ஆனால், அதற்கு மேலாக உயர்பவர்களோ புதிய ஆற்றலைப் பெறுகிறார்கள். நாம் பாரம் என்று எவற்றை நினைத்தோமோ அவற்றையே சிறகுகள் போலவும் உபயோகித்து மேற்செல்லலாம். அவர் கிருபையைப் பெற்றுக்கொள்ளலாம். துன்பங்கள் இல்லாவிட்டால் நாம் நிலத்திலேயே இருப்பவர்கள் போன்று தாழ்ந்த நிலையிலே இருப்போம். மிகக் கஷ்டமான சந்தர்ப்பங்களினிடையே இருக்கும்பொழுதே விசுவாசம் வளர்கிறது.

நம்மை அழுத்தும் பாரமே தம்மைக் கர்த்தரிடம் அழைத்துச் செல்லவும் தோன்றுகிறது. இது முரணாகத் தோன்றினும் இது ஒரு தெய்வீகச் சத்தியமே. ஆகையினால் என் ஆத்துமாவே நீ உயரச் செல். பாரத்தின் கீழ் இருப்பதுதானே நசுங்கும். நீயோ மேலே செல்லலாம்.

நாம் வாழ்க்கையிலுள்ள கவலைகளை எவ்வாறு தாண்டி மேற்செல்லலாம் என்றால் அதற்கு விடையும் கர்த்தரது வார்த்தையிலேயே இருக்கிறது. கிறிஸ்துவோடு தனித்திருந்து நாம் நமது பாரங்களைத் தீர்த்து அவரிடம் இளைப்பாறுதலையும் பெறலாம்.

—மேரி பட்டர்வீல்ட்

## மார்ச்சு 10

'விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்' (எபி. 10:38).

தோற்றங்களும், உணர்ச்சிகளும்; விசுவாசம் என்றெண்ணப்படுகின்றன. இன்பமளிக்கும் உணர்ச்சிகளும்; ஆழ்ந்த திருப்தி கொடுக்கும் அனுபவங்களும் கிறிஸ்தவ ஜீவியத்தின் ஒரு பகுதியாகும். ஆனால் அவைகள் மாத்திரமே கிறிஸ்தவ ஜீவியம் அல்ல. சோதனைகளும், போராட்டங்களும்; மனச்சஞ்சலங்களும், பரீட்சைகளும் வழியெல்லாம் இருக்கின்றன. அவைகளைத் துர்ப்பாக்கியங்கள் என்று எண்ணக்கூடாது. நமக்குத் தேவையான ஒழுங்கு முறையின் ஒரு பகுதியென்று கொள்ளவேண்டும். நாம் இயேசுவின் முன் கீழ்ப்படிந்து நடந்து, இந்தப் பற்பலவித அனுபவங்களிலும்; நம்முடைய உணர்ச்சியை பெரிதும் பாராட்டாது, கிறிஸ்துவை நம்முடைய இருதயத்தில் வசிப்பவராகக் கொள்ளவேண்டும். அநேகர் விசுவாச வழியல்லாது, உணர்ச்சி வழி செல்ல முயலுகிறார்கள். ஆகையால் அவர்கள் துன்பத்திற்கு ஆளாகிறார்கள்.

கர்த்தர் தன்னைவிட்டு விலகிவிட்டதுபோல் தோன்றிற்று என்று ஒரு பக்தியுள்ள மாது சொல்கிறாள். அவருடைய இரக்கம் முற்றிலும்

நீங்கிப்போனதாகக் காணப்பட்டது. இந்த நிராதரவான நிலைமை ஆறு வாரம் நீடித்திருந்தது. பின்பு அவளது தெய்வீகக் காதலர் அவளைப் பார்த்து 'காதரினுளே! நீ என்னை உணர்ச்சி வழி தேடினுய். நான் அப்போதெல்லாம் உள்ளேயிருந்து உனக்காகக் காத்திருந்தேன். உன் ஆவியின் உள்ளிந்திரியத்தில் என்னைத் தேடு. ஏனென்ருல் நான் அங்கேயிருக்கிறேன்' என்ருர்.

கர்த்தரின் சந்நிதானம் என்ற உண்மையும், அந்த உண்மையின் உணர்ச்சி என்பதையும் பாகுப்படுத்தி காண். உன் ஆத்துமா, நிர்க்கதியாய்; நிராதரவாய் நிற்பதுபோல் காணப்படும்போது, உன் விசுவாசத்தில் நீ 'உம்மை நான் காணவில்லை. உம்மை நான் தொடக்கூடவில்லை. ஆயினும் நான் இருக்கும் இந்நிலையில், நான் இருக்கும் இடத்தில் நீர் கிருபையோடு நிச்சயமாய் இருக்கிறீர்' என்று சொல்லக்கூடுமாளுல் அது சந்தோஷமான காரியமே. 'நீர் இங்கே இருக்கிறீர். முட்செடி எரிவதுபோல் காணப்படாவிட்டாலும் அது எரிகிறது. நான் நிற்கும் பூமி பரிசுத்த பூமி. ஆதலால் என் பாதரட்சையை என் பாதங்களிலிருந்து எடுத்துபோடுவேன்' என்று திரும்பத்திரும்பச் சொல்லு.

உன் அனுபவத்தையும், உன் உள்ளுணர்ச்சியையும் நம்புவதைவிட கர்த்தருடைய வல்லமையையும், வார்த்தையையும் நம்பு. கர்த்தர் உன் கன்மலை. கன்மலையல்ல கடல் நீரே உயர எழும்பவும் தாழவும் செய்யும்.

—சாமுவேல் ரூதர்போர்ட்

கிறிஸ்துவின் பூரணப்படுத்தப்பட்ட வேலையையும் நீதியின் மகிமையையும் நோக்கிப் பார். இயேசுவைப் பார்த்து நம்பு. இயேசுவை நோக்கிப் பார்த்து ஜீவனடைந்துகொள். அது மாத்திரமல்ல. இன்னும் இயேசுவை நோக்கிப் பார்த்துக்கொண்டு உன் படகை செலுத்து. உலக ஜீவியமாகிய கடலிலே ஊக்கத்தோடு தண்டு வலித்துச் செல். அவநம்பிக்கை என்னும் துறைமுகத்தில் தங்காதே. செயலற்று ஓய்வு என்னும் நிழலில் தூங்கிக்கொண்டிராதே. துறைமுகத்தில் வீணுய்க் காத்திருக்கும் கப்பல்கள்போல் உன் உணர்ச்சியை ஒன்றோடொன்று மோதவிடாதே. உணர்ச்சிகளில் ஆழ்ந்திருப்பது சன்மார்க்க ஜீவியம் அல்ல. விசுவாசம் என்னும் அடிப்பாகத்தை மணலில் பதிய விட்டுக்கொண்டு, சுகம் தரும் காற்றைப்பெறப் பயன்படுபவன்போல், மண்ணின் வழியாய் உன் நம்பிக்கை என்னும் நங்கூரத்தை இழுத்துக்கொண்டு செல்ல முயற்சிக்காதே. காற்று முகமாய்ப் பாய்விரித்து, கொந்தளிக்கும் தண்ணீரை ஆளுபவராகிய அவரை நம்பி முன்னேக்கிச் செலுத்து. தொடரப்படும் பட்சி பறந்துகொண்டே இருக்கவேண்டும். தரையில் நடந்து தாழப்பறந்தால் விழ நேரிடும்.

நாம் உணர்ச்சி என்னும் தாழ்ந்த பூமியில் ஊர்ந்துசென்றுகொண்டிருந்தால், அவநம்பிக்கை; சோதனை; சந்தேகம் என்னும் பல்லா

யிரம் வலைகளில் சிக்கிக்கொள்வோம். ஆனால் 'சிறகு உள்ளவைகளுக்கெதிரே வலை விரிப்பது விருதா' கர்த்தர்பேரில் உன் நம்பிக்கையை வை. —ஜே. ஆர். மார்டப்

இது நிச்சயம் என்று ஒன்றை என்னால் விசுவாசிக்க முடியாத பொழுதும் கடவுளை நம்பி அவரைச் சார்ந்திருப்பதால் நான் உயிர் வாழ்கிறேன். —மத்தேயு ஹென்றி

## மார்ச்சு 11

'கர்த்தருடைய தாசனாகிய மோசே மரித்த பின்பு கர்த்தர், மோசேயின் ஊழியக்காரனான நூனின் குமாரன் யோசுவாவை நோக்கி: என் தாசனாகிய மோசே மரித்துப் போனான். இப்பொழுது நீயும் அந்த ஜனங்கள் எல்லாரும் எழுந்து யோர்தானைக் கடந்துபோங்கள்' . . . என்றார் (யோசு. 1:1,2).

சற்றுமுன் மரணம் உன் குடும்பத்தில் நுழைந்து வீட்டை வெறுமையாக்கிற்று. எல்லாம் போய்விட்டதாக எண்ணி, நம்பிக்கை இழந்து இருக்கும்போது யாவும் வெறுப்பாகவே உனக்கு தோன்றுகிறது. ஆனால் அப்படி நீ எண்ணுவது தகாது. நீ போர்க்களத்தின் முன்னிலையில் நிற்கிறாய். அபாயம் கிட்டுகிறது. ஒரு நிமிஷம் தயங்கினால், பரிசுத்த முயற்சியை நீ தடைபண்ணக்கூடும். நீ நிற்பதால் மற்ற உயிர்களுக்குச் சேதம் உண்டாகும். உன் கை கட்டப்பட்டிருந்தால் பொது நன்மை கெடும். நீ துதிக்கக்கூடாது தாமதிக்கலாகாது.

ஒரு சிறந்த தளகர்த்தன், போர்க்கால அனுபவத்தில் நடந்த ஒரு பரிதாபகரமான காரியத்தைச் சொன்னார். தளகர்த்தனின் மகன் துப்பாக்கி வீரரின் தலைவன். எதிர்ப்பு நடந்துக்கொண்டிருந்தது. தகப்பன் தன் ஆட்களைப் போர் முன்னிலையில் நடத்தித் தாக்குதல் செய்துகொண்டிருந்தான். போய்க்கொண்டிருக்கும்பொழுது ஒரு துப்பாக்கி வீரரின் தலைவன் செத்துக்கிடப்பதைக் கண்டான். ஒரே பார்வையில் அது தன் மகன் என்று கண்டுகொண்டான். தகப்பனுக்குரிய அன்பு தான் நேசித்த மகனண்டை நின்று கதற வேண்டுமென்றிருந்தது. ஆனால், அவன் கடமையின்படி முன்னேறிச் செல்ல வேண்டியவன். ஆகையால் சடுதியில் மகனுக்கு ஓர் முத்தம் ஈந்து துரிதமாய்த் தன் படையுடன் முன்னேறிச் சென்றான்.

ஆறுதலடையாமல் கல்லறை அண்டை நின்று அழுவதால், மறைந்துபோன நமது அன்பின் பொக்கிஷம் திரும்பிவரப்போவதில்லை. அப்படிப்பட்ட துக்கத்தால் யாதொரு பாக்கியமும் வரப்போவதில்லை. துக்கம் மாறாத ஆழத் தழும்புகளை உண்டுபண்ணுகிறது. துக்கம் இருதயத்தை உருக்குகிறது. நம்முடைய பெரிய துக்கத்திலிருந்து நாம் முற்றிலுமாய் ஆறுதலடைவது முடியாது. அதைக் கடந்தபின் முன்னிருந்ததுபோல் முற்றிலுமாயிருக்க நம்மால் முடியாது. ஆனால் துக்கத்தைச் சரியான முறையில்

ஏற்றுக்கொண்டு, சந்தோஷமாய்ச் சகித்தால் அது நம்மைச் செழிப்புள்ளவர்களும், பட்சதாபப்படுகிறவர்களுமாக்கும். ஒருபோதும் துக்கம் அனுபவியாமல், துக்கத்தின் தழும்பு இல்லாதிருப்பவர்கள் தரித்திரரே. மேகத்தினூடே சூரியன் பிரகாசித்து அதைக் கவினுறச் செய்வதுபோல், நமக்கும் வருங்காலத்தில் வைக்கப்பட்டிருக்கும் சந்தோஷம்; நம்முடைய துக்கத்தினூடே ஒளிவிடவேண்டும். கடமையைச் செய்துகொண்டேபோவதால் நமக்கு உண்மையான ஏராளமான ஆறுதல் கிட்டவேண்டுமென்பது கடவுளது தீர்மானம். நமது துக்கத்தைக் குறித்து உட்கார்ந்து, யோசித்துக்கொண்டே இருப்போமானால், நம்மைச் சுற்றி இருள் கவிந்து; இருதயத்தினுட் சென்று நம் பலத்தை பலவீனமாக மாற்றுகிறது. ஆனால், துக்கிப்பதிலிருந்து திரும்பி, கர்த்தர் அமைத்த ஊழியத்தையும் கடமைகளையும் தொடர்ந்து செய்தால் நாம் இன்னும் பலமடைவோம்.

—ஜே. ஆர். மில்லர்

எம் தன்மையான கண்ணீராலும் புலம்பலாலும்,
நிச்சயமாய் பாவமுண்டாகும் என்றறிவீர்.
எம் இழத்தலுக்கு எவ்வளவோ மேலான,
லாபம் எமக்கீய காத்திருக்கிறீர்.
மேலானதாய்ப் பகட்டாய்த் தோன்றின,
யாவையும் நாங்கள் பற்றி இழந்தோம் ஆயினும்
உம் கரம் பற்றி நீர் நடத்தும் வழி செல்லின்,
மகிழ்ச்சி, வலிமை என்னும் பரம தைலத்தால்,
அபிஷேகமும் இன்பமும் அடைவோமென
நிச்சயமாய் அறிவோம். —ஹெலன் ஹண்ட் ஜாக்ஸன்

## மார்ச்சு 12

'கர்த்தர் அன்று இராமுழுவதும், கீழ்காற்றைத் தேசத்தின்மேல் வீசச் செய்தார். விடியற்காலத்திலே, கீழ்காற்று வெட்டுக்கிளிகளைக் கொண்டுவந்தது . . . அப்போது பார்வோன் மோசேயையும், ஆரோனையும் தீவிரமாய் அழைப்பித்தான். . .கர்த்தர் மகா பலத்த மேல்காற்றை வீசும்படி செய்தார். அது போய் வெட்டுக்கிளிகளை அடித்துக்கொண்டு போய்ச் செங்கடலிலே போட்டது. எகிப்தின் எல்லையெங்கும் ஒரு வெட்டுக்கிளியாகிலும் மீதியாயிருந்ததில்லை' (யாத். *10:13–19*).

கர்த்தர் பூர்வகாலத்தில் இஸ்ரவேலருக்காக, கொடூரப் பார்வோனுக்கு விரோதமாய் போர்புரிந்தபோது, புயல்காற்று அவர்களுக்கு விடுதலை கொண்டு வந்தது. எகிப்தியரின் காலம் நிறைந்த எதிர்ப்பைக் கடைசி முறையாக உன்னதமான செய்கையால், முறியடிக்க உதவியது இந்தப் புயல்காற்றே. இஸ்ரவேல் புத்திரருக்கு முன்னால் கடலும், பக்கங்களில் தப்பியோட முடியாதபடி உயர்ந்த பாறைகளும் காணப்பட்டன. சுற்றிலும் இருளும், புயலும் கவிழ்ந்து

இருந்தன. இஸ்ரவேல் புத்திரருக்கு, இத்தனை அபாயங்களால் தாங்கள் சூழப்பட்டுத் தப்ப வழியில்லாதிருப்பது வெகு கொடூரமான காரியமாகத் தோன்றியிருக்கும். முதல் விடுதலை நிச்சயமான சாவுக்குத் தங்களை ஒப்புவிக்கத்தான் வந்ததோ என்றுகூட எண்ணி யிருப்பார்கள். பயங்கரத்தை அதிகப்படுத்துவதாய், 'இதோ எகிப் தியர் நம்மேல் வருகிறார்கள்' என்ற சப்தமும் கிளம்பிற்று.

பகைஞருக்குத் தப்பமுடியாதபடி, அடைப்பட்டோம் என்று தோன்றினபோது, மகிமையான வெற்றி கிடைத்தது. புயல்காற்று வீசி அலைகளைப் பின்னே தள்ளியது. கர்த்தரின் பாதுகாக்கும் அன்பு என்னும் பந்தல் நிழலிட, கடலின் ஆழத்தில் உண்டாகிய பாதையில், இஸ்ரவேலின் சேனைகள் அனைத்தும் முன்னேறிச் சென்றன. கர்த்த ரின் மகிமையாகிய ஒளியில் இருபுறமும் நின்ற தண்ணீர்ச் சுவர்கள் தளதளவென்று மின்னின. அவர்கள் தலைக்குமேல் இடியும் புயலும் குமுறிக்கொண்டிருந்தன. இரவு முழுவதுமாக இவ்விதமே இருந்தது. அடுத்தநாள் அதிகாலையில் இஸ்ரவேலரின் கூட்டத்தில் கடைசி ஆள் கால் வைத்தவுடன், புயல்காற்றின் வேலை முடிவடைந்தது.

பின்பு இஸ்ரவேலர் புயல்காற்று கர்த்தருடைய வார்த்தையை நிறைவேற்றினதைக் குறித்து பாடினார்கள். அந்தப் பாட்டு:—

'சத்துரு நான் பின்தொடர்வேன். நான் பிடித்துக்கொள்வேன். கொள்ளையைப் பங்கிட்டுக் கொள்வேன்' என்றான். 'நீர் உம்முடைய காற்றை வீசச் செய்தீர். சமுத்திரம் அவர்களை மூடிற்று: ஆழமான தண்ணீரில் ஈயம்போல் ஆழ்ந்துபோனார்கள்' என்பதே.

கர்த்தருடைய பெரிதான கிருபையால், நாமும் ஒருநாள் கர்த்த ருடைய வாத்தியங்களைக் கையில் கொண்டு; பளிங்குக் கடலருகே நிற்போம். அப்பொழுது நாம் தேவனுடைய ஊழியக்காரனான, மோசேயின் பாட்டையும் பாடுவோம். ஆட்டுக்குட்டியானவரின் பாட்டையும் பாடுவோம். பரிசுத்தவான்களின் ராஜாவே! தேவரீ ருடைய வழிகள் நீதியும், சத்தியமுமானவைகள் (வெளி. 15:3) என்று பாடுவோம். அப்பொழுது நாம் புயல்காற்று எவ்வாறு நமது விடுதலையை உண்டாக்கிற்று என்று அறிவோம்.

இப்பொழுது உன் விசனம் உனக்கு விளங்காத இரகசியமாயிருக் கிறது. பின்பு நீ பயங்கரமான துக்கம் நிறைந்த இரவில், உன்னைப் பயமுறுத்தின சத்துரு எப்படி வாரிக்கொண்டு போகப்பட்டான் என்று அறிந்துகொள்வாய்.

நீ உனக்குண்டான நஷ்டத்தையே நோக்குகிறாய். பின்பு உன்னை விலங்கிடும் தீமையை அதுவே அகற்றினதை அறிவாய்.

நீ இப்பொழுது ஓலமிடும் காற்றிற்கும், குமுறும் இடிக்கும் பயப்படு கிறாய். பின்பு நீ அவைகளை அழிக்கும் ஜலத்தைப் பின்னோக்கித்

தள்ளி வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பூமிக்கு வழி திறந்தன என்பதை அறிவாய்.

காற்று வேகமாய் வீசினாலும்,
புயல் சீறிப் பாயினும்,
அவை எனக்கு தீமையல்ல,
கர்த்தர் அவற்றில் செல்கிறார்
என்று நம்பி என் இதயம் பாடும்.

## மார்ச்சு 13

'தேவரீருடைய வழிகள் நீதியும் சத்தியமுமானவை' (வெளி. 15:3).

இருபத்தைந்து ஆண்டுகளாக நோயுற்றிருந்த சார்லஸ் ஸ்பர்ஜனின் மனைவி பின்வரும் சம்பவத்தைக் கூறினார்:

'இருண்டு, பிரகாசமற்றிருந்த ஓர் நாளின் இறுதியில், இரவு நெருங்குகையில், நான் என் படுக்கையில் இளைப்பாறிக்கொண்டிருந்தேன். என் சௌகரியமான அறையில் எங்கும் வெளிச்சமாயிருந்த போதிலும், வெளியிலிருந்த இருள் சற்று என் ஆத்துமாவில் நுழைந்ததுபோல் ஆவிக்குரிய காட்சி பெறாதிருந்தேன். வேதனையென்ற கஷ்டமான வழியில் வழுக்கி விழுந்துவிடாதபடி கர்த்தரின் கரம் என்னைக் கைபிடித்து வழி நடத்துகிறது என்பதை அறிந்தேன். ஆயினும் அன்று எவ்வளவு முயன்றும் அவர் கரத்தை என்னால் காண முடியவில்லை.

என் இதயத்தில் பொங்கி எழும் வருத்தத்தில் நான், 'கர்த்தர் தம்முடைய பிள்ளைக்கு ஏன் இப்படிச் செய்தார்? கசப்பான சகிக்க முடியாத, வேதனையை அடிக்கடி, நான் அனுபவிக்கச்செய்ததேன்? அவருடைய ஏழை ஊழியருக்கு நான் செய்ய விரும்பும் உதவியைச் செய்யமுடியாதபடி இந்த நீடித்த பெலவீனம் உண்டாக ஏன் அனுமதித்தார்? என்று என் இதயத்தில் வினவினேன்.

இந்தப் பொறுமையற்ற கேள்விகளுக்கு, விந்தையான பாஷையில் சீக்கிரமே பதில் கிடைத்தது. அதன் பொருளை அறிந்துகொள்ள என் ஆத்துமாவின் மெல்லிய சத்தமே போதுமானதாயிருந்தது.

'சிறிதுநேரம் வரையில், கணப்பறையில் எரியும் கட்டைகளின் வெடிக்கும் சப்தமேயன்றி, எங்கும் நிசப்தமே குடிகொண்டிருந்தது; திடீரென ஒரு சப்தம் கேட்டது. அந்தச் சப்தம் என் ஜன்னலருகேயிருந்து 'ராபின்' என்னும் பட்சி மெதுவாக இனிமையாகத் தெளிவாகப் பாடுவதுபோன்று இருந்தது.

'வருஷத்தின் அந்தப் பருவத்தில் இரவு நேரத்தில் பட்சி எப்படிப் பாடக்கூடும்? அல்லவென்றால், அது என்ன சப்தமாயிருக்கக்கூடும்' என்று கவனித்தேன்.

திரும்ப அதே சப்தம், மெதுவாய் இனிமையான கானம் நிறைந்ததாய்த் தொனித்தது. அது என்ன சப்தம் என்று அறிய ஆவலுற்றேன். அப்பொழுது என் சிநேகிதி, 'அந்தச் சப்தம் நெருப்பில் எரிந்து கொண்டிருக்கும் கட்டையிலிருந்து உண்டாயிற்று' என்று சொன்னாள். அந்த முதிர்ந்த மரத்தின் அழியாத உள் பாகத்தில் அடைப்பட்டிருந்த இன்னிசை நெருப்பால் விடுவிக்கப்பட்டது.

'ஒரு வேளை அந்த மரம் தன் நல்ல காலத்தில், தன் கிளைகளில் பட்சிகள் ஆனந்தமாய் பேசிக் களித்தபோது, சூரிய வெளிச்சம் தன் மெல்லிய கிளைகளை அலங்கரித்தபோது, இந்த இன்னிசைக் கீதத்தைத் தன்னுள் சேமித்து வைத்ததுபோலும். அதன் பிறகு அது முதிர்ந்தது, கடினமாகியது, அநேக வளையங்கள் உண்டாக்கத்தக்கதாய்ச் சுற்றுச் சுற்றாய் வளர்ந்து மறந்துபோன இன்னிசையை அடைத்து வைத்தது. அதன் முரட்டுப் பாகத்தைத் தீ எரித்தபொழுது நெருப்பின் உக்கிரம் அதனிடமிருந்து பாட்டை வருவித்தது. 'ஆ நம்முடைய துன்பங்கள் நம்மிடமிருந்து துதியின் பாட்டை வருவிக்கும்பொழுது நிச்சயமாகவே நாம் பரிசுத்தமாக்கப்படுகிறோம். கர்த்தர் மகிமைப்படுகிறார்!' என்று எண்ணினேன்.

ஒருவேளை நம்மில் சிலர் இந்த முதிர்ந்த கட்டையைப்போல் குளிர்ந்து கடினப்பட்டு, உணர்வற்றிருக்கலாம். நம்மைச் சூழப்பற்றி எரியும் நெருப்பு நம்மிலிருந்து அவர்மேல் நம்பிக்கை என்னும் இசையையும், சந்தோஷமாய் அவர் சித்தத்திற்கு உடன்படுதல் என்னும் இசையையும், வெளியேற்றாவிட்டால், நாம் ஒருபோதும் அந்த இன்னிசை நாதத்தை வெளியிட்டிருக்கமாட்டோம்.

'நான் இவ்வாறு தியானத்தில் ஆழ்ந்திருக்கையில் நெருப்பு எரிந்தது. என் முன் அதி விந்தையாய் கொண்டுவரப்பட்ட இந்த உவமை என் ஆத்துமத்திற்கு இன்ப ஆறுதலை அளித்தது.'

நெருப்பில் பாடவேண்டும், சிந்தனையற்ற ஆத்துமாக்களை இன்னிசையில் இணியச் செய்ய, இதுவே வழியென்றால் அக்கினிச் சூளை ஏழுமடங்கு உஷ்ணமாக்கப்படட்டும். அதைத் தாங்கக் கர்த்தருடைய துணையும் நமக்கு இருப்பதாக.

## மார்ச்சு 14

'மோசே தேவன் இருந்த கார்மேகத்திற்குச் சமீபமாய்ச் சேர்ந்தான்' (யாத். 20:21).

ஞானவான்களுக்கும், ஜாக்கிரதையுள்ளவர்களுக்கும் மறைவான இரகசியங்களைக் கர்த்தர் இன்னும் வைத்திருக்கிறார். நீ அவைகளைக் குறித்துப் பயப்படாதே. நீ அறியக்கூடாத விஷயங்களை ஏற்றுக்

கொண்டு திருப்தியாயிரு, பொறுமையாய்க் காத்திரு. இருளின் பொக்கிஷத்தையும், இரகசியத்தின் மகிமையான ஐசுவரியங்களையும் உனக்கு வெளிப்படுத்துவார். அறியப்படாமை கர்த்தருடைய முகத்தை மறைக்கும் திரையாகும்.

உன் ஜீவியத்தில் வந்து சேரும் மேகத்தினுள் பிரவேசிக்கப் பயப் படாதே. தேவன் அதிலிருக்கிறார். அதின் மறுபாகம், அவருடைய மகத்துவத்தால் ஒளிவிடுகிறது. உன்னைச் சோதிக்கும் நெருப்பை யொத்த சோதனைகள் உனக்கு ஏற்படும் விகற்பமான காரியம் என்று எண்ணாதே. கிறிஸ்துவின் பாடுகளில் நீயும் பங்காளியாயிருப்பதால் சந்தோஷப்படு. நீ அதிகத் தனித்தவனாகவும், கைவிடப்பட்டவனா யும் காணப்படுகையில் தேவன் சமீபத்திலிருக்கிறார். கார்மேகத்திற் குள் அவர் இருக்கிறார். நீ தயங்காமல், அதன் இருண்ட இருளுக் குள் பாய்ந்து செல். அவரை மூடியிருக்கும் கூடாரத்திற்குள் தேவன் உனக்காகக் காத்திருக்கிறார். —தெரிந்தெடுக்கப்பட்டது

உன் வாழ்வில் ஒரு பாகம் கவிழ்ந்திருக்கின்றதா? அது இருண்டு பயங்கரமாகத் தோன்றுகின்றதா? புயல் வருவதற்கு அடையாளம் போல் காணப்படுகிறதா? அது ஆகாயத்தை மறைத்து வரவர இருண்டு கொண்டே வந்து இருண்ட நிழலைச் செய்கின்றதா? அப்படி யானால் கடவுள் அதில் வருகின்றார்.

உன் வாழ்வில் மேகம் கவிழ்ந்திருக்கின்றதா? அப்படியானால் அது கர்த்தரின் ரதமாகும். அதில் அவர் ஏறி வருகின்றார். அவர் புயலையே ஆடையாக அணிந்துள்ளார். உன் கண்களினால் காணமுடியாத ஒளியை அவர் இவ்வாறு மறைத்துக்கொள்கிறார். அந்த மேகத்தில் கடவுள் வருகிறார். உன் வாழ்வில் ஒரு மேகம் உண்டா? பயங்கர மான கஷ்டங்கள் உண்டா? வாதிக்கும்போதே அஞ்சத்தக்க சோதனை உண்டா? என்ன நடக்கப்போகிறதென்று தெரியாமல் பனி மூடியதுபோல் இருக்கின்றதா? அப்படியானால் கடவுள் அதில் வருகின்றார்.

உன் வாழ்வில் மேகம் கவிழ்ந்திருக்கின்றதா? நோயோ முது மையோ துன்பமோ உன்னைப் பீடித்துள்ளதா? மரணம் சமீபித்திருக் கிறதா? உன் கடைசி மூச்சுடன் இவையனைத்தும் அழியும். ஆகை யால் உன் படகின்மேல் கவியும் இந்த மேகங்களுக்கு நீ அஞ்சாதே. மரணம் என்ற மேகம் இருளும் குளிரும் நிறைந்ததாயிருக்கும். ஆனால் அதன் அருகில் பொன்னொளி சேர அது அழகு பெறும். கடவுள் அந்த மேகத்தில் வருகிறார்.

ராக்கி மலையின் ஓர் உயரமான சிகரத்தின்மீது டாக்டர் 'சி' என்ற பெரியார் கீழே அடிக்கும் புயலைக் கவனித்துக்கொண்டு நின்றுகொண் டிருக்கையில், மேகத்தினூடே மேலே ஒரு கழுகு பறந்து வந்தது. அப்போது அதன் மேலுள்ள நீர்த்துளிகள் வைரங்கள்போல் ஒளி

விட்டன. அந்தப் புயல் அடியாவிட்டால், கழுகு அப் பள்ளத் தாக்கிலேயே இருந்திருக்கும். அப்படியே ஜீவியத்தின் கஷ்டங்கள் நம்மைக் கர்த்தருக்கு நேரே எழும்பச் செய்கின்றன.

## மார்ச்சு 15

*'யாக்கோபு என்னும் சிறு பூச்சியே பயப்படாதே . . . நான் உன்னைப் புதிதும், கூர்மையுமான பற்களுள்ள யந்திரமாக்குவேன்' (ஏசா. 4:14,15).*

பற்களுள்ள யந்திரம், பூச்சி; இவ்விரண்டைப்போல் ஒன்றுக் கொன்று அவ்வளவு முரண்பாடான காரியம் உண்டா? பூச்சி வெகு மிருதுவான ஜந்து; கல்லால் காயப்படும். கடந்து செல்லும் சக்க ரத்தின் கீழ் அகப்பட்டு நசுங்குண்டுபோகும்; பற்களுள்ள இயந்திரம் மற்றப் பொருள்களை உடைக்கும். அது உடைபடாது; பாறை யிலும் அது அடையாளம் செய்யக்கூடும். வல்லமையுள்ள தேவன் ஒன்றை மற்றொன்றாக்கக் கூடியவர். ஆவியில் வல்லமையற்ற ஒரு மனிதனை, அல்லது ஒரு ஜாதியை எடுத்து, தன் ஆவியின் ஊக்குத லால் சரித்திரத்தில் மேன்மையான இடம் பெறும் வலிமை அளிக்கக் கூடியவர்.

ஆகையால் 'பூச்சி' பயப்படாதிருக்கலாம். வல்லமையுள்ள தேவன் நம்முடைய சந்தர்ப்பங்களைப் பார்க்கிலும் நம்மைப் பலமுள்ளவர்கள் ஆக்கலாம். நம்முடைய நன்மைக்கென்றே அவற்றைத் திருப்ப லாம். கர்த்தரின் வல்லமையால் அவை யாவும் நம் ஆத்துமாவுக்கு கப்பங் கட்டலாம். இருண்ட ஏமாற்றம் ஒன்றை எடுத்து, அதை உடைத்துத் திறந்து, அதிலிருந்து கிருபை என்னும் ஆபரணத்தை எடுக்கலாம். இரும்பையொத்த தீர்மானமான சித்தம் தேவன் நமக்கு அருளும்போது, இரும்புக் கலப்பை கடினமான பூமியை உடைத்துச் செல்லுவதுபோல் நாம் கஷ்டங்களினூடே செல்லலாம். 'நான் உன்னை ஆக்குவேன்' என்றார். அவர் அவ்வாறே செய்யமாட்டாரா?

—டாக்டர் ஜோவட்

கிறிஸ்து உலகிலுள்ள உடைந்த பொருள்களால் தம் அரசாட்சியை ஏற்படுத்துகிறார். மனிதர் தம் அரசாட்சியை நிலைநாட்டும்போது வெற்றியும் பலமும் உள்ளவர்களையே நாடித்தேடுகிறார்கள். ஆனால், கர்த்தரோ வாழ்க்கையில் வெற்றி பெறாதவர்களை—தோல்வியுற்ற வர்களை நாடுகிறார். மண்ணுலகில் தோல்வியடைந்தவர்களால் விண்ணுலகம் நிறைந்துகொண்டு வருகிறது. ஒரு முறிந்த நாணலைக் கூட தூக்கியெடுத்து அழகும் மகிமையும் உடையதாகச் செய்ய வல்லவர் கிறிஸ்து. துன்பத்தால் உடைந்த வாழ்க்கைகளை அவர் இன்னிசை மூலம் துதிசெலுத்தும் வாத்தியங்களாக மாற்றுவார். உலகில் மிக வருந்தத்தக்க தோல்வி எனத் தோன்றுவதை அவர் விண்ணில் சிறந்த மகிமையாக்குவார். —ஜெ. ஆர். மில்லர்

1 'என்னைப் பின்பற்று, நான் உன்னை ஆக்குவேன்.
என் வார்த்தைகளை வல்லமையோடு பேசச் செய்வேன்.
என் இரக்கத்தின் கால்வாயாக்குவேன்.
ஒவ்வொரு வேளையும் உன்னை உதவி செய்பவனாக்குவேன்.'

2 'என்னைப் பின்பற்று, நான் உன்னை ஆக்குவேன்.
நீ தானாக அடையமுடியாத நிலைக்கு உன்னை உயர்த்துவேன்.
அன்பும் நம்பிக்கையும் பக்தியுமுள்ளவனாக்குவேன்.
என்னைப்போல் உன்னை ஆக்குவேன்.'

## மார்ச்சு 16

'நம்முடைய பிரயோஜனத்திற்காகவே,' (எபி. 12:10).

ரால்ப் கான்னூர் என்பவரின் புத்தகங்களில் அவர் ஒரு கதை கூறுகிறார். குவன் என்ற பிள்ளையைப்பற்றி எழுதியுள்ளார். குவன் ஒரு பிடிவாதமான, முரட்டுக் குணமுள்ள பிள்ளை. சிறு வயதிலேயே தான் நினைத்த வழியில் சென்றாள். ஒருநாள் அவளுக்கு ஒரு பெரிய விபத்து நேரிட்டதால், அவள் ஜீவிய காலமெல்லாம் நொண்டியா யிருக்க நேர்ந்தது. இதனால் அவள் அதிகமாக முறுமுறுத்து, இன்னும் அதிக முரட்டுக் குணம் உடையவளானாள். இவ்விதமான நிலையில் அவள் இருந்தபொழுது 'வான வழிகாட்டி' என்று மலை தேசத்தாரால் அழைக்கப்பட்டுவந்த ஒரு சுவிசேடப் பிரசங்கி அவளைப் பார்க்க வந்தார்.

அவர் அவளுக்குப் பிளவின் உவமையை எடுத்துக் கூறினார். ஆதியில் பூமியெல்லாம் சமமான புல்வெளியாயிருந்தது. அதில் பிளவு ஏற்படவில்லை. எஜமான் ஓர் நாள் அதன் புல் மைதானத்தின் வெளியில் நடந்து திரிந்து, வெளியை நோக்கி, 'ஏன் உன்னில் பூக்கவில்லை?' என்று வினவினார். அதற்குப் புல்வெளி, என்னிடம் விதைகளில்லை' என்று பதிலுரைத்தது.

பின்பு அவர் பட்சிகளிடம் பேசினார். அவைகள் சகலவித பூவிதை களையும் கொண்டுவந்து வெளியெங்கும் தூவின. விரைவில் அவ் வெளியெங்கும் கல்வாழை, ரோஜா, காட்டவரை, காட்டுச் செவ் வந்தி, சிவப்பு சம்பங்கி முதலிய பூக்கள் மலர்ந்தன. அப்பொழுது எஜமான் வந்து இவற்றைக் கண்டு உவகை பூத்தார். ஆனால், அவர் அதிகமாய் விரும்பிய பூக்கள் அங்கில்லை. அவர் புல் வெளியை பார்த்து: 'நீலோற்பலம், அல்லி, ஆம்பல், முதலிய மலர்களை காணோமே' என்றார்.

திரும்பவும் அவர் பட்சிகளுக்குக் கட்டளையிட்டார். அவை சகல பூச்செடி வித்துக்களையும் கொண்டுவந்து நாலா பக்கமும் சிதறின. திரும்பவும் எஜமான் அங்கு வந்போது, தான் விரும்பின பூக்களை

காணவில்லை. 'அந்த இனிய பூக்கள் எங்கே' என்றுகேட்க, புல்வெளி வெகு துயரத்தொனியில் 'ஓ, என் எஜமானே! என்னால் அந்தப் புஷ்பங்களை வைத்துக்காப்பாற்ற முடியவில்லை. என்மேல் காற்று அதிக உக்கிரமாய் வீசுகிறது. பகலோன் கடும் தாபத்தோடு காய் கிறான். அப்பூக்கள் வாடி, காற்றில் பறந்துபோய் விடுகின்றன' என்று சொல்லிற்று.

பின்பு எஜமான் மின்னலுக்குக் கட்டளையிட்டார். ஒரே வீச்சில் புல்வெளியின் இருதயத்தை இடி பிளந்தது. அது அசைந்தது. வேதனையால் முனங்கியது. அது தன்னில் உண்டாகிய பிளந்த காயத்தினால் அநேக நாள் வருந்தியது.

ஆனால் நதி பிளவினூடே பாய்ந்தது. அது தன்னோடே செழிப் புள்ள மண்ணைக்கொண்டு வந்தது. மற்றொரு முறை பட்சிகள் விதைகள் கொண்டுவந்து, அப்பள்ளத்துள் சிதறின. வெகு நாளைக்குப் பின் அம்முரட்டுப் பாறைகள், பச்சைப் பாசியினாலும், படரும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டன. நீரில் கொட்டியும், ஆம்பலும் பூத்தன. கரையில் பெரிய ஆலமரங்கள் தங்களின் உயர்ந்த தலை யைச் சூரிய ஒளிக்கு நேரே உயர்த்தி நின்றன. அதனடியில் சின்னக் கேதுரு மரங்களும், காசித் தும்பைச் செடிகளும் குவிந்து கிடந்தன. எப்பக்கமும் முல்லையும், பவளமல்லிகையும் வளர்ந்து பூத்துக் குலுங்கி நின்றன. இந்தப் பிளவே எஜமான் இளைப்பாறி இன்ப மடையும் விருப்பமுள்ள இடமாயிற்று.

பின்பு அந்த 'வான வழிகாட்டி' அவளுக்கு ஒரு வசனம் வாசித் தார். 'கனிகள்' என்னுமிடத்தில் 'பூக்கள்' என்று வைத்து வாசித் தார். 'ஆவியின் பூக்கள், அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடிய பொறுமை, சாந்தம்—இவைகளில் சில பிளவுகளில்தான் உண் டாகும்' என்றார்.

குவன் என்பவள் மெதுவாக அவ்வழிக்காட்டியிடம் 'பிளவுகளில் மாத்திரம் உண்டாகும் பூக்கள் யாவை?' என்று கேட்டாள். அதற்கு அவர் 'சாந்தம், தாழ்மை, நீடிய பொறுமை என்பவைகளே. ஆனால், அவைகள் வெளியிலும் பூக்கும், பிளவினுள் வளரும் பூக்களைப்போல் அத்தனை அதிகமாயும் நறுமணம் நிறைந்ததாயும் இருப்பதில்லை' என்றார்.

வெகு நேரம் குவன் மௌனமாய் இருந்தாள். பின்பு உதடுகள் நடுங்க, விசனத்துடன் 'என் பிளவினுள் பூக்களில்லை: அதிகக் கரடு முரடான பாறைகள் மாத்திரமே இருக்கின்றன' என்றாள்.

'பிரிய குவன்னே! எப்பொழுதாவது ஒருநாள் அவைகள் மலரும். எஜமான் அதைக் காண்பார். நாங்களும் அதைப் பார்ப்போம்' என்றார்.

பிரியமானவர்களே, துன்பம் என்னும் பிளவு உங்கள் ஜீவியத்தில் ஏற்படும்பொழுது இக்கதையை நினைத்துக்கொள்ளுங்கள்.

## மார்ச்சு 17

'நான் உனக்குச் சொல்லும் வரைக்கும் அங்கேயிரு' என்றான் (மத். 2:13).

1 நான் போக வேண்டும் என்று வெகுவாய் விரும்பினும்,
பிதாவே நீர் வைத்த இடத்தில் நான் இருப்பேன்.
சேனையின் முன்னிலையில் சென்று
அவர்களை நடத்த விரும்பினேன் என்று நீர் அறிவீர்.
இசைக்குத் தக்க தாகக் காலடி எடுத்து வைத்து,
கொடி பறக்கும்பொழுது அவர்களை ஊக்க எண்ணினேன்;
போரின் மத்தியில் நேரே நிற்க விரும்பினேன்.
ஆனால் நீர் வைத்த இடத்தில் தரித்திருப்பேன்.

2 நீர் வைத்த இடத்தில் தரித்திருந்து வேலை செய்வேன்.
இடம் குறுகலாய்ச் சிறிதாயிருப்பினும்,
நிலம் செழிப்பற்றுக் கற்களுள்ள தாய்,
ஜீவனற்றுத் தோன்றினும் விலகேன்.
பூமி உம்முடையது நீரே விதை தாரும்.
பயமில்லாமல் நான் விதைக்க;
மழைக்காய் காத்திருக்கையில், பூமியைப் பண்படுத்துவேன்,
பசுமை தோன்றும் போது மகிழுவேன்.
நீர் வைத்த இடத்தில் வேலை செய்வேன்.

3 நீர் வைத்த இடத்தில் இருப்பேன், பிரிய கர்த்தரே
பகலின் உஷ்ணத்தையும், பாரத்தையும் சகிப்பேன்;
உம்மையே முற்றிலும் நம்புவேன்—சாயுங்காலத்தில்,
கனத்த கதிர்க்கட்டுகளை, உம் பாதத்தண்டையில்
வைப்பேன்,
என் ஜீவிய ஓட்டம் முற்றுப் பெற்று,
உலகவேலை முடிந்து ஓயுங்கால், நான்
நிலைத்திருந்தது மேல் என்று காண்பேன்
நீர் வைத்த இடத்தில் நிலைத்திருப்பேன்.

சந்தர்ப்பங்கள் என்னும் சிறைக் கம்பிகளை உடைத்துச் சென்று இன்னும் அதிகப் பிரயோஜனமான வேலை செய்ய ஏங்கி நிற்கும் ஓய்வற்ற என் ஆத்துமாவே! உன் நாட்களை ஒழுங்குபடுத்தும் பணியை உன் கர்த்தருக்கு ஒப்புவி. சுவையற்ற வாழ்விலும் பொறுமையோடும் நம்பிக்கையோடும் இரு. அதுவே பின்னால் கர்த்தர் உனக்குப் பொறுப்புள்ள வேலையை அளித்தால் அதில் வரும் கஷ்டங்களைத் தாங்குவதற்கு உன்னை ஏற்றவனாகச் செய்யும்.

## மார்ச்சு 18

*'அவர் மாறுத்தரம் ஒன்றும் சொல்லவில்லை' (மா. 15:3).*

தம்மை குற்றப்படுத்திய மனிதரை இயேசு தெய்வீக வல்லமையுள்ள, ஒரே பார்வையால் கீழே விழச்செய்திருக்கலாம்; ஒரே கண்டிப்பான வார்த்தையால் அடக்கியிருக்கலாம்; ஆனால் அச்சமயத்தில் இரட்சர் மாறுத்தரம் ஒன்றும் சொல்லாதிருந்தது வேதாகமத்திலேயே உன்னதக் காட்சியாகும். மௌனமான தேவ ஆட்டுக்குட்டியானவர் அவர்களை தீமையானவற்றைப் பேசவும், கொடிய செய்கைகளை செய்யவும் விட்டு விட்டு தமது அமைதியின் வல்லமையில் தரித்திருந்தார். நாம் மௌனமாக இருந்து கர்த்தரை நமக்காக காரியத்தை நடத்திடச் செய்யவும் அமைதி ஒன்று உண்டு. நாமாகவே செய்யும் வழியைத்தேடி, நியாயமானது—ஞானமானது—முன் யோசனையானது எது என்று ஆராய்வதை விட்டு ஓய்ந்து தேவன் தமது உண்மையான நித்திய அன்பினால் நமக்கு ஏற்பட்ட அநீதிக்கு உத்தரவளிக்கக்கூடும் என்று மௌனமாயிருத்தல்வேண்டும்.

நமக்காக நாமே போராடி, நம்மைக்காப்பாற்றிக்கொள்ள முன்வந்ததால் கர்த்தருடைய உதவியை அநேக முறை இழந்துள்ளோம். இந்த அமைதியின் வல்லமையையும், அடங்கிய சிந்தையையும் இன்றவன் நமக்குக் கொடுப்பாராக. அவ்வாறுயின் துன்பமும் போராட்டமும் நிறைந்த நமது உலக வாழ்வு முற்றுப் பெற்றபின், காலைப் பனியையும், மென்மையான ஒளியையும் மாலைத் தென்றலையும், கல்வாரிக்கும் உகந்து சென்ற கிறிஸ்து இரட்சகரையும், புறு வடிவில் வந்த சாந்தமான பரிசுத்த ஆவியையும் நாம் நெடிது நினைத்திருப்பது போல் மக்கள் நம்மையும் நினைப்பார்கள். —எ. பி. சிம்சன்

1 கர்த்தர் தனிமையாக நின்று,
மானிடர் கல்மனதை அறிந்தபோது,
ஈடு கொடுக்கவே வந்தோ மென்று,
அந்நாள் அவர் பேசாதிருந்தார்.

2 அவர் வார்த்தையை பொய்யாய்க் கூறினர்,
அவரைக் கொடுங் கயிற்றால் கட்டினர்,
ராஜன் என்று வெகு கேலி செய்தனர்,
ஆனால் இயேசு ஒன்றும் பேசவில்லை.

3 அவர் திரு முகத்தில் துப்பினர்
அங்கு மிங்கும் இழுத்துச் சென்றனர்,
அவர் மேல் வசைச் சொல் குவித்தனர்
ஆனால் இயேசு வாயைத் திறவாதிருந்தார்.

4 என் சிநேகிதனே! இதிலும் மிகச் சிறிய விஷயத்திற்காக
நியாயமான கோபம் என்று நீ யெண்ணி,
நீ யடைந்த இகழ்ச்சிகளை நினைத்துச் சீறுவாயோ?
உன் இரட்சகர் மௌனமாயிருந்தாரன்றோ?

'செவ்விந்தியரின் அப்போஸ்தலன்' என்றழைக்கப்படும் மின்னஸோட்டா பிஷப்பான 'விப்பிஸ்' சொன்ன ஒரு வாக்கியம் எனக்கு ஞாபகமிருக்கிறது. அது 'முப்பது வருஷகாலமாக என்னோடு மாறுபட்டவர்களின் முகத்தில், இயேசுவைக் காண முயன்று வருகிறேன்' என்பதே. இத்தகைய எண்ணம் நமக்கு உண்டானால் நாம் மிகக் குறுகியமனப்பான்மை உள்ளவர்களாகவோ அல்லது (எது உண்மை, எது நீதி என எண்ணாமல்) எல்லாவற்றையுமே ஏற்றுக்கொள்பவர்களாகவோ இருக்கமாட்டோம். சினங்கொண்டு பதிலுக்குப் பதில் செய்யவும் மாட்டோம். மக்களை அழிப்பதற்கன்றி இரட்சிப்பதற்கே வந்த கிறிஸ்துநாதரைக் குறித்து நாம் கொடுக்கும் சாட்சிக்கு ஒருவித இழுக்கும் நேராதவாறு நடந்துகொள்பவர்கள் ஆவோம்.

## மார்ச்சு 19

*பிரியமானவர்களே உங்களைச் சோதிக்கும்படி, உங்கள் நடுவில் பற்றி எரிகிற அக்கினியைக் குறித்து ஏதோ புதுமை என்று திகையாமல் . . . கிறிஸ்துவின் பாடுகளுக்குப் பங்காளிகளானதால் சந்தோஷப்படுங்கள்' (பேது. 4:12).*

தாவீதின் யாழை மேன்மைப்படுத்த அவன் அநேக ஆண்டுகள் காத்திருக்கவேண்டியதாயிருந்தது. இவ்வுலகத்தில் தயங்குகிறவர்களின் இருதயத்திற்கு ஊக்கம் அளிக்கவும், பரலோகப் பிதாவின் வீட்டில் சந்தோஷம் உண்டாகத் தக்கதாகவும் 'துதியும் இன்னிசையுமுள்ள' சங்கீதத்தைப்பெற அநேக மணி நேரம் வனாந்தரத்தில் காத்திருத்தல் அவசியம்.

தாவீதைபோல் அருமையான கீதம் யாரும் பாடவில்லை. அப்படிப்பட்ட சங்கீதம் பாட ஈசாயின் மகனுக்கு என்ன ஆயத்தங்கள் உண்டு?

தீமை செய்கிறவர்களை எதிர்த்தபோது, கர்த்தரின் உதவிக்காகக் கெஞ்சினான். கர்த்தர் நல்லவர் என்ற சிறு நம்பிக்கை, அவருடைய இரட்சிப்பையும், பல்லாயிரம் இரக்கங்களையும் கண்டவுடன் சந்தோஷ கீதங்களாக வெளிப்பட்டது. ஒவ்வொரு துக்கமும் அவன் வீணைக்கு ஒரு நாணாகியது; ஒவ்வொரு கிருபையும் துதிப்பாட்டுகளுக்குப் பொருளாயிற்று.

இன்றைய தினமும் கர்த்தருடைய ஜனங்கள் அச்சங்கீதங்களை தங்கள் துக்கம், துதி இவைகளை அறிக்கையிட உபயோகிக்கிறார்கள். தாவீதுக்கு வந்த கஷ்டங்களில் ஒன்று வராதிருந்தாலும்,

ஒரு பாக்கியத்தை அவன் கவனியாது அல்லது மதியாது இருந்திருந்தாலும் சங்கீதங்கள் அத்தனை அந்தஸ்துள்ளவைகளாய் விளங்கா.

கர்த்தருக்குக் காத்திருந்து, அவருடைய சித்தப்படி செய்வது, அவருடைய பாடுகளுக்குப் பங்காளிகளாகி அவரை அறிந்து அவர் குமாரனின் சாயலைப் பெறுவதாகும். ஆவிக்குரிய அறிவில் பெருக வேண்டுமென்றால் அதற்கென்றிருக்கும் அதிகப் பாடுகளை அனுபவிக்கப் பயப்படக்கூடாது. பட்சதாபப்படுதல் என்ற தெய்வீக சக்திக்கு விரிவான இடம் தேவை. ஏனென்றால் பரிசுத்த ஆவியைப் பெறுதல், ஒருவனை எல்லாம் வெறுத்தவனாக அல்ல, இதயபூர்வமான பட்சத்தை மேன்மையாகவும், உண்மையாகவும் உடையவனாகச் செய்கிறது.

'இயேசுகிறிஸ்துவே என்னை உண்மையுள்ளவனு என்று சோதித்தறிந்து இந்த ஊழியத்திற்கு ஏற்படுத்தினார்' *(1 தீமோ. 1:12).*

## மார்ச்சு 20

'துக்கப்படுகிறவர்கள் என்னப்பட்டாலும் எப்போதும் சந்தோஷப்படுகிறவர்கள்' *(2 கொ. 6:10).*

இன்பம், துன்பம் என்றெண்ணாத ஸ்தோயிக்கன் ஒருவன் கண்ணீர் வடிப்பதை ஏளனமாய் எண்ணுகிறான். கிறிஸ்தவன் அழக்கூடாது என்று சொல்லப்படவில்லை. உரோமத்தைக் கத்தரிப்பவர் கைகளின் கீழ் நடுங்கியவாறே அசையாதிருக்கும் ஆட்டைப்போல நம் ஆத்துமா அதிகத் துக்கத்தின் கீழ் மௌனமாக இருக்கலாம். அடுத்து வரும் அலைகள்போன்ற கஷ்டங்களால் இருதயம் உடைந்துபோகும் நிலையில் இருக்கையில் துன்பப்படுபவன் சப்தமிட்டு அழுது தனக்கு விடுதலை தேடலாம். ஆனால் அதைவிட மேலானது ஒன்றுண்டு.

கடலில் உப்புத் தண்ணீருக்கு மத்தியில் நல்ல தண்ணீர் ஊற்றுக்கள் சில சமயம் உண்டாகுமென்று சொல்லுகிறார்கள். ஆல்பைன் மலையில் மிகுந்த அழகுள்ள மலர்கள் கரடுமுரடான மலைக்கணவாய்களில் மலரும். வெகு உன்னதக் கருத்துக்கள்—சங்கீதங்கள் மிகுந்த வருத்தம் அனுபவித்த ஆத்துமாவிலிருந்துண்டாகும்.

அது அப்படியே இருக்கட்டும். அதுபோலவே எண்ணற்ற துன்பங்களின் மத்தியில் கர்த்தரை நேசிக்கும் ஆத்துமாக்கள் துள்ளிக் குதிக்கத் தக்கதான ஆனந்தம் கொண்டாடக் காரணம் காணுகிறார்கள். ஆழம் ஆழத்தைக் கூப்பிட்டு, இரைந்தாலும் இரவு பூராவும் கர்த்தரின் பாட்டு வெள்ளி மணி ஓசைபோல், துல்லியமாய் இனிமையாய்க் கேட்கும். ஒருபோதும் மானிடருக்கு ஏற்படாத

அத்தனை துன்பம் நேர்ந்தாலும் நாம் அப்பொழுதும் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பிதாவாகிய தேவனைத் துதிக்கக் கூடும். நீ இதுவரை இந்தப் பாடம் படிக்கவில்லையா? கர்த்த ருடைய சித்தத்தைத் தெரிந்துகொள்வது மாத்திரமல்ல. கர்த்தரு டைய சித்தத்தை ஏற்றுக்கொள்வது மாத்திரமல்ல. மகிமை யோடும் சொல்லமுடியாத ஆனந்தத்தோடும் அதை நிறைவேற்றி மகிழவும் வேண்டும்.

நான் அமைதியாயிருப்பேன். பெருந்துன்பப் பாரம் என்னை அழுத்தியபோது என் இருதயம் முனங்கிற்று. அந்த அழுகையை, குறைபாட்டை அச்சிறு ஒலியைக்கூட அடக்கிக்கொண்டேன். கண்ணீரைச் சிந்தாது கண்களைத் தடுத்துவிட்டேன். நான் அமைதி யாய் இருப்பேன். என் ஆத்துமாவை வெறுமையாக்கி எரிகின்ற நெருப்புபோல் எனக்குத் துன்பத்தைச் செய்தும், என் ஆறுதல் அனைத்தையும் நீக்கி வாத்திய ஒலியை எனக்கு மறைத்தும் என்னை வருத்துகின்ற இந்த அன்பின் தன்மை எனக்கு விளங்கவில்லை. ஆயினும் நான் அமைதியாய் இருப்பேன். கடவுள் அன்புமயமானவர். ஆகையால் நான் அதிகப் பொறுமையாய்க் காத்திருப்பேன். என் ஆத்துமாவே நீ சந்தேகமில்லாமல் அமைதியாயிரு. சிறிது நேரம் வரை நாம் காத்திருப்போம். அவர் சித்தப்படி நம்மைத் தூக்கி விடும்வரை காத்திருப்போம். என் இதயத்தின் வீரமொழிகளைக் கேட்டேன். மெய் நடுங்கினேன். ஆனால் அமைதியாயிருக்க முயன்றேன். என் கண்ணீரற்ற கண்களால் விண்ணை நோக்கி 'ஆம், கிறிஸ்துவே உமது சித்தப்படியே ஆகட்டும்' என்றேன்.

ஆனால் விரைவில் என் இதயம் மறுபடியும் ஒன்று சொல்லிற்று. துக்கம் நிறைந்த என் முகத்தை பார்த்து, 'அமைதியாய் மட்டுமல்ல நாம் சந்தோஷமாகவும் இருக்கலாம்' என்றது.

இப்பொழுது நானும் என் இதயமும் இனிமையாகப் பாடுகிறோம். இன்னிசை செய்யும் வாத்திய ஒலியின்றிப் பாடுகிறோம். பாலை வனத்திடை நின்று ஏராளமாக நீர் அருந்துபவர்போல் இருக்கிறோம். நசுக்கப்படும் கழுகைப்போல் உயரப் பறந்து செல்கிறோம்.

## மார்ச்சு 21

'உங்கள் விசுவாசத்தின்படியே உங்களுக்கு ஆகக்கடவது' என்றார் (மத். 9:29).

விசுவாசம் பெறத்தக்கதாய் ஜெபிப்பதே 'ஊடுருவும் ஜெபம்' எனலாம். ஜெபிக்கும்போதே, ஜெபம் ஏற்றுக்கொள்ளப்பட்டது; கேட்கப்பட்டது என்னும் நிச்சயம் ஏற்பட்டு, 'பெறுவோம்' என்று உறுதியாய் எதிர்பார்ப்பதால், கேட்கப்பட்ட காரியத்தை அந்தக் காரியம் நடைபெறும் முன்னதாகவே 'பெற்றுக்கொண்டோம்' என்று உணர்கிறோம்.

சதா மாறிக்கொண்டிருக்கும் அநித்தியமான உலகைநோக்காமல், அவர் வார்த்தை பழுதுபோகாது என்பதையே விடாது நோக்கி வந்தால் இவ்வுலக சந்தர்ப்ப அசந்தர்ப்பங்கள் ஒன்றும் அவ்வார்த்தை நிறைவேறுதலைத் தடை பண்ணமுடியாது என்பதை அறிவோம். வேறு எந்த உறுதியுமில்லாமல் அவருடைய வார்த்தையை நம்ப வேண்டும் என்று கர்த்தர் விரும்புகிருர். அப்பொழுது நமது விசுவாசத்தின்படியே நமக்கு அருளச் சித்தமாயிருக்கிருர்.

'நான் செய்வேன் என்று கர்த்தர்
ஒருமுறை வாக்களித்தபோது (எபி. 13:5)
அந்தக் காரியம் நிச்சயமாய்க் கைகூடும்.
தேவன் வாக்கைக் காப்பாற்றுகிருர் (2 கொ: 1:20)

பெந்தகோஸ்தே ஆவி வந்தகாலத்தில் ஜெபம், பணம் வட்டியின்றிக் கொடுக்கப்படவேண்டிய பணச் சீட்டைப்போலிருந்தது.

'தேவன் சொன்ஞர். அது அப்படியே ஆயிற்று' (ஆதி. 1:9).
—சர். ஆர். ஆண்டர்சன்

## மார்ச்சு 22

'நாற்பது வருடம் சென்றபின்பு சீனய் மலையின் வனந்தரத்திலே கர்த்தருடைய தூதனனவர் முட்செடி எரிகிற அக்கினியிலே அவனுக்குத் தரிசனமானர். அவர் பேசி. . . எகிப்திலிருந்து என் ஜனத்தின் உபத்திரவத்தை நான் பார்த்து அவர்கள் பெருமூச்சைக் கேட்டு அவர்களை விடுவிக்கும்படி இறங்கினேன். ஆகையால் நீ வா, நான் உன்னை எகிப்திற்கு அனுப்புவேன்' என்ருர் (அப். 7:30–34).

பெரிய காரியத்திற்காக வெகு காலங்காத்திருக்கவேண்டியிருந்தது. கர்த்தர் தாமதிக்கும்போதும் அவர் செயலற்று இருப்பதில்லை. தம்முடைய ஆயுதங்களைத் தயார் செய்கிருர். அவர் நமது வல்லமையை உறுதிபெறச் செய்கிருர். குறிப்பிட்ட வேளையில் நாம் நம்முடைய வேலைக்கு ஆயத்தமாயிருப்போம். நசரேயனுகிய இயேசுகூட முப்பது வருடம் தம் வேலையைத் துவக்குமுன் ஞானத்தில் வளர்ந்துகொண்டு, வெளிப்படையாய் வேலையில்லாதவர் போல் இருந்தார்.
—டாக்டர் ஜோவட்

தேவன் ஒருபோதும் ஆத்திரப்படார். யாரை அவர் அதிகமாய்ப் பயன்படுத்த விரும்புவாரோ, அவர்களோடு அநேக வருடங்களைச் செலவிடுகிருர். ஆயத்தப்படுத்தும் நாட்கள் அதிகம் என்ருவது, வெகு சுவையற்றவை என்ருவது அவர் ஒருபோதும் எண்ணுவதில்லை.

கஷ்டங்கள் ஏற்படும்பொழுது பொறுக்க முடியாமலிருப்பது அவற்றின் அதிகக்கால நீடிப்புதான். கடும் வேதனையும் சிறிது நேரம்தான் என்ருல் பொறுத்திருக்கலாம். ஆனல் ஒரு துக்கம் பல

ஆண்டுகளாக நீடித்திருந்தால் நாள்தோறும் அதை அனுபவிக்கும் பொழுது அதிலிருந்து ஓய்வோம் என்ற நம்பிக்கையும் நமக்கு இல்லாவிட்டால் நம்மால் அதைத் தாங்கமுடியாது. கடவுளுடைய கிருபையில்லாவிட்டால் நமது உள்ளம் தளர்ந்து துன்பத்திலேயே ஆழ்ந்துபோகும். யோசேப்பு நீண்டகாலச் சோதனையை அனுபவித்தான். நீடித்த வேதனை என்னும் நெருப்பால் கர்த்தர் தமது பாடங்களைச் சுட்டு அழுந்தச் செய்கிறார். 'வெள்ளியைச் சுத்திகரித்துப் புடமிடுகிறவராக உட்காருவார்.' எவ்வளவு நேரம் வெள்ளி உலையிலிருக்கவேண்டுமென்று அவர் அறிவார். ஒரு கைதேர்ந்த பொற்கொல்லனைப்போல், பிரகாசிக்கும் இந்த இளகிய உலோகத்தில், தம் உருவம் தெரிந்ததும், நெருப்பை எடுத்துவிடுகிறார். தேவனுடைய கரத்தின் நிழலில் மறைந்திருக்கும் அழகிய திட்டத்தின் பயனை இப்போது நாம் காணமுடியாதிருக்கலாம். அது அநேக நாட்கள் நமக்குத் தென்படாதிருக்கலாம். ஆனால் விசுவாசத்தால் அங்கே அவர் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறார் என்று அறிவோம். 'கர்த்தரை நம்புகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கேதுவாய் நடக்கிறது' என்று நாம் குதூகலத்தோடு சொல்லும்வரை, அவர் சாந்தமாய்க் காத்திருக்கிறார்; 'விடுதலை அடைய நாம் ஆவலாய் எதிர்பார்ப்பதைவிட யோசேப்பைப்போல் துக்கமாகிய பள்ளிக்கூடத்தில், எல்லா போதனைகளையும், சரிவரக் கற்றுக்கொள்ள அதிகக் கவனமாயிருக்கவேண்டும்' என்பதுண்டு. நாம் ஆயத்தமடைந்தவுடன் விடுதலை நிச்சயமாய் வரும். நாம் அனுபவித்த சோதனைகளினாலன்றி, இப்போது நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும், உன்னத ஊழியத்தைச் செய்யக்கூடியவர்களாய் நாம் ஆகியிருக்க முடியாது என்பதை உணருவோம். தேவன் நம்மை வருங்காலத்திற்காகவும், உன்னத ஊழியத்திற்காகவும் பெரும் பாக்கியத்திற்காகவும் பயிற்றுவிக்கிறார். நாம் சிம்மாசனத்திற்குத் தகுதியான குணங்களுடையவர்களானால், தேவனுடைய வேளை வரும்போது நம்மை எதுவும் தடைசெய்யமுடியாது. தேவக் கரத்திலிருந்து நாளைத் தினத்தைக் களவாடாதே. தேவன் உன்னோடு பேசி, தம்முடைய சித்தத்தை உனக்கு வெளிப்படுத்தும்படி அவகாசம் கொடு. அவரால் காரியம் பிந்திப்போகாது. காத்திருக்கக் கற்றுக்கொள். கர்த்தருக்கு முன்னால் ஆத்திரப்பட்டு ஓடாதே. அவருடைய 'வேளைக்காக'க் காத்திரு. நிமிட முள்ளும், மணி காட்டும் முள்ளும் சரியான வேளையைக் காட்டும்போது அவர் வேலை செய்வார். அவர் எது நன்மை என்று அறிவார். வேளைக்குப் பிந்தார். நீ கலக்கமடையாது அவர் வரும்வரை 'ஓய்ந்திரு.'

## மார்ச்சு 23

'யுத்தத்தில் அகப்பட்ட கொள்ளைகளில் எடுத்துக் கர்த்தருடைய ஆலயத்தைப் பரி பாலிக்க, பரிசுத்தம் என்று நேர்ந்துகொண்டார்கள்' (1 நாளா. 26:26,27).

பௌதீக வன்மை பூமியின் ஆழங்களிலுள்ள நிலக்கரிச் சுரங்கங் களில் புதைந்து கிடக்கின்றது. அவைகள் அநேகமாயிரம் யுகங் களுக்குமுன், அக்கினி மயமான உஷ்ணத்தால் எரிக்கப்பட்ட பெரிய காடுகளாகும். அதுபோல ஆவிக்குரிய சக்தி நம் இருதயத்தின் ஆழத்தில் சேமிக்கப்பட்டுள்ளது; நமக்கு விளங்காத வேதனையின் மூலம் உண்டானது அச்சக்தி.

நாம் 'மோட்ச பிரயாணம்' என்னும் புத்தகத்தில் காணப்படும் 'தைரிய நெஞ்சன்' போல ஆகும்படியாக நம்முடைய சோதனைகள் பயன்படுகின்றன. சோதனைகளின் வழியாய் பரம இராஜாவின் பட்டணத்திற்கு வெற்றிகரமாய் நம்மோடுள்ள இதர மோட்சப் பிரயாணிகளை அழைத்துச் செல்லக்கூடியவர்களாகிறோம்.

வெற்றிகரமான சகிப்பே மற்றவர்களுக்கு நம்மை உதவி செய்கிற வர்களாக்குகிறது என்பதை மறந்துவிடக்கூடாது. முறுமுறுப் போடும், சிணுக்கத்தோடும் சகித்தல் யாருக்கும் நன்மை பயக்காது.

பவுல் தம்மோடு துக்கத்தை அல்ல, ஜெயதுதி பல்லவியையே கொண்டு சென்றார்; துன்பங்கள் அதிகமாயிருக்கும்பொழுது, அவர் அதிகமாய் நம்பி அதிகமாய்ச் சந்தோஷப்பட்டார். அவர் 'உங்களுடைய விசுவாசமாகிய பலியின்மேலும், ஊழியத்தின் மேலும் நான் ஊற்றப்பட்டுபோனாலும்; நான் உங்களோடு சந்தோஷித்துக் களிகூருவேன்' (பிலி. 2:17) என்றார். கர்த்தாவே, இந்த நாளில் நேரிடும் எல்லாச் சம்பவங்களின் மூலமாகவும் நான் பயனடைய எனக்கு உதவிசெய்யும்.

அழகிய தோட்டங்களுக்கு வெகு தொலைவில்
அவர் என்னைச் சிறுகூண்டில் அடைத்தார்
ஆனால் அவர் என்னை அங்கு வைத்ததால்
நான் மிகவும் இனிய கீதங்களைப் பாடவேண்டும்
அது என்னைப் படைத்தவரின் சித்தமாகையால்
கூண்டைவிட்டு வெளியேற நான் விரும்பவில்லை
ஆனால் பரத்துக்கு நேராய் என் குரலை
உயர்த்தி நான் இன்னும் நன்றாகப் பாடுவேன்.

## மார்ச்சு 24

'பின்பு யாக்கோபு, என் தகப்பனுகிய ஆபிரகாமின் தேவனும் என் தகப்பனுகிய ஈசாக்கின் தேவனுமாயிருக்கிறவரே, உன் தேசத்திற்கும், உன் இனத்தாரிடத்திற்கும் திரும்பிப் போக உனக்கு நன்மை செய்வேன் என்று என்னுடனே சொல்லியிருக்கிற கர்த்தாவே, என்னை தப்புவியும். நான் பயந்திருக்கிறேன்' என்ருன் (ஆதி. 32:9–11).

மேற்குறித்துள்ள வேண்டுதலில், அநேக ஆரோக்கிய நற்குறிகளைக் காண்கிருேம். நம்முடைய ஆவி துன்பம் என்னும் உலையில், காய்ச்சப்படும்பொழுது, இவ்விதமாய் ஜெபிக்கலாம் என்ற ஒருவகை முறையைக் காட்டுகிறது.

'நீர் சொல்லியிருக்கிறீர்' என்று முதலில் அவருடைய வாக்குத்தத்தத்தை எடுத்துரைக்கிருன்; (ஆதி. 32:9,12) வசனங்களுக்குள் அவ்விதமாக இரண்டு முறை சொல்லுகிருன். அப்படியானுல் தேவன் அவனுக்கு இணங்குவார் அல்லவா? தேவன் தம்முடைய வாக்குத்தத்தங்களால், நாம் அவரைக் கிட்டிச் சேரத் தக்கதாகச் செய்திருக்கிருர். நாம் அவரை பார்த்து, 'நீர் சொல்லியிருக்கிறீர்' என்று சொல்லும்பொழுது, அவர் இல்லை என்று சொல்லமுடியாது. அவர் கூறியபடி அவர் செய்யவேண்டும். ஏரோது தன் வார்த்தையைக் காப்பாற்ற அவ்வளவு கருத்தாயிருக்கும்பொழுது, தேவன் அப்படியிருக்கமாட்டாரா? நீங்கள் ஜெபிக்கும்போது, ஒரு வாக்குத்தத்தின்மீது தீர்க்கமாய்க் காலூன்றிக்கொள்ளுங்கள். அப்போது உங்களுக்குப் பரலோகத்தின் வாசல்களைத் திறந்து, அதை வலுவில் பெற்றுக்கொள்ள உரிமையுண்டு.

நாம் நம்முடைய வேண்டுதல்களில் திட்டமாகக் குறிப்பிட்ட ஒரு காரியத்திற்காகக் கேட்கவேண்டும் என்று இயேசு விரும்புகிருர். 'நான் உனக்கு என்ன செய்யவேண்டும் என்று மனதாயிருக்கிருய்?' அவர் தம்மிடத்தில் துன்பத்திலும் சோதனையிலும் வருகிறவர்களைக் கேட்கிற கேள்வி இது. திட்டமான விடை வேண்டுமென்ருல், திடமான ஊக்கத்தோடு வேண்டுதல் செய்யுங்கள். ஒரு நோக்கமுமின்றி வேண்டிக்கொள்வதே அநேக ஜெபங்களுக்கு விடை அருளப்படாததுபோல் காணப்படுவதற்கு காரணம். உங்கள் வேண்டுதல்கள் குறிப்பிட்ட காரியங்களுக்காக இருக்கட்டும். குறிப்பிட்ட ஒரு தொகையைக் கொடுக்குமாறு உங்கள் பணச் சீட்டை நிரப்புங்கள். அது இயேசுவின் நாமத்தில் கொடுக்கப்படும்பொழுது பரலோகச் சேமநிதியில் உடனே பணம் பெறலாம். கர்த்தரிடம் திட்டவட்டமாய்க் கேட்கத் தைரியமாயிருங்கள்.

காவர்கால் அம்மையார் பின்வருமாறு கூறியுள்ளார்: 'கிறிஸ்தவ ஜீவியத்தில் நமக்குக் கிடைக்கும் ஆறுதல், இன்பம், ஆற்றல் எல்லாம் ஒரே ஒரு செயலைச் சார்ந்திருக்கின்றன. அது என்னவென்ருல், கடவுளுடைய வார்த்தையை அப்படியே நம்பவேண்டும்

என்பதே. கடவுள் தமது அன்பையும்—அருளையும் நமக்குத் தெரி விப்பதற்காகச் சொன்ன வார்த்தைகளைச் சிறிதும் மாற்றுமல் முழுவதுமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்த உண்மையை நான் உலகில் வாழ்ந்த ஒவ்வொரு ஆண்டிலும், ஏன் ஒவ்வொரு நாளிலுமே தெளிவாக உணர்ந்துகொண்டு வருகிறேன்' என்றுர்.

கிறிஸ்துவின் வார்த்தை, கிறிஸ்துவின் வாக்குத்தத்தம், கிறிஸ்து வின் பலி, கிறிஸ்துவின் இரத்தம் இவைகளைக் கொண்டுவா. அப் பொழுது விண்ணின் ஆசீர்வாதங்களில் ஒன்றும் உனக்கு மறுக்கப் படாது.

—ஆதாம் கிளார்க்

## மார்ச்சு 25

'விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம். ஏனென்றுல் தேவனிடத்தில் சேருகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர் களுக்குப் பலன் அளிப்பார் என்றும் விசுவாசிக்கவேண்டும்.' (எபி. 11:6).

நம்பிக்கையற்றுத் தவிக்கும் நாட்களுக்குரிய விசுவாசம்:

வேதத்தில் அப்படிப்பட்ட அநேக நாட்களை நாம் காண்கிறோம். அதிலுள்ள பாட்டுகள் விசுவாசிகளால் ஊக்கமாய் எழுதப்பட்ட வைகளே. தீர்க்கதரிசனங்கள் விசுவாசத்தைப் பற்றியவையே. விசுவாசத்தின் மூலமாகவே வெளிப்படுத்துதல் உண்டாயிற்று.

நம்பிக்கையிழந்த நாட்களே ஒளிக்கு செல்லக் கால்வைக்கும் கற்கள். அவைகள் கர்த்தரின் சந்தர்ப்பங்களும், மனிதனுக்கு ஞான மளிக்கும் கல்விச் சாலைகளுமாம்.

சங்கீதம் 107இல் அன்பின் விருந்தைக் குறித்து பழைய ஏற்பாட்டில் ஒரு கதை இருக்கிறது. இரட்சிப்புக் கிடைத்த ஒவ்வொரு கதை யிலும், நம்பிக்கை அற்றுப்போகும் அந்நேரமே கர்த்தருக்கேற்ற சந்தர்ப்பம் ஆகிறது. ஒரு யோசனையும் ஓடாத செயலற்ற நேரமே கர்த்தரின் வல்லமை துவங்கும் நேரமாயிருந்தது. வயது முதிர்ந்து இனிப் பிள்ளை பெறமுடியாது என்று இருந்த தம்பதிகளுக்கு உன் சந்ததியைக் கடலின் மணலத்தனையாய், வானத்தின் நட்சத்திரங் கள்போல் பெருகச் செய்வேன் என்று கர்த்தர் வாக்களித்ததை நினைவுகூருங்கள். செங்கடலையும், அதன் நடுவில் ஏற்பட்ட இரட்சிப் பையும் குறித்து மறுபடியும் வாசியுங்கள் (யாத். 14). யோர்தான் நதியின் மத்தியில், கர்த்தரின் உடன்படிக்கைப்பெட்டி நின்றதை வாசியுங்கள் (யோசு. 3:17). ஆசா, யோசபாத், எசேக்கியா (2 இரா. 20:3) என்பவர்களின் ஜெபங்களை மறுபடியும் படித்துப் பாருங்கள். அவர்கள் அதிக நிர்ப்பந்தப்பட்டு, என்ன செய்வோம் என்று தவித்த நேரங்களில், பண்ணின ஜெபத்தை நோக்குங்கள். நெகேமியா, தானியேல், ஓசியா, ஆபகூக் என்பவர்களின் சரிதை

யைப் படியுங்கள். கெத்சேமனேயின் இருட்டிலும், அந்தப் பயங்கர நாட்கள் முழுவதும் அவருடைய கல்லறையினருகில் தரித்திருங்கள். ஆதிச் சபையைச் சாட்சிக்குக் கூப்பிடுங்கள். அப்போஸ்தலர் நம்பிக்கை அற்றுப்போன தினங்களைக் குறித்து அவர்களிடம் விசாரியுங்கள்.

திகைத்துநிற்றல் நம்பிக்கையிழந்துவிடுவதைவிட மேல். விசுவாசம் நம்முடைய நம்பிக்கையை இழக்கும் நாட்களை உண்டாக்கவில்லை. அச்சமயங்களில் நம்மைக் கைதூக்குவதும் முற்றுபெறச் செய்வதுமே அதன் வேலையாம். நம்பிக்கையாய் பிடித்தால் மேற்கொள்ளலாம். தீவிர விசுவாசம் இல்லாவிட்டால் நம்பிக்கையிழக்க நேரிடும்.

தைரியமான விசுவாசத்திற்கு ஈடில்லா உதாரணமாக, அம்மூன்று எபிரேய வாலிபரும் இருக்கிறார்கள். நிலைமை மோசமானபோதும் அவர்கள் 'நாங்கள் ஆராதிக்கிற எங்கள் தேவன் எங்களைத் தப்பு விக்க வல்லவராயிருக்கிறார்; அவர் எரிகிற அக்கினிச் சூளைக்கும், இராஜாவாகிய உம்முடைய கைக்கும் நீங்கலாக்கி நம்மை விடுவிப்பார். விடுவிக்காமற்போனாலும் நாங்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனை செய்வதுமில்லை; நீர் நிறுத்திய சிலையைப் பணிந்துகொள்வதுமில்லை என்பது இராஜாவாகிய உமக்குத் தெரிந்திருக்கக்கடவது' (தானி. 3:17,18) என்று தைரியமாய்ப் பதிலுரைத்தார்கள். 'விடுவிக்காமற்போனாலும்' என்ற பாகம் என்னை அதிகமாய் கவருகிறது.

கெத்சேமனேயைக் குறித்துச் சில வார்த்தைகள் மாத்திரம் கூற இங்கு இடம் உண்டு. அதிலுள்ள 'ஆகிலும்', 'கூடுமானால் . . . ஆகிலும்' என்ற வார்த்தைகளைச் சிந்தனை செய்யுங்கள். நமது ஆண்டவரின் ஆத்துமாவைக் காரிருள் மூடிக்கொண்டது. இரத்த வேர்வை சிந்துவதற்கான வேதனையும், பாதாளத்திற்கு இறங்கு வதற்கான இருளுமே நம்புவதின் பலனாயிருந்தது. 'ஆகிலும்! ஆகிலும்! . . .'

இப்பொழுது பாட்டுப் புத்தகத்தையெடுத்து கஷ்டத்திலும் நம்பிக்கையைக் காட்டும் உனக்கு பிரியமான ஒரு பாட்டுப் பாடு (ஜாட்விக் ஐயர்).

தடைகளும் சோதனைகளும்,
சிறைச் சுவர்போல் சுற்றிலும் காணப்பட்டாலும்
என்னாலான கொஞ்சத்தைச் செய்வேன்
மிகுந்ததை இயேசுவிடம் விடுவேன்.
என்னைத் துக்கத்திலிருந்து விடுவிக்க,
ஒரு சந்தர்ப்பமும் மாறுதலும் காணப்படாவிட்டாலும்,
எனது நம்பிக்கை அத்தகைய செயலற்ற நிலைமையிலும் பலம் கொள்ளும்
அவருக்காய் அமர்ந்து காத்திரும்.

## மார்ச்சு 26

'நீ இருக்கிற இடத்திலிருந்து வடக்கேயும்—தெற்கேயும், கிழக்கேயும்—மேற்கேயும் நோக்கிப் பார். நீ பார்க்கிற இந்தப் பூமி முழுவதையும் நான் உனக்குக் கொடுப்பேன்' (ஆதி. 13:14,15).

பரிசுத்த ஆவியானவர் தாம் நிறைவேற்ற நோக்கம்கொள்ளாத எந்த உணர்ச்சியையும் உன்னில் உண்டாக்கமாட்டார். உன் விசுவாசம் எழும்பி, உயரப் பறந்து, காணும் பூமியை யெல்லாம் சொந்தமாக்கிக்கொள்ளட்டும்.

விசுவாசக் கண்களோடு நீ காண்பவை யாவும் உன்னுடையவை. நீ பார்க்கக்கூடிய அளவு எட்டிப் பார். ஏனென்ருல் அவை யாவும் உன்னுடையவையே. நீ கிறிஸ்தவனுயிருக்க என்னென்ன குணம் தேவையென்று விரும்புகிருயோ அவைகளும், நீ கர்த்தருக்காக என்னென்ன செய்ய வேண்டுமென்று ஆசைப்படுகிருயோ அவைகளும் விசுவாசத்தால் கைகூடி வரத்தக்கவைகளே. ஆகையால் நீ உன் வேத புத்தகத்தை உன் முன் திறந்து வைத்து, உன்னுடைய ஆத்துமா பரிசுத்த ஆவியின் வன்மைகளைப் பெறவும், நீ முழுமையாய் அவர் பிரசன்னத்தால் ஞானஸ்நானம் பெறவும் இன்னும் அவரண்டை நெருங்கி வா. நீ அவருடைய பூரணத்துவத்தை விளங்கிக்கொள்ளும்படி அவர் உன்னை அறிவுள்ளவனுக்கும்போது அதை உனக்காகவே வைத்திருக்கிருர் என்று நம்பு. கர்த்தருடைய வார்த்தையாகிய வாக்குத்தத்தங்கள் யாவும் அவர் உன்னில் எழுப்பும் எல்லா ஆசைகளும் கிறிஸ்துவைப் பின்தொடருகிறவனுக, நீ எப்படிப்பட்டவனுயிருக்கக்கூடும் என்று நினைக்கிருயோ, அதற்கேற்ற நற்குணங்களும் ஆகிய இவை யாவும் உன்னுடையவைகளே என்று ஏற்றுக்கொள். நீ பார்க்கும் பூமியெல்லாம் உனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும்.

அவருடைய கிருபையின் தற்சொரூபமான அனுபவம் உள்ளான காட்சியால் வருகிறது. பட்சிக்குக் கோடையின் வெயிலைத் தேடித் தென் திசை செல்லவேண்டும் என்ற உணர்ச்சியைக் கொடுப்பவர் அதை வஞ்சிக்கமாட்டார். அவைகளின் உள்ளத்தில் அந்த உணர்ச்சியை எவ்வளவு நிச்சயமாய் உண்டாகச் செய்தாரோ, அதே நிச்சயமாய் தென்றலையும், பசுமை உண்டாக்கும் வெயிலையும், அது அங்குச் சேரும்போது சந்திக்க வைத்திருக்கிருர்.

தெய்வீக நம்பிக்கையை நம் உள்ளத்தில் ஊற்றுகிறவர் அதை நிறைவேற்றத் தேடும்பொழுது நம்மை ஏமாற்றமாட்டார். 'தங்களிடம் அவர் சொன்னபடியே கண்டார்கள்' (லூ. 22:13).

## மார்ச்சு 27

'ஆதலால் இக்காலத்துப் பாடுகள் இனி நம்மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு, ஒப்பிடத்தக்கவைகள் அல்லவென்று எண்ணுகிறேன்' (ரோ. 8:18).

இங்கிலாந்தில் ஒரு கலியாணத்தில், ஒரு விசேஷித்த காரியம் நடந்தது. பத்து வயதாயிருக்கும்போது, ஒரு விபத்தால் கண்ணிழந்தும் உயர்தரக் கல்லூரியில் படித்துப் பட்டங்கள் வாங்கி, ஓர் உன்னத பதவியிலிருந்த பணக்கார வாலிப மாப்பிள்ளை, ஒரு அழகிய பெண்ணை மணந்தான். அவள் முகத்தை அவன் பார்த்ததில்லை. அவன் கலியாணத்திற்குச் சற்று முன்புதான் கைதேர்ந்த வைத்தியரிடம் சிசிச்சைப் பெற்றுக்கொண்டு வந்தான். அதன் பலன் திருமணத்தன்றே தெரியுமென்றிருந்தது.

அந்த நாள் வந்தது. விருந்தினராலும், வெகுமதிகளாலும் வீடு நிறைந்தது. நாட்டின் மந்திரிகளும், தளகர்த்தர்களும், பிஷப்களும், கற்றோரும், ஆண், பெண் பலரும் குழுமியிருந்தனர். மணமகன் மண உடை அணிந்து வந்திருந்தான். அவன் கண்கள் இன்னும் மூடிபோட்டு மூடப்பட்டிருந்தன. கண் வைத்தியரும் அங்கிருந்தார். பெண் தன் தலை நரைத்த தகப்பன் கையில் சாய்ந்துகொண்டு கோவிலுக்குள் நுழைந்தாள். அவள் மிகுந்த சந்தோஷ உணர்ச்சியால் பேசச் சக்தியற்றிருந்தாள். பிறர் பார்த்து வியந்த தன் பேரழகைக் காதலன் தடவி மாத்திரம் பார்த்திருந்தான். அன்றைய தினம் அத்திருவழகைத் தன் காதலன் தன் சொந்தக் கண்களால் காண்பானோ என்று அவள் உள்ளம் எண்ணி மகிழ்ந்தது. மங்கள வாத்திய இன்னிசை கோயிலெங்கும் நிரம்ப அவள் பீடத்தண்டை நெருங்குகையில், ஒரு விநோதமான காட்சியைக் கண்டாள்.

தகப்பன் அங்குத் தன் மகனோடு நின்றார். நிபுணரான கண் வைத்தியர் மாப்பிள்ளை முன் நின்று கண்கட்டுகளைக் கடைசி முறையாக அவிழ்த்துக்கொண்டிருந்தார். தான் விழித்திருக்கிறேனா என்ற நிச்சயமற்ற மனிதன்போல் தள்ளாடிக்கொண்டே மாப்பிள்ளை ஓர் அடி எடுத்து வைத்தான். கோவிலிலுள்ள ஒரு கண்ணாடி ஜன்னலிலிருந்து ஒரு ரோஜாநிற வெளிச்சம் அவன் முகத்தில் விழுந்தது. ஆனால் அவன் அதைக் கவனிக்கவில்லை.

அவன் எதையாவது பார்த்தானா? ஆம், அவன் தன்னைத் திடப்படுத்திக்கொண்டு, தன்னில் இதற்குமுன் காணப்படாத சந்தோஷத்தோடு, கம்பீரமாய்த் தன் மணமகளை நோக்கி நடந்தான். இருவரும் ஒருவர் கண்ணை ஒருவர் நோக்கி நின்றனர். மணமகன் ஒரே நிலையில் மணமகளின் அழகைப் பருகினான்.

'கடைசியில், கடைசியில்' என்று அவள் வியப்போடு கூறினாள். அவன் தலை வணங்கி அதே வார்த்தைகளைக் கூறினான். அந்தக்

காட்சி சந்தேகமின்றி, சந்தோஷத்தை எடுத்துக் காட்டும் ஓர் ஆனந்தக் காட்சியாகும். ஆனால் அது துன்பத்தையும், சோதனைகளையும் சகித்த ஒரு கிறிஸ்தவன், ஆண்டவரை முகமுகமாய்ப் பரலோகத்தில் தரிசிக்கும்போது உண்டாகக்கூடிய இன்பம் எத்தகையது என்று காட்டும் ஒரு சிறிய அடையாளமே.

பிரியமான, அன்பான இயேசுவே;
உமக்காகக் களைப்பை அனுபவிக்கிறோம்.
நீர் திரும்ப வரும் நாளை எதிர் நோக்கி,
விரும்பி, அலைந்து திரிகிறோம்.
நாங்கள் சொல்லுவதிலும், செய்வதிலும்;
உம்மையே தேடி அலைகிறோம்.
கடைசியாக ஒருசந்தோஷ தினத்தில்
நாம் காத்திருப்பது நீங்க நீர் வருவீர்.
அப்போது நாங்கள் உம்மைப் பார்த்து உமது குரலைக்கேட்போம்.

இந்த நம்பிக்கையின் இன்பமே எங்களை
உம்மைத் தேடும்படி செய்கிறது.

## மார்ச் 28

'சம்பவிப்பது என்னவென்றால், சர்வ பூமிக்கும் ஆண்டவராகிய கர்த்தரின் உடன்படிக்கைப் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களின் உள்ளங்கால்கள், யோர்தானின் தண்ணீரில்பட்ட மாத்திரத்தில், மேலேயிருந்து ஓடிவருகிற யோர்தானின் தண்ணீர் ஓடாமல் ஒரு குவியலாக நிற்கும் என்றான்' (யோசு. 3:13).

அவர்கள் தைரியமான லேவியரே! அவர்கள் கால்களில் தண்ணீர் படும்வரை தண்ணீர் பிளவுபடவில்லை. அவர்கள் உடன்படிக்கைப் பெட்டியை நதிக்குள் தூக்கிச் சென்றார்கள். இதனால் அவர்கள் செய்கை வியக்கத்தக்கதே. கர்த்தர் வேறொன்றும் வாக்குச் செய்யவில்லை. கர்த்தர் விடாப்பிடியான விசுவாசத்தையே பெருமைப்படுத்துகிறார். வாக்குத்தத்தமும் அது ஒன்றையே எதிர்ப்பார்க்கிறது. சுற்றிலும் பார்த்து நின்ற ஜனங்கள், அவர்கள் நடந்துவந்து செல்வதைப் பார்த்து, 'நான் அப்படிப்பட்ட மோசமான காரியத்திற்குள் தலையிடமாட்டேன்,' 'அந்த உடன்படிக்கைப்பெட்டி அடித்துக்கொண்டு போகப்படும்' என்று பலரும் பலவிதமாய்ச் சொல்லியிருப்பார்கள். அப்படியல்ல, 'அந்த ஆசாரியர்கள் உலர்ந்த தரையில் உறுதியாய் நின்றார்கள்.' தேவனுடைய திட்டங்கள் நிறைவேற நமது விசுவாசம் தேவை என்னும் சத்தியத்தை நாம் கவனியாதிருக்கக்கூடாது. 'தேவனுக்கு உதவிசெய்ய முன்னேக்கி வாருங்கள்.'

உடன்படிக்கைப்பெட்டியைத் தோளில் சுமந்து செல்ல வேளைகள் உண்டு. உடன்படிக்கைப்பெட்டி தானும் தானே நகரவில்லை. அதைச் சுமந்து செல்ல வேண்டியிருந்தது. கர்த்தர் சிற்பியாயிருக்கும்போது, மனிதரே கொல்லரும், கூலியாட்களும் ஆகின்றனர். விசுவாசம் கர்த்தருக்குக் கைகொடுக்கிறது. அது சிங்கத்தின் வாயை அடைத்து, அக்கினியின் வெப்பத்தைத் தணிக்கிறது. அது தேவனைப் பெருமைப்படுத்துகிறது. தேவன் அதைப் பெருமைப்படுத்துகிறார். தேவன் தமக்குச் சரியென்று தோன்றும் வேளையில் தம்முடைய வாக்குத்தத்தத்தை நிறைவேற்றத் தகுந்த விசுவாசம் நம்மில் உண்டானால் எத்தனை நலம். லேவியரைப் பின்பற்றி, நம்முடைய பாரச்சுமையைத் தோள்மேல் தூக்குவோமாக. கர்த்தருடைய சவப்பெட்டியைச் சுமக்கிறவர்களாக நாம் காணப்படவேண்டாம். இது ஜீவனுள்ள தேவனுடைய உடன்படிக்கைப்பெட்டி. ஆகையால் வெள்ளத்தை நோக்கிச் செல்கையில் பாடுங்கள்.

—தாமஸ் காம்ப்நஸ்

அப்போஸ்தலரால் ஸ்தாபிக்கப்பட்ட சபைகளுக்குப் பரிசுத்த ஆவி அருளப்பட்டபோது, அவர்கள் ஆவியில் தைரியங்கொண்டது கவனிக்கத் தக்க காரியம். தேவனுக்காகப் பெரிய காரியங்களைச் செய்ய முயன்றும், தேவனிடத்திலிருந்து பெரிய காரியங்களை எதிர் பார்த்தும் இருப்பவர்களிடம் இருக்கவேண்டிய முக்கிய தன்மை பரிசுத்த துணிவே. இயற்கைக்கு மேலான ஒருவராகிய இறைவனோடு நாம் பழகி மனிதரால் கூடாததை, அவரிடமிருந்து பெற்றுக் கொள்ளும்போது, கொஞ்சம் அல்ல்; அதிகம் பெற்றுக்கொள்வதே எளிது. பயந்து, துணிவின்றிக் கரையில் நிற்பதைவிட துணிவான நம்பிக்கையில் நிற்பதே இலகுவாயிருக்கும்.

அதுபோலவே, விசுவாச ஜீவியத்தில் கடலோடிகளைப்போல், படகுகளை ஆழத்தில் தள்ளிக்கொண்டுபோய்க் 'கர்த்தரால் எல்லாம் ஆகும், அவரை நம்புகிறவர்களுக்கு எல்லாம் ஆகும்' என்பதைக் கண்டுபிடிப்போமாக.

இன்றையத்தினத்தில் தேவனுக்காக பெரிய காரியங்களைச் சாதிக்க முயலுவோமாக. அவருடைய விசுவாசத்தை எடுத்து அவருடைய பலம் எல்லாவற்றையும் சாதிக்கும் என்று நம்புவோமாக.

## மார்ச்சு 29

'காட்டுப் புஷ்பங்கள் எப்படி வளருகின்றன என்று கவனித்துப் பாருங்கள்' (மத். 6:28).

ஆதிகாலத்திலுள்ள ஒரு சந்நியாசி, தனக்கு எண்ணெய் வேண்டுமென்று ஒரு ஒலிவ மரக்கன்றை நட்டார். 'கர்த்தாவே, இதன்

மெல்லிய வேர்கள் குடித்துப் பெரிதாக இதற்கு மழை தேவை. சிறு தூறலை அனுப்பும்' என்று ஜெபித்தார். தேவன் சிறு மழையைப் பெய்யச் செய்தார். 'ஆண்டவரே, என் மரத்திற்கு சூரிய வெப்பம் வேண்டும். சூரியனை அனுப்பும்படி உம்மை வேண்டுகிறேன்' என்றார். மழையால் நனைந்த மேகங்களினூடே சூரியன் பிரகாசித்தது. 'இப் பொழுது அதன் பாகங்கள் உறுதிப்படக் 'கடும் பனி வேண்டும்' என்றார். இதோ, அந்தச் சின்ன மரத்தில் பனித்துளிகள் மின்னின. ஆனால் அந்தச் செடி சாயங்காலத்தில் வாடிப்போயிற்று.

அந்தச் சந்நியாசி தன்னைப்போலொத்த மற்றொரு சந்நியாசியிடம் சென்று தன் கதையைச் சொன்னார். அந்தச் சந்நியாசி, 'நானும் ஒரு சின்ன மரம் நட்டேன். இதோ, பாரும் அது செழித்து ஓங்கு வதை. நான் என் மரத்தை தேவனிடம் நம்பிக்கையாய் விட்டு வைத்தேன். அதை உண்டாக்கினவர் அதற்கு இன்னது தேவை என்பதை என்னைவிட நன்றாய் அறிவார். நான் ஒரு நிபந்தனையும் வைக்கவில்லை. வழிவகைகளை நான் வரையறுக்கவில்லை. 'தேவனே! அதற்குப் புயலோ, வெய்யிலோ, காற்றோ, மழையோ, எது தேவையோ அதை அனுப்பும். சிருஷ்டி நீர் அதன் தேவைகளை அறிவீர்' என்று ஜெபித்தேன் என்றார்.

அவரிடம் ஒப்புவித்து விடு
காட்டு மலர்களும் அவ்விதமே செய்கின்றன
அவைகள் வளர்கின்றன.
மழையிலும் வளர்கின்றன;
பனியிலும் வளர்கின்றன
ஆம் அவை வளர்கின்றன.
இரவின் இருட்டில் மறைந்து வளர்கின்றன
ஒளியால் வெளிப்பட்டு வெயிலில் வளர்கின்றன
இன்னும் அவை வளர்கின்றன
ஆம் அவரிடமே விட்டுவிடு
காட்டு மலரைவிட அவரிதயத்திற்கு
அது அதிக நேசமாம் என்பதை அறிவாய்
பனியின் கீழ்ப் பூக்கும்
இனிய மலரினும் நேசிக்கின்றார்
உனக்குத் தேவையாம் யாவையும்
தினம் கேட்டு அவரிடம் ஒப்புவி
நீ அவரின் பாதுகாப்பிலுள்ளாய்
உன் தேவையை அவர் அறிவார்.

## மார்ச்சு 30

'இதோ, நெருப்பை கொளுத்தி, அக்கினிப் பொரிகளால் சூழப்பட்டிருக்கிற நீங்கள் அனைவரும், உங்கள் அக்கினித் தீபத்திலும், நீங்கள் மூட்டின அக்கினி ஜுவாலையிலும் நடவுங்கள்; வேதனையில் கிடப்பீர்கள்; என் கரத்தினால் இது உங்களுக்கு உண்டாகும்' (ஏசா. 50:11).

தாங்கள் இருட்டில் நடந்துகொண்டிருந்து, தாங்களே வெளிச் சத்திற்கு வரப் பிரயாசப்படுகிறவர்களுக்கு இது ஒரு எச்சரிக்கை யாகிறது. அவர்கள் நெருப்பைக் கொளுத்தி, அக்கினிப் பொரியால் சூழப்பட்டிருக்கிறவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள். அதன் அர்த்தம் யாது?

நாம் இருளில் இருக்கும்போது, தேவனை நம்பி அவரைச் சார்ந் திராமல் நாம் ஒரு வழியைக் கண்டுபிடிப்பதானது, அவர் நம்மைக் கைதூக்கிவிட விடாமல் நாமே நம்மைக் கைதூக்கப் பிரயாசப்படுவ தாகும். இயற்கையின் ஞானத்தைத் தேடுகிறோம்; நம் சிநேகிதரின் ஆலோசனையைக் கேட்கிறோம். நமது அறிவினால் ஒரு முடிவுக்குவர எத்தனிக்கிறோம். கர்த்தரால் வராத ஒரு விடுதலையை ஏற்றுக் கொள்ளச் சோதிக்கப்படுகிறோம்.

இவைகள் யாவும் நாம் கொளுத்திக்கொள்ளும் நெருப்பேயாகும். நம்மைச் சொரி மணலுக்குள் இழுத்துச் செல்லும் காட்டுத் தீப மாகும். கர்த்தர் நம்மை இந்த அக்கினி ஜுவாலையில் நடக்க விட்டு விடுவார். ஆனால் அதன் முடிவு துக்கமே.

என் அருமைப் பிள்ளையே! இருட்டான ஒரு ஸ்தலத்தைவிட்டு, கர்த்தருடைய வேளையிலும் கர்த்தருடைய வழியிலுமேயன்றி வெளி யேறப் பிரயத்தனம் செய்யாதே. உனக்குத் தேவையான படிப்பினை களை நீ கற்றுக்கொள்ளவே, வேதனைகளின் காலம் ஏற்பட்டிருக் கிறது.

தகுந்த காலத்திற்கு முற்பட்ட விடுதலை, உன் ஜீவியத்தில் தேவ னின் கிருபையுள்ள கிரியையை நாடாமல் தடுக்கிறது. நிலைமை பூராவும் கர்த்தருக்கு ஒப்புவி. அவருடைய பிரசன்னம் இருக்கும் காலம்வரை இருளில் நடக்க மனதாயிரு. தனிமையாய் ஒளியில் நடப்பதைவிட, கர்த்தரோடு இருளில் நடப்பது நலம் என்பதை நினைத்துக்கொள்.

தேவனுடைய திட்டத்திலும், அவருடைய சித்தத்திலும் நீ தலையிடுவதை விட்டுவிடு. அவருடையதில் ஏதாவதொன்றை நீ தொட்டால் அவருடைய கிரியையின் அழகை நீ குலைக்கிறாய். கடிகாரத்தின் முட்களை நீ உனக்கு ஏற்றவாறு திருப்பிக்கொள்ள லாம். ஆனால் காலத்தை மாற்ற உனக்குக் கூடாதே. கர்த்தரின் சித்தம் வெளிப்படுவதை நீ துரிதப்படுத்தலாம். ஆனால் அதனால் நீ கர்த்தரின் வேலைக்கு உதவியாயல்ல, தடையாகவே இருப்பாய். ஒரு

ரோஜா மொக்கை நீ மலரச் செய்யலாம். ஆனால் அதன் அழகை நீ குறைக்கிறாய். எல்லாவற்றையும் நீ அவரிடம் விட்டுவிடு. கையைக் கீழே போடு. உம் சித்தமே என்று சொல்.

—ஸ்டீபன் மெரிட்

**அவர் வழி**

1 நான் தங்க விரும்பியபோது கர்த்தர் போகச் சொன்னார்
(காட்டில் இளங்குளிராயிருந்தது)
அதன் காரணத்தை அப்போது நான் அறியவில்லை. ஆனால் நான்
போனபின்பு நான் முன்பு நின்ற பாதையின் குறுக்கே,
ஒரு பாறை உருண்டு விழுந்தது.

2 நான் போக விரும்பியபோது அவர் தங்கச் சொன்னார்
'உமது சித்தம் ஆகுக' என்றேன்.
ஒரு நாள் காலையில்
நான் போயிருக்க வேண்டிய பாதையில்
தலை நசுங்கிக் கிடந்த நாகமொன்றைக் கண்டார்கள்.

3 என் முன்னால் உள்ள பாதையை நான் காணா விடினும்,
நான் காரணம் கேளேன்.
அவர் வழியில் நான் செல்வேன்
எனக்குத் தெரியாவிடினும் இயேசு அறிவார்
பத்திரமான வழியை எனக்கென்று தெரிந்தெடுப்பார்.

## மார்ச்சு 31

'எதிர் காற்றாயிருந்தது' (மத். 14:24). (சித்திரை மாதத்தில் சீறிடும் பெருங் காற்று உண்டு).

மார்ச்சு மாதத்தில் காற்று அகோரமாயிருக்கும். அவைகள் நம் ஜீவியத்தில் மிகக் குழப்பமான காலத்தை ஒத்தவையாயில்லையா? இப்படிப்பட்ட காலங்கள் எனக்கு அறிமுகமானதால் நான் சந்தோஷிக்கவேண்டும். எப்போதும் மத்தியானம் போலிருக்கும் தாமரை நாட்டிலும், காற்று ஒருபோதும் பலமாக வீசாத 'அவிலியன்' பள்ளத்தாக்கின் புல் மைதானத்திலும் தங்குவதைப் பார்க்கிலும் மழைபெய்து வெள்ளம் உண்டானது உசிதம். சோதனையாகிய புயல்கள் கடுமையாகத் தோன்றுகின்றன. ஆனால் அவை உங்களை ஊக்கமாய் ஜெபிக்க ஏவுகிறதில்லையா? அவை உங்கள் குணத்தைச் சீர்ப்படுத்திச் செல்வதில்லையா?

அருமையானவர்களே! உற்றாரை இழக்கும் புயல் கடூரமானதே. ஆனால் பிதா அவற்றின் மூலமாய் நம்மைத் தம்மண்டையில் வரச்

செய்கிறார். தமது பிரசன்னத்தின் மறைவில் மெதுவாக நமது இதயத்தில் பதியும்படியும் பேசுகிறார். எதிர்காற்றினிடையே நமது கப்பல் அலைகளால் அலைக்கழிக்கப்படும்போது மாத்திரமே நாம் காணக்கூடிய ஒரு விசேஷித்த மகிமை நம் இயேசுவிடம் உண்டு. இயேசுகிறிஸ்து புயல் வராதபடி நம்மைக் காப்பவரல்ல; ஆனால் புயலில் நமக்குப் புகலிடம் ஆவார். பிரயாணம் இலகுவாயிருக்கும் என்பது அவர் வாக்கல்ல. நாம் பத்திரமாய்க் கரை சேர்வோம் என்பதே அவர் வாக்கு.

பரலோகப் புயலுக்கு நேராய் உன் பாயை விரி.
அப்போது எந்தக் காற்று மேற்கொண்டாலும் பரவாயில்லை
ஒரு பாறையும் உனக்குச் சேதஞ் செய்யாது காற்றின்மையால்
தாமதிக்க நேரிடாது.
மூடுபனி, புயலும் தடை பண்ணுது,
நீ தொலை தூரத்தில் சுற்றி அலைந்தாலும்
உப்பு நிறை கடல் பொங்கினாலும்,
எல்லாக் காற்றும் உன்னைத் துரிதமாய் வீடு சேர்க்கும்.

—ஆனி ஜான்சன் பிளின்ட்

## ஏப்ரல் 1

*'அவர் என்னைக் கொன்றுபோட்டாலும் அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன்' (யோபு 13:15). 'ஏனென்றால் நான் விசுவாசிக்கிறவர் இன்னார் என்று அறிவேன்' (2 தீமோ. 1:12).*

கடலிலுள்ள என் கப்பல்கள் யாவும் பாய்மரம் உடைந்து, அழிந்து திரும்பினும், நான் சந்தேகியேன். என்னை ஒருபோதும் கைவிடாது, தீமையிலிருந்து எனக்கு நன்மை வரச்செய்யும் கரத்தை நான் நம்புவேன். பாய்மரம் உடைந்ததற்காக நான் அழுதாலும், என் நம்பிக்கை சிதறிக் கிடக்கும் வேளையிலும், 'உம்மை நம்புவேன்' என்பேன்.

1 பரலோகிலிருந்து என் ஜெபம்
விடையின்றித் திரும்பினும் நான் சந்தேகியேன்.
எல்லாம் அறிந்த அன்பே நான் விரும்பும்
காரியங்களைக் கொடாதிருக்கிறது என்று நம்புவேன்.
சிலவேளை துக்கப்படாதிருக்க முடியாவிட்டாலும்,
என் உறுதியான நம்பிக்கையின் தூயதீபம்
மங்காது எரிந்து கொண்டிருக்கும்.

2 துக்கங்கள் மழைபோல் பெய்தாலும் கூட்டினருகில்,
தேனீக்கள்போல் கஷ்டம் என்னைச் சூழ்ந்தாலும்
சந்தேகியேன்
நான் சேர விரும்பும் உயரத்திற்கு—கஷ்டம்

வேதனையின்றிச் சேரமுடியாது என்று நம்புகிறேன்
என் சிலுவையின் கீழ் நான் வருந்தித் திகைத்தாலும்
என் பெரும் கஷ்டங்களிலும்—மிகுந்த
நன்மை உண்டென்று நான் காண்பேன்.

3 விசுவாச நங்கூரம் பாய்ச்சி இருக்கையில்—என்
உள்ளக் கப்பல் எந்தக் காற்றிற்கும் அசையாது
அறியாத மரணக் கடலையும் கடக்க,
நடுங்காத பலத்த தைரியமுண்டு.
உடலிலிருந்து உயிர்பிரியினும் (என் கடைசி
மூச்சிலும்) கவனிக்கும் உலகம் கேட்கத்தக்கதாய்,
'நான் சந்தேகிக்கவில்லை' என்பேன்..

ஒரு வயது முதிர்ந்த கடலோடி, 'கடும் புயல் வீசுகையில் நாம் ஒரே ஒரு காரியம்தான் செய்யவேண்டும். அதாவது கப்பலை ஒரு நிலையில் நிறுத்தி அதை அங்கேயே நிற்கச் செய்யவேண்டும்' என்று சொன்னான்.

கிறிஸ்தவனே! இதுவே நீ செய்யவேண்டிய காரியம். சில வேளைகளில் பவுலைப்போல் நீ சூரியனையாவது, நட்சத்திரங்களையாவது பார்க்கக்கூடாதிருக்கலாம். பெரிய புயல் உன் மீது வீசலாம். அப்பொழுது நீ ஒரே காரியம் மாத்திரம் செய்யக்கூடும். ஒரே ஒரு வழிதான் உண்டு.

அறிவு உனக்கு உதவாது. கடந்த காலத்து அனுபவங்களும் அதற்குப் பயன்படா. ஜெபத்திலும்கூட நீ ஆறுதல் காணமாட்டாய். ஒரே ஒரு வழி மாத்திரம் உண்டு. உன் ஆத்துமாவை ஒரு நிலைக்குக் கொண்டுவந்து அந்நிலையிலேயே அதை இருக்கச் செய்யவேண்டும்.

நீ தேவனில் நிலைத்திருக்கவேண்டும். எது வந்தாலும் வரட்டும். காற்றோ, அலைகளோ, முறுக்கும் கடல்களோ, இடியோ, மின்னலோ, உயர்ந்த பாறைகளோ, மோசம் எதுவானாலும் சரி. பாய்மரத்தில் உன்னைக் கட்டிக்கொண்டு தேவனின் உண்மை, உடன்படிக்கை, கிறிஸ்துவுக்குள் உள்ள மாறாத அன்பு இவைகளின் மேலுள்ள நம்பிக்கையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்.

## ஏப்ரல் 2

'அவர்கள் திரும்பிப்பார்த்தார்கள்...அப்பொழுது கர்த்தருடைய மகிமை மேகத்திலே காணப்பட்டது' (யாத். 16:10).

மேகத்தில் காணப்படும் வெள்ளிபோன்ற பிரகாசமான ஓரத்தைப் பார்க்கும் வழக்கத்தை உண்டுபண்ணிக்கொள். நடுவிலிருக்கும் கார் மேகத்தைவிட அந்த ஒளியையே பார்த்துக்கொண்டிரு.

எவ்வளவாக நெருக்கப்பட்டாலும், ஒடுக்கப்பட்டாலும் மனம் தளர்ந்துபோக இடம் கொடாதே. மனம் தளர்ந்தவன் செயலற்றுப் போவான். சத்துருவின் அம்புகளை எதிர்க்க அவனுலாகாது. இந்த நிலைமையில் மற்றவர்களுக்காக ஜெபிக்கவும் முடியாது.

இந்தச் சத்துரு உன்னை நெருங்குவதாகக் காணும் ஒவ்வொரு அடையாளம் தோன்றும்போது விரியன்பாம்பைக் கண்டு விலகி ஓடுவதுபோல் ஓடு. முற்றிலும் தோல்வியுற்று மண்ணைக் கவ்வ நீ விரும்பினாலன்றி அதற்கு முகம் கொடாமலிருக்கத் தாமதியாதே.

கர்த்தரின் ஒவ்வொரு வாக்குத்தத்தத்தையும் குறித்து, 'இந்த வாக்கு எனக்கே சொந்தம்' என்று சத்தமாய்ச் சொல். பின்னும் உனக்குச் சந்தேகமும் மனத்தளர்ச்சியும் உண்டானால் தேவனுக்கு முன்பாக உன் இருதயத்தை ஊற்றி, உன்னை அத்தனையாய் இரக்கமின்றி உபாதிக்கும் எதிரியை அதட்டும்படி அவரை வேண்டிக்கொள்.

அவநம்பிக்கை, மனத்தளர்ச்சி என்பவற்றின் அறிகுறிகளிலிருந்து மனமார நீ முகத்தைத் திருப்பிக்கொண்ட அந்த நிமிடமே, பரிசுத்த ஆவியானவர் உன் விசுவாசத்தை உயிர்ப்பித்து, தெய்வீக சத்துவத்தை உனக்கு அளிப்பார்.

முதலில் நீ அதை உணராதிருக்கலாம். பின்னும் நீ உன்னைச் சூழ்ந்துவரும் சந்தேகம், மனத்தாங்கல் இவைகளைத் தீர்மானமாய் விட்டு விலகினால் இருள் உன்னைவிட்டுப் பின்வாங்குவதை உணர்வாய்.

நாம் ஒவ்வொரு முறையும், இருட்டின் சேனைகளுக்கு முகம் கொடாமல், கடவுள் பக்கம் திரும்பி, பின் நிற்கும் திடமான சத்துவத்தைக் காணக்கூடுமானால், தந்திரமான சத்துருவாகிய மனக்கலக்கம், மனச்சோர்வு, மனத்தளர்ச்சி இவைகளைக் குறித்துச் சிறிதளவும் கவனிக்கமாட்டோம்.

இயேசுகிறிஸ்துவின் பேரால் அவர்மேல் வைத்த நம்பிக்கையால் தேவனுக்குத் தன்னை ஒப்புவித்து, தனக்குத் துணைக்கும், உதவிக்கும் அவரையே நம்புகிற எந்தப் பலவீன விசுவாசிக்கும் கர்த்தருடைய ஆச்சரியமான கிருபைகள் கிடைக்கும்.

ஒரு காற்றுக் காலத்தில், புல்வெளியிலுள்ள ஒரு கழுகு, துப்பாக்கியால் சுடப்பட்டுக் காயமடைந்திருப்பதைக் கண்டேன். அதனுடைய கண் ஒரு ஒளிவட்டம்போல் இன்னும் பிரகாசமாயிருந்தது. பின்பு அது மெதுவாய் தன் தலையைத் திருப்பி, வானத்தை நோக்கி, ஏதோ தேடும் பாவனையாய்ப் பார்த்தது. அது தன்னுடைய பலமான இறக்கைகளால் அங்கெல்லாம் பறந்ததுண்டு. அழகிய வானமே அதனுடைய மனதுக்குகந்த வீடு. அது கழுகின் இராச்சியம். அங்கே தன்னுடைய உயர்ந்த பலத்தை அது அநேகமாயிரந் தடவை சோதித்துக் களித்திருக்கும். அந்த உயரங்களில், அது

மின்னல்களோடு விளையாடி இருக்கும். காற்ருேடும் தன் வேகத்தை ஒப்புநோக்கிப் போட்டியிட்டிருக்கும். அப்படிப்பட்ட தன் வீடிருக்கும் இடத்தைவிட்டு, அதிகத் தூரத்தில் மரண காயமடைந்து கிடந்தது. ஏனென்ருல் தன் ஜீவியத்தில், ஒரே ஒரு முறை மறந்து, தாழ்வாகப் பறந்தது. நம் ஆத்துமாவும் அந்தக் கழுகுபோன்றது. இவ்வுலகம் அதன் வீடல்ல. அது வானை நோக்குவதை விட்டுவிடக்கூடாது. கிறிஸ்துவை விடக்கூடாது. நாம் தைரியமாயிருக்கக்கூடா விட்டால், போர்க்களத்தை விட்டு விலகுவதே மேல். ஓய்வெடுக்க இது காலமில்லை. என் ஆத்துமாவே மேல் நோக்கும் பார்வையை விட்டுவிடாதே.

மேலே நோக்கியே பார்.
நீ மேல் நோக்கிப் பார்க்குங்கால்,
உன் பாதத்தைச் சுற்றிக் குமுறும் அலைகளை
ஏகோவா பதியச் செய்திடுவார்.
மேலேயே நோக்கிப்பார்.
நீ மேல்நோக்கிப் பார்க்குங்கால்,

உன் உள்ளத்தை இருள் மூடுவதுபோல் தோன்றும். ஆயினும் ஆத்துமாவைப் பரம ஒளி நிரப்பும்.

மேலேயே நோக்கிக் கொண்டிரு.
நீ போரில் தவித்து ஓய்கையில்,
நீ மேலே நோக்கும்போது,
உன் தலைவர் ஜெயிக்கும் வன்மையை ஈவார்.

நாம் மேற்றிசையை நோக்கில், உதய சூரியனைக் காணமாட்டோம்.

—ஜப்பானிய பழமொழி

## ஏப்ரல் 3

'நெருப்பில் கர்த்தரை மகிமைப்படுத்துங்கள்' (ஏசா. 24:15).

'இல்' என்ற வார்த்தையை கவனியுங்கள். நமக்குத் துன்பத்தை யளிக்கும் சோதனையில் அவரை நாம் மகிமைப்படுத்தவேண்டும். தேவன் தமது பக்தர்களில் சிலரைச் சோதனையாகிய நெருப்பின் வெம்மையை உணரவிடவில்லை; என்ருலும் சாதாரணமாக நெருப்பு தகிக்கத்தான் செய்யும்.

இந்த இடத்தில்தான் அவருடைய சற்குணம், அன்பு என்பதில் நாம் வைக்கிற பூரண விசுவாசத்தினுல் அவரை மகிமைப்படுத்த வேண்டும். அந்த அன்பே இச்சோதனை நமக்கு வர அனுமதித்தது.

இந்த அக்கினிச் சோதனையால் அன்றி வரக்கூடாத, அதிக துதி இதனுல் வரும் என்றும் நாம் நம்பவேண்டும்.

பெரிய விசுவாசத்தினாலன்றி, இந்த அக்கினியிலும், நாம் செல்ல இயலாது. அற்ப விசுவாசம் நாம் தவற ஏதுவாகும். அக்கினி ஜுவாலையில் நாம் வெற்றிபெறவேண்டும்.

ஒரு மனிதன் துன்ப காலத்தில் காட்டும் பக்தியே உள்ளான பக்தி. எரியும் அக்கினி ஜுவாலைக்குள் போடப்பட்டவர்கள், கட்டவிழ்க்கப் பட்டதைத் தவிர்த்து, மற்றெல்லா விதத்திலும் உள்ளே போடப் பட்டபடியே வெளியே வந்தார்கள்.

அநேகந் தடவைகளில், தேவன் அவர்களை அக்கினியாகிய சோதனை யினின்று வெளியேற்றுகிறார். அவர்கள் உடல் சேதமின்றியிருந்தது. அவர்கள் தோல் கொப்பளிக்கவில்லை. அவர்கள் தலைமயிர் கருக வில்லை. நெருப்பின் வாசனைதானும் அவர்கள்மேல் வீசவில்லை. கிறிஸ்தவர்கள் சோதனையாகிய அக்கினியிலிருந்து இவ்விதமாய்க் கட்டுகளிலிருந்து விடுதலை பெற்று, ஜுவாலையால் தொடப்படாமல் வெளியேறவேண்டும். 'அவைகளின்மேல் சிலுவையிலே வெற்றி சிறந்தார்' (கொலொ. 2:15).

இதுவே உண்மையான வெற்றி. வியாதியில், வியாதியின்மேல் வெற்றி கொள்ளவேண்டும். செத்துப் போவதாயிருந்தாலும் சாவின் மேல் வெற்றியடையவேண்டும். எதிர்மாறான சந்தர்ப்பங்களில், அவற்றின் மேலும் வெற்றி அடையலாம். போரில் நம்மை ஜெய வீரராக எழும்பச் செய்யும் வன்மை ஒன்றுண்டு என்ற என் வார்த்தை களை நம்புங்கள். நாம் ஏறவேண்டிய உன்னதமான இடங்கள் உண்டு. அங்கிருந்து நாம் வந்த பாதையைக் கீழ் நோக்கிப்பார்த்து, பரலோ கத்தின் இக்கரையிலேயே வெற்றிக் கீதம் பாடுவோம்.

நாம் தரித்திரராயிருக்கையில், மற்றவர்கள் நம்மை ஐசுவரிய வான்கள் என்று மதிக்கச் செய்யவும், நாம் தரித்திரராயிருக்க, நம் தரித்திரத்தில் அநேகரை ஐசுவரியவான்களாக்கவும் கூடும். அதிலே நம்முடைய வெற்றி உண்டு. கிறிஸ்துவின் வெற்றி, அவர் தாழ்த்தப் பட்டதில் இருந்தது. மற்றவர்கள் பார்வையில் இழிவாய்த் தோன்றுவதே நமக்கு வெற்றியாயிருக்கலாம்.

—மார்கரெட் போட்டமி

அநேக வருத்தங்களால் பாரமடைந்திருக்கும் ஒரு பெண் அல்லது ஆண் நிம்மதியான இருதயம் உடையவராய் இருக்கக் கண்டால், அந்தக் காட்சி நம் மனதைக் கவருகிறதல்லவா? வெகுவாய்ச் சோதிக்கப்பட்டு, ஜெயவீரனாக விளங்கும் ஒருவனைக் காணும்போது அவனுடைய தீரம் நம்மை உயிர்ப்பிக்கிறதல்லவா? யாத்ரீகன் ஒருவன் உடல் களைப்படைந்தவனாயிருந்தும், நீங்காப் பொறுமையின் அழகைப் பெற்றவனாயிருந்தால், அது நமக்கு ஊக்கம் அளிக்கிற தல்லவா? அவருடைய கிருபையின் வரப்பிரசாதத்திற்கு இவை யாவும் எத்தனை அருமையான சாட்சியங்கள்!

உலகில் உனக்கு ஆதாரமுள்ள யாவற்றையும் நீ இழந்தாலும், வாழ்க்கை முழுவதும் கொந்தளிக்கும் கடல்போல் தோன்றினாலும், நீ பிறர் ஆச்சரியப்படும்படி கர்த்தரினால் பாதுக்காக்கப்படுகிறாயா? திருப்தியோடும் அமைதியோடும் இருக்கிறாயா?

## ஏப்ரல் 4

'அப்பொழுது எலிசா விண்ணப்பம்பண்ணி: கர்த்தாவே, இவன் பார்க்கும்படி இவன் கண்களைத் திறந்தருளும் என்றான்' (2 இரா. 6:17).

'தேவனே, நாங்கள் பார்க்கத்தக்கதாய் எங்கள் கண்களை திறந் தருளும்.' இதுவே, நாம் நமக்காகவும், பிறருக்காகவும் செய்ய வேண்டிய ஜெபம். ஏனென்றால் நம்மைச் சுற்றியுள்ள உலகம் முழுவதும், தீர்க்கதரிசியைச் சுற்றியிருப்பதுபோல, நம்மை மகிமை யுள்ள வெற்றியடையும் இடத்திற்குக் கொண்டுபோகக் காத்துக் கொண்டிருக்கிற தேவனுடைய குதிரைகளாலும் இரதங்களாலும் நிறைந்திருக்கிறது. இவ்விதமாய்க் காண, நம் கண்கள் திறக்கப் படும்பொழுது, நம் ஜீவியத்தில் சிறிதும் பெரிதுமான எல்லா விஷயங் களிலும் துக்கம், அல்லது சந்தோஷமான காரியங்களிலும் நம் ஆத்துமத்துக்கான 'இரதங்களைக் காண்போம்.'

நமக்கு ஏற்படும் ஒவ்வொன்றையும் நாம் இரதமாகப் பாவிக்கும் பொழுது அவைகள் இரதங்களாகின்றன. அப்படியே நமக்கு உண்டாகும் சிறு சோதனைகளையும் இக்கட்டுகளையும் நம்மை நசுக்கிப் போடும் பெருந்தேர் என்று எண்ணினால் அவைகள் அப்படியே ஆகும்.

இவ்விரண்டில் நம்முடையது ஏதாயிருக்கவேண்டும் என்பது நாமே தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம். நேரிடும் சம்பவங்கள் எப்படிப் பட்டவை என்பதின்படியல்ல, நாம் அவைகளை எப்படி ஏற்றுக் கொள்ளுகிறோமோ அதன்படியே இருக்கும். நாம் அவைகளின் அடியில் கிடந்து, அவைகளை நம்மேல் ஏறிச்சென்று, நசுக்க விட்டு விட்டால், அவைகள் நம்மை நசுக்கும் தேர்களாகும். ஆனால் அவற்றுள் ஏறி, வெற்றி இரதங்கள்போல் நம்மைச் சுமந்து செல்ல விட்டால் அவைகள் கடவுளின் இரதங்களாகும்.

நசுங்கின ஆத்துமாவைக்கொண்டு தேவன் அதிகம் செய்ய இயலாது. ஆகவே சத்துருவானவன், தேவனுடைய பிள்ளைகளைத் தங்கள் நிலைமையைக் குறித்தும், சபையின் நிலைமையைக் குறித்தும் மனந்தளர்ந்து நம்பிக்கை இழக்கச் செய்கிறான். மனந்தளர்ந்த சேனை, நிச்சயமாய்த் தோல்வி யடைவோம் என்றே யுத்தக்களம் செல்கிறது. சிறிது காலத்திற்கு முன் ஒரு மிஷனெரி அம்மையார் ஆவி சோர்ந்துபோனதால், உடல் பலம் குன்றி, வியாதிப்பட்டு, சுயதேசம் திரும்பினார்கள் என்று கேள்வியுற்றேன். நம் ஆவிக்கு

விரோதமாய்ச் சத்துரு செய்யும் தாக்குதல்களையும், அவைகளை நாம் வெற்றிகரமாக எதிர்க்கும் முறைகளையும் நாம் விளங்கிக் கொள்வது அவசியமாக இருக்கிறது. நம்முடைய நிலையைவிட்டு சத்துரு நம்மை அசைக்கக் கூடுமானால் (தானி. 7:25) கடைசியாக நாம் பலவீனத்தால் வெற்றி என்ற கோஷத்தை விடும் வரை, முற்றுகையிட்டுச் சளைக்கச் செய்கிறான்.

—ஹன்னு ஒய்டால் ஸ்மித்

## ஏப்ரல் 5

'உள்ளே போய், உன் பிள்ளைகளுடன் உள்ளே நின்று கதவைப் பூட்டு' (2 இரா. 4:4).

அவர்கள் தேவனோடு தனித்திருக்க வேண்டியதாயிருந்தது. ஏனென்றால் அவர்கள் செய்யவேண்டிய காரியம், இயற்கை விதி, மானுட ஆட்சிமுறை, சபை, கர்த்தருடைய தீர்க்கதரிசனம் இவற்றினோடு சம்பந்தப்பட்டதல்ல. ஆகையால் அவர்கள் எல்லாச் சிருஷ்டிகளையும் விட்டு, சர்ந்தர்ப்பா சந்தர்ப்பங்களைப் பாராமல், மனுஷீக யோசனையில் சார்ந்திராமல், வெளியிடமான விரிவான நீலவெளியில் தள்ளப்பட்ட போதிலும், கர்த்தர்மேல் மாத்திரம் சார்ந்திருந்து, அற்புதங்களின் ஊற்றண்டை இருக்கவேண்டியிருந்தது.

கர்த்தருடைய செய்கைத் திட்டத்தில் இது ஒரு பாகமாகும். பயன் கொடுக்கக்கூடிய ஒவ்வொரு ஆத்துமாவும், எப்பொழுதாவது ஒரு சமயம் ஜெபம், விசுவாசம் என்னும் இரகசிய அறைக்குள் செல்லவேண்டும்.

கர்த்தர் சில சமயம் நம்மைச்சுற்றி ஒரு கோட்டையை அமைத்து, சகல ஆதாரங்களையும் அகற்றி, சாதாரணமாய்க் காரியங்களைச் செய்யும் வழிகளை நீக்கி முற்றிலும் புதுமையானதும், எதிர்பாராததும், பழைய வழக்கங்களுக்கு ஒத்து வராததுமான இடத்தில் நம்மை வைக்கிறார். அங்கே என்னதான் நேரிடும் என்று நாம் அறியோம். அங்கே நமது வாழ்க்கையை வேறு விதமாக மாற்றி அமைக்கிறார். நாம் அவரையே நோக்கிப் பார்க்கும்படிச் செய்கிறார்.

பக்தியுள்ளவர்களில் மிகுதியான பேர் இயந்திரம் போன்ற ஜீவியம் நடத்துகிறார்கள். இவர்கள் இன்னது நடக்கும் என்று திட்டம்போட முடியும். ஆனால் தேவன் விசேஷித்த, சடுதியான காரியத்திற்கு அழைத்துச் செல்லும் ஆத்துமாக்களை, தனியே பிரித்து அடைத்து விடுகிறார். அங்கே அவர்கள் கர்த்தர் தங்களைப் பிடித்திருக்கிறார், அவரோடு காரியத்தை நடத்துகிறோம், அவரிடமே யாவும் எதிர் பார்க்கவேண்டும் என்பதை மட்டுமே அறிவார்கள்.

மேல்வாக்கியத்தில் குறிப்பிட்ட விதவையைப்போல் கர்த்தரின் அதிசயத்தை காண, வெளியரங்கமான யாவையும் விட்டு விலகி உள்ளிந்திரியத்தில் கடவுளோடு ஒன்றிக்கொள்ளவேண்டும். மிகுந்த சோதனையில் கர்த்தர் தமது இனிமையை நாம் காணச் செய்கிருர்.

இதயத்தோடு இதயம் பேசினுற்போல், பெரிய சப்தத்தினிடையே சில அரிய யோசனை சொல்லித் துன்பத்தினூடும், துக்கத்தினூடும் பேசவே தேவன் நம்மைச் சில வேளைகளில் உள்ளே விட்டுக் கதவை அடைக்கிருர். —ஸோல் போர்ட்

## ஏப்ரல் 6

*'நான் என் காவலிலே தரித்து அரணிலே நிலைகொண்டிருந்து அவர் எனக்கு என்ன சொல்வாரென்று கவனித்துப் பார்ப்பேன் என்றேன்' (ஆப. 2:1).*

கர்த்தர் உதவி செய்வார் என நம்பி நாம் எதிர்பார்த்திராவிட்டால், உண்மையில் நாம் அவருக்குக் காத்திருக்கவில்லை; கடவுளின் ஒத்தாசையும் நமக்குக் கிட்டாது. அவரிடமிருந்து பலமும், பாது காப்பும் பெற, நாம் எப்போதாவது தவறினுல், நாம் அதைப்பெற எதிர்பார்த்துக்கொண்டிருக்கவில்லை என்பதே காரணம். நமக்கு இரட்சிப்பு வரும் என்று, அது வரும் முன்அறிவிப்பை ஏற்றுக் கொள்ளத் தயாராக நின்று அது உட்பிரவேசிக்க, நாம் நம் இதயத் தின் கபாடங்களை விரிவாகத் திறந்து வைக்காததால், நமக்கென்று பரத்திலிருந்து அனுப்பப்பட்ட இரட்சிப்பு நம்மைக் கடந்து செல் கிறது. ஒருவனுடைய எதிர்பார்த்தல், அவனை விழிப்பாக இருக்கச் செய்யாவிடில் அவனுக்கு ஒன்றும் கிடையாது. உன் ஜீவியத்தில் நடக்கும் காரியங்களில், நீ அவரைக் காணத் தரித்திரு.

'கடவுள் செயலைக்காண எதிர்ப்பார்க்கிறவர்களுக்கு, கடவுள் செயல் காத்திருக்க வேண்டியதில்லை' என்று ஒரு முதுமொழி உண்டு. 'நாம் தெய்வச் செயலுக்காக எதிர்ப்பார்த்திராவிட்டால், தெய்வச்செயல் நமக்காகக் காத்திராது' என்று நாம் அதைத் திருப்பிச் சொல்லலாம். மழை பெய்யும்போது நாம் தண்ணீர்ப் பானைகளை வெளியே வைக்காவிட்டால், நாம் தண்ணீர் பிடிக்க முடியாது.

வாக்குத்தத்தத்தைக்கொண்டு நாம் கெஞ்சும்போது, நாம் காரியம் சாதிப்பவர்களாகவும் இருக்க விரும்புகிறேம். ஒரு 'பாங்கி'க்குச் சென்ற ஒரு மனிதன் உள்ளே போவதும் பின் வெளியே வருவதும் மேசையில் ஒரு கடிதத்தை வைப்பதும் அதைச் சும்மா வெளியே எடுப்பதுமாக இப்படி பல முறை செய்தால், சீக்கிரத்தில் 'அவனை வெளியே தள்ளு; உள்ளே வர விடாதே' என்ற உத்தரவு பிறக்கும். காரியமாய்ப் பாங்கிக்கு வருகிறவர்கள்,

தங்கள் பணச்சீட்டை உள்ளே கொடுத்து, பணம் பெறும்வரை காத்திருந்து, பெற்ற பின்பு போவார்கள். வந்த காரியம் முடிக்கு முன் போகமாட்டார்கள்.

அவர்கள் பணச் சீட்டை கீழே வைத்துவிட்டு அதிலுள்ள அழகிய கையொப்பத்தைப்பற்றியோ, அப்பத்திரத்தின் மேன்மையைப் பற்றியோ பேசிக்கொண்டு நிற்கமாட்டார்கள். பணம் வேண்டும். பணம் வாங்காவிடில் அவர்களுக்குத் திருப்தியில்லை. இப்படிப் பட்டவர்கள்தான் பாங்கிக்கு வரவேண்டும். வீண் காலவிரயம் செய்பவர்கள் அங்கு வரக்கூடாது. வெகு ஜனங்கள் ஜெபம் பண்ணு வதை விளையாட்டாக கருதுகிறார்கள். தேவன் தங்களுக்குப் பதில் அளிப்பார் என்று எதிர்ப்பார்த்ததில்லை. ஆகையால் அவர்கள் விளையாட்டுத்தனமானவர்களே. ஜெபத்தில் நாம் அவரோடு அந்நியோன்னியமாயிருக்கவேண்டும் என்றே தேவன் விரும்புகிறார். 'உன் விருப்பம் வீண்போகாது.' —சி. எச். ஸ்பர்ஜன்

## ஏப்ரல் 7

'சும்மாயிருப்பதே அவர்கள் பெலன்' (ஏசா. 30:7).

கடவுளை உண்மையாய் அறிவதற்கு உள்ளியந்திரங்களில் அமர்ந்து சும்மாயிருப்பது அத்தியாவசியமாம். இதை நான் முதன் முதல் கற்றுக்கொண்டது எனக்கு ஞாபகமிருக்கிறது. என் ஜீவியத்தில் ஒரு தீரா அவசர சமயம் ஏற்பட்டது. உடனே காரியத்தை நடத்த வேண்டுமென்று என் உடலும் உள்ளமும் துடித்தன. ஆனால் அச் சமயம் நான் ஒன்றும் செய்யக்கூடாத சந்தர்ப்பத்தில் இருந்தேன். செய்யக்கூடிய ஆளும் அசைவதாய்க் காணோம்.

என் உள்ளத்தில் பொங்கி வந்த ஆத்திரத்தால், நான் சின்ன பின்னமாக வேண்டும்போல் தோன்றிற்று. அப்பொழுது என் ஆத்துமத்தின் ஆழத்திலிருந்து 'நீ அமர்ந்திருந்து நானே தேவன் என்று அறிந்துகொள்' என்று ஒரு மெல்லிய சத்தம் சடுதியாய்க் கேட்டது. அவ்வார்த்தைகள் வல்லமையுடையனவாக இருந்தன. நான் அவற்றிற்குச் செவி கொடுத்தேன். என் உடலின் துடிப்பை முற்றிலும் அமர்த்திக் கலங்கி நின்ற என் ஆவியை அடக்கி மேல் நோக்கிக் காத்திருந்தேன். அப்போது நான் அவரே தேவன் என்று அறிந்தேன். என் அவசரத்திலும், ஆத்திரத்திலும், செயலற்ற நிலைமையிலும் அவரே தேவன் என்று அறிந்தேன். நான் இந்த அனுபவத்தை உலக முழுவதும் தந்தாலும் இழக்கச் சம்மதியேன். அதுவுமின்றி எனக்கு அவசர காரியம் செய்யவும் பலம் உண்டா யிற்று. அதனால் காரியம் வெற்றிகரமாய் முடிந்தது. அப்பொழுது 'நான் சும்மாயிருப்பதே பலம்' என்று நன்றாய்க் கற்றுக் கொண்டேன். —ஹன்னா ஒயிட்ஹால் ஸ்மித்

சோம்பலல்லாத சும்மாயிருத்தலும் உண்டு. அது நம்பிக்கையில் பிறந்த ஜீவனுள்ள 'காத்திருத்தலாகும்.' வெளிக்கு அமைதியா யிருந்தும் உள்ளே கலங்கிச் சந்தேகப்படுவது நம்பிக்கை அல்ல. அது அடக்கி வைக்கப்பட்ட ஆத்திரமே.

பெரும் புயலின் இரைச்சலிலுமல்ல, பூமியதிர்ச்சியிலும் எரிகிற நெருப்பிலுமல்ல எல்லாப் பயத்தையும் மாற்றும் அமைதியிலேயே மெதுவான சிறிய சப்தம் தீர்க்கதரிசிக்கும் கேட்டது.

உன்னைச் சுற்றிலும் தேவைகளும் கவலைகளும் கடல்போல் பெருகி நின்றாலும் என் ஆத்துமாவே, நீ கர்த்தரது மலையின்மேல் மௌன மாயிரு. உனது விருப்பங்களையும் வேண்டுதல்களையும் விட்டுவிட்டு அமைதியாயிருந்து, தேவன் உனக்கு என்ன சொல்கிறார் என்பதை கவனி.

எல்லாவித கலக்கத்துக்குரிய நிகழ்ச்சிகளிலும் இடையிடையே ஓய்வு நேரமும் உண்டு. ஏனெனில் அவ்வேளையிலேயே புதிய ஆற்றல் உண்டாகின்றது. ஆசீர்வதிக்கப்பட்டவர்களின் இன்பமய மான துதி கீதமும் சிறிது நேரம் அமர்ந்திருக்கும். ஆத்துமத்தின் அமைதியிலேயே தங்கியிரு. சிறிது நேரம் பேச்சு, ஜெபம், துதி யாவற்றையும் விட்டுவிடு. நீ முழுவதுமாக அவர் அதிகாரத்தின் கீழ் அமர்ந்திருந்து அவரது சொற்களுக்கும் புன்னகைக்கும் பொருள் அறிந்துகொள். போட்டியில் வெற்றி பெறுவதற்காகச் சிலம்பம் வீசும் பந்தயக்காரனைப்போல் உன் சித்தத்தின் வன்மையால் பரலோகத்தைக் கைப்பற்றிக்கொள்ளலாம் என எண்ணாதே. உன் பரம பிதாவின் அருகில் பிள்ளைபோல உட்கார்ந்து அவர், 'அமைதி யாயிரு' என்று சொல்வதைக் கேட்டு அதனால் உனக்கு வரும் இன்பத்தை அறிந்துகொள். —மேரி ரௌலஸ் ஜார்விஸ்

## ஏப்ரல் 8

'அந்தப்படியே நான் பலவீனமாயிருக்கும்போதே பலமுள்ளவனாயிருக்கிறேன்; ஆகையால் கிறிஸ்துவினிமித்தம் எனக்கு வரும் பலவீனங்களிலும், நிந்தைகளி லும், நெருக்கங்களிலும், துன்பங்களிலும் இடுக்கண்களிலும் நான் பிரியப்படு கிறேன்' *(2 கொ. 12:10)*.

இதை வார்த்தை வார்த்தையாகப் பொருள்படுத்திப் பார்த்தால், அதில் நாம் முன் காணாத சத்தியங்களைக் கண்டு, அதன் முக்கியத்து வத்தை உணருவோம்.

'ஆனபடியால் நான் பலவீனமாயிருப்பதிலும், தூஷிக்கப்படுவதி லும், துன்புறுத்துதலிலும், துரத்தப்படுவதிலும், இயேசுவுக்காக ஒரு முடுக்கில் அடைப்பட்டிருப்பதிலும் களிகூருகிறேன். ஏனென் றால் நான் பலவீனனாயிருக்கையில் நான் வெடிமருந்துபோலிருக்

கிறேன்.' நமது வல்லமையையும் சந்தர்ப்பங்களையும் இழந்த போது, 'கர்த்தரே நமக்குப் போதுமானவர்' என்று நான் உணரும் உண்மை அதிலிருக்கிறது. நாம் இந்நிலையை அடையும்போது, நம் கஷ்டங்களிலும் மற்றவர்களின் பட்சதாபத்தைத் தேடுவதை விட்டு விடுவோம். ஏனென்றால் நாம் நமக்கு வரும் எல்லாக் கஷ்ட நிலைமையிலும், நிஷ்டூரத்திலும் இவைகள் கர்த்தரின் ஆசீர்வாதத்தைப் பெறவேண்டிய நிபந்தனைகள் என்றுணர்ந்து, அவைகளை விட்டுத் தேவனிடம் திரும்பி, தேவனிடம் சேரும் உரிமையை நாம் அவைகளில் காணுவோம். —எ. பி. சிம்ப்ஸன்

சிறிது காலத்திற்குமுன் கர்த்தரில் நித்திரையடைந்த ஜியார்ஜ் மத்யூசன் என்ற ஒரு ஸ்காத்லாந்து தேசத்துக் குருட்டு பிரசங்கியார் ஒரு முறை, 'என் தேவனே! என் சரீரத்திலுள்ள முள்ளைக் குறித்து நான் ஒருபோதும் நன்றி செலுத்தியதில்லை. என்னிடமுள்ள ரோஜா மலர்களுக்குத் துதி செலுத்தியுள்ளேன். ஆனால் முட்களுக்காக நான் துதிக்கவில்லை. நான் சுமக்கும் சிலுவைக்கு ஈடு செய்யக் கூடிய உலகத்தை எதிர்நோக்குகிறேன். ஆனால் என் சிலுவையே எனக்குத் தற்கால மகிமை என்று ஒருபோதும் எண்ணவில்லை.'

'என் சிலுவையின் மகிமையை எனக்குப் போதியும். என் முள்ளின் மதிப்பை எனக்குக் காண்பியும். என் வேதனையின் வழியே நான் உம்மண்டை ஏறி வந்தேன் என்பதை விளக்கிக்காட்டும். என் கண்ணீரே எனக்கு வானவில்லை உண்டாக்கிற்று என்பதை காணச் செய்யும்' என்றார். 'மரங்களினூடே நட்சத்திரம் பிரகாசிப்பதை ஒருபோதும் பார்க்காதவர்கள் நிர்ப்பாக்கியர்.'

## ஏப்ரல் 9

'இதெல்லாம் எனக்கு விரோதமாய் நேரிடுகிறது' (ஆதி. 42:36). 'தேவனிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கேதுவாக நடக்கிறது' (ரோ. 8:28).

அநேகருக்கு வன்மையில்லை. எப்படி வன்மை உண்டாகிறது? ஒருநாள் டிராலி வண்டிகள் மின்சார சக்தியால் ஓட்டப்படும் இயந்திர சாலையைக் கடந்து சென்றோம். அநேக உருளைகள் சப்தத்துடன் இரைந்துகொண்டிருப்பதைக் கேட்டு, நாங்கள் எங்கள் சிநேகிதன் ஒருவனை, 'அச்சக்தியை எங்ஙனம் உற்பத்தி செய்கிறார்கள்?' என்று கேட்டோம்.

சக்கரங்கள் சுற்றுவதினாலும், அதினால் ஏற்படும் தேய்ப்பினாலுமே உண்டாகிறது. 'உராய்தலே மின்சார ஓட்டத்தை உண்டாக்குகிறது' என்று அவர் பதில் கூறினார்.

அவ்விதமாகவே கர்த்தர் உங்களில் அதிக வன்மையைக் கொண்டு வரவே வெகு நெருக்கத்தைக் கொடுக்கிறூர். அதிகமாய் உராய்வதால் ஆவிக்குரிய சக்தியைப் பிறப்பிக்கிறூர். சிலர் இவ்விதமாய் வல்லமை பெற்று வேதனை உண்டாக்கும் வழிக்கு மேலாக எழும்ப அதைப் பயன்படுத்த விரும்பாமல் அந்நெருக்கடியிலிருந்து ஓட முயலுகிறூர்கள். சக்தியைச் சமநிலையில் வைக்க எதிர்ப்பு அவசியம். மத்தியை நோக்கி இழுக்கும் கவர்ச்சியும், வெளியே தள்ளும் சக்தியும் இருப்பதால்தான் நம் பூமி தன் மண்டலத்தில் இருக்கிறது. ஒன்று இழுக்கிறது, ஒன்று தள்ளுகிறது. ஆகையால் அழிவடையத் தக்கதாய் இடைவெளியில் பாய்ந்து செல்லாமல், தன் ஒழுங்கான மண்டலத்தின் வழியாய், மத்தியிலுள்ள சூரியனைச் சுற்றிச் செல்கிறது.

இவ்விதமாகவே தேவன் நம்மை நடத்துகிறூர். முன்னேக்கிச் செல்லச் செய்யும் சக்தி மாத்திரம் போதாது. அதே அளவு பின்னேக்கித் தள்ளும் சக்தியும் அவசியம். ஆகையால் ஜீவியத்தில், சோதனையாக வரும் கஷ்டங்களினூலும், நமக்குத் தீமையாகத் தோன்றும் விஷயங்களினூலும், பின்னிழுத்து நிற்கவைத்து, உண்மையில் நாம் முன்னேறிச் செல்லவும் நம் காரியங்கள் உறுதிப்படவும் உதவி செய்கிறூர்.

இவ்விருவகைக் காரியங்களுக்காகவும் அவரைத் துதிப்போமாக. சிறகுகளோடு பாரத்தையும் ஏற்றுக்கொள்வோமாக. இவ்விதமே பரத்திலிருந்துவரும் ஊக்கம்பெற்று நமது உன்னத பரலோகத்துக் கடுத்த ஊழியத்தை நிறைவேற்றுவோமாக. —எ. பி. சிம்ப்ஸன்

ஒரு இயந்திரசாலையில் உருளைகளும்,
குடங்களும், இருசு சக்கரங்களும், தோல்பட்டைகளுமுண்டு
சில வேகமாயும், சில மெதுவாயும் சுற்றுகின்றன
சில முன்னேக்கித் தள்ளுகின்றன, சில பின்னுல் இழுக்கின்றன.
சில மிருதுவாய்ச் சப்தமின்றிச் சுழல்கின்றன
சில கரகரவென்று சப்திக்கின்றன.
இடித்துக்கொண்டும், படபடத்துக்கொண்டும்
கொழுவிக்கொண்டும், விட்டுவிட்டு அசைந்துகொண்டு
மிருக்கின்றன
வெகு குழப்பத்தில் முறையின்றித் தோன்றும் வகையில்
தூக்கித் தள்ளி ஓட்டித் தமது வேலையைச் செய்கின்றன.
சிறு நெம்புக்கோலிலிருந்து பெரிய சக்கரம் வரை,
திட்டமிடப்பட்ட வேலையைச் செய்கின்றன
இதை முறைப்படி நடத்தும் புத்தியும்
அதைச் சரியாய் நடத்தும் சக்தியும் வழிகாட்டும்
கரமும் பின்னுலுண்டு
தேவனுல் நேசிக்கப்பட்டவர்களுக்கு நன்மையாய் யாவும்
நடக்கிறது

தனியே நின்ருல் சில மனத்தை வருத்தும்
சில தடை செய்யவும், சில பின்னுல் இழுக்கும்
ஆனுல் இவையனைத்தும் ஒன்று சேரும்பொழுது நன்மையே
உண்டாகிறது.

நிறைவேருத ஆசைகளும், விடை கிடையாத
வேண்டுதல்களும்,

நமக்குப் புலனுகாத நேர்மாருன காரியங்களும்
ஒன்ருகச் சேர்ந்து நன்மைக்கென்றே உழைக்கின்றன.
இவற்றை நிற்கச் செய்வதும், ஓடச் செய்வதும், தடை
செய்வதும்,

துவக்குவதும், நிலைநாட்டுவதும், நடத்துவதும், பரம
பிதாவின் கரமே.

—ஆனி ஜான்ஸன் பிளிட்ன்

## ஏப்ரல் 10

'நீர் எதினிமித்தம் என்னேடே வழக்காடுகிறீர்; அதை எனக்குத் தெரியப்படுத்தும்' (யோபு 10:2).

சோதிக்கப்பட்ட ஆத்துமாவே, கர்த்தர் உன் நற்குணங்களை வளரச் செய்வதற்கு ஒருவேளை இதைச் செய்யலாம். சோதனைகளாலன்றி, நம்மிலுள்ள சில சற்குணங்கள் ஒருபோதும் வெளி வந்திரா. கடும் குளிர்காலத்தில், உன் விசுவாசம் வெயில் காலத்திலிருந்ததைவிட, அதிகமாய் ஒளிவிடும் என்று நீ அறியாயோ. அன்பு சுற்றிலும் இருள் சூழ்ந்தாலன்றி, ஒளிவிடாத மின்மினிப் பூச்சிபோல் இருக்கிறது. நம்பிக்கை என்பது வாழ்வாகிய சூரிய ஒளியில் காணப்படாமல், தாழ்வென்னும் இரவிலே காணப்படும் நட்சத்திரம் போலிருக்கிறது. துன்பம் என்பது தேவன் தம்முடைய பிள்ளைகளாகிய ஆபரணங்களை தெளிவாயிலங்கத் தக்கதாய்ப் பதிக்கும் கறுப்புத் துணிபோலிருக்கிறது.

சற்று நேரத்திற்கு முன்பு, நீ முழங்காலில் நின்று, 'தேவனே எனக்கு விசுவாசமில்லை என்று நான் நினைக்கிறேன். எனக்கு விசுவாசம் உண்டு என்று நான் அறியச் செய்யும்' என்று சொல்லிக் கொண்டிருந்தாய்.

நீ அறியாவிடினும், இது உண்மையில் உனக்குச் சோதனைகள் வரும்படி நீ ஜெபிப்பதுபோல் இல்லையா? நீ உன் விசுவாசத்தைப் பயன்படுத்தினலன்றி, உனக்கு விசுவாசம் உண்டென்று நீ எவ்வாறு அறிவாய்? இந்தக் காரியத்தை நீ நிச்சயமாய் நம்பு. நம் அழகிய குணங்கள் வெளிப்படவும், அவைகள் நம்மிலிருப்பதாய் நாம் உணரவும், கர்த்தர் நமக்குச் சோதனை அனுப்புகிருர். இது வெறும்

வெளிப்படுத்தல் மட்டுமல்ல; பரிசுத்தமாக்கப்பட்ட சோதனைகளின் பலன் நற்குணத்தில் வளர்தலே.

கர்த்தர் தமது போர்வீரரை சௌகரியமான, சௌபாக்கியங்கள் உள்ள கூடாரங்களில் பழக்கமாட்டார். ஆனால் அவர்களை வெளியே கொண்டுபோய், கட்டாய நடைக்கும் கடின உழைப்பிற்கும் பலப்படுத்துகிறார். அவர்களை நீர் ஓடைகளைக் கால்நடையாய்க் கடக்கவும், ஆறுகளின் வழியாய் நீந்திச் செல்லவும், மலைகளை ஏறவும், தங்கள் முதுகின்மேல் பாரமான சுமைகளோடு அநேக மைல் தூரம் நடக்கவும் செய்கிறார். நல்லது, கிறிஸ்தவனே! இது நீ அடையும் வருத்தங்களுக்குப் போதிய ஈடு சொல்லவில்லையா? அவர் உன்னோடு வழக்காடுவதற்கு இது ஒரு காரணம் அல்லவா?

சாத்தானால் சேதமுறாமல் விட்டுவிடப்படுவது ஆசீர்வாதத்திற்கு அடையாளம் அல்ல.
—சி. எச். ஸ்பர்ஜன்

## ஏப்ரல் 11

'நான் உங்களுக்கு இருளிலே சொல்வதை நீங்கள் வெளிச்சத்திலே சொல்லுங்கள்' *(மத். 10:27).*

நம்முடைய தேவன் அடிக்கடி நம்மிடம் செய்தி சொல்வதற்காக இருளில் அழைத்துச் செல்கிறார். நமக்கு அருமையானவர்களை, இழந்த மரண இருளுக்குள்ளும், பலவீனத்தால் வரும் துயர வாழ்வாகிய இருளுக்குள்ளும், துக்கம், ஏமாற்றம் என்னும் இருளுக்குள்ளும் அழைத்துச் செல்கிறார்.

பின்பு அவர் நமக்கு உன்னதமானதும், ஆச்சரியமானதும், அழிவில்லாததும், முடிவில்லாததுமான தமது இரகசியத்தைச் சொல்கிறார். உலக ஒளியால் கூசிப்போன நம் கண்களை, பரலோக நட்சத்திரக் கூட்டங்களைக் காணச் செய்கிறார். உலகத்தின் குழப்பங்கள், சப்தங்களாய் கேட்கக்கூடாதிருந்த செவிகளைத் தமது மெல்லிய சப்தங்களைக் கேட்கும்படி செய்கிறார்.

இப்படிப்பட்ட வெளிப்படுத்துதலைப் பெற்ற நாம் எப்பொழுதும் இருக்கவேண்டுமென்பதல்ல. சீக்கிரமாக வாழ்வின் புயலிலும், வேலையிலும் ஈடுபடவேண்டும். குறிப்பிட்ட வேளை வரும்போது, கடவுளிடம் நாம் கேட்டு அறிந்துகொண்டதை கூறி அறிவிக்கவேண்டும்.

துக்கத்தில் அதிக துக்கமான கட்டம், அத்துக்கம் ஏன் ஏற்பட்டது என்று நமக்கு விளங்காதிருப்பதே. மேற்சொன்ன காரியங்கள் துக்கத்திற்கு ஒரு அர்த்தம் கொடுக்கின்றன. 'நான் எவ்வளவு பிரயோஜனமற்றவன்,' 'மனித வர்க்கம் முன்னேற நான் என்ன செய்கிறேன்?' 'என் ஆத்துமத்திலுள்ள விலைமதிப்பில்லா வாசனை ஏன் வீணாகிறது?'

நம்பிக்கையிழந்து துக்கிப்பவன் மேற்சொன்ன கேள்விகளைத் தனக்குள் கேட்கிறான். ஆனால் தேவன் ஒவ்வொன்றிலும் ஒரு நோக்கம் வைத்திருக்கிறார். தேவனோடு முகம் முகமாய்ப் பேசுவதைக் கேட்கவும், மலையடிவாரத்திலுள்ள தன்னைப்போலொத்த அநேகருக்கு, அவர் சொன்ன செய்திகளை எடுத்துச் சொல்லவும், அவர் தமது பிள்ளையை உன்னதமான உயரங்களுக்கு வரச் செய்கிறார்.

மோசே மலையின்மேல் தனித்திருந்த நாற்பது நாட்களும், ஓரேப் மலையில் எலியா செலவிட்ட நாட்களும், அரேபியாவில் பரிசுத்த பவுல் செலவிட்ட நாட்களும் வீணாகப் போயினவா?

பரிசுத்தமான, வெற்றிகரமான ஜீவியத்தின் ஜீவ நாடியான விசுவாச வாழ்க்கைக்கு குறுக்கு வழி கிடையாது. தனித்திருந்து தேவனோடு ஐக்கியப்படுதல் அவசியம். நமது உடலுக்கு உணவு தேவையாயிருப்பதுபோல் நமது ஆத்துமாவுக்குக் கர்த்தரோடு ஐக்கியப்படுதல் என்ற பர்வதங்களும், பெரிய பாறையின் நிழலில் அமர்ந்து, ஓய்ந்திருப்பதாகிய பள்ளத்தாக்குகளும் அவசியம். இருள், மாமிசத்திற்குரிய காரியங்களை மூடி, மனுஷ ஜீவியக் கிளர்ச்சியை அமர்ந்திருக்கும் காலத்தில், நித்தியமான, முடிவில்லாத காட்சியைக் காண, கண்கள் திறக்கும்படி, நட்சத்திரங்களுக்குக் கீழ், திறந்த வெளியில்இரவைக் கழிக்கவேண்டியதும் அவசியமாகும்.அப்பொழுது தான் தேவ பிரசன்னம் நம் ஆத்துமாவின் உறுதியான உரிமையாகும். அப்பொழுது நாமும் சங்கீதக்காரனோடு, 'தேவரீர் என் சமீபத்திலிருக்கிறீர்' என்று சொல்லலாம்.

மாலையில் மலரும் அந்தி மந்தாரையைப்போல், சில இருதயங்கள் ஜீவியத்திலுண்டாகும் துன்பம் என்னும் நிழலில் அழகாய் மலரும்.

—எம். பி. மேயர்

## ஏப்ரல் 12

*'இயேசு பரிசுத்த ஆவியினாலே நிறைந்தவராய் யோர்தானைவிட்டு திரும்பி, ஆவியானவராலே வனாந்தரத்திற்குக் கொண்டுபோகப்பட்டு, நாற்பது நாள் பிசாசினால் சோதிக்கப்பட்டார்' (லூ. 4:1,2).*

இயேசு பரிசுத்த ஆவியினால் நிறைந்திருந்தார் என்றாலும், அவர் சோதிக்கப்பட்டார். ஒரு மனிதன் தேவனண்டை நெருங்கி இருக்கையில்தான் சோதனை தன் முழு பலத்துடன் அவனைத் தாக்குகிறது. ஒரு பெரியார் 'சாத்தான் வெகு பெரிய செயல்களைச் சாதிக்கும் எண்ணம் கொண்டவன்' என்று சொல்லியுள்ளார். அவன் இயேசுவின் சீடர்களில் ஒருவனைக் கிறிஸ்துவை நான் அறியேன் என்று சொல்லக்கூடச் செய்தான்.

மார்ட்டின் லூத்தர் (புராடெஸ்டான்டு மதஸ்தாபகராகிய) போல் சாத்தானேடு அவ்வளவு சண்டைகள் செய்தவர்கள் வெகு சிலர்கூட இல்லை, அது ஏன்? ஏனென்றால் மார்ட்டின் லூத்தர் சாத்தானின் இராச்சியத்தையே அசைக்கப்போகிறவராக இருந்தார். ஜான் பனியனு (மோட்சப் பிரயாணம் எழுதிய) க்குத்தான் எத்தனை போராட்டங்கள் இருந்தன!

ஒரு மனிதன் தேவனுடைய ஆவியைப் பெற்றிருந்தால், அவனுக்குச் சாத்தானேடு அதிக போராட்டம் இருக்கும். சோதனைகள், புயல் மரத்திற்கு எவ்வாறு உதவுகிறதோ, அவ்வாறு நமக்கு உதவி, நம்மை வேர் ஊன்றச் செய்கின்றன. ஆகையால் தேவன் சோதனைகளை வரவிடுகிறார். சீமை மண் பாத்திரங்கள்மேல் வர்ணம் போகாமலிருக்கச் செய்வது நெருப்பே. அதுபோல சோதனைகள் நம்மைக் கிறிஸ்துவில் வேரூன்றச செய்கின்றன.

சாத்தான் உன்னை இயேசுவைவிட்டு விலக்கத் தன் முழுச் சக்தியையும் உபயோகிக்கும்போதுதான் உனக்கு இயேசுவின்மேல் பற்று உண்டென்றும், அவர் உன்னை இறுகப் பிடித்துள்ளார் என்றும் நீ அறிவாய். அப்பொழுது நீ கிறிஸ்துவின் வலக்கரம் உன்னைப் பிடித்திருப்பதை உணருவாய். —தெரிந்தெடுக்கப்பட்டது

அசாதாரணமான துன்பங்கள், அசாதாரணமான பாவங்களுக்குத் தண்டனையாக எப்போதும் இருப்பதில்லை. அவைகள் சில வேளைகளில் அசாதாரணமான வரங்களுக்குச் சோதனையாகும். தேவன் தமது ஆபரணங்களைத் துலக்கமாக்கிட கூர்மையான வெட்டும் ஆயுதங்களையும், முரட்டு அரங்களையும் உபயோகிக்கிறார். அவர் யாரை அதிகமாய் நேசிக்கிறாரோ, அவர்களை வெகு பிரகாசமாக்க, அவர்கள்மேல் தமது ஆயுதங்களை அடிக்கடி உபயோகிக்கிறார்.

கர்த்தருடைய தொழிற்சாலையிலுள்ள வேறெந்த ஆயுதங்களையும் விட நெருப்பும், அரமும், சம்மட்டியுமே எனக்கு வெகு பயனுள்ளதாயிருந்தன என்று நான் மனதார சாட்சி பகருவேன். பிரம்பின் உதவியின்றி நான் ஏதாவது கற்றுக்கொண்டதுண்டா? என்று நான் சிற்சில வேளைகளில் கேட்டுக்கொள்வேன். என் பள்ளிக்கூட அறை கஷ்டத்தால், இருளடைந்திருக்கும்போதுதான் நான் அதிகம் காண்கிறேன். —சி. எச். ஸ்பர்ஜன்

## ஏப்ரல் 13

'அவ்விடத்திலே கர்த்தருடைய கரம் என்மேல் அமர்ந்தது; அவர், நீ எழுந்திருந்து பள்ளத்தாக்குக்குப் போ, அங்கே உன்னுடனே பேசுவேன்' என்றார் (எசே. *3:22*).

கிறிஸ்துவுக்கென உபயோகிக்கப்பட்டவர்களில் யாராகிலும் விசேஷித்த தரித்திருத்தலின் காலம் இல்லாமலும், தமது திட்டங்கள்

யாவும் முற்றிலும் மாற்றப்படாமலும் இருந்ததுண்டென்று நீங்கள் கேள்விப்பட்டதுண்டா? 'இரட்சிக்கப்பட்டேன்' என்ற நற்செய்தியால் பரிசுத்த பவுலின் உள்ளம் பொங்கிக்கொண்டிருந்த காலத்தில், அரேபிய வனாந்தரங்களுக்கு அவர் அனுப்பப்பட்ட அந்த நாளிலிருந்து இந்நாள் வரைக்கும் அது அவ்வாறே நடந்து வந்திருக்கிறது.

பவுலே, கிறிஸ்துவை நம்புவதைக் குறித்து சீரியாவிலே சாட்சிகூற நீ காத்துக்கொண்டிருக்கிறாய். இப்பொழுது அவர் 'சீரியாவிற்குப் போவதற்கு முன்னாலேயே என்னை நம்புவது என்றால் என்ன? என்பதை நீ காட்டவேண்டும். இதையே நான் விரும்புகிறேன்' என்று சொல்லுகிறார். எனக்கு ஏற்பட்ட கஷ்டம் அதைவிடக் குறைவானதே. ஆனால் கருத்தில் இதுபோன்றதே. எழுத்துவேலை செய்ய ஆவலுடன் செல்ல கதவு திறவுண்டிருக்கிறது என்று நான் நினைத்துக் கொண்டிருக்கையில், அதற்கு எதிர்ப்பு வந்தது. வைத்தியர் உள் வந்து, 'ஒருபோதும் எழுதக்கூடாது. எழுதுவதா? அல்லது ஜீவனோடிருப்பதா? இரண்டில் ஒன்றைத் தெரிந்துகொள்ளவேண்டும். அவன் இரண்டும் செய்ய முடியாது' என்கிறார்.

அது 1860ஆம் ஆண்டில் நடந்தது. பின்பு நான் 1869இல், அவ்வாறு ஏற்பட்ட அடைப்பிலிருந்து, 'சேவை செய்யும் கீதம்' என்ற நூலோடு வெளிவந்தேன். நிழலில் ஒன்பது வருடம் காத்திருந்ததின் ஞானத்தை அறிந்தேன். தேவனின் அன்பு மாறாததாகையால், அவருடைய அன்பை நாம் காணாமலும், உணராமலும் இருக்கும்போது அது ஒரே சீராக இருக்கிறது. அதுவுமன்றி அவருடைய அன்பும் ஆளுகையும், சமமாகவும், சர்வலோகமும் வியாபித்திருக்கிறவைகளாகவும் இருக்கின்றன. அவர் சந்தோஷத்தையும், நாம் அறியக்கூடியதாயிருக்கும் வெற்றியையும் வரவிடாதிருக்கிறார். ஏனென்றால் அவர் நம்மில் தமது வேலை பூரணப்படவும், முன்னேறவும் செய்வது யாது என்று நன்றாயறிவார் என்று பிரான்சிஸ் ரிட்லி ஹாவர்கல் சொல்லுகிறார்.

1 என் வேலையை அமைதியாய்
கீழ்வைத்து—எனக்கு
அனுப்பப்பட்ட ஓய்வு
வேளையை நான் எடுத்துக்கொண்டேன்,
எஜமானனின் சப்தம் என்னைக் கூப்பிட்டு,
தனியே இளைப்பாறச் சொல்லிற்று.
இயேசுவோடு நான் தனித்திருப்பேன் என்று
என் ஆத்துமா எதிரொலி கொடுத்தது.

2 ஓய்வையும், அமைதியையும்,
அவர் கரத்திலிருந்து பெற்று,
தற்போதைய நோவை அவரே,
திட்டமிட்டார் என்றுணர்ந்தேன்.

அவர் 'ஓய்ந்திரு' என்று சொல்லுகையில்,
நாம் வேலையை நாடுகிறோம்.
நம் வழி கோணலும், அறியாமையுமாயுள்ளது
அவர் காட்டும் பாதையே சிறந்தது.

3 அமர்ந்து படுத்திருப்பதில்—ஒரு
பாக்கியமான ஓய்வு உண்டு.
அவர் மனப்படி நம்மை உருவாக்க,
அவர் கரத்தில் நம்மை ஒப்புக்கொடுக்கிறோம்
அவர் வேலை முடியுமட்டும்
அவரே கைதேர்ந்த வேலையாள்,
இதை நீ மறவாதே.

4 அவர் கொடுத்த வேலையை
அவரே பூரணப்படுத்துவார்,
களைப்புற்ற பாதங்களுக்கு—வேறு
பணி வைத்திருப்பார்,
களைப்புற்ற கரங்களுக்கு—வேறு
கடமைகள் வைத்திருப்பார்,
தற்போது நாம் அவர்
கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டும்.

5 வேலை செய்வது மாத்திரமல்ல
நாம் பயிற்சி அடையவும் வேண்டும்.
பாடுகளினாலே இயேசுவும்,
கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டார்
நமக்கு அவர் நுகம் எளிதாயும்
அவர் சுமை இலகுவாயுமிருக்கும்.
அவர் சிட்சை வெகு அவசியம்
எல்லாம் சரிவர நடக்கும்.

6 நம் உதவிப் பணியாளர்களே,
அவர்கள் பயன்படுத்தும்
ஆயுதம் இவை, இவை என்று,
அவர்களே தெரிந்தெடுப்பதில்லையே,
வேலையிலும், காத்திருப்பதிலும்,
அவர் சித்தத்தையே,
நம் சித்தத்தையல்ல,
எப்போதும் நிறை வேற்றுவோமாக.

கர்த்தர் வேலைசெய்யும் இடங்களைக் கொடுப்பதுபோல ஓய்வெடுக்கும் இடங்களையும் கொடுக்கிறார். ஆகையால் களைப்போடிருக்கும் உன்னைப் பாதையருகிலுள்ள ஒரு நீரூற்றண்டை கொண்டு வரும்போது நீ ஓய்வெடுத்துக்கொண்டு நன்றியாயிரு.

## ஏப்ரல் 14

'ஏனெனில், கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்தோடும், தேவ எக்காளத்தோடும், வானத்திலிருந்து இறங்கி வருவார். அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள், முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு உயிரோடிருக்கும் நாமும், கர்த்தருக்கு எதிர்கொண்டுபோக, மேகங்களின்மேல் அவர்களோடேகூட ஆகாயத்தில் எடுத்துக்கொள்ளப்படுவோம். இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனேகூட இருப்போம்' *(1 தெச. 4:16,17).*

'அதிகாலையில்', 'இருட்டாயிருக்கையில்' இயேசு மரித்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தார். திறந்துகொண்டிருந்த அவர் கல்லறையை, சூரியனல்ல, விடிவெள்ளியே கண்டது. இருள் இன்னும் நீங்கவில்லை. எருசலேம் நகர்வாசிகள் எழுந்தரிக்கவில்லை. அவர் எழுந்த வேளை இன்னும் தூக்கமும், இருளும் நிறைந்ததாகவேயிருந்தது. அவரின் உயிர்த்தெழுதல் நகரின் தூக்கத்தைப் போக்கவில்லை. அதுபோல கிறிஸ்துவின் சரீரமாகிய சபை உயிர்த்தெழும்போது, 'அது அதிகாலை இருட்டோடே நடக்கும்.' அப்பொழுது விடிவெள்ளி மாத்திரமே பிரகாசிக்கும். இயேசுவைப்போல் அவரின் பக்தர்களும், இருளின் பிள்ளைகள் இன்னும் சாவுக்குரிய நித்திரை தரித்திருக்கையில் விழித்துக்கொள்வார்கள். அவர்கள் எழும்புகையில், ஒருவருக்கும் தொந்தரவு கொடார்கள். அவர்களை அழைக்கும் சப்தத்தை இவ்வுலகத்தார் கேளார்கள்; பிள்ளைகள் தாயின் கரத்தில் தூங்கி விழிப்பதுபோல், அவர்கள் ஒவ்வொருவரையும், தங்கள் கல்லறைகளில் ஓய்ந்திருக்கச் செய்த பிரகாரமே இயேசு வரும்போது அமைதலாய் ஆதரவாய் அவர்களை எழுப்புவார். 'மண்ணில் தங்கியிருக்கிறவர்களே, விழித்துக் கெம்பீரியுங்கள்' (ஏசா. 26:19) என்ற உயிர்ப்பிக்கும் வார்த்தைகள் அவர்களுக்கே உண்டாகும். மகிமையின் கிரணங்கள் அவர்களுடைய கல்லறையினுள் வீசும். கிழக்கு வெளுத்து சூரியன் கிழக்கில் உதிக்கையில், அவர்கள் காலை முதல் ஒளியைப் பருகுகிறார்கள். புலரொளியின் திவ்ய மணமும், சாந்தியை உண்டுபண்ணும் அமைதியும், மனதை உற்சாகப்படுத்தும் புத்துணர்ச்சியும், அதின் இனிமையான தனிமையும் அமைதலும் பரிசுத்தமுமான சகல பாக்கியங்களும் அவர்களுடையவை.

அவர்கள் கடந்துவந்த, இருள் நிறைந்த இரவிற்கும், இந்தத் திவ்ய காட்சிக்கும் உள்ள வித்தியாசத்தைச் சிந்தித்துப் பாருங்கள். இவர்களிருக்கும் இடத்திற்கும் அவர்கள் விட்டு எழுந்த கல்லறைக்கும் உள்ள வித்தியாசம்தான் என்னே! அவர்களை மூடியிருக்கும் புல்லை விலக்கி, சாவுக்கினமானதை உதறித் தள்ளிவிட்டு, மகிமையான சரீரத்தோடும், ஆகாயத்தில் தங்கள் ஆண்டவரைச் சந்திக்க எழும்புகையில், பெத்லகேமின் நட்சத்திரம்போன்ற விடிவெள்ளியின் கதிர்கள், அவர்கள் பாதைக்கு வெளிச்சம் காட்டி, முன்பு நடந்திராத பாதை வழியாக அவர்களுக்கு வழிகாட்டிச் செல்கிறது.

'சாயங்காலத்தில் அழுகை தங்கும், விடியற்காலத்திலே களிப்புண் டாகும்' (சங். 30:5). —ஹொரோஷியஸ் போனர்

வானத்திலிருந்து இறங்கின சேனைகள்
மகிமையான பக்தர்களோடும், தூதர்களோடும், ஓசன்னா பாடுகையில்
மகிமையின் பிரகாசம்போல் கிருபை அவர்கள் சிரத்தைச் சூழ
இயேசு தமக்குச் சொந்தமானவர்களை ஏற்றுக்கொள்கிறார்
ஆமென், கர்த்தராகிய இயேசுவே வாரும் (வெளி. 22:20).

ஒரு போர்வீரன் மற்றவர்களைப் பார்த்து 'என் கல்லறையருகில் சாவுக்கொட்டு கொட்டாமல் அதிகாலை எழுந்திருக்க ஒலிக்கும் முரசடிக்கவேண்டும்' என்றான்.

## ஏப்ரல் 15

'உமது வசனத்தை நம்புகிறேன்' (சங். 119:42).

தேவன் தாம் சொன்னதைச் செய்வார் என்று எவ்வளவு உறுதி யாய் நம்புகிறோமோ, அவ்வளவில் நமது விசுவாசம் பலனுள்ளதாக அல்லது பலனற்றதாக இருக்கிறது. நமது உணர்ச்சிகள், நம் மனதில் பட்ட காரியங்கள் வெளிப்பார்வைக்குத் தோன்றுபவை, இவற்றிற் கும் விசுவாசத்திற்கும் ஒரு சம்பந்தமுமில்லை. விசுவாசத்திற்கு இவை ஒன்றும் தேவையில்லை. இவைகளை விசுவாசத்தோடு இணைத்துவிட விரும்பினால் நாம் தேவனுடைய வார்த்தைகளை நம்பிச் சார்ந்திருப்ப வர்களல்ல. விசுவாசம் தேவனுடைய வார்த்தை ஒன்றில் மாத் திரமே சார்ந்திருக்கிறது. அவருடைய வார்த்தைகளின்படி செய் வார் என்று நம்பினால் நமது இதயத்தில் சமாதானம் இருக்கும்.

நம் ஆத்துமத்தில் நாம் ஆசீர்வாதம் பெறவும், பின்பு சபையில் ஆசீர்வாதம் உண்டாகவும், பின் சபைக்குப் புறம்பானவர்களுக்கு ஆசீர்வாதம் உண்டாகவும், நம் விசுவாசத்தைப் பயன்படுத்தி மகிழுகிறார். இப்படி விசுவாசத்தைப் பயன்படுத்தலை ஏற்றுக் கொள்ள முன்வராமல், நாம் பின் வாங்குகிறோம். நமக்குச் சோதனை வரும்போது நாம் 'நான் பின்னால் ஏதோ ஒரு இன்பத்தை அனுப விக்க என் பரமபிதா இந்தப் பாத்திரத்தை என் கையில் கொடுத் திருக்கிறார்' என்று சொல்லவேண்டும்.

சோதனைகளே விசுவாசத்தின் உணவு, நம்மை நாம் நம் பரம பிதாவின் கரத்தில் விட்டுவிடுவோமாக. தன் பிள்ளைகளுக்கு நன்மை செய்வதே அவர் இருதயத்தின் மகிழ்ச்சி. சோதனைகளும், கஷ்டங் களும், மாத்திரமே நம் விசுவாசம் பயனுள்ளதாய் வளரச்செய்யும் வழிகளல்ல. வேதத்தை வாசித்து, தேவன் தமது வார்த்தைகளின் மூலம் தம்மை வெளிப்படுத்தியிருப்பதை அறிந்துகொள்வதும் ஒரு வழியே.

அவரோடு பழகினதிலிருந்து, அவர் ஒரு அன்பின் சொரூபி என்று நீ கண்டிருக்கிறாயா? நீ அவ்வளவாய் அவரை அறியவேண்டுமென்று தேவனை வேண்டிக்கொள் என்று உன்னை அன்பாய் கேட்டுக்கொள்கிறேன். அவருடைய பட்சத்தையும் அனுதாபத்தையும் நீ கண்டு வியக்கவேண்டும். தேவன் எவ்வளவோ நல்லவர் என்பதை நீ பிறர்க்கு காட்டுவது சாத்தியமாகவேண்டும். பின்னும் தமது பிள்ளைகளுக்கு நன்மை செய்வதால், அவர் மனம் எத்தனையாய் ஆனந்தங்கொள்ளும் என்று பிறர் காணச் செய்யவேண்டும்.

நமது அந்தரங்க ஆத்துமத்தில் அவரை எவ்வளவாய் நெருங்கிச் சேருகிறோமோ அவ்வளவாய் நாம் நம்மை அவர் கையில் ஒப்புவிக்கத் தயாராயிருப்போம். அவருடைய செயல்களில் திருப்தியாயிருப்போம். நமக்குச் சோதனை வருங்கால், நாம் 'கர்த்தர் நன்மை செய்வார்' என்ற நிச்சயத்தில் அவர் இந்தச் சோதனையால் என்ன நன்மை செய்வார் என்று பார்த்திருக்கக் காத்திருப்போமாக. இப்படியிருந்தால் நாம் உலகத்தில் மதிப்புக்குரிய சாட்சிகளாவோம். பிறர் கையைத் திடப்படுத்துவோம். —ஜார்ஜ் முல்லர்

## ஏப்ரல். 16

'விசுவாசத்தினாலே ஆபிரகாம் தான் சுதந்தரமாகப் பெறப்போகிற இடத்திற்குப் போகும்படி அழைக்கப்பட்டபோது கீழ்ப்படிந்தான்' (எபி. 11:8).

அவன் எங்குச் சென்றான் என்பது அவனுக்கே தெரியாது. தான் தேவனோடு சென்றான் என்ற அறிவு ஒன்றே அவனுக்குப் போதுமானதாயிருந்தது. வாக்குத்தத்தங்களைச் சார்ந்திருப்பதைவிட அதிகமாய் வாக்குத்தத்தம் தந்தவரைச் சார்ந்திருந்தான். அவன் நிலைமையில் உள்ள கஷ்டங்களைப் பாராமல், தன் வழியைத் தனக்கு காண்பித்த இராஜாவும், நித்தியரும், அழிவில்லாதவரும், காணக்கூடாதவரும் ஆகிய சர்வ ஞானமுள்ள தேவன் அதைச் சரியென்று காட்டக்கூடும் என்பதையே பார்த்தான். இது எவ்வளவு மகிமையான விசுவாசம்! இதுவே உன் வேலை. இவைகளே நீ சாதிக்கக்கூடியவைகள். கப்பல் படையின் தலைவராகிய ஆண்டவரின் ஞானத்தில் அசையாத நம்பிக்கை இருந்தால் பின்னால் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றிய கட்டளைகளைத் திறந்து பார்க்காமலேயே அவருடன்கூட கப்பலைச் செலுத்திச் செல்லச் சம்மதிப்பாயல்லவா? இவ்வுலகத்தின் சிறப்பு ஒன்றும் விண்ணுலகின் சிறுமைக்கும் ஒப்பாகாது என்ற நிச்சயம் உனக்கு உண்டானால் எல்லாவற்றையும் விட்டு விட்டுக் கிறிஸ்துவைப் பூரணச் சம்மதத்தோடு பின் தொடர்வாய்.

விசுவாசக் கிரியைகளைச் செய்ய உன் தேவனோடு சந்தோஷமாய்ப் புறப்பட்டால் மாத்திரம் போதாது. உன் மனோபாவனையில், உன்

பயணத்தில் எவைகளைச் செய்யவேண்டும் என்று நினைத்திருந்தாயோ அவைகளைச் சிதைத்துப்போடு.

நீ நினைப்பதுபோல் ஒன்றும் நடவாது. உன் வழிகாட்டி பழகின பாதையில் செல்லமாட்டார். நீ காண்போம் என்று சொப்பனத்திலும் பார்த்திராத வழியில் உன்னை நடத்துவார். அவர் பயமறியார். அவர் உன்னோடிருக்கையில், நீ ஒன்றுக்கும் பயப்படக்கூடாதென்று அவர் எதிர்பார்க்கிறார்.

பகல் சென்றது நான் தனித்துப் பெலவீனனாய்
சூரியனில்லாத குளிர்ந்த நாட்டுள்
தடவி வழிகண்டு சென்றேன்
ஒளிக்குச் செல்லும் பாதையை
என்னால் காண முடியவில்லை—ஆனால் இருளில்
கர்த்தர் என் கரத்தைப் பற்றினார்
நான் வழி விலகாமல் என்னை நடத்தினார்
நான் அறியாத புது வழியில்
பத்திரமாய்க் கொண்டுவந்து சேர்த்தார்
அமர்ந்த தண்ணீர்களின் வழியேயும்
பசும்புற்றரையிலும் நான் அவரைப் பின்தொடர்ந்தேன்
பாதை, முள், கல்இன்றி, சுத்தமாயிருந்தது
காரிருள் தன் பயங்கரத்தை இழந்தது
காத்திருந்த என் கண்கள் புலரொளி கண்டன
சூரிய ஒளியில் பத்திரமாய்
என்கரம் அவர் கையில் வைத்து நடந்தேன்
இதோ இர்வு நீங்கிப் போயிற்று.

—ஆனிபோர்டர் ஜான்ஸன்

## ஏப்ரல் 17

*'கர்த்தருடைய கரம் இதைச் செய்தது' (யோபு 12:9).*

அநேக ஆண்டுகளுக்குமுன் ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள சுரங்கத்தில், உலக சரித்திரத்தில் இதுவரை காணப்படாத மாட்சிமையான வைரக்கல் கண்டுபிடிக்கப்பட்டது. அது இங்கிலாந்து மன்னருக்கு அவருடைய மணிமுடியிலிருந்து ஒளிவிடும்படியாய் வைத்துக் கொள்ளும்படி வெகுமதியாக அளிக்கப்பட்டது. மன்னர் அது வெட்டப்படும்படி ஆம்ஸ்டர்டாமுக்கு அதை அனுப்பினார். அது ஓர் கைதேர்ந்த வைரம் இழைப்போன் கையில் கொடுக்கப்பட்டது. அவன் அதை என்ன செய்தானென்று நினைக்கிறீர்கள்?

அவன் அந்த விலைமதிப்பில்லா கல்லை எடுத்து அதில் ஒரு பள்ளம் வெட்டினான். பின்பு அதைத் தன் ஆயுதத்தால் பலமாய் அடித்

தான். இதோ அந்த ஒப்பில்லா ஆபரணம் அவன் கையில் இரண்டாய்ப் பிளந்துவிட்டது. 'என்ன கவலையீனம்! என்ன வீணுக்குதல்!' என்று சொல்ல வேண்டுமென்று தோன்றுகிறது. அப்படியல்ல, அந்த அடி சில வாரங்களாகப் படித்துத் திட்டம்பண்ணின அடி. அந்தக் கல்லைப்போல் மாதிரி வைரங்கள் செய்யப்பட்டன. அதைப்போல் படம் வரையப்பட்டது. அதின் தன்மை, அதிலுள்ள குறை, வெடிப்பு, வரிகள் யாவும் துல்லியமாய்ப் படிக்கப்பட்டன. உலகிலேயே கைதேர்ந்த வைரம் இழைப்போன் கையில்தான் அது கொடுக்கப்பட்டிருந்தது.

அந்த அடி தவறு என்று நீ சொல்லுகிறாயா? இல்லை. அதுவே வைர இழைப்பின் திறத்தில் மகா உச்சநிலை. அந்த அடி ஒன்றே அதன் பூரண அழகையும், வடிவத்தையும், பிரகாசத்தையும் கொண்டுவரக்கூடிய காரியம் என்று அவன் அறிவான்.

அந்த அபூர்வ ஒப்புயர்வற்ற கல்லை அழித்துவிடுவதுபோல காணப்பட்ட அந்த அடியே, உண்மையில் அதைப் பூரணமாய் மீட்டதாகும். ஏனென்றால் அந்த வைரப் பரிசோதகர் தமது அனுபவம் மிகுந்த கண்களோடு பார்க்கையில், கரடு முரடாய், சுரங்கத்திலிருந்து வந்தபடியே செதுக்கப்படாதிருந்த அந்த வைரத்தில் இரண்டு வைரங்கள் இருப்பதைக் கண்டார். அந்த இரு துண்டுகளிலிருந்து இரு மாட்சிமையான வைரங்கள் செதுக்கினார்.

அப்படியே நம் ஜீவியத்தின்மீது ஒரு பலத்த அடி விழ தேவன் அனுமதிக்கிறார். இரத்தம் பீரிடுகிறது, நரம்புகள் வதைப்படுகின்றன, ஆத்துமா வேதனையில் கதறுகிறது. அந்த அடி அதிகப் பிசகாக உனக்குத் தோன்றுகிறது. அது பிசகல்ல; நீ தேவனுக்கு உலகிலேயே விலைமதிப்பில்லா ஆபரணமாயிருக்கிறாய். சர்வ உலகத்திலும் கைதேர்ந்த வைரம் இழைப்போர் அவரே.

ஓர்நாள் நீ அரசரின் கிரீடத்தில் ஜொலிக்கவேண்டும். இப்பொழுது நீ அவர் கரத்திலிருப்பதால் உன்னை எப்படி நடத்தவேண்டும் என்பதை அவர் அறிவார். தேவனுடைய அன்பு அதை அனுமதித்து அதன் ஆழத்திலிருந்து நீ காணாததும், நினையாததுமான ஆவிக்குரிய ஆசீர்வாதங்களையும் பாக்கியங்களையும் தருவதாலன்றி, பயந்து நடுங்கும் உன் ஆத்துமாவின்மேல் ஒரு அடிதானும் விழாது.

—ஜே. எச். மாக்

ஜியார்ஜ் மெக்டோனல்ட் எழுதிய புத்தகங்கள் ஒன்றில் பின்வரும் சம்பாஷணை துணுக்கு இருக்கிறது. மேபல் அம்மாள் மிகக் கசப்போடு, 'கர்த்தர் ஏன் என்னை உண்டாக்கினார்? என்னை உண்டாக்கியதின் நோக்கத்தை நிச்சயமாகவே நான் அறியக்கூடவில்லையே' என்றார்கள்.

அதற்கு டாரதி, 'ஒருவேளை இதுவரை அதிகப்பயனில்லைபோலும். ஆனால் அவர் உன்னைச் செய்து முடிக்கவில்லை. அவர் உன்னை உருவாக்கிக்கொண்டிருக்கிறார். அதற்குள் நீ போராடுகிறாய்' என்றாள்.

மனிதர் நாங்கள் இன்னும் உருவாக்கப்படும் நிலையில்தான் இருக்கிறோம் என்று நம்பவேண்டும். உருவாக்கப்படச் சம்மதிக்க வேண்டும். குயவன் களிமண்ணைக் கையாளுவதுபோல் அவர் நம்மை கையாளச் சமூலமாய் இடம் கொடுக்கவேண்டும். அவருடைய சக்கரம் சுற்றுகையில் அதன் அசைவுக்கு ஏற்றவாறு பணிந்து நம்பிக்கையான கிரியையால் வளைந்து கொடுக்கவேண்டும். அப்படிச் செய்தால் கொஞ்சகாலம் அவருடைய கரத்தின் அழுத்தம் வேதனை கொடுத்தாலும் அதைச் சந்தோஷமாய் வரவேற்கக் கூடியவர்கள் ஆவார்கள், சில வேளைகளில் ஒரு புத்திரனை மகிமைக்குக் கொண்டு வருவதான தெய்வீக் நோக்கத்தை நம்புவது மாத்திரமல்ல, காணவும் செய்வார்கள்.

'அன்பின் தேவன் தகுதி என்று கண்டாலன்றி, ஒரு அம்பும் உன்னைத் தாக்காது.'

## ஏப்ரல் 18

'அவரே காரியத்தை வாய்க்கப்பண்ணுவார்' (சங். 37:5).

நான் ஜெயித்தபின், நான் ஜெபித்த காரியம் கைகூட என்னால் ஆனதையெல்லாம் செய்வது என் கடமை என்று ஒருகாலத்தில் எண்ணினேன். அவர் எனக்கு அதைவிட நல்ல வழியைக் காட்டினார். என் சுயப்பிரயாசம் அவருடைய வேலைக்கு எப்போதும் தடங்கலாயிருக்கிற தென்பதை காட்டினார். நான் ஜெபித்து எல்லாவற்றிற்கும் முழுவதுமாய் அவரையே நம்பும்பொழுது துதியோடு காத்திருந்து அவர் செய் என்று சொல்வதை மட்டுமே செய்யவேண்டுமென அவர் விரும்புகிறார். ஒன்றும் செய்யாமல் அவரையே நம்பிச் சும்மா உட்கார்ந்திருத்தல் ஆபத்துக்கிடம்போல் தோன்றுகிறது. போரை நாமே நடத்தவேண்டும் என்கிற சோதனை அடிக்கடி அதிகமாய் உண்டாகிறது.

தண்ணீரில் மூழ்கப்போகும் மனிதன் ஒருவன், தன்னைக் காப்பாற்றுகிறவனுக்கு உதவிசெய்ய முயன்றால் அவனைக் காப்பது மிகவும் கஷ்டமான காரியம் என்பது நாம் யாவரும் அறிந்த விஷயம். அதுபோல நமது போரை நாமே நடத்துவோம் என்று பிடிவாதம் செய்யும்போது, தேவன் நமது போரை நமக்காக எடுத்து நடத்துவது முடியாத காரியம். நாம் தலையிடுதல் அவருடைய வேலைக்கு தடையாகும்.

பூலோகச் சக்தி வேலையை நடத்துகையில் பரலோக சக்தி வேலை செய்ய முடியாது.

நம்முடைய ஜெபத்திற்கு விடை அருள தேவனுக்கு நேரம் வேண்டும். இவ்வகையில் நாம் கர்த்தருக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கத் தவறுகிறோம். ஒரு ரோஜா மலருக்கு வர்ணம் கொடுக்க தேவனுக்கு நேரம்வேண்டும். ஓர் பெரு மரத்தை உண்டாக்க அவருக்கு நேரம்வேண்டும். கோதுமை வயல்களிலிருந்து ஒரு ரொட்டி உண்டாக்க, தேவனுக்கு நேரம் செல்லும். அவர் மண்ணை எடுக்கிறார், அதை உடைக்கிறார், அதை மிருதுவாக்குகிறார், அதை வளமுள்ளதாக்குகிறார். பனி மழையினால் அதை நனைக்கிறார். ஜீவனால் அதை உஷ்ணம் பெறச்செய்கிறார். இலைகளும், தண்டுகளும், பொன்நிறத் தானிய மணிகளும் கொடுக்கிறார். அதன்பின் கடைசியாகப் பசியுற்ற மக்களுக்கு ஆகாரமாக அப்பத்தைக் கொடுக்கிறார்.

இவை யாவிற்கும் நேரம் தேவை. ஆகையால் நாம் விதைத்துப் பண்படுத்தி கர்த்தருடைய நோக்கம் நிறைவேறுமளவும் நம்பிக்கையில் நிலைத்துக் காத்திருக்கவேண்டும். 'காலம்' என்னும் விஷயத்தில் தேவனுக்கு ஒரு சந்தர்பபம் கொடுக்கவேண்டும். அதே பாடத்தை நமது ஜீவியத்திலும் கற்றுக்கொள்ளவேண்டும். விடை அருள தேவனுக்கு நேரம் தேவை. —ஜே.எச்.எம்.

## ஏப்ரல் 19

*'நீங்கள் நின்றுகொண்டு இன்றைக்குக் கர்த்தர் உங்களுக்குச் செய்யும் இரட்சிப்பைப் பாருங்கள்' (யாத். 14:13).*

ஒரு விசுவாசி அதிக நெருக்கடியான நிலைமையில் அசாதாரணமான கஷ்டத்திலிருக்கும்போது, அவனுக்கு இந்த வார்த்தைகள் தேவனுடைய கட்டளையாயிருக்கின்றன. அவன் பின்வாங்க முடியாது. அவன் முன்னேறிச் செல்லவும் முடியாது. வலது இடது புறங்களிலும் அடைபட்டிருக்கிறான். அப்பொழுது அவன் என்ன செய்ய வேண்டும்?

'நீ நின்றுகொண்டிரு' என்பதே எஜமானின் வார்த்தை. அப்படிப்பட்ட நேரங்களில் அவன் தன் எஜமானுடைய வார்த்தைக்கு மட்டும் செவிகொடுத்தால் அது அவனுக்கு நன்மை பயக்கும். ஏனென்றால், வேறு துர்ப்போதனைக்காரர் தங்கள் யோசனைகளைச் சொல்ல வருவார்கள். 'நம்பிக்கையின்மை' உன் செவியில் நீ 'கீழே விழுந்து மடிந்துபோ, உன் விசுவாசத்தை முற்றிலும் விட்டுவிடு' என்று இரகசியமாய்ச் சொல்லுகிறது. ஆனால் தேவன் நாம் தைரியத்துடன் உற்சாகமாயிருக்கவேண்டுமென்றும் நமக்கு அதிகக் கேடுகாலமாயிருக்கையில், அவருடைய உண்மையிலும், அன்பிலும், களிகூரவேண்டுமென்றும் விரும்புகிறார். கோழைத்தனம், 'பின்வாங்கு, உலக மக்களின் வழிக்கே திரும்பிப்போ, நீ கிறிஸ்தவனாயிருக்க முடியாது, அது மிகக் கஷ்டம், உன் கொள்கைகளை விட்டுவிடு' என்கிறது.

ஆனால், சாத்தான் தன் வழியைப் பின்பற்றும்படி எவ்வளவாய்த் தூண்டினாலும், நீ தேவனுடைய பிள்ளையானால் அதைப் பின்பற்ற உன்னால் முடியாது. நீ நாள்தோறும் பலமடைந்து வரவேண்டும். மரணமானாலும் பாதாளமானாலும் உன்னை உன் வழியைவிட்டு விலகச் செய்ய முடியாது. கொஞ்ச நேரம் நின்றுகொண்டிரு என்று சட்டளை பிறந்தால் என்ன? அதுவும் குறித்த காலத்தில் முன்னேறிச் செல்ல உன் பலனை அதிகப்படுத்தும்.

அவசரம், 'நீ ஏதாவது செய். உன்னைச் சுறுசுறுப்பாக்கிக்கொள். நின்றுகொண்டிருப்பது வீணாய்க் காலம் கழிப்பதாகும்' என்று சொல்லுகிறது. இப்பொழுதே நாம் ஏதாவது செய்யவேண்டும் என்று நினைக்கிறோம். ஏதாவதல்ல, எல்லாம் செய்யப்போகிறவர் ஆண்டவர்; அவரை நோக்கிப் பார்த்திருக்கிறோம்.

செய்து முடிப்பேன் என்ற பெருமை அகந்தை அடைந்து, 'சமுத்திரம் உன் முன்னால் இருந்தால், நீ அதனுள் நடந்துசென்று அற்புதம் ந க்கும் என்று எதிர்பார்' என்று சொல்லுகிறது. ஆனால் விசுவாசம் பெருமைக்கும், நம்பிக்கையிழத்தலுக்கும், கோழைத்தனத்திற்கும், அவசரத்திற்கும் செவி சாய்ப்பதில்லை. ஆனால் அது தேவன் 'நின்றுகொண்டிரு' என்பதைக் கேட்டு அசையாமல் நிற்கிறது.

'நின்றுகொண்டிரு' நீதியுள்ள மனிதனின் நிலையில் எல்லாச் செய்கைகளுக்கும் ஆயத்தமாயிரு. பின்வரும் கட்டளைகளை எதிர் பார்த்திரு. உன்னை வழிநடத்தும் குரலைக் கேட்கப் பொறுமை யோடும், சந்தோஷத்தோடும் காத்திரு. மோசே இஸ்ரவேலுக்குச் சொன்னதுபோல், அவ்வளவு தெளிவாகக் கொஞ்சக் காலத்திற்குள் 'முன்னேறிச் செல்' என்று தேவன் உனக்குச் சொல்லுவார்.

—ஸ்பர்ஜன்

உன் சிக்கலான வழியைக் குறித்து ஏன்
ஆத்திரம், அவசரம் கொள்ளுகிறாய்? அமைதியாயிரு.
தேவன் சகலமும் அறிவார் அவர் வேகம் கொடுக்கிறார்
அவரே தாமதிக்கச் செய்கிறார்
காண்பதல்ல, விசுவாசத்தின்படி நடப்பதே
உனக்கு நன்மையாகும்.
இன்னும் கொஞ்சக் காலம் நம்பியிரு
அவருடைய புன்னகையாம் விண் ஒளியில்
சீக்கிரமாக அவர் செய்கையை சரிவர அறிவாய்.

நிச்சயப்படாத காலங்களில் காத்திரு. சந்தேகம் உண்டானால் அப்போதும் காத்திரு. கிரியைசெய்ய உன்னையே கட்டாயப்படுத் திக்கொள்ளாதே. உன் ஆவியில் உனக்கு தடை உண்டானால் அது விலகும்வரை காத்திரு. அதற்கு மாறாகச் செல்லாதே.

## ஏப்ரல் 20

'பலத்தினாலுமல்ல, பராக்கிரமத்தினாலுமல்ல, என்னுடைய ஆவியினாலேயே ஆகு மென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்' (சக. 4:6).

நான் மலையின்மேல் செல்லும் ஒரு பாதை வழியே சென்றுகொண்டிருந்தேன். மலை அடிவாரத்தில் துவிச்சக்கர வண்டியில் செல்லும் ஓர் சிறுவனைக் கண்டேன். எதிர்காற்று வீசியதால் பையன் வண்டியை ஓட்ட வெகு சிரமப்பட்டுக்கொண்டிருந்தான். அவன் தன்னாலானவரை முயன்றுகொண்டிருக்கையில், அவ்வழியே மேலே செல்லும் ஓர் மோட்டார்வண்டி வந்தது. அந்த மோட்டார் அதிக வேகமாகச் செல்லாததால் பையன் அதற்குப் பின்னோடி சென்று, பின்னாலிருந்த கம்பியைப் பிடித்துக்கொண்டான். பின்பு என்ன சம்பவித்திருக்குமென்று எண்ணுகிறீர்கள்? அவன் அம்மலை உச்சியை நோக்கி ஒரு பட்சிபோல் பறந்து சென்றான். அப்போது என் உள்ளத்தில் மின்னல்போல் பளிச்சென்று சில எண்ணங்கள் உதித்தன.

'நான் என் அயர்விலும், பெலவீனத்திலும் அப்பையனைப் போலிருக்கிறேன். அநேக தடைகளுக்கு எதிராக நான் அம்மலையுச்சிக்குப்போக பிரயத்தனம் செய்கிறேன். ஆகையால் அவ்வேளையில் களைத்துப்போயிருக்கிறேன்.' ஆனால் சமீபத்தில் நான் எடுத்துப் பிரயோகிக்கக்கூடிய இயேசுவின் பலன் உண்டு. அவரோடு நான் தொடர்புகொண்டு, விசுவாசச் சம்பந்தம் ஏற்படுத்திக்கொண்டால் அது கடுகளவு கடினமாய் தோன்றும் ஊழியத்தை ஆற்றலை என்னுடையதாக்கி, எனக்குக் கடினமாய்த் தோன்றும் ஊழியத்தை எளிதில் நிறைவேற்றக்கூடியவனாக்கும் என்பதே.

இந்த எண்ணம் என் களைப்பை நீக்கி, உண்மையை உணரச் செய்தது.

நான் என்னைப் பரிசுத்த ஆவிக்கே முற்றிலும் கொடுத்துவிட்டேன். அவருடைய பூரணத்துவத்தைத் தேடுவேன். கரையை விட்டு விட்டு அவருடைய ஆற்றலின் ஆழத்திற்குள் செல்லுவேன். அவர் பாதுகாக்கவல்லவர். பரிசுத்த ஆவிக்கே முற்றிலும் ஒப்புவித்து விட்டேன். நான் என்ற எண்ணம் அழியும்வரை தாழ்ந்து சென்றேன். உடைந்து வெறுமையான் படகைப்போல் அவர் பாதத்தண்டையிலிருந்தேன். அவர் என்னைத் திருத்திப் பூரணமாக்கும் வரை காத்திருந்தேன்.

தேவ சித்தத்திற்கே என்னை முழுவதுமாக ஒப்புக்கொடுத்தேன். என் ஆண்டவர் சென்ற வழியைவிட வேறு வழியை நான் தேட மாட்டேன். சுகத்தையும் களியாட்டங்களையும் விட்டு அவரையே தெரிந்துகொண்டேன். அவரது குரல் என்னை வழிநடத்தும்வரை காத்திருப்பேன்.

முற்றிலும் விட்டுவிட்டேன். என்னுடைய சித்தம் என்பதொன்றும் இல்லை. அவருடைய சித்தமே இம்மையிலும் மறுமையிலும் நிறைவேறட்டும். என் திட்டங்களெல்லாம் அவர் விருப்பப்படியே மாறட்டும். நான் இப்பொழுது ஒன்றுமில்லாதவனாக இருந்தாலும் அவர்மூலம் யாவும் உடையவனாகவும் இருக்கிறேன்.

முற்றிலும் ஒப்புக்கொடுத்தேன். அவர் அன்பில் கட்டுண்டிருப்பது எவ்வளவு இனிமையானது. அதுவே சுதந்திரமாகவும் இருக்கிறது. பாவம், சந்தேகம், பயம், கவலை, துக்கம் இவைகள் யாவற்றினின்றும் விடுதலையடைந்தேன்.

முற்றிலும் ஒப்புக்கொடுத்தேன். இத்தகைய ஆறுதல் மிகவும் இனிமையானது, அவரது பாதத்தருகில் அமர்ந்து தெய்வீக விருந்தாளியான பரிசுத்தாவிக்குக் காத்திருப்பேன். அவர் என் உள்ளத்தை முழுவதுமாகச் சுத்தமாக்குவார்,

இனிமையான பரிசுத்த ஆவி வந்து என்னை நிரப்புகிறார். அவரில் நான் திருப்தியடைந்து பூரணமடைகிறேன். நான் அவருக்கே என்னை முழுவதும் ஒப்புக்கொடுத்தால் என் இருதயத்திலிருக்கும் அவரது தெய்வீக ஒளி ஒருபோதும் மங்காது.

## ஏப்ரல் 21

'தேவன் வாக்குத்தத்தம் பண்ணினதை நிறைவேற்ற வல்லமையுள்ளவராயிருக்கிறார் என்று முழு நிச்சயமாய் நம்பு' (ரோ. 4:21).

ஆபிரகாம் தம்முடலைப் பார்த்து, அது இனி பயன் கொடுக்கக் கூடாதபடி, சக்தியற்று செத்திருக்கிறது என்று இளக்கரித்துப் போகாமலிருந்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏனென்றால் அவர் தம்மையல்ல, சர்வ வல்லவரையே நோக்கினார்.

அந்த வாக்குத்தத்தத்தைக் கேட்டு அவர் திடுக்கிடவில்லை. இத்தனை பெரிய ஆசீர்வாதமாகிய பாரத்தின்கீழ் குனியாது நிமிர்ந்து நேரே நின்றார். அவர் பெலவீனமடையாமல் விசுவாசத்தில் பெருகிப் பலமடைந்தார். கஷ்டங்களை அவர் கண்டபோது தமது நிறைவினால் தேவனை மகிமைப்படுத்தினார். ஏனென்றால் வாக்குத்தத்தம் செய்தவர் அதிகமதிகமாகச் செய்ய, அநேக வழிகளை உடையவரல்லர். ஆகையால் அவர் அப்படிச் செய்தார்.

அளவில்லா வழி வகைகளையுடையவர் தேவன். குறைவு நம்மிடமேயிருக்கிறது. நாம் கேட்பதும் நினைப்பதும் கொஞ்சமே. நாம் வெகு குறைவாக எதிர்பார்க்கிறோம். நாம் நன்றாய் அறிந்து அதிகமாய் எதிர்பார்த்து, அதிகம் பெற்றுக்கொள்ளவேண்டும் என்று நம்மை மேன்மைப்படுத்த அவர் பிரயத்தனம் செய்கிறார். மாட்சிமை பொருந்திய தேவனிடம் நாம் கேட்கக்கூடாததும்,

பெற்றுக்கொள்ளக்கூடாததும் ஒன்றுமில்லை. ஒரே அளவு மாத்திரம் இங்குச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது 'நம்மில் கிரியை செய்யும் சக்தியின்படியிருக்கும்.' —எ. பி. சிம்சன்

'திவ்ய வாக்குத்தத்தங்கள் என்ற ஏணியின் வழியாய் ஆசீர்வாதம் நிறைந்துள்ள பொக்கிஷசாலைக்கு ஏறிச் செல்லுங்கள். ஒரு வாக்குத் தத்தத்தைத் திறவுகோலாகக்கொண்டு கர்த்தருடைய கிரியை, தயவு என்ற ஆஸ்திகள் நிறைந்துள்ள அறையின் கதவைத் திறவுங்கள்.'

## ஏப்ரல் 22

'நான் போகும் வழியை அவர் அறிவார்' (யோபு 23:10).

விசுவாசியே! இது எத்தனை மகிமையான நிச்சயம். நீ போகும் வழி கோணலாய், கஷ்டங்கள் நிறைந்ததாய் இருக்கலாம். 'அதை அவர் அறிவார்.' சோதனை, கண்ணீர் நிறைந்ததாயிருக்கலாம். சூளை ஏழு மடங்கு சூடாக்கப்பட்டிருக்கலாம். கர்த்தரே அதைச் சூடாக்கினார். நம்முடைய வழி மாராவின் தண்ணீரைப்போல் கசப்பாயிருந்தாலும், 'ஏலீம்' போல் சந்தோஷமும், உற்சாகமும் உள்ளதாயிருந்தாலும், அதை அறிந்து நமது காலடிகளை நடத்தும் சர்வ வல்லவர் ஒருவர் உண்டு.

எகிப்தியருக்கு இருட்டாயிருந்த அதே பாதையில் இஸ்ரவேலருக்கு மேகஸ்தம்பங்களும், அக்கினி ஸ்தம்பங்களுமிருந்தன. சூளை சூடா யிருக்கிறது. அதைச் சூடாக்குகிற கரத்தை நம்புவது மாத்திர மல்ல. அந்த அக்கினி நம்மைச் சுட்டெரிப்பதற்காக அல்ல. நம்மைச் சுத்திகரிப்பதற்கே என்ற நிச்சயமும் நமக்குண்டு. புடமிட்டபின் அவர் தமது ஜனங்களைப் பொன்னாக வெளியே கொண்டுவருவார்.

அவர் அருகிலிருக்கிறார் என்று நம்பக்கூடாத வேளையில் அவர் அதிக சமீபத்திலிருக்கிறார். 'என் ஆவி என்னில் தியங்கும்போது, நீர் என் பாதையை அறிந்திருக்கிறீர்' (சங். 142:3).

புலர் காலையில் நமது அறையில் நாம் காண்கின்ற சூரியனின் மிகச் சிறந்த ஒளியைவிட அதிக ஒளியுள்ள ஒருவரை அறிந்திருக்கிறோமா? அவரது கண்கள் நம் பாதையை அறிந்து அளவற்ற இரக்கத்துடனும் அனுதாபத்துடனும் நாள்முழுவதும் நம்மைப் பின்தொடர்ந்து வருகின்றன அல்லவா?

உலகத்தார் உங்களுக்குக் கஷ்டமான காலம் வரும்போது, கடின மனதோடே 'அது விதி' என்கிறார்கள். 'அது விதியின் விளைவு', 'விதியின் கொடுமை'' என்றெல்லாம் சொல்லுகிறார்கள். 'விதி' என்பது என்ன?

உயிருள்ளவரும், நடத்துகிறவருமாகிய தேவனை, ஏன் அவருடைய பூமியை ஆளாதபடி சிம்மாசனத்திலிருந்து தள்ளுகிறோம்? வேலையை நடப்பிக்கிற, ஒழுங்குபடுத்துகிற ஏகோவாவிற்குப் பதில், உயிரற்ற ஒன்றை ஏன் புகுத்தவேண்டும். யோபு தனக்கு உபத்திரவங்கள் உண்டாக, உலக நம்பிக்கை யாவும் அற்றுப்போகக் கண்டபோதும் அதில் தெய்வ கரத்தையே கண்டதுபோல், நாமும் காணுவோமென்றால், நமது சோதனைகளிலிருந்து வேதனை எவ்வளவாய்க் குறையக்கூடும். யோபு சபேயர்களின் பட்டயத்திற்குப் பின்னும், இடிக்குப் பின்னும், வாரிக்கொண்டுபோன புயலுக்குப் பின்னும் கடவுளின் கரத்தையே கண்டார். சிதறடிக்கப்பட்டுபோன தமது குடும்ப அமைதியிலும் அதையே கண்டார்.

'கர்த்தர் கொடுத்தார், கர்த்தர் எடுத்தார், அவருடைய நாமத்துக்கே ஸ்தோத்திரம் உண்டாவதாக' என்றார் (யோபு 1:21).

இவ்விதமாய்க் கடவுளைக் காண்பதே ஏற்ற காரியம். ஓர் காலம் இராஜாபோல் விளங்கிய அவர், சாம்பலில் படுத்துக்கொண்டு, 'அவர் என்னைக் கொன்றாலும், அவரை நம்புவேன்' என்று சொல்லக்கூடியவராயிருந்தபொழுது அவர் விசுவாசம் உன்னத நிலையை அடைந்தது. —மாக்டப்

## ஏப்ரல் 23

'நான் துன்பத்தின் நடுவில் நடந்தாலும் நீர் என்னை உயிர்ப்பிப்பீர்' (சங். 138:7).

'துன்பத்தின் மத்தியில் போனாலும்' என்று எபிரேய பாஷையில் எழுதப்பட்டிருக்கிறது. இவை எத்தனை விஸ்தரிப்படங்கிய வார்த்தைகள்! நாம் கஷ்டப்படும் நாட்களில், தேவனை நோக்கிக் கூப்பிட்டிருக்கிறோம். அவர் இரட்சிப்பேன் என்று சொன்ன வாக்குத்தத்தத்தைக் காட்டிக் கெஞ்சியுள்ளோம். ஆனால் இரட்சிப்பு அருளப்படவில்லை. சத்துரு நம்மை விடாமல் மேன்மேலும் தள்ளிக்கொண்டுபோய், போர்முனையில் கஷ்டத்தின் மத்தியில் கொண்டுபோய் விடுகிறான். இதற்குமேல் கர்த்தரைத் தொந்தரவு செய்வது எங்ஙனம் என்று நினைக்கிறோம்.

மார்த்தாள் 'ஆண்டவரே நீர் இங்கே இருந்திருந்தால், என் சகோதரன் மரித்திருக்கமாட்டான்' என்று சொன்னபொழுது (யோ. 12), அவள் நம்பிக்கை இழந்திருந்தபோதிலும் அவளுக்கு இன்னொரு வாக்குக் கொடுக்கிறார். 'உன் சகோதரன் மறுபடியும் எழுந்திருப்பான்' என்கிறார். நாம் கஷ்டத்தின் மத்தியில் நடந்து இரட்சிப்பின் காலம் கடந்துபோயிற்று என்று மார்த்தாளைப்போல், நினைக்கத்தக்கதாய்ச் சோதிக்கப்படும்பொழுது, அவர் தமது வேதத்திலுள்ள ஒரு வாக்குத்தத்தத்தால் நம்மைச் சந்திக்கிறார். 'நான் துன்பத்தின் நடுவில் நடந்தாலும் நீர் என்னை இரட்சிப்பீர்.'

அவருடைய பதில் அநேக நாட்கள் தாமதித்தாலும், நாம் துன்பத்தினூடே போய்க்கொண்டேயிருந்தாலும், துன்பத்தின் மத்தியே நம்மை அவர் கைவிடாது இரட்சிக்கும் இடமாகும்.

மேலும், மேலும் நம்பிக்கைக்கு இடமில்லை எனத் தோன்றும் சமயமே, அவர் சத்துருவின் உக்கிரத்திற்கு எதிராய்த் தமது கரத்தை நீட்டி, தம்மை நம்பினோர்க்கு ஜெயமாய் முடியச்செய்யும் வேளையாகும். நாம் ஏன் மனம் சோர்ந்துபோகவேண்டும்?

—ஆபிரகாம் ஒய்ட்

## புயலின் நயனம்

1 சுழல் காற்று உன்னைத் தூக்கிச் செல்லும் என்று அஞ்சாதே!
புயல் வரும் என்று பயத்தோடு காத்திராதே!
கல்மழையாகிய அதின் சாட்டையைப் பார்த்து நடுங்காதே!
புயலின் ஓரத்தை விட்டு நடுவே செல்.
அங்குச் சூரிய ஒளி உண்டு, தங்கத் தாபரம் உண்டு.
புயலின் நயனத்தூடே விசுவாசம் அவரைக் காணும்.

2 உக்கிரப் புயல் வீசிக் குமுறும்;
பயமுறுத்தும்; தீமை கரையில் மோதும்;
அலைகள் மலைபோல் வரும், வயல்கள் போர்க்களங்களாகும்;
ஆனால் கர்த்தர்மேல் நம்பிக்கை வைக்கும் ஆத்துமா,
புயலிலும் அமைதி கண்டு தைரியமாய்ப் பாடும்.

3 இரவின் இருளிலும் நம்பிக்கை இழக்கலாகாது,
புயல்காற்று ஒளியை ஓர் சிறிது மறைத்தாலும்
மிகுந்த இருளுக்கப்பால் ஒளியுள்ள வெள்ளி மிளிரும்;
பரலோக ஒளி அவரன்பால் உனதாகும்
துக்கம் உன் கண்ணை மறைக்காமல் பார்த்துக்கொள்
தேவனின் முகத்தையும், நீல மேகத்தையும் பார்.

4 ஆபத்திற்கும் பாவத்திற்கும் மறைவு புயலே.
பத்திரமாய் நீ இருக்கத் தேவனே உன்னை அதனுள் அழைத்துச் செல்கிறார்.
அவரோடிருக்கையில் கடுங்காற்று அமரும்,
சங்கீதத் தொனியில் காற்றின் சீற்றம் அடங்கும்.
புயல் மேகம் வருகையில் அமைதியாய்ச் சந்தோஷமாயிரு
புயலின் நயத்தூடே தேவன் தம் பிள்ளைகளைப் பார்த்துப் புன்னகை பூக்கிறார்.

## ஏப்ரல் 24

'விசுவாசம்—காணப்படாதவைகளின் நிச்சயமாயிருக்கிறது' (எபி. 11:1).

மெய் விசுவாசம் தபால்பெட்டியில் கடிதத்தைப் போட்டுவிட்டுப் பின் அதைப்பற்றிக் கவலையற்றிருப்பதுபோல் இருக்கிறது. அவநம்

பிக்கை கடிதத்தின் ஒரு நுனியைப் பிடித்துக்கொண்டு, 'இதற்குப் பதில் வராவிட்டால் என்ன செய்கிறது?' என்று எண்ணமிடுகிறது. அநேக வாரங்களுக்கு முன் எழுதப்பட்ட கடிதங்கள் பல என் மேசையின்மேல் கிடக்கின்றன. அவைகளின் மேல்விலாசத்தைக் குறித்தோ, அன்றி அவைகளில் எழுதியுள்ள சமாச்சாரங்களைக் குறித்தோ, சில சந்தேகங்கள் இருப்பதால் அவைகள் தபாலுக்கு அனுப்பப்படாமல் கிடக்கின்றன. எனக்காவது வேறு யாருக்காவது அவை இதுவரை ஒரு நன்மையும் செய்யவில்லை. நான் அவைகளை என் கையைவிட்டு அனுப்பி, தபால் இலாகாவையும், தபால் காரனையும் நம்பினாலன்றி அவை ஒன்றையும் சாதிக்கமாட்டா.

இதுவே மெய் விசுவாசத்தின் வழி. விசுவாசம் தன் காரியத்தைத் தேவனுக்கு ஒப்புவிக்கிறது. அப்பொழுது அவர் கிரியை செய்கிறார். 37ஆம் சங்கீதத்தில் ஓர் அழகான வாக்கியம் உண்டு. 'உன் வழியைக் கர்த்தருக்கு ஒப்புவித்து, அவர்மேல் நம்பிக்கையாயிரு, அவரே காரியத்தை வாய்க்கப்பண்ணுவார்' (37:5). ஒப்புவித்தாலன்றி ஒருபோதும் வாய்க்கப்பண்ணார். விசுவாசம் பெற்றுக் கொள்வது அல்லது கர்த்தர் ஈயும் வரங்களை எடுத்துக்கொள்வது ஆகும். நாம் நம்பிவந்து ஒப்புவித்து ஓய்ந்திருக்கலாம். நாம் பெற்றுக்கொள்ள அவரருகில் தங்கி அவர் கொடுப்பதை எடுத்துக் கொள்ளத் தொடங்கும்வரை நம்முடைய பாக்கியத்தை முற்றிலும் அவனைத் தேவனிடம் ஒப்புவித்தபின், அவனைக் குறித்துக் கவலைப் படுவதைவிட்டு ஓயவேண்டாமா? 'ஒன்றைக்குறித்தும் கவலைப்படாதிருங்கள்' என்ற உணர்ந்தவர்களாகமாட்டோம்.

டாக்டர் பைசன் என்பவர், தன் மகனுடைய நிலைமையைக் குறித்துக் கவலையாகி பாரம் சுமந்த ஒரு தாயாருக்குப் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதினார்: 'நீங்கள் உங்கள் மகனைக் குறித்து அதிகக் கஷ்டம் எடுத்துக்கொள்ளுகிறீர்கள். நீங்கள் இப்பொழுது செய்திருக்கிறபடி ஜெபித்து, கட்டளை வரையற்றதாயிருக்கிறது. "உங்கள் கவலைகள் எல்லாம் அவர்மேல் போட்டு" என்ற வசனமும் அப்படியே விளங்கக்கூடியதாயிருக்கிறது. நம்முடைய பாரத்தை இன்னொருவர்மேல் சுமத்திவிட்டால், பின்னும் அப்பாரம் நம்மை அழுத்துமா? கிருபாசனத்தண்டையிலிருந்து அதை நம்மோடு கொண்டுவந்தால் நாம் அங்கு விட்டுவரவில்லை என்பது தெளிவாகிறது. என்னைப் பொறுத்தமட்டில் என் ஜெபங்களைக் குறித்து ஒரே ஒரு சோதனை போடுவேன். அன்னாளைப்போல் நான் கர்த்தரிடம் ஏதாவதொன்றை ஒப்புவித்தபின், என் மனம் அதற்குமேல் வேதனை அடையாமல் கவலைகொள்ளாமல், மனத் துக்கமின்றி வரக்கூடுமானால் இதை நான் விசுவாசித்து ஜெபித்ததற்கு ஒரு சாட்சியாக கொள்வேன்.. என் பாரத்தைக் கூடவே கொண்டுவந்தால் என் விசுவாசம் கிரியை செய்யவில்லை என்ற முடிவுக்கு வருவேன்.'

## ஏப்ரல் 25

'அங்கே மகதலேனு மரியாளும், மற்ற மரியாளும் கல்லறைக்கு எதிரே உட்கார்ந்திருந்தார்கள்' (மத். 27:61).

துக்கம் மிக விந்தையான மூடத்தனமாயிருக்கிறது. அது கற்றுக்கொள்வதுமில்லை. கற்க ஆவல்கொள்வதுமில்லை. துக்கத்துடன் ஆண்டவரது கல்லறை வாயிலில் உட்கார்ந்த சகோதரிகள் வரப்போகும் வெற்றிகரமான 200 வருடங்களை நினைத்தார்களா? 'எங்கள் இயேசுவைக் காணும்' என்பதைத்தவிர வேறொன்றும் காணுதிருந்தார்கள்.

அவர்களுடைய நஷ்டத்தினுல் உன்னுடையவரும், என்னுடையவருமாகிய இயேசு வந்தார். கணக்கில்லாத துக்கம் நிறைந்த ஆன்மாக்கள் துக்கத்தின் மத்தியில் உயிர்த்தெழுதல் அடைந்திருக்கிறுர்கள். ஆனுலும் துக்கத்துடன் காத்திருந்த அவர்கள் இவற்றின் மூலக்காரணத்தைக் கண்டும் வேறொன்றையும் காணுதிருந்தார்கள். வாழ்வின் இறுதியென்று அவர்கள் எதை நினைத்தார்களோ அதுவே முடி சூட்டப்படுவதற்கு ஆயத்தமாயிற்று. பன்மடங்கு ஆற்றலுள்ளவராக மறுபடியும் ஜீவிப்பதற்காகவே கிறிஸ்து அப்பொழுது மௌனமாயிருந்தார்.

அவர்கள் அதைக் காணவில்லை. அவர்கள் துக்கித்தார்கள், அழுதார்கள், அப்புறம் போனுர்கள். தங்கள் இருதயங்களால் ஏவப்பட்டுத் திரும்பவும் கல்லறையண்டை வந்தார்கள். பின்னும் அது ஒளியிழந்த, மௌனமான ஒன்றையும் அறிவிக்காத கல்லறையாகவே யிருந்தது.

அப்படியே நமக்கு நேருகிறது. முதல் நாள் ஒவ்வொருவனும், தன் தோட்டத்தில் கல்லறைக்கெதிராய் உட்கார்ந்து, 'இந்த வியாகுலத்தை மாற்ற முடியாது. இதில் என்ன நன்மை வரக்கூடும் என்று நான் அறியேன், இதில் எனக்கு ஆறுதல் இல்லை' என்று சொல்கிறுன். ஆனுலும் நமது ஆழ்ந்த துன்பத்தின் நடுவில் அடிக்கடி கிறிஸ்து உயிர்த்தெழும்பக் காத்துக்கொண்டிருக்கிறுர்.

நமது மரணம் எங்கே இருப்பதாய்த் தோன்றுகிறதோ, அங்கே இரட்சகர் இருக்கிறுர். நம்பிக்கையின் இறுதி யாங்குளதோ அங்கே கனி கொடுத்தல் ஆரம்பமாகிறது. இருள் எங்கே அடர்ந்திருக்கிறதோ, அங்கு ஓர்போதும் மங்கா ஒளியின் பிரகாசம் வெளிப்படும். நம் அனுபவம் முழுவதையும் சேர்த்துப்பார்த்தால் நம் தோட்டத்திலுள்ள கல்லறை அதன் அழகைக் குறைப்பதாகத் தோன்றுது. நம்முடைய சந்தோஷங்களின் மத்தியில், சில துக்கங்கள் ஏற்படுவதால் சந்தோஷம் இன்னும் இரட்சிக்கக்கூடியதாகிறது. நமது துக்கங்கள் தேவன் அவற்றைச் சுற்றி நாட்டி வைத்திருக்கும் சந்தோஷங்களால் நன்மையாய்த் தோன்றுகின்றன். அந்த பூக்கள் நாம் விரும்பாத

பூக்களாயிருக்கலாம். அவைகளை நாம் பறிக்க விரும்பாதிருக்கலாம். ஆனால் அவைகள் அன்பு, நம்பிக்கை, விசுவாசம், சந்தோஷம், சமாதானமாகிய இருதய மலர்களே. இவைகளே கிறிஸ்தவனின் இருதய ஆழத்திலுள்ள ஒவ்வொரு கல்லறையைச் சுற்றிலும் நாட்டப் பட்டிருக்கும் பூக்கள்.

மகா துக்கத்தின் வழியே
கிறிஸ்து இளைப்பாறுதலில் பிரவேசித்தார்
இங்கு நான்மட்டும் ரோஜா மலர்களை எதிர்பார்க்கலாமா?
அன்றி இவ்வுலகம் பாக்கியமானதென்று எண்ணலாமா?
இவ்வுலகத் துக்கமாகிய முள்முடியிலிருந்து,
பரலோக வெண்ணிறப் பூக்கள் மலரும்
இங்கே தன் சிலுவையை மனத்தாழ்மையோடு சுமப்பவன்
அங்கே அரச ஆடை அணிவான்.

## ஏப்ரல் 26

'என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லா வற்றையும் நஷ்டமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன்' (பிலி. 3:8).

ஒளிவிடும் வஸ்துக்கள் அதிக விலையுள்ளவை. வெளிச்சம் ஏதாவது ஒன்று எரிந்து அழிவதினால் உண்டாகிறது. ஏற்றப்படாத மெழுகுத் திரி பிரகாசிப்பதில்லை. பிரகாசிக்குமுன் அது எரியவேண்டும். நமக்கு ஒரு நஷ்டமுமின்றி, நாம் பிறர்க்குப் பயனுள்ளவர்களாக முடியாது. 'எரிதல் என்பது துக்கத்தைக் குறிக்கும். நாமோ வேதனை என்றால் பயப்படுகிறோம்.'

நாம் பெலனோடு கடமை செய்யக்கூடியவர்களாக இருக்கும் போதும், இருதயமும், கைகளும், கருணை நிறைந்த ஊழியத்தில் ஈடுபட்டிருக்கும்போதும் மாத்திரமே நாம் அதிக நன்மை செய் கிறோம் என்று எண்ணுகிறவர்களாகிறோம்.

நாம் அப்புறம் அழைக்கப்பட்டு வேதனைமட்டும் அனுபவிக்கையில், நாம்சுகவீனமாயிருக்கையில், வேதனை நம்மைஉபத்திரவப்படுத்துகை யில், நம் வேலை யாவையும் விட்டு விலகியிருக்கையில், நாம் பயனற்ற வர்களாய்ப் போனோம். நாம் ஒன்றும் செய்யாதிருக்கிறோம் என்று எண்ணுகிறோம்.

ஆனால் நாம் பொறுமையாய் அடங்கியிருந்தால், நாம் பாடனுப விக்கும் நாட்கள், நாம் ஊழியஞ் செய்த நாட்களைவிட உலகிற்கு ஆசீர்வாதமாயிருக்கும். நாம் இப்போது எரிந்துகொண்டிருக் கிறோம். நாம் எரிவதால் பிரகாசித்துக்கொண்டுமிருக்கிறோம்.

'வரும் நாளின் மகிமை இன்றையத் தினத்தின் கஷ்ட ஜீவியத்தில் வேரூன்றியிருக்கிறது.'

அநேகர் சிலுவையின்றி மகிமைவேண்டுமென்றும், எரியாமலே பிரகாசிக்கவேண்டுமென்றும், சிலுவையில் அறையப்படாமல் கிரீடம் வேண்டுமென்றும் ஆசைப்படுகிறார்கள். ஆனால் மகுடாபிஷேகத்திற்கு முன்னால் சிலுவையில் அறையப்படவேண்டும்.

1 சூரிய ஒளிகாயும் பிரதேசத்தில்
வளரும் கற்றாழையின் சரிதையே அறிவாயோ,
நூறு ஆண்டு அது தாழ்வாய் வளர்ந்து,
பின் பூக்கும் பருவம் அடைகிறது.
பின்பு ஆச்சரியமான அரும்பு கொத்துகள்
ஆயிரம் பூக்களாக மலர்கின்றன.
இந்தப் புஷ்பராணி தான் மலர்ந்த அழகில்,
உஷ்ணப் பிரதேச மலர்களில் அதிகச் சிறப்பு வாய்ந்தது.
ஆனால் செடி அப்பூவிற்குப் பலியாகி,
ஒருமுறை புஷ்பித்தவுடன் மடிகிறது.

2 சூரிய ஒளி காயும் பிரதேசத்தில்
வளரும் கற்றாழையைப்பற்றி மற்றொரு செய்தியும் உண்டு.
அதின் ஆயிரம் மலர்களில் ஒவ்வொன்றும்,
மலர்ந்து கீழே விழுகையில்,
தரையில் தான் விழும் இடத்தில்,
சிறு செடியாக வேரூன்றும்,
மடியும் பூ காம்பிலிருந்து உதிர, உதிர,
அழகாய்ச் செடி உயிரோடு கிளம்பும்.
பெரிய செடிமடிய சிறிய செடி ஜீவன் பெறுவதால்
அது சாவதால் ஆயிரமடங்கு ஜீவனுள்ளதாகிறது.

3 'கிம்மல்பார்' என்று அரபியர் கூறும்
நாரையின் சரிதை நீ அறிவாயோ,
ஆப்பிரிக்காவிலுள்ள தனி இடங்களில்
தனியாய் வசிக்கும் பட்சிகளில் இது ஒன்று.
அது தன் குஞ்சுகளுக்காக எத்தனை
பாடுபட்டுக் கவலையோடு நேசிக்கிற தென்று நீ அறிவாயோ?
அவைகளுக்கு மலையிலிருந்து நீரும்
கடலிலிருந்து மீனும் கொண்டுவரும்
பஞ்சகாலத்தில் தன் அளவிலா அன்பினால்
தன் மார்பிலிருந்து இரத்தம் கொடுத்து
அவற்றைப் போஷித்து அதனால் மடியும்.

4 பரிசுத்தமும் உண்மையுமானவரின்
வெகு சிறந்த சரிதையை நீ அறியாயோ?
அவர் மரிக்கிறார், ஆனால் அவர் ஜீவனால்
எண்ணில்லா ஜீவன் புத்துயிர் பெறுகின்றன
ஆகாயவிரிவை விண்மீன் நிரப்புவதுபோல்

அவர் விதைகள் பரவி உலகை நிரப்புகின்றன
அன்பின் ஜீவியத்திற்காக 'ஜீவனின் மேலுள்ள ஆசையை விட்டுவிடு' என்று கற்பித்தார்.
அவர் மரணம் நமக்கு ஜீவன் அவர் நஷ்டம் நமக்கு இலாபம்
அவர் கண்ணீருக்குப் பதில் நாம் சந்தோஷமும்,
வேதனைக்குப் பதில் சமாதானமும் அடைகின்றோம்.

## ஏப்ரல் 27

'மரித்தேன், ஆனாலும், இதோ சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிறேன்' (வெளி. 1:18).

உயிர்த்தெழுதலின் அடையாளமான லீலி புஷ்பங்கள் இன்று காலையில் துக்கத்திலிருந்து அநேகருக்கு, நீ சொல்லியிருக்கக்கூடிய பழமையான உயிர்த்தெழுதலின் சத்தியத்தைப் போதிக்கின்றன.

ஞானத்திற்கு உறைவிடமான பூர்வீக வேத புத்தகமே! சாவு எனக்கு இலாபம் என்னும் நிச்சயத்தைக் கொடுக்கும் உன்னிலுள்ள பாகங்களை நான் மறுபடியும் படிப்பேனாக.

புலவர்களே! ஒவ்வொரு வரியிலும் நித்திய ஜீவன் என்ற சுவிசேடத்தை அறிவிக்கும் வசனங்களை எனக்குச் சொல்லுங்கள்.

பாடகர்களே! இன்னும் ஒருமுறை சந்தோஷக் கீதங்கள் பாடுங்கள். உயிர்த்தெழுதலைக் குறித்த மிக சாதாரணமான சங்கீதங்களை நான் மறுபடியும் கேட்கும்படி கெம்பீரமாய்ப் பாடுங்கள்.

மரங்களே, மலர்களே, பட்சிகளே, கடலே, ஆகாயவிரிவே, காற்றுகளே அதை மெதுவாகச் சொல்லுங்கள். அதை மறுபடியும் சொல்லுங்கள். பட்சி பாஷையில் பாடுங்கள். எதிரொலியுங்கள். ஒவ்வொரு அணு ஜீவனுக்குள்ளும் அது சப்திக்கட்டும். ஆகாயம் அதினால் நிறையட்டும்.

உயிர்த்தெழுந்த நற்செய்தி மேன்மேலும் சொல்லப்படட்டும், நம்பிக்கை உறுதியாகும்வரை, திடமான அறிவு உண்டாகுமட்டும் நாமும் பரிசுத்த பவுலைப்போல், கொலையுண்ணப் போவதாயினும், நம்பிக்கையும் அமைதியும் நம் முகத்தில் ஜொலிக்க, வெற்றிகரமாய்ப் போவோமாக.

கல்லறைத் தோட்டத்து மரங்களிடையே துக்கம் நிறைந்த முகத்தோடு திரிபவர்களே, இன்று நீங்கள் பார்த்துவருகின்ற கல்லறைகளை விட்டுக் கர்த்தரின் நீல வானத்தை நிமிர்ந்து பாருங்கள்.

இது துக்கப்படுவதற்கும் மனங்கசந்து போவதற்கும் ஏற்ற காலமல்ல.

உயிர்த்தெழுந்த பண்டிகையின் மணியோசையைக் கேளுங்கள். அதற்கு விடையளிப்பதுபோல் உங்கள் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பட்டும்.

கிறிஸ்து நாம் அஞ்சும் பகைவனின் வலிமைக்குட்பட்டவராகிக் கல்லறையின் சிறையிலேயே இன்றும் இருந்தால், அந்தக் குகையி னின்றும் அவர் எழுந்திருக்கரவிட்டால், நீங்கள் கண்ணீர் வடிப் பதைக் குறித்து யாரும் குறைகூறமாட்டார்கள் அல்லவா?

கிறிஸ்து இறந்திருந்தால் நாம் துக்கப்படவேண்டியது ஏற்புடை யதே. ஆனால் அவரோ உயிர்த்தெழுந்து மரணத்தை வென்றார். ஆகையால் நாளை வரையிலுமாவது நீங்கள் துயரப்படுவதை விட்டு விடுங்கள்.

உயிர்த்தெழுந்த பண்டிகையின் போதாவது துக்கத்திற்கு விடு முறை கொடுங்கள்.

ஒரு பாதிரியார் தம் அறையிலிருந்து உயிர்த்தெழுந்த பண்டிகைக் கான பிரசங்கம் எழுதிக்கொண்டிருந்தார். அப்பொழுது ஆண்டவர் 'உயிரோடிருக்கிறார்' என்ற சத்தியம் அவர் உள்ளத்தை வெகுவாய்க் கவர்ந்தது. அவர் குதூகலத்தோடு குதித்தெழுந்து, கிறிஸ்து உயிரோடிருக்கிறார், அவர் சாம்பலில் மூடப்பட்டு, 'இறந்தார்' என்று சொல்லப்படும் பெரியோரல்ல, 'இருக்கிறார்' என்று சொல்லப் படும் பெரியவர் என்று மறுபடியும் மறுபடியும் சொல்லிக்கொண்டு, அறையினுள் அங்குமிங்கும் நடந்துகொண்டிருந்தார். கிறிஸ்து உலகில் வாழ்ந்தார் என்பது மட்டும் உண்மையல்ல. அவர் இப் பொழுதும் வாழ்கிறார் என்பது உண்மை. இதுவே உயிர்த்தெழுந்த நாளின் மகிமையான சத்தியம்.

ஒவ்வொரு கல்லறையின்பேரிலும் உயிர்த்தெழுதலுக்கு அடை யாளமான லீலி மலருவதாகவும், ஒவ்வொரு கல்லறையிலும் ஒரு தூதன் உட்கார்ந்திருப்பதாகவும் நம்புகிறோம். உயிர்த்தெழுந்த கர்த்தரை நம்புகிறோம்.

நாம் கடந்துபோனவற்றை மட்டும் நினைத்துக்கொண்டிருந்தால் அவரது கல்லறையண்டையில் மட்டும் அவரைத் தொழுபவர்க ளாவோம். ஆனால் விண்ணிலும் நமக்குள்ளும் அவர் இருப்பதை உணர்ந்தால், உயிரோடிருக்கும் கிறிஸ்துவை வணங்கக்கூடியவர்க ளாவோம்.

—அபாட்

## ஏப்ரல் 28

'இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரை நோக்கி கூப்பிட்டபோது, கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை இரட்சிக்கும்படி, காலேபின் தம்பியான . . . ஒத்னியேல் என்னும் ஒரு இரட்சகனை அவர்களுக்கு எழும்பப்பண்ணினார். அவன்மேல் கர்த்தருடைய ஆவி வந்தது' (நியா. 3:9,10).

கர்த்தர் தமது வீரரை ஆயத்தம் செய்கிறார். சமயம் வரும்போது ஒரு நொடிப்பொழுதில், அவர்களை அவர்களுக்குரிய இடங்களில்

அமைந்தாற்போல் வைக்கிருர். அவர்கள் எங்கிருந்து வந்தார்கள் என்று உலகம் வியப்படைகிறது.

என் அருமைச் சிநேகிதனே! வாழ்க்கையின் துன்பங்களின் மூலம் பரிசுத்த ஆவியானவர் உன்னே ஆயத்தப்படுத்த இடம் கொடு. பளிங்குக் கல்லுக்கு இறுதியான அலங்காரம் கொடுக்கப்பட்டவுடன் அதை உயர்ந்த பீடத்தில் வைத்து அதற்குரிய இடத்தில் பொருத்து வது எளிதாயிருக்கும்.

நாமும் ஒத்னியேலேப்போல் ஜாதிகளே நியாயம் தீர்த்து, கிறிஸ்து வோடு ஆயிரம் வருடம் உலகை ஆளும் காலம் வருகிறது. ஆனல் அந்த மகிமையான நாள் வருமுன் தற்கால ஜீவியத்தின் சோதனே கள் மத்தியில், நாம் அவற்றின் முக்கியத்தை உணராத சிறு வெற்றி களின் மத்தியில் அவர் ஒத்னியேலே கீரியாத் செப்பேரில் ஆயத்தம் பண்ணினதுபோல, நம்மை ஆயத்தப்படுத்த இடம் கொடுக்கவேண் டும். பரிசுத்த ஆவியானவர் ஒரு ஒத்னியேலே ஆயத்தம்பண்ணி யிருந்தால் விண்ணுலகையும் மண்ணுலகையும் ஆளும் தேவன் அவனுக்கு ஒரு சிம்மாசனத்தை ஆயத்தம்பண்ணியிருப்பார் என்பது நிச்சயம்.

'மனுஷீக பலமும் பெருமையும்,
ஜீவியத்தின் சௌகரியத்திலிருந்து உண்டாவதில்லே
அலேகளில்லாக் கடலில் மிதக்கும்
கட்டைபோல் வீரன் இருத்தலாகாது.'

மனுஷ ஜீவியத்தின் உன்னத வழிகள் ஒவ்வொன்றும் அடிக்கடி பள்ளங்கள் வழியே செல்கின்றன. ஒவ்வொருவனும் வெற்றி என்னும் உயர்ந்த வழியில் பிரயாணம் செய்யுமுன் துன்பமாகிய மலேக்குகை வழிகளில் செல்லவேண்டும்.

## ஏப்ரல் 29

'எலியா என்பவன் நம்மைப்போல் பாடுள்ளவனுயிருந்தான்' (யாக். 5:17).

இதற்காக கர்த்தரைத் துதிப்போமாக. உன்னேயும், என்னேயும் போல் அவன் சூரைச் செடியின் அடியில் கிடந்தான். நாம் அடிக்கடி செய்வதுபோல், அவனும் முணுமுணுத்து முறையிட்டான். நாம் அடிக்கடி நம்பிக்கை யிழந்திருப்பதுபோல் அவனும் நம்பிக்கை இழந் திருந்தான். ஆனல் அவன் வேதனே அணுகினபோது, அவன் அவ்வாறு இருக்கவில்லே. 'அவன் நம்மைப்போல் பாடுள்ளவனு யிருந்தும்' மறுபடியும் ஜெபம்பண்ணிஞன்.

இது மூல பாஷையாகிய எபிரேய மொழியில் அழகாகச் சொல்லப் படுகிறது. 'ஊக்கமாக' என்றல்ல, ஜெபத்தின்மேல் ஜெபம்பண்ணி ஞன் என்று சொல்லப்படுகிறது.

கர்மேல் பர்வதத்தின் உச்சியில் வந்து காண்பதையும் விசுவாசத்தையும் குறித்த சிறந்த உவமையைப் பார். நெருப்பைத் தோற்றுவிப்பது அப்பொழுது அவசியமாயிருக்கவில்லை. வெள்ளம் பெருகிவரச் செய்வதே அவசியமாயிருந்தது. ஆனல் நெருப்பை வரச் செய்ததால் வெள்ளத்தையும் பெருகிவரச் செய்ய முடியும். அவர் தமது முகம் முழங்கால்களில் பதியும்படி குனிந்தார் என்று சொல்லப்படுகிறது. அதாவது ஏனைய காட்சிகளையும் ஒலிகளையும் தாம் நுகராதவாறு தடுத்துக்கொண்டார். தமது மேலாடையால் முகத்தை மறைத்து அங்கு நடப்பது ஒன்றையும் காணவோ கேட்கவோ முடியாத நிலையில் இருந்தார்.

அவர் தமது வேலைக்காரனை நோக்கி, 'அங்கு என்ன காணப்படுகிறது கவனி' என்று சொன்னர். அவன் திரும்பி வந்து வெகு சுருக்கமாய் 'ஒன்றுமில்லை' என்று விடை பகர்ந்தான்.

அப்படிப்பட்ட சமயத்தில், நாமாக இருந்தால் என்ன செய்வோம்? நாம் 'இது நான் நினைத்தபடியேதான் இருக்கிறது' என்று சொல்லி ஜெபிப்பதை விட்டு விடுவோம். எலியா அப்படியா செய்தார்? இல்லை. அவர் 'திரும்பிப்பார்' என்றார். வேலைக்காரன் திரும்ப வந்து 'ஒன்றுமில்லை' என்றே சொன்னன்.

இப்படி அநேக தடவைகளுக்குப்பின் வேலைக்காரன் திரும்பி வந்து, 'ஒரு மனிதனுடைய கையளவு மேகம் இருக்கிறது' என்று சொன்னன். ஒரு மனிதனின் கை மன்ருட உயர்த்தப்பட்டது. சற்று நேரத்தில் மழை பொழிந்தது. வேகமான குதிரைகளோடு வந்தும் ஆகாப் சமாரியாவின் வாசலையடைய நேரம் இருக்கவில்லை.

இதுவே விசுவாசமும் காட்சியும் என்பது. விசுவாசம் தன்னைக் கடவுளோடும் ஒட்டிக்கொள்கிறது. 'பார்வை' கவனித்து ஒன்றும் காணுதிருக்கிறது. விசுவாசம் மறுபடியும் 'ஜெபத்தின்மேல் ஜெபம்' பண்ணிக்கொண்டே யிருக்கிறது. நம்பிக்கையற்ற காரியத்தைப் 'பார்வை' சொல்லிக்கொண்டே யிருக்கிறது.

உனக்கு அவ்விதம் ஜெபிக்கத் தெரியுமா? விடாப்பிடியாய் எப்படி ஜெபிப்பது என்று தெரியுமா? பார்வையானது மனம் சோர்ந்து போகத்தக்க காரியங்களைத் தன் இஷ்டம்போல் சொல்லட்டும். அவைகளை நீ கவனியாதே. ஜீவனுள்ள தேவன் இன்னும் பரலோகத்தில் இருக்கிருர். தாமதிப்பதும் அவருடைய கருணையினுலேயே.

—ஆர்தர் டிபியாஸன்

விசுவாசத்தின் விடாப்பிடியைக் காட்டுவதற்காக மூன்று சிறுவர் பின்வருமாறு விசுவாசத்தை விவரித்தனர். முதல் சிறுவன், அது 'கிறிஸ்துவைப்பற்றிக்கொள்ளுதல்' என்ருன். இரண்டாமவன், அது 'பிடித்துக்கொண்டிருத்தல்' என்ருன். மூன்ருமவன், அது 'ஒன்றையும் விடாதிருத்தல்' என்ருன்.

## ஏப்ரல் 30

*'அவலட்சணமும் கேவலமுமான பசுக்கள் அழகும் புஷ்டியுமான ஏழு பசுக்களையும் பட்சித்துப்போட்டது . . . சாவியான கதிர்கள் செழுமையும் நிறைமேனியுமான அந்த ஏழு கதிர்களையும் விழுங்கிப்போட்டது' (ஆதி. 41:4–7).*

இந்தச் சொப்பனம், அது இருக்கிற பிரகாரமே, நமக்கு ஒரு எச்சரிக்கையாக இருக்கிறது. நமது ஜீவியத்தின் சிறந்த வருடங்கள், மேன்மையான அனுபவங்கள், நாம் அடைந்த சிறந்த வெற்றிகள், நாம் செய்த ஊழியங்கள் யாவும், தோல்வி, இயேசுவின் இராஜ்யத்தில் பயன்படாதிருத்தல், அவமானம் என்பவைகளால் விழுங்கப்படக்கூடும். அதிகப் பயன்படக்கூடிய, அதிக ஊழியம் செய்யக்கூடிய சில மனிதர்களின் ஜீவியம் இவ்விதமாய் முடிவடைந்ததுண்டு. அது வருந்தத்தக்கதே. ஆனால் அது உண்மை. ஆனால் அது கட்டாயம் நடந்து தீரவேண்டியதுதான் என்பதல்ல.

எஸ். டி. கார்டன் கூறுவதாவது: அந்தத் துக்ககரமான நிலையை நாம் அடையாதபடி நம்மைப் பாதுகாப்பது, ஒரு நாளின் ஒவ்வொரு மணி நேரத்திலும் தேவனோடு சம்பந்தப்பட்டிருப்பது ஒன்றேயாம். பாக்கியமான, கனி நிறைந்த, வெற்றிகரமான நேற்றைய தின அனுபவம் இன்று பயன்படாது. அது மாத்திரமல்ல, அவைகள் இன்றைய தின தவறுகளால் முழுமையாக விழுங்கப்பட்டோ அல்லது மாற்றப்பட்டோ போகலாம். நேற்றைய தின அனுபவம் இன்று நாம் இன்னும் மேன்மையான, சிறப்பான அனுபவங்களை அடைய நம்மை ஏவுவதாயிருந்தால் அது அவ்வித முடிவையடையாது.

கிறிஸ்துவோடு தங்கி அவரோடு புதிதான சம்பந்தம் ஏற்படுத்திக் கொண்டால் மட்டுமே நாம் கேவலமான பசுவையும், சாவியான கதிரையும் விட்டு விலகக்கூடும்.

## மே 1

*'பொய்யுரையாத தேவன் வாக்குத்தத்தம்பண்ணினார்' (தீத்து 1:3).*

நம் மனோ சக்தியினால் ஏதோ ஒன்று நடக்கும் என்று நிச்சயப்படுத்திக்கொள்வது விசுவாசமல்ல. ஆனால் தேவன் சொல்லியிருப்பதால், அது உண்மை என்றும், அது நடக்கும் என்றும் கண்டு, அது உண்மை என்பதில் களிகூர்ந்து தேவன் சொல்லியிருப்பதை நம்பி அமர்ந்திருப்பதே விசுவாசம்.

விசுவாசம், வாக்குத்தத்தத்தைத் தீர்க்கதரிசனமாக மாற்றுகிறது. அது வாக்குத்தத்தமாக இருக்கும்போது, நம்முடைய கூட்டுறவு அதற்குத் தேவை. விசுவாசம் அதைத் தன் உரிமை

என்று கேட்கும்போது, அது தீர்க்கதரிசனம் ஆகிறது. தேவன் பொய்யுரையாதவர்; ஆகையால் அது செய்யப்படவேண்டியதுதான் என்ற உணர்ச்சியோடு நாமும் முன்னேறிச் செல்லுகிறோம்.

விசுவாசம் அதிகம் வேண்டும் என்று மனிதர் எங்கும் வேண்டிக் கொள்வதை நான் கேட்டிருக்கிறேன். நான் அவர்கள் மன்றாட்டைக் கூர்ந்து கவனித்தபோது, அவர்களது ஜெபத்தின் உள்ளர்த்தத்தைக் கண்டேன். அநேக முறைகளில் அவர்கள் அதிக விசுவாசம் வேண்டும் என்று அல்ல, காட்சி வேண்டும் என்றே விரும்புகிறார்கள்.

'இது எனக்கு நன்மை என்று காண்கிறேன். ஆகையால் தேவன் இதை அனுப்பியிருக்கவேண்டும்' என்று விசுவாசம் சொல்லாது. ஆனால் 'தேவன் இதை அனுப்பினார்; ஆகையால் இது நன்மையாய்த் தானிருக்கும்' என்று விசுவாசம் சொல்லும்.

விசுவாசம் இருட்டில் தேவனோடு நடக்கையில் தன் கையை இன்னும் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்ள மாத்திரமே அவரைக் கேட்டுக்கொள்ளும்.

—பிலிப்ஸ் புரூக்ஸ்

உன் விசுவாசத்தின் மீது விசுவாசத்தை அல்ல
தம்மேலுள்ள விசுவாசத்தை மேய்ப்பர் கேட்கிறார்.
'என்னிடம் வா' என்று அவர் அழைக்கும்பொழுது இதையே
ஒளியிலும், இருளிலும் அவர் சித்தத்தையே செய்ய நாடு,
[எதிர்பார்க்கிறார்
விசுவாசத்தின் கிரியையை இயேசுவிடம் விட்டுவிடு.

## மே 2

*'கர்த்தர் வானங்களில் தமது சிங்காசனத்தை ஸ்தாபித்தார். அவருடைய இராஜரீகம் சர்வத்தையும் ஆளும்' (சங். 103:19).*

சில நாட்களுக்கு முன், ஒரு இளவேனிற் கால ஆரம்பத்தில், நான் வாசலுக்கு வெளியே வந்தபோது, மூலையிலிருந்து கீழ்க்காற்று பலமாய் வீசிற்று. அது மூர்க்கமாய், ஈவிரக்கமின்றி, கடூரமாய் ஒரு மேகம்போல் தூசியைத் தள்ளிக்கொண்டு வந்தது. நான் அப்போது தான் சாவியை எடுத்துக்கொண்டு, பொறுமையற்றவனாய், 'அப்பா! இந்தக் காற்று . . .' என்று சொல்லத் தொடங்கினேன். 'மாறாதா' என்று சொல்லுமுன் அந்த வார்த்தை என் வாயிலே நின்றுவிட்டது. நான் அந்த வாக்கியத்தைச் சொல்லி முடிக்கவில்லை.

நான் என் வழியே செல்கையில், இந்தச் சிறு காரியம் எனக்கு ஒரு உவமையாய்த் தோன்றிற்று. ஒரு தேவதூதன் ஒரு சாவியை நீட்டிக் கொண்டு என்னிடம் வந்து, 'என் எஜமானன் உனக்குத் தம் அன்பு சொல்லி, இந்தச் சாவியையும் உன்னிடம் கொடுக்கச் சொன்னார்' என்றான். 'இது என்ன?' என்று நான் வியப்போடு வினவினேன்.

'காற்றுகளின் திறவுகோல்' என்று சொல்லிவிட்டு அந்தத் தூதன் மறைந்தான்.

இப்பொழுதாவது நான் சந்தோஷப்படவேண்டும். நான் காற்றுகள் புறப்படும் மலே உச்சிக்குச் சென்று, குகைகளின் மத்தியில் நின்றேன். 'அந்தக் கீழ்க்காற்றை எப்படியாவது தொலேத்துவிட வேண்டும்; இனி அது நம்மைத் தொந்தரவுசெய்ய விடக்கூடாது' என்று சொல்லி அந்தக் காற்றைக் குகைக்குள் விட்டுக் கதவை அடைத்தேன். குகையின் ஆழத்தில் அக்காற்று எதிரொலிப்பதைக் கேட்டேன். வெற்றிகரமாகச் சாவியைத் திருப்பிவிட்டு, 'இப்பொழுது இக்காற்றின் கொடுமைத் தீர்ந்தது' என்றேன்.

அதற்குப் பதில் வேறு எதைத் திறந்துவிடலாம்? என்று யோசித்தேன். 'தென்றல் இனிமையானது' என நினேத்தேன். அப்பொழுது ஆட்டுக்குட்டிகளேயும், எங்குமுள்ள ஜீவராசிகளேயும், பூக்க அரும்பியிருந்த பூக்களேயும் பற்றி எண்ணினேன். ஆனுல் நான் கதவில் திறவுகோலே வைத்தவுடன், தயங்கி நின்றேன்.

'நான் என்ன செய்கிறேன்? நான் என்ன கேடு உண்டாக்கப் போகிறேன் என்று யாருக்குத் தெரியும்? வயலுக்கு என்ன தேவை என்று எனக்கு எப்படித் தெரியும்? நான் அறிவின்மையால் விரும்பும் ஒரு காரியத்திலிருந்து பத்தாயிரம் தீமை விளேயக்கூடுமே' என்று யோசித்தேன்.

துக்கமும் வெட்கமும் அடைந்து, நான் நிமிர்ந்து பார்த்து, என்னிடமுள்ள திறவுகோலே மறுபடியும் பெற்றுக்கொள்ளத் தமது தூதனே அனுப்பும்படி கர்த்தரை நோக்கி ஜெபித்தேன். 'என்னேப் பொறுத்த மட்டும் நான் ஒருபோதும் அந்தச் சாவியை வைத்துக்கொள்ள விரும்பேன்' என்று வாக்களித்தேன்.

ஆனுல், ஆண்டவர்தாமே என் முன் நின்றுர். திறவுகோலே வாங்கத் தம் கரத்தை நீட்டினுர். நான் அதைக் கீழே வைத்தபோது, அது அவருடைய திருக்காயத்தின்மேல் இருப்பதைக் கண்டேன்.

ஐங்காயமாகிய அன்பின் அடையாளத்தைத் தரித்திருந்த அவர் செய்த காரியத்தைக் குறித்து நான் முணுமுணுத்ததை எண்ணி மிகவும் வருந்தினேன். பின்பு அவர் அந்தத் திறவுகோலே எடுத்து, இடுப்பில் தொங்க வைத்துக்கொண்டார்.

'சுவாமி! நீரா காற்றின் திறவுகோலே வைத்திருக்கிறீர்' என்று கேட்டேன். 'என் பிள்ளேயே! நான்தான் வைத்துக்கொள்வேன்' என்று கருணேயோடு பதிலுரைத்தார்.

நான் மறுபடியும் பார்த்தபோது, அவர் இடுப்பில் என் ஜீவியத்தின் எல்லாச் சாவிகளும் தொங்குவதைக் கண்டேன். நான் வியப்படைந்திருப்பதைக் கண்டு அவர், 'என் பிள்ளேயே, என் இராச்சியம்

சர்வத்தையும் ஆளுகிறது என்பதை நீ அறியாயோ?' என்று கேட்டார்.

'சர்வத்தின் மேலுமா? பின் நான் எதைக் குறித்தும் முணு முணுப்பது சரியல்லவே?' என்றேன். அப்போது அவர் என்மேல் அனுதாபத்தோடு, தம் கரத்தை வைத்து, 'எல்லாவற்றிலும் அன்பு கூர்ந்து நம்பித் துதிப்பதே தகுதியான காரியம்' என்றார்.

—மார்க் கை பியர்ஸ்

## மே 3

'கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவனெவனே அவன் இரட்சிக்கப் படுவான்' (யோவேல் 2:32).

ஏன் நான் அவர் நாமத்தைச் சொல்லிக் கூப்பிடுகிறதில்லை? தேவன் என் அருகிலிருந்து என் சிறிய கூப்பிடுதலையும் கேட்கும் போது, நான் அண்டை அயல் வீட்டாரண்டை ஏன் ஓடுகிறேன். நான் ஏன் உட்கார்ந்து வழி வகைகளை யோசித்துத் திட்டங்கள் வகுக்கிறேன்? ஏன் உடனே என் பாரத்தை அவர்மேல் போடவில்லை?

நேர்முகமாய் ஓடுகிறவன் ஓட்டத்தில் கெட்டிக்காரன். நான் ஏன் உடனே ஜீவனுள்ள தேவனண்டை ஓடுகிறதில்லை? வேறெங்கிருந்தும் இரட்சிப்பு உண்டாகிறதென்பதும் அபத்தம். ஆனால் தேவனிடம் இரட்சிப்பைக் கண்டடையலாம். ஏனென்றால், 'நான் செய்வேன்' என்று சொல்லியிருக்கிறார்.

நான் அவரை நோக்கிக் கூப்பிடலாமா என்று கேட்க அவசிய மில்லை. 'எவனும்' என்ற வார்த்தை அதிக விரிவானதும், அனை வரையும் குறிப்பதாகவும் இருக்கிறது. 'எவனும்' என்பது தேவனை நோக்கிக் கூப்பிடுகிற அனைவரையும் குறிப்பதாகும். ஆகையால் நான் இந்த வசனத்தில் சொல்லியபடி செய்து, இத்தனை பெரிய வாக்குத்தத்தத்தைச் செய்த மகிமை நிறைந்த ஆண்டவரை நோக்கிக் கூப்பிடுறேன்.

என் காரியம் வெகு அவசரமானது. நான் எப்படி இரட்சிப் படையக்கூடும் என்பதும் எனக்குத் தெரியவில்லை. ஆனால் அது என் செயலைச் சார்ந்ததல்ல. வாக்குத்தத்தம் பண்ணினவர் அதைக் காப்பாற்ற வழிவகைகளையும் கண்டுபிடிப்பார். அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவது மாத்திரமே என் வேலை. அவருடைய ஆலோசனைக்கு வழிகாட்டுவது என் வேலையல்ல. நான் அவருடைய் ஊழியக்காரனேயன்றி, அவருடைய வக்கீல் அல்ல; நான் அவரை நோக்கிக் கூப்பிடுவேன். அவர் என்னை இரட்சிப்பார்.

—சி. எச். ஸ்பர்ஜன்

## மே 4

*'அவர் காயப்படுத்திக் காயம் கட்டுகிறார். அவர் அடிக்கிறார். அவருடைய கை ஆற்றுகிறது' (யோபு 5:18).*

பெருந்துக்கத்தின் சேவை. பூமி அதிர்ச்சியால் அசைக்கப்பட்டு அசைவினால் நிலம் பிளவுபட்டுக் கிடக்கும் ஒரு குன்றினருகில் சென்றால், அழிவு காலத்திற்குப் பின், பூரண அமைதியுண்டாகிறது என்பதை நாம் காண்கிறோம். விழுந்த பாறைகளுக்கடியில் அமர்ந்த தண்ணீர்த் தடாகம் இருக்கிறது. தாமரை மலர்கள் அழகுடன் விளங்குகின்றன. நிழலில் நாணல் மெதுவாகச் சப்திக்கின்றது. கல்லறைக்குள் யாவும் மறைந்துபோய் அந்த இடத்தில் ஒரு புதிய கிராமம் தோன்றுகின்றது. அதன் வெண்மையான கோபுரங்கள் மாலையொளியில் பிரகாசமாகத் தெரிகின்றன. அவை இவ்வுலகத்தின் நான்கு மூலைகளையும் மலைகளின் பலத்தையும் தமது ஆளுகையின்கீழ் வைத்திருக்கும் இறைவனை நோக்கி மறுபடியும் விண்ணப்பம் சமர்ப்பித்துக்கொள்ளுகின்றன. —ரஸ்கின்

தேவன் ஒரு நாள் பூகம்பத்தால் பூமியை உழுது கால்களை ஆழமாக்கினார்.

நெருங்கியிருந்த சமவெளிகள் நிமிர்ந்தன. மலைகள் துள்ளி எழுந்தன.

ஆனால் மலையின் இரகசியம் இதுவே. இதை அது அநேக காலமாய் உள்ளத்தில் வைத்துக் காத்து வருகிறது. 'இறைவனின் சமாதானம் என்றென்றைக்கும் உள்ளது' என்பதே அதற்கு ஆறுதலளிக்கும் வார்த்தை.

அவர் மலைகளை அழகு தவழும் இடங்களாக்கினார் தமது கிருபையின் இல்லமாக்கினார். அவர் காலை எழிலை அவற்றின்மேல் பரவச் செய்கிறார். மாலை கதிரவனும் அவற்றை ஒளிபெறச் செய்கிறான்.

காற்றும் கடும் புயலும் மலைகளுக்குச் செய்தி கொண்டுவரும். அதை அந்த மலைகள் மழையோசையின் மூலம் பள்ளத்தாக்குகளிலெல்லாம் பாடி அறிவிக்கும்.

இளம் நதிகள் தோன்றுமிடங்கள் மலைகளே. அவை பறந்து வரும் முகில்கள் தங்குமிடங்களாகவும் இருக்கின்றன. வலிமையும் சுதந்தரமுமுள்ள புதிய குளங்கள் தோன்றுமிடங்களும் மலைகளே.

களைப்படைந்த நகரவாசிகளும் மலைக்கோவில்களுக்கே வணங்கச் செல்கின்றனர். நாள் முழுவதும் அங்கு வருபவர்களுக்குத் தேவன் புத்துயிரளிக்கிறார்.

இந்த மலைகளின் அழகுக்கும் மேன்மைக்கும் காரணமென்ன என்பதை நான் கண்டுகொண்டேன். அந்த இரகசியம் இதுதான்.

வாழ்வில் கஷ்டங்களும் துக்கங்களும் ஏற்படும்போது இறைவன் மலைகளை உண்டாக்குவதற்கான நிலத்தை உழுகின்ருர் என நம்ப வேண்டும். அந்த மலைகள் இனித் தோன்றும்., அவை எனக்கு அவர் கிருபையையும் புத்துயிரையும் நிலைபெற்ற சமாதானத்தையும் அளிக்கும். அவர் சமாதானம் என்றுமுள்ளதென்று நம்பிக்கைக் கொண்டேன்.

—வில்லியம் சி. கேனட்

## மே 5

'அவர்கள் பாடித் துதி செய்யத் தொடங்கினபோது, யூதாவுக்கு விரோதமாய்ப் பதிவிருந்த அம்மோன் புத்திரரையும், மோவாபியரையும், சேயீர் மலை தேசத்தாரையும் ஒருவருக்கு விரோதமாய் ஒருவரைக் கர்த்தர் எழும்பப்பண்ணினதால் அவர்கள் வெட்டுண்டு விழுந்தார்கள்' (2 நாளா. 20:22).

நாம் நம்முடைய துன்பங்களின் காரணக் காரியங்களைத் தேடித் திரியாமல் பாடித் துதிக்கக்கூடுமானுல் எத்தனை நலமாயிருக்கும்.

நாம் எப்படித் துதி செய்வது என்று மாத்திரம் நாம் அறிந்திருந்தால், நமக்குக் கால் விலங்குகளாகும் அநேக விஷயங்களைச் சங்கீதக் கருவிகளாகப் பயன்படுத்தியிருக்கலாம்.

சில ஜனங்கள் ஜீவியத்துக்குரிய திட்டங்களைத் தியானித்துச் சிந்தனை செய்த வண்ணமாயிருக்கிருர்கள். தேவனுடைய நடத்துதல் என்ற விளங்காப் பொருள் எவ்வாறு காரியத்தை நடத்துகிறது என்று ஊன்றிப் படிக்கிருர்கள். தாங்கள் ஏன் பாரம் சுமக்க வேண்டும்; இடையூறடைய வேண்டும் என்று சிந்தனை செய்கிருர்கள். இவ்விதமாய் இவர்கள் உள்ளிந்திரியத்தில் நினைவுகொண்டு, ஆராய்ச்சி செய்துகொண்டிருப்பதற்குப் பதில், தங்களுக்கு அன்றன்று வரும் காரியங்களை, தேவனுக்கு நேராய் ஏறெடுத்து, அவைகளுக்காகத் தேவனை துதிசெய்வார்கள் என்ருல், அவர்கள் ஜீவியம் எவ்வளவு வித்தியாசமாய், எத்தனை ஆனந்த மயமாயிருக்கும்.

நம்முடைய கவலைகளைக் காரணம் தேடி ஒழிப்பதைவிட பாட்டுப் பாடி எளிதாக ஒழிக்கலாம். காலையில் கீதம் பாடு. அதிகாலையில் பாடுவன பட்சிகளே. பறவைகளே மற்ற யாவற்றையும்விட மிகவும் கவலையற்றவைகள்.

சாயங்கால வேளையில் பாட்டுப் பாடு. காலையில் பாட்டுப் பாடு.

'ராபின்' என்னும் பட்சி படுக்குமுன் கடைசியாகப் பாடும். தினசரி வேலையை முடித்தபின், கடைசி முறையாகப் பறந்துவந்தபின், கடைசி ஆகாரத்தைப் பொறுக்கியபின், உச்சிக் கிளையில் உட்கார்ந்து ஒரு துதிப் பாட்டுப் பாடும்.

ஒரு பாட்டு மற்ஞெரு பாட்டைத் தொடரத்தக்க விதமாய்க் காலேயும் மாலேயும் நாம் பாடுவது வெகு நலமான காரியம்.

1 எக்காலமும் நாம் பாடுவது நலமான காரியம்
உன் பாட்டு ஒருவேளே தாழ்ந்த ஸ்தாயியிலிருக்கலாம்
அதைத் திரும்ப உச்ச ஸ்தாயியோடு
இணைத்து, இசைந்து பாடுவதை விட்டுவிடாதே.

2 நிழல் எழும்பி, ஜீவமாகிய சூரியனே மறைத்தாலும்
நீ பாடிக்கொண்டே யிருந்தால்—நிழல் சீக்கிரம்
நீங்கி வெளிச்சம் உண்டாகும்.

3 உன் இராக இனிமை குறைந்தாலும்
நீ பாடுவதை விட்டுவிடாதே
உச்சஸ்தாயியின் அலுக்கும் குரல் உன் தொண்டையில்
நின்றுவிட்டாலும்
உன் ஆவி அதைப் பாடிக்கொண்டிருக்கட்டும்.

4 பாட்டு உன்னேவிட்டு ஒருபோதும் நீங்கவிடாதே
இங்கே அது உன் ஆத்துமாவில் ரீங்காரம் செய்யட்டும்
நீ இதை விட்டுச் செல்கையில் உன்னுேடு வந்து,
மறு உலகிலும் அது உன்னுேடு வசிக்கும்.

## மே 6

'கர்த்தருடைய இரகசியம் அவருக்குப் பயந்தவர்களிடத்தில் இருக்கிறது' (சங். 25:14).

தேவனுடைய அருமையான பிள்ளேகள் படித்துக்கொள்ளக்கூடிய இரகசியங்கள் தெய்வ சித்தத்திலுண்டு. அவருடைய செயல்கள் வெளிப்பார்வைக்கு இருட்டாய், பயங்கரமாய்த் தோன்றலாம். விசுவாசம் ஆழமாய் நோக்கிப் பார்த்து: 'இது தேவனுடைய இரகசியம், நீ வெளிப்புறத்தைப் பார்க்கிருய், நான் ஆழத்தில் பார்த்து மறைந்துள்ள கருத்தைக் காண்கிறேன்' என்று சொல்லு கிறது.

சில சமயங்களில் தங்களின் மதிப்பு அறியப்படாதபடி வைரங்கள் சாதாரணமான பொருள்களேப்போல் சுற்றிக் கட்டப்பட்டிருக் கின்றன. ஆசரிப்புக்கூடாரம் வனுந்தரத்தில் கட்டப்பட்டபோது, அதன் வெளித்தோற்றத்தில் ஒன்றும் விசேஷமாக இல்லே. விலே யுயர்ந்த பொருள்கள் யாவும் உள்ளே யிருந்தன. அதை மூடியிருந்த தோல் உள்ளிருப்பது ஒன்றையும் வெளிக்குத் தோற்றுவியாமல் இருந்தது.

என் பிரிய சிநேகிதரே, தேவன் உங்களுக்கு விலேயுயர்ந்த பொருள் களே அனுப்புவார், அது சாதாரணப் பொருளேப்போல் சுற்றப்பட்

டிருக்கிறபடியால் அதற்காகக் கவலை கொள்ளவேண்டாம். அதற்குள் அன்பு, பட்சம், ஞானம் என்ற பொக்கிஷங்கள் வைக்கப்பட்டிருப்பது நிச்சயம். அவர் அனுப்பும் ஒன்றைப் பெற்றுக்கொண்டு, அதிலிருக்கும் நன்மைக்காக அவரிடத்தில் நம்பிக்கை வைப்போமானால், இருளிலும் தேவ சித்தத்தின் இரகசியப் பொருளை நாம் காணக்கூடும். —எ. பி. சிம்ஸன்

ஒவ்வொரு தறியும் அமைதியாகி,
நூற்குழல்கள் நிற்கும் வரை,
தேவன் தமது மாதிரிப் படத்தைக் காட்டி,
அதிலுள்ள கறுப்பு நூல்கள் ஏன் தேவை
என்று விளங்கச் சொல்லமாட்டார்!
கைதேர்ந்த நெசவுக்காரராகிய தேவனின் கரத்தில்,
தங்க, வெள்ளி, ஜரிகைபோல் கறுப்பு
நூலும் அவர் போட்ட திட்டத்திற்குத் தேவை.

கிறிஸ்துவின் ஆளுகைக்கு உட்பட்டவன் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் ஆண்டுகொள்ளுகிறவனுவான். சந்தர்ப்பங்கள் உங்களைப் பாரமாக அழுத்துகின்றனவா? அதை அப்பால் தள்ளிவிடாதேயுங்கள். அது தேவ குயவனின் கரமே. அது செய்யும் செயலை நீ நிறுத்துவதினால் நீ ஆளுகை செய்கிறவனாகமாட்டாய். அவர் சிட்சையை நீ ஏற்றுக்கொள்வதினால் ஆட்சி செய்பவனுவாய். ஏனென்றால் அந்தக் கரம் உன்னை உன்னத அழகுக்கும், மரியாதைக்கும் உரிய பாத்திரமாக உருவாக்குவது மாத்திரமல்ல, உனக்கு வேண்டிய ஆதாரங்கள் கிடைக்கவும் செய்கிறது.

## மே 7

'சோர்ந்துபோகாமல் எப்பொழுதும் ஜெபம்பண்ணவேண்டும் என்பதைக் குறித்து அவர்களுக்கு ஒரு உவமையைச் சொன்னார்' *(லூ. 18:1)*.

நம்முடைய ஜெப ஜீவியத்தில் தொடர்ந்து ஜெபம் செய்யத் தவறுவதே சர்வ சாதாரணமான சோதனையாயிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காக நாம் ஜெபம்பண்ண ஆரம்பிக்கிறோம், ஒருநாள், ஒரு மாதம் வரை அதற்காகப் பிரார்த்தனை செய்கிறோம். ஆனால் அதுவரை பதில் கிட்டாததால் நாம் சோர்வடைகிறோம். அதற்காக ஜெபத்தை நிறுத்திவிடுகிறோம்.

இது ஒரு பெரிய குற்றமாகும். அநேக காரியங்களைத் துவக்கி முடிக்காமல் போவதற்கும் இது காரணமாகும். இந்தக் காரியம் ஜீவியத்தில் சகல காரியங்களையும் கொடுப்பதாகும்.

ஒரு காரியத்தைத் துவக்கி முடிக்காமல் விட்டுவிடும் பழக்கமுடையவர்கள், சதா தவறும் பழக்கமுடையவர்களே. ஒரு

காரியத்திற்காக ஜெபிக்க ஆரம்பித்து அக்காரியம் வெற்றிகரமாய் முடியும்வரை ஜெபிக்காதவனும், அதே பழக்கத்தை உடையவனே.

மனம் தளர்ந்துபோகுதல் தோல்வியுற்றுப் போவதேயாகும். தோல்வி மனச்சோர்வையும் ஜெபத்தின் வல்லமையில் அவநம்பிக்கையையும் உண்டாகச் செய்கிறது. இந்த நிலைமை எல்லா ஜெயத்தும் வரவிடாமல் தடுக்கும்.

ஆனால் சிலர், 'நாம் எவ்வளவு காலம் ஜெபித்துக்கொண்டே இருக்கவேண்டும்? நாம் ஜெபிப்பதைவிட்டுக் காரியத்தைத் தேவன் கையில் விட்டுவிட வேண்டிய சமயம் வருவதில்லையா?' என்று கேட்கிறார்கள்.

இதற்கு ஒரே ஒரு விடைதான் உண்டு. நீங்கள் வேண்டிக் கொள்ளும் காரியம் கொடுக்கப்படுமளவும், அல்லது அது கொடுக்கப் படும் என்ற நிச்சயம் உண்டாகுமளவும் ஜெபிக்கவேண்டும்.

மேற்கூறிய இரண்டிலொரு இடத்தில்தான் நாம் விடாப்பிடியாய்க் கேட்பதை நிறுத்தலாம். ஏனென்றால் ஜெபம் தேவனை நோக்கி கூப்பிடுவது மட்டுமல்ல, சாத்தானை எதிர்த்துப் போரிடுவதுமாகும். தேவன் நமது பிரார்த்தனைகளை வெற்றிக்கு ஒரு ஏதுகரமாக, அந்தப் போரில் உபயோகப்படுத்துவதால் நாமல்ல, அவரே நமது பிரார்த்தனையை எப்பொழுது நாம் நிறுத்தத் துணியலாம் என்று தீர்மானிக்கவேண்டும். ஆகையால் நமது ஜெபத்திற்கு விடை வந்தால், அல்லது வரும் என்ற உறுதியைப் பெற்றாலன்றி, நாம் நமது ஜெபத்தை நிறுத்தத் துணியக்கூடாது.

முதல் கூறியதில், நாம் காண்பதால் நிறுத்திவிடுகிறோம். மற்றதில் நாம் நம்புவதால் நிறுத்திவிடுகிறோம். நமது இருதயத்தின் விசுவாசம், நமது கண்ணால் பார்ப்பதுபோல் அவ்வளவு நிச்சயமாயிருக்காது. ஏனென்றால் அது நம்மிலுள்ள தேவனைப்பற்றிய விசுவாசம்.

மேன்மேலும் இந்த ஜெப ஜீவியத்தை நடத்திக்கொண்டு போகும்பொழுது, நாம் தேவனால் அருளப்பட்ட அத்தகைய நிச்சயத்தை உணரவும் அனுபவிக்கவும் கூடும். எப்பொழுது அமைதியாய் இருக்கவேண்டும், எப்பொழுது நமக்கு வேண்டியதைப் பெற்றுக் கொள்ளும்வரை இடைவிடாது ஜெபிக்கவேண்டும் என்பதை நாம் அறிந்துகொள்வோம். தேவன் உன்னை அங்கே சந்திக்கும்வரை வாக்குத்தத்தங்களில் காத்திரு. அவர் எப்பொழுதும் தமது வாக்குத்தத்தத்தின் வழியேதான் திரும்புவார்.

## மே 8

'அக்கினியின் நடுவே உலாவுகிறதை' (தானி. 3:25).

அக்கினி அவர்கள் நடையை நிறுத்தவில்லை. அதன் நடுவில் அவர்கள் நடந்தார்கள். அந்த அக்கினி அவர்கள் தாங்கள் போய்ச் சேரவேண்டிய இடத்திற்குப் போகும் வழியில் கடந்து செல்லவேண்டிய வீதிகளில் ஒன்றாயிருந்தது. கிறிஸ்துவின் போதனை களிலிருந்து நமக்குக் கிடைக்கும் ஆறுதல் துன்பத்திலிருந்து விடுதலை யடைவதல்ல. துன்பத்தின் மூலமாகவே விடுதலை யடைவது.

என் கர்த்தாவே, நிழல்கள் என்னைச் சூழும்போது, நான் ஒரு குகை வழியில்தான் இருக்கிறேன் என்பதைப் போதியும். 'ஓர் காலத்தில் எல்லாம் எனக்கு நன்மையாய் முடியும்' என்று நான் அறிந்தால் அது போதும்.

நான் ஒலிவமலையின் உச்சியில் நின்று உயிர்த்தெழுதலின் உன்னத மாட்சிமையைக் காண்பேன் என்று சொல்லுகிறார்கள். என் பரம பிதாவே, எனக்கு இன்னும் ஒன்று வேண்டும். நான் உம்மை அடைய கல்வாரி வழி எனக்கு வேண்டும். இவ்வுலகப் பாடுகளாகிய நிழல்கள், என் பிதாவின் வீட்டிற்குச் செல்லும் பாதையிலுள்ள மரங்களின் நிழலே என்று நான் உணரச் செய்யும். உமது வீடு மலையின் மேலிருப்பதால்தான் நான் கட்டாயம் ஏறவேண்டிய திருக்கிறது என்று என்னிடம் சொல்லும். நான் அக்கினியின் நடுவே நடந்தால் துக்கம் என்னைப் புண்படுத்தாது. —ஜார்ஜ் மத்தீசன்

1 'உமது பாதை அதிகக் கஷ்டம்,
அது முழுவதும் ஏற்றமே;
மலர்களல்ல, வழியெல்லாம் முள்ளே;
உயரமேகம் உருமுதே' என்றேன்.
இருண்ட வாசலில் நுழைகையில் ஒருவர்என் கரம் பற்றினார்
அவரோடு நான் நடக்கும் பாதை இன்பமே.

2 உமது சிலுவை அதிகப் பாரமே,
என்னால் அதைச் சுமக்க முடியாதே;
கடினமாய், பாரமாய் அகலமாயிருக்கிறது.
கவனிப்பார் யாரும் அருகில் இல்லையே எனக் கதறினேன்.
ஒருவர் என் கையை மெதுவாய்த் தொட்டு,
நான் அறிவேன், நான் கவனிக்கிறேன் எனக்குத் தெரியும்' என்றார்.

3 நாம் ஏன் கலங்கிப் பெருமூச்சு விடவேண்டும்?
நாம் யாவரும் சிலுவை சுமந்து செல்கிறோம்!
வழி சீக்கிரம் முடிவடைந்து நாம் அதிகம் விரும்பும்
இடத்தில் நம்மைச் சேர்க்கும்
நாம் வழியில் அவருடனேயே
ஒவ்வொரு முறையும் அடியெடுத்து வைக்கின்றோம்.

## மே 9

ஆபிரகாமோ பின்னும் கர்த்தருக்கு முன்பாக நின்றுகொண்டிருந்தான்?' (ஆதி. 18:22).

தேவனுடைய சிநேகிதன் மற்றவர்களுக்காக அவரிடம் பரிந்து பேசக்கூடும். ஆபிரகாமின் உன்னத விசுவாசமும், சிநேகமும் ஒரு வேளை நமக்கு வரக்கூடியதல்ல என்பதுபோல் காணப்படலாம். மனம் தளரவேண்டாம். ஆபிரகாம் விசுவாசத்தில் வளர்ந்தான். அப்படியே நாமும் வளரக்கூடும். அவன் தாண்டிச் செல்லவில்லை. படிப்படியாய்த்தான் சென்றான். எந்த மனிதன் விசுவாசத்தில் அதிகமாய்ச் சோதிக்கப்பட்டு வெற்றிகரமாய் விளங்கினானோ, அவனுக்கே மிக உயர்ந்த சோதனைகள் வரவேண்டும்.

மிக விலையுயர்ந்த ஆபரணங்கள் அதிகக் கவனத்தோடு வெட்டப் பட்டு மெருகிடப்படுகின்றன. அதிக உஷ்ணமான அக்கினி விலை யுயர்ந்த உலோகத்தைப் புடமிடுகிறது. ஆபிரகாம் அவ்வளவு சோதிக்கப்படாவிட்டால் 'விசுவாசிகளின் தகப்பன்' என்று ஒரு போதும் அழைக்கப்பட்டிருக்கமாட்டான். ஆதியாகமம் 22ஆம் அதிகாரத்தை வாசித்துப்பாருங்கள்.

'நீ நேசிக்கிற உன் ஒரே மகனை அழைத்துச்செல்' என்று கட்டளை வந்தது. அவன் தான் நேசித்துப் பணி செய்துவந்த தேவனின் கட்டளைப்படி தன் பிரிய மைந்தனைப் பலியிடுவதற்காகத் தன்னோடு அழைத்துக்கொண்டு உள்ளத்தில் சிந்தனை நிறைந்திருந்தாலும், தாழ்மையும் கீழ்ப்படிதலுமுள்ள இதயத்தோடு 'மோரியா' மலைக்கு நேராய்ச் செல்கின்றான்.

நாம் கர்த்தருடைய செய்கைகளைக் குறித்துக் கேள்விகள் கேட்பதை இது எவ்வளவாய்க் கண்டிக்கிறது. இந்தப் பிரமிக்கத் தக்க காட்சியைக் குறித்து, உண்டாகும் சந்தேகத்துக்கு இடம் கொடுக்கும் விரிவுரைகளை அப்பால் தள்ளுங்கள். சதாகாலங்களுக் கும் அது ஒரு பாடமாகும். தேவ தூதரும் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இந்த மனிதனின் விசுவாசம் கடவுளின் ஜனங்களாகிய யாவருக் கும் பலனும், உதவியுமளிக்கத்தக்கதாயிருக்குமா? இவன் மூலமாய்

நீங்கா விசுவாசம் எப்பொழுதும் தேவனுடைய உண்மையை வெளிப்படுத்தும் என்பது அறியப்படுமா? ஆம், பெரிய சோதனையில் விசுவாசம், வெற்றிகரமாய் வெளியேறினால், யார், தேவதூதரா? இல்லை, ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து, தேவ வாக்குத்தத்தங்கள் யாவும் தமக்குள் ஆம் என்றும் ஆமென் என்றும் இருக்கிற ஏகோவா தாமே, 'நீ தேவனுக்குப் பயந்தவன் என்று இப்பொழுது நான் அறிவேன்' என்று அவனோடு பேசிச் சொன்னார். நீ என்னை முற்றிலும் நம்பினாய்; நானும் உன்னை முற்றிலும் நம்புவேன். நீ எப்பொழுதும் என் சிநேகிதனாய் இருப்பாய். நான் உன்னை ஆசீர்வதித்து, உன்னை ஆசீர்வாதமாக்குவேன்' என்றார்.

அது அப்படியே எப்போதுமிருந்தது, எப்பொழுதும் அப்படியேயிருக்கும். விசுவாசிக்கிறவர்கள் ஆபிரகாமின் ஆசீர்வாதம் பெறுகிறவர்கள்.

தேவனோடு சிநேகமாயிருப்பது சிறிய காரியமல்ல.

## மே 10

'நான் . . . நான் கெட்டுப்போயிருப்பேன்' (சங். 27:13).

### இளைப்படையாதே

இந்தக் கட்டத்தில் சோதனை எவ்வளவு பெரிதாயிருக்கிறது. சில விசேஷித்த துன்பங்கள் அன்பர்களின் மரணம் இவற்றின்போது, ஆத்துமா சோர்ந்து, இருதயம் வியாகுலம் அடைகிறது. அதிகத் துக்கம், துன்பம் என்னும் சோதனைகளால் விசுவாசம் தடுமாறிப் போகிறது.

'இதற்குமேல் என்னால் சகிக்க முடியாது. என் விதிவசத்தால் நான் கெட்டுப்போகிறேன். நான் என்ன செய்யக்கூடும்' என்று மனந்தளராமலிருக்கும்படி தேவன் சொல்லுகிறார். ஒருவன் மனந்தளர்ந்துகொண்டே போகையில், அவன் என்ன செய்யக்கூடும் என்கிறார்? சரீரப்பிரகாரமாய் உனக்கு மயக்கம் வரும்போல் தோன்றும்போது என்ன செய்கிறாய்? நீ செயலற்று உன் கிரியையை விட்டு, உன்னை நேசிக்கிற உன்னிலும் பலமுள்ள ஒருவர்மேல் சாய்கிறாய். நன்றாய்ச் சாய்ந்துகொள்கிறாய்; நீ ஓய்ந்திருக்கிறாய். நீ நம்பிக்கையாய் அமர்ந்து படுக்கிறாய்.

அப்படியே நாம் துன்பத்தால் தளரும்போது செய்யவேண்டும். 'நீ பலங்கொண்டு திடமனதாயிரு' என்பது அவருடைய கட்டளையல்ல. ஏனென்றால் நமது பலமும், தைரியமும் பறந்துவிட்டது என்றறிவார். ஆனால் அவர், 'அமர்ந்திருந்து, நானே தேவனென்று அறிந்துகொள்ளுங்கள்' என்ற இனிய வார்த்தைகளையே சொல்கிறார்.

ஹட்சன் டெய்லர் என்பவர் தமது கடைசி காலங்களில் தள்ளாடிப்போனூர். அப்பொழுது தம் அருமைச் சிநேகிதன் ஒருவனுக்கு பின்வருமாறு எழுதினூர்: 'நான் அதிகப் பலவீனனுயிருக்கிறேன். ஆகையால் என்னுல் எழுதமுடியவில்லே. வேதம் வாசிக்கவும் முடியவில்லே. எனக்கு ஜெபிக்கத்தானும் இயலவில்லே. நான் பாலகனேப்போல் கர்த்தரை நம்பி அவர் கரத்தில் அமைதியாய்ப் படுத்திருக்கிறேன்.'

அவருடைய பிள்ளேயாகிய நீ துன்பம் என்னும் அக்கினியால் தளர்ந்து போகையில் இப்படியே செய்யவேண்டுமென்று தேவன் விரும்புகிறூர். திடமாயிருக்கப் பிரயத்தனப்படாதே. அமர்ந்து இருந்து அவரே தேவனென்று அறிந்துகொள். அவர் உன்னேக் கைதூக்கிச் சேதமின்றி வெளியே கொண்டுவருவார். நாம் அதிகமாய்த் தளர்ந்து போகும்போது, நமக்குக் கொடுப்பதற்காகத் தேவன் தமது விசேஷ ஔஷதங்களே வைத்துக்கொண்டிருக்கிறூர்.

'உறுதியாயிருந்து உன் மனதைத் திடப்படுத்திக்கொள்' (சங். 27:14).

உறுதியாயிரு, அவர் உன்னே முன்பு
ஒருபோதும் கைவிட்டதில்லே.
இறுதியில் நீ ஆழ்ந்து போக
விட்டு விடுவாரோ?
அவர் தமது செட்டைகளின் அடியில்
உன்னே மறைப்பேன் என்றூரே!
அங்கே இன்பப் பாதுகாப்புண்டு
ஆகையால் நீ பாடலாம்.

## மே 11

'தீயையும், தண்ணீரையும் கடந்து வந்தோம். செழிப்பான இடத்தில் எங்களேக் கொண்டுவந்து விட்டார்' (சங். 66:12).

இது எ்திர்மாறுக இருந்தாலும், போராட்டத்தின் வழியாக ஆறுதலே அடைகிறவனே சமாதானம் உள்ளவன்.

கஷ்டத்தில் உண்டான இந்தச் சமாதானம் புயலுக்குமுன் உண்டாகும் மிகுந்த அமைதலேப்போலன்றி, புயலுக்குப் பின் உண்டாகும் சுத்தமான காற்றின் அமைதியைப் போன்றது.

துக்கமென்பதறியாமல் செழிப்பாய் இருந்தவன் பலமுள்ளவனுய், சாந்தியுள்ளவனுயிருப்பான் என்பது சரியல்ல. அவனுடைய தன்மை சோதிக்கப்படவில்லே. மெதுவான அதிர்ச்சியைத் தானும் தாங்க சக்தி கிடையாது. ஒரு புயலேயும் அனுபவித்திராதவன் கெட்டிக்கார

மாலுமியல்ல. சௌகரியமான காற்றுள்ள காலத்தில் அவன் வேலை செய்ய முடியும். ஆனால் புயல் எழும்பும்போது கொந்தளிப்பில் சமாளித்த மாலுமிக்கே முக்கியமான இடம் கொடுக்கப்படும். அவனே கப்பலின் பலத்தைச் சோதித்தறிந்து, உள்ளான கப்பலின் அடிவாரம் உறுதியுள்ளதாவென்றும், கயிறுகள் உறுதியானவையா வென்றும், அதன் நங்கூரக் கொக்கிகள் தரையை உறுதியாய்ப் பிடிக்கக் கூடியவைதானா என்றும் அறிவான்.

முதன் முதலில் நமக்குக் கஷ்டம் வரும்போது எல்லாம் போய் விட்டதுபோல் இருக்கிறது. நம்பிக்கையாகிய பற்றுக் கம்பிகள் ஒடிகின்றன. நம்முடைய இருதயம் கடும் காற்றினால் பற்றுக் கம்பிகள் அறுந்த திராட்சைக் கொடிபோல் கீழே விழுந்து கிடக்கிறது. முதல் கலக்கம் தீர்ந்தவுடன் நாம் மேல்நோக்கிப் பார்த்து: 'இது என் தேவன் செய்தது' என்று சொல்கிறோம். விசுவாசம் அறுபட்டுச் சிதறின நம்பிக்கைகளைத் தூக்கி, அவைகளை உறுதியாய்த் தேவனின் பாதத்தோடு இணைக்கிறது. இறுதியில் நம்பிக்கை, பயமின்மை, சமாதானம் இவை உண்டாகின்றன.

1 எதிர்காற்று என் ஜீவியத்திற்கு எதிராய் மோதினது.
என் சிறிய கப்பல் துக்கத்தால் அலைக்கப்பட்டது.
என் திட்டம் மாறி என் இதயம் குழம்பி,
என் நம்பிக்கை யாவும் தொலைந்ததுபோல் காணப்பட்டது
'பின்பு அவர் எழுந்தார்' சமாதானமுண்டாக ஓர் வார்த்தை சொன்னார்
'அங்கே அமைதியுண்டாயிற்று' இன்ப விடுதலையுண்டாயிற்று.

2 சந்தேகம், பயம் என்னும் பெரும் புயல்,
என் மனத்தை ஆட்கொண்டது,
என் வழியை அறிய, நான் காண ஒளியில்லை,
என்னால் சகிக்கமுடியாத அவ்வளவு இருட்டாயிருந்தது
'அப்போது அவர் எழுந்தார்' நான் அவர் முகம் கண்டேன்
அவர் அருளால் நிறைந்து, 'அங்கே அமைதல் உண்டாயிற்று.'

3 பொங்கும் துக்கத்திலும், ஆழ்ந்த சோதனையிலும்,
என் உள்ளம் மூழ்கிற்று;
'எல்லாம் போனது என்னை ஒன்றும் இரட்சிக்காது,
எனக்கு ஒன்றும் ஆறுதல் அளிக்காது' என்று தோன்றிற்று.
'அப்போது அவர் எழுந்து' ஒரு வார்த்தை சொன்னார்
'அங்கே அமைதலுண்டாயிற்று' அவரே ஆண்டவர்.

—எல். எஸ். பி.

## மே 12

'விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும்' (மா. 9:23).

சும்மா கேட்பதினுல் 'எல்லாம்' கிடைத்துவிடாது. ஏனென்ருல் தேவன் எப்பொழுதும் விசுவாசத்தின் வழியை நமக்குப் போதிக்க வகை தேடுகிருர். நம்மை விசுவாச ஜீவியத்தில் பயிற்றுவிக்கும் போது, அங்கே விசுவாசப் பரீட்சைக்கும் இடமுண்டு. விசுவாசத் தின் ஜெயமாகிய விசுவாசத்தின் நோக்கம் நிறைவேறுமுன், விசுவாச சிட்சை, விசுவாசப் பொறுமை, விசுவாச தைரியம் என்ற அநேக படிகளைத் தாண்டவேண்டும்.

உண்மையான குணசீலம் விசுவாச சிட்சையின்மூலம் வளர்கிறது. நீ கடவுளை வேண்டிக்கொண்டாய். ஆனுல், அதற்கு விடை கிடைக்கவில்லை. அப்பொழுது நீ செய்யவேண்டுவதென்ன?

தேவனுடைய வார்த்தையை நம்பிக்கொண்டேயிருக்கவேண்டும். நீ பார்ப்பவர்களைக்கொண்டும், நீ நினைப்பதைக்கொண்டும், உன் நம்பிக்கையை விட்டு ஒருபோதும் விலகாதே. இவ்வாறு நீ உறுதி யாய் நிற்கும்போது, மேலான பலமும், அனுபவமும் வளர்கிறது. தேவனுடைய வார்த்தைகளில் வெளிப்படையாக இருக்கும் எதிர் மறையான பொருளை நீ பார்த்தும், உன் விசுவாச நிலையிலிருந்து அசையாமலிருந்தால், அது உன்னைச் சகல அனுபவங்களுக்கும் பலமுள்ளவனுக்கும்.

தேவன் அடிக்கடி வேண்டுமென்றே தாமதிக்கிருர். அவருடைய தாமதமும் ஜெபத்தின் விடை போன்றதே.

வேத புத்தகத்தில் சொல்லப்பட்டிருக்கும், எல்லாப் பெரியா ருடைய ஜீவியத்திலும், தேவன் இவ்விதமே கிரியை செய்திருக்கிருர். ஆபிரகாமும், மோசேயும், எலியாவும் ஆரம்பத்தில் பெரியவர் களல்ல. ஆனுல் விசுவாச சிட்சையின்மூலம், அவர்கள் பெரியவர் களாக்கப்பட்டார்கள். இவ்விதமாகவே அவர்கள் தேவன் அழைத்த அழைப்புக்குப் பாத்திரரானுர்கள்.

எகிப்தின் சிம்மாசனத்திற்கென்று, பயிற்றுவிக்கப்பட்ட யோசேப் பைக் குறித்து சங்கீதங்களில்: 'ஆண்டவருடைய வார்த்தை அவனைச் சோதித்தது' என்று சொல்லப்பட்டிருக்கிறது. எளிமையான உண வும், கடினமான படுக்கையும் உள்ள சிறைச்சாலை ஜீவியம் அவனைச் சோதிக்கவில்லை. ஆனுல் அவன் சிறுவனுயிருக்கையில், அவனுடைய சகோதரருக்கும் மேலான உன்னத பதவி, மரியாதை அவனுக்குக் கிடைக்கும் என்று அவன் உள்ளத்தில் சொன்ன தேவ வார்த்தையே அவனைச் சோதித்தது. அவனுடைய ஜீவனேபாயத்தில், ஒவ்வொரு அடியும் அந்த வார்த்தைகள் நிறைவேறுவது அரிது என்று தோன்றச் செய்தபோது, இந்த வார்த்தைகளே அவன்முன் நின்றன. தான்

குற்றமற்றவனுயிருக்கையில், சிறையில் தனிமையாய்க் கிடக்க நியாயமாய்த் தண்டிக்கப்பட்டவர்கள் விடுதலையடைந்து செல்வதைக் கண்டபோதும் இவைகளே அவன் மனத்தில் தோன்றின.

அந்த சந்தர்ப்பங்கள் அவன் ஆத்துமாவைத் துன்புறுத்தின. ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களே ஆவிக்குரிய பிரகாரமாய் வளர்ச்சியடைந்து அவனை முன்னேறச் செய்தன. ஆகையால் அவனை விடுதலையாக்கும்படி கட்டளை வந்தபோது தேவன் ஒருவரன்றி, வேறொருவரும் காட்டமுடியாத அன்பையும், பொறுமையையும் தன் சகோதரர் விஷயத்தில் காட்டக்கூடியவனாக்கின.

இந்த அனுபவங்களைப்போல் எந்த நிஷ்டூரமும் நம்மை வருத்தாது. தேவன் தாம் செய்யப்போகும் காரியத்தைக் குறித்துப் பேசிவிட்டு, அநேக நாட்கள் சென்றும் அதைச் செய்யாதபோது அதைச் சகிப்பது மிகக் கடினமே. ஆனால் விசுவாச சிட்சையாலன்றி, நாம் தேவனை அறியவேண்டிய பிரகாரம் அறியமுடியாது.

## மே 13

'நாம் ஏற்றபடி வேண்டிக்கொள்ளவேண்டியது இன்னதென்று அறியாமலிருக்கிறோம்' (ரோ. 8:26).

நமது ஜெபங்களுக்கு நமக்கு கிடைக்கும் உத்தரவே கிறிஸ்தவர்களாகிய நம்முடை அனுபவத்தில் நமக்கு விளங்காத காரியம். நாம் பொறுமை வேண்டுமென்று ஜெபிக்கிறோம். நம் பரம தகப்பன் நாம் பொறுமையை இழக்கக்கூடிய காரியங்களை நமக்கு அனுப்புகிறார். 'துன்பம் பொறுமையை உண்டாக்கும்.' நாம் தாழ்வை விரும்புகிறோம். அவர் துன்பங்களை அனுப்புகிறார். 'நாம் கஷ்டப்படும் காரியங்கள் மூலமாய்க் கீழ்ப்படிதலைக் கற்றுக்கொள்கிறோம்.'

நாம் தன்னயமற்றவர்களாயிருக்க வேண்டுமென்று ஜெபிக்கிறோம். நாம் மற்றவர்களுடைய காரியங்களைப்பற்றிச் சிந்திக்கவும், நம் சகோதரருக்காக ஜீவனையும் கொடுக்கத்தக்கதாகவும், சமயங்களைத் தேவன் நமக்கு அருளுகிறார்.

நாம் பலமுள்ளவர்களாவும், தாழ்மையுள்ளவர்களாகவும் இருக்க வேண்டுமென்று ஜெபிக்கிறோம். சாத்தானின் தூதனொருவன் நம்மைச் சித்திரவதை செய்ய நாம் தூசியில் கிடந்து அது அகல வேண்டுமென்று அலறுகிறோம்.

'ஆண்டவரே எங்கள் விசுவாசத்தை அதிகமாக்கும்' என்று பிரார்த்திக்கிறோம். அப்போது நமது பணமெல்லாம் பறந்து விடுகிறது. அல்லது நமது பிள்ளைகள் அதிக வியாதிக்குள்ளாகிறார்கள். அல்லது கவலையீனமான வீண் செலவழிப்பான அசுத்த

மான பழக்க வழக்கங்களும், சோம்பேறித்தனமுமுள்ள வேலையாள் நமக்குக் கிடைக்கிறான்.

நாம் இதுவரையும் பயன்படுத்தாத முறையில் நமது விசுவாசத்தைப் பயன்படுத்தவேண்டிய சோதனைகள் நமது விசுவாசம் விருத்தியடையத்தக்க விதமாய் நமக்கு வருகின்றன.

நாம் ஆட்டுக்குட்டியானவர் போன்று ஜீவிக்கவேண்டுமென்று ஜெபிக்கிறோம். அப்போது தாழ்மையான ஊழியத்தில் ஒரு பங்கு நமக்குக் கொடுக்கப்படுகிறது. அல்லது நமக்கு அநியாயமாய் வருத்தம் கொடுக்கப்படுகிறது. அதற்கு நாம் நியாயம் செய்யப்படத் தேடமுடியாமலிருக்கிறது. ஏனெனில், 'அவர் அடிக்கப்படப் போகிற ஆட்டுக்குட்டியைப்போல் கொண்டுபோகப்பட்டார் . . . அவர் தமது வாயைத் திறக்கவில்லை' என்று சொல்லப்பட்டிருக்கிறதல்லவா?

நாம் பட்சமாயிருக்கவேண்டும் என்று வேண்டுதல் செய்கிறோம். அப்போது வெகு கொடூரமாய்ச் சிடுசிடுக்கத்தக்க சமயம் வந்து சேர்கிறது. நாம் அமைதி வேண்டுமென்று விண்ணப்பம் பண்ணுகிறோம். நமது நரம்புகளெல்லாம் அறுந்துபோகும்போல் தோன்றும் மனப்பான்மைக்கு வந்து சேருகிறோம். இதனால் அவர் நமக்கு அமைதி கொடுக்கும்போது, யாரும் அதைக் கலைக்கமுடியாது என்று படிப்பிக்க வேண்டியவர்களாயிருக்கிறோம்.

நாம் அன்பு வேண்டுமென்று ஜெபிக்கிறோம். அப்போது நமக்கு விசேஷ துன்பங்கள் நேரிடுகின்றன. நாம் வெகு அன்பற்ற ஜனங்களோடு இருக்கவேண்டியதாகிறது. அந்த ஜனங்களை நமது இருதயமும் உணர்ச்சிகளும் மிகவும் வருந்தத்தக்க காரியங்களைப் பேச அனுமதிக்கிறார். ஏனென்றால் அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்ளது. அயோக்கியமானதைச் செய்யாது, சினமடையாது, சகலத்தையும் தாங்கும், சகலத்தையும் விசுவாசிக்கும். சகலத்தையும் நம்பும், சகலத்தையும் சகிக்கும், அன்பு ஒருக்காலும் ஒழியாது.

நாம் இயேசுவைப் போலிருக்கவேண்டுமென்று ஜெபிக்கிறோம். அதற்கு 'நான் உன்னைத் துன்பம் என்னும் உலையிலிருந்து தெரிந்தெடுத்திருக்கிறேன்.' 'உன் இருதயம் இதைத் தாங்கக்கூடுமா? உன் கரங்கள் ஸ்திரமானவைகளாயிருக்குமா? உன்னால் கூடுமா' என்பதே விடையாகக் கிடைக்கிறது.

சமாதானத்திற்கும், வெற்றிக்கும் வழி யாதென்றால் அன்புள்ள பிதாவின் கரத்திலிருந்து எல்லாக் கஷ்டங்களையும் ஏற்றுக்கொள்வதே. அத்துடன் மேகத்திற்கு மேலுள்ள நமது பரலோக வீடுகளில் சிம்மாசனத்திற்கு முன்னால் நின்று, அந்த மகிமையிலிருந்து நமது சுற்றுப்புறங்கள் யாவற்றையும் நோக்கி, யாவும் அன்பாகவும் தெய்வீகமாகவும் நமக்கு நியமிக்கப்பட்டன என்று எண்ண வேண்டும்.

1 நான் பலத்துக்காக ஜெபித்தேன். அப்போது சிறிது நேரம்
மனுஷனோ, தெய்வமோ யாரும் அருகில் இல்லாதது
போலிருந்தது
நான் சார்ந்திருந்த அன்பு என்னைக் குத்தி, காயப்படுத்திற்று.
நான் பற்றியிருந்த கரம் என் கையைத் தளரவிட்டது.
ஆனால் நான் பலவீனத்தால் நடுங்கி விழும் சமயம்,
நித்திய கரம் என் கையைத் தாங்கிற்று.

2 நான் ஒளி வேண்டுமென்று ஜெபித்தேன், சூரியன் மேகத்துள்
மறைந்தது.
சந்தேகம் என்னும் மூடுபனியால் சந்திரனும் இருளாயிற்று.
இவ்வுலகப் பயங்களால் வானவெள்ளிகள் ஒளிமங்கின;
என் சிறு விளக்கு முற்றிலும் எரிந்துபோயிற்று.
ஆனால் இரவால் சூழப்பட்டு உட்கார்ந்தபோது,
கிறிஸ்துவின் முகம் யாவையும் பிரகாசிப்பித்தது.

3 நான் சமாதானம் வேண்டினேன், நான் ஒய்ந்து
அமர்ந்திருக்கக் கனவு கண்டேன்
வலி உணர்ச்சி தோன்றாது மருந்தருந்தி அமைதலாய்த்
தூங்க எண்ணினேன்.
என் தலைக்குமேல் புயல் மேகம் உண்டாயிற்று.
சத்துருக்கள் உக்கிரமாய் என்னைத் தாக்கினார்கள்,
ஆனால் உக்கிரப் போர் முனையில் புயல் வீசுகையில்,
நான் அவர் இனிய குரல் கேட்டுப் பூரண சமாதானம்
அடைந்தேன்.

4 என் பலவீனமான ஜெபங்கேட்டு, நான் எண்ணின பிரகாரம்
விடை அளியாத ஞானத்திற்காக உம்மைத் துதிக்கிறேன்,
ஏனென்றால் உமது தயாளத்தினால் நான் பெற்றுக்கொண்ட
ஈவுகள்
நான் நினைத்ததற்கும், கேட்டதற்கும் மிகவும் அதிகமே,
நன்மை ஈவோரே! இவ்விதமாக என் வேண்டுதலின்படியல்ல
நீர் விரும்புகிறபடியே எனக்கு விடை அருளும்.
—ஆனி ஜான்சன் பிளின்ட்

## மே 14

'தேவன் தனக்குச் சொன்னபடி அந்நாளில்தானே' (ஆதி. 17:23).

உடனே கீழ்ப்படிவதே கீழ்ப்படிதலாகும். தாமதித்துக் கீழ்ப் படிதல் கீழ்ப்படியாமையே ஆகும். ஏதாவதொரு கடமையை நிறை வேற்றத் தேவன் நம்மை அழைக்கும்போது நம்முடன் ஓர் உடன் படிக்கை செய்கிறார். கடமையைச் செய்வதே நமது பங்கு. விசேஷ ஆசீர்வாதம் ஈந்து அவர் தமது பங்கைச் செய்வார்.

'அந்த நாளில் தானே' கீழ்ப்படிதலே சரியான கீழ்ப்படியும் முறையாகும். சில சமயம் நாம் கடமை செய்யும் நாளைக் கடத்தி, பின்னல் நாம் செய்யக்கூடிய அளவு பூரணமாய்ச் செய்கிறோம் என்பது உண்மையே. அப்படிச் செய்வது ஒன்றும் செய்யாமலிருப்பதைவிட மேலானதுதான். ஆனால் அது அரை மனதுடன் செய்வதாகும். ஒத்திப்போடப்பட்ட கடமை சரியான நேரத்தில் செய்யப்பட்ட கடமைக்குரிய ஆசீர்வாதங்களைப் பெறாது.

தாமதிப்பதால் நம்மையும், தேவனையும், மற்றவர்களையும் நாம் கொள்ளை இடுகிறவர்களாயிருப்பது பரிதபிக்கப்படத்தக்க நிலைமையே. 'அந்த நாளிலேதானே' என்று ஆதியாகமத்தில் சொல்லப்பட்டிருப்பதற்கு 'இப்பொழுது செய்' என்பதுதான் அர்த்தம்.

'மெய்யான விசுவாசமுள்ளவன் ''ஏன்'' என்ற வினவைக் குருசில் அறையவேண்டும்' என்று லுத்தர் சொல்கிறார். 'அவன் ஏன் என்று கேட்காமல் கீழ்ப்படிவான்' என்கிறார். அடையாளங்களையும், அற்புதங்களையும் கண்டாலன்றி நம்பமாட்டோம் என்கிறவர்களில் ஒருவனாக நான் இருக்கமாட்டேன். நான் கேள்வி கேட்காமல் நம்புவேன்.

நான் மாறுத்தரம் சொல்லக்கூடாது,
நாம் காரணம் கேட்கக்கூடாது,
நாம் காரியம் செய்து பணியவேண்டும்
கீழ்ப்படிதல் விசுவாசத்தின் கனி
அக்கனியின் பொலிவே பொறுமையாகும்.

—கிறிஸ்டீனா ரோசட்டி

## மே 15

'மேகத்தில் உள்ள ஒளியை மக்கள் காண்பதில்லை' (யோபு 37:21).

இந்த உலகம் தன் அழகின் மிகுதியான பாகத்தை மேக லோகத்திலிருந்துதான் பெற்றுக்கொள்ளுகிறது. சதா நீல நிறமாகத் தோன்றும் இத்தாலியா தேசத்தின் ஆகாய விரிவு வித்தியாச வித்தியாசமாய் இலங்கும் மேகத்தின் மகிமைக்கு ஈடாகாது. மேகங்களின் உதவி இல்லாவிட்டால், இந்தப் பூமி காய்ந்த பொட்டல் நிலமாகும். இரவுபோல் சூழ்ந்துகொண்டும், நிழலிட்டுக்கொண்டும், புத்துயிர் அளித்துக்கொண்டுமிருக்கும் மேகங்கள் மனித வாழ்க்கையில் உண்டு. ஒளி வீசாத மேகமில்லை. 'நான் என் வில்லை மேகங்களில் வைக்கிறேன்.'

நாம் மேகத்தின் மறுபுறத்தைக் காணவேண்டும். அலை அலையாய்த் தாங்கள் மறைக்கும் வெளிச்சத்தால் சூழப்பட்டு மலையில் குவிந்து

கிடக்கும் மகிமையான காட்சி, தன் உன்னத அழகினுல் நம்மை வியக்கச்செய்யும்.

நாம் மேகத்தின் அடிப்பாகத்தையே காண்கிறோம். ஆனுல் அவற்றின் உச்சிகளிலும், கீழ்ப்பாகங்களிலும் நிறைந்து பரந்து கிடக்கும் வெண் முகில்கள் ஒவ்வொன்றிலும் பிரதிபலிக்கும் ஒளியின் அழகை யாரால் விவரித்துக் கூறமுடியும்? இம்மேகங்கள் அனைத்தும் நவமளிக்கும் தன்மையைப் பெற்றுப் பூமிக்குக் கொண்டுவருகின்றன அல்லவா?

தேவனுடைய பிள்ளையே, உன் துக்கங்களையும், கஷ்டங்களையும் எதிர்புறமிருந்து நீ பார்க்கக்கூடுமானுல், அது எவ்வளவு நலமாயிருக்கும். பூமியிலிருந்து அவற்றைப் பார்க்காமல், நீ கிறிஸ்துவோடு வீற்றிருக்கும் உன்னத ஸ்தலத்திலிருந்து அவற்றைப் பார். அவை கிறிஸ்துவின் முகப் பிரகாசத்தை 'முப்பட்டைக் கண்ணுடிபோல்' பரலோகத்திற்கு நேராய்ப் பிரதிபலிப்பதை நீ அறிந்தால் வாழ்க்கையாகிய மலைச்சரிவில் அவை இருண்ட நிழல் விழச்செய்வதை திருப்தியாய் ஏற்றுக்கொள்வாய். தேவனுடைய சுத்திகரிக்கும் காற்ருல் அந்நிழல் விலகிக் கடந்துபோகும் என்பதை எப்போதும் ஞாபகப் படுத்திக்கொள்.

1 ஏன் திடீரென்று புயல் உக்கிரமாய்
என்னைச் சுற்றி வீசுகிறதென்று,
நான் அறியக்கூடாதவனுயிருக்கிறேன்.
தேவன் என் வழிகளை எல்லாம் கவனிக்கிருர்.
நான் நம்பலாம் என்பதறிவேன்.

2 எனக்குத் தெரியாத எதிர்காலத்தை மறைக்கும்
மூடு திரையை நான் விலக்காதிருக்கலாம்.
எனக்கு இருளா, ஒளியா எது காத்திருக்கிறதென்று
அறியாதிருக்கலாம், ஆயினும் நான் நம்பலாம்.

3 நான் இங்கிருந்து நதிக்கப்பாலுள்ள கரையை
அலைகளைக் கடந்து காண முடியாதிருக்கலாம்.
நான் எப்பொழுதும் தேவனுடையவன் என்பதை அறிவேன்
ஆகையால் நான் நம்பியிருக்கலாம்.

## மே 16

'தானியேலே! பயப்படாதே. நீ அறிவை அடைகிறதற்கும், உன்னை உன்னுடைய தேவனுக்கு முன்பாகச் சிறுமைப்படுத்துகிறதற்கும், உன் மனதைச் செலுத்தின முதல் நாள் துவக்கி உன் வார்த்தைகள் கேட்கப்பட்டன. உன் வார்த்தையினிமித்தம் நான் வந்தேன். பெர்சியா இராஜ்யத்தின் அதிபதி இருபத்தொரு நாள் மட்டும் என்னோடு நின்ருன்' (தானி. 10:12,13).

இதில் ஜெபத்தைக் குறித்த நல்ல பாடம் ஒன்றிருக்கிறது. சாத்தானுல் நேரில் உண்டாகும் தடைகள் இதில் காட்டப்பட்டுள்ளன.

தானியேல் இருபத்தொரு நாள் உபவாசம் இருந்து ஜெபித்தான். ஜெபிக்கையில் அதிகக் கஷ்டம் அனுபவித்தான். இந்தப் பாகத்தை வாசித்துக்கொண்டு போனால் அவன் கெட்ட மனிதனாயிருந்ததினால் அல்லது அவன் சரியாக ஜெபிக்காததினால் அப்படி நேரிடவில்லை; ஆனால் அது சாத்தானின் நேரான எதிர்ப்பினால் அப்படி நேர்ந்தது என்பதை அறிவோம்.

தானியேல், ஜெபம்பண்ணத் தொடங்கின அந்த நிமிடத்திலேயே ஆண்டவர் அவனுடைய ஜெபத்திற்கு விடை அருளப்பட்டது என்று சொல்ல ஆளை அனுப்பினார். ஆனால் கெட்ட தூதன் ஒருவன் அவனைச் சந்தித்து, அவனுக்கு இடையூறு செய்து, அவனோடு மல் யுத்தம் புரிந்தான். பரலோகத்தில் சண்டையுண்டாயிற்று. தானியேல் இப்பூவுலகில் மேல்லோகத்தில் அனுபவிக்கும் அதே வேதனையை அனுபவித்ததுபோல் தோன்றுகிறது.

'மாம்சத்தோடும், இரத்தத்தோடுமல்ல, துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும் . . . வான மண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளோடும் நமக்குப் போராட்டம் உண்டு' (எபே. 6:12).

சாத்தான் ஜெபத்திற்கு வரும் விடையை மூன்று வாரங்கள் பிந்தி வரச் செய்தான். தானியேல் மனச்சோர்வடையும் தருணத்திலிருந்தான். சாத்தான் அவனைக் கொல்ல அதிக மகிழ்ச்சியோடிருப்பான். ஆனால், தேவன் 'நாம் சகிக்கமுடிவதற்கு மேலாக' ஒன்றையும் வர விடமாட்டார்.

அநேகருடைய ஜெபத்திற்குச் சாத்தான் தடங்கலாயிருக்கிறான். உன் ஜெபங்களும், விசுவாசமும் குவிந்துகொண்டே போகையில் நீ பயப்படாதே. ஏனென்றால் நாளைக்குப்பின் அவை வெள்ளப் பெருக்கெடுத்து, விடையை அடித்துக்கொண்டு வருவதுடன் இன்னும் பல புதிய ஆசீர்வாதங்களையும் சேர்த்துக்கொண்டு வரும். —சர்மான்

பாதாளம் பக்தருக்குக் கேடுண்டாக்க தன்னாலானதைச் செய்கிறது. சிறந்த ஆத்துமாக்கள் வெப்பத்தினாலும், நெருக்கத்தினாலும் சோதித்தறியப் படுகின்றன. ஆனால் தேவன் அவர்களை ஒரு போதும் கைவிடார். —வாட்கின்ஸன்

## மே 17

'நாற்பது வருடம் சென்றபின்பு சீனாய் வனாந்திரத்திலே கர்த்தருடைய தூதனானவர் . . . அவனுக்குத் தரிசனமானார் . . . நீ வா, நான் உன்னை எகிப்திற்கு அனுப்புவேன்' என்றார் (அப். 30:34).

அடிக்கடி தேவன் ஏதோ ஒரு காரணத்திற்காக நம்முடைய வேலையை விட்டு அழைத்துச்சென்று ஊழியத்திற்குத் திரும்பப்போகுமுன் நம்மை அமைதியாயிருந்து படிக்கச் சொல்கிறார். அப்படிப் பட்ட வேளைகளில் காத்திருக்கும் நேரம் வீணானதல்ல.

தன் சத்துருக்களிடமிருந்து தப்பி ஓடிக்கொண்டிருந்த ஒரு வீரன் தனது குதிரைக்கு லாடம் கட்டவேண்டியிருப்பதை அறிந்ததால், அவன் புத்தி அவனைத் தாமதிக்கவேண்டாம் என்று சொல்லிற்று. ஆனால் அதற்கு மேலான ஞானம் அவனைக் கொல்லன் வீட்டில் சில நிமிடம் தாமதித்து லாடம் அடித்துக்கொண்டு போகும்படி ஏவினது. தன்னைத் தொடர்ந்து வந்தவர்களின் காலடி சப்தம் வெகு சமீபத்தில் கேட்டபோதிலும் தன் குதிரைக்கு லாடம் அடிக்கும் மட்டும் சில நிமிடம் காத்திருந்தான். அவன் சத்துருக்கள் நூறு கெஜ தூரத்தில் காணப்பட்டபோது குதிரைமீதேறி வேகமாய்ச் சென்றான். குதிரை காற்றாய்ப் பறந்தது. அவன் தாமதித்த நேரத்தையும் சீக்கிரம் மேற்கொண்டு அவனைத் தப்புவித்தது.

நாம் அடுத்த பயணத்திற்கும் வேலைக்கும் ஆயத்தமாகத் தக்கவிதமாய்த் தேவன் நம்மைத் தாமதிக்கச் சொல்கிறார்.

1 அடுத்த அடி நன்றாய்த் தெரியும்வரை,
என்னைக் கூப்பிடும் சப்தம்
என் உள்ளத்திலிருந்து கேட்பதற்கு
நான் பொறுமையாய்க் காத்துக்கொண்டிருக்கிறேன்.

2 மங்காத நம்பிக்கையோடு,
நான் நம்பிக் காத்திருக்கிறேன்,
என் இயேசு என்னை நடத்த வாக்குக் கொடுத்துள்ளார்
என் கண்கள் அவரையே நோக்கும்.

3 ஒருவேளை இன்றே என் இயேசு
என் வருங்கால வழிக்கு ஏற்ற,
கதவைத் திறந்துவிடலாம்;
ஆகையால் நான் பொறுமையாய்க் காத்திருப்பேன்.

4 காத்திருப்பேன்! ஆம் இன்னும் காத்திருப்பேன்,
நான் நீண்டகாலம் காத்திருக்கிறேன் என்பதை அறிவேன்.
அவர் தமது சித்தத்தை அறிவிக்கும்வரை
அமர்ந்து காத்திருத்தல் நலமே.

5 காத்திருக்கிறேன்! ஆம் இன்னும் காத்திருக்கிறேன்.
என் அன்புள்ள இயேசு பிந்தமாட்டார்;
அவர் கதவைத் திறக்க நான் காத்திருக்கிறேன்
என்பதை அவர் அறிவார். —ஜே. டி. ஸ்மித்

## மே 18

'பிழைப்போம் என்கிற நம்பிக்கை அற்றுப்போகத்தக்கதாக . . . அதிகப் பாரமான வருத்தம் எங்களுக்கு உண்டாயிற்று. நாங்கள் எங்கள்மேல் நம்பிக்கையாயிராமல், மரித்தோரை எழுப்புகிற தேவன்மேல் நம்பிக்கையாயிருக்கத்தக்கதாக' (2 கொ. 1:8,9).

1 அளவிலா வருத்தமடைந்தோம்
எங்கள் பலத்துக்கு மிஞ்சின வருத்தம் அடைந்தோம்
சரீரத்திலும், ஆத்துமத்திலும் வெகு வருத்தம் அடைந்தோம்
சத்துருக்களாலும், மித்துருக்களாலும் வருத்தம்
அடைந்தோம்
பிழைப்போம் என்ற நம்பிக்கை அற்றுப்போகும்வரை
வருத்தம் அடைந்தோம்.

2 எங்கள் வருத்தத்தால், கர்த்தர் ஒருவரே எங்கள் உதவி
என்று கண்டோம்,
தேவனின் கோலையும், தடியையும் நேரில் அறிந்தோம்.
வேறொன்றையும் பற்ருத சுயாதீனமடைந்தோம்
நடவாததும், நடக்கும் என்ற நம்பிக்கை கொண்டோம்
தேவனில் வாழும் வாழ்க்கையை அறிந்தோம்.
எங்கள் வருத்தத்தால் கிறிஸ்துவைப்போல் தத்தம் செய்து
வாழ்வதறிந்தோம்.

கஷ்டமான இடத்தில் வருத்தமடைதல் நமது வாழ்க்கையை நமக்கு அருமையானதாக்குகிறது. பெரும் கஷ்டத்திலிருந்து நாம் திரும்ப உயிர் பெறும்போது நம் ஜீவியத்தை மறுபடி ஆரம்பித்தல் போலாகிறது. நமது வாழ்க்கை எத்தனை அருமையானது என்று நன்ருய் உணருகிறோம். ஆகையால் அதைத் தேவனுக்கும், மனிதனுக்கும் இன்னும் அதிகமாகப் பயன்படச் செய்கிறோம். நம் வருத்தங்கள், நம்மை மற்றவர்களின் கஷ்டங்களை உணரச் செய்கின்றன. நம்மை மற்றவர்களோடு பட்சதாபப்பட ஏற்றவர்களாக்குகின்றன.

ஒரு வாக்குத்தத்தத்தை அல்லது ஒரு கொள்கையை எடுத்துக்கொண்டு, தங்களுக்கு வரும் கஷ்டத்தைக் கண்டு பயப்படுவோருடைய அவிசுவாசத்தைக் குறித்து வெகு எளிதாய் பேசும் இயற்கை உடையவர்கள் சிலர் உளர். அதிக வருத்தத்தை அனுபவித்த ஒரு பெண் அல்லது ஆண் இவ்வாறு பேசமாட்டார். வருத்தம் இன்னதென்று அறிந்தவர் பட்சதாபத்தோடும் மிருதுவாகவும் பேசுவர். 'மரணம் உங்களில் கிரியை செய்கிறது' என்று பரிசுத்த பவுல் கூறியதின் கருத்து இதுவே.

ஒரு பெரிய மரக்கலத்திலுள்ள உலைநெருப்பு சக்கரத்தைச் சுழலச் செய்து இயந்திரத்தை ஓட்டிக் கப்பலைக் காற்றிற்கும், அலைக்கும்

எதிராய் முன்னேறிச் செல்லச் செய்வதுபோல், நம்மை முன்னேறிச் செல்ல வருத்தங்களும் கஷ்டங்களும் அவசியம் —எ. பி. சிம்ஸன்

வருத்தமாகிய ஆலேயிலிருந்து,
வாழ்க்கையில் இனிய ரசம் உண்டாகிறது.
கண்ணீர் வடியாத கண்களால்
பிரகாசமளிக்க முடியாது.

## மே 19

'இப்படிச் சொல்லி முடிக்குமுன்னே . . . கர்த்தருக்கு ஸ்தோத்திரம் . . . அவர் தம்முடைய கிருபையையும், தம்முடைய உண்மையையும் நீக்கவில்லே' என்ருன் (ஆதி. 24:15:27).

நாம் 'சொல்லி முடிக்குமுன்' நம்முடைய ஜெபம் முடிவடையுமுன் சரியான ஒவ்வொரு ஜெபத்திற்கும் விடை கிடைக்கிறது. ஏனென்ருல் இயேசுகிறிஸ்துவின் நாமத்திலே அதாவது கிறிஸ்துவின் சித்தத்திற்கு ஏற்றபடி விசுவாசத்தோடு கேட்பதெல்லாம் நமக்குக் கிடைக்குமென்று தேவன் வாக்களித்திருக்கிருர்.

தேவனுடைய வாக்கு தவருது; ஆகையால் ஜெபத்துக்குரிய நிபந்தனேகளே நிறைவேற்றி, நாம் ஜெபித்துக்கொண்டிருக்கும் போது, நம் ஜெபம் பரலோகத்தில் கேட்கப்பட்டு விடையளிக்கப் படுகிறது. ஆனுல் இவ்வுலகத்தில் அது காட்டப்படாதிருக்கலாம்.

ஆகையால் ஒவ்வொரு ஜெபத்தின் முடிவிலும், அவர் பதிலே ஏற்கனவே அளித்துவிட்டதாகக்கொண்டு அவருக்குத் துதி செலுத்த வேண்டும். அவர் தமது உண்மையையும், கிருபையையும் நீக்காதவர் (தானி. 9:20—27ஐயும், 10:12ஐயும் பார்).

ஒரு ஆசீர்வாதம் வரும் என்று நம்பும்போது விசுவாசத்தை உறுதியாய்க் கடைபிடித்து, நமக்கு அந்தப் பாக்கியம் கிட்டிவிட்டது போலவே நடக்கவும் ஜெபிக்கவும் வேண்டும்.

நம்முடைய வேண்டுகோளே நமக்கு அவர் ஈந்துவிட்டதாகவே அவரை நம்பவேண்டும். நாம் பெற உரிமைபாராட்டும் காரியத்திற்காக, அவர்மேல் நமது முழு பாரத்தையும் போட்டு, அவர் கொடுக்கிருர் என்றும், அவர் கொடுத்துக்கொண்டேயிருப்பார் என்றும் நாம் நம்பவேண்டும். இதுவே நம்பிக்கைக்குரிய நிலே.

ஒரு மனேவி கலியாணம் பண்ணினவுடன், ஒரு புது நிலேமைக்குள்ளாகிருள். அந்த நிலேமைக்கு ஏற்றப்படியே நடக்கிருள். இயேசுவை நாம் இரட்சகராகவும், சுத்திகரிப்பவராகவும், சுகமளிப்பவராகவும் விடுவிப்பவராகவும் ஏற்றுக்கொள்ளும்போது, இவ்விதமாகவே அவர் நமக்கு இருக்கிருர் என்று நாம் நம்பவேண்டும்.

'தேவன் என்னை ஒரு காரியத்திற்காக ஜெபிக்கச் சொல்லும் போது, நான் அவ்வாறு வேண்டிக்கொள்ளும்பொழுதே அது என்னை நோக்கி வருகிறது.'

## மே 20

*'பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம் பண்ணுதிருப்பேனு?' (யோ. 18:11).*

ஒரு சித்திரக்காரன் ஒரு படம் வரைய எவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்வானே அதேபோல் ஆயிரம் மடங்கு சிரமம் தேவன் நம் விஷயத்தில் எடுத்துக்கொள்கிறுர். அவர் கொடுக்கும் ஈவாகிய வெள்ளைப்போளத்தை நாம் சரியான எண்ணத்தோடு பெற்றுக் கொள்வோமானுல் துக்கம் என்ற கைத்திறனுலும், சந்தர்ப்பம் என்னும் வர்ணங்களினுலும், நம்மை அவர் பார்வைக்கு உயர்ந்த மேன்மையான அந்தஸ்துள்ளவர்களாக்குவார்.

ஆனுல் இந்தப் பாத்திரத்தை நாம் அப்பால் தள்ளிவிட்டு, இந்த உணர்ச்சிகளை எழும்பவிடாமல் தடுத்தோமானுல், அதனுல் ஆத்து மாவுக்கு உண்டாகும் கேட்டை நாம் சீர்ப்படுத்த முடியாது. தேவன் எவ்வளவு அன்போடு இந்த வெள்ளைப்போளங்களைக் கொடுக்கிறுர் என்று ஒருவரும் அறிய முடியாது. என்றுலும், ஆத்தும நன்மைக் காக நாம் ஏற்றுக்கொள்ளவேண்டிய காரியத்தை, நாம் நித்திரை மயக்கமான நிர்விசாரத்தால், நம்மை விட்டுக் கடந்து செல்ல விட்டு விடுகிறேம். அதிலிருந்து ஒரு நன்மையும் ஏற்படாது போகிறது.

பின்பு நாம் 'அந்தோ! என் ஆண்டவரே! நான் எத்தனை பயனற்ற வன், என்னுள்ளம் எவ்வளவாய் இருள் சூழ்ந்திருக்கிறது' என்று முறையிடுகிறேம். என் பிள்ளையே, நான் உனக்குச் சொல்வதைக் கேள். உன் இருதயத்தை வேதனைக்குத் திறந்துவை. அது நீ பக்தி யோடும், உணர்வோடும் இருப்பதைவிட உனக்கு அதிக நன்மை பயக்கும்.

—டாலர்

'இறைவனே, நம் வேதனையை நீக்கியருளும்' என்ற அங்கலாய்ப்பு நிறைந்த மனிதக் குரல் தேவனண்டை எட்டியது. 'இது நீர் அமைத்த இவ்வுலகை இருளாக்குகிறது. இருதயத்தைத் திணறச் செய்யும் சங்கிலிபோலும், உயரப் பறக்க விரும்பும் செட்டைகளின்மேல் அழுத்தும் பாரம்போலும் இருக்கிறது. இத்தகைய வேதனையை நீர் உமது உலகிலிருந்து அகற்றிவிடும். அப்பொழுது மக்கள் உம்மை இன்னும் அதிகமாய் நேசிப்பார்' என்றது. தேவன் பதில் கூறினுர்: 'நான் வேதனையை அகற்றிவிடட்டுமா? அதனுேடு துன்பத்தால் பயிற்சியளிக்கப்பட்டு ஆன்மாக்கள் பெறும் பலத்தையும் சக்தியையும் கூட நீக்கிவிடுவதா? இதயத்தோடு இதயத்தைப் பிணைக்கும் இரக்கம் என்ற உணர்ச்சியையும் அதனுல் திகழும் தியாகத்தையும்

எடுத்துவிடுவதா? நெருப்பையொத்த துன்பத்திலிருந்தும் விண்ணையே நிமிர்ந்து நோக்கும் வீரர்களையும் இழக்க விரும்புகிறீர்களா? பிறரை இரட்சிப்பதற்காக அதிக கிரயத்தைக் கொடுக்கும் தனது நஷ்டத்தைப் புன்னகையோடு நோக்கும் அன்பையும் அகற்றுவதா? என்றும் வந்து சேரவிரும்பும் நீவிர் சிலுவையில் சிறந்த கிறிஸ்துவையும் இழக்கச் சம்மதிக்கிறீர்களா' என்று அவர் சொன்னார்.

## மே 21

'இராக்காலத்தில் என் சங்கீதத்தை நான் நினைப்பேன்' (சங். 77:6).

தன்னுடைய கூட்டில் வெளிச்சம் நிறைந்திருக்கும்போது, தன் எஜமானன் விரும்பும் பாட்டை ஒருபோதும் பாடாத ஒரு பட்சியைப் பற்றி நான் வாசித்திருக்கிறேன். பகல் பொழுதில் இங்கு ஒரு கவி, அங்கு ஒரு சரணமாகப் படிக்கும்; ஆனால் கூண்டின் கதவு பூட்டப் பட்டு, புலரொளிக் கதிர் உள்ளே நுழையாதபடி செய்தால்தான் அது ஒரு பாட்டாவது முழுவதுமாகப் படிக்கும்.

அநேக ஜனங்கள், இருளை உண்டாக்கும் நிழல் விழுமுன் பாடக் கற்றுக்கொள்வதில்லை. 'நைட்டிங்கேல்' என்று கதைகளில் கூறப் படும் பட்சி, தன் மார்பை ஓர் முள்ளிற்கு எதிரே வைத்துத்தான் தன் இனிய கீதங்களைப் பாடுமாம். இரவில்தான் தேவதூதரின் இனிய கானம் கேட்டது. நடுச்சாமத்தில்தான் 'இதோ மணவாளன் வருகிறார்; அவரைச் சந்திக்க எதிர்கொண்டு செல்லுங்கள்' என்ற சப்தம் உண்டாயிற்று.

மேகங்கள் இருண்டு தாழ்ந்து வருவது போன்ற துன்பமயமான காலங்களில் அல்லது வேறு சமயங்களில், தேவ அன்பின் ஐசுவரியத்தை, ஆறுதலும் திருப்தியும் அளிக்கும் தன்மையை ஒரு ஆத்துமா அறிய முடியுமா என்பது சந்தேகமே.

இருளிலிருந்து வெளிச்சம் உண்டாகிறது. இரவின் கர்ப்பத்திலிருந்து விடியற்காலம் பிறக்கும்.

ஜேம்ஸ் கிரில்மன் என்பவர் நேட்டாலி என்ற ஒரு தேசப் பிரஷ்டம் செய்யப்பட்ட செர்பியாவின் ராணியைத் தேடுவதற்காக, தான் பால்கன் நாடுகளில் பிரயாணம் செய்வதைப்பற்றி ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறார்.

'அந்த மறக்கமுடியாத பிரயாணத்தில், 'நான் அத்தர் என்னும் ரோஜா வாசனைத் திரவியம் பால்கன் மலைகளிலிருந்துதான் உலகமெங்கும் அனுப்பப்படுகிறது என்பதை அறிந்தேன். அதில் கவனிக்கத்தக்க விசேஷம் என்னவென்றால், அந்த ரோஜா மலர்கள்

நள்ளிரவில்தான் சேர்க்கப்பட்டன. பூப் பறிப்பவர்கள் இரவு ஒரு மணிக்கு ஆரம்பித்து இரவு இரண்டு மணிக்குள் முடிக்கிறார்கள்.

முதலில் நான் இது பழைய காலத்து மூடநம்பிக்கை என்றெண்ணினேன். பின்பு நான் இந்தக் காரியத்தை ஆராய்ந்தேன். அதிலிருந்து பகல் ஒளியில் அம்மலர்களிலுள்ள கந்தம் நூற்றில் நாற்பது பாகம் குறைந்துபோகிறது என்ற சாஸ்திரபூர்வமாய் நிரூபித்துள்ளார்கள் என்பதை அறிந்தேன்' என்று எழுதியுள்ளார்.

மனுஷ வாழ்க்கையிலும் மனித நாகரிகத்திலும் இது ஒரு கற்பனையல்ல, அதிக உண்மையான காரியம்.

—மால்கம் ஜே. மெக்லீயோட்

## மே 22

'அவர் காரியத்தை வாய்க்கப்பண்ணுவார்' (சங். 37:5).

'உன் வழிகளை எல்லாம் கர்த்தருக்கு ஒப்புவித்து அவர்மேல் நம்பிக்கையாயிரு, அவரே காரியத்தை வாய்க்கப்பண்ணுவார்' என்றெழுதப்பட்டிருப்பதை 'யங்' என்பவர் 'உன் வழிகளை எகோவாமேல் போட்டுவிடு; அவர்மேல் நம்பிக்கையாயிரு; அவர் கிரியை செய்கிறார்' என்று எழுதியிருக்கிறார்.

நம்முடைய பாரம் எதுவானாலும், நம்முடைய கரத்திலிருந்து அவர் கரத்தில் வைத்து, உண்மையாய் ஒப்புவித்தால் . . . உடனே தேவன் கிரியை செய்கிறார் என்பதை இது நமது கவனத்திற்குக் கொண்டுவருகிறது. நம்முடைய வழி துக்கமானதாய், கஷ்டமானதாய் சரீரப்பிரகாரமான தேவை நிறைந்ததாய், அல்லது நமக்கருமையான ஒரு ஆளை மனந்திரும்பச் செய்யவேண்டும் என்ற கவலை நிறைந்ததாய் இருக்கலாம். இவைகள் யாவற்றையும் அவர் கரத்தில் ஒப்புவிக்கலாம்.

'அவர் கிரியை செய்கிறார்' எப்பொழுது? இப்பொழுதே. நாம் ஒப்புவிப்பதை அவர் ஏற்றுக்கொள்வார். நாம் செய்யச் சொல்வதைச் செய்வார் என்று எதிர்பார்ப்பதை நாம் ஒத்திபோடுகிறோம். ஆனால் நாம் செய்யவேண்டியதென்ன? நாம் ஒப்புவிக்கும்போதே, 'அவர் வாய்க்கச் செய்கிறார்', 'அவர் இப்பொழுதே வாய்க்கச் செய்கிறார்' என்று சொல்லி, அதற்காகத் துதி செலுத்தவேண்டும்.

நாம் எதிர்பார்த்திருப்பதே, பரிசுத்த ஆவியானவரை. நாம் அவர்மேல் தள்ளிவிட்ட காரியத்தை நிறைவேற்றச் செய்கிறது. அது நமக்கு எட்டாத தூரத்தில் இருக்கிறது. இனி நாம் அதைச் செய்ய முயற்சி செய்வதில்லை. அவரே வாய்க்கச் செய்கிறார்.

இதிலிருந்து நாம் ஆறுதலைப் பெற்றுக்கொண்டு, அதைத் திரும்பத் தேடாதிருக்கவேண்டும். இது எவ்வளவாகச் சங்கடத்தை நீக்குகிறது; அவரே சங்கடமான கட்டத்தில் கிரியை செய்கிறார்.

ஆனால் சிலர் 'நான் ஒரு பயனையும் காணவில்லையே' எனலாம். கவலைப்படாதே. நீ காரியத்தை அவர்மேல் வைத்துவிட்டு இயேசு செய்வாரென்று எதிர்பார்த்திருந்தால் அவர் வாய்க்கச் செய்கிறார். விசுவாசம் சோதிக்கப்படலாம். ஆனால் 'அவர் வாய்க்கப்பண்ணுவார்.' அவருடைய வார்த்தை நிச்சயமானதே.

எனக்காக யாவையும் செய்து முடிக்கப்போகிற தேவனாகிய உன்னதமான தேவனை நோக்கிக் கூப்பிடுவேன் (சங். 57:2).

முந்தின மொழிபெயர்ப்பில் 'என் கையிலுள்ள வேலையை அவர் செய்து முடிப்பார்' என்று அழகாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அது நமக்கு இன்றையதினம் வெகு நிஜமான காரியமாகத் தோன்றுகிறதல்லவா? என் பலனை அளவிடாது நான் தப்பிதமாய் ஏற்றுக்கொண்ட விஷயத்தை, நான் அவரை எனக்காகச் செய்யச் சொல்லி, அவர் செய்துமுடிப்பார் என்ற நிச்சயத்தில் கவலையற்றிருக்கலாம். 'ஞானவான்களும் அவர்களுடைய கிரியைகளும் தேவனுடைய கரத்தில் இருக்கின்றன.'

—ஹாவர்கால்

ஆண்டவர் தாம் செய்வதாக உடன்படிக்கை செய்த விஷயங்களைச் செய்துகொண்டிருப்பார். அவர் எடுத்துக்கொள்ளும் காரியங்களைச் செய்துமுடிப்பார். நாம் முன் பெற்ற இரக்கங்கள் வருங்காலத்திற்கான உத்தரவாதங்களாகும். அவைகளே நாம் இன்னும் அவரை நோக்கிக் கூப்பிட ஏவும் சிறந்த காரணங்களாகும்.

—சி. எச். ஸ்பர்ஜன்

## மே 23

'அவர்களுடைய ஞானமெல்லாம் முழுகிப்போகிறது. அப்பொழுது தங்கள் ஆபத்தில் அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகிறார்கள். அவர் இக்கட்டுகளுக்கு அவர்களை நீங்கலாக்கி விடுகிறார்' (சங். 107:27,28).

கவலை நிறைந்த முகத்தோடு நிற்கும் கிறிஸ்தவனே! உன் புத்தி தடுமாற்றமடையும் நிலைமைக்கு வந்துவிட்டாயா? நீ இப்போது சகித்துக்கொண்டிருக்கும் கஷ்டங்களையும் இனி என்ன நிகழப்போகிறதென்பதைப் பற்றியும் சிந்திக்கிறாயா? உலகனைத்தும் உன்னை எதிர்க்க நீ தனியே நிற்பதாகத் தோன்றுகின்றதா? உன் புத்தி தடுமாற்றமடையும்பொழுதுதான் இறைவனின் ஆற்றல் வெளிப்படும் என்பதை நினைத்துக்கொள். தளரச் செய்யும் வேதனைகளினால் தாக்கப்பட்டு நீ புத்தி தடுமாற்றமடையும் நிலையில் இருக்கிறாயா? அவற்றைத் தாங்க முடியாது என எண்ணுகிறாயா? அடுத்தடுத்து வரும் துன்பத்தினால் மனமுடைந்து கலங்கிச் செயலற்றிருக்கிறாயா?

ஆனாலும் உன் மனம் கலங்கும் வேளையில்தான் கிறிஸ்து உனக்கு உதவி செய்ய விரும்புகிறார் என்பதை நினைவுபடுத்திக்கொள்,

நீ தொடங்கிய வேலையை முடிக்க முடியாமல் மதியிழந்து நிற்கிறாயா? அவ்வேலையின் பாரம் உன் இருதயத்தையும் உள்ளத்தையும் அழுத்துகிறதா? அதைச் செய்வதற்குப் பலம் வேண்டி உன் நடுங்கும் கைகளை நீட்டுகின்றாயா? உன் புத்தித் தடுமாற்றமடையும் அந்த வேளையில் உன் பாரத்தைத் தாங்குவதற்கு ஒருவர் நிற்கிறார் என்பதை நினைத்துக்கொள்.

அறிவு கலங்கும் நிலைமைக்கு நீ வந்துவிட்டாயா? அதுவே உன்னை ஒருபோதும் கைவிடாத உன் ஆண்டவரின் ஆற்றலை நீ அறிவதற்கு ஏற்ற நிலை. விரைவில் உன் கால்கள் ஒளி நிறைந்த பாதைக்கு அழைத்துச் செல்லப்படும். புத்தி தடுமாற்றமடையும் இத்தகைய நிலைமையிலேயே தேவன் வல்லவர் என்பது நிரூபிக்கப்படும்.

சாவிக்கொத்திலுள்ள கடைசிச் சாவியே கதவைத் திறக்கக் கூடியதாயிருக்கலாம். நீ மனந்தளர்ந்து போகாதே.

—அ. வில்ஸன்

## மே 24

'ஆபிரகாம் முதிர் வயதாயிருக்கையில், சாராள் தேவன் குறித்த காலத்தில் அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்' (ஆதி. 21:2).

'கர்த்தருடைய ஆலோசனை நித்தியகாலமாகவும் அவருடைய இருதயத்தின் நினைவுகள் தலைமுறை தலைமுறையாகவும் நிற்கும்' (சங். 33:11).

ஆனால் நாம் கர்த்தருடைய வேளைக்காக காத்திருத்தல்வேண்டும். தேவனுக்குக் குறிப்பிட்ட நேரம் உண்டு. நாம் அவற்றை அறிய முடியாது. நாம் அவற்றிற்காகக் காத்திருக்கவேண்டும்.

தேவன் ஆபிரகாம் ஆரானில் இருக்கையில், வாக்குக்கொடுத்த பிள்ளையை மடியில் அணைத்துக்கொள்ள அவன் முப்பது ஆண்டுகள் காத்திருக்கவேண்டும் என்று தேவன் அவனிடத்தில் கூறியிருந்தால் அவன் மனச்சோர்வடைந்திருப்பான். ஆனபடியினால் கருணையான அன்பினால், காத்திருக்க வேண்டிய காலங்கள் அவனுக்கு மறைக்கப்பட்டிருந்தன. அத்தனை காலமும் சென்று, இன்னும் சில மாதங்களே காத்திருக்கவேண்டும் என்கிற சமயத்தில் தேவன் அவனை நோக்கி, உற்பவகாலத் திட்டத்தில் சாராளுக்கு ஒரு குமாரன் பிறப்பான் என்றார் (ஆதி. 18:14).

குறிப்பிட்ட வேளை வந்தது. அந்தப் பக்தனின் வீட்டிலிருந்த நகைப்பு, அவர்கள் காத்திருந்த நீண்டகாலத்தை மறக்கச் செய்தது.

காத்திருப்பவனே தைரியங்கொள். உன்னை ஏமாற்றாதவரை நீ நம்பியுள்ளாய். அவர் குறித்த வேளைக்கு ஒரு நிமிஷங்கூடப் பிந்தி வரமாட்டார். சீக்கிரத்தில் உன் வருத்தங்கள் எல்லாம் களிப்பாய் மாறும்.

தேவன் உன்னை நகைக்கச் செய்யும்போது உன் ஆத்துமா எவ்வளவாய்க் களிகூரும்! விடியற்காலையில் இருள் நீங்குவதுபோல் உன் வருத்தங்களும் கண்ணீரும் பறந்துபோம்.

கப்பல் பிரயாணிகளான நாம் திசையறியும் கருவியையும், பாதை குறிப்பிட்டிருக்கும் அட்டவணையையும் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை. எல்லாம் வல்ல மாலுமி அதைக் கவனித்துக்கொள்ளட்டும்.

சில காரியங்களை ஒரே நாளில் செய்துமுடிக்க முடியாது. சூரிய அஸ்தமன அழகைத் தேவன் ஒருநாளில் செய்வதில்லை. நாள் கணக்காக மூடுபனியைச் சேர்த்து வைத்து, மேற்கில் தமது அழகிய மாளிகையை நிர்மாணிக்கிறார்.

ஒருநாளில், நிறைவேறும், எப்போது என்று அறியோம்;
அதி உன்னத சிகரம் ஓர்காலம் தாழ்ந்த பள்ளத்தாக்காகும்.
வறண்ட நிலம் மழையால் திருப்தியாகும்,
வெண்கலக் கதவுகள் உடைக்கப்படும்.
இரும்புக் கதவுகள் விண்ணுக்கேறும் ஏணியாகும்,
கரடுமுரடான இடம் சமமாகும். கோணலானது நேராகும்.
பொறுமையோடு காத்திருக்கிறவர்களுக்கே இவையாவும் ஆகும்,
தேவன் குறித்த வேளையில் இவை ஆகும்,
நாளை நடக்காவிடினும், ஓர்நாள் நிறைவேறும்.

—ஹால்

## மே 25

'தெரிந்துகொள்ளப்பட்டவர்கள், இரட்சிப்பை மகிமையோடே பெற்றுக்கொள்ளும்படி சகலத்தையும் அவர்கள் நிமித்தமாகச் சகிக்கிறேன்' (2 தீமோ. 2:10).

யோபு சாம்பலில் உட்கார்ந்து விதியை நொந்து, தன் மனதைப் புண்படுத்திக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் தனக்கு வந்த கஷ்டத்தால், அந்தச் சிக்கலான பிரச்சினையை, உலகத்தாருக்காகத் தீர்த்துவைக்க ஒரு மனிதன் எவ்வளவு செய்யக்கூடுமோ, அவ்வளவும் தான் செய்துகொண்டிருந்தான் என்பதை அறிந்திருந்தால் அவன் தைரியமாயிருந்திருப்பான். ஒரு மனிதனும் தனக்காகவே ஜீவிப்பதில்லை. யோபின் வாழ்க்கையைப்போலவே, நமது வாழ்க்கை வசனமும் எழுதப்பட்டிருக்கிறது. யோபு கஷ்டப்பட்டு, தன் வியாதியால் வருந்தின நாட்களே, நாம் அவனுடைய வாழ்க்கையை நினைவுகூரத் தக்கதாய் முக்கியமாயிருக்கின்றன. அஃதன்றி அவன் பெயர் ஜீவ

புத்தகத்தில் எழுதப்பட்டிருக்காது. அப்படியே நாமும் ஒரு வழியுமின்றிச் சங்கடம் அனுபவித்தும், ஒளியிழந்துபோகாத அந்த நாட்களே நம்முடைய வாழ்க்கையின் முக்கிய நாட்களாகும்.

அதி துக்கம் நிறைந்த நாட்களே, நம் சிறந்த நாட்கள் என்று அறியாதவர்கள் யார்? நம் முகம் நகைப்பால் நிறைந்திருக்க, நம் வசந்தகால மலர் நிறைந்த மைதானத்தின்மேல் உற்சாகமாய் அலைந்த அந்த நாட்களில் இதயத்தின் வேலை வீணாயிற்று.

எப்பொழுதும் மகிழ்ச்சியாகவும், உற்சாகமாகவும் இருக்கும் ஆத்துமா ஆழ்ந்த வாழ்க்கையை அறியாது, அதிலும் ஒரு நன்மை உண்டு. ஓரளவிற்குத் திருப்தியும் அது அடைகிறது. ஆனால் அந்த அளவு வெகு கொஞ்சமே. அதன் இதய வளர்ச்சி குன்றுகிறது. அதிக ஆழமாகவும் அதிக உயரமாகவும் வளர்ச்சி பெறக்கூடிய அதன் தன்மை பூரணமடைவதில்லை. பூரண இன்பத்தை உணராமலேயே அதன் வாழ்க்கை முடிவடைகிறது.

துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள் (மத். 4:4). 'மாரிகால இருண்ட வானத்தில்தான் நட்சத்திரம் மிகுந்த ஒளியுடன் பிரகாசிக்கிறது. பனிக்கட்டி நிறைந்த ஆள்போக முடியாத மலை உச்சியில் தான் ''ஜென்டியன்'' என்னும் அழகிய மலர் மலருகிறது.'

திராட்சைப் பழம் ஆலையில் நசுக்குண்டு கிடப்பதுபோல், நாம் வேதனையில் நசுக்கப்படும்வரை தேவனுடைய வாக்குத்தத்தம் காத்திருப்பதுபோல் தோன்றுகிறது. துக்கம் அனுபவித்தவர்கள் மாத்திரமே, 'துக்கமடைந்த மனுஷகுமாரனின்' பட்சத்தை அறிவார்கள்.

உன் வாழ்க்கையில் அதிக ஒளியில்லை. நீண்ட கால இருள் உனக்காகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றது. ஏனென்றால் நீண்ட கோடை உன்னை வறட்சியாய் பயனற்றவனாக்கிவிடும். நம் ஆண்டவர் யாவும் அறிவார். சூரியனும் மேகங்களும் அவர் கையிலிருக்கின்றன.

'இன்று அதிக வறட்சியாயிருக்கிறது. ஆனால் நீ சில நீல மேகங்களைக் கண்டாயல்லவா?'
ஸ்காட்ச் ஷூமேகர்

## மே 26

'ஊற்றுத்தண்ணீரே, பொங்கிவா! அதைக் குறித்துப் பாடுவோம் வாருங்கள்' (எண். 21:27).

இது ஒரு புதுமையான பாட்டாகவும், புதுமையான ஊற்றாகவும் இருக்கிறது. அவர்கள் வறண்ட வனாந்தரத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். தண்ணீரே கிடைக்கவில்லை. தாகத்தால் வருந்தினார்கள். அப்பொழுது தேவன் மோசேயோடே பேசி:—

'ஜனங்களைக் கூட்டிச்சேர். நான் அவர்களுக்குத் தண்ணீர் கொடுப்பேன்' என்றார். அப்பொழுது பாடின பாட்டு இது.

அவர்கள் மணலில் வட்டவட்டமாக உட்கார்ந்து தங்கள் கோல்களைக் கொண்டு, காய்ந்த மணலுக்குள் ஆழமாய்த் தோண்டினார்கள். அவர்கள் தோண்டும்போதே பாடினார்கள்.

'ஊற்றுத் தண்ணீரே பொங்கிவா! அதைக் குறித்துப் பாடுவோம் வாருங்கள்' என்று பாடினார்கள். அங்கே சலசலவென்று சப்தம் உண்டாயிற்று. தண்ணீர் பொங்கிவந்தது; ஊற்றை நிரப்பித் தரையில் வழிந்தோடி வந்தது. வனாந்தரத்தில் இந்த ஊற்றைத் தோண்டினபோது, அடியிலுள்ள ஓடை ஒன்றை அடைந்தார்கள்; மறைந்திருந்த நீரோடையை அடைந்தார்கள்.

இந்தக் காட்சி நம் வாழ்க்கையினூடே ஓடுவதும் அதை நாம் விசுவாசத்தோடும், துதியோடும் அடைந்தால் வறண்ட வனாந்தரத்தில் நமக்குத் தேவையானதைப் பெற்றுக்கொள்ளத்தக்கதுமான நதியைக் குறித்து எவ்வளவு அழகாய் எடுத்துக்காட்டுகிறது.

அவ்வாற்றின் தண்ணீரை அவர்கள் எவ்வாறு அடைந்தார்கள்? துதியினால்தானே. மணலின்மேல் அவர்கள் விசுவாச கீதத்தைப் பாடினார்கள். வாக்குத்தத்தம் என்னும் கோலினால் ஊற்றைத் தோண்டினார்கள். முணுமுணுத்தல் நியாயத்தீர்ப்பைக் கொண்டுவரும். நம் ஜெபங்கள் தானும் ஆசீர்வாதமாகிய ஊற்றை அடையத் தவறும். அப்போதும் நம்முடைய துதி வனாந்தரத்தில் ஊற்றுக்கள் திறக்கச் செய்யும்.

துதியைப்போல் ஆண்டவருக்குப் பிரியமானது ஒன்றுமில்லை. நன்றி செலுத்தும் குணமுண்டா என்பதே விசுவாசப் பரீட்சை. நீ போதுமான அளவு தேவனைத் துதிக்கிறாயா? நீ பெற்றுக்கொள்ளும் கணக்கில்லாப் பாக்கியங்களுக்காக நீ அவரைத் துதிக்கிறாயா? பாக்கியத்தின் மாறுவேடமான சோதனைகளுக்காகவும் துதிக்கத் துணிவாயா? நீ பெற்றுக்கொள்ளுமுன்னதாகவே அவற்றிற்காக நன்றி சொல்ல அறிந்துள்ளாயா?

1 என் ஆத்துமாவே, இரட்சிப்புக்காக
நீடிய காலம் காத்திருக்கிறாய்,
இரட்சிப்பு உனக்காய்
கீதத்தில் காத்திருக்கிறதென்று நம்பு.

2 இரட்சிப்பு, உன் கால்விலங்கைத்
தறித்து விடுவிக்கும் வரை தவிக்காதே,
இரட்சிப்பின் மகிழ் கீதத்தால்
தேவன் உன்னைச் சூழ்ந்துள்ளார்.

## மே 27

'அவைகளை என்னிடத்தில் கொண்டுவாருங்கள்' (மத். 14:18).

தேவைகள் இப்போது உன்னைச் சூழ்ந்துள்ளனவா? சோதனைகளும் கஷ்டங்களும் உன்னை மேற்கொள்ளுகின்றனவா? இவைகள் பரிசுத்த ஆவியானவர் நிரப்பும்படி தெய்வச் செயலாய் உனக்குக் கொடுத்த பாத்திரங்கள். அவற்றை நீ சரியாய்ப் பயன்படுத்திக்கொண்டால், அவை நீ இரட்சிப்பையும், பாக்கியங்களையும் பெற்றுக்கொள்ளும் சந்தர்ப்பங்களாகும்.

பாத்திரங்களைத் தேவனண்டை கொண்டுவாருங்கள். ஜெபம், விசுவாசமாகிய கரங்களால் அவைகளை அவர்முன் ஏந்துங்கள். அவர் கிரியை செய்ய ஆரம்பிக்கும்வரை நீங்கள் வேலை செய்யாது அமர்ந்திருங்கள். அவர் தாமே கட்டளையிடுவதன்றி வேறொன்றையும் செய்யாதிருங்கள். அவர் கிரியை செய்யச் சமயம் கொடுங்கள். அப்பொழுது அவர் செய்வார். மனச் சோர்வினாலும், களைப்பினாலும் உங்களை மேற்கொள்ளுவதுபோல் பயமுறுத்தின அதே சோதனைகளே தேவன் தமது கிருபையை வெளிப்படுத்த ஏற்ற சமயங்களாகின்றன. அவருடைய மகிமையை இதற்குமுன் நீங்கள் இவ்வளவாய் அறிந்திருக்கமாட்டீர்கள். அவைகளை என்னிடம் கொண்டுவா.

—எ. பி. சிம்ப்ஸன்

என் தேவன் தம்முடைய ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவை எல்லாம் கிறிஸ்து ஏசுவுக்குள் மகிமையிலே நிறைவாக்குவார் (பிலி. 4:19).

தேவன் நமக்கு எல்லாவற்றிற்கும் உற்பத்தி ஸ்தானமாயிருக்கிறார். எவ்வளவாய் ஏராளமாய்த் தமது கிருபையின் ஐசுவரியத்தை அருளுகிறார்! கிறிஸ்து இயேசு எவ்வளவு உன்னதமான கால்வாய். அவருடைய ஐசுவரியங்களுக்கு எதிராக, உன் தேவைகளையெல்லாம் வைப்பது உனது உரிமை. அவருடைய ஐசுவரியத்தின் முன்னால், உன் குறைவைப் பார்க்க முடியாமலிருப்பாய். அவர் இருதயத்தின் முழு அன்பினால், தம் வற்றாத பொக்கிஷத்தை உன்முன் திறந்து வைக்கிறார். களங்கமில்லா விசுவாசத்தோடு அதிலிருந்து எடுத்துக்கொள். அப்போது சிருஷ்டிக்கப்பட்ட எந்த நீரோடையையும் நீ உதவிக்கு நோக்கத் தேவையிராது. எந்தச் சிருஷ்டியையும் ஆதரவாகக்கொள்ள அவசியமிராது.

—எ. பி. சிம்ப்ஸன்

### என் பாத்திரம் நிரம்பி வழிகிறது

1 நாம் நமது கருணை வள்ளலான கடவுளை நம்புகையில்,
நமக்கு வேண்டியது மிகுதியாய்க் கிடைக்கிறது,
அவர் நிரப்பும் ஒவ்வொரு பாத்திரமும் நிரம்பி வழிகிறது,
அவருடைய பெரிய நதிகள் யாவும் அகன்றவை,

அவருடைய பொக்கிஷத்திலிருந்து வருகிற தொன்றும்,
குறுகினதாய், சிறியதாயிராது,
தமக்குச் சித்தமானவர்களுக்கு நிறைந்து வழியக் கொடுப்பார்.

2 நாம் நமது பிதாவின் கரத்திலிருந்து,
நம் பங்கை நன்றியறிதலோடும்,
துதியோடும் ஏற்றுக்கொண்டால்,
அது எப்பொழுதும் மிகுதியாயிருக்கும்,
நமது நெஞ்சம் கிறிஸ்து இயேசுவை,
தன் தேவை தீர்க்க நம்பினால்,
நிறைந்த ஆழ்ந்த திருப்தி,
நம் ஆத்துமத்தை நிரப்பி நம் கண்களையும் ஒளிரச் செய்யும்.

3 நம் மெல்லாருக்காகவும் அவரை
ஒப்புக் கொடுத்தவர்
அவரோடேகூட மற்றெல்லாவற்றையும்
நமக்கு அருளாதிருப்ப தெப்படி? (ரோ. 8:32).

அவரது அன்பைப்பற்றி நாம் சொல்லும்பொழுது அது மிகுதியாயிருக்கும். நாம் காணமுடியாத ஆழமும் உயரமும் அதிலுண்டு. அற்புதமான அவரது அருளை மக்களது மொழியினால் விவரித்துக் கூறமுடியாது. வியப்புடன் அவரைப் புகழ்ந்து வணங்கி அவரது நாமத்தைத் துதிப்பதே நாம் செய்யக்கூடியது.

—மார்கரட் கி. பார்டர்

## மே 28

*'நீர் என்னை ஆசீர்வதித்தாலன்றி உம்மைப் போகவிடமாட்டேன் . . . அங்கே அவனை ஆசீர்வதித்தார்' (ஆதி. 32:26–29).*

யாக்கோபு மல்யுத்தம் செய்ததினால்ல அவரைப் பிடித்துக்கொண்டதினால் வெற்றியும், ஆசீர்வாதமும் பெற்றான். அவன் கால் சுளுக்கிக்கொண்டது. அவனால் போர்செய்ய முடியவில்லை. ஆனாலும் அவரைப் போகவிடவில்லை; சண்டை செய்ய முடியாமல் போகவே அவருடைய கழுத்தைச் சுற்றி, தன் கையைப் போட்டுக் கொண்டு, தன் பாரம் முழுவதையும் அவர்மேல் சுமத்தினான். இறுதியில் வெற்றியடைந்தான்.

நாமும் கஷ்டப்படுவதைவிட்டு நம்முடைய சித்தத்தை விடுத்து, நமது கரத்தால் அவர் கழுத்தைக் கட்டிக்கொண்டு, பற்றிபிடிக்கும் விசுவாசத்திலிருக்கும்பொழுதுதான் நமக்கு ஜெபத்தில் வெற்றி கிடைக்கும்.

சர்வவல்லவரின் கரத்திலிருந்து மனிதனின் அற்ப பலம் எதைக் கட்டாயப்படுத்தி எடுத்துக்கொள்ளக்கூடும்? தேவனிடமிருந்து ஒரு ஆசீர்வாதத்தையேனும் பிடுங்கிக்கொள்ள நம்மால் முடியுமா? பிடிவாதத்தின் சக்தி அவரிடம் செல்லாது. அவர்மேல் சார்ந்திருக்கும் விசுவாசமே ஜெயத்தையும், ஆசீர்வாதத்தையும் பெறும். நம்முடைய சித்தம் நடக்கவேண்டுமென்று நாம் ஆத்திரப்படுவதினுல் நடக்காது. தாழ்மையோடும், நம்பிக்கையோடும், 'என்னுடைய சித்தமல்ல உம்முடைய சித்தத்தின்படி ஆகக்கடவது' என்று சொல்லும்போதுதான் ஆகும். 'நான் என்பது ஜெயிக்கப்பட்டிருந்தால்தான் நாம் தேவனேடு போராடப் பலமுள்ளவர்களாகலாம். சண்டை போடுவதால் அல்ல, அவர்மேல் சார்ந்திருப்பதாலேயே ஆசீர்வாதம் பெறலாம்.

—ஜே. ஆர். மில்லர்

சார்லஸ் எச். உஷர் என்பவர் தமது ஜெபஜீவியத்தில், 'விடாப்பிடி' எவ்வாறு வெற்றிகரமான ஜெபத்திற்குத் தடங்கலாயிருந்தது என்று ஒரு உதாரணங்கூறுகிருர். 'என் சிறு மகன் வியாதியாயிருந்தான். வைத்தியர்கள் கைவிட்டார்கள். அவனுக்காக நான் அறிந்தபடியெல்லாம் ஜெபம் பண்ணிப் பார்த்தேன். ஆனுல் அவன் நிலைமை கேவலமாகிக்கொண்டே வந்தது. இவ்விதமாகப் பல வாரங்கள் கழிந்தன.

ஓர் தினம் அவன் படுக்கையில் கிடக்கையில் அவனைக் கவனித்துக் கொண்டே நின்றேன். அவன் தேகநிலையில் ஏதாவது சுகமேற்படுவதான குறிகள் தோன்றினுலன்றி, அவன் அதிக நாள் பிழைத்திருக்க மாட்டான் என்பதை அறிந்தேன். நான் தேவனை நோக்கி, தேவனே என் பையனுக்காக, நான் அதிக நாள் ஜெபத்தில் கழித்தேன். அவன் சுகம் பெறுவதாய்க் காணேம். அவனை நான் உமது சித்தத்திற்கு ஒப்புவித்துவிட்டு, மற்றவர்களுக்காக ஜெபிப்பதில் என் நேரத்தைச் செலவிடுவேன். அவனை எடுத்துக்கொள்வது உமது சித்தமானுல் அப்படியே ஆகட்டும். அவனை முற்றிலுமாய் உமது கரத்தில் ஒப்புவிக்கிறேன்' என்றேன்.

'என் மனைவியைக் கூப்பிட்டு நான் செய்ததைச் சொன்னேன். அவள் கண்ணீர்விட்டாள். ஆனுல் அவனைத் தேவன்கரத்தில் வைத்துவிட்டாள். இதற்கு இரு தினங்களுக்குப்பின், தேவனுடைய ஊழியக்காரர் ஒருவர் எங்களைப் பார்க்கவந்தார். அவர் என் மகனிடம் அதிகப் பிரீதியுள்ளவர்; அவனுக்காக ஜெபித்து வந்தவர்.

அவர் என்னைப் பார்த்து, அவன் பிழைப்பான் என்று நம்பத்தக்கதான விசுவாசம் தேவன் எனக்குக் கொடுத்திருக்கிருர். உங்களுக்கு விசுவாசம் உண்டா என்று கேட்டார்.

நான் அதற்கு அவனைத் தேவசித்தத்திற்கு ஒப்படைத்துவிட்டேன். ஆகிலும் நான் திரும்ப அவனைக்குறித்துத் தேவனிடம் சொல்ல

வேண்டும் என்றேன். ஜெபிக்கையில் என் மகன் பிழைப்பான் என்ற நம்பிக்கை எனக்குண்டாயிற்று. அன்றையதினமுதல் அவன் குணமாகிக்கொண்டுவந்தான். நான் ஜெபிப்பதில் விடாப்பிடியாய் நின்றதே தேவன் அதற்கு உத்தரவு அருளவிடாமல் தடைசெய்தது. நான் அப்படியே விடாப்பிடியாய் நின்று, அவனை ஒப்புவிக்க மன தில்லாதிருந்தேன் என்றால், என் மகன் என் அருகில் இருப்பான் என்பது சந்தேகமே.'

தேவனுடைய பிள்ளையே, தேவன் உனது ஜெபத்திற்கு உத்தரவு அருளவேண்டும் என்று விரும்புவாயானால் மோரியா மலைவரையிலும் நீ ஆபிரகாமைப் பின்பற்ற தயாராயிருக்கவேண்டும் (ரோ. 4:12ஐ வாசி).

## மே 29

'நான் உங்களைச் சிநேகிதர் என்றேன்' (யோ 15:15).

அநேக வருடங்களுக்குமுன் ஓர் ஜெர்மானிய ஆசிரியர் இருந்தார். அவருடைய சிறந்த வாழ்க்கை அவருடைய மாணவருக்கு மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்தது. சிலர் அந்த வாழ்க்கையின் இரகசி யத்தை அறிவதென்று தீர்மானித்தார்கள். ஆகையால் அவர்களி லொருவன் அவருடைய வாசிப்பு அறையில் ஒளிந்திருந்தான். அந்த அறையில்தான் அந்த ஆசிரியர் சாயங்கால வேளையில் இருப்பார்.

ஆசிரியர் இருட்டானபிறகுதான் அன்று அந்த அறைக்குள் வந்தார். அவர் அதிகக் களைப்பாயிருந்தார். ஆகிலும் அவர் உட் கார்ந்து ஒரு மணிநேரம் வேத புத்தகத்தைப் படித்தார். பின்பு மனதிற்குள் ஜெபம் பண்ணினார்; கடைசியாக வேத புத்தகத்தை மூடிவிட்டு, 'நல்லது ஆண்டவரே, நாம் இருவரும் பழைய சம்பந்தத் திலேயே இருக்கிறோம்' என்றார்.

அவரை அறிவதே வாழ்க்கையின் உன்னத இலட்சியம். எப்படி யானாலும், ஒவ்வொரு கிறிஸ்தவனும் 'அவரோடு பழைய சம்பந்தத் திலேயேயிருக்கப் பிரயாசப்படவேண்டும்.'

இயேசுவை நேர்முகமாக அறிதல் தனி ஜெபத்தின் பயனாகும். வேதத்தைப் படித்துத் தியானித்தல் அதற்கு உதவியாகும். அவ ருடைய பிரசன்னத்தைப் பழக விடாமுயற்சி செய்பவர்களுக்கு இன்னும் தத்ரூபமாய்க் கிறிஸ்து தோன்றுகிறார். அவர் கேட்கிறார். ஆகையால் பேசு. ஆவியோடு ஆவி சந்திக்கும். நம்முடைய மூச்சை விட அவர் நமக்கு நெருங்கியிருக்கிறார். நம் கரம் கால்களைவிட அவர் சமீபமாயிருக்கிறார்.

—மால்ட்பி டி. பாபகாக்

## மே 30

*'அந்தப் பாட்டு பூமியிலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்ட இலட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேரேயல்லாமல் வேறொருவரும் கற்றுக்கொள்ளக்கூடாதிருந்தது' (வெளி. 14:3).*

பள்ளத்தாக்கில் மாத்திரமே கற்றுக்கொள்ளக்கூடிய பாட்டுண்டு. ஒரு கலையும் அதை அவர்களுக்குக் கற்றுக்கொடுக்க முடியாது. அந்தச் சங்கீதம் இருதயத்தினுள் இருக்கிறது. அது அனுபவத்திலிருந்தும் வரும் பாட்டு. கடந்துபோன காலத்தின் சம்பவங்களின் கருத்தடங்கியதாயிருக்கும். அது கடந்த காலம் என்னும் இறக்கைகள் பெற்றுப் பறக்கின்றது.

பரலோகத்திலும், பூலோகத்திலுமிருந்து வந்தவர்கள் மட்டுமே பாடக்கூடிய இரட்சிப்பின் கீதங்கள் உண்டு என்று பரிசுத்த யோவான் சொல்லுகிறார். அது நமக்குச் சுயாதீனம் ஈந்த கிறிஸ்துவுக்குப் பாடும் வெற்றிக் கீதமாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அந்த வெற்றி உணர்ச்சி நம்மைப் பிணைத்திருந்த சங்கிலியின் ஞாபகத்திலிருந்து வரவேண்டும்.

ஒரு தேவதூதனாகிலும், பிரதான தூதனாகிலும் நான் பாடுவதுபோல் அத்தனை இனிமையாய்ப் பாடமுடியாது. என்னைப்போல் அவர்கள் பாடவேண்டுமென்றால், என்னைப்போல் தேசப்பிரஷ்டனாகப் பாடு அனுபவித்திருக்கவேண்டும். அது அவர்களால் கூடாது. சிலுவையின் மக்களன்றி யாரும் அதைப் படிக்கமுடியாது.

ஆகையால் என் ஆத்துமாவே: நீ பிதாவின் கையில் சங்கீதப் பயிற்சி பெறுகிறாய். காணப்படாத பாடகரோடு சேர உனக்குக் கற்பிக்கப்படுகிறது. அதில் இணையும் சில இராகங்களை நீ மாத்திரம் தான் பாடமுடியும்.

தேவதூதன் பாடமுடியாத தாழ்ந்த சுரங்கள் உண்டு. அளவுக்கு மிஞ்சின உச்ச சுரங்களும் உண்டு. அதைத் தேவதூதர்கள் மாத்திரமே பாடக்கூடும். ஆனால் நீ மாத்திரமே பாடக்கூடிய தாழ்ந்த சுரங்களும் உண்டு.

தேவதூதர்கள் பாடக்கூடாத பாகத்தைப் பாட, பிதா உன்னைப் பயிற்றுவிக்கிறார். துக்கமே அந்தப் பயிற்சி சாலை. உன்னைச் சோதித்தறியத் துக்கம் அனுப்பப்படுகிறது என்று அநேகர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியல்ல, உன்னைப் படிப்பித்து, காணக்கூடாத பாடகரோடு நீ பாடப் பயிற்சியளிக்கவே, துன்பம் அவரால் அனுப்பப்படுகிறது.

இரவில் உன் பாட்டைத் தயாரிக்கிறார். பள்ளத்தாக்கில் உன் குரலைச் சரிப்படுத்துகிறார். மேகத்துள் உன் குரல்நாண்களை ஸ்திரப்படுத்துகிறார். மழையால் உன் இராகத்தை இனிமையாக்குகிறார்.

குளிரில் உன் சரீரத்தை உருப்படுத்துகிறூர். நம்பிக்கையிலிருந்து பயத்திற்குச் செல்கையில் உன் ஒளியை வெளிப்படுத்துகிறூர்.

என் ஆத்துமாவே, துன்பம் என்னும் பயிற்சி சாலேயை வெறுக்காதே. அது சர்வலோக சங்கீதத்தில் உனக்கென்று தனிபாகம் கொடுக்கும்.
—ஜியார்ஜ் மத்தீசன்

1 உன்னே இருள்சூழ்ந்து கொள்ளுகிறதா?
உன்னேச் சுற்றிலும் நிழல்கள் சூழ்ந்து இருண்டிருக்கின்றனவா
அவரை அருகில் வர வேண்டிக்கொள்
அவர் உனக்கு ஒரு புதிய இனிய பாட்டுக் கொடுப்பார்.

2 அவர் உனக்கு பாட்டுக் கொடுத்து உன்னேடு பாடுவார்.
பலவீனத்தால் சத்தம் குறையும்போது,
விட்ட இடத்தில் அவர் துவக்கி,
தம் சத்தத்தோடு இணேப்பார்.

3 வெளிச்சத்தின் புத்திரர்களில்,
அநேகக் களிப்பான பாடகர்கள்
அவர் இனிய கீதத்தைக்குறித்து,
'நான் இரவில் அதைப் படித்தேன்' என்பார்கள்.

4 பரம பிதாவின் வீட்டை நிரப்பும்
அநேக அழகிய கீதங்கள்
இருண்ட அறையின் நிழலில்
கண்ணீரோடு பழகினதாகும்.

## மே 31

'தானியம் ஏற்ற காலத்தில் அம்பாரத்தில் சேருகிறதுபோல்' (யோபு 5:26).

ஒரு மனிதன் பழைய கப்பல் உடைவதைப்பற்றி எழுதினூர். அதில் அவர் 'பழைய கப்பல்கள் உறுதியான தன்மை அடைவது காலப் போக்கினுல் மாத்திரம் அல்ல. கடலில் அது அலேமோதி அடிப்பட்டதினுலும், கப்பலின் அடியிலுள்ள அழுக்குத் தண்ணீரினுல் அதில் ஏற்படும் மாறுதலினுலும், அது சுமந்து சென்ற பலவகைப்பட்ட சரக்குகளினுலும், பழைய கப்பல் மரங்கள் உறுதியடைகின்றன' என்கிறூர்.

எண்பது ஆண்டுகளாக ஒரு கப்பலின் பாகமாயிருந்த ஒரு உத்திரத்திலிருந்து பலகைகளும், இழைந்த மெல்லிய சீவல்களும் சில வருடங்களுக்கு முன் நியூயார்க்கில், பிராட்வேயிலுள்ள மரச்சாமான்கள் விற்கும் கடையில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன. அதை அநேகர் கவனித்தார்கள். ஏனென்றூல் அதன் மேன்மையான நிறமும், வளர்ச்சியைக் காட்டும் கோடுகளும் அநேகருடைய கவனத்தைக் கவர்ந்தன.

இதைப்போலவே அறுபது வருடங்களாகக் கடலில் போய்க் கொண்டிருந்த கப்பலிலிருந்து எடுக்கப்பட்ட கருங்காலி உத்திரங்கள் கவர்ச்சியாயிருந்தன. கடந்த ஆண்டுகளினுலும், போக்குவரவினு லும் அதன் துவாரங்கள் அடைப்பட்டு, அதன் நிறமும் அழகா யிற்று. பழைய காலத்து சீமைக்களிமண் ஜாடியைப்போல் அதன் வர்ண அழகு உச்சநிலையை அடைந்தது. அந்த உத்திரம் ஒரு பெட்டியாகச் செய்யப்பட்டது. இப்பொழுது அது நியூயார்க்கில் ஒரு பணக்காரரின் வீட்டின் முன்னறையில் வைக்கப்பட்டிருக்கிறது.

தன்னிச்சைப் பிரகாரம் பயனற்ற வாழ்க்கையை நடத்திவந்த முதியோரின் தன்மைக்கும், தேவனுக்கு ஊழியக்காரராகவும், மற்ற மனிதருக்கு உதவி செய்பவர்களாகவும், எல்லாக் கடல்களிலும் பிரயாணம் செய்து, பல சரக்குகளையும் எடுத்துச்சென்றவர்களாகிய முதியோரின் தன்மைக்கும் அதிக வித்தியாசமுண்டு.

வாழ்க்கையின் வருத்தங்களும், கஷ்டங்களும் மாத்திரமல்ல. சுமந்து சென்ற சரக்கின் இனிமையையும் குணம் என்பதின் துவாரங் களுக்குள்ளும், இழைகளுக்குள்ளும் ஊறியிருக்கும்.

அடிவானத்திற்குக் கீழே சூரியன் போகும்பொழுது, அது அஸ்த மித்து விடுவதில்லை. சூரியன் மறைந்தபின் ஒரு மணிநேரம் ஆகாயம் வெளிச்சம் நிறைந்திருக்கும். பெருந்தன்மையான ஒரு நல்ல மனிதன் இறக்கும்போது, உலகின் ஆகாயம் அவர் மறைந்த பின்பும் அதிக காலம் ஒளியுள்ளதாக இருக்கிறது. அப்படிப்பட்ட மனிதர் இந்த உலகத்தைவிட்டு ஒருபோதும் போகிறதில்லை. அவர்கள் போகையில் தன்னுடைய பெரும்பகுதியை விட்டுச் செல்கின்ருர். அவர் மரித்தும் பேசுகிருர்.

விக்டர் ஹியூகோ என்பவர் எண்பது வயதிற்கு மேலான காலத்தில் மார்க்கத்திற்குரிய தம் விசுவாசத்தைப் பின்வரும் உன்னத வாக்கி யங்களின் வாயிலாய் வெளியிட்டுள்ளார்: 'நான் என்னுள் வருங் கால வாழ்க்கையைக் காண்கிறேன். பலதடவைகள் வெட்டப்பட்ட காடுபோல் நான் இருக்கிறேன். புது மரங்கள் என்றுமில்லா புத்துயி ரோடு விளங்குகிறதுபோல, நான் ஆகாயத்தை நோக்கி உயர்ந்து வளருகிறேன். என் சிரசின்மேல் சூரிய கதிர்கள் படுகின்றன. தரை தன்னிலுள்ள சாரத்தைத் தாராளமாய் என்னுள் கொடுக்கிறது. ஆனுல் ஆகாயம் என்னுல் அறியப்படாத உலகங்களின் ஒளியால் என்னைநிரப்புகிறது.'

'ஆத்துமா சரீர சக்தியின் விளைவு என்று சிலர் சொல்லலாம். அப்படியானுல் என் சரீரவன்மை குறைந்துவருங்கால் என் ஆத்துமா அதிகமாய் ஒளிவிடுவதேன்? என் தலைக்குமேல் மாரிகாலமாயிருக் கிறது. ஆனுல் என் உள்ளத்தில் இளவேனிற் காலத்தின் சந்தோஷம் இருக்கிறது. நான் இருபது வயதாயிருக்கையில், இனிய மலர்களின் நறுமணத்தை முகர்ந்தவாறே இப்பொழுதும் முகர்ந்துணருகிறேன்.

என் இறுதி காலம் நெருங்க என்னை வாவென்றழைக்கும், அந்த உலகத்தின் மரணமில்லா கீதத்தை என்னைச் சுற்றிக் கேட்கிறேன். இது அதிசயமானதே, என்றாலும் அது ஒரு சாமானிய காரியமே' என்றார்.

## ஜூன் 1

'இதுவே, நீங்கள் இளைத்தவனை இளைப்பாறப் பண்ணத்தக்க இளைப்பாறுதல், இதுவே ஆறுதல்' (ஏசா. 28:12).

நீ ஏன் கவலைப்படுகிறாய்? உன் கவலையினால் ஆவதென்ன? பெரிய மாலுமியான தேவன் கப்பலைச் செலுத்தும் வேலையை உனக்குக் கொடுத்தாலும், உன்னால் அதைச் செய்யமுடியாது. நீ இருக்கும் கப்பல் அத்தகையது. அந்தக் கப்பலின் பாய்மரத்தைச் சுருட்டத் தானும் உன்னால் கூடாது. அப்படியிருக்க மாலுமிபோலும், கப்பல் தலைவன்போலும் நீ ஏன் கவலைகொள்ளவேண்டும்? நீ சும்மாயிரு. தேவன் தாமே அதற்கு எஜமான். கடலிலுண்டாகும் ஆரவாரத்தையும், குழப்பத்தையும் கண்டு தேவன் தமது ஆசனத்திலிருந்து விலகினார் என்று எண்ணுகிறாயா?

அல்ல, அவருடைய குதிரை வேகமாய்ச் செல்கிறது. புயல் காற்று அவருடைய இரதம். ஆனால், அவைகளின் வாயில் கடிவாளம் உண்டு. கடிவாளத்தின் கயிறுகளைத் தேவன் பிடித்துள்ளார். தமது சித்தத்தின்படி அவைகளை நடத்துகிறார். யெகோவா இராஜரீகம் பண்ணுகிறார். இதை நம்பு. உனக்குச் சமாதானம் உண்டாவதாக! பயப்படாதே. —சி. எச். ஸ்பர்ஜன்

என் ஆத்துமாவே, நீ இன்றிரவு அமைதியாய்த் தூங்கு. உன் காலிலல்ல, தேவனின் காலில்தான், புயல் வீசுகிறது. நீ அமைதியாய் நித்திரை செய்.

என் ஆத்துமாவே, நீ இன்றிரவு அமைதியாய்த் தூங்கு. உன்னுடைய கைகளல்ல, தேவனுடைய கைகளே உன்னைச் சோதிப்பவனை விலக்கும். நீ அமைதியாய் நித்திரைசெய்.

என் ஆத்துமாவே, நீ இன்றிரவு அமைதியாய்த் தூங்கு. உனது அன்பல்ல தேவனது அன்பே இரவுமுழுவதும் பலமுடையதாயிருக்கும், நீ அமைதியாய் நித்திரைசெய்.

என் ஆத்துமாவே, நீ இன்றிரவு அமைதியாய்த் தூங்கு. உனது உலகமல்ல, தேவனது பரலோகமே துன்பமுறுபவர்களுக்கு ஆறுதல் அளிக்கும். நீ அமைதியாய் நித்திரைசெய்.

துக்கத்திற்கு இடங்கொடாதேயுங்கள் என்று நான் வேண்டிக் கொள்கிறேன். இது சத்துருவின் சூட்சுமமான சோதனை. துக்கம்

இதயத்தை ஒடுக்கி மடியச்செய்கிறது. ஆதலால் இருதயம் கிருபையின் அடையாளங்களை, ஏற்றுக்கொள்ளத் தகுதியற்றதாய்ப் போகிறது. அது பொருள்களுக்கு ஏமாற்றத்தக்க வர்ணமளித்து, சிறியதைப் பெரியதாகப் பாவிக்கச் செய்கிறது. உன்னைக் குறித்துத் தேவன் போட்டுள்ளத் திட்டமும், அந்தத் திட்டங்களை நிறைவேற்றும் வழிவகைகளும், அளவில்லா ஞானம் நிறைந்தவை.

—மேடம் கயான்

## ஜூன் 2

'ஆபிரகாம் நம்புவதற்கு ஏதுவில்லாதிருந்தும் அதை நம்பிக்கையோடே விசுவாசித்தான், அவன் விசுவாசத்தில் பெலவீனமாயிருக்கவில்லை' *(ரோ. 4:18,19).*

ஒரு மனிதன் ஜார்ஜ்முல்லர் என்பவரைப் பார்த்து, உறுதியான விசுவாசம் கொள்வதற்கு வழி என்ன என்று கேட்டான்.

அதற்கு அந்த விசுவாசி, 'உறுதியான விசுவாசத்தை படிப்பதற்கு ஒரே வழிதான் உண்டு. அது சோதனைகளைச் சகிப்பதே. தான் கடுமையான சோதனைகளில் உறுதியாய் நின்றதினுல், விசுவாசத்தைக் கற்றுக்கொண்டேன்' என்ருர். இது சத்தியமே. எல்லாம் தவறிப்போகும் சமயம் தான் நாம் நம்பிக்கையோடே இருக்க வேண்டிய நேரம்.

பிரியமானவனே, உனக்கு இப்போது கிடைக்கும் சந்தர்ப்பத்தின் மதிப்பை நீ உணராய். இப்போது நீ பல சோதனைகளைச் சகிக்கிருய் என்ருல் விசுவாசம் அடைவதற்குத் தக்க இடத்திலிருக்கிருய். நீ அதைப் பொறுமையாய் அனுபவித்தால், அச்சமயம் நீ முன்பு அறிந்திராவண்ணம் தமது சிம்மாசனத்தை உறுதியாய்ப் பிடிக்க அவர் உனக்குக் கற்றுக்கொடுப்பார்.

நீ பயப்படாமல் நம்பிக்கையாயிரு. உனக்குப் பயமுண்டானுல் மேலே நோக்கிப் பார்த்து 'நான் பயப்படும் தருணத்தில் உம்மை நம்புவேன்' என்று சொல். பின்பு நீ உன் துக்கமாகிய பள்ளிக்கூடமே உன் விசுவாசம் பாடசாலையாயிற்று என்று அறிந்து தேவனைத் துதிப்பாய்.

—ஏ. பி. சிம்ப்ஸன்

பெரிய விசுவாசியாவதற்குப் பெரிய சோதனைகள் அவசியம். வேதனையின் மூலமாய்த் தேவனுடைய பெரிய ஈவுகளைப் பெறுகிருேம்.

ஆத்மீக விஷயங்களிலாவது உலக காரியங்களிலாவது கடின உழைப்பும் கண்ணீருமின்றி ஒரு நன்மையும் கிட்டுவதில்லை. பெரிய சீர்திருத்தம், மக்களது நன்மைக்காகப் புதிய விஷயங்களைக் கண்டு பிடிப்பது, ஆத்மீக வாழ்வில் புத்துயிர் பெறுவது இவை யாவும் அவற்றிற்குக் காரணமான ஆடவர் அல்லது மகளிர் அனுபவிக்கும் கஷ்டங்களிலிருந்துதான் தோன்றுகின்றன.

தேவ ஆலயம் கட்டப்படவேண்டுமானால் தாவீது கஷ்டப்பட வேண்டும். கிருபை நிறைந்த தேவனின் சுவிசேடத்திலிருந்து, யூதரின் பாரம்பரியத்தை விலக்கிவிடவேண்டுமென்றால் பவுலின் ஜீவியம் பூராவும் வேதனையடைந்ததாயிருக்கவேண்டும்.

பாரம் சுமந்து, சிலுவையின் பளுவால் தவிப்பவனே, திடன் கொள், உன் பெரிய நஷ்டத்திலிருந்து பெரிய இலாபம் வருமென்று நினை. உன் வாழ்க்கை தியாகத்தினால் சிறப்படைகின்றது. சிறந்த பரிமள தைலம் ஓர் துளி தயாரிக்க, அநேக தோட்டங்களிலுள்ள மலர்கள் நசுக்கப்படவேண்டும். சமுத்திரத்தில் புயலின் அலைகள் மோதுவதால், அதன் தண்ணீர் புயலற்ற நாட்களிலிருப்பதைவிடச் சுத்தமாயிருக்கிறது. வானவிரிவின் அழகிய கொடி, உஷ்ணப் பகல்வேளையில் புயலுக்கும் இடிக்கும் பின்பே வானவில் தோன்று கிறது.

## ஜூன் 3

'அக்கரைக்குப் போவோம் வாருங்கள்' (மா. 4:35).

நாம் கிறிஸ்துவின் கட்டளைப்படி முன்னேறிச் சென்றாலும் புயலுக்குத் தப்புவோம் என்று எதிர்பார்க்கமுடியாது. ஏனென்றால் அந்தச் சீடர்கள் கிறிஸ்துவின் கட்டளையினால்தான் போனார்கள் என்றாலும் கடும்புயல் எழும்பினது. அவர்கள் ஆழ்ந்துபோகக்கூடிய மோசமான நிலையிலிருந்தார்கள். தங்கள் துயரத்தில் அவர்கள் இயேசுகிறிஸ்துவின் உதவியை நாடிக் கூப்பிட்டார்கள்.

கிறிஸ்து நாம் துன்பப்படும்போது தாமதித்தாலும், நம்முடைய விசுவாசம் சோதிக்கப்பட்டு, ஸ்திரப்படுவதற்காகவே தாமதிக் கிறார். நம்முடைய பிரார்த்தனை ஊக்கமுள்ளதாகவும், சகாயம் கிடைக்கையில், அதை ஆவலுடன் நன்கு மதித்து, ஏற்றுக்கொள்ள வும், நம்முடைய ஆவல் அதிகரிக்கவும், அவர் தாமதிக்கிறார்.

'உங்கள் விசுவாசம் எங்கே?' என்று அவர்களை இலேசாய்க் கண்டித்தார். புயலடிக்கும்போது, புரண்டுவரும் அலைகளையும், குமுறிவரும் காற்றையும் பார்த்து 'ஜெயம்' என்று நீங்கள் ஏன் ஆர்ப்பரிக்கவில்லை? 'கிறிஸ்து என்னும் இரட்சகர் படகிலிருக்கிறார். நீங்கள் ஒரு தீமையும் இழைக்கமுடியாது' என்று ஏன் கூறவில்லை.

புயல் குமுறுகையில் நம்பிக்கையாயிருப்பதைவிட சூரியன் பிரகா சிக்கையில் நம்பிக்கையாயிருப்பது எளிது.

ஒரு பெரிய கஷ்டத்தால் நம்முடைய விசுவாசம் சோதிக்கப் பட்டாலன்றி, நமக்கு எவ்வளவு விசுவாசம் உண்டென்று நமக்கு தெரியாது. ஆகையினால்தான் புயல் வீசும்போது இயேசு படகி லிருக்கிறார்.

நீ ஆண்டவரிலும், அவருடைய ஆற்றலிலும் பலனடையவேண்டு மானல் உன் பலன் ஒரு கஷ்டத்திலிருந்தே உண்டாகும்.

இயேசுகிறிஸ்து படகிலிருப்பதால் நான் புயலைப்பார்த்து நகைப் பேன் 'அக்கரைக்குப் போவோம் வாருங்கள்' என்று கிறிஸ்து சொன்னார். சமுத்திரத்தின் மத்தியில் அமிழ்ந்துபோக வாருங்கள் என்று சொல்லவில்லை.

—டான் கிராபோர்ட்

## ஜூன் 4

'கர்த்தர் இராமுழுவதும் சமுத்திரம் ஒதுங்கும்படி செய்தார்' (யாத். 14:21).

இந்த வசனத்தில் தேவன் இருட்டில் வேலைசெய்கிறார் என்ற ஆறுதலான செய்தி இருக்கிறது. இஸ்ரவேல் புத்திரருக்காகத் தேவன் செய்த பெரிய வேலைகளெல்லாம் அவர்கள் விழித்துச் செங்கடலைக் கடக்கமுடியும் என்று கண்டபோது அல்ல, இரா முழுவதும் செய்யப்பட்டது.

ஆனபடியால் உனக்கு எல்லாம் இருட்டாய்த்தோன்றி, உன் வழியை நீ காணக்கூடாதிருக்கையில், உன் வாழ்க்கையில் பெரிய கிரியை நடந்துகொண்டிருக்கலாம். உண்மையாகவே தேவன் 'இராமுழுவதும் வேலை செய்தார்' மறுநாள், தேவன் இராமுழு வதும் செய்த வேலையை வெளிப்படுத்திற்று. இதை வாசிப்பவனே! இருளான இடத்தை நீ அடைந்திருக்கிறாயா? நீ காணுவோம் என்று நம்புகிறாய். ஆனல் நீ காணப்படவில்லை. உன் ஜீவிய ஓட்டத்தில் ஜெயமேயில்லாதிருக்கிறது. எல்லாம் இருட்டாய்க் காணப்படுகிறது.

'இராமுழுவதும் கர்த்தர் சமுத்திரத்தை ஒதுங்கும்படி செய்தார்' 'இராமுழுவதும்' என்பதை மறந்துவிடாதே. புலரொளி வரும் வரை தேவன் இராமுழுவதும் கிரியை செய்கிறார். நீ காணக் கூடாதிருக்கலாம். ஆனலும் நீ தேவன்மேல் நம்பிக்கையாயிருப்ப தால் உன் வாழ்க்கையின் இரவு பூராவும் அவர் கிரியை செய்கிறார்.

—சி.எச்.பி.

இராமுழுவதும் தேவன் புயல் காற்றின் மூலமாக வேலைசெய்தார். பொங்கி நுரைத்து செல்லும் அலைகளோடு வேலைசெய்தார்.

இரவு முழுவதும் தேவனுடைய பிள்ளைகள் காத்திருந்தனர். அவர்களது உள்ளத்தில் வேதனை நிறைந்திருந்தது. பகைவர் பின்னல் வந்துகொண்டிருந்தனர். கொடிய கடல் அவர்களுக்குமுன் இருந்தது.

இரவு முழுவதும் முன்பு ஒருபொழுதும் கண்டிராத அதிக இருள் நிறைந்ததாய்த் தோன்றிற்று. ஆயினும் தேவனின் சமுகம் அவர்க ளருகிலிருந்து அவர்களை பாதுகாத்தது. இரவுமுழுவதும் அவர்கள்

விழித்திருந்தனர். பொழுது கழிந்தது, உதயமாயிற்று, அப்பொழுது அவர்கள் தங்களுக்கு ஒரு பாதை உண்டாக்க இரவுமுழுவதும் தேவன் வேலைசெய்தார் என்பதை அறிந்தார்கள்.

துக்கப்படும் பிள்ளையே! இரவுமுழுவதும் நீ மனமுடைந்து போகாமல் பொறுத்திருக்கக்கூடாதா? பகலில் வேலைசெய்வது போலவே தேவன் இருள் நிறைந்த இரவிலும் வேலை செய்வார் என்பதை அறிந்துகொள். —எல்.எஸ்.பி.

## ஜூன் 5

*'அதை ஆழத்திலிருந்தாகிலும் உண்டாகக் கேட்டுக்கொள்' (ஏசா. 7:11).*

என் இதயமே, ஆழத்திலிருந்தும் உண்டாகக் கேட்டுக்கொள். நீ கேட்பதைவிட அதிகமாய்ச் செய்ய உன் தேவனால் கூடும். தெய்வ சித்தத்தில் இறங்கி, அவர் அன்பின் பொக்கிஷத்திலிருந்து எடுத்துக் கொள். எல்லாவற்றிலும் அவரை நம்பி, இன்றே அதைத் தொடங்கு. இயேசு தமது சித்தப்படி நடத்தும் வழியைக் கண்டு நீ களிகூரு.

பெரிய மழையின் சப்தம் உண்டாகும்வரை, ஜெபம்பண்ணிக் கொண்டு காத்திருக்கவேண்டும். நாம் பெரிய காரியங்களைக் கேட்கக் கூடாது என்று சொல்ல இடமில்லை. விசுவாசத்தோடு நாம் கேட்டால் பெரிய காரியங்களையும் பெற்றுக்கொள்வோம் என்பதற்குச் சந்தேகமில்லை. விடாமுயற்சியாய்த் தைரியமாய்க் காத்திருக்கவேண்டும். கிடைக்கும்வரை நம்மாலானதைச் செய்து கொண்டுவரவேண்டும். நாம் காற்றை உண்டாக்க முடியாது, ஆனால் காற்று வரும்போது அதைப் பயன்படுத்திக்கொள்ள பாய் மரத்தை விரிக்கலாம். மின்சாரம் உற்பத்திசெய்ய நம்மால் முடியாது. ஆனால், அது ஓடி வேலைசெய்யக் கம்பிகளை நீட்டலாம். ஆவியை அடக்கி ஆள நம்மால்கூடாது. ஆனால், நாம் அவருடைய வல்லமை பொருந்திய சுவாசத்தின் சக்திக்குக் கீழ் வரத்தக்கதாக நம்மை அவர் முகத்திற்குமுன் நிறுத்தி அவர் கட்டளைப் பிரகாரம் செய்யலாம்.

பூர்வகாலத்தில் செய்யப்பட்ட அற்புதங்கள் இப்பொழுது செய்ய முடியாதா? எலியாவின் தேவன் எங்கே? எலியா தன்னைக்கூப்பிட வேண்டும் என்று அவர் காத்திருக்கிறார்.

புதிய ஏற்பாடு, பழைய ஏற்பாடுகளில் சொல்லப்பட்டிருக்கும் பக்தர்கள் போலிருப்பது நமக்குச் சாத்தியமான காரியமே. அவர்களை ஆக்கினைக்குக் கீழடங்கி இருந்த ஆவிக்குரிய உலகமும், அவர்களை ஆவிக்குரிய வீரராக்கிய முயற்சியும், நமக்கு எளிதாய்க் கிட்டக்கூடியவைகள்தாம். நாமும் அவர்களைப்போல், விசுவாசம்,

நம்பிக்கை, அன்பு காட்டக்கூடுமானுல் அவர்கள் கண்ட, செய்த, அதிசயங்களைக் காணலாம். எலியா சொன்னதுபோல் நாமும் விசுவாசத்தினுல் உண்டாகும் நிச்சயத்தோடு பேசவேண்டும். அப்போது எலியாவின் ஜெபம் மழையையும், நெருப்பையும், கொண்டுவரச் சக்தி உடையதாயிருந்ததுபோல் நம்முடைய வாயின் ஜெபமும், தேவ ஆவியாகிய பனியையும் உருக்கு நெருப்பையும் கொண்டுவர வல்லமையுடையதாயிருக்கும். —டாக்டர் கோல்பர்ன்

## ஜூன் 6

'ஜெபம் பண்ணுவதற்கு ஜாக்கிரதையுள்ளவர்களாயிருங்கள்' (1 பே. 4:7).

என் சிநேகிதனே! அபாயம் நிறைந்த இந்த உலகினுள் ஜெபம் செய்யாது போகாதே. இரவு ஜெபம்செய்ய உன் முழங்காலை முடக்குகிருய். தூக்கம் உன் கண் இமைகளை அழுத்துகிறது. ஒருநாள் முழுவதும் செய்த கடின உழைப்பைக் காரணமாகச் சொல்லுகிருய். உடனே நித்திரைபோகிருய். பொழுது விடிகிறது. நீ ஒருவேளை பிந்தி எழுந்திருக்கலாம். ஆகையால் நீ காலைத் தியானம் செய்யாதிருக்கிருய் அல்லது அதை நீ அவசரம் அவசர மாகச் செய்துமுடிக்கிருய்.

ஜெபத்தில் தரித்திருக்கவில்லை. தரித்திருத்தல் மறுபடியும் தவறிப் போகிறது. அதை மறுபடியும் பெற்றுக்கொள்ள முடியுமா? பெற்றுக்கொள்ள முடியாது.

அழிக்கமுடியாத ஒரு காரியத்தைச் செய்தாயிற்று. நீ உன் ஜெபத்தை விட்டாய். அதன் பயனை அனுபவிப்பாய்.

சோதனைகள் உன் முன்னுல் நிற்கின்றன. நீ அவைகளைச் சந்திக்க ஆயத்தம் உள்ளவன் அல்ல, உன் மனது உன்னைக் குற்றஞ்சாட்டு கிறது. நீ தேவனைவிட்டுத் தூரமாய் நிற்கிருய். தூக்கம் உன் ஜெபத்திற்கு இடையூறு செய்யவிட்ட அந்நாள் நீ உன் கடமையைச் செய்யப் பின்வாங்கும் நாளாயிருந்தால் அதில் ஆச்சரியம் ஒன்று மில்லை.

சோம்பலால் தடைபட்ட ஜெபவேளை திரும்பி வராது. அது நமக்கு நல்ல அனுபவமாகலாம்.

ஆனுல் ஜெபவேளையில் கிடைக்கும் புத்துயிர் புதுப்பெலன் கிடையாது.
—ராபர்ட்சன்

தேவனுடைய குமாரனுகிய கிறிஸ்து அதிகாலையில் இருட்டோடே எழுந்து, ஜெபத்தில் தம் இருதயத்தைத் தேவனுக்கு முன்பாக ஊற்றவேண்டியது அவசியம் என்று கண்டார். அப்படியானுல் ஒவ்வொரு நல்ல ஈவுகளையும் அளிப்பவரும், நமக்கு நன்மை பயக்கும்

காரியங்களைக் கொடுப்பேனென்று வாக்களித்தவருமான தேவனை நோக்கி, எவ்வளவு அதிகமாய் நாம் ஜெபிக்கவேண்டும்.

இயேசுகிறிஸ்து தமது ஜெப ஜீவியத்திலிருந்து என்ன இலாபம் அடைந்தார் என்பதை நாம் அறியமுடியாது. ஆனால் ஜெபமில்லாத வாழ்க்கை ஜெயமில்லாத வாழ்க்கை என்பதை அறிவோம். ஜெபமில்லாத ஜீவியம் அமைதலற்ற ஜீவியம். நாம் அதிகம் செய்வதுபோல் காணப்படலாம். ஆனால் அந்த வாழ்க்கை, இரவிலும் பகலிலும், ஜெபித்த இயேசுவைவிட்டுத் தூரமாய் விலகிச் செல்லும் ஜீவியமாகும்.

## ஜூன் 7

*'என்னை உண்டாக்கினவரும், இரவில் கீதம்பாட அருள் செய்தவருமாகிய தேவன் எங்கே' (யோபு 35:11).*

உனக்கு நித்திரை வராமல் படுக்கையில் புரண்டு புரண்டு எப்போது விடியுமென்று காத்துக்கொண்டிருந்த இரவுகள் உண்டா? பரிசுத்த ஆவியானவரை நோக்கி, உன் சிருஷ்டிகரும் உன் தேவனுமாகிய அவர்மேல் உன் எண்ணத்தைச் செலுத்தக்கூடியவனாகும்படி வேண்டிக்கொள். அவர் அந்த தனித்த பயங்கரமான வேளையைக் கீதத்தால் நிரப்புவார்.

நீ உனக்கு அருமையானவர்களை இழந்து தவிக்கிறாயா? அப்படிப்பட்ட சமயத்தில்தான் தேவன் நம்மண்டை நெருங்குகிறார். துக்கிப்பவர்களை நம்மைவிட்டும் பிரிந்த நமக்கருமையானவர்கள் கடவுளுக்குகந்தவர்களாயிருந்தனர். அவர் அவர்களைக் காணப்படாத மீட்கப்பட்ட எண்ணிறந்த ஒளியுள்ள பரம சேனையுடன் நின்று தம்மைத் துதிக்க அழைத்துக்கொண்டார், என்ற சத்தியத்தை உணரச் செய்கிறார். அப்பொழுது நாம் கீதம் பாடக்கூடும்.

உன் விழிப்பு மனச்சோர்வினால், ஏதோ ஒன்று தவறினதால், அல்லது தவறிவிடும்போல் தோன்றுவதினால் உண்டாயிற்றா? உன் காரியத்தை யாரும் சரியாக விளங்கிக்கொள்ளாமல், உன் தோழரும் உன்னைக் கடிந்து கொள்ளுகிறார்களா? ஆனால் உன் சிருஷ்டிகர் உன்னண்டை வருகிறார். நம்பிக்கை தரக்கூடிய ஒரு கீதத்தை, உனக்கு அளிக்கிறார். அவருடைய சித்தம் என்னும் பலமான சங்கீதத்திற்கு அக்கீதம் இசைந்து வரும்.

'பின் என்ன? நான் செயலற்று உட்கார்ந்து,
இரவு வந்துவிட்டது, பகல் போய்விட்டது என்று வாளா விருக்கலாமா?
அந்திவேளை அணுகி வந்தாலும், பகலில் காணக்கூடாத
நட்சத்திரங்களை வானில் காணுவேன்.'

ஒரு கப்பலின் உறுதி புயல்காற்றில்தான் காட்டப்படும். ஒரு கிறிஸ்தவன் அக்கினிபோன்ற சோதனைகளை அனுபவிக்கும்போது தான் சுவிசேஷத்தின் மேன்மை, பூரணமாய் விளங்கும். 'இரவிலும் கீதம் பாடக் கிருபைசெய்வார்' என்ற சத்தியத்தை வெளிப்படுத்த தேவன் முதலில் இரவை உண்டாக்கவேண்டும்.

—வில்லியம் டெய்லர்

## ஜூன் 8

'தேவனால் பிறப்பதெல்லாம் உலகத்தை ஜெயிக்கும், நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கும் ஜெயம்' *(1 யோ. 5:4).*

பாதையின் ஒவ்வொரு வளைவிலும், நமது மனச்சமாதானத்தையும் வெற்றிபெற்றோம் என்ற எண்ணத்தையும், குலைக்கக்கூடிய காரியங்களைக் காணலாம். தேவனுடைய பிள்ளைகளை ஏமாற்றிக் கெடுக்கும் வேலையிலிருந்து சாத்தான் இன்னும் ஓயவில்லை. ஜீவிய ஓட்டத்தின் ஒவ்வொரு பாகத்திலும், நமது வாழ்க்கையின் அனுபவங்களாகிய உஷ்ணமானியைக் கவனித்துப் பார்ப்பது நல்லது. அடிக்கடி வெப்பநிலை சரியானதாக இருக்கிறதாவென்று கவனித்துக் கொள்வது நலம்.

தோல்வியடையக்கூடிய நிலைமையில் வெற்றியடையும் சிலர் உண்டு. அவர்கள் ஏற்ற சமயத்தில் உறுதியான விசுவாசம் காட்டுவதால்தான் அது சாத்தியமாகிறது.

விசுவாசம் நம் நிலையை மாற்றக்கூடும். எவ்வளவு கஷ்டம் துன்பமாயிருந்தாலும் உண்மையான விசுவாசத்தோடு, இருதயத்தை ஆண்டவருக்கு ஏறெடுத்தால் அந்தக் கஷ்ட நிலைமை கணப்பொழுதில் மாறும்.

கர்த்தர் இப்போதும் இராஜரீகம்பண்ணுகிறார்: நாம் அவர்மேல் நம்பிக்கையாயிருந்தால், நமது தோல்வியை நொடிப்பொழுதில் ஜெயமாக மாற்ற அவரால் முடியும்.

1 தேவன் வல்லவர், அவர் இரட்சிக்கக்கூடும்,
சோதனை வேளையில் விசுவாசம் ஜெயமடையும்:
நாம் தேவனுடைய வல்லமை பொருந்திய
சக்தியில் நம்பிக்கை வைத்தால்,
பயம், கவலை, பாவம், துக்கம்,
எல்லாம் முறியடிக்கப்படும்.

2 தேவன்மேல் நம்பிக்கையாயிரு, அப்போது
மேகம் சூழ்ந்தாலும், சூரியன் பிரகாசிக்கும்;
அவர் மனம் நம் பாதையை நிர்மாணித்தது.

தேவன்மேல் சதா நம்பிக்கைகொண்டு இரு. ஒருவனுக்கு விசுவாசமிருந்தால் சத்துருவைக் கண்டு பின்வாங்கான். சாத்தானைக் கண்ட இடத்திலேயே நிற்கச்செய்வான்.

—மார்ஷல் போக்

## ஜூன் 9

'சத்தியத்தை மேய்ந்துகொள்' (சங். 37:3).

தன் அன்றுட ஜீவியத்திற்குரியதை அன்றன்று உழைத்துச் சம்பாதித்த ஒரு நீக்ரோ ஏழைப் பெண்ணை நான் கண்டேன். அவள் அதிக சந்தோஷமும், உற்சாகமும் நிறைந்த ஒரு கிறிஸ்தவ மாது. எப்போதும் கவலையில் ஆழ்ந்துள்ள மற்றொரு கிறிஸ்தவப் பெண், அவளைப் பார்த்து, 'நீ இப்பொழுது சந்தோஷமாய்த்தான் இருப்பாய். ஆனால் உனது வருங்காலத்தைக் குறித்து எண்ணினால், இவ்வளவு ஆனந்தமாய் இருக்கமாட்டாய். நீ ஒருவேளை வியாதிப்பட்டு வேலை செய்யக்கூடாமற்போனால்; அல்லது உன் எஜமானர் இவ்விடம் விட்டுச் சென்றபின், வேறு ஒருவரும் உனக்கு வேலை கொடுக்க வில்லையென்றால்,'—என்று அடுக்கடுக்காய்ச் சொன்னாள். அந்த நீக்ரோப் பெண் அவளை இடைமறித்து, 'நிறுத்துங்கள், நான் அப்படி நினைப்பதில்லை—கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார். நான் தாழ்ச்சியடையேன் என்பதை நன்கு அறிவேன்' என்றாள். பின்னும் அவள் கவலை நிறைந்த தன் தோழியைப் பார்த்து, 'இப்படி வைத்துக் கொள்வோம் என்கிற மனதின் அவசியமற்ற எண்ணங்களே உனக்குத் துன்பத்தை உண்டாக்குகின்றன. நீ அவைகளை விட்டு விட்டு, தேவன்மேல், நம்பிக்கையாயிருப்பது உனக்கு நன்மையை உண்டாக்கும்' என்றாள்.

உங்களுக்கு இருக்கிறவைகள் போதும் என்று எண்ணுங்கள். நான் உன்னைக் கைவிடுவதுமில்லை, உன்னைவிட்டு விலகுவதுமில்லை என்று கர்த்தர் வாக்களித்திருக்கிறாரே. அதனால் நாம் தைரியங் கொண்டு, 'கர்த்தர் எனக்குச் சகாயர், நான் பயப்படேன். மனுஷன் எனக்கு என்ன செய்வான்' என்று சொல்லலாமே (எபி. 13:5,6).

இந்த வசனத்தை ஏற்றுக்கொண்டு, பிள்ளைக்குரிய விசுவாசத்தோடு நடந்தால், சந்தேகம் என்பதை, விசுவாசியின் வாழ்க்கையிலிருந்து அது அகற்றிவிடும். —எச். டபிளியு. எஸ்.

1 என் பாதையின் குறுக்கே துன்பம் என்னும் ஓடை இருக்கிறது;
அது அகலமாய், ஆழமாய் இருக்கிறது.
அதை கடக்கும் நேரம் பயங்கரமாய்த் தோன்றுகிறது:
ஆனால் நான் சிரித்துப் பாடிக்கொண்டு,
எப்பொழுதும் நம்பிக்கையா யிருப்பேன்.
நாளைவரும் துக்கத்தை நாளை அனுபவிப்பேன்,
ஆனால் இன்று நான் அதை ஒரு சிறிதும் நினையேன்.

2 நாளை நான் கடக்கவேண்டிய பாலம் அபாயமானது
அதை இப்போது கடக்கத் துணியேன்,
அதன் தூண்கள் அசைவதையும்,
அதன் வளைவுகள் நெகிழ்வதையும் காண்கிறேன்,

என் மனமே, நீ எப்போதும் சந்தோஷமாய்ப் பாடு.
நீ எப்பொழுதும் சந்தோஷமா யிருக்கவேண்டும்,
நாளை வரும் துக்கத்தை நாளை அனுபவிப்பேன்,
ஆனால் இன்று அதைப்பற்றி ஓர் சிறிதும் நினையேன்.

ஆகாயத்தில் உயரப் பறக்கும் கழுகு நதியை எவ்வாறு கடப்ப தென்று கவலை கொள்ளாது.

## ஜூன் 10

'தேவனிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கேதுவாக நடக்கிற தென்று அறிந்திருக்கிறோம்' (ரோ. 8:28).

பரிசுத்த பவுல் அப்போஸ்தலனுடைய இந்த நிச்சயம் எத்தனை விரிவானது. 'சில காரியங்கள் அல்லது அநேகமாய் எல்லாக் காரியங்களும்' அல்லது 'சந்தோஷமான காரியங்கள்மட்டும்' என்று சொல்லாமல் 'சகலமும்' என்று சொல்லுகிறார். சிறு காரியங்களி லிருந்து பெரிய காரியங்கள் வரை; அன்றாட தெய்வ நடத்தலாகிய சிறிய காரியத்திலிருந்து, கிருபையால், தாண்டக்கூடிய பெரிய அபாயகரமான வேளைவரை என்று பொருள்படும்.

சகலமும் 'நடக்கின்றன' அவைகள் நடந்துகொண்டிருக்கின்றன. 'சகலமும் நடந்தன' என்று சொல்லவில்லை. அவை தற்சமயம் நடக்கின்றன.

இப்பொழுது 'உமது நியாயத்தீர்ப்பு கடலைப்போல் ஆழமாக இருக்கிறதே' என்று யாராவது சொல்லிக்கொண்டிருக்கலாம். ஆனால் தமது இறகுகளை மடித்து நின்று தேவனது பெரிய திட்டம் நிறைவேறுவதைப் பார்த்துக்கொண்டிருக்கும் தூதர்கள், கர்த்தர் தமது வழிகளிலெல்லாம் நீதியுள்ளவரும் தமது கிரியைகளெல்லாம் கிருபையுள்ளவருமாயிருக்கிறார்' என்று சொல்லுகிறார்கள்.

பின்பு சகல காரியங்களும் 'சேர்ந்து' வேலைசெய்கின்றன. அது அழகான இசை விணைப்பாயிருக்கின்றது. தனித்தனியே பார்த்தால் கண்ணுக்கு அழகாய்த் தோன்றாத பல வர்ணங்களைக்கொண்டுதான் சித்திர வேலைபாடுள்ள நெசவு செய்யப்பட்டிருக்கிறது.

பற்பலவிதமான ஸ்தாயிகளும், சரளிகளும், சுரங்களும் பண் அமைந்த கீதம்பாடத் தேவையாயிருக்கின்றன.

பலவகையான சக்கரங்களும், இணைப்புகளும் ஓர் இயந்திரத்தை உற்பத்தி செய்யத் தேவையானவை. ஒரு நூலையாவது, ஒரு ஒரு சக்கரத்தையாவது தனியே எடுத்தால், அதன் உபயோகத்தை அல்லது அழகை உணர முடியாது.

நெசவை முற்றுமுடியச் செய். இராகங்களை இசைவாக இணை. இயந்திர பாகங்களை ஆங்காங்கு அதற்குரிய இடத்தில் இணை. அப்போது அதன் விளைவு அழகாகவும், ஒழுங்காகவும் இருக்கும். 'நான் செய்வது இன்னதென்று நீ இப்போது அறியாய். பின்பு அறிந்துகொள்வாய்' இதுவே விசுவாசத்தின் பாடம். —மாக்டப்

நமக்கு வரும் ஆயிரம், ஆயிரமான துன்பங்களில் சில மட்டுமல்ல, ஒவ்வொன்றும் விசுவாசியின் நன்மையை நடப்பிக்கிறது.

—ஜியார்ஜ் முல்லர்

தேவன் அதை நன்மையாக முடியப் பண்ணினர் (ஆதி. 50:20)

'தேவன் அதை நன்மைக்கென்று செய்கிறார்' என்பது
நம் வாழ்க்கைப் பாதையில் விழும்
சூரிய கதிர்கள்போல நிச்சயம் தருவதாகும்.

1 இவ்வுலக இருண்ட மேகங்களை,
பரலோக தங்க ஒளி தொடுவதுபோல்
நாளுக்கு நாள் புதிது புதிதான ஆறுதலையும் சமாதானத்தையும்
கொண்டுவருவதாகும்.

2 யோசேப்பின் சகோதரர் அவனை விற்றது,
தற்செயலான காரியம் அல்ல,
அநேக ஆண்டுகளுக்குப்பின் அரசன் அரியாசன முன் நிற்கச் செய்தது,
தற்செயலாய் நடந்ததல்ல.

3 சகலத்தையும் காணும் கண் ஆயிரம் பேரின் தேவையைக்
கண்டு ஒரு மனிதனைக்கொண்டு அதைச் சரிப்படுத்தத் திட்டம் வகுத்ததால்
சிறையில் கிடந்த காலங்களின் மூலமாய்,
உன்னத நோக்கத்தை நிறைவேற்றினர்.

4 நோக்கம் கைதிக்கு மறைந்திருந்தால்,
பட்டயம் போன்ற துயரம் அவன் ஆத்துமாவை உருவக் குத்தினது,
அவன் கண்கள் தன் துன்பப்பாதையை ஆராய ஏதுவானது,
ஆனல் காரியம் பூராவையும் அவன் அறியக்கூடவில்லை.

5 அவன் கஷ்டத்திலிருந்த நாட்களிலும் அவன் விசுவாசம் தவறவில்லை,
அவன் நம்பிக்கை கடைசியாய்ப் பலனளித்தது,
அவன் கஷ்டங்கள் நீங்கி அநேகரைக் காக்கும்
உயர்ந்த வேலைக்கு அன்பாய் நடத்தப்பட்டான்.

6 'நீங்கள் அல்ல தேவனே என்னை இங்கு அனுப்பினார்,'
என்று விசுவாச வெற்றியைச் சாட்சியாய்ப் பின் அறிவித்தான்
'தேவன் நன்மைக்கென்றே செய்தார்' வேறெந்தக் காரணமும்
அவர் துதியின் இசையைக் கெடுக்கச் சேர்க்கப்படவில்லை.

7 நேசிக்கப்பட்ட பிள்ளையே! கர்த்தர் நன்மைக்கென்று செய்கிறார்
யோசேப்பின் தேவன் அன்று போலவே இன்றுமிருக்கிறார்,
அவர் அன்பு கசப்பான கஷ்டங்கள் வர அனுமதிக்கிறது,
நான் அறியாத வழியில் அவர் கரம் நம்மை நடத்துகிறது.

8 இறுதியை ஆரம்பத்திலிருந்தே காண்கிற தேவன்,
அன்பான நோக்கங்கள் கொண்டுள்ளார்;
அவர் கரம்மீது உன்கரம் வைத்துப் பயமின்றி பின்செல்,
அப்போது வாக்குக் கடங்காக் கிருபையின் ஐசுவரியத்தைக்
காண்பாய்

9 நீ மகிமையான வாசஸ்தலத்தை அடையும்போது,
வாழ்க்கையின் பாதை உன்முன் தோன்றும்போது,
இப்பொழுது நீ விசுவாசிக்கும் கரத்தை, உன் கண்கள் காணும்,
சதா காலங்களிலும் அவர் அன்பைப் போற்றுவாய்.

## ஜூன் 11

*'கர்த்தருடைய ஊழியக்காரன் சமாதானம் உள்ளவனாயிருக்கவேண்டும்' (2 தீமோ. 2:24).*

தேவன் நம்மைப்பிடித்து நம்முடைய இயற்கைக் குணத்திலுள்ள கல்லான பாகத்தை எடுத்துவிடுகிறார். கிறிஸ்துவின் ஆவியைக் குறித்து ஆழ்ந்த காட்சிகள் கிடைக்கின்றன. அப்பொழுது நாம் சமாதானமான ஆவி இந்த இருண்ட உலகில் எத்தனை அரிது என்பதைக் காண்கிறோம்.

ஆவிக்குரிய கிருபை வரங்கள் தற்செயலாக நமக்கு வருபவை அல்ல. அவைகளை நாம் கவனித்து, அவைகளை வேண்டுமென்று தெரிந்துகொண்டு, நம் உள்ளத்தில் அவற்றை வளர்த்து வந்தால் அக்குணங்கள் நம் இயற்கையிலும் நடக்கையிலும் ஒட்டிக் கொள்ளும்.

நற்குணத்தில் முன்னேறும்போதெல்லாம் அதை உணர்ந்து, அதை அடையவேண்டுமென்று ஜெபத்தோடு தீர்மானித்துச் சென்றால்தான் கிட்டும்.

சாந்த குணங்களைப் பெற்றுக்கொள்வதற்கான கஷ்டங்களை அனுபவிக்க அநேகருக்கு மனமில்லை. நாம் சமாதானமுள்ளவர் களாகுமுன் மரிக்கவேண்டும். சிலுவையில் அறையப்படுதல்

கஷ்டமே. அது 'நான்' என்னும் ஆணவத்தை நசுக்கி உடைப்ப தாகும். அப்போது இருதயம் வருத்தம் அடைந்து மனது மேற் கொள்ளப்படுகிறது. ஆனுல் தற்காலத்தில் நம் மனதிலேயே, நம்முடைய அறிவைக்கொண்டு சுத்தமடையலாம் என்ற நம்பிக்கை அநேகருக்கு இருக்கிறது, அது வீண்|வார்த்தை. அது மனதிலேயே 'நான்' என்னும் எண்ணத்தைப் பலிபீடத்தில் வைத்து, பலிபீடம் பலியைச் சுத்தப்படுத்தும் என்று மனதில் சொல்லிக்கொண்டு, பின்பு தர்க்க சாஸ்திர ரீதியாய் 'ஆகையால், நான் சுத்திகரிக்கப்பட்டேன்' என்ற முடிவுக்கு வருவதாகும். அப்படிப்பட்ட ஒருவன் கடவுளைப் பற்றி ஆழமான அறியக்கூடாத காரியங்களைக் குறித்துக் குதூகல மாய் இலகுவாய் வேத.சாஸ்திரீகமாய்ப் பேசித்திரிவான்.

ஆனுல் இயற்கையான இருதயப் பாவக் கயிறுகள் அறுபடவில்லை. கல்லான இருதயம் தூளாக நொறுக்கப்படவில்லை. கல்வாரி மரணத் தின் அச்சடையாளங்கள் இல்லாததால், வெறும் கல்லறையிலிருந்து வசந்தகாலக் காலையில் மிருதுவாய் இனிமையாய் மிதந்து வழிந் தோடும் வாழ்க்கையுமின்று.

'அவர்கள் எல்லார்மேலும் பூரண கிருபை உண்டாயிற்று' (அப். 4:33).
—ஜி. டி. டபள்யூ

## ஜுன் 12

'நீங்கள் கிறிஸ்துவுக்குள் எல்லாவற்றிலும் சம்பூரணமுள்ளவர்களாக்கப்பட்டிருக் கிறீர்கள்[1] (1 கொ. 1:5).

சில மனிதர்கள் துன்பம் வந்தால் பெரிய ஜெபஞ் செய்ய ஏவப்படு கிறுர்கள். கொஞ்சம் கொஞ்சமாய்த் துன்பம் மறக்கப்பட்டு போகிறது. ஆனுல் அதால் ஏற்படும் நற்குணத்தின் இனிமை நீங்கா மல் அவர்கள் ஆத்துமாக்களை உயிர்ப்பித்துக்கொண்டிருக்கிறது.

அவ்விதமாக வசந்த காலத்தின் இறுதியில் ஒரு புயலைக் கண்டேன். மின்னொளி இடியினுல் மேகங்களைப் பிளந்த இடத்திலன்றி எல்லா இடத்தும் இருண்டிருந்தது.

வானத்தின் பலகணிகள் திறக்கப்பட்டதுபோல் காற்று அடித்து மழை பொழிந்தது. எவ்வளவோ சேதம் ஏற்பட்டது. வெளியி லுள்ள சிலந்திப் பூச்சிக்கூடேனும் தப்பவில்லை. அந்தப் புயல் பலத்த கிளைகளையுடைய தேக்குமரத்தையும் முறித்தது.

சீக்கிரத்தில் மின்னல் மறைந்தது. இடிமுழக்கம் அமைதலாயிற்று. மழை நின்றுவிட்டது. இனிமையான மேல்காற்று வந்து மேகத் தைத் தள்ளிக்கொண்டுபோனது. பின்வாங்கும் புயல் தன் அழகிய தோள்கள்மீதும், கழுத்திலும் வானவில்லாகிய அங்கவஸ்திரத்தைப் போட்டுக்கொண்டு திரும்பிப் பார்த்துப் புன்னகைப் பூத்து மறைந்து போயிற்று.

அதற்குப்பின் அநேக வாரங்கள் புல்வெளி தேன் ஒழுகும் பூக்களால் நிறைந்திருந்தது. கோடைகாலம் பூராவும் பச்சைப்புல் இருந்தது. ஓடைகளில் நிறைய தண்ணீர் ஓடிற்று. மரங்கள் குளிர்ந்த நிழலைத் தந்தன. இவை யாவும் புயலுண்டானதாலாயின. ஆனால் உலகம் அந்தப் புயலையும் வானவில்லையும் மழையையும் மறந்து போனது. —தியோடர் பார்க்கர்

வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட நாட்டை அடையப் பயணம் எளிதாயிருக்கத் தேவன் கிரியை செய்யார். ஆனால் நம்முடைய பயணத்தில் மோசம் நேரிடாது. —போனர்

ஒரு புயலே இந்தியாவிலுள்ள தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்க உதவியது. அதேபோல் வாழ்க்கைப் புயலே நீ தேவனின் அன்பாகிய மிகுந்த ஐசுவரியம் நிறைந்த சுரங்கத்தைக் கண்டடையச் செய்தாயா?

1 சிறு பூவே, மழை பெய்கின்றதா?
அதைக் குறித்து மகிழ்ச்சியடைக
அதிக வெயிலாயிருந்தால் நீ காய்ந்துபோவாய்
வெயில் திரும்ப வீசும்,
மேகங்கள் உண்மையில் இருளாய்த் தோன்றுகின்றன,
ஆனால் அவற்றிற்கு அப்பால் சூரியன் ஒளிருகிறது.

2 மிருதுவான இதயமே, களைப்பா யிருக்கிறாயா?
வேதனையைக் குறித்து மகிழ்ச்சியடைக
மழையால் மலர் உண்டாவதுபோல்,
துக்கத்தில் இனிய மலர் மலரும்,
மழையில் அகப்பட்ட மலர்போன்று,
வருத்தத்தில் நற்குணம் வளரும்,
தேவன் கவனிக்கிறார், மேகம் தன் வேலையைச் செய்தபின்,
சூரியன் உனக்குக் காணப்படும். —லூசி லாவ்கம்

## ஜூன் 13

'என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன்' (யோ. 14:27).

இளைப்பாறுதல் என்ற கருத்தை விளக்க இரு சித்திரக்காரர்கள் ஆளுக்கு ஒரு சித்திரம் தீட்டினார்கள். முதல் சித்திரக்காரன் தூரத்தில் மலைகளின் நடுவிலுள்ள அமைதியான ஏரி ஒன்றைச் சித்தரித்தான்.

இரண்டாம் மனிதன் ஆரவாரித்து விழும் ஓர் அருவியை வரைந்தான். அதன் திவலைகளின்மேல் ஒரு மரக்கிளை சாய்ந்து நின்றது. அச்சிறு கிளை இரண்டாய்ப் பிரியுமிடத்தில் திரைகளின் நீர்த் திவலைகள் நனையக்கூடிய இடத்தில் ஒரு சிறு குருவி தன் கூட்டில் அமர்ந்திருந்தாற்போல் வரைந்தான்.

முதல் படம் ஓட்டமின்றி கட்டி நிற்கும் ஜலம். இரண்டாம் சித்திரமே அமைதியைக் காட்டிற்று. இயேசுகிறிஸ்துவின் ஜீவியம் அதி துக்கம் நிறைந்த ஜீவியமே. புயலும், குழப்பமும், அலைகள் மோதி வீச, கல்லறைக்கு அவரின் களைத்த சரீரம் எடுத்துச் செல்லப்படும் வரை கஷ்டம் அனுபவித்தார். ஆனால் அவருடைய உள்ளான ஜீவியம் பளிங்கு கடல்போலிருந்தது. அவர் உள்ளத்தில் எப்போதும் அமைதி நிலவினது.

எந்த நேரம் அவரிடம் சென்றாலும் இளைப்பாறுதல் பெறலாம். இரத்த மோப்பம் பிடிக்கும் நாய்கள்போல், அவரைக் கொலைசெய்ய வகை தேடினவர்கள் அவரைப் பிடித்து, எருசலேமின் வீதியில் அவரைத் தொடர்ந்தபோதும் அவர் தமது சீடர் பக்கம் திரும்பி 'என் சமாதானத்தை உங்களுக்கு விட்டுப் போகிறேன்' என்றார்.

'இளைப்பாறுதல்' என்பது கோவிலில் நமக்குண்டாகும் பரிசுத்த பக்தி உணர்ச்சி அல்ல. அது தேவன்மேல் எப்பொழுதும் நன்றாய்ச் சார்ந்திருக்கும் அமைதியேயாகும். —டரம்மாண்ட்

1 மிகுந்த துக்க வேளையில் என் சமாதானம் அருளுவேன்.
அது உனக்கு அமைதி, நம்பிக்கை, ஆறுதலைக் கொடுக்கும்.

2 உன் ஜெபம் கேட்கப்படாததுபோல் தோன்றுகையில்
என் சமாதானம் அருளுவேன்;
என் வார்த்தைகளில் வாக்குத்தத்தம் உண்டு என்றறிவாய்.

3 நீ தனியாய் விடப்படும்போது என் சமாதானம் அருளுவேன்
இரவில்தான் 'இராப்பாட்டாளிக்' குருவிக்கு இனிய கீதமுண்டாகும்.

4 நீ யாவுமிழந்து போகையில் நான் சமாதானம் அருளுவேன்
மகிமையின் வழி சிலுவைக்கே செல்லுகிறது.

5 சத்துருக்கள் உன்னைக் குற்றப்படுத்துகையில்
என் சமாதானம் அருளுவேன்;
அதிக அவமானமடையும் போது
என் ஐக்கியம் உனக்கு இனிமையா யிருக்கும்.

6 நீ துன்ப வியர்வை அடைகையில் என் சமாதானம் அருளுவேன்;
என் நெற்றியிலிருந்தும் இரத்தவேர்வை சொட்டிற்று.

7 உன் அருமைத் தோழன் உன்னைக் காட்டிக் கொடுக்கையில்
என் சமாதானம் அருளுவேன்;
அச்சமாதானம் அன்பிலிருந்துண்டாகி, அவனுக்காய் ஜெபிககும்.

8 நீ மரணம் அடையும்போது என் சமாதானம் அருளுவேன்;
சிலுவை சுமந்துகொண்டுதான் என்னண்டை நீ வரக்கூடும்.

—எல். எஸ். பி.

## ஜுன் 14

'நானோ உங்களில் விசுவாசம் ஒழிந்துபோகாதபடி உங்களுக்காக வேண்டிக்கொண்டேன்' (லூ. 22:32).

கிறிஸ்தவனே! ஆசீர்வாதங்களைப் பெறும் ஒரே வழி விசுவாசம் என்பதை மனதில்கொண்டு, உன் விசுவாசத்தைப் பாதுகாத்துக் கொள். ஜெபத்தை நம்புகிற ஒரு மனிதனின் விண்ணப்பம், ஊக்கமானதாயிருந்தாலன்றி, தேவ சமுகத்திலிருந்து விடை கொண்டு வராது.

விசுவாசமே பூலோகத்தையும், பரலோகத்தையும் இணைக்கும் தந்திக்கம்பி. அதன் மூலம் தேவனின் அன்பின் செய்தி வேகமாய்ப் பறக்கும். ஆகையால் நாம் கூப்பிடுமுன்னே, அவர் விடை அருளுகிறார். நாம் பேசிக்கொண்டிருக்கும்போதே, அவர் கேட்கிறார். அந்த விசுவாசக் கம்பி அறுந்துபோனால் நாம் வாக்குத்தத்தம் பெறுவதெப்படி?

நாம் கஷ்டப்படும்போது, விசுவாசத்தின் மூலம் நான் உதவிபெறலாம். நான் சத்துருவால் தாக்கப்படுகிறேனா, என் ஆத்துமா தன் அருமையான அடைக்கலத்தின்மேல் விசுவாசத்தால் சார்ந்து கொள்ளக்கூடும். ஆனால் விசுவாசம் இல்லாவிட்டால் நான் வீணாய்த் தேவனை நோக்கிக் கூப்பிடுகிறேன். என் ஆத்துமாவுக்கும், பரலோகத்திற்கும் இடையில் வேறு பாதையில்லை. அப்பாதை தடைப்பட்டால், நான் பெரிய இராஜாவோடு எப்படிச் சம்மதம் வைத்துக்கொள்ளக்கூடும்.

விசுவாசம் என்னைத் தேவ மகிமையோடு இணைக்கிறது. விசுவாசம் எனக்கு ஏகோவாவின் சக்தி, பலம் ஈகிறது. விசுவாசம் எல்லாத் தெய்வீக இலட்சணத்தாலும் என்னைக் காக்கிறது. அது என் சத்துருக்கள்மேல் என்னை வெற்றி சிறக்கச் செய்கிறது. ஆனால் விசுவாசம் இல்லாவிடில் நான் ஒன்றையும் தேவனிடமிருந்து பெற முடியாது.

ஆகையால் கிறிஸ்தவனே, உன் விசுவாசத்தைக் காத்துக்கொள். 'நீ விசுவாசிப்பாயானால், விசுவாசிப்பவர்களுக்கு எல்லாம் கூடும்.'

—சி. எச். ஸ்பர்ஜன்

கிரியை செய்கிறவர்களா யிருக்கிறோம் என்று நாம் கொள்வதால் விசுவாசிப்பதைவிட நிச்சயமானதைத் தேடுகிறோம். ஆனால் பவுல் அப்போஸ்தலன் விசுவாசத்தைச் சார்ந்தவர்களுக்கு வாக்குத்தத்தம் நிச்சயமாயிருக்கிறது என்று சொல்லவில்லையா (ரோ. 4:16).

—டான் கிராபோர்ட்

விசுவாசம் தேவனைக் கனப்படுத்துகிறது. தேவன் விசுவாசத்தைக் கனப்படுத்துகிறார்.

## ஜூன் 15

'நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்தில், தேவன் என்னைப் பலுகப்பண்ணினார்' (ஆதி. 41:52).

கோடை மழை பெய்கிறது. அதை ஜன்னல் வழியாய் ஒரு கவிஞர் பார்த்துக்கொண்டிருக்கிறார். மழை வேகமாய், பலமாய்ப் பெய்து, பூமியை அடித்து அலைக்கழிக்கிறது. ஆனால் அந்தக் காட்சியில், தன் முன் கண்ட மழையிலும் மேலான விசேஷத்தைக் காண்கிறார். தண்ணீரால் நனைந்த பூமியிலிருந்து ஆயிரக்கணக்கான கந்தமும், சுந்தரமும் உள்ள மலர்கள் தோன்றி மலர்வதைக் காண்கிறார். ஆகையால் கீழ்க்காணும் கவிதையை எழுதுகிறார்:

'இந்த மழை எனக்கு மழையாக அல்ல, மலராக பொழிகிறது.

ஒவ்வொரு துளியிலும், மலையில் மலரும் காட்டு மலர்களைக் காண்கிறேன்.

கருமேகம் சூரியனை மறைத்து, ஊரைச் சூழ்ந்துகொள்கிறது.

எனக்கு மழை மழையாக அல்ல, ரோஜா மலர்களாகப் பொழி கிறது.'

இப்பொழுது சிட்சிக்கப்படும் தேவனுடைய பிள்ளை ஒன்று, 'தேவனே எத்தனையாய் என்மேல் மழை பொழிகிறது.'

நான் சகிக்கக்கூடாததுபோல், சோதனை என்மேல் பொழிகிறது. நான் போட்ட திட்டம் யாவும் மாறி, ஏமாற்றமாகப் பொழி கின்றன. வருத்தத்தால் என் இதயம் சோர்வடையும் வண்ணமாய் எனக்கு அருமையானவர்கள் மறைந்துபோகிறார்கள். 'துன்பமாகிய மழை, இந்நாட்களில் கடூரமாய்ப் பெய்கிறது' என்று சொல்லலாம்.

இருந்தாலும், சிநேகிதனே, யாவற்றையும் நீ தப்பர்த்தப்படுத்து கிறாய். அந்த மழை உனக்கு மழையாகப் பொழியவில்லை. அது ஆசீர்வாதமாய்ப் பொழிகிறது. ஆனால் நீ பிதாவின் வார்த்தையை நம்பினால், பெய்யும் மழையின் மூலமாக முன்பு சிட்சிக்கப்படாத துன்பமறியாத காலத்தில் நீ அறியாத ஆவிக்குரிய மலர்கள் அறிய கந்தமும், அழகுமுடையவைகளாய் மலரும்.

நீ மழையைத்தான் பார்க்கிறாய். நீ மலர்களைப் பார்க்கிறாயா? சோதனைகள் உன்னை வருத்துகின்றன. ஆனால் இந்தச் சிட்சை களினால் உண்டாகக்கூடிய விசுவாசம் என்னும் இனிய மலரைக் கர்த்தர் காண்கிறார்.

நீ கஷ்டத்தைப் பார்த்துப் பயமடைகிறாய். ஆனால் நீ கஷ்டப்படு கிறவர்களுக்கு அளிக்கப்போகும் அனுதாபம், உன்னில் ஆரம்பமா வதைக் கடவுள் காண்கிறார்.

உனக்கு அருமையானவர்களை இழக்கும்போது, உன் இதயம் துடிக்கிறது. ஆனால் அத்துக்கம் உன் இதயத்தைப் பெருந்தன்மை யுள்ளவனாக்குவதைத் தேவன் காண்கிறார்.

கஷ்டங்கள் உன்மேல் மழைபோல் பெய்கிறதில்லை. ஆனால் பட்சம், அன்பு, அனுதாபம், பொறுமை ஆகிய இவைகளும், இன்னும் ஆவிக் குரிய அநேக ஆயிர மலர்களும், கனிகளும் பொழிகின்றன. இவைகள் இவ்வுலக ஆஸ்தி பாஸ்திகளால், உன் இதயத்தில் ஒருபோதும் உண்டாகா. —ஜே. எம். மாக்

### புயலினூடே சங்கீதம்

ஆயிரமாயிரமான மணமுள்ள மலர்களின்மேல் சூரிய ஒளி
பாய்ந்தது.
அசையா வனத்தில் ஒரு வீணை யிருந்தது.
கவலை நிறைந்த ஒரு பிரயாணி காலைமுதல் மாலைவரை
கம்பிகளில் இனிய நாதம் உண்டாக்க முயன்றார்.
அந்த யாத்ரீகர் வீண்முயற்சி செய்தார்.
கடவுளுடைய விரல்கள் புயலின்மேல் அசைந்து,
திவ்ய ஒலி உண்டாகும்வரை அதில் ஒலி இல்லை
பிரசண்டமான காற்று போர் முழக்கத்தையும்,
போர் எக்காளத்தையும்போல் சப்தித்தாலும்,
தேவனுடைய அன்பின் சப்தம் புயலினூடே கேட்கும்.

## ஜூன் 16

'நான் நம்புகிறது அவராலே வரும்' (சங். 62:5).

நாம் கேட்டதற்குப் பதில் வரும் என்று எதிர்பாராதது, நம் பிரார்த்தனை எவ்வளவு உற்சாகமற்றது என்று காட்டுகிறது. ஒரு தோட்டக்காரன் தோட்டத்தில் நற்பயனில்லாவிட்டால் திருப்தி யடையமாட்டான். குறி பார்ப்பவன் அம்பு நோக்கிய திசையை அடைகிறதா என்று கவனித்துக்கொண்டிருப்பான். ஒரு வைத்தியன் தான் கொடுத்த மருந்து என்ன மாறுதலை உண்டாக்குகிறதென்பதை உற்று நோக்குவான். கிறிஸ்தவன் தன் வேலையின் பயனைக் குறித்து விசாரியாதிருக்கலாமா?

ஒவ்வொரு கிறிஸ்தவனும், விசுவாசத்தோடே தேவ வாக்கை நம்பி, தேவ சித்தத்திற்கேற்றபடி ஜெபிக்கவேண்டும். கிறிஸ்துவின் நாமத்திலே ஜெபிக்கவேண்டும். அப்படி ஜெபித்தால் இகபர நன்மை யாவும் கட்டாயம் கிடைக்கும்.

தேவன் தமது மகிமைக்கானதும், நமது ஆவிக்குரிய நித்திய நலனைத் தரக்கூடியதுமான நோக்கங்கொண்ட ஜெபங்களுக்குப்

பதிலளிக்கிருர். கிறிஸ்து இவ்வுலகத்திலிருந்தபொழுது தம்முடைய இரக்கத்தை நாடிவந்த ஒருவரையும் தள்ளவில்லே. ஆகையால் அவருடைய நாமத்தில் ஏறெடுக்கப்படும் விண்ணப்பம் வீணுகாது என்று நம்பலாம்.

நமது ஜெபத்திற்கு விடை வந்துகொண்டிருக்கலாம். ஆனுல் நாம் அதைக் காணுதிருக்கலாம். மண்ணிற்குள் புதைக்கப்பட்ட வித்து அழிந்ததுபோல் காணப்பட்டு தரைக்கு வெளியே வராதிருந்தாலும், அது குளிர்காலம் உள்ளேயிருந்து, வசந்தகாலம் வெளியே வந்து பயன்கொடுக்க வேர் விட்டுக்கொண்டிருக்கிறது.

—பிக்கர்செத்

தாமதித்து வரும் பதில் நாம் விசுவாசத்தின் சோதனேமட்டுமல்ல, வெளிப் பார்வைக்குத் தள்ளிவிடப்பட்டதுபோலிருப்பினும், அவர் மேல் பூரண விசுவாசத்தைக் காட்டி அவரைக் கனப்படுத்த ஏற்ற சமயமுமாகும். —சி. எச். ஸ்பர்ஜன்

## ஜூன் 17

'அவைகள் நின்று தங்கள் செட்டைகளேத் தளரவிட்டிருக்கையில், அவைகளுடைய தலேக்கு மேலான மண்டலத்திலிருந்து ஒரு சத்தம் பிறந்தது' (எசே. 1:25).

செட்டைகளேத் தளரவிடுவதென்ருல் என்ன? ஜனங்கள் அடிக்கடி 'கடவுளுடைய சத்தததை எப்படிக் கேட்கலாம்' என்கிருர்கள். இந்த இரகசியம் இங்கே கூறப்பட்டிருக்கிறது. அவைகள் நின்று செட்டைகளேத் தளரவிட்டிருக்கையில் சத்தத்தைக் கேட்டன.

நாம் செட்டைகளேப் படபடவென்று அடித்துக்கொண்டிருக்கும் பட்சியைப் பார்த்திருக்கிருேம். அவை சும்மா நின்ருலும் செட்டைகள் அடிக்கின்றன. ஆனுல் இங்கே அவைகள் நின்று செட்டைகளேத் தளரவிட்டிருக்கையில் சத்தத்தைக் கேட்டன என்று சொல்லப்பட்டிருக்கிறது.

நாம் சில சமயங்களில் கடவுளுக்குமுன் உட்கார்ந்தோ, அல்லது முழங்கால்படியிட்டோ இருக்கையில் நம் மனம் துடித்துக்கொண்டே இருப்பதில்லேயா? இது அவர் சமுகத்திலிருப்பதற்கேற்ற அமைதியான நிலே அல்ல.

ஒரு பெண் முன்னெருநாள் தான் தேவனிடத்தில் வேண்டிக் கொண்டிருந்ததைக் குறித்துச் சொல்லி, 'ஆனுல் நான் விடை வரும் வரை காத்திருக்கவில்லே' என்ருள்.

அவர் பேசுவதைக் கேட்கத்தக்கதாக அவள் அமைதிநிலே யடையவில்லே. ஆனுல், போய் அக்காரியத்தைத் தன் யோசனேப்படி நடத்தினுள். அதன் பயன் மோசமாயிருந்தது. அவள் திரும்ப ஆரம்பிக்கவேண்டியதாயிற்று.

ஆ! எவ்வளவு முயற்சி வீணுயிற்று. ஆவியில் செட்டைகளைத் தளரவிட்டு, அவர்முன் அமைதியாயிராததால், எவ்வளவு காலம் வீணுயிற்று. அவருடைய சந்நிதானத்தில் அவரிடமிருந்து செய்தி வரும்வரை காத்திருக்கையில், எத்தனை அமைதி, எத்தனை சமாதானம் நம் உள்ளத்தில் உண்டாகிறது. அப்பொழுது நான் மின் வேகத்தில் செல்லலாம். ஆவி எங்கெங்குச் செல்லுமோ, அங்கெல்லாம் திரும்பிப் பாராமல் முன்னேறிச் செல்லலாம் (எசே. 1:1, 20).

1 அமர்ந்திரு! இப்போது அமர்ந்திரு!
உன் ஆன்மா கேட்டிராத ஏதோ ஒன்று,
பட்சிகளின் பாட்டிலிராத ஏதோ ஒன்று,
காற்று, அலை, விண்மீன் அறியா ஏதோ ஒன்று
பரம வீட்டை நாடும் உன் இதயத்தைக் களிக்கச்செய்யும்
நீ அமர்ந்திருந்தால் அது உன்னிடம் வரும்.

2 அமர்ந்திரு! இப்போது அமர்ந்திரு!
இனிமையும், சுகிர்தமுமான சமுகம் வருகிறது.
அவருடைய பாதரட்சை சப்தம் செய்யாது. அது வெண்மை யானது
அவருடைய வார்த்தைகளின் பொருளைப் போதிக்க,
இயேசு அனுப்பிய ஆறுதலளிப்போர் அவரே.
காத்திருக்கும் அமைதியான ஆவியை அவர் நிரப்புவார்.
அவருடைய செய்தி கேட்கவேண்டுமானல்,
பிரியமான பிள்ளையே, அமர்ந்திரு.

## ஜூன் 18

'ஆகையால் நெகிழ்ந்த கைகளையும், தளர்ந்த முழங்கால்களையும் நீங்கள் திரும்ப நிறுத்தி, முடமாயிருக்கிறது பிசகிப்போகாமல் சொஸ்தமாகும்படிக்குப் பாதங்களுக்கு வழியைச் செவ்வைப்படுத்துங்கள்' (எபி. 12:12,13).

விசுவாசத்தோடு கையை ஏறெடுக்கவும், ஜெபம் பண்ணும்படி முழங்கால்களை உறுதிப்படுத்தவும் ஏற்ற தைரியத்தை இவ்வசனம் நமக்குக் கொடுக்கிறது. அடிக்கடி நம் விசுவாசம் சோர்ந்து களைப் படைந்து உறுதி குலைந்துவிடுகிறது. ஜெபங்கள் ஊக்கத்தையும், வன்மையையும் இழக்கின்றன.

இங்கு ஒரு அழகிய உவமை இருக்கிறது. அதன் உட்கருத்து என்னவென்றால், நாம் சிறு தடைகளைக் கண்டு பயப்பட்டுப் பின்வாங்கத்தக்கதாய் நாம் அதைரியப்பட்டுப் போகிறோம். தடைகளை நேர்முகமாய்ச் சந்தித்து, மேற்கொள்ளாமல் நாம் சுற்றிச் செல்ல விரும்புகிறோம். எளிதான வழியைத் தெரிந்துகொள்கிறோம்.

அந்தத் தடை நம் சரீரப்பிரகாரமான ஒரு கஷ்டமாயிருக்கலாம். தேவன் சுகப்படுத்த ஆயத்தமாயிருக்கிறார். நமக்கே அதற்காகக் காத்திருப்பது கஷ்டமாக இருக்கிறது. ஒரு மனிதனுடைய உதவியைத் தேடுவதோ, அல்லது வேறு எந்த வழியோ எளிதாய்த் தோன்றுகிறது. இப்படிப்பட்ட சோதனை உண்டாகலாம்.

சில சமயத்தில் ஒரு சிக்கலான சந்தர்ப்பத்தை நேரான வழியை விட்டு வேறு வழிகளில் சமாளிக்க முடியும். அப்படி நாம் அஞ்சத்தக்க ஒரு சந்தர்ப்பம் நேரிடும்பொழுது பின்வருமாறு கூறி அதைத் தட்டிக் கழிக்கிறோம்:—

'அதற்கு நான் இப்போது ஆயத்தமாக இல்லை' என்று சொல்லுகிறோம். சுயவெறுப்பான காரியம் செய்யவேண்டியதிருக்கலாம். ஏதோ ஒரு கீழ்ப்படிதல் நம்மிடமிருந்து கேட்கப்படலாம். ஒரு எரிகோ பிடிக்கப்பட வேண்டியதிருக்கலாம். முற்றிலும் குணமாகாத ஒரு சரீர வேதனையாயிருக்கலாம். இந்தச் சோதனைகளைப் பாராமல் அப்பால் செல்கிறவர்களாயிருக்கலாம்.

'நெகிழ்ந்த கைகளைத் திரும்ப நிறுத்து' என்று தேவன் சொல்லுகிறார். தண்ணீருக்குள் நேராய்ச் செல்லுங்கள். இதோ, தண்ணீர் பிளக்கும்; செங்கடல் வழிவிடும். யோர்தான் நதி வழிவிடும். தேவன் அதன் வழியாய் உங்களை வெற்றிக்கு நடத்திச் செல்வார். உங்கள் கால்களைப் பிசகிப் போகவிடாதிருங்கள். உங்கள் சரீரம் சொஸ்தமாகட்டும். உங்கள் விசுவாசம் பலப்படட்டும். நேரே முன்னேறிச் செல்லுங்கள். ஒரு எரிகோவும் ஜெயிக்கப்படாதிருக்கக் கூடாது. சாத்தானை உங்களால் மேற்கொள்ள முடியவில்லை என்று சொல்ல இடம் கொடாதிருங்கள். இது நன்மை பயக்கும் பாடம். எத்தனை தடவைகளில் அப்படிப்பட்ட இடத்தை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். ஒருவேளை இன்று நீங்கள் அப்படிப்பட்ட இடத்தில் இருக்கலாம்.

—எ. பி. சிம்ப்ஸன்

அதைரியத்திற்கு இடம் கொடாதே. மழையானாலும், வெயிலானாலும், எளிதானாலும், வலிதானாலும் கப்பலைப்போல் முன்னேறிச் செல். சரக்கை ஏற்றிச்சென்று துறைமுகத்தை யடைவதே உன் குறியாகும்.

—மால்ட்பீ. டி. பாக்காக்

## ஜூன் 19

'அப்பத்துக்குத் தானியம் இடிக்கப்படும்' (ஏசா. 28:28).

நாம் கிறிஸ்துவின் கையால் பிட்கப்படாவிட்டால், நம்மில் அநேகர் உலகத்தின் பசியை ஆற்றும் ஆகாரமாகப் பயன்படமாட்டோம். 'அப்பத்திற்குத் தானியம் இடிக்கப்படவேண்டும்.' கிறிஸ்துவின் ஆசீர்வாதம் சில சமயங்களில் துக்கமாகவே இருக்கிறது. பிறர் வாழ்க்கையைப் பாக்கியமுள்ளதாக்க நாம் துக்கம்

அனுபவிப்பது பெரிய காரியமல்ல; இந்நாளில் உலகில் உள்ள இனிய காரியங்கள் யாவும் வேதனையின்மூலம் கண்ணீர்களினூடே உண்டானவை. —ஜே. ஆர். மில்லர்

தேவன் தாம் தெரிந்துகொண்ட ஜனங்களுக்கு என்னை அப்பமாக்கி யிருக்கிறார். அவருடைய பிள்ளைகளைப் போஷிக்க, அந்த அப்பம் சிங்கத்தின் பற்களில் அரைக்கப்பட வேண்டியதாயிருப்பினும் தேவ நாமத்திற்குத் துதி உண்டாகட்டும். —இக்னேஷியஸ்

நாம் பிரகாசிக்குமுன் நாம் எரிக்கப்படவேண்டும். நாம் இரத்தம் சிந்துவதை நிறுத்தினால், நம்மால் வரும் ஆசீர்வாதமும் நின்று போம்.

தரித்திரம், கஷ்டம், நஷ்டம் இவைகள் அநேகருடைய வாழ்க்கையை வீரமுள்ளதாகவும், ஆவிக்குரிய பெருந்தன்மை யடையத் தக்கதாகவும் செய்திருக்கின்றன. கஷ்டம் சக்தியையும், விடா முயற்சியையும் மார்தட்டி அழைக்கிறது. அது ஆத்துமத்தின் வல்லமையைப் பயன்படுத்தச் செய்கிறது. கடிகாரத்திலுள்ள பாரமே அதை ஓடிக்கொண்டிருக்கச் செய்தது. அநேக எதிர் காற்றுகள் துறைமுகம் அடையக் கப்பல்களுக்கு உதவி செய்தன. எதிர்ப்பைத் தேவன் விசுவாசத்தை ஊக்குவதற்கும், பரிசுத்த கிரியைக்குத் தூண்டுவதற்கும் ஏற்படுத்தியுள்ளார்.

வேத புத்தகத்தில் மிக உன்னத ஸ்தானம் வகிப்பவர்கள் இடிக்கப் பட்டு, நொருக்கப்பட்டு பசியுள்ளோர்க்கு அப்பமாக அரைக்கப் பட்டார்கள். ஆபிரகாமுக்கு விசுவாசிகளின் தகப்பன் என்று பெயர் வரக் காரணம், விசுவாசிகளின் கூட்டத்தில் அதிக துன்பத்தை அனுபவிப்பதிலும் கீழ்ப்படிதலிலும் தலை சிறந்தவராக இருந்ததால் தான்.

யாக்கோபு அநேக சோதனைகளையும் கஷ்டங்களையும் அனுபவித் தான். யோசேப்பு அடிக்கப்பட்டார், ஒடுக்கப்பட்டார். போத்திப் பாரின் சமையலறை வழியாகவும், எகிப்தின் சிறைச்சாலை வழியாக வும்தான் அவரால் சிங்காசனத்தை யடையமுடிந்தது.

தாவீது மலையின்மேல் ஒரு பட்சியைப்போல் வேட்டையாடப் பட்டான். பவுல், கட்டுகள், காவல், கல்லெறி, வாரடி இவைகளைச் சகித்திராவிட்டால், இராயனின் வீட்டாருக்கு ஆத்தும அப்பமா யிருந்திருக்கமாட்டான்.

தாவீது ஒரு தேசத்தின் அரசனாகத்தக்கதாய் பசியோடிருத்தல், காடுகளில் அலைதல் முதலிய துன்பங்களைச் சகித்தார். பவுல் இராஜாக்கள் குணப்படுமாறு மாவாக அரைக்கப்பட்டார்.

போரைப்போலவே ஜெயமும் உனக்கிருக்கும். உனக்கு அதிகக் கஷ்டம் உண்டானால், கிறிஸ்துவின் இருதயத்தில் தனி இடம் உனக்கு உண்டு என்பதை நிச்சயமாய் நம்பு. அதிகமாய் வருத்தப் படும் ஆத்துமாவே, உன்னத நிலைமைக்குத் தெரிந்துகொள்ளப் பட்ட ஆத்துமாவாகும்.

## ஜூன் 20

'நீங்கள் வலதுபுறமாய்ச் சாயும்போதும், இடதுபுறமாய்ச் சாயும்போதும், வழி இதுவே, இதிலே நடவுங்கள் என்று உங்களுக்குப்பின்னால் சொல்லும் வார்த்தையை உங்கள் காதுகள் கேட்கும்' (ஏசா. 30:21).

நாம் சங்கடத்திலும், சந்தேகத்திலுமிருக்கும்போதும், அநேக சப்தங்கள் இந்த வழி செல், அந்த வழி செல், என்று நமக்குச் சொல்லும் சமயத்திலும், விவேகம் ஒரு ஆலோசனையையும் விசுவாசம் வேறொரு ஆலோசனையையும் கூறும்பொழுதும், நாம் அமர்ந்திருந்து, அவ்வாறு இடையிட்டுக் கூறும் யாவரையும் அமர்த்தி, தேவனுடைய சமுகத்தில் அமைதியாய்க் காத்திருக்கவேண்டும். அவருடைய திரு வசனங்களைப் பக்தியோடு வாசித்து, நம்முடைய தன்மையை அவருடைய திருமுகப் பிரகாசத்திற்கு நேராய் ஏறெடுப்போமாக. தேவன் என்ன தீர்மானம் செய்வார் என்பதை மாத்திரமே அறிய ஆவலுள்ளவர்களாயிருப்போமாக. சீக்கிரத்தில் ஒரு திட்டமான எண்ணம் உண்டாகும். அதுவே அவருடைய இரகசிய ஆலோசனையை வெளிப்படுத்துவதாகும்.

கிறிஸ்தவ வாழ்க்கையின் ஆரம்பத்தில், இதை மாத்திரம் சார்ந்திருப்பது சரியல்ல. அதோடு சந்தர்ப்பங்களும் சரியாக இருக்கின்றனவா என்றும் பார்க்கவேண்டும். ஆனால் தேவனோடு அதிகச் சம்பந்தம் உள்ளவர், அவருடைய சித்தம் இன்னதென்பதை ஊர்ஜிதப்படுத்த அவரோடு ஐக்கியப்படுதலின் இரகசியத்தை அறிவர்.

உன் வழியைக் குறித்து உனக்குச் சங்கடம் ஏற்பட்டிருக்கிறதா? உன் சங்கடத்துடன் தேவனண்டை போ. அவருடைய புன்னகையின் ஒளியிலிருந்து, அல்லது அவருடைய மறுப்பாகிய மேகத்திலிருந்து, உன் வழியை அறிந்துகொள்.

நீ தனித்திருக்கவேண்டும். இவ்வுலக ஒளியும் நிழலும் இடைஞ்சல் உண்டுபண்ணக்கூடாது. மனிதரின் ஆலோசனை அங்கே எட்டக்கூடாது. இந்த நிலைமையில் சுற்றியுள்ளதெல்லாம் உடனே ஒரு தீர்மானத்திற்கு வர உன்னை அவசரப்படுத்தினாலும், அமைதியாய் எதிர்பார்த்திருக்க நீ துணிவு கொள்வாயானால் தேவசித்தம் உனக்கு விளங்கும். கடவுளைப்பற்றிப் புது அறிவு பெறுவாய். அவருடைய தன்மையின் ஆழத்தைக் காண்பாய். நீ இவ்வாறு காத்திருத்தலே நலம் என்று காணும் குதூகலமான அனுபவத்தை அறிவாய்.

—டேவிட்

என் ஆத்துமமே! அமைதியாயிரு; ஏனெனில் தேவன் அவ்வாறு கட்டளையிடுகிறார். உன்னுடைய வழி அடைக்கப்பட்டிருக்கும் பொழுதும் அதை அவருடைய கைகளில் விட்டுவிடு. அவருடைய கை அலைகளை அகற்றத்தக்க வல்லமையுள்ளது. என் ஆத்துமமே, நீ அமைதியாயிரு, நீ அமைதியாயிருந்தால், கடவுள் எப்படி ஆகாத

தையும் ஆகச் செய்வார் என்பதை அறிவாய். அவர் பெரிய இரட்சிப்பினுல் உன்னைக் காப்பார்.

நீ அவசரப்படாமல் அமைதியாயிரு. எல்லாத் திசைகளிலும் நீ அடைபட்டிருக்கும்போதும் நீ அமைதியாகவே இரு. நீ அவ்வாறு இராவிட்டால் உன் பாதையைத் தெளிவாக்கக் கடவுளால் முடியாது. நீ அமைதியுறும்பொழுதே அவர் தமது மேன்மையான சித்தத்தின்படி உன்னை நடத்தி, உனது இதயத்தையும் உள்ளத்தையும் தன் பக்கமாகத் திருப்புவார். என் ஆத்துமமே அமைதியாயிரு. அப்பொழுதுதான் தேவன் தன்னை உனக்குத் தருவார். உன்மூலமாக வேலை செய்து உன்னைச் சுற்றியுள்ள மற்றையோரையும் ஆதாயப்படுத்துவார். உன்மூலமாகத் தன் போதனைகளைத் தெரிவித்து உன் பலவீனத்தில் தம் பலத்தை விளங்கச் செய்வார்.

அமைதியாயிரு. அவ்வாறிருந்தால் விசுவாசத்தில் முன்னேறலாம். அமைதியாயிருந்து இதை அறிந்துகொள். அழகிய மேலுலகிற்கு உன்னை நடத்திச் செல்லப் பிதாவே வழியை அறிவார். அவ்வுலகில் வசந்த காலமும் அமைதியான நீரருவிகளும் உண்டு. அங்கே தாகமுள்ளவர்கள் திருப்தியடைவார்கள். தங்கள் தேவனையறிந்து அவர் செய்த எல்லாவற்றிற்கும் துதி செலுத்துவார்கள்.

## ஜூன் 21

'அவர் வீட்டிலிருக்கிறார் என்று ஜனங்கள் கேள்விப்பட்டார்கள்' (மா. 2:1).

தண்ணீரின் அடியில் பவளப் பாறைகளைக் கட்டும் கடல் பூச்சிகள் தாங்கள் ஒரு புதுத் தீவிற்கு அஸ்திபாரம் போடுகின்றன என்பதையும், நாள் செல்லச் செல்ல அதில் தாவரங்களும் மிருகங்களும் வசிக்கும் என்பதையும் தேவனுடைய பிள்ளைகள் அங்கே பிறந்து கிறிஸ்துவுக்கு உடன் பங்காளிகளாக நித்திய மகிமைக்கு ஏற்றவர்களாக அங்கே வளருவார்கள் என்பதையும் கனவிலும் நினையாது கட்டிக்கொண்டே போகின்றன.

அருமையான பிள்ளையே! தேவனுடைய அமைப்பில் உன்னுடைய இடம் தனிமையானதாகவும், மறைவானதாகவுமிருந்தால் முறுமுறுக்காதே. குறை கூறுதே. அவர் உன்னை அவ்விடத்தில் வைத்திருந்தால், கர்த்தருடைய சித்தத்திற்கு மாறுகப்போகத் தேடாதே. கடல் பூச்சிகள் இல்லாவிட்டால் கடல் பாறைகள் ஒருபோதும் கட்டப்படமாட்டாதே. மனிதர் பார்வையில் படாமல் பரிசுத்த ஆவியால் திடப்படுத்தப்பட்டு, மோட்ச மகிமையைப் பார்த்துக்கொண்டு வேலை செய்யக்கூடிய ஆவிக்குரிய கடல் பூச்சிகளும் தேவனுக்குத் தேவை.

இயேசு பலனளிக்கும் ஒருநாள் வரும். மனிதர் உன்னைப்பற்றிக் கேள்விப்படாததால், உனக்கு இத்தனை வெகுமானம் கிடைத்த தற்கு எப்படித் தகுதி என்று வியப்படைவார்கள். இயேசு பிழை செய்யார்.

நீ போராடி நிற்கும் இடமே, உன் இடம்
எங்கு உன்னால் பயனில்லை என்று எண்ணுகிறாயோ,
அங்கு உன் முகத்தை மறையாதே
அவருடைய நோக்கம் எதுவானாலும்,
ஓர் நோக்கத்தோடுதான் உன்னை அங்கு வைத்துள்ளார்.
அவர் அதற்கென்றே உன்னைத் தெரிந்தெடுத்தார் என்றெண்ணி ஊக்கமாய் வேலைசெய்
உன் கவசத்தை அணிந்துகொள்
உழைப்பிலும் ஓய்விலும் உண்மையாயிரு.
தேவனுடைய வழியே உத்தம வழி என்பதைச் சந்தேகியாதே
போரிடும் இடத்திலும், காவல் புரிகையிலும்
உறுதியாய் உண்மையாய் நில்.
இதுவே உன் எஜமான் உனக்குத்தரும் திருப்பணியாகும்.

கூட்டமான சபையிலிருந்தும், ஆவியைப்பெறும் மலையுச்சியிலிருந்தும், மனிதருடைய ஐக்கியத்திலிருந்தும், பத்திரமாய் விலகி பழைய இடமாகிய எம்மாவுக்கு அல்லது புதிய இடமான மக்கதோனியாவுக்குச் சுவிசேடத்தைக் கொண்டுபோகலாம். அப்பொழுதும் அவர் நம்மை வைத்த இடத்தில் நம்முடைய சாதாரண வாழ்க்கையில் நாம் வெற்றி கொள்ளலாம் என்ற நம்பிக்கைவேண்டும்.

## ஜூன் 22

'அன்பு சகல பாவங்களையும் மூடும்' (நீதி. 10:12). 'அன்பை ஆவலாய் நாடுங்கள்' (1 கொ. 13:7–17).

உங்கள் கஷ்டங்களைத் தேவனுக்கு மாத்திரமே எடுத்துரையுங்கள். சில நாட்களுக்கு முன், ஓர் அருமையான தேவனுடைய பிள்ளையின் சுய அனுபவத்தைப்பற்றி வாசித்தேன். அது என்னை மிகவும் கவர்ச்சித்ததால், இங்கு அதை எடுத்துரைக்கிறேன்.

அந்த அம்மாள் எழுதினதாவது: எனக்குச் செய்யப்பட்ட ஒரு அநியாயத்தைப்பற்றிய எண்ணம் என் மனதில் அலை அலையாய் வந்ததால், ஒரு இரவு முழுவதும் நித்திரையற்றிருந்தேன். சகல பாவங்களையும் மூடும் அன்பு என் இருதயத்தைவிட்டு நீங்கினதுபோல் தோன்றிற்று. நான் அதிக வேதனையோடு 'அன்பு சகல பாவங்களையும் மூடும்' என்ற வாக்கிற்கு ஏற்ப நடக்க வன்மைதாரும் என்று

கடவுளை நோக்கிக் கதறினேன், உடனே பரிசுத்த ஆவியானவர் அநியாயத்தை மறக்கும்படியாக என்னில் கிரியை செய்தார்.

என் மனதில் நான் ஒரு கல்லறை தோண்டினேன். வேண்டுமென்றே மண்ணை வாரி வாரி வெளியே தள்ளி குழியை ஆழமாக்கினேன்.

வெகுவாய் என்னைப் புண்படுத்திய காரியத்தைக் குழியினுள் இறக்கினேன். சீக்கிரமாக மண்ணால் மூடினேன்.

அம்மண் குவியல்மேல் புல்பூண்டுகளைக் கவனமாய்ப் பரப்பினேன்; பின் அவ்விடத்தைவிட்டு வேகமாய்ச் சென்றேன்.

'எனக்கு நல்ல தூக்கம் வந்தது. அபாயகரமான என் மனப்புண், தழும்பில்லாமல் நன்றாய்ச் சொஸ்தமாகிவிட்டது. இப்பொழுது என்ன காரியம் எனக்கு அத்தகைய துன்பத்தைக் கொடுத்தது என்று எனக்கு தெரியாது' என்பதாகும்.

கொடிய புயல் எழுந்து ஓய்ந்த பிறகும் மலைச்சாரலில் அதன் அடையாளம் இருந்தது.

மென்மையான புற்றினிடையே ஒரு பெரிய வெடிப்பு ஏற்பட்டிருந்தது.

ஆனால் அநேக ஆண்டுகள் கழிந்து செல்ல, வனமரங்களின் கீழ் புல்லும் பாசியும் எழுந்து அவ்வெடிப்பை மூடின; கொடிகளும் மலர்களும் நிறைந்து முன்பிருந்ததைவிட அது அழகாயிற்று.

மென்மையான இதயத்துள் ஒரு காரியம் ஏற்பட்டது. அப்பொழுது வாழ்க்கையின் இனிமை முற்றும் ஒழிந்துவிட்டதுபோலவும், அன்பும் கசப்பாக மாறியதுபோலவும் தோன்றிற்று. ஆண்டுகள் மெதுவாக நகர்ந்து சென்றன.

இவ்வாறு ஆண்டுகள் செல்லும்பொழுது ஒருவர் கண்ணுக்கும் தோன்றாமல், ஒரு தேவதூதன் வந்து காரியத்தை ஆற்றும் மருந்தை அதன்மேல் இட்டான். அதனால் ஆறிய இதயத்தில் தூய்மையான அன்பு வளர்ந்து இழந்த சமாதானமும் திரும்ப வந்தது.

## ஜூன் 23

'பேதுரு படகை விட்டிறங்கி, இயேசுவினிடத்திற்குப்போக ஜலத்தின்மேல் நடந்தான். காற்று பலமாயிருக்கக் கண்டு பயந்து அமிழ்ந்துபோகையில், ஆண்டவரே, என்னை இரட்சியும் என்று கூப்பிட்டான்' (மத். 14:29,30).

பேதுருவுக்கு அவனுடைய சந்தேகங்களின் மத்தியில் சிறிது விசுவாசமும் இருந்தது என்று பனியன் கூறுகிறார். ஆகையால் அவன் நடந்தும் கூப்பிட்டும் இயேசுவண்டை வந்தான். ஆனால் இங்கே அவன் பார்வையே அவனுக்குத் தடங்கலாயிருந்தது என்பதைக்

காண்கிறேம். அவன் புறப்பட்டபின் அலைகளைக் குறித்து எண்ணுவது அவனுக்கடுத்ததல்ல. கிறிஸ்து நின்ற இடத்திலிருந்து ஒரு பாதைபோல் அவனிடம் வந்த ஒளியை மாத்திரமே அவன் கவனித்திருக்கவேண்டும். அதற்கப்பால் ஆயிரமாயிரம் எகிப்தியர் வந்தாலும், அதை நோக்கிப் பார்க்கவேண்டுமென அவனுக்குக் கூறப்படவில்லை.

தண்ணீர்களின் மேலே ஆண்டவர் 'வா' என்றழைக்கும்போது, சந்தோஷமாய் வரவேண்டும். அவரையேயன்றி, வேறெதையும் நோக்காதே.

அலைகளை அளப்பதால் நாம் மேற்கொள்ளமாட்டோம். காற்றை விடுவதால் நாம் பலமடையமாட்டோம். அபாயத்தை ஆராய்ந்தால் நாம் அதில் விழ ஏதுவாகும். கஷ்டத்தைப் பார்த்து நின்றால் அவை நமக்கே வரும். பர்வதங்களுக்கு நேராகக் கண்களை ஏறெடுத்து, முன்னேறிச் செல். அதன்றி வேறு வழியில்லை.

உள்ளே இறங்கப் பயப்படுகிறாயா?
விசுவாசம் கரையைவிட்டு நீங்கிச் செல்லும்
அவர் ஒருபோதும் உன்னைக் கைவிடார்
அவரை நம்புவதால் நீ
அவருடைய ஐக்கியத்தை அறிவாய்.

## ஜூன் 24

'என் கரங்களின் கிரியைகளைக் குறித்து எனக்குக் கட்டளையிடுங்கள்' (ஏசா. 45:11).

நம்முடைய ஆண்டவர், 'என் பிதாவே, நான் செய்வேன்' என்று சொன்னபோது இப்படியே பேசினர். யோசுவா 'சூரியனே நீ நில்' என்று தன் ஈட்டியை மறையும் சூரியனுக்கு நேராய் நீட்டி, தன் வெற்றியின் உச்சநிலையில் உரக்கக்கூறின நேரத்தில் இவ்விதமாய்ப் பேசினன்,

எலியா வானத்தை மூன்று வருஷம் ஆறுமாத காலம் அடைத்து அதைத் திரும்ப திறந்தபோது, அந்த வாக்கியத்தை பயன் படுத்தினன் (1 இரா. 17:1).

மரணத் தறுவாயிலிருந்த மெலன்கிதான் என்பவரின் அருகில் லூத்தர் முழந்தாளிட்டு, மரணம் தன் இரையைத் தொடாதபடி கட்டளையிட்டபோது, இந்த வசனத்தை பயன்படுத்தினர்.

இது தேவன் தம்மோடு நம்மை வைத்துக்கொள்ள அழைக்கும் ஆச்சரியமான ஐக்கியம். நானே . . .; என் கரங்கள் வானங்களை விரித்தன; அவைகளின் சர்வ சேனையையும் நான் கட்டளையிட்டேன்

(ஏசா. 45:12) என்பது போன்ற வசனங்களை அடிக்கடி வாசிக்கிறோம். ஆனால் தேவன் நம்மைத் தமக்குக் கட்டளையிடும்படி அழைப்பது நமக்கு அவரோடுள்ள சம்பந்தத்தை மாற்றுகிறது. இந்த சம்பந்தம் எவ்வளவு வியப்பை அளிக்கிறது!

இந்த சம்பந்தத்திற்கும், நாம் சாதாரணமாய் யோசித்து விட்டு விட்டு அவநம்பிக்கையோடு செய்வதும், திரும்பத் திரும்பச் செய்வதால் தோய்ந்து போனதுமான நமது ஜெபத்துக்கும் எத்தனை வித்தியாசம்?

தமது இவ்வுலக வாழ்க்கையில் இயேசு மனிதரைத் தம்மை இவ்வாறு கட்டளையிடும்படியான நிலையில் எத்தனை முறை வைத்தார். எரிகோவுக்கருகில் சென்றபோது, அவர் நின்று அப் பிச்சைக்காரனை நோக்கி, 'நான் உனக்கு என்ன செய்யவேண்டுமென்றிருக்கிறாய்?' என்றார் (மத். 20:29). அது, அவர் அவனைப் பார்த்து, 'நீ எனக்குக் கட்டளையிடலாம்' என்று சொல்வது போலிருந்தது.

அவர் சீரோபேனிக்கியா தேசத்து ஸ்திரீயிடம் தனக்கிஷ்டமானதைப் பெற்றுக்கொள்வதற்கான திறவுகோலைக் கொடுத்ததை நாம் மறக்கமுடியுமா? 'தேவன் தமது அன்புக்குரிய பிள்ளைகளை எவ்வளவு முக்கியமான நிலைமைக்கு உயர்த்துகிறார் என்பதை மனிதன் ஒருவனும் பூரணமாய் அறியக்கூடியவனல்ல.' 'என் ஐசுவரியமெல்லாம் நீ கட்டளையிட்டுப் பெறக்கூடியதாயிருக்கிறது' என்கிறார். 'என் நாமத்தில் நீங்கள் கேட்பதெல்லாம் நான் உங்களுக்குச் செய்வேன்' என்று கூறியுள்ளார். —எப். பி. மயர்

1 'மலையைப் பார்த்து நீ பெயர்ந்துபோய்க் கடலில் விழு'
என்று நீ சொல்லு,
அது நடவாது என்று உன் இதயத்திலே சந்தேகங்
கொள்ளாதே
அது நடக்கும்; நீ அவர் வாக்கைச் சந்தேகியாதே.

2 விலையுயர்ந்த இரத்தத்தால் கொள்ளப்பட்ட
இரட்சிப்பை உன் உரிமையாக்கிக்கொள்
பிதா, குமாரன், சுத்தாவியும் அதை உனக்குச் செய்வார்கள்
ஆண்டவரின் நாமத்தில் மலைக்குக் கட்டளையிடு.

3 தன்னயம், வியாதி, துக்கம், பாவம் யாவும்
தன்பிரிய ஏகசுதன்மேல் தேவன் அந்நாளில் சுமத்தினார்
ஆதலால் நீ விடுதலை பெற்றாய் அது நிறைவேறிற்று என்னும்
வார்த்தைகளை நம்பு
ஆண்டவரின் நாமத்தில் மலைகளுக்குக் கட்டளையிடு.

4 வலிய சுவரைச்சுற்றி மௌன ஜெபத்துடன் வா
அக்கோட்டை மதில் விழும் முன்னர், ஜெயதொனி
துதியுடன் முழங்கச்செய்
அது நடக்கும்; அவர் வாக்கை நம்பு
ஆண்டவரின் நாமத்தில் மலைகளுக்குக் கட்டளையிடு.

5 விசுவாசிகளான ஜெயவீரர் ஒவ்வொரு போர்க்களத்தையும் கடக்க
வெண்கலத்தாலாகிய இரட்டை கதவுகளும்
இருப்புத் தாழ்ப்பாள்களும் திறக்கும்
உன் சத்துருவைச் சட்டை செய்யாமல் போவாய்
ஆண்டவரின் நாமத்தில் மலைக்குக் கட்டளையிடு.

6 ஆலோசனைகளை அகற்றி அவற்றிற்கு மேலாக
அற்புதம் செய்யும் கோலை எடுத்துக்கொள்,
யாதொரு சந்தேகமும் மற்ற தேவனுடைய விசுவாசத்தைக் கொண்டு
அவர் வார்த்தையை நம்பு; அது நடக்கும்
ஆண்டவரின் நாமத்தில் மலைக்குக் கட்டளையிடு.

## ஜூன் 25

'புறப்பட்டுப்போங்கள் என்று இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லு' (யாத். 14:15).

தேவனுடைய பிள்ளையே! அந்த வெற்றிகரமான யாத்திரையை மனக்கண்களால் பார். குதூகலம் நிறைந்த பிள்ளைகள் ஆச்சரியத்தைக் கண்டு ஒருவித சப்தமும் செய்யாதபடி தங்கள் பெற்றோரால் அமர்த்தப்பட்டார்கள். சாவைவிடக் கேடான நிலைமையிலிருந்து எதிர்பாராதவிதமாய் தாங்கள் காப்பாற்றப் பட்டதைக் கண்ட பெண்கள் அடங்கா ஆனந்தம் கொண்டார்கள். அப்பொழுது ஆடவர் தாங்கள் கடவுள்மேல் அவநம்பிக்கைகொண்டு மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்ததை எண்ணி வெட்கி அவர்களைப் பின் தொடர்ந்தனர்.

ஒரு மனிதன் விசுவாசத்தால் நித்திய தேவனின் கரம் நீட்டப் பட்டு ஜலம் குவியலாய் நிற்பதைக் காணுங்கால், தேவன் தமக்குச் சொந்தமானவர்களுக்காக எவ்வளவு அற்புதமானவற்றைச் செய்வார் என்பதை அறிந்து கொள்ளலாம். அவருடைய கட்டளைக்கு உடனே கீழ்ப்படிவதால் ஏற்படும் பலாபலனைக் குறித்து நீ பயப் படாதே. கோபங்கொண்ட ஜலப் பிரளயம் தன் ஆரவாரத்தில், நீ முன்னேறுவதைத் தடுத்தால் பயப்படாதே. அநேகத் தண்ணீர்களின் ஆரவாரத்தின்மீதும், சமுத்திர அலைகளின்மீதும், 'ஆண்டவர் சதா இராஜாவாக வீற்றிருக்கிறார்.'

புயலானது அவர் வஸ்திரத்தின் தொங்கலே. அது அவர் வருகையின் அடையாளமும், அவருடைய சந்நிதானத்தின் சூழ்நிலையாகும்.

அவரை தைரியமாய் நம்பு. அவரைத் தைரியமாய்ப் பின்பற்று. உன்னை முன்னேறவிடாமல் தடைபண்ணி உனது வாழ்விற்கு ஆபத்து

விளைவிப்பனவாய்த் தோன்றிய காரியங்களே, அவர் கட்டளையின் பேரில் உன் சுயாதீனத்தின் பாதையை நிரூபிக்கும் காரியங்களாகும்.

—எப். பி. மயர்

1 நீ உன் வாழ்க்கையில் செங்கடலண்டை வந்திருக்கிருயா?
நீ எத்தனையாய் முயற்சித்தாலும்,
விலக முடியாமல், திரும்ப இயலாமல்,
அதைக் கடந்துதான் செல்லவேண்டும் என்ற நிலை
ஏற்பட்டுள்ளதா?

உன் பயமாகிய இருள் நீங்கும் வரை,
அமைதியான நம்பிக்கையோடு காத்திரு,
அவர் காற்றை அனுப்பி ஜலத்தைக் குவித்து,
உன் ஆத்துமாவை நோக்கி, 'நீ முன்னேறிச் செல்' என்பார்.

2 தண்ணீர் மறுபடி மூடிக்கொள்ளுமுன்
அவருடைய கரம் உன்னை நெருங்க முடியாது,
ஒரு அலையும் உன்னை தொடாது,
ஒரு கடலும் உன்னை அமிழ்த்தாது,
எப்போதும் அலைதாழ்ந்தும் உயர்ந்தும் ஆடலாம்,
அதன் நுரை உன் காலண்டை வரலாம்,
ஆனுல் உலர்ந்த தரையின் வழியாய் உன் ஆண்டவர்
காட்டும் வழியில் நடப்பாய்.

3 காலை ஜெபத்தில் விலகிப்போன மேகத்தின்கீழ்
உன் ஆண்டவரை மட்டுமே காண்பாய்,
கடலிலிருந்து நீ அறியாத இடத்திற்கு அவர் உன்னை
நடத்திச் செல்கையில்,
உன் சத்துருக்கள் விலகிப் போனதுபோல் உன் பயங்களும்
நீங்கும்,

இனிமேல் நீ பயப்படமாட்டாய்,
அவர் கரம் உருவாகி மற்ஞெரு மேலான இடத்தில் நீ துதி
பாடுவாய்.

—ஆனி ஜான்ஸன் பிளின்ட்

## ஜூன் 26

*'சிலர் விசுவாசியாமற் போனுலுமென்ன? அவர்களுடைய அவிசுவாசம் தேவனுடைய உண்மையை அவமாக்குமோ?' (ரோ. 3:3).*

என் அற்பமான வாழ்க்கையில் ஒவ்வொரு சிறு துக்கமும் என் அவநம்பிக்கையால் மாத்திரமே வந்தது என்று நான் நினைக்கிறேன். என் கடந்த காலப் பாவங்களெல்லாம் மன்னிக்கப்பட்டன. தற்காலத்திற்கேற்ற பலன் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. வருங் காலத்தைப் பற்றியும் நான் நம்பிக்கையோடிருக்கலாம். ஏனெனில்

கன்மலையாகிய தேவனைச் சார்ந்திருக்கும் உண்மைகள் எனது எண்ணங்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் ஏற்ப மாறுவதில்லை. அவ நம்பிக்கையினால் நான் தளர்ச்சியடையும்போதும் அவை தளர்வ தில்லை; என்றும் மாறாமல் நிலைத்திருக்கின்றன. இவற்றையெல்லாம் நான் எப்போதும் விசுவாசித்தால் மகிழ்ச்சியடையாமல் இருக்க முடியுமா? மலை ஏறுபவனுக்குத் தலைசுற்ற ஆரம்பித்தால், மலையே ஒரு வெறும் தோற்றமாக அல்லது மாறிவிடும் பனியாக ஆகிவிடுமா?

—ஜேம்ஸ் ஸ்மித்

தேவனுடைய வாக்குத்தத்தத்தைக் கண்டு நம்முடைய அவிசு வாசத்தால் பின்வாங்கினால், அது நமக்குக் கிட்டாமல்போவது ஆச்சரியமல்ல. விசுவாசம் பலனைப் பெற்றுக்கொள்வதற்கு உரிமை யுள்ளது என்பதல்ல. அது அதனைச் சம்பாதிக்கக்கூடியதுமல்ல. ஆனால் தேவன் நம்பிக்கையைத் தமது ஈவைப் பெறுவதற்கு ஒரு நிபந்தனை ஆக்கியிருக்கிறார். கொடுப்பவர் தம்முடைய ஈவுகளுக்கு, அவருக்கு இஷ்டமான நிபந்தனைகளை ஏற்படுத்த உரிமை உடையவரே.

அவநம்பிக்கை இது எப்படி நடக்கும் என்று சொல்லுகிறது. விசு வாசம் 'எப்படி' என்ற பத்தாயிரம் வினாக்களுக்கும் 'தேவன்' என்ற ஒரே பதிலையேயளிக்கிறது.

ஜெபிக்கும் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் செலவின்றி ஜெபத் தால் அநேக காரியங்களைச் செய்யக்கூடியவர்களாயிருக்கிறார்கள். வேறு எந்த முறையிலும் அவ்வளவு குறைந்த நேரச் செலவில் அவ்வளவு ஏராளமான காரியங்களைச் செய்யமுடியாது.

பூரண விசுவாசமும், நம்பிக்கையுமுடைய ஒரு மனிதனால் உலக சரித்திரமே மாறும். இந்த வார்த்தைகள் இயேசுநாதரிடம் ஜெபத் தின் மூலமாகவும், போதனையின்படியும் பார்த்தால் அவருடைய எண்ணத்திற்கேற்றவையே.

கடவுளுடைய சித்தம் நடத்துதலுக்கு அடங்கி நடப்பதால் நீ அந்த மனிதனாயிருப்பாயா?

விசுவாசம் அற்ற ஜெபம் சாரமற்றது. நாலாந்தர வேலையாகவும், ஜீவனற்ற மாய்மாலமாகவும் சீணித்துப் போகிறது. விசுவாசத் தோடுகூடிய ஜெபம் சர்வ வல்லமையுள்ள கடவுளைத் தன் விண்ணப் பத்திற்கு ஆதாரமாகக்கொள்கிறது. உன் விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்பட்டு பதில் கிடைக்கும் என்கிற நம்பிக்கை உண்டாகும் வரை ஜெபியாதிருப்பதே நலம். உண்மையான ஜெபம் ஏறெடுக்கப் படுகையில் வானமும்—பூமியும், இறந்த காலமும்—வருங்காலமும் 'ஆமென்' என்று சொல்லும். கிறிஸ்து அவ்வித ஜெபங்களைச் செய்தார்.

தேவசித்தத்திற்கு ஏற்காதது தவிர ஜெபத்தால் கிட்டாதது வேறு ஒன்றுமில்லை.

## ஜூன் 27

'உன் தேவன் உனக்குப் பலத்தைக் கட்டளையிட்டார்' (சங். 68:28).

நமது வாழ்க்கையின் சகல காரியங்களையும் ஊக்கமாகவும், திட்டமாகவும் செய்ய மூலகாரணமான குணத்தை நமக்கு ஆண்டவர் கொடுக்கிறார். 'உள்ளான மனிதனில் ஆவியின் பலத்தால் நாம் பலப்படுத்தப்படுகிறோம்.' அந்த பலம் கிடைத்துக்கொண்டே இருக்கும். நாம் செலவழித்து முடித்துவிட முடியாத அவ்வளவு மூலபலம் நமக்கு வந்துகொண்டேயிருக்கிறது.

'உன் நாட்களுக்குத் தக்கதாய் உன் பலமும் இருக்கும்.' திடசித்தம், உறுதியான அன்பு, நல்நிதானம், திட்டமான எண்ணங்கள், காரியங்கள் இவையனைத்தும் உண்டாகும்.

நான் முன்னேறிச் செல்ல 'ஆண்டவரே என் பலம்;' ஒரே மாதிரியான சமபாதையில் நடக்க எனக்குப் பலம் அளிக்கிறார். ஒரு புறமும் திரும்பாது முடிவில்லாமல் செல்லும் ஒடுக்கமான சந்தில் நடக்கத் திடனளிக்கிறார். வாழ்க்கையின் நீண்ட பிரயாணத்தில் ஒரு ஆனந்தமுமின்றியிருக்கும்; அந்த மாறுதலற்ற தன்மை, ஆவியைச் சோர்ந்துபோகச் செய்வதாயிருந்தாலும் அதைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு செல்லப் பலமளிக்கிறார்.

நான் மேல்நோக்கிச் செல்வதற்கு 'ஆண்டவரே என் பலமாயிருக்கிறார்.' துன்பமாகிய மலையைப் பயமின்றி ஏறுவதற்கு என் பலமாயிருப்பவர் அவரே.

நான் கீழேயிறங்க 'ஆண்டவரே என் பலமாயிருக்கிறார்.' சூரிய வெளிச்சமும், ரம்மியமான காற்றும் நிறைந்த மலையுச்சியை விட்டு, வறண்ட உஷ்ணம் உள்ள மலையடிவாரத்தை அணுகுங்கால் இதயம் தளர்ந்துபோகும். அச்சமயத்தில் அவர் பலனளிக்கிறார்.

ஒரு மனிதன் தன் உடல் பலம்குன்றி வருவதைக் குறித்து, 'கீழே இறங்கி வருவதே எனக்கு ஆயாசத்தை உண்டுபண்ணுகிறது' என்று சொல்லக் கேட்டேன்.

நான் அமர்ந்து உட்கார்ந்திருக்க, 'ஆண்டவரே என் பலமாயிருக்கிறார்.' இதைச் சாதிப்பது எத்தனை அரிதான காரியம்! நாம் ஒன்றும் செய்யாது அமர்ந்திருக்கவேண்டிய சமயம், நாம் ஒருவரையொருவர் பார்த்து, 'ஏதாவது வேலை செய்தால் நன்றாயிருக்கும்' என்று சொல்லிக்கொள்வதில்லையா?

பிள்ளை, நோயால் வருந்துகையில், அன்னை ஒன்றும் செய்யாமல் அருகில் அமர்ந்திருக்க வேண்டியிருந்தால் அது அவளுக்கு எத்தனை பெரிய சோதனை. ஒன்றுமே செய்யாமல் அமர்ந்து காத்திருப்பதற்கு வெகுதிடன் வேண்டும். 'ஆண்டவரே என் பலமாயிருக்கிறார்', 'என் நிறைவு தேவனால் உண்டாயிருக்கிறது.'

## ஜூன் 28

'பரலோகத்தில் ஒரு வாசல் திறக்கப்பட்டிருந்தது' (வெளி. 4:1).

பத்மு தீவாகிய ஏகாந்தமான பாறை நிறைந்த கடினமான சிறையில் தேவனுடைய வார்த்தைக்காகவும், கிறிஸ்துவுக்குச் சாட்சியாகவும், யோவான் அப்போஸ்தலன் காவலிலிருந்தான் என்பதை நினைத்துக்கொள்ளுங்கள். எபேசுவிலிருந்த தனக்கன்பான யாவரையும் விட்டு பிரிந்திருக்கும் ஆலயம் சென்று தொழக்கூடாதவனுயிருக்கும் அக்காலத்தில், தன்னுடனிருந்த கைதிகளின் வெறுப்பான தோழமையின் மத்தியிலிருக்கையில்தான் அவனுக்கு மேலான காட்சிகள் கிடைத்தன. அவனுக்கும் ஒரு வாசல் திறக்கப்பட்டிருந்தது.

தன் தகப்பன் வீட்டிலிருந்து யாக்கோபு துரத்தப்பட்டு, வனுந்தரமான இடத்தில் படுத்திருந்தபொழுது, அவன் கனவில் வானத்தையும், பூமியையும் இணைத்த ஏணியைக் கண்டான். அதன் உச்சியில் தேவன் நின்ருர். இவர்களுக்கு மட்டுமல்ல, லௌகீகக் காரியங்களைப் பொறுத்தமட்டில் எவ்வித வெளிப்படுத்துதலுக்கும் ஏற்காத நிலையிலுள்ள, இன்னும் அநேகருக்கும் பரலோகம் இவ்விதமாய்த் திறக்கப்பட்டிருக்கிறது.

கைதிகளுக்கும், சிறைப்பட்டிருப்போருக்கும் வேதனை என்னும் இரும்புச் சங்கிலியால் வியாதிப் படுக்கையோடு கஷ்டப்பட்டுச் சதா பாடனுபவிப்பவர்களுக்கும், ஏகாந்தமாய் அலைந்துதிரிபவர்களுக்கும், யாத்ரீகர்களுக்கும், வீட்டுவேலையால் தேவாலயத்திற்குச் செல்ல இயலாதிருக்கும் பெண்களுக்கும் அடிக்கடி பரலோக வாசல் திறக்கப்பட்டிருக்கிறது.

ஆனுல் அதற்கு நிபந்தனைகள் உண்டு. ஆவிக்குள்ளாவதென்ருல் என்ன என்று நீ அறியவேண்டும். நீ இருதய சுத்தனுகவும், விசுவாசித்துக் கீழ்ப்படிகிறவனுகவும் இருக்கவேண்டும். நீ கிறிஸ்துவைப் பற்றி அறிகிற அறிவின் மேன்மைக்காக, எல்லாவற்றையும் நஷ்டமென்றெண்ண மனமுடையவனுயிருக்கவேண்டும். தேவன் நமக்கு எல்லாவற்றிற்கும் எல்லாமுமாயிருக்கும்போது, அவருடைய பிரசன்னத்தினுலேயே நாம் அசைவதும், ஜீவனேடிருப்பதுமாயிருக்கும்போது நமக்கும் கதவு திறக்கப்படும்.

தேவன் தமது மலைகளை வெறுமையாக ஆக்கியுள்ளார். அங்கு நம்மைத் தாங்கி இளைப்பாறும்படி சொல்லுகிருர். அங்கு நாம் சுத்தமான காற்றைச் சுவாசிக்கக்கூடிய பாறைகளும், உதயத்தின் முதற்கதிர்கள் படியத்தக்க சிகரங்களும் உள்ளன.

தேவன் தமது பாலைவனங்களை அகன்ற காய்ந்த இடங்களாக ஆக்கியுள்ளார். அவை தனிமையானவை. மணற் கடல்போன்றவை. அங்குப் பரலோகத்தை மறைக்குந் திரைகளைத் தமது சர்வவல்லமையுள்ள கரங்களால் பிரித்து நீக்கிவிடுகிருர்.

## ஜூன் 29

*'அங்கே நாங்கள் இராட்சதரைக் கண்டோம்' (எண். 13:33).*

ஆம்! அவர்கள் இராட்சதரைக் கண்டார்கள். ஆனால் காலேபும், யோசுவாவும் தேவனைக் கண்டார்கள்! 'நாம் மேலே செல்ல முடியாது' என்று அவநம்பிக்கையுள்ளவர்கள் சொல்லுகிறார்கள். நம்பிக்கையுடையவர்கள் நம்மால் கூடும்; நாம் உடனே சென்று அதைச் சுதந்தரித்துக்கொள்வோம் என்று சொல்லுகிறார்கள். பெரிய கஷ்டங்களே இராட்சதர்கள். இராட்சதர்கள் எங்கும் உலாவித் திரிகிறார்கள். நம் குடும்பங்களிலும், நம் சபையிலும், நம் சமூக வாழ்விலும், நம் இருதயங்களிலும் இராட்சதர்கள் உண்டு. அவர்களை நாம் மேற்கொள்ளாவிட்டால், கானான் தேசத்து இராட்சதர்களைக் குறித்து இந்த மனிதர் கூறியதுபோல் அவர்கள் நம்மைக் கொன்று தின்றுவிடுவார்கள்.

விசுவாசித்த மனிதர் 'அவர்கள் நமக்கு அப்பமாவார்கள்; அவர்களை நாம் கொன்றுபோடுவோம்' என்றார்கள். இராட்சதர்கள் இல்லாவிடில் நமக்கு இருந்திருக்கும் பலனைவிட, அவர்களை நாம் மேற்கொள்வதால் இன்னும் அதிகப் பலம்கொள்ளலாம்.

காரியம் என்னவென்றால், அவர்களை மேற்கொள்ளத்தக்கதான விசுவாசம் நமக்கு இல்லாவிட்டால், நம்முடைய வழியில் காணும் கஷ்டங்களாகிய இராட்சதர்களால் நாம் தின்னப்பட்டு அழிந்து போவோம். அந்த விசுவாசிகளைப்போல், விசுவாசத்தின் ஆவியை நாம் பெற்று, தேவனை நாம் நோக்கிப் பார்க்கவேண்டும். அவர் நம்முடைய துன்பங்களைக் கவனித்துக் கொள்வார்.

நம்முடைய கடமைகளின் வழியிலே நாம் இராட்சதரைக் காண்கிறோம். இஸ்ரவேலர் முன்னேறிச் செல்லும்போதுதான் இராட்சதர்கள் காணப்பட்டார்கள். அவர்கள் பின்னிட்டுத் திரும்பி வனாந்தரத்தைப் பார்த்தபோது, அங்கே இராட்சதர்கள் காணப்படவில்லை.

மனித வாழ்க்கையில் தேவனுடைய வல்லமை நம்மை எல்லாச் சோதனைகளுக்கும், போராட்டத்திற்கும் விலக்கி கைதாங்கி நடத்த வேண்டும் என்ற எண்ணம் இருந்து வருகிறது. ஆனால் உண்மை என்னவென்றால், தேவனுடைய வல்லமை எப்போதும் ஒரு கஷ்டத்தைப்—போராட்டத்தைக் கொண்டுவரும். பவுல் சுவிசேடகனாக ரோமாபுரி சென்றபோது, கடவுளுடைய வன்மையால் புயல், பெருங்காற்று, சத்துருக்கள் இவைகளின் தொந்தரவின்றிக் கொண்டுபோகப்பட்டிருப்பார் என்று ஒருவன் எண்ணலாம். ஆனால் அதற்கு மாறாகத் தமக்கு ஓயாது துன்பம் கொடுத்த யூதராலும், பெருங்காற்றாலும், விஷப்பாம்பாலும், பூமியிலும், பாதாளத்திலுமுள்ள எல்லாச் சக்திகளாலும் வெகு கஷ்டங்களை அவர் அனுபவித்

தார். இறுதியில் வெகு கஷ்டத்தோடு தண்ணீரில் மூழ்கி மடியாமல் மெலித்தா தீவின் ஒரு கரையை ஒரு உடைந்த துண்டுக்கட்டையின் உதவியால் நீந்தி வந்து சேர்ந்து உயிர் தப்பினர்.

இந்தப் பிரயாணம் அளவிட முடியாத தேவ வல்லமையைக் காட்டுகிறதா? ஆம், இது அவருடைய இயற்கையே. அதனால்தான் பவுல் அப்போஸ்தலன் இயேசுகிறிஸ்துவைத் தம் சரீரத்தின் ஜீவனாகக் கொண்டபோது உடனே ஒரு போராட்டம் வந்தது என்று சொல்லுகிறார். அது முடிவில்லாப் போராட்டமாய் இருந்தது. அது சதா அழுத்திக்கொண்டிருக்கும் பாரமாயிருந்தது. இயேசுகிறிஸ்துவின் பலத்தால், அதனோடு வெற்றிகரமாய்ப் பவுல் வெளியேறினர்.

பவுல் இதை எத்தனை நன்றாய் விஸ்தரிக்கிறார். 'நாங்கள் எப்பக்கத்திலும் நெருக்கப்பட்டும் ஒடுங்கிப் போகிறதில்லை. கலக்கமடைந்தும் மனமடிவாகிறதில்லை. துன்பப்படுத்தப்பட்டும் கைவிடப்படுகிறதில்லை; கீழே தள்ளப்பட்டும் மடிந்துபோகிறதில்லை. கர்த்தராகிய இயேசுவினுடைய ஜீவனை, எங்கள் சரீரத்தில் சுமந்து திரிகிறோம்' (2 கொ. 4:8–10).

இது முடியாத சகிக்கக்கூடாத போராட்டம்! மூல பாஷையிலுள்ளது போல நன்றாக மொழிபெயர்த்து எழுத முடியவில்லை. ஐந்து படங்கள் நம் மனக்கண்முன் ஒன்றன்பின் ஒன்றாக கொண்டு வரப்படுகின்றன. முதல் படத்தில் சத்துருக்கள் கூட்டம் எப்பக்கமும் நெருக்குகிறது. ஆனால் பரலோகக் காவலாளர், அவர் நுழைந்து போகத்தக்க அளவு மாத்திரம் வழிவிட்டதால், நசுக்கப்பட்டுப் போகாதபடி, வெளியேறுகிறார். சரியானபடி 'நாங்கள் எப்பக்கத்திலும் நெருக்கப்பட்டும், நசுங்கிப் போகவில்லை' என்றிருக்கவேண்டும்.

இரண்டாவது படம் ஒருவனுக்கு அவன் வழியெல்லாம் அடைபட்டிருக்கிறது என்றாலும் அவன் முண்டி நுழைந்துகொண்டு கடந்து செல்கிறான். அவன் எடுத்து வைக்கும் அடுத்த அடியைக் காட்டக்கூடிய வெளிச்சம் மாத்திரம் இருக்கிறது. புதிய மொழிபெயர்ப்பில், 'கலங்கி நிற்கிறோம். ஆனால் மனமடிவாகவில்லை' என்றிருக்கிறது. இதை ராதர்ஹாம் என்பவர், 'ஒரு வழியுமில்லை. ஆனால் பக்கப் பாதையில்லாமலில்லை' என்று மொழிபெயர்த்துள்ளார்.

மூன்றாவது படத்தில் சத்துருவால் தொடரப்படுகிறான். ஆனால் அவனைக் காக்கும் தெய்வம் அருகில் நிற்கிறார். அவர் அவனைத் தனியாய் விட்டுவிடவில்லை. ராதர்ஹாம் மொழிபெயர்ப்பின்படி, 'துரத்தப்பட்டும் கைவிடப்படவில்லை' என்று மொழிபெயர்க்கலாம்.

இன்னும் படம் விரிந்துகொண்டே போகிறது. அது மரணமாகவே தோன்றுகிறது. 'இயேசுவின் மரணத்தை எப்போதும் சரீரத்தில் சுமந்து திரிகிறோம்.' ஆனால் அவன் மரணமடையவில்லை. 'இயேசுவினுடைய ஜீவனும் இப்போது உதவிக்கு வருகிறது. தன்னுடைய

வாழ்க்கையின் வேலேமுடியும் பரியந்தம் மற்றொருவருடைய ஜீவனில் உயிரோடிருக்கிறான்.'

ஜெபத்தில் தரித்திருந்து சுகம் பெறுவதில் அநேகர் தவறுகிறார்கள் ஏனென்றால் ஒரு கஷ்டமுமின்றி பெற்றுக்கொள்ளலாம் என்று எண்ணுகிறார்கள். போராட்டம் ஏற்பட்டு வெகுநாள் நீடிக்கும் போது, அவர்கள் மனம் அதைரியம் அடைந்து சரணாகதியடைகிறார்கள். தேவனிடமிருந்து அருமையான பொருள் ஒன்றையும் எளிதில் பெறமுடியாது. பரலோகக் கடையில் விலே குறைவான சரக்கு இல்லே. நம்முடைய இரட்சிப்புக்காகத் தேவன் தம்மிடமுள்ளதை எல்லாம் கொடுக்கவேண்டியதாயிற்று. அருமையான பொருள் எதற்கும் விலே அதிகமாகவே இருக்கும். கஷ்டமான நிலேமையே குணமும், விசுவாசமும் கற்பிக்கப்படும் இடம். நம்முடைய மனுஷீகப் பலத்துக்கு மிஞ்சி எழும்பி அழிந்துபோகிற இந்தச் சடலத்தில் தெய்வீக வன்மையைக் காட்டவேண்டுமானால், நம்முள் புதுஜீவன் பிறப்பதற்காக பிரசவ வேதனேபோன்ற போராட்டத்தின்மூலம் நிரூபித்துக்காட்டவேண்டும். முட்செடியில் தீ எரிந்து செடி எரிந்தும்போகாதிருக்கிறது. மோட்ச பிரயாணத்தில் சொல்லப்பட்ட ஒரு காட்சியில் வியாக்கியானியின் வீட்டில் தீ எரிகிறது. சாத்தான் தண்ணீர் ஊற்றிக்கொண்டிருந்தும் அது அவியவில்லே. ஏனென்றால் பின்னால் ஒரு தூதன் நின்று சதா எண்ணெய் ஊற்றிக்கொண்டு தீயை வளர்த்துக்கொண்டிருந்தான். வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெறுவதும் இவற்றைப் போன்றதே.

கஷ்டம் அனுபவிக்கும் தேவனுடைய பிள்ளேயே! நீ துணிந்து விசுவாசித்து உறுதியாய் நின்றால் ஒருபோதும் தோல்வியடைய மாட்டாய்.

## ஜூன் 30

'அமைதலுண்டாயிற்று, நான் ஒரு சின்ன சத்தம் கேட்டேன்' (யோபு 4:16).

பல ஆண்டுகளுக்கு முன் ஒரு சிநேகிதி, 'மெய்ச் சமாதானம்' என்ற தலேயங்கமுள்ள ஒரு புத்தகத்தை என் கையில் கொடுத்தாள். அது ஒரு பழைய காலச் செய்தியாயிருந்தது. அதில் ஒரு காரியமே வற்புறுத்தப்பட்டிருந்தது. அதாவது, 'என்னுள்ளத்தின் ஆழத்தில் தேவன் என்னோடு பேசக் காத்திருக்கிறார்; நான் அவர் சத்தம் என் காதில் தொனிக்கத்தக்கதாய் அமர்ந்திருந்தால் அவர் என்னோடு பேசுவார்' என்பதே.

அது வெகு எளிது என்று நான் எண்ணி அமர்ந்திருக்க முயன்றேன். அமர்ந்திருக்க ஆரம்பித்தவுடன் பற்பலவகையான சத்தங்கள் என் காதில் தொனித்தன. ஆயிரம் முழக்கங்கள் உள்ளிருந்தும் வெளியிருந்தும் உண்டானதால், அந்த இரைச்சலில் என்னால் வேறொன்றும் கேட்க முடியவில்லே.

அந்தச் சப்தங்களில் சில என் கேள்விகளும், என் விண்ணப்பங்களுமே. மற்ற சப்தங்கள், சாத்தான் கொடுக்கும் எண்ணங்களும் உலகக் குழப்பமுமே.

எல்லாப் பக்கங்களிலிருந்தும் சப்தங்கள் என்னை அலைக்கழித்துக் குழப்பத்தை உண்டாக்கின. அவைகளில் சிலவற்றை கவனித்து விடையளிக்கவேண்டியது அவசியம்போல் தோன்றினது. ஆனால் தேவன் 'அமர்ந்திருந்து நானே தேவன் என்று அறிந்துகொள்' என்றார். மறுநாளைய தினத்தைக் குறித்து அதில் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் கவலைகள் என்ற போராட்டம் என் உள்ளத்தில் ஏற்பட்டது. ஆனால் தேவன் 'அமர்ந்திரு' என்றார்.

நான் அதற்குச் செவி கொடுத்து மற்றெல்லாச் சத்தங்களுக்கும் என் காதை அடைத்து மெதுவாய் அதற்குக் கீழ்ப்படிந்தபோது, கொஞ்சநேரத்தில் மற்ற சப்தங்கள் ஓய்ந்தன. அல்லது நான் அவைகளுக்குச் செவிசாய்க்காதிருந்து விட்டேன். அப்போது என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஒரு சிறு சப்தம் உண்டாயிற்று. அது என்னுடன் சொல்ல முடியாத அனுதாபத்தோடும் வல்லமையோடும் ஆறுதலோடும் பேசினது.

நான் கவனிக்கையில் அதுவே ஜெப சத்தமாயிற்று; என் ஞான சத்தமாயிற்று; என் கடமையின் சத்தமாயிற்று. நான் ஆழ்ந்து யோசிக்கவேண்டியதில்லை. கஷ்டப்பட்டு ஜெபிக்க வேண்டியதில்லை. கஷ்டப்பட்டு நம்பவேண்டியதில்லை. ஆனால் பரிசுத்தாவியின் அமர்ந்த சப்தம் என் உள்ளத்தில் தேவனுடைய ஜெபமாயிற்று. அதுவே என் கேள்விகளுக்கெல்லாம் தேவனுடைய பதிலாயிற்று. உடலுக்கும், ஆத்துமத்திற்கும், ஜீவனுக்கும் பலத்தையூட்டிற்று. என் அறிவின் சாராம்சமானது, எல்லா ஜெபமும் எல்லா ஆசீர்வாதமும் அதுவாயிருந்தது. ஏனென்றால் ஜீவனுள்ள தேவன்தாமே என் வாழ்வும் என் எல்லாமுமாக ஆகிவிட்டார்.

இவ்வாறுதான் நம்முடைய ஆவி உயிர்த்தெழுந்த ஆண்டவரின் உயிரைப் பருகுகிறது. இரவின் நிழலில், குளிர்ந்த பளிங்குபோன்ற பனித்துளிகளைப் பருகி நிற்கும் ஒரு மலரைப்போல் நாம் வாழ்க்கையின் கடமையை நிறைவேற்ற, போரை நடத்த முன்னேறிச் செல்லுகிறோம். புயலான இரவில் பனி பெய்யாததுபோல் அமைதலற்ற ஆத்துமாவில் அவர் கிருபையின் பனி விழாது. —எ. பி. சிம்ஸன்

## ஜூலை 1

'சொல்லப்பட்டவைகள் நிறைவேறும்' (லூ. 1:45). 'தகுந்த காலத்திலே என் வார்த்தைகள் நிறைவேறும்' (லூ. 1:20).

1 நேசிக்கும் இருதயங்கள் காணும்படி பலநாள் காத்திருந்த
காரியம் நிறைவேறும்,
அவளுடைய தேவன் உண்மையாய் வாக்களித்திருப்பதால்,
அவள் நம்பியிருக்கும் காரியம் நிறைவேறும்,

அவரை அறிந்திருப்பதால், அவர் வார்த்தைகளை அவள்
சந்தேகியாள்,
'வல்ல தேவன் பேசுகிறார்; அது ஆகும்.

2 பாரமுள்ள ஆத்துமாவே, அவர் பாதத்தில் அமர்ந்திரு. அவை
நிறைவேறும்
அவர் செட்டையின் நிழலின் கீழ் அமைதியாய்,
நீ ஆவலுடன் கேட்ட காரியத்திற்குப் பதில்வரக் காத்திரு.
உன் கவலைகளை அவர்மேல் போட்டபின் உன் இதயம் பாடும்,
அந்தக் காரியம் நிறைவேறும்.

3 இளைத்த ஆத்துமாவே, நம்பி ஜெபத்தில் காத்திரு; அவை
நிறைவேறும்.
நாள் முழுவதும் மேகம் மந்தமாயிருந்தாலும்,
புயல், மேகம், மழையால் நாள் கெட்டாலும்,
சாயங்கால ஜெபம் சமாதானமாய் நிறைவேறும்.
இரவில் மறைக்கும் மேகம் போன்ற சந்தேகத்தை,
விசுவாசம் விலக்கி விண்மீன்களைக் காணச் செய்யும்.

4 நம்பும் இதயமே, ஆண்டவர் சொன்ன பிரகாரம் அவை
நிறைவேறும்
உன் விசுவாசமும் நம்பிக்கையும் செட்டை விரித்து
சூரியோதயப் பொன் மேகங்களுக்கு நேராய்ப் பறக்கட்டும்,
புலரொளியின் வாசல் திறக்கின்றது.
இரவு மறைந்திருந்த களிப்பை காணலாம.

'வாக்குத்தத்தம் நிறைவேறும் வழிகளெல்லாம் அடைப்பட்டிருக்கும்போதும், வாக்குத்தத்தம் நிறைவேறும் என்று நம்பவேண்டும்' என்று மத்தேயு ஹென்றி என்பவர் கூறுகிறார்.

எங்களால் தேவனுக்கு மகிமையுண்டாகும்படி, தேவனுடைய வாக்குத்தத்தங்கள் எல்லாம் இயேசுகிறிஸ்துவுக்குள் ஆம் என்றும், அவருக்குள் ஆமென் என்றும் இருக்கிறது' (2 கொ. 1:20).

## ஜூலை 2

'நீ போகையில் உன் வழி உனக்குப் படிப்படியாய்த் திறக்கப்படும்' (நீதி. 4:12). (வேறு மொழிபெயர்ப்பு).

விசுவாசம் நிறைந்த பிரயாணியின் காலடியில் மட்டுமே தேவன் விசுவாசமாகிய பாலத்தைக் கட்டுகிறார். ஒரு அடி முன்னால் அவர் அப்பாலத்தைக் கட்டினால் அது விசுவாசப் பாலம் ஆகாது. பார்க்கக் கூடியது விசுவாசத்தினால் உண்டானதல்ல.

சில கிராம ரஸ்தாக்களில் தானே சுயமாய்த் திறக்கும் கதவுகள் உண்டு. ஒரு பிரயாணி அதைச் சமீபிக்கையில், அது உறுதியாய்

நன்ருய் அடைபட்டு வழியை மறித்துக்கொண்டு நிற்கிறது. அதனண்டை போகுமுன் அவன் நின்ருல் அக்கதவு திறவாது. ஆனுல் அவன் அதற்கு நேராய்த் தன் வாகனத்தைச் செலுத்திக்கொண்டே போனுல், வண்டியின் சக்கரங்கள் ரஸ்தாவின் அடியில் புதைந்துள்ள ஒரு விசையை அழுத்துகின்றன. அப்போது கதவு பின்னுல் தள்ளப் பட்டு வழி திறக்கிறது. அவன் அடைத்திருக்கும் கதவுக்கு நேராய்ச் சென்ருலன்றி அது அடைத்தேயிருக்கும்.

இது நமது கடமை என்னும் ரஸ்தாவில் உண்டாகும் ஒவ்வொரு தடையையும் நாம் எப்படிக் கடந்துசெல்வது என்று காட்டுகிறது. அது ஆருனுலும், கதவானுலும், மலையானுலும் இயேசுவின் பிள்ளை அதைத் தாண்ட அதற்கு நேராய்ப் போகத்தான்வேண்டும். அது கதவானுல் நீ அதை நெருங்கி இன்னும் போய்க்கொண்டிருக்கையில் தானே திறக்கும். அது மலையானுல் நீ பயப்படாமல் அது எங்கே யிருக்கும் என்று நினைத்தாயோ, அங்கே நேராய்ச் சென்ருல், அதன் முன் நீ வருகையில் அது தூக்கிக் கடலில் எறியப்படும்.

உன் கடமைக்கெதிராய் பெரிய தடை உண்டா? ஆண்டவரின் நாமத்தில் அதை நோக்கிச் செல், அது அங்கேயிராது.

—ஹென்றி கிளேடர்ன்புள்

நாம் உட்கார்ந்து வீணே புலம்புகிருேம். சர்வ வல்லவரின் சத்தம் நம்மை 'எழுந்து முன்னேறிச் செல்லுங்கள்' என்று சொல்லுகிறது. நாம் எழுந்து தைரியமாய் முன்னேறிச் செல்வோமாக. நாம் பாதை காணக்கூடாத இரவாயிருந்தாலும் முன்னேறிச் செல்லவேண்டும். ஆல்பைன் கணவாயில் செல்லும்போது ஓரிடத்தில் பார்த்தால், சில அடி மாத்திரம் முன்னுல் பாதை இருப்பதுபோல் தோன்றும். காட்டிற்குள் செல்லும் வழி நம் முன்னுல் பாதை இருப்பதுபோல் தோன்றும். காட்டிற்குள் செல்லும் வழி நம் முன்னுல் மரங்களால் அடைபட்டிருப்பதுபோல் தோன்றும். அதுபோல் நமது பாதை நாம் போகப்போகத்தான் திறக்கும். முன்னேறிச் செல். அவசியமானுல் அக்கினிஸ்தம்பமும், மேகஸ்தம்பமும் வனுந்தரத்தில் நமக்கு வழி காட்டும். ஆங்காங்கு வழி காட்டிகளும் சத்திரங்களும் வழியில் உண்டு. ஆகாரமும், உடையும், சிநேகிதரும் பயணத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் நமக்குக் கிடைக்கும். 'எவ்விதமாகக் காரியம் நடந் தாலும், வெகு மோசமானுலும் களைத்துபோயிருக்கும் பிரயாணிக்கு இனிமையான வீட்டில் வரவேற்பு கிடைக்கும்' என்று ருதர்போர்ட் என்பவர் சொல்லியுள்ளார்.

சூரிய ஒளி தங்கும் உயர்ந்த பாதையில் நான் போகிறேன்
விண்மீன் இலங்கும் நதிபாயும் வெளியில் இரவில்
செல்கிறேன்.
என் பழைய இருண்ட வீட்டில் என்னைத் தேடினுல்,
'அவன் உயர்ந்த பாதையில் செல்கிருன்'
என்று எழுதியிருப்பதைக் காண்பாய்.

## ஜூலை 3

'உழுகிறவன விதைக்கிறதற்காக நாள் முழுவதும் உழுகிறதுண்டோ' (ஏசா. 28:24).

கோடைகால முற்பகுதியில் ஒருநாள் நான் ஒரு அழகிய மைதானத்தைக் கடந்து சென்றேன். பெரியதொரு பச்சைக் கம்பளம்போல் அதில் பசும்புல் அடர்ந்து வளர்ந்திருந்தது. அதன் ஒரு மூலையில் ஒரு வயது முதிர்ந்த மரம் நின்றது. அதில் அநேக பட்சிகள் தங்கியிருந்தன. அந்த இனிமையான ஆகாயம் அவை களின் களிப்பான கீதத்தால் நிறைந்திருந்ததது. அதன் நிழலில் இரு பசுக்கள் அதிகதிருப்தியாய் படுத்திருந்தன. பாதையின் அருகில் காட்டுச் சூரியகாந்தி என்ற செடியின் மஞ்சள் வர்ணப் பூவும், காந்தி என்ற நீலவர்ணப்பூவும் கலந்து திகழ்ந்தன. அந்த மைதானத்தைச் சுற்றியுள்ள வேலியின்மேல் சாய்ந்து நின்றுகொண்டு, அந்தக் கண் விருந்தான காட்சியை இரசித்துக்கொண்டிருக்கும்போது, இந்த அழகிய புல் மைதானத்தைவிட அழகுள்ளதொன்றும் கடவுள் சிருஷ்டியில் இல்லை என்று எண்ணலானேன்.

மறுநாள் நான் அவ்வழியே சென்றேன். அந்தோ! அந்த அழகை யாரோ கலைத்திருந்தார்கள். உழுசாலில் தன் பெரிய கலப்பையோடு நின்றிருந்த உழவன் அதை அழித்திருந்தான். பச்சைப் புல் இருந்த இடத்தில் அழகற்ற மண் கிளப்பப்பட்டிருந்தது. பாடும் பட்சிகளுக்குப் பதிலாய் மண்ணைக் கிளறிப் புழுத்தேடும் சில கோழிகளே நின்றன. மஞ்சள் புஷ்பங்களையும், நீலப் புஷ்பங்களையும் அங்குக் காணோம். 'அத்தனை சௌந்தரியம் நிறைந்த இடத்தை உழ எப்படித்தான் மனம் வந்ததோ' என்று என் துக்கத்தில் சொன்னேன்.

நான் காணாத ஒரு கரம் என் கண்களைத் திறந்து ஒரு காட்சி காணச் செய்தது. என் காட்சியில் முதிர்ந்த கதிர்கள் அறுவடைக் குத் தயாராய் நிற்பதை கண்டேன். காற்றுக் காலம் வரும்போது அவற்றின் கதிர் பால் ஏறிக் கனத்து நிற்பதைக் கண்டேன். பொன் நிறமான கதிர்கள் அசைவதினாலுண்டாகும் இன்னிசையைக் கேட் டேன். நான் என் கனவு உலகிலிருந்து நினைவு உலகிற்கு வருமுன் அந்த அழகற்ற மண் முந்தியநாள் இருந்ததைவிட வெகு அழகுடன் தோன்றிற்று.

தெய்வீக உழவன் நமது ஆத்துமத்தைச் சால்களாக உழுது, நாம் அழகென்று நினைத்தவற்றைப் பிடுங்கி எறிந்து நம் பார்வைக்கு வெறுமையாய் அழகற்றதாய் விட்டுச்செல்லும்போது அதனால் ஏற் படக்கூடிய ஏராளமான விளைச்சலை நாம் காட்சியாகக் காணக்கூடு மானால் அது எவ்வளவு நலமாயிருக்கும்!

என் இதயத்தை ஆழச் சால்களாக மாற்றும் என் ஆண்டவனின் கலப்பையைக் கண்டு நான் ஏன் பயப்படவேண்டும்? அவர் சோம் பேறியான விவசாயியல்ல; அவர் அதில் விளைச்சலை உண்டாக்கவே நோக்கங்கொண்டுள்ளார். —சாமுவேல் ரூதர்போர்ட்

## ஜுலை 4

*'குறித்த காலத்திற்குத் தரிசனம் இன்னும் வைக்கப்பட்டிருக்கிறது . . . அது தாமதித்தாலும் அதற்குக் காத்திரு; அது நிச்சயமாய் வரும், அது தாமதிப்ப தில்லை' (ஆப. 2:3).*

'எதிர்பார்க்கும் மூலை' என்ற பெயருடைய ஒரு சிறு புத்தகத்தில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது. ஆதாம் சிலோமேன் என்பவர் ஆண்டவருடைய பொக்கிஷசாலைக்குள் அழைத்துச் செல்லப்பட்டார். அதில் 'தாமதிக்கும் ஆசீர்வாதங்கள்' என்று ஒரு அறை காணப்பட்டது. அந்த விந்தையான பெயருடைய அறையில் ஜெபத்தில் கேட்கப்பட்ட பல ஆசீர்வாதங்கள் அனுப்பப்படவேண்டிய சரியான வேளை வரும்வரை அவை வைக்கப்பட்டிருந்தன.

தாமதித்தல் கொடுக்க மறுத்தல் அல்ல என்பதை அநேகர் அறியார்கள். தாமதிக்கும் ஆசீர்வாத இலாகாவில், நாம் நினையாத பல அன்பின் இரகசியங்கள் உண்டு. ஆண்டவர் தமது கிருபை பூரண கனியானபின் மனிதன் அதை அனுபவிக்க விரும்புகிறார்; மனிதனோ அதைக் காயாகவே பறித்துக்கொள்ள ஆசைப்படுகிறான். 'ஆனாலும் உங்களுக்கு இரங்கும்படி கர்த்தர் காத்திருக்கிறார்' (ஏசா. 30:18).

கஷ்டமான கட்டங்களில் கடவுள் கவனித்திருக்கிறார். அதிகப்படியான ஒரு சோதனையும் வரவிடார். நீ கடைசிவரை உன் பாத்திரத்தைக் குடித்துத் தீர்த்துவிடு. பின் அவர் மகிமையோடு உனக்கு உதவிசெய்வார்.

அவருடைய அன்பின்பேரில் சந்தேகங்கொண்டு அவரை மனம் நோகச் செய்யாதே. இப்பொழுது உன் தலையைத் தூக்கி உனக்கு வந்துகொண்டிருக்கும் இரட்சிப்பிற்காக அவரைத் துதிக்கத் தொடங்கு. உன் விசுவாசத்தைச் சோதித்து தாமதித்ததற்காக நீ அதிகமான வெகுமதி பெறுவாய்.

1 அற்ப விசுவாசியே! தேவன் இதுவரை உன்னை கைவிடவில்லை
எல்லாம் இருண்டு தோன்றுகையில் இதை மறந்து நீ
பேசினாய்.

2 அவர் உன்னை நடத்தி உன் வழியைத் தெளிவாக்கியதை
மறந்தாய்
மேகத்தின்மேல் சூரிய ஒளி வீசி உன் இரவைப் பகலாக்கினார்.

3 அவர் உன்னை இதுவரை நடத்தியதுண்டானால் இப்போது
கைவிடார் உன் கவலை தோய்ந்த முகம் அவர் அன்புள்ள
உள்ளத்தை எத்தனையாய்ப் புண்படுத்தும்.

## ஜூலை 5

'நான் அவளுக்கு நயங்காட்டி அவளை வனாந்தரத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் . . . அவ்விடத்திலிருந்து அவளுக்கு அவளுடைய திராட்சைத் தோட்டங்களைக் கொடுப்பேன்' (ஓசி. 2:14,15).

வனாந்தரத்தில் திர்ராட்சைதோட்டம் காணுவது விந்தையே! வனாந்தரமானது ஒரு தனிமையான இடம். அதில் வழிகள் கண்டுபிடிப்பது கஷ்டம். அப்படிப்பட்ட இடத்தில் ஆத்துமாவுக்கு அவசியமான ஐசுவரியம் கிட்டுமா? அப்படித்தான் அவ்வார்த்தைகளிலிருந்து தெரிகிறது. அதுவுமின்றி 'கசப்பு' என்று அர்த்தப்படும் ஆகோர் பள்ளத்தாக்கு 'நம்பிக்கையின் வாசல்' எனப்படுகிறது. அவள் அங்கே தன் இளவயதில் பாடினதுபோல் பாடுவாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

வனாந்தர அனுபவம் நமக்கு ஏன் தேவை என்று தேவன் அறிவார். நிலைநிற்கத்தக்கவற்றை எங்கே எப்படிக் கொண்டுவரலாம் என்று அவர் அறிவார். ஆத்துமா விக்கிரக ஆராதனைசெய்து, முரண்பட்டு தேவனை மறந்து, 'என் சுயசித்தத்திற்கேற்பச் சிநேகிதர்களைப் பின்பற்றுவேன்' என்கிறது. ஆனால் அது அவர்களைச் சேரமுடியவில்லை. அது நம்பிக்கையிழந்து கைவிடப்பட்டபொழுது ஆண்டவர், 'நான் அவளுக்கு நயங்காட்டி வனாந்தரத்திற்கு அழைத்துச் சென்று அவளோடு பட்சமாய்ப் பேசுவேன்' என்கிறார். நம் நேசர் எவ்வளவு அன்புடையவர்!

—கிரம்ஸ்

தேவன் தமது ஊற்றுக்களை எங்கே ஒளித்துள்ளார் என்று நாம் அறியோம். ஒரு பாறையை நாம் பார்க்கிறோம். அதுதான் ஊற்றின் பிறப்பிடம் என்று ஊகிக்க நம்மால் கூடவில்லை. கல்போல் கடினமான இடத்தைக் காண்கிறோம். அதில் ஒரு ஊற்றுக்கண் இருப்பதை நாம் அறியோம். தேவன் நம்மைக் கஷ்டமான இடத்திற்கு அழைத்துச்செல்கிறார். அப்பொழுது நித்திய ஊற்றுள்ள இடத்தை அடைந்தோம் என்று நாம் காண்கிறோம்.

## ஜூலை 6

'நாங்கள் செய்யவேண்டியதின்னதென்று எங்களுக்குத் தெரியவில்லை; ஆகையால் எங்கள் கண்கள் உம்மையே நோக்கிக்கொண்டிருக்கின்றன' (1 நாளா. 20:12).

ஆண்டவருடைய உடன்படிக்கைப் பெட்டியின்மேல் கை வைக்கப்பட்டதால் ஒரு மனிதன் உயிரிழந்தான். எருதுகள் கரடுமுரடான பாதையில் வண்டியை இழுத்துக்கொண்டு செல்கையில், உடன்படிக்கைப் பெட்டி ஆடிக்கொண்டு விழுவதுபோல் தோன்றினது. அதைச் சரியான இடத்தில் வைக்கும் நல்நோக்கத்தோடே அந்தக் கைகள் துணிகரமாய்த் தேவனுடைய பெட்டியைத் தொட்டன.

ஆகையால் அவை திமிர்வாதங்கொண்டு உயிரிழந்து விழுந்தன. விசுவாச ஜீவியத்தில் அநேக விஷயங்களை அப்படியே நடக்கும்படி விட்டுவிடவேண்டியதிருக்கிறது.

ஒரு காரியத்திற்காகத் தேவனை முற்றிலும் நம்பினால், நம்கரத்தை அதில் வைக்கக்கூடாது. நாம் அவருக்கு உதவிசெய்வதைவிட அவர் தாமே அதை நன்றாய்ச் செய்யக்கூடும்.

'தேவன்மேல் நம்பிக்கைவைத்து அவருக்காய்ப் பொறுமையாய்க் காத்திரு. தன் வழிகளில் செழிப்பாயிருப்பவனைக்குறித்தும் நீ பொறாமைகொள்ளாதே.'

காரியமெல்லாம் தவறாய்ப்போவதுபோல் தோன்றலாம். அது நமக்குத் தெரிவதுபோல் அவருக்குத் தெரியும். அவருடைய வேலையில் அவருடைய முறைப்படி செய்யும்படி அவர்மேல் முற்றிலுமாய் நம்பிக்கைகொண்டிருந்தால், அவர் சரியான சமயத்தில் யாவும் செம்மையாய்ச் செய்துமுடிப்பார்.

தேவன் தம் சித்தத்தை நிறைவேற்ற ஏற்றுக்கொண்டதால், நாம் சும்மா இருத்தலைவிட மேலான காரியம் இல்லை. நாம் கவலை கொண்டு எதையாவது செய்வது தீமையாய் முடியும்.

—எ. பி. சிம்லன்

1 நான் கலங்கித் தவித்தபோது, ஆண்டவரே இதைச் சரியாக்கும் என்றேன்.
'இரவு உமக்குப் பகல்போலாம். இருளும், வெளிச்சமும் உமக்குச் சமம்.
அதிகச் சிக்கலான இக்காரியத்தை நான் தொடப் பயப்படுகிறேன்.
என் நடுங்கும் கைகள் தவறிவிடும்.
என் திடனற்ற கை உடைத்துப்போடும்.
உன் கரம் பிழை செய்யாது' என்றேன்.
எனக்குச் சந்தேகமுண்டானதால், இவ்வாறு சொன்னேன்.

2 'ஆண்டவரே! இதை எனக்கு விளங்கச் செய்யும்' என்றேன்.
'என் சந்தேகத்தைத் தீரும், எது உண்மையான பத்திரமான வழி?
எது எனக்கு லாபம் என்று அறிய எனக்கு ஞானம் இல்லை.
முன்னேற திடனும் இல்லை.
உமக்கு நன்றாய்த் தெரிவதை எனக்குத் தெளிவாய்க் காட்டும் என்றேன்.
வாழ்க்கையின் சிக்கலான பிரச்சினைகளைத் தேவனுடைய கரத்தில் கொடுத்து அதை அங்கே விட்டுவைப்பது மிகுந்த ஆறுதலை உண்டாக்கும்.

## ஜூலை 7

'என்னைத் துலக்கமான அம்பாக்கினூர்' (ஏசா. 49:2).

கலிபோர்னியாக் கடற்கரையில் பெஸ்காடெரோ என்ற இடத்தில் 'கூழாங்கல்வரை' என்பது பிரசித்திபெற்ற இடம். நுரை நிறைந்த அலைகள் இடிமுழக்கம்போல் சப்தித்துக்கொண்டு, கரையிலுள்ள கற்களின்மேல் சதா மோதிக்கொண்டே இருக்கின்றன. இரக்கமற்ற அந்த அலைகளால் கற்கள் பிடிக்கப்பட்டு, அலைகழிக்கப்பட்டு உருட்டப்பட்டு, உரசப்பட்டு, கூரான மணல் அமுந்திய பாறைகளில் மோதப்படுகின்றன. இவ்விதமான நிகழ்ச்சி இரவும் பகலும்ஓயாமல் நடக்கிறது. அதன் பயன் யாது?

உலகத்தின் எத்திசையிலிருந்தும், பிரயாணிகள் அங்குள்ள அந்த அழகிய கூழாங்கற்களைச் சேர்க்க வருகிறூர்கள். சிறந்த பெட்டிகளில் அவைகள் வைக்கப்படுகின்றன. பிரபுக்களின் வீடுகளில் முன் அறையில் பார்வையாய் வைக்கப்படுகின்றன. அவ்விடத்தைவிட்டுச் சற்று அப்பால் போனூல், அலைகள் பாறைகளில் மோதிப் பலம் இழந்து போகின்றன. அந்த அமைதியான வளைகுடாவில் புயலுக்கு மறைந்து சூரிய ஒளி அதன்மேல் பிரகாசிக்க ஏராளமான கூழாங்கற்கள் கிடக்கின்றன. அதைப் பிரயாணிகள் யாரும் விரும்பிப் பொறுக்குவதில்லை.

அவைகள் ஏன் பல ஆண்டுகளாய்த் தேடப்படாமல் கிடக்கின்றன? ஏனென்றூல் அவை அலசடிப்படவில்லை. அவ்விடம் சலனம் அற்றிருப்பதால், அவை யாதொரு மாறுதலும் அடையவில்லை. அவை கரடுமுரடாய்க் கூர்நுனிகளுள்ளவைகளாயிருந்தன. அவலக்ஷணமாய்க் கிடந்தன. கஷ்டமே நமக்கு மெருகு கொடுக்கின்றது.

நாம் எந்த இடத்தை நிரப்பவேண்டுமென்று தேவன் விரும்புகிறூரோ, அதற்கேற்ற வடிவம் அவர் நமக்களிப்பார் என்று நம்புவோமாக. நாம் செய்ய வேண்டிய வேலை இன்னதென்பதை அவர் அறிந்திருப்பதால், தகுந்த ஆயத்தமும் பயிற்சியும் அளிக்க அவரையே நம்புவோமாக.

பயந்து ஒடுங்கும் என் இதயத்தை
அடிக்கும் கஷ்டப்படுத்தும் துன்பமாகிய
நீங்கள் தெய்வீக வேலையைச் செய்யும்
எஜமானின் கருவிகளேயாம்.
'தேவனின் ஆபரணங்கள் யாவும்
ஸ்படிகங்களான கண்ணீரே.'

## ஜூலை 8

'கழுகுகளைப்போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள்' (ஏசா. 40:31).

'ஆதியில் பறவைகளுக்கு இறக்கை எவ்வாறு கிடைத்தது என்பதைக் குறித்து ஒரு கதை உண்டு. பறவைகள் முதலில் இறக்கைகளின்றிச் சிருஷ்டிக்கப்பட்டன. பின் தேவன் இறக்கைகளைச் செய்து இறக்கைகளைப் பட்சிகள் முன்வைத்து வந்து இப்பாரத்தை எடுத்துச் சுமந்துகொள்ளுங்கள்' என்றார்.

பட்சிகளுக்கு அழகான இறக்கைகள் கிடைத்தன. இனிய குரல் இருந்தது. அவைகள் பாடக்கூடும். அவைகளின் இறக்கைகள் வெயிலில் பிரகாசித்தன. ஆனால் அவைகள் உயரப் பறக்கக்கூடவில்லை. அவைகளின் காலருகில் கிடந்த சுமையை எடுத்துக்கொள்ளும்படி அவைகளுக்குச் சொல்லப்பட்டபொழுது, முதலில் சிறிது தயங்கின. ஆனால் சீக்கிரமே அவை கீழ்ப்படிந்தன. தங்கள் அலகுகளால் அவற்றை எடுத்து, அவைகளைச் சுமக்கத்தக்கதாய்த் தோளில் வைத்துக்கொண்டன.

சிறிது நேரம் அச்சுமை பளுவாயிருந்தது. பின் அதைத் தங்கள் மார்போடு சுருட்டிக்கொண்டன. சுமந்து திரிகையில் இறக்கைகள் அவைகளின் உடம்போடு ஒட்டிக்கொண்டன. பறவைகள் அவற்றை எப்படி உபயோகிப்பது என்று அறிந்துகொண்டன. அந்த இறகால் அவைகள் ஆகாயத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டன. 'பாரங்கள் இறக்கைகள் ஆகின.'

இது ஒரு உவமையே. நாமே இந்த இறக்கை அற்ற பறவைகள்; நம்முடைய கடமைகளே நம்மைப் பரலோகத்திற்குத் தூக்கிச் செல்லக் கடவுளால் கொடுக்கப்பட்ட இறக்கைகள். நாம் நம் கடமைகளையும், வருத்தமான பாரங்களையும் பார்த்துப் பயப்படுகிறோம். ஆனால் அவற்றை நாம் தூக்கி, நம் இருதயத்தோடு கட்டிக்கொள்ளும்போது, அவைகள் இறக்கைகளாகின்றன. அவைகளால் நாம் தேவனுக்கு நேராகப் பறக்கலாம்.

எந்தப் பாரத்தையும் நாம் சந்தோஷமாய்த் தூக்கி, நம் முழு அன்போடும் சுமந்தால் அது நமக்கு ஆசீர்வாதமாகும். நம் கடமைகளை நம் உதவியாளராகவே தேவன் அனுப்புகிறார். அந்தச் சுமையை ஏற்றுக்கொள்ள நாம் குனியாவிட்டால் வளர்ச்சிக்கான புதுச் சந்தர்ப்பத்தைத் தவறவிடுகிறவர்களாவோம்.

—ஜே. ஆர். மில்லர்

தேவன் தமது அன்பினால், தமது திருக்கரத்தால், நம்முடைய தோளோடு பிணைக்கும் பாரம் எவ்வளவு அதிகமானாலும் பாக்கியமானதே.

## ஜூலை 9

*'உபத்திரவத்தின் குகையிலே உன்னைத் தெரிந்துகொண்டேன்'* (ஏசா. 48:10).

அக்கினியின் கொடுமையைத் தணிக்கும் மெல்லிய தூறல்போல் இவ்வார்த்தைகளிருக்கின்றன அல்லவா! இவை அக்கினி நம்மைத் தொடவிடாதிருக்கக்கூடிய கல்நார்க் கவசம் போன்றவையல்லவா? துன்பம் வரட்டும், நான் தேவனால் தெரிந்துக்கொள்ளப்பட்டவன்; தரித்திரம் என் வாசலில் வரலாம். ஆனால் தேவன் என் வீட்டிற் குள்ளிருக்கிறார். வியாதி உள்ளே வரலாம். ஆனால் அதற்குரிய ஔஷதம் வைத்திருக்கிறேன். தேவன் என்னைத் தெரிந்துகொண் டார். கண்ணீரின் பள்ளத்தாக்கில் என்ன நேரிட்டாலும் அவர் என்னைத் தெரிந்தெடுத்துள்ளார் என்பதை நான் அறிவேன்.

கிறிஸ்தவனே, பயப்படாதே! இயேசு உன்னோடிருக்கிறார். அக்கினி மயமான சோதனைகளில் எல்லாம் அவருடைய சமுகமே உனக்கு ஆறுதலும், ஆகாரமுமாகும். தமக்குச் சொந்தமாகத் தெரிந் தெடுத்துள்ள ஒருவனை அவர் ஒருபோதும் கைவிடார்.

'பயப்படாதே! நான் உன்னோடிருக்கிறேன்' என்பது அவர் தாமே உபத்திரவத்தின் குகையிலிருந்து தெரிந்துகொண்டவர்களுக்குக் கொடுத்துள்ள நிச்சயமான வாக்குத்தத்தம். —சி. எச். ஸ்பர்ஜன்

1 நோவு என்னும் அக்கினி என்னுள் எரிகிறது
தேவனுடைய சுவாசம் அதன்மேல் வீசுகிறது
அந்த நெருப்பின் ஜுவாலையால்
எந்தன் ஆத்துமா வேதனைப்பட்டு நடுங்கினாலும்
'தேவனுடைய சித்தப்படி' என்று சொல்லி
எரியும் தீயிலும் அமர்ந்திருப்பேன்.

2 காய்ச்சப்பட்ட என் இதயத்தைத் தமக்கிஷ்டமான உருவாக்க
அடிகல்லின்மேல் வைக்கிறார். அவரது பெரிய சம்மட்டியால் அடிமேல் அடிவிழ,
அது 'தேவனுடைய சித்தம்' என்று சொல்லி
பலத்த அடியையும் அமைதியாய்ச் சகிப்பேன்.

3 நெகிழ்ந்திருக்கும் என் இதயத்தை அடிக்கிறார்
ஒவ்வொரு அடியிலும் நெருப்புப்பொறிகள் பறக்கின்றன
அதைத் திருப்பித் திருப்பிவிட்டுக் காய்ச்சுகிறார்
அதைக் குளிரச் செய்கிறார். அதை ஜொலிக்க வைக்கிறார்
ஆயினும் நான் 'தேவ சித்தம்' என்று சொல்லி
அவர் வல்ல கரத்துள் அமர்ந்திருப்பேன்.

4 நான் ஏன் முறுமுறுக்கவேண்டும்
அதால் துக்கம் நீடிக்கும்
தேவன் தமது கிரியையை என்னில் முடிப்பார்

அதன் முடிவு நாளைக்கே உண்டாகலாம்
ஆகையால் நான் நம்பிக்கையுடன் 'தேவ சித்தம்'
என்று சொல்லி கடைசிவரை அமர்ந்திருப்பேன்.

—ஜூலியஸ் ஸ்டர்ம்

கஷ்டங்களின் பாரம் நம் கழுத்தைச் சுற்றிக் கட்டப்பட்ட கழுத்துக் கல்போல் தொங்குவதாகத் தோன்றும். ஆனால் உண்மையில் அதுவே முத்துக் குளிப்பவனை முத்துக்களைத் தேடும்போது அவனை ஆழத்தில் நிற்கச் செய்ய அவசியமான பாரமாகும். —ரிச்டர்

## ஜூலை 10

'நான் அவரைக் கூப்பிட்டேன்; அவர் எனக்கு மறு உத்தரவு கொடுக்கவில்லை' (உன். 5:6).

ஆண்டவர் பெரிய விசுவாசம் உண்டாக்கி, அதிகத் தாமதத்தால் அதைச் சோதிப்பார். வெண்கலம் போன்ற ஆகாயத்திலிருந்து எதிரொலி கேட்பதுபோல் அவருடைய ஊழியக்காரரின் சத்தம் அவருடைய காதில் எதிரொலிக்கச் செய்கிறார். அவர்கள் பொற்கதவைத் தட்டுகிறார்கள். அது கீல் முளையில் துருப்பிடித்திருப்பது போல அசையாதிருக்கிறது. எரேமியா சத்தமிட்டதுபோல், 'எங்கள் ஜெபம் கடந்துவராதபடி உம்மை மேகங்களால் மூடிக்கொண்டீர்' என்று சத்தமிடுகிறார்கள். இவ்விதமாய் பக்தர்கள் விடை கிடையாமல் தொடுத்து நீண்ட காலம் ஜெபம்பண்ணியிருக்கிறார்கள். அவர்கள் ஜெபம் ஊக்கமின்றியிருப்பதும் அல்ல. இராஜாவாகிய அவருக்கு உகந்ததாக இல்லாததுமல்ல; தம் தம் விருப்பம்போல் செய்கிற இயேசு இராஜாவுக்கு அப்படித் தாமதிப்பது விருப்பமாயிருப்பதால் பதில் கிடைக்கவில்லை. நம் பொறுமையைச் சோதிக்க அவர் சித்தங்கொண்டாரென்றால், அவருக்குச் சொந்தமானதைத் தமது சித்தப்படி செய்யமாட்டாரா!

ஒரு ஜெபமும் கேட்கப்படாமல் போவதில்லை. ஜெபத்தின் பெருமூச்சு வீணாவதில்லை. தேவன் கவனிக்காத, விடை அளிக்கக்கூடாத ஜெபம் ஒன்றுமே இல்லை. கொடுக்க மறுத்துவிட்டார், கேட்கவில்லை என்று நாம் சில சமயம் நினைப்பது தாமதமேயன்றி வேறல்ல.

—எச். போனர்

நமது விசுவாசத்தைச் சோதிக்க, நமது ஜெபத்தை உயிர்ப்பிக்க கிறிஸ்து தமது பதிலைத் தாமதப்படுத்துகிறார். படகு தண்ணீரில் மூழ்கிப்போகையில் தேவன் நித்திரை செய்கிறார். படகு அமிழ்ந்து போகுமுன் நிச்சயம் அவர் விழித்துக்கொள்வார். அவர் தூங்குகிறார். ஆனால் அவர் அவசியத்திற்கதிகமாய்த் தூங்குவதில்லை. ஏற்ற சமயத்தில் விழித்துக்கொள்வார்.

—அலெக்சாண்டர் மெக்லரென்

என் ஆத்துமாவே, அமர்ந்திரு! கலங்கி அழாதே
எல்லாவற்றையும் காணும் கண்களுக்கு முன்பாக
உன் வெறுமையான பாழ்வனந்தரத்தை விரித்துவை
காத்திரு! நம்பிக்கை இழந்துபோவதுபோல் தோன்றினும்
தேவன் வந்து உனக்காய்ப் பரிதபித்து உன் வறண்ட பூமியை
ஒளி, ஜீவன், புதிய ஆகாயம் இவற்றால் நிரப்புவார்.

ஜே. சி. ஷேர்ப்

## ஜுலை 11

'தேசத்தில் மழை பெய்யாதபடியினால் சில நாட்களுக்குப் பின்பு அந்த ஆறு வற்றிப் போயிற்று' (1 இரா. 17:7).

நாளுக்குநாள் அவ்வாற்றின் நீர் குறைவதைத் தளர்விலா ஆவியோடு எலியா கவனித்து வந்தான். அவன் அவநம்பிக்கை கொள்ளக் கூடிய அநேக சோதனை அடிக்கடி வந்தும், அவை தனக்கும் தன் தேவனுக்கும் இடையே வராதபடி பார்த்துக்கொண்டான். புகை நிறைந்த ஆகாயத்தினூடே சூரியனை அதன் பிரகாசமான கதிர்களின்றி நாம் காண்பதுபோல் அவநம்பிக்கை தேவனைக் காண்கிறது. விசுவாசமோ தனக்கும் சந்தேகங்களுக்கும் இடையே தேவனை வைத்து அச்சந்தேகங்களை இயேசுவின் மூலமாய்ப் பார்க்கிறது.

ஆகவே வற்றிக்கொண்டே வந்த ஆறு ஒரு வெள்ளிக் கயிறுபோல் ஓடிற்று. சீக்கிரமாய் வெள்ளிக் கயிறுபோல் ஓடின ஆறு பாறைகளினூடே சிறு குழிகளில் நின்றது. அக்குழிகளிலும் ஜலம் குறைந்தது; பட்சிகள் அவ்விடம் விட்டகன்றன; வெளியிலுள்ள காட்டுமிருகங்கள் தண்ணீர் தேடி அங்கு வரவில்லை; அவ்வாறு முற்றிலும் வறண்டு போனது. அப்போதுதான் கலங்காத உறுதியுள்ள எலியாவின் ஆவிக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, 'எழுந்து சாறிபாத் என்னும் ஊருக்குப் போ' என்ற செய்தி வந்தது.

நம்மில் அநேகர் அப்படிப்பட்ட நிலையில் இருந்திருப்போமானால், கவலைகொண்டு அதற்கு முன்னால் என்ன செய்வதென்று திட்டம் வகுத்து அலுத்துப்போயிருப்போம். தண்ணீரின் ஓட்டத்தில் சலசலப்பான சத்தம் குறைவுபட்டவுடன் நம் இருதயத்தின் மகிழ்ச்சி கீதங்களும் நின்றுபோயிருக்கும். நம்முடைய வீணைகளை அலரிச்செடியின் மீது வைத்துவிட்டுக் காய்ந்துபோய்க்கொண்டிருக்கும் புற்களின்மீது ஆழ்ந்த யோசனை செய்துகொண்டு அங்குமிங்கும் நடந்திருப்போம். ஆறு வற்றுவதற்கு வெகு நாட்களுக்கு முன்னதாகவே திட்டம் வகுத்து, நம் திட்டத்தை ஆசீர்வதிக்கும்படி தேவனைக் கேட்டுக் கொண்டு வேறொரு இடத்திற்குப் புறப்பட்டிருப்போம்.

நம்முடைய இடுக்கண்களிலிருந்து தேவன் நம்மைக் கஷ்டத்தோடு விடுவிக்கிறார். ஏனென்றால் அவருடைய இரக்கம் சதா காலங்களிலு

மிருக்கிறது. ஆனால் நாம் முதலாவதாகவே தேவன் தமது திட்டங்களைத் தெரியப்படுத்தும்வரை காத்திருப்போமானால் நாம் விடுவிக்கப்பட இயலாததான சுரங்கங்களுக்குள் வந்து சேர்ந்திருக்கமாட்டோம். நம்முடைய வழிகளைக் கண்ணீரோடும் வெட்கத்தோடும் நினைத்துத் திரும்ப அவசியம் நேரிட்டிருக்காது. 'காத்திரு, பொறுமையாகக் காத்திரு.'

—எப். பி. மேயர்

## ஜூலை 12

'நான் போகும் வழியை அவர் அறிவார்; அவர் என்னைச் சோதித்த பின்பு நான் பொன்னாக விளங்குவேன்' (யோபு 23:10).

'புயல்களின் மத்தியில் விசுவாசம் வளருகிறது.' இவை நான்கே வார்த்தைகள். கஷ்டம் அனுபவித்த ஆத்துமாவுக்கு அந்த வார்த்தைகள் அதிகக் கருத்து நிறைந்தவை.

விசுவாசமானது பார்க்க முடியாதவைகளை நன்றாய்ப் பார்க்கச் செய்வதும் செய்யமுடியாதவைகளைச் செய்யச் சக்தி கொடுப்பதுமான தேவனிடத்திலிருந்து கிடைக்கும் ஒரு வன்மை. அது தெய்வீகத்தைக் காட்டுவதாயிருக்கிறது.

ஆனால் அது 'புயல்களின் மத்தியில் வளருகிறது'. ஆவிக்குரிய ஜீவியத்தில் எங்கே போராட்டம் உண்டோ அங்கே வளர்ச்சியுண்டு. புயல் பஞ்சபூதங்கள் போரிடுவதால் உண்டாகிறது. அதுபோல ஆவிக்குரிய புயல் நமது தன்மைக்கு மாறான தன்மைகளோடு போரிடுவதால் உண்டாகிறது.

அப்படிப்பட்ட நிலையே விசுவாசம் வளர்வதற்கேற்ற நிலையாகிறது. அப்படிப்பட்ட இடத்தில் சீக்கிரமாக பலனுமளிக்கிறது.

பலமான மரம் நிலழான காடுகளில் காணப்படுவதில்லை. அது இராட்சத பலம் பெறும்வரை அதை வளைத்துத் திருகத்தக்கதாக காற்று எத்திசையிலிருந்தும் மோதக்கூடிய திறந்த வெளியில் வளரும் மரமே பலமான மரமாகிறது. இப்படிப்பட்ட மரத்தைக் கொண்டுதான் இயந்திரம் அமைப்போன் தன் ஆயுதங்களைச் செய்ய விரும்புகிறான். வண்டி செய்பவனும் இதையே நாடுகிறான்.

ஆவிக்குரிய வாழ்க்கையிலும் அப்படியே இருக்கிறது. நீ ஆவியில் வலிமையுள்ள ஒருவனைச் சந்திக்கும்போது அவனண்டை நெருங்குவதற்கான பாதை, காட்டுப்பூக்கள் சதா மலர்ந்துகொண்டிருக்கும் சூரிய ஒளி நிறைந்த பாதையல்ல என்பதை நினைத்துக்கொள். அது ஒடுக்கமானதும் செங்குத்தான பாறைகள் நிறைந்ததுமாயிருக்கும். அங்கே பாதாளலோகத்திலிருந்து வரும் புயல்கள் உன்னை விழத்தள்ளும். கூரான கற்கள் உன் தசையைக் கிழிக்கும். நீண்ட முட்கள் உன் முகத்தைக் கிழிக்கும். விஷ ஜெந்துக்கள் எப்பக்கமும் சப்தித்துக்கொண்டிருக்கும்.

அது துக்கமும் சந்தோஷமும் நிறைந்த பாதை; குணப்படுத்தும் ஔஷதமும், கண்ணீரும், நகைப்பும், சோதனைகளும், வெற்றிகளும், போராட்டங்களும், இடைஞ்சல்களும்—இக்கட்டு, துன்பம், மன வருத்தம், துக்கம் இவைகளும் நிறைந்த பாதை. இவை யாவற்றிலும் நம்மீது அன்புகூருகிறவரால் நாம் வெற்றி சிறப்போம்.

'புயல் மத்தியில்' புயலின் கோரம் அதிகமாயிருக்கும். அதன் மத்தியில் கடும் புயலாகிய சோதனையைக் கண்டு நீ நடுங்கிப் பின் வாங்கலாம். ஆனால் முன்னேறிச் செல். உன்னுடைய சோதனைகளின் மத்தியில் உன்னைச் சந்தித்து உன்னைப் பிரகாசமான முகத்தோடும் பின்பு பாதாள அரக்கர் யாராலும் அசைக்கமுடியாத உறுதியான விசுவாசத்தோடும் வெளிவரப்பண்ணும் இரகசியத்தை அங்கே தேவன் உனக்கும் போதிப்பார். —இ. எ. கில்போர்ன்

## ஜூலை 13

'இல்லாதவைகளை இருக்கிறவைகளைப்போல் அழைக்கிறவருமாயிருக்கிற தேவன்' (ரோ. 4:17).

இதன் அர்த்தமென்ன? ஆபிரகாம் இவைகளைச் செய்தான். அவன் தேவன்மேல் நம்பிக்கை வைக்கத் துணிந்தான். அவனுடைய வயதில் ஆபிரகாம் ஒரு பிள்ளைக்குத் தகப்பனாவது நடக்கக்கூடாத காரியம் போல் தோன்றினது. அது நம்பத்தக்கதாய் இல்லை. ஒரு பிள்ளை இருப்பதற்கான அறிகுறிகள் காணப்படுமுன்னே தேவன் அவனை 'அநேக ஜாதிகளின் தகப்பன்' என்று அழைத்தார். தேவன் தன்னை அப்படி அழைத்ததால் ஆபிரகாமும் தன்னைத் 'தகப்பன்' என்று அழைத்தான். அதுவே விசுவாசம். விசுவாசம் தேவன் கூறுவதை நம்பி அதை உறுதியாய்க் கூறுவது. 'விசுவாசம்' வெறும் ஆகாயத்தில் காலைத் தூக்கி வைத்தபோதிலும் அங்கே காலடியில் பாதையிருப்பதாகக் காண்கிறது.

தேவன் உனக்கு உண்டு என்பதை உன்னிடம் இருப்பதாகச் சொல்லு. நீ நம்புவது யாவும் உன் வாழ்க்கையில் கிடைக்குமாறு தேவன் அருள்புரிவார். ஆனால் அது உண்மையான விசுவாசமாயிருக்கவேண்டும். அந்த விசுவாசக் கிரியையில் உன்னிலுள்ளயாவும் தேவனிடம் போகவேண்டும். —கிராம்ஸ்

வேறு எந்தவகையிலும் வாழ யோசிக்காமல், விரும்பாமல், நம்பிக்கையிலே வாழ மனதாயிரு.

வெளியிலுள்ள எல்லா விளக்குகளும் அணைந்து நீலவானிலுள்ள ஒவ்வொரு நட்சத்திரமும் மறைந்து, சுற்றிலும் அபாயமும் இருளுமே நிறைந்தபோதும், உன் உள்ளத்தில் விசுவாசம் கொளுத்திய பரிசுத்த பிரகாசமான விளக்கு ஒளிவிடும். இவ்வித நிலைமையைக் காண நீ உடன்பட்டிரு. —தாமஸ் சி. உப்பம்

பத்திரமாய் இருப்பதுபோல் தோன்றும் கூட்டைவிட்டு அவ நம்பிக்கை என்னும் இருப்பிடத்தை விட்டு விலகி, விசுவாசம் என்னும் செட்டைகளில் பறக்கவேண்டிய சமயம் இதுவே. பட்சிக்கு ஆகாயத்தில் பறக்கும் சமயம் ஏற்படுகிறது. குஞ்சிக்குக் கீழே விழுந்துவிடுவோம் என்று தோன்றுவதுபோல் உனக்கும் தோன்று கிறது. அது விழுவதுபோல் தோன்றினும் அது விழுவதில்லை. அதனுடைய இறக்கைகள் அதற்கு ஆதரவாயிருக்கின்றன. அது தவறினுல், தாய்ப்பறவை உடனே கீழே பாய்ந்துவந்து அதைத் தன் இறக்கைகளால் தாங்கிக்கொள்ளும். அவ்விதமே கடவுள் உன்னைத் தாங்கிக்கொள்வார். 'நீ மாத்திரம் அவரை நம்பு. அவர் உன்னைத் தாங்குவார்.' 'அது சரிதான். ஆனுல் நான் ஒரு ஆதாரமுமின்றி குதிக்கவேண்டியதுதானு?' என்று நீ கேட்கலாம். அவ்வாறேதான் சிறிய குஞ்சு செய்யவேண்டியதாகத் தோன்றுகிறது.

ஆனுல் அங்கே ஆகாயம் உண்டு என்பதை நாம் அறிவோம். அது வெறுமையானதல்ல. அதுபோலவே கர்த்தருடைய வாக்குத் தத்தங்கள் உள்ளன. அவை வெறுமையானவையல்ல; 'ஆனுல் என் பலவீனமான ஏழை ஆத்துமா அத்தகைய பலத்தைப் பெறுமென்று தோன்றவில்லையே.' கடவுள் அவ்வாறு சொல்லியுள்ளாரா? சோதனைகளுக்கு இடம் கொடுக்கும் என் மனம் போரில் வெற்றி யடையுமா? பயந்து நடுங்கும் என் இதயம் சமாதானமடையும் என்றும் தேவன் சொல்லியுள்ளார்.

அவர் அப்படிச் சொல்லியிருப்பது உண்மையானுல், அவர் பொய் யுரையார். அவர் சொன்னதுண்டானுல் அவர் அதைச் செய்ய மாட்டாரா? முழுவதுமாய் அதை நீ நம்பு. இந்த உண்மையான வார்த்தை உனக்கு உண்டு. 'நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்' என்று சொல்லப்பட்ட வார்த்தைகளும் அதைச் சொன்னவரும் உனக்குண்டு; அவரை நம்பு. —ஜே. பி. பிக்ஸ்

## ஜூலை 14

'பண்டிகைப் பலியைக் கொண்டுபோய்ப் பலிபீடத்தின் கொம்புகளில் கயிறுகளால் கட்டுங்கள்' (சங். 118:27).

இந்தப் பலிபீடம் உன்னை வாவென்று அழைக்கவில்லையா? நாம் தற்பிரதிஷ்டை செய்த நிலையைவிட்டு விலகாதபடி அதோடு கட்டப் படவேண்டும் என்றும் நாம் விரும்புகிறதில்லையா? வேளாவேளை களில் வாழ்க்கை இன்னொளியாய்த் தோன்றுகிறது. அப்போது நாம் சிலுவையைத் தெரிந்துகொள்ளுகிறோம். சில சமயங்களில் கஷ்ட முண்டாகும்போது சிலுவை நம்மைவிட்டு விலகவேண்டுமென விரும்புகிறோம். ஆதலால் நாம் பிணைக்கப்பட்டிருப்பதுதான் நலம்.

பாக்கியமான பரிசுத்த ஆவியே, எங்களை நீர் இறுகப் பிணைத்து சிலுவையின் கவர்ச்சிக்கு எங்களை ஆளாக்கி, அதைவிட்டு நாங்கள்

விலகாதிருக்க அருள்புரியமாட்டீரா? இரட்சிப்பென்னும் சிவப்புக் கயிற்ருல் எங்களை உம்மோடு இருகக் கட்டும். அன்பென்னும் பொற் கயிற்ருலும் உமது வருகையின் நம்பிக்கை என்னும் வெள்ளிக்கயிற் ருலும் அதை விட்டு விலகாதபடியும் எங்கள் ஆண்டவரோடு துன்பத்திலும் துக்கத்திலும் தாழ்மையான பங்காளியாய் இருக்கும் நிலையைத் தவிர வேறு நிலைமையை விரும்பாதபடியும் இறுகக்கட்டும்.

பலிபீடத்தின் கொம்புகள் உன்னை வாவென்றழைக்கின்றன. நீ வருவாயா? சகலத்தையும் தாழ்மையாய் ஒப்படைத்துவிட்டு உன்னையே முற்றிலுமாய்த் தேவனுக்குக் கையளித்துவிடுவாயா?

ஒரு கூட்டத்தில் தேவனுக்குத் தன்னைப் பிரதிஷ்டைபண்ணப் பிரயத்தனப்பட்ட ஒரு சகோதரனுடைய கதை ஒன்று உண்டு. ஒவ்வொருநாளும் இரவில் அவன் தன்னைப் பலிபீடத்தண்டை பிரதிஷ்டை செய்தான். ஆனுல் கூட்டத்தைவிட்டுச் செல்லுமுன் சாத்தான் அவனண்டை வந்து 'அவன் எவ்விதத்திலும் வித்தியாசப் படவில்லை. ஆகையால் அவன் பிரதிஷ்டை செய்யவில்லை' என்று அவனிடம் சொல்லுவான்.

மறுபடியும் மறுபடியும் இப்படி அவன் சாத்தானுல் முறியடிக்கப் பட்டான். கடைசியாக அவன் ஒருநாள் கூட்டத்திற்குக் கோடாரி யும் முளையும் கொண்டுவந்தான். தற்பிரதிஷ்டை செய்தபின் தான் முழந்தாளிட்டிருந்த இடத்தில் முளையை அறைந்தான். அவன் கூட்டத்தைவிட்டுச் செல்கையில் வழக்கம்போல் சாத்தான், அவன் செய்ததெல்லாம் மாய்மாலம் என்று சொல்லிப்பார்த்தான்.

உடனே அவன் திரும்பிச்சென்று முளையைச் சுட்டிக்காட்டி, 'சாத்தானே, இதோ பார்; ஒரு முளையைக் காண்கிருயல்லவா? தேவன் என்னை ஏற்றுக்கொண்டார் என்பதற்கு இதுவே சாட்சி' என்ருன். உடனே சாத்தான் அவனைவிட்டு விலகினுன். அவனுக் குத் தன் தற்பிரதிஷ்டையைக் குறித்த எல்லாச் சந்தேகமும் நீங்கிற்று.

அன்பான பிள்ளையே, உன் தற்பிரதிஷ்டையைக் குறித்து சந்தேகம் ஏற்பட்டால் ஓரிடத்தில் முளை அறைந்து வை. அதுவே நீ உன்னை ஒப்புவித்துவிட்டதற்குத் தேவனுக்கும் சாத்தானுக்கும் சாட்சி யாகும்.

1 ஒரு ஆசீர்வாதந்தேடி, நீ அலைகிருயா?
தகுந்தோர் வார்த்தைக்கொண்டு தனியிடம் செல்.

2 உன் ஜெபத்தின் வாயிலாக இரட்சிப்படைய விரும்புகிருயா?
பிரயாசத்தை விட்டு நம்பி, ஓர் தனியிடம் செல்.

3 உன் ஊக்க ஜெபத்திற்கு விடை தாமதிக்கிறதா?
உன் விண்ணப்பத்தைத் துதியாய் மாற்றித் தனித்த ஓரிடம் செல்.

4 உன்னுடையதெல்லாம் அவருக்கு ஒப்புவித்து
தனித்தோரிடம் செல்லும்வரை அவருடைய சம்பூர்ண
கிருபையை நீ அறிவாய்.

## ஜூலை 15

'நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம்' (1 யோ. 5:4).

1 கோடைக்காலக் காற்று வீசி ரோஜா மணம் கமழும்போது, ஆகாயம்
நீலநிறமா யிருக்கையில், கடவுளை நேசிப்பது எளிது;
மலர் நிறைந்த பள்ளத்தாக்கிலோ அல்லது சூரிய ஒளி உள்ள குன்றிலோ
அவருடைய அருமையான சித்தத்திற்குப் பணிவது கஷ்டமல்ல.

2 மழைபொழியுங்கால், ஆகாயம் பனி மூடியிருக்கையில்,
பாதை இருளாக்—மேடு பள்ளமாயிருக்கையில்,
புலரொளி மறைந்து இருள் சூழுங்கால், அவரை நம்பி,
அவர் சொற்படி நடக்க நாம் தயங்குகிறோம்.

3 பாடும் பட்சிகள் வந்திருக்கையில் அவற்றின்
இன்னிசை இதயத்தில் ஒலிக்கையில் அவரை நம்புவது எளிது;
பாட்டு நின்று நாம் களிப்பின்றி இருக்கையில்,
சந்தேக பயங்களை மேற்கொள்ளும் விசுவாசம் தேவை.

4 நாம் நம்பிக்கையில் நிலைத்திருந்து அவர் வாக்கில் சார்ந்திருந்தால்,
நம் குறைவை நம் ஆண்டவர் தீர்ப்பார்; நம் தேவைகளை நீக்குவார்,
பாதை எளிதானாலும், கடினமானாலும், அவரே நடத்திச் செல்வார்,
ஒவ்வொருவரின் தேவைக்கும் தகுந்தவராயிருப்பார்.

கைவிடப்பட்டதுபோல் தோன்றும்பொழுது நம்பியிருப்பது; நம் குரல் கேட்கப்படாததுபோல ஒரு பதிலும் வராமலிருக்கும்பொழுது வானத்தை நோக்கிக் கூப்பிட்டுக்கொண்டே யிருப்பது; உலகமாகிய இயந்திரம் ஒரு உயிரின்மீதும் கவலையின்றி அவற்றின் மன்றாட்டிற்கு ஒரு சிறிதும் விலகாமல் தன் போக்கில் போவதுபோல் காணப்பட்டாலும், தேவன் அன்பாகவே இருக்கிறார் என்று நம்புவது; நமக்கென்று அவர் கரத்திலிருந்து வருவதைவிட வேறொன்றும் விரும்பாதிருப்பது; பசியால் சாவதாயிருப்பினும் விசுவாசம் தவறாமல் இருக்கவேண்டும் என்பதன்றி வேறொன்றிற்கும் அஞ்சாது காத்திருப்பது; இவை யாவும் உலகத்தை மேற்கொள்ளும் ஜெயங்களாம். இத்தகைய விசுவாசமே உண்மையான விசுவாசமாகும்.

—ஜார்ஜ் மக்டோனால்ட்

## ஜூலை 16

*'நீ உன் புத்திரனென்றும் உன் ஏகசுதனென்றும் பாராமல் அவனை ஒப்புக்கொடுத்து இந்தக் காரியத்தைச் செய்தபடியால் . . . உன் சந்ததியை வானத்து நட்சத்திரங்களைப் போலாக்குவேன். நீ என் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தபடியால்' (ஆதி. 22:16–18).*

அந்நாள்முதல் இந்நாள்வரை மனிதர் கர்த்தருக்குக் கீழ்ப்படிந்து, தங்களுக்குள்ளதிலெல்லாம் அருமையானதை அவருக்கு ஒப்புக் கொடுத்தால், அவர் அதே பொருளை ஆயிரமடங்கு அதிகமாக அவர்களுக்கே திருப்பிக்கொடுப்பார் என்பதை அறிந்துகொண்டு வருகிறார்கள். தேவன் கேட்டவுடனே ஆபிரகாம் தன் ஒரே மகனைக் கொடுத்துவிட்டான். அதோடு மகன் வளர்ந்து மனிதனாகித் தன் பெயரை நிலைநாட்டுவான் என்ற நம்பிக்கையும் அறவே அழிந்து போகிறது. ஆனால் மகன் திரும்ப அவனுக்கு அளிக்கப்படுகிறான். அக்குடும்பம் நட்சத்திரங்கள்போலும், கடற்கரை மணலைப்போலவும் எண்ணிக்கையில் பெருகியது. காலம் நிறைவேறினபோது இயேசு கிறிஸ்து அச்சந்ததியில் பிறந்தார்.

இவ்விதமாகவே தம் பிள்ளைகள் ஒவ்வொருவரும் ஏறெடுக்கும் பலிக்கும் தேவன் பதிலளிக்கிறார். நாம் நமக்குள்ளதையெல்லாம் ஒப்படைத்துவிட்டுத் தரித்திரத்தை ஏற்றுக்கொள்ளுகிறோம். அவர் நமக்கு ஐசுவரியத்தை அனுப்புகிறார். நாம் ஊழியம் செய்யக்கூடிய ஒரு இடத்தை விட்டுவிடுகிறோம். நாம் கனவிலும் காணக்கூடாத அவ்வளவு நல்ல இடத்தை நமக்குக் கொடுக்கிறார். நமக்கு அருமையான நம்பிக்கையை விட்டுவிட்டு நான் என்பதை அழிக்கிறோம். அவர் நமக்கு அதிக சந்தோஷ வாழ்வையும், பொங்கும் மகிழ்ச்சியையும் கொடுக்கிறார்.

இவை எல்லாவற்றிற்கும் மேலானவர் நமது கிறிஸ்து. ஆபிரகாமைப்போல், அருமையான, மேலான பொருளை நாம் அவருக்காகக் கொடுக்காவிட்டால் கிறிஸ்துவிலுள்ள பூரண இன்பத்தை அறிய முடியாது. கிறிஸ்து பிறந்த வம்சத்தலைவன் தன்னையும், தன் ஒரே மகனையும் கடவுளுக்காக இழந்துவிட ஆயத்தமாயிருக்க வேண்டியதாயிருந்தது, இந்த வம்சத்தை ஸ்தாபித்த உன்னத பிதாவும் அப்படியே தம்மையும். தம் ஏக புத்திரனாகிய கிறிஸ்துவையும் பலியாக ஒப்படைத்தார். நாமும் அவ்வம்சத்தின் ஒரு அங்கமாக அதன் சிலாக்கியங்களையும் சந்தோஷங்களையும் அனுபவிக்க வேண்டுமானால், அது அப்படிப்பட்ட பலியினாலேயேதான் கூடும். —ஜி. டர்ன்புல்

தேவன் ஏற்றுக்கொள்வதை நெருப்பின் மூலம்தான் ஏற்றுக்கொள்வார் என்பதை மறந்துபோகிறோம். இயேசுகிறிஸ்து கெத்செமனே தோட்டத்தில் மனவியாகுலம் அடைந்து, சிலுவையில் அறையப்பட்டு, கல்லறையில் வைக்கப்பட்டபின்தான் உயிரோடெழுந்து பரத்துக்கேறினார்.

மானிட ஆன்மாவே, ஆபிரகாமின் அனுபவம் விசேஷித்து அபூர்வமானது என்று எண்ணுதே. கடவுள் எவ்வாறேனும் தமக்குக் கீழ்ப்படிய விரும்புகிற ஒவ்வொரு ஆத்துமாவையும் எப்படி நடத்துகிறுர் என்பதற்கு ஒரு மாதிரியாகவே ஆபிரகாமின் ஜீவியமிருக்கிறது.

நீ பொறுமையாய்ச் சகித்தபின் வாக்குத்தத்தத்தைப் பெறுவாய். வெகு அரிதான சுய வெறுப்பை நீ காட்டும் நேரமே அதி உன்னத மகிழ்ச்சி தரக்கூடிய பாக்கியமான நேரம். தண்ணீர் ததும்பி நிற்கும் தேவனுடைய நதி கரையை உடைத்துக்கொண்டு, உன்மேல் ஐசுவரியத்தையும் கிருபையையும் வருஷிக்கும். மூடுபனிபோல் தோன்றுவது கால் வைக்கும்போது பாறையாயிருந்தாலும் அதன் மேலும் நடந்துசெல்லும் தைரியமுடையவனுக்குத் தேவன் எல்லா உதவியும் செய்வார். —எ. பி. மேயர்

## ஜூலை 17

'நான் அமர்ந்திருந்து என் வாசஸ்தலத்திலிருந்து கண்ணேக்குவேன்' (ஏசா. 18:4).

வளர்ந்து, திடசரீரம்பெற்று எத்தியோப்பியரின்மேல் அசீரியருடைய சேனை படை எடுத்தது. அவர்கள் முன்னேறுகையில் அவர்களைத் தடுத்து நிறுத்த தேவன் ஒரு முயற்சியும் செய்யவில்லை. அவர்கள் இஷ்டம்போல் செய்ய அனுமதிக்கப்படும்போல் தோன்றினது. அவர் தமது வாசஸ்தலத்திலிருந்து கண்ணேக்கமாயிருக்கிறுர். அவர்கள்பேரில் சூரிய ஒளி இன்னும் பிரகாசிக்கிறது. ஆனுல் அறுவடைக்கு முன்னுல் தோட்டக்காரரின் கத்தரிக்கோலால் இளங்கிளைகள் வெட்டப்படுவதுபோல் வெகு எளிதாய் அசீரியருடைய பெருமையான பெரிய படை முழுவதும் துரத்தியடிக்கப்பட்டது.

அமர்ந்திருந்து கண்ணேக்கமாயிருப்பது தேவனைப்பற்றிய விந்தையான எண்ணமல்லவா? அவர் அமர்ந்திருக்கிறுர். ஆனுல் இணங்கவில்லை. அவருடைய மௌனம் சம்மதத்தை காட்டவில்லை. அவர் தகுந்த வேளைக்காகக் காத்திருக்கிறுர். சரியான சமயத்தில் எழுந்தருளுவார். கொடுமைக்காரரின் திட்டங்கள் மேற்கொள்ளும்போல் தோன்றுகிற சமயத்தில் அவர்களை மேற்கொள்ளுவார். தீமையைப் பார்க்கும்போது, பொல்லாங்கு செய்பவர்கள் செழித்தோங்குவதைக் காணும்போது, நம்மைப் பகைவர்களின் கொடுமையால் நாம் கஷ்டப்படும்போது, தேவன் 'நான் அமர்ந்திருந்து கண்ணேக்குவேன்' என்று சொல்லியிருக்கும் வசனத்தைச் சிந்தனை செய்வோமாக.

இதை இன்னெரு வகையாகவும் காண்கிறோம். புயல் நிறைந்த அந்த இரவில் சீடர்கள் கஷ்டத்தோடு தண்டுவலிப்பதை இயேசு கண்டார். இலாசரு மரணப்படுக்கையாயிருந்து மாண்டு, கல்லறைக்குக் கொண்டுபோகப்படும்வரை பெத்தானியாவில் நடந்த ஒவ்

வொன்றையும் தூர இருந்து கவனித்துக்கொண்டேயிருந்தார். தம் வருகையால் மிகுந்த பயன் உண்டாகக்கூடிய வேளைக்காகக் காத்திருந்தார். அவர் உன் விஷயத்திலும் அமர்ந்திருக்கிறாரா? அவர் கவனியாதிருக்கவில்லை. அவர் யாவையும் கண்ணோக்குகிறார். உன் நாடியில் கைவைத்து அதன் துடிப்பைக் கவனமாய்ப் பார்க்கிறார். தகுந்த வேளையில் அவர் உன்னைக் காப்பாற்றுவார். அவரது கேள்விகள் எவ்வளவாயிருந்தாலும், அவர் எவ்வளவாய் ஒதுங்கி நின்றாலும், அவர் கலங்காத பயப்படாத இரட்சகர் என்பது நிச்சயமே.

1. கஷ்டப்படும் ஆத்துமாவே; பிரம்பின் கீழ் உன் பிதா பேசுகிறார், அமர்ந்திரு.
தேவன் முன் அமர்ந்திருந்து அவர் சித்தம்போல் உருவாக்க இடம் கொடு.

2 ஜெபிக்கும் ஆத்துமாவே, அமர்ந்திரு, அவர் சொல் தவறாதவர்
அவருடைய சித்தத்திற்கடங்கி, அவரில் பொறுமையாய்க் காத்திரு.

3 காத்திருக்கும் ஆத்துமாவே, அமர்ந்து திடமாயிரு
அவர் தாமதித்தாலும் நம்பிக்கையோடு காத்திரு.
அவர் அதிக நேரம் காத்திரார், நீ சந்தேகியாதே.
அவர் பிந்திவிடுவார் என்று அஞ்சாதே.

## ஜூலை 18

'தம்மைப்பற்றி உத்தம இருதயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய வல்லமையை விளங்கப்பண்ணும்படி கர்த்தருடைய கண்கள் பூமியெங்கும் உலாவிக் கொண்டிருக்கின்றன' (2 நாளா. 16:9).

அவர்மேல் தன் முழு இருதயத்தையும் வைத்து அவர் செய்ய விரும்பும் யாவற்றிற்கும் அவரையே நம்புகிற ஒரு ஆணையினும் பெண்ணையினும் உண்டோ என்று தேவன் தேடிப்பார்க்கிறார். இக்காலம் முன்னொரு காலம்போல, எந்த ஆத்துமாவைக் கொண்டும் செய்யாதவிதமாய்க் கிரியை செய்ய அவர் ஆவலாயிருக்கிறார். ஊழிய காலங்களின் இறுதி கிட்டி வருகிறது.

'தன்னை முழுவதுமாய ஒப்புவித்த ஓர் ஆத்துமாவைக்கொண்டு தேவன் என்ன அதிசயங்களை நடப்பிக்கக்கூடும் என்பதை அறிய உலகம் இன்னும் காத்துக்கிடக்கிறது.' இதுவரை தோன்றிய மக்கள் யாவரிலும் கடவுளை அதிகமாய் நேசித்து, கிறிஸ்துவே எல்லாவற்றிற்கும் எல்லாமுமாய் விளங்கத் தன்னை ஒன்றுமில்லாதவனாக்கி, தேவனுடைய சித்தத்தை விளங்கிக்கொண்டு அவரின் தாழ்மை, விசுவாசம், அன்பு, பொறுமை என்பவற்றை ஆபரணமாய்ப்

பூண்டு, யாதொரு தடையுமின்றித் தேவன் தன்னைப் பயன்படுத்த விரும்பக்கூடிய ஒருவனுக்காக உலகம்மட்டுமல்ல தேவன்தாமே காத்திருக்கிறார்.

மனிதனின் சுய மகிமையை நாடாமலிருப்பின், தேவன் மனிதனைக் கொண்டு செய்யக்கூடிய காரியங்களுக்கு ஒரு எல்லையில்லை.

ஜியார்ஜ் முல்லர் தமது தொண்ணூறுவது ஜனனத்தினத்தில் தேவ ஊழியர்களுக்குத் தம்மைப்பற்றிச் சொன்னதாவது:—'1825ஆம் வருடம் நவம்பர் மாதம் நான் குணப்பட்டேன். ஆனால் நான்கு ஆண்டுகளுக்குப் பின்தான் 1829ஆம் வருடம் ஜூலை மாதத்தில்தான் என் இருதயத்தை முழுவதுமாய் ஒப்புக்கொடுத்தேன். மண், பொன், உயர்ந்த நிலை, லௌகீக இன்பம் இவற்றைப்பற்றிய ஆசைகள் யாவும் என்னைவிட்டு நீங்கின. தேவன் ஒருவரே என் பங்கானார். எனக்கு வேண்டிய யாவற்றையும் அவரில் கண்டேன். வேறொரு வரும் எனக்கு அவசியமாகத் தோன்றவில்லை. தேவனுடைய கிருபை யால் இந்நிலைமையிலேயே ஊன்றியிருந்துவிட்டேன். அது என்னை அதிகச் சந்தோஷமுள்ளவனாக்கி, என்னைத் தேவனுக்குரிய காரியங் களை மாத்திரம் கவனிக்கச் செய்தது. என் பிரியமுள்ள சகோதரர் களே, உங்கள் இருதயத்தை முற்றிலுமாய் தேவனுக்கு ஒப்படைக் கிறீர்களா? தேவனைக் கலந்துகொள்ளாது நீங்கள் செய்ய முயன்ற காரியம் உண்டா? நான் முன்பு வேதத்தைக் கொஞ்சம் வாசிப் பேன். ஆனால் மற்றப் புத்தகங்கள்தான் எனக்கு அதிகப் பிரியமா யிருக்கும். தேவன் தம்மை வெளிப்படுத்தியுள்ள புத்தகம் எனக்கு ஆனந்தமான காரியமான பின்பு, 'கடவுள் வாக்குக்கடங்கா அன்புள்ளவர்' என்று என் இருதயத்திலிருந்து நான் சொல்ல முடிந்தது. உன் ஆத்துமாவும், 'கடவுள் அளவில்லா அன்புள்ளவர்' என்று சொல்லும்வரை நீ திருப்தி கொள்ளாதே.

இந்நாளில் என்னை ஓர் அபூர்வக் கிறிஸ்தவனாக்கவேண்டுமென்று நான் தேவனை நோக்கி ஜெபிக்கிறேன். —ஒய்ட்பீல்ட்

## ஜூலை 19

*'பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம்பண்ணாதிருப்பேனோ?' (யோ. 18:11).*

இப்படிச் சொல்வது கடலை அமர்த்திச் செத்தவர்களை உயிரோ டெழுப்புவதைவிடப் பெரிய காரியம். தீர்க்கதரிசிகளும், அப்போஸ் தலர்களும், ஆச்சரியமான அற்புதங்களைச் செய்ய முடிந்தது. ஆனால் அவர்களால் தேவ சித்தத்திற்கடங்கவோ, அன்றி அதன்படி நடக்கவோ முடியவில்லை. தேவனுடைய சித்தத்தைப் பொறுமை யாய்ச் சகித்து, அதன்படி அடங்கி நடப்பதே விசுவாசத்தின் உன்னத நிலையாக இருக்கிறது. அதுவே கிறிஸ்தவன் அடையக்கூடிய பெறுதற்கரிய பேறு.

உன்னத நோக்கம்கொண்ட ஒரு இள உயிரின் வாஞ்சைகள் முளையி லேயே நசுக்கப்படுகின்றன. நம் மனதிற்குப் பிடிக்காத வேலையைத் தினமும் செய்துகொண்டு அதினின்று விடுதலை காணுதிருக்கிறோம். நம்மால் நேசிக்கப்படுகிறவர்களுக்கும் நன்மை உண்டாகவேண்டும். அவர்கள் சௌகரியமாயிருக்கவேண்டும் என்று மாத்திரமே நாம் விரும்புகையில் தரித்திரம் நம்மைப் பீடிக்கிறது. சொஸ்தமாக்கக் கூடாத சரீர பலவீனம் நமக்குக் கால்கட்டையாயிருக்கிறது. நம்மை நேசிக்கிறவர்கள் மறைந்துபோக, வாழ்க்கையின் சுகதுக்கங்களை அனுபவிக்கத் தனியே விடப்படுகிறோம். இவ்விதமாக இடுக்கண்ணி லிருக்கையில் 'என் பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தை நான் குடிக்க வேண்டாமோ?' என்று சொல்லக்கூடியவர்களாயிருக்க வேண்டும். இதுவே விசுவாச சிகரம்; இதுவே ஆவிக்குரிய வெற்றி யின் உன்னத பதவி. செய்வதைவிடச் சகிப்பதிலேயே மிகுந்த விசுவாசம் காட்டப்படுகிறது.

நமக்காகப் பரிதபிக்கும் தேவன் வேண்டுமானுல் நமக்காகப் பாடனுபவித்த இரட்சகர் தேவை. ஒருவன் மற்றவனைப்போல் பாடனுபவித்தாலன்றி, அவனுடைய கஷ்டத்தை உணரமுடியாது.

நாம் கஷ்டம் அனுபவித்தாலன்றி, மற்றவர்களுக்கு நன்மை செய்ய முடியாது. மற்றவர்களுக்கு அனுதாபம் காட்டக்கூடியவர் களாக நாம் ஆவதற்கு நாம் கொடுக்கும் விலை நாம் அனுபவிக்கும் கஷ்டங்களே. இரட்சகராக ஒருவன் விளங்கவேண்டுமானுல் எங்கே யாயினும், எவ்வகையிலாயினும் சிலுவையை அனுபவித்தாக வேண்டும். இயேசு குடித்த பாத்திரத்தில் நாம் குடித்து, அவர் பெற்ற ஞானஸ்நானத்தை நாம் பெருவிட்டால், மற்றவர்களை ஆதாயப்படுத்துவதற்கான உன்னத மகிழ்ச்சியை நாம் பெற மாட்டோம்.

தாவீதின் சங்கீதங்களில், நமக்கு ஆறுதல் அளிப்பனவாய் விளங் கும் சங்கீதங்கள் அவன் பாடனுபவித்தபோது எழுதினவையே. பவுலின் சரீரத்தில் அந்த முள் இருந்திராவிட்டால், அவருடைய நிருபங்களில் காணப்படும் பட்சாதாபமும், அன்பும் நிறைந்த வார்த்தைகள் இரா.

உன்னை தற்சமயம் அதிகமாய் வருத்தும் காரியங்களை நீ கிறிஸ்து வுக்கு ஒப்புவித்தால் அவைகளே உன்னை நித்தியத்திற்கென்று செதுக்கி அழகு படுத்தும் நல் ஆயுதமாகப் பிதாவின் கரத்தில் விளங்கும். அவரை நம்பு; ஆயுதத்தை நீ தள்ளினுல் வேலை சரிவர நடைபெருது. 'அது கடினமாகவும் விந்தையாகவும் தோன்றலாம். ஆனுல் நமக்கு வேண்டிய பாக்கியங்கள் அதன்பின் உண்டு.' 'துன்ப மாகிய பள்ளியிலிருந்துதான் அரிதான மேதாவிகள் பட்டம் பெற்று வெளியேறுகிருர்கள்.'

## ஜூலை 20

'தேவகுமாரனாகிய இயேசு என்னும் மகா பிரதான ஆசாரியர் நமக்கு இருக்கிறபடியால்: நாம் பண்ணின அறிக்கையை உறுதியாய்ப் பற்றிக்கொண்டிருக்கக்கடவோம்.'

நாம் இரக்கத்தைப் பெறவும், ஏற்ற சமயத்தில் சகாயம் செய்யும் கிருபையை அடையவும் தைரியமாய்க் கிருபாசனத்தண்டை சேரக்கடவோம்' (எபி. 4:14,16).

நமது ஜெபத்திற்குப் பதில் கிடைக்க உதவி செய்வது இயேசுதான். அவர் பிதாவோடு பரிந்து பேசுகிறவராகவும், நமக்காக ஜெபம் செய்து வேண்டிக்கொள்ளுகிற பிரதான ஆசாரியராகவுமிருக்கிறார். இக்காலங்களில் அவருடைய முக்கிய வேலை நமக்காகப் பிதாவிடத்தில் பரிந்து பேசுதலும் ஜெபித்தலுமே. அவர் நமது குறைவான ஜெபங்களை, நமது கரத்திலிருந்து எடுத்து அவற்றைக் குற்றமறச் சுத்திசெய்து, தவறுகளைத் திருத்தி நமது இரட்சிப்பின் கிரியைக்காகவும், நீதிக்காகவும் நம் ஜெபத்திற்கு விடை தரவேண்டுமென்று பிதாவிடம் கேட்கிறார்.

சகோதரனே, நீ உன் ஜெபத்தைக் குறித்து மனத்தளர்ச்சியடைகிறாயா? மேலே நோக்கிப்பார். உனக்காகப் பரிந்து பேசுகிற பாக்கியர், உன் ஜெபத்திற்குப் பதில் தரவேண்டுமென்று உரிமையோடு கேட்கிறார். வெற்றி உன்னை நெருங்கி வருங்கால், நீ போரை நிறுத்தினால் அவருக்கு ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் கொடுப்பாய். அவர் உனக்காய், உள்ளறைக்குள் பிதாவிடத்தில் சென்றிருக்கிறார். தம் கையில் உன் பெயரை எழுதி ஏறெடுத்துவிட்டார். சிம்மாசனத்திலிருந்துவந்த, 'அது ஆயிற்று' என்ற பதிலின் எதிரொலியை உன் நம்பிக்கை உன் உள்ளத்தில் இரசியமாய்ச் சொல்லவேண்டுமென்றே பரிசுத்த ஆவியானவர் காத்திருக்கிறார்.

—எ. பி. சிம்ப்ஸன்

பரிசுத்த ஆவியானவர் நம் ஜெபத்தை ஏற்றுக்கொள்ளத் தகுதியுள்ளதாக்கவேண்டும். ஜெபத்தில் அவர் செய்யவேண்டிய வேலையைக் கவனியாதிருக்கிறோம். அவர் நமக்கு எது தேவை என்பதைக் காட்டும் அறிவைக் கொடுக்கிறார். அவைகளை உணரும் வண்ணமாய் இருதயத்தை மிருதுவாக்குகிறார். தேவ ஞானம், பலம், இரட்சிக்கும் கிருபை இவற்றைக் குறித்து நல் அறிவு புகட்டுகிறார். மனந்தளராமல் நாம் கடவுள்பேரில் நம்பிக்கைவைக்க வழி காட்டுகிறார். ஆகையால் ஜெபம் ஒரு ஆச்சரியமான காரியம். ஏற்றுக்கொள்வதற்குத் தகுந்த ஜெபம் திரித்துவத்தையும் சார்ந்திருக்கிறது.

—ஜே. ஆங்கல் ஜேம்ஸ்

## ஜூலை 21

'தேவனாலே நான் இன்னும் ஒரேவிசைமட்டும் சோதனைபண்ணட்டும் (நியா. 6:39).

விசுவாசத்திற்கு அளவுகள் உண்டு. கிறிஸ்தவ அனுபவத்தில் நமக்கு ஒரு அடையாளமாவது புத்துணர்ச்சியாவது உண்டாகாவிடில் நாம் நம்பமுடிகிறதில்லை. நாம் கிதியோனைப்போல் தோலைத் தொட்டுப் பார்க்கிறோம். அது ஈரமாயிருந்தால் அவரை நம்ப மனதுள்ளவர்களாகிறோம். இது உண்மையான விசுவாசமாயிருக்க லாம். ஆனால் இந்த விசுவாசம் குறைவுள்ளது. அது தேவனுடைய வார்த்தையோடு, ஏதோ ஒரு அடையாளத்தைத் தேடுகிறது. அடையாளமின்றிக் கடவுளை நம்புவது விசுவாசத்தில் தேர்ச்சி யடைந்ததாகும். உள்ளக் கிளர்ச்சி ஒன்றுமில்லாமலே நம்புவது சிலாக்கியமானது.

கிதியோனுக்கு அவனுடைய தோலுக்கும் மேலாக மூன்றுவது படி என்றெண்ணக்கூடிய விசுவாசம் ஒன்று உண்டு. முதல் படியான விசுவாசம் உள்ளக்கிளர்ச்சியின்றியும் நம்புவது, மூன்றுவது படி யான விசுவாசம், சந்தர்ப்பங்கள், உள்ளக் கிளர்ச்சிகள், தோற்றங் கள், மனுஷ யோசனைகள் யாவும் நேர் விரோதமாயிருந்தாலும், தேவனையும் அவருடைய வார்த்தையையும் நம்புவதாகும். இவ்வித விசுவாசம் பவுல் காட்டினார் (அப். 27:20—25). அநேக நாட்களாய் சூரியனாவது நட்சத்திரங்களாவது காணப்படாமல், மிகுந்த பெருங் காற்றும் மழையும் அடித்துக்கொண்டிருந்தபடியால் இனி தப்பிப் பிழைப்போம் என்கிற நம்பிக்கை முழுமையும் அற்றுப்போயிற்று. இப்படி எல்லாமிருந்தும் பவுல். 'ஆனபடியால் மனுஷரே, திடமனதா யிருங்கள்; எனக்குச் சொல்லப்பட்டபடி நடக்கும் என்று தேவனிடத் தில் நம்பிக்கையாயிருக்கிறேன்' என்றார்.

மற்றக் காரியம் யாவும் எதிர் விரோதமாயிருந்தாலும் அவ ருடைய வார்த்தையைப் பூரணமாய் நம்பத் தேவன் விசுவாசம் அளிப்பாராக. —சி. எச். பி,

1 நாம் எப்பொழுது நம்பவேண்டும்?
வெற்றிக் கொடி வீச, எங்கும் அமைதி நிலவ,
வாழ்க்கை வெற்றிக் கீதமும் துதியும் களிப்புமாயிருக்கும் போதோ?

அப்படியல்ல! அலைகள் கொந்தளித்து,
புயல்மேகம் வானில் சூழுங்கால்,
ஏகசப்தமாய் 'எங்களுக்கு உதவிசெய்யும்' என்று கூப்பிடுங்கால்,
நாம் நம்பிக்கையாயிருக்கவேண்டும்.

2 நாம் எப்பொழுது நம்பவேண்டும்?
சிநேகிதர் உண்மையாயிருக்கும்போதோ?
யாவும் நமக்குச் சௌகரியமாயிருந்து,
நாம் சொல்வதையும் செய்வதையும் யாவரும்
புகழும்போதோ?
அல்ல! நாம் தனியாய் விடப்படுகையில்
வசந்த காலம் மாறி தேவனைத் தவிர மற்றெல்லா உதவியும்
விலகுகையில்
நாம் நம்பிக்கையில் தரித்திருக்கவேண்டும்.

3 நாம் நம்பவேண்டிய சமயமெது?
உன் மனம்போன போக்கெல்லாம் சென்று
அதிகத் துக்கத்திற்குப்பின் நம்பி ஜெபிக்கும் அந்நாளோ?
அப்படியல்ல, நெரிந்த நாணலே!
உனக்குத் தேவையிருக்கும் இந்நேரமே
துன்பப்படும் ஆத்துமாவே, உன் தேவனை நம்பித் துரிதப்படு.

4 நாம் நம்பவேண்டிய சமயம் எது?
வானில் சூரியன் திகழ, உன்னில் நல் நம்பிக்கைமிளிர,
உன் இதயம் முழுவதும் சந்தோஷ உற்சாகம் நிரம்பி
யிருக்கையிலோ?
அல்ல! உன் மகிழ்ச்சி நீங்கி துக்கத்தால் நீ தலை குனிகையில்
தேவனைத் தவிர மற்றெல்லாம் மடிந்து குளிர்ந்து
போகையில்,
அதே அவரை நம்பும் காலமாம்.

## ஜூலை 22

'உங்களுக்கு இரங்கும்படி கர்த்தர் காத்திருப்பார் . . . அவருக்குக் காத்திருக்கிற அனைவரும் பாக்கியவான்கள்' (ஏசா. 30:18).

நாம் கர்த்தருக்குக் காத்திருப்பதுபோல் ஆண்டவர் நமக்காகக் காத்திருக்கும் அதிசயத்தையும் நினைத்துப் பார்க்கவேண்டும். கடவுளை காத்திருப்பவராகக் காண்கையில் நாம் அவருக்காகக் காத்திருக்க ஊக்கமும் உற்சாகமும் உண்டாகிறது. நாம் அவருக்காகக் காத்திருப்பது வீணுகாது என்ற நிச்சயத்தை அது தருகிறது. தேவனுக்காகக் காத்திருக்கும் அந்த ஆவி என்றால் என்ன என்பதைக் குறித்து இப்போதே ஆராய்வோமாக. நாம் அறிய முடியாத அத்தனை மகிமையான திட்டங்களைத் தேவன் தம் பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் வகுத்திருக்கிறார். 'அவர் கிருபை அளிக்கக் காத்திருப்பது உண்மையானால், நான் அவரண்டை வந்து காத்திருந்தும் நான் தேடும் உதவியை அளிக்காமல் மேலும் மேலும் அவர் காத்திருப்பதேன்' என்று நீங்கள் கேட்கலாம்.

தேவன் பூமியின் பலனுக்காகக் காத்திருக்கும் ஞானமுள்ள தோட்டக்காரர். காய்கள் கனியும்வரை அவற்றைப் பிடுங்க மாட்டார். நாம் ஆவிக்குரிய நன்மைகளையும் கடவுளின் நாமம் மகிமைப்படத்தக்கதாய், அவருடைய ஈவுகளையும் பெற எப்பொழுதும் ஆயத்தமாயிருக்கிறோம் என்பதை அவர் அறிவார். அவருடைய அன்பாகிய சூரிய ஒளியில் காத்திருத்தலே ஆத்துமாவை அவருடைய ஆசீர்வாதத்தைப் பெறத்தக்கதாய்க் கனியச் செய்யும்; ஆசீர்வாதமான மழையாய் பொழியும். துன்பம் என்னும் மேகத்தின் கீழ் காத்திருப்பதும் அதற்கு அவசியமே. நீ விரும்புவதற்கும் அதிகமாகத் தேவன் காத்திருந்தால் அவர் ஈயும் வரங்களின் மதிப்பு இரட்டிப்பதற்காகவே என்று நினை. தேவன் தமது திருக்குமாரனை உலக இரட்சகராக அனுப்புவதற்கு ஏற்ற சமயம் வர நாலாயிரம் ஆண்டுகள் காத்திருந்தார். நமது காலங்கள் அவர் கரத்திலிருக்கின்றன. தாம் தெரிந்தெடுத்துக் கொண்டவர்களுக்காகப் பழி வாங்குவார். தேவையான வேளைக்கு ஒரு மணி நேரமும் பிந்தாமல் நமக்கு உதவி புரிய விரைந்து வருவார். —**ஆண்ட்ரு மர்ரே**

## ஜூலை 23

'எப்பொழுதும், எல்லாவற்றிற்காகவும் பிதாவாகிய தேவனை ஸ்தோத்தரித்து' (எபே. 5:20).

நீ கடவுளில் நிலைத்திருந்து அவரின் பிரசன்னத்தால் சூழப்பட்டிருக்கையில் தீமை எக்காரணத்தையிட்டு எவ்வழியில் உன்னை அணுகினாலும் பரவாயில்லை. ஏனெனில் வரும் எத்தீமையும் கடவுளைக் கடந்தே உன்னை அணுகும். ஆகையால் வாழ்க்கையில் யாவிற்கும் துதி செலுத்து; தீமையாலுண்டாகும் பாவத்திற்காக அல்ல; அதன் மூலமாயும் அதனாலும் கடவுள் செய்யப்போகும் ஆசீர்வாதங்களுக்காக அவரைத் துதி. நம் ஜீவியத்தையே தேவன் துதி தோத்திரமாக்குவாரானால், அவர் எல்லாவற்றையும் ஆசீர்வாதமாக்குவார்.

ஒருநாள் ஒரு மனிதன் சில கரும்புள்ளிகள் வரைவதை நாங்கள் கண்டோம். நாங்கள் கூர்ந்து கவனித்தும், ஒரு கூட்டமான கரும்புள்ளிகளேயன்றி வேறொன்றும் காணவில்லை. பின் அவன் சில கோடுகள் கிழித்தான். சிலவிடங்களை வெறுமையாக விட்டான். ஆரம்பத்தில் ஒரு அடையாளமிட்டான். அப்போது நாங்கள் அக்கரும்புள்ளிகள் சங்கீதத்தின் இராகங்கள் என்று அறிந்தோம். அவ்வடையாளங்களின்படி பாட ஆரம்பித்தபோது,

'சகல ஆசீர்வாதங்களின் ஊற்றாகிய அவரைத் துதியுங்கள்
பூலோக வாசிகளே, அவரைத் துதியுங்கள்'

என்ற பாட்டைப் பாடினோம்.

நம் வாழ்க்கையில் அநேக கரும்புள்ளிகளும், இருண்ட இடங்களும் உண்டு. தேவன் ஏன் அவைகளை அனுப்பினார் என்று நம்மால் அறிய முடியவில்லை. ஆனால் நாம் தேவனை நம் வாழ்க்கையில் அடிக்கடி அழைத்து அவரை அப்புள்ளிகளைச் சரியாக அடுக்கித் தமது இஷ்டப் பிரகாரம் கோடுகளை வரைந்து, ஒவ்வொன்றையும் சரியாக அவ் விடங்களில் அமைக்க அனுமதித்தால் அவர் நம் வாழ்க்கையின் கரும்புள்ளிகளிலிருந்து இன்னிசை உண்டாக்குவார். அவருடைய மகத்துவமான வேலையில் தடை உண்டாக்காதிருப்போமாக.

தாழ்ந்த சுரங்கள் இல்லாவிட்டால் உயர்ந்த சுரங்களின் இனிமையை அறிய முடியாது. அதுபோலவே நிலத்திலும் கடலி லும் நிழல் இல்லாது வரையப்பட்ட சித்திரம் நம் கண்களுக்கு அழ காகத் தோன்றாது.

துன்பம் என்ன என்று அறியாமல் இரவின் இருளைக் காணாமல் நாம் வாழ்ந்தால் இன்பத்தையும், பகலின் ஒளியையும் நாம் எப்படி உணரமுடியும்?

அநேக மானிடரின் வாழ்க்கை மகத்துவம் அவர்கள் அனுபவித்த துக்கத்தின் பயனேயாம். —சி. எச். ஸ்பர்ஜன்

இசைக் கருவியின் கருப்புக் கட்டையை அழுத்தினாலும், வெள்ளைக் கட்டையை அழுத்தினாலும் இசை அதே இனிமையுடையதாகவே யிருக்கிறது. கருவியின் முழுப் பயனையும் அடைய இருவிதமான கட்டைகளும் அழுத்தப்படவேண்டும்.

## ஜூலை 24

அப்பொழுது அவர்கள் அவருடைய வார்த்தைகளை விசுவாசித்து, அவருடைய துதியைப் பாடினார்கள். ஆனாலும் சீக்கிரமாய் அவருடைய கிரியைகளை மறந் தார்கள், அவருடைய ஆலோசனைக்கு அவர்கள் காத்திராமல், வஞ்ந்தரத்திலே இச்சையுள்ளவர்களாகி, அவாந்தரவெளியிலே தேவனைப் பரீட்சை பார்த்தார் கள். அப்பொழுது அவர்கள் கேட்டதை அவர்களுக்கு கொடுத்தார். அவர்கள் ஆத்துமாக்களிலோ இளைப்பை அனுப்பினார்' *(சங். 106:12—15)*.

'மோசே காணப்படாத கடவுளைக் காண்பதுபோல் காத்திருந் தான்' என்று வாசிக்கிறோம். இஸ்ரவேல் புத்திரரோ, அதற்கு நேர் விரோதமாயிருந்தார்கள். காரியங்கள் அவர்களுக்கு அனுகூலமா யிருந்தபோது மட்டுமே சகித்திருந்தார்கள். அரூபியான நித்திய தேவன்மேல் சார்ந்திருப்பதற்குப் பதிலாக, ஐம்புலன்களின் ஆசை இச்சைகளினால் ஆளப்பட்டு வந்தார்கள்.

தற்காலத்தில் நாம் வெளி உலகில் அதிகமாய் உழல்வதாலும், தேவனை முக்கியமாய்க்கொள்ளாமல் சந்தர்ப்பங்களைச் சிலாக்கிய மாய்க்கொள்வதாலும், சமயா சமயக் கிறிஸ்தவர்களாக வாழ்க்கை

நடத்துகிறோம். நாம் எல்லாவற்றிலும் அவரைக் காணவேண்டுமென்றும், அவரிடமிருந்து நமக்குச் செய்தி கொண்டுவரும் ஒன்றையும் அற்பமாக எண்ணக்கூடாதென்றும் தேவன் விரும்புகிறார்.

இங்கே இஸ்ரவேல் புத்திரரைக் குறித்து வாசிக்கிறோம். 'அப்பொழுது அவர்கள் அவருடைய வார்த்தையை விசுவாசித்தார்கள்.' அவர்கள் கண்களால் காணும்வரை நம்பவில்லை. அவருடைய கிரியைகளைக் கண்டபோது விசுவாசித்தார்கள். செங்கடலண்டை வந்தபோது கடவுளைக் குறித்துச் சந்தேகித்தார்கள். ஆனால் மோசே வழியைத் திறந்து அவர்களைச் செங்கடலைக் கடக்கச் செய்து, பார்வோனையும் அவன் சேனைகளையும் அழித்தபோது கண்டு அவர்கள் விசுவாசித்தார்கள்.

இவ்விதமான விசுவாசத்தால் அவர்கள் வாழ்க்கை ஒரே சீராயிராமல் உயர்வு தாழ்வுகளுக்குள்ளதாயிருந்தது. அவர்கள் விசுவாசம் சந்தர்ப்பத்தைப் பொருத்ததாயிருந்தது. அவ்விதமான விசுவாசம் தேவனுக்கு விருப்பமில்லை.

உலகம் 'காண்பதே நம்புகிறது' என்கிறது. ஆனால் தேவன் காண்பதற்கு விசுவாசம் வேண்டுமென்று விரும்புகிறார். சங்கீதக்காரன் 'ஜீவனுள்ளோரின் தேசத்திலே, தேவனுடைய மகிமையைக் காண்பேன் என்று விசுவாசியாதிருந்தால் நான் கெட்டுப்போயிருப்பேன்' என்கிறார். நீ சந்தர்ப்பங்கள் அனுகூலமாயிருக்கும்பொழுது மட்டும் விசுவாசிக்கிறவனா? அல்லது சந்தர்ப்பங்கள் எவ்வாறாயிருப்பினும் எப்போதும் விசுவாசிக்கிறவனா?

நாம் காணாதவைகளை நம்புவதே விசுவாசம். நாம் நம்புவதைக் காண்பதே விசுவாசத்தின் பரிசு. —பரி. அகஸ்டீன்

## ஜூலை 25

'நான் செய்வதினனதென்று இப்பொழுது நீ அறியாய், இனிமேல் அறிவாய் என்றார்' (யோ. 13:7).

நாம் தேவனுடைய கிரியைகளில் அரைகுறையான பூரணமடையாத ஓர் பகுதியையே பார்க்கிறோம். பூரணமடைந்த நித்திய ஆலயத்தில் யாவும் சரியாகப் பொருந்தியிருப்பதைக் காண்போம். இஸ்ரவேலின் மிகப் பெரிய அரசரின் காலத்தில் லீபனோன்மலை உச்சிக்குச் செல்லுங்கள். அங்கே பெரும் புயலோடு மல்யுத்தம் செய்து, யாவிலும் உன்னதமாய் நிற்கும் கேதுரு மரங்களைப் பாருங்கள். வசந்த காலத்தில் அதன் உச்சியில் புன்னகை ஒளி விடுகிறது. இரவு இறகுபோன்ற அதன் இலைகளின்மேல் பனித்துளிகளைத் தெளிக்கிறது. பட்சிகள் அதன் கிளைகளில் கூடுகளைக் கட்டுகின்றன. அதனடியில் களைத்த யாத்திரிகர், அலைந்து திரிந்த

மேய்ப்பர் வெய்யிலுக்கும் காற்றுக்கும் ஒதுங்குகிறார்கள். திடீரென்று ஒருநாள் அது வெட்டப்பட வேண்டியதென்று குறியிடப்பட்டது. காட்டில் வயோதிக இராட்சதனை, அம்மரம் விறகுவெட்டியின் வெட்டுக்குச் சாயவேண்டியதாயிற்று.

அதின் முடிச்சு முடிச்சான அடிமரத்தில் கோடாரியின் முதல் வெட்டு விழுகையில், பின் அதன் கிளைகள் நறுக்கப்படுகையில், இறுதியாக 'தெய்வ மரம்' என்னப்பட்ட இது முறிந்து தரையில் சாய்கையில் இப்படி அவசியமொன்றுமின்றி, இயற்கை என்ற ஆலயத்தின் தூண்போன்ற இம்மரம் வெட்டப்பட்டதே என்று தோன்றுகிறது. தீர்க்கதரிசிகளுடன் சேர்ந்து மற்றத் தாழ்ந்த மரங்களையும் கூவி அழைத்து அவைகளை அனுதாபப்படச் சொல்லுகிறோம். 'கேதுரு மரம் விழுந்தது. காட்டு மரங்களே அலறுங்கள்' என்று அழைக்கிறோம்.

ஆனால் சற்றுப் பொறுங்கள். ஈராமின் வேலையாட்கள் அதன் பருத்த அடிமரத்தை மலையின் அடிவாரத்திற்குத் தள்ளிச் செல்வதைப் பாருங்கள். அங்கிருந்து மத்தியத்தரைக் கடலில் மிதந்து செல்கிறது. இறுதியாய் அது மெருகிடப்பட்டு அழகிய உத்தரமாகத் தேவாலயத்தில் விளங்குகிறது. அது மகா பரிசுத்த ஸ்தலத்தில், மாபெரும் இராஜனின் அரண்மனையில் நாட்டப்படும் இம்முடிவைக் குறித்து நாம் குறைகூறுவோமா? இந்த விலையேறப்பெற்ற பொருள் அந்த உன்னத ஸ்தானத்தில் பதிக்கப்பட்ட 'லீபனோனின் கிரீடம்' சிதைக்கப்பட்டதைப்பற்றி நாம் எரிச்சலடைவோமா?

கேதுரு முன்பு இயற்கை ஆலயதத்தின் அழகிய தூணாய்த் துலங்கினது. பிந்திய அதன் வாசஸ்தலம் முந்தியதைவிட அதிகக் கண்ணியம் வாய்ந்ததே.

நம்மில் எத்தனை ஆத்துமாக்கள் அக் கேதுரு மரத்தைப்போலிருக்கிறார்கள். கடவுளின் சோதனையாகிய கோடாரி அவர்களை உரிந்து வெறுமையாக்குகிறது. ஒரு உன்னத நோக்கத்தை இறுதியில் வைத்துள்ளார் என்பதைத் தவிர இதற்கு வேறு காரணம் கூற இயலாது. அவர்களை அவருடைய பரம சீயோனில் தூண்களாகவும், உத்திரங்களாகவும் வைக்கவும் ஆண்டவர் கரத்தில் மகிமை நிறைந்த கிரீடமாய் விளங்கச் செய்யவுமே அவர்கள் சோதனை அனுபவிக்கிறார்கள்.

—மாக்டப்

என் துன்பத்தைப் புரிந்துகொண்டு
என் வழியைக் காண்பதற்கு நான் ஆசைப்படவில்லை
உம் கரத்தைப்பற்றிக்கொண்டு
உம்மையே இருளிலும் பின்பற்றுவேன்
அதையே நித்தம் நாடுவேன்.

## ஜூலை 26

'நாங்களோ நீதி கிடைக்குமென்று ஆவியைக்கொண்டு விசுவாசத்தினால் நம்பிக்கையோடு காத்திருக்கிறோம்' (கலா. 5:5).

வாழ்க்கையில் எனக்கு யாவும் இருண்டு தோன்றும் நேரங்கள் உண்டு. நம்பிக்கைக்காகக்கூட நான் காத்திருக்கவேண்டும். அளவுக்குச் சில சமயங்களில் இருளாய்த் தோன்றும். நம்பிக்கையில் காத்திருப்பதே கடினமாய்த் தோன்றும். ஒரு காரியம் வெகு நாட்களாய் நிறைவேறாமல் வேதனை அளிக்கிறது; ஆனால் நம்பிக்கைக்காகக் காத்திருப்பதும், காரியம் கைகூடாததுபோல் காணப்படும் கை நெகிழவிடாதிருப்பதும், காரிருள் மூடியிருப்பினும் விண்மீன் தோன்றலாமென்று ஜன்னலைத் திறந்து வைப்பதும், என் இதயம் வெறுமையாயிருந்தும் தாழ்வானதொன்றும் அதை நிரப்ப விரும்பாதிருப்பதும் அதிக உன்னதமான பொறுமையே. அப்பொறுமையைத் துன்பப் புயலில் யோபுக்கும், மோரியா மலையில் ஆபிரகாமுக்கும், மீதியான் வனாந்தரத்தில் மோசேக்கும், கெத்செமனே தோட்டத்தில் மனிதகுமாரனுக்கும் இருந்த பொறுமைக்கு இணையாகக் கூறலாம். 'அரூபியான கடவுளை நீ தரிசனமாய்த் தரிசிக்கக் காத்திருக்கும் பொறுமைபோல் சாலச் சிறந்ததொன்றுமில்லை. அதுதான் நம்பிக்கைக்குக் காத்திருத்தலாகும்.'

பொறுமையை நீர் பூரண பொலிவுள்ளதாக்கியிருக்கிறீர். பொறுமையைத் தெய்வமாக்கியிருக்கிறீர். பிதாவின் சித்தமே குமாரனின் சித்தமாகையால், பிதாவின் சித்தத்தைப் பொறுமையாய் அங்கீகரிக்கக் கற்பித்திருக்கிறீர். ஒரு ஆத்துமா தனக்களிக்கப்படும் பாத்திரத்தில் துன்பம் தவிர வேறொன்றையும் காணாவிட்டாலும், பிதாவின் கண் தன் கண் காணக்கூடாத தூரத்தைக் காண்கிறது என்கிற நிச்சயத்தில், அதை ஏற்றுக்கொள்ளலாமெனத் தெளிவாய்க் கற்பித்திருக்கிறார்.

கெத்சேமனேயில் உம்மில் திகழ்ந்த தெய்வீகப் பொறுமையை எங்களுக்கீயும்; நம்பிக்கைக்காகக் காத்திருக்கும் சக்தியை எங்களுக்குத் தாரும்; விண்மீன்கள் தோன்றாவிடினும், ஜன்னல் வழியே அதை நோக்கும்படி தூண்டும்; எங்கள் முன் தோன்றும் சகல சந்தோஷமும் மறைந்தாலும் நாங்கள் சோர்ந்துபோகாமல் பொறுமையாயிருக்கப் பெலன் அளியும். இவ்வித நிலைமையிலும், 'என் பிதாவின் கண்களுக்கு அவை இன்னும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன' என்று சொல்ல வரம் தாரும். நம்பிக்கைக்காகக் காத்திருக்கக் கற்றுவிட்டால், உன்னதப் பலனடைந்தவராவோம்.

—ஜார்ஜ் மத்தீசன்

மோட்சம் என்று சொல்லப்படும் அறியப்படாத பொருள் காணப்படும் பொருளுக்கருகிலிருப்பதாக அந்தி, சந்தி, மத்தியான வேளைகளிலும் உணர்ந்து, உலகில் வாழ்க்கை நடத்தும் ஒரு சில விசுவாசிகளைப்போல் ஜீவிக்க முயல்வோமாக.

## ஜூலை 27

'என்னைச் சோதித்துப் பாருங்கள்' (மல். 3:10).

'என் பிள்ளையே, வானத்தில் பலகணிகள் உண்டு' என்றுதான் தேவன் இங்கே சொல்லுகிறார். 'அவை இப்போதும் உபயோகப் படுகின்றன. அவற்றின் தாழ்ப்பாள்களை முன்போலவே இலகுவாய்த் திறக்கமுடியும். அவற்றை அடைத்துப் பொருள்களை உள்ளே வைத் திருப்பதைவிட திறந்து பொருள்களை வெளியேற்றி ஏராளமாய்க் கொடுப்பதே என் ஆசை. மோசேக்காக நான் அதைத் திறந்த போது செங்கடல் இரண்டாய்ப் பிளந்தது. யோசுவாவுக்காகத் திறந்தபோது யோர்தான் நதி பின்னேக்கிச் சென்றது. கிதியோனுக் காக நான் அவற்றைத் திறந்தபோது சேனைகள் முறியடிக்கப் பட்டன. நீ என்னைப் பலகணிகளைத் திறக்க அனுமதித்தால் நான் உனக்குத் திறப்பேன். பலகணிகளின் உட்புறத்தில் பரலோகம் ஆதிகாலத்திலிருந்ததுபோலத் திரண்ட ஐசுவரியங்கள் நிறைந்ததா யிருக்கிறது. ஊற்றுக்கண்களும் ஓடைகளும் நிரம்பி வழிகின்றன. பொக்கிஷ அறை வெகுமதிகளால் நிறைந்ததாயிருக்கிறது. குறைவு என் பக்கத்தில் இல்லை. குறை உன்னிடமே யிருக்கிறது. நான் காத்துக்கொண்டிருக்கிறேன். என்னை இப்போது சோதித்துப் பார். என் பாகத்துக்குரிய நிபந்தனையை நிறைவேற்று. பத்தில் ஒரு பங்கைக் கொண்டு வா, 'எனக்கு ஆசீர்வதிக்கச் சமயம் அளி.'

மல். 3:10ஆம் வசனத்திற்கு என் அன்னை அளித்த அர்த்தத்தை நான் ஒருபொழுதும் மறக்கமுடியாது. அந்த வசனம் 'நீங்கள் பத்தி லொரு பங்கைக் கொண்டுவாருங்கள்' என்று ஆரம்பித்து 'இடங் கொள்ளாமல் போகுமட்டும் உங்களை ஆசீர்வதிப்பேன்' என்று முடி கிறது. அதற்கு என் தாய், 'அவர் கேட்பதையெல்லாம் கொடுத்து விடுங்கள்,' அவர் வாக்குக் கொடுப்பதையெல்லாம் பெற்றுக் கொள்ளுங்கள்' என்று அர்த்தம் கூறினார்கள்.

—எஸ். டி. கார்டன்

தேவ சக்தி நம்மேலான ஜெபத்திற்கும் அதிக மேலானது. நான் கடவுளிடம் அநேகந்தரம் விண்ணப்பித்த விஷயங்களை நினைத்துப் பார்த்தேன். நான் என்ன பிரமாதமாய்க் கேட்டுவிட்டேன்? சமுத்திரம் நிறைய ஜலமிருக்க நான் ஒரு கோப்பை ஜலம் மட்டுமே கேட்டேன். மாபெரிய சூரியனிருக்க ஒரு கதிர் ஒளி மட்டுமே நான் விரும்பினேன். என் பரம தகப்பன் எனக்குக் கொடுப்பதைவிட நான் வேண்டிக்கொள்வது வெகு குறைவே. தேவ கிருபை நாம் கேட்க முடியாதபடி அளவற்றது. —ஜே. எச். ஜோவெட்

நதிபோன்ற உம் கிருபை வெள்ளத்தில் நான் கேட்பதொன்றே, நல்வாக்குத்தத்தங்கள் ஒவ்வொன்றிலும் என் பெயரை எழுதும் (எபே. 1:8–19).

## ஜுலை 28

*'கர்த்தருடைய வழி சுழல் காற்றிலும், பெருங்காற்றிலும் இருக்கிறது' (நாகூம் 1:3).*

ஹென்றி வார்ட் பீச்சர் என்பவர் பின்வரும் சம்பவத்தை எழுதியுள்ளார்: 'நான் இளைஞனாயிருக்கையில் பிரசன்ட் மலையின்மீது பூர்வகால இதிகாசங்களை ஆராய்ச்சி செய்யும் ஒரு குழுவினருடன் சென்றிருந்தேன். அம்மலையின் உயரமான ஒரு இடத்தில் நாங்கள் அமர்ந்து பள்ளத்தாக்கிலிருந்து எழும்பின ஒரு பெருங்காற்றைக் கவனித்தோம். வானங்களில் இருள் சூழ்ந்தது. பூமி இடியின் முழக்கத்தால் அதிர்ந்தது. அப்போது அங்குள்ள வெளியின் அலங்காரம் முழுவதும் மாறினதுபோலவும், இனி ஒருபோதும் அவ்வழகு திரும்பிவராததுபோலவும் தோன்றினது.

'புயல் காற்று சீறிவீசிப் பள்ளத்தாக்கைக் கடந்து சென்றது. மறு நாள் அதே இடத்திற்குச் சென்று அந்தப் பயங்கரமான புயலும் இருளும் எங்கே? என்று வினவினால், புயல் ஒரு பகுதி என்னில் இருக்கிறது' என்று சொல்லியிருக்கும். காட்டுச் சிவந்தி, மற்றும் மலர்கள், கனிகள் ஒவ்வொன்றும் 'புயலின் ஒரு பகுதி எங்களில் பிரகாசிக்கிறது' என்று சொல்லும்.

'நீ உன் ஆண்டவரைப்போலுன்னை ஆக்கும்படி ஜெபித்ததுண்டா? ஆவிக்குரிய கனி கொடுக்க நீ ஆசைப்பட்டதுண்டா? அன்பும் பட்சமும் வேண்டுமென்று ஜெபித்ததுண்டா? அப்படியானால் தற்சமயம் உன் வாழ்க்கையில் மோதும் புயலைக் கண்டு அஞ்சாதே. அந்தப் புயலில் ஆசீர்வாதம் உண்டு. அதற்குப்பின் நீ நற்பலனைக் காண்பாய்.

வானத்தின் வருத்தம் நிறைந்த வதனத்திலிருந்து உதிரும்
கண்ணீரால் மலர்கள் வாழ்கின்றன;
கண்ணீர் ததும்பும் கண்களின்றி, வாழ்க்கையில் ஆனந்தமில்லை,
உன் துக்கத்தை நீ நேசி, உன் வருத்தத்தின்
பின் வரும் பயனை நீ அறிவாய்
அழகு நிறைந்த வானவில்லைத் தேவன் கண்ணீரால் நிர்மாணித்துள்ளார்.'

—ஹென்றி எஸ். சட்டன்

## ஜுலை 29

*'உறைந்த மழையின் பண்டசாலைக்குள் நீ பிரவேசித்தாயோ? . . . ஆபத்து வருங்காலத்திலும், கலக்கமும் யுத்தமும் வருங்காலத்திலும் பிரயோகிக்கும்படி நான் அவைகளை வைத்திருக்கிறேன்' (யோபு 38:22,23).*

நம்முடைய துன்பங்கள் நமக்குப் பெரிய தருணங்கள். நாம் அவைகளைத் தடைகள் என்று எண்ணுகிறோம். நாம் ஒவ்வொருவரும் இதுமுதல் ஒவ்வொரு கஷ்டத்தையும், அது தேவன் நமக்குத் தமது

அன்பைக் காட்டும் வழி என்று அறிந்து அவருடைய மகிமையைக் காணத் தேடுவோமானுல், அதுவே ஆறுதலேயும் ஊக்கத்தையும் அளிக்கும். அப்போது ஒவ்வொரு மேகமும் வானவில்லாய் ஒவ்வொரு மலேயும் கிறிஸ்து பரமேறின மலேயாகவும் மறுரூபமான மலேயாகவும் தோன்றும்.

கடந்துபோன நாட்களேக் குறித்துச் சிந்தனே செய்வோமானுல், நாம் கஷ்டப்பட்டு நெருக்கப்பட்ட தருணங்களே, பரமபிதா நமக்கு அதிகபட்சமான காரியங்களேச் செய்யவும் நமக்கு மிக விலேயுயர்ந்த பாக்கியங்களே ஈயவும் தெரிந்தெடுத்த சமயங்கள் என்பதைக் காண் போம். தேவனுடைய ஈவு வரங்களாகிய ஆபரணங்கள் ஒழுங்கீன மான பொட்டலங்களில் சுற்றப்பட்டு, கறுப்பு ஆடை அணிந்த வேலேக்காரர்கள்மூலம் அனுப்பப்படுகின்றன. ஆனுல் அவற்றுள் இராஜாவின் பொக்கிஷத்திலுள்ள பொருள்களும், மணவாளனின் அன்பு உண்டு. —ஆர். பி. சிம்ஸன்

இருளில் அவரை நம்புங்கள். நமக்கு விளங்காதவிதமாய்க் காரியங்கள் நடந்தபோதிலும், உறுதியான விசுவாசத்தால் அவரைக் கனப்படுத்த வேண்டும். அப்படிப்பட்ட விசுவாசத்திற்கு வரும் பலன் கழுகுக்கு மறுபடியும் இனிமையும் பலமும் உண்டாகும் வண்ணமாய் அதன் இறக்கைகள் புதிதாவதுபோலிருக்கும்.

இன்றைய தினத்துக்கு அப்பால் நடக்கப்போகின்றவற்றைத் தேவன் காண்பதுபோல நாமும் காணக்கூடுமானுல் மேகங்கள் அனேத்தும் விலகி நிழலும் ஓடி மறைத்தால், தற்கால துயரத்தை யெண்ணி நாம் கலங்கமாட்டோம். ஒவ்வொரு துன்பத்தையும் விரைவில் மறந்துவிடுவோம். ஏனென்னில் அநேக இன்பங்கள் நமக் காகக் காத்திருக்கின்றன.

இன்றைய தின்த்துக்கப்பால் நடப்பவற்றைத் தேவன் காண்பது போல நாம் காணக்கூடுமானுல், என்ன அருமையான பொருள்களே இழந்துவிடுகின்ருேம். ஏன் நாம் கண்ணீர் சிந்தும்படி நேரிடுகிறது? ஏன் இருளுக்குப்பின் ஒளி தோன்றுகிறது? ஏன் கஷ்டமான பாதைகள் விரைவில் சுலபமானவையாகிவிடுகின்றன என்பனவற்றை அறிவோம்.

வாழ்வில் உள்ள தவறுகள் ஒருநாள் திருத்தப்படும் என்று நம்பிக்கை நமக்கு அறிவிக்கின்றது. நாமே கண்டுகொண்டால், அறிந்துகொண்டால் நல்லது என்று நாம் அடிக்கடி கூறுகின்ருேம். ஆனுல் தேவன் அன்பினுல் நமக்கு முன்னுள்ள பாதையை நாம் காணுதபடி திரையிட்டு மறைக்கிருர். நாம் முன்னுல் இருப்பதை அறிய முடியாததால் இன்னும் அதிகமாக அவரை நெருங்கிச் சேர்கிருேம். நம் வாழ்க்கை முழுவதிலும் அவர் நம்மை வழி நடத்துவார். அவரை நாம் நம்பிக் கீழ்ப்படிவோமாக.

## ஜூலை 30

'ஒரு கலசம் தண்ணீர் மாத்திரம்' (மத். 10:42).

நான் என்ன செய்யவேண்டும்? நான் உலகத்தை ஒரு தடவை மாத்திரமே கடந்து செல்வேன். எந்த மனிதனுடைய ஆத்துமாவுக் காயினும், எந்த மிருகத்திற்காயினும் நான் செய்யக்கூடிய ஊழி யத்தையும், காண்பிக்கக்கூடிய அன்பையும் செய்யக்கூடிய எந்த நல்ல வேலையையும் இப்போதே செய்வேனாக. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களை நான் கைவிடாதிருப்பேனாக. ஏனெனில் நான் இவ் வழியே திரும்பச் செல்லமாட்டேன். 'குவேக்கர்களது ஒரு பழஞ் சொல்.'

1 அருமையான பிள்ளையே, நீ செய்ததல்ல,
நீ செய்யத்தவறின காரியங்களே
மாலை மயங்கும் வேளையில்,
உன் மனதிற்குக் கஷ்டம் உண்டாகும்
நீ பேசாத பட்சமான வார்த்தை,
நீ எழுத மறந்த ஆறுதலான கடிதம்,
நீ அனுபவிக்கக்கூடிய மலர்கள்
இரவில் உன்னை வருத்தும்.

2 நீ அகற்றியிருக்கக்கூடிய,
உன் சகோதரனுக்கு இடஞ்சலாயிருந்த,
நீ உன் அவசரத்தில் சொல்லாதொழிந்த
உண்மையான உயர்ந்த ஆலோசனை,
உனக்கு நேர்ந்த மிகுந்த கஷ்டத்தில்
நினைக்க உனக்கு ஓய்வில்லாததால் விட்ட
அன்பாய் அணைத்தும் தேற்றும் ஆதரவான மொழி
இவையே உன்னைக் கஷ்டப்படுத்தும்.

3 இவ்விதமான சில அன்பின் செய்கைகளை
அளிக்க எளிதில் மறந்துவிடுகிறோம்.
இவ்விதமாய் மனிதன் தேவதூதரின் பணியை
இயற்றும் சந்தர்ப்பங்கள் உண்டு.
இரவில் அமைதியான வேளையில் நம்பிக்கை தடுமாறி நிலை
குலைகையில், விசுவாசம் தளர்கையில்
அவை மனதில் வேதனை உண்டாக்கும்.

4 ஏனெனில் வாழ்நாள் மிகக்குறுகினதே
அதில் துன்பம் துக்கம் அதிகம்
நம் கஷ்டங்களை உன்னிப் பிறர்க்குக் காட்ட
நினைத்த அன்பைப் பிந்தவிடுகிறோம்.

சூரியன் அஸ்தமிக்குங்கால் நீ செய்த காரியமல்ல, நீ செய்யாமல் விட்ட காரியமே உன் மனதை மிக வருத்தும்.

உனக்குள்ளதைக் கொடு. நீ நினைப்பதைக் காட்டிலும் மற்றொரு வனுக்கு அது அதிகப் பயன்படலாம். —லாங்பெல்லோ

## ஜூலை 31

*'தன் கைகளின் திறமையினால் அவர்களை நடத்தினான்' (சங். 78:72).*

நீ போகவேண்டிய வழியைக் குறித்து உனக்குச் சந்தேகம் உண்டாகும்போது, உன் எண்ணங்களை முற்றிலுமாய்த் தேவனிடம் ஒப்புவித்து, அவரை நோக்கிச் சரியான பாதை ஒன்றைத் தவிர மற்றெல்லா வழிகளையும் உனக்கு முன்பு அடைத்துப் போடுமாறு வேண்டிக்கொள். இடையிட்ட வேளையில் நீ செல்லும் பாதையிலேயே செல். வேறு பாதை உனக்குக் காட்டப்படாத வரை நீ இப்போது சென்றுகொண்டிருக்கும் பாதையே அவருடைய பாதை என்பதற்கு அது அடையாளமாகும். படிப்படியாய் நீ போய்க்கொண்டிருக்கையில், அவர் உனக்கு முன்னாகப்போய் நீ அறியாமல் போயிருக்கக்கூடிய மற்ற வழிகளை அடைத்திருப்பதைக் காண்பாய். ஆனால் இவைகளுக்கப்பால் அவர் ஒரு பாதையை வைத்திருக்கிறார் என்பது நிச்சயம். அதன் வழியே உள்ளே செல். அப்போது சந்தர்ப்பம் என்னும் ஆறு திரும்பும் இடத்தை முகமுகமாய்க் காண்பாய். அது மிகுந்த சந்தோஷமானதும், கனவிலும் கண்டிராத ஆழமும் அகலமுமானதுமாயிருக்கும். அதில் உன் படகைச் செலுத்தினால், அது விரிந்து உன் வாழ்க்கைப் படகை கடலில் கொண்டு போய்ச் சேர்க்கும்.

தேவன் அடிக்கடி நம்மைச் சமய சந்தர்ப்பங்களைக்கொண்டு நடத்துகிறார். ஒரு சமயம் அப்பாதை முழுவதுமாய் அடைப்பட்டிருப்பதுபோல் தோன்றும். வெகு சீக்கிரம் ஓர் அற்பக் காரியம் நிகழும். அது பிறர் பார்வைக்கு முக்கியமாய்த் தோன்றாவிடினும், விசுவாசியின் பழகிய கண்களுக்கு பெரிய காரியத்தைக் காட்டும். ஜெபத்திற்கு விடையாக, இதே காரியம் பலவகையாகக் காட்டப்படும். அவை தற்செயலாக நடப்பவை அல்ல. அவை நாம் போக வேண்டிய வழியைக் காட்டும் சமய சந்தர்ப்பங்களாகும். நாம் இலக்கை நோக்கிச் செல்லுங்கால் அவ்வித வழி நடத்துதலை அதிகதிகமாய்க் காணலாம். புகைவண்டியில் இராப்பிரயாணஞ் செய்பவர்களுக்குப் பட்டணத்தை அணுகுகையில், ஆங்காங்கு விளக்குகள் தோன்றுவதுபோல் தேவ வழி நடத்துதல் இருக்கும்.

—எப். பி. மயர்

உனக்கு வழி காட்டும்படி நீ இயேசுவிடம் சென்றால், அவர் உனக்கு வழி காட்டுவார். ஆனால், அவர் உனக்காகத் தயாரித்திருக்கும் திட்டத்தைக் காட்டி, உன் அவநம்பிக்கையையோ, உன் குறைவான விசுவாசத்தையோ ஏற்றார். அவர் உனக்கு ஒரு வழியைக் காட்டுவார். நீ அதற்குள் நம்பிக்கையோடு சந்தோஷமாய் முன்னேறிச் சென்றால், மேன்மேலும் வழிகாட்டுவார்.

—ஹேரஸ் புஷ்நல்

1 அலைகடலில் என் எளியபடகு செல்லுங்கால்
கடுங்காற்றும் கொடு அலையும் சீறி அதன்மேல் மோதுகையில்
ஆழக்கடலில் இருட்டில் பயங்கர பாறைகள் உண்டு,
ஆனால், என் மாலுமி அவைகளையும் இன்னும் அதிகமும்
அறிவார்.

2 விளக்குகளெல்லாம் அணைந்து எங்கும் இருள் சூழ்கையில்
என் எளிய படகு எத்துறையை அடையுமோவென்று நான்
அங்கலாய்க்கையில்
இரவு நீடித்திருப்பினும், யாவும் குழப்பமாயிருப்பினும்,
தூரத்தில் நான் அடையவேண்டிய துறையை என் பரம
மாலுமி அறிவார்.

—தாமஸ் கர்டிஸ் கிளார்க்

## ஆகஸ்ட் 1

'உங்களை மரித்தோரிலிருந்து பிழைத்திருக்கிறவர்களாக, உங்கள் அவயவங்களைத் தேவனுக்கு ஒப்புக்கொடுங்கள்' (ரோ. 6:13).

'பிரதிஷ்டை' செய்வதைக் குறித்துச் செய்த பிரசங்கத்தைக் கேட்க நான் ஒருநாள் போயிருந்தேன். அப்பிரசங்கத்தில் யாதொரு விசேஷமும் எனக்குத் தோன்றவில்லை. ஆனால், அப்பிரசங்கியார், ஜெபத்திற்கு முழந்தாளிட்டுப் பின்வரும் வாக்கியத்தைச் சொன்னார். 'என் ஆண்டவரே, எங்களுக்காகத் தன்னுயிர் தந்த அன்புள்ள மனிதனை நாங்கள் நம்பலாம் என்பதை நீர் அறிவீர்' என்றார். அதுவே எனக்குக் கிடைத்த புதிய செய்தி. நான் அவ்விடம்விட்டுப் புகைவண்டி நிலையத்திற்குச் செல்கையில், என் ஆத்துமாவைப் பிரதிஷ்டை செய்வதின் கருத்தை, ஆழ்ந்து யோசித்துக்கொண்டே நடந்தேன். என் மனதில் திகில் உண்டாயிற்று. வண்டிகளின் சப்தங்களினூடே எனக்கு ஒரு செய்தி உண்டாயிற்று. அதென்னவென்றால், 'உனக்காயுயிர்விட்ட அம்மனிதனை நீ நம்பலாம்' என்பதே.

நான் வீட்டிற்குப்போக இரயில் ஏறினேன். புகைவண்டி போய்க்கொண்டிருக்கையில், என் ஆத்துமாவைப் பிரதிஷ்டை செய்வதால் வரக்கூடிய மாறுதல்களையும், சுயவெறுப்பையும், ஏமாற்றங்களையும் எண்ணினேன். எனக்கு பயமுண்டாயிற்று.

நான் வீட்டிற்குச் சென்று, என் அறைக்குள்போய், முழங்காலில் நின்று என் பழைய வாழ்க்கையைக் குறித்து எண்ணலானேன். நான் கிறிஸ்தவன், சபையில் ஊழியம் செய்தேன். நான் ஓய்வுநாள் பள்ளியின் மேற்பார்வையாளராய்ச் சேவை செய்தேன். ஆனால், ஒருபோதும் திட்டமாய் என் ஜீவியத்தைத் தேவனுக்குக்கென்று ஒப்புக்கொடுத்ததில்லை.

என்றாலும் என் மனதிற்குகந்த, என் வாழ்க்கைத் திட்டங்கள் மாறிப்போம், நான் ஆசையாய் எதிர்நோக்கின காரியங்களைச் சரணாகதியாக ஒப்படைக்கவேண்டும், நான் விரும்பி வேண்டின வேலையை நான் விட்டுவிடவேண்டும் என்று எண்ணினபோது பயந்தேன்.

இவற்றிலும் சிறந்தவைகளைத் தேவன் எனக்காக என் ஆத்துமாவிற்காக வைத்திருக்கிறார் என்பதை நான் உணரவில்லை. ஆகையால், என் ஆத்துமா பின்வாங்கினது. பின் கடைசி முறையாக என்னை முழுவதும் மாற்றும் சக்தி வாய்ந்த செய்தி என் உள்ளத்தின் ஆழத்தில் உதித்தது. 'என் பிள்ளையே, உனக்காயுயிர்விட்ட கடவுளை நீ நம்பலாம். நீ அவரை நம்பாவிடில், பின் யாரை நம்புவாய்' என்ற செய்தி என் உள்ளிந்திரியத்தில் பளிச்சென்று தோன்றினது.

அப்போது எனக்கு மறு உறுதி உண்டாயிற்று. 'என்னை நேசித்து எனக்காகத் தன் ஜீவனைவிட்ட கடவுளை என் ஜீவியத்தின் சகல காரியங்களுக்கும் நம்பலாம்' என்ற உண்மை மின்னொளிபோல் என் உள்ளே உதித்தது.

சிநேகிதரே! நமக்காகத் தம் ஜீவனைவிட்ட கடவுளை நம்பலாம். நமக்கு அவசியமில்லாத திட்டங்களை அவர் சிதறடிப்பார். நமக்கு நன்மையான தேவ நாம மகிமைக்கு உகந்த திட்டங்களை அவர் நிறைவேற்றுவார். இவ்வுலகில் உனக்கு எவ்வகையிலும் மேன்மையுண்டாக்கும் வழியிலே உன்னை நடத்துவார் என்று நம்பலாம்.

—ஜே. எச். மேக்

நான் பாவிதான் . . . அன்பாக நீர்
நீங்காத் தடைகள் நீக்கினார்,
உமக்குச் சொந்தமாக்கினார்,
என் மீட்பரே வந்தேன்.

உலகிற்காகச் செலவழிக்கப்படவேண்டியது முதல்.

## ஆகஸ்ட் 2

'என் மலைகளை எல்லாம் வழிகளாக்குவேன்' (ஏசா. 49:11).

தேவன் இடையூறுகளைத் தம் அரிய சேவைக்காகப் பயன்படுத்துவார். நம் ஜீவியத்தில் கடக்கக்கூடாத மலைபோன்ற இடுக்கண்கள் உண்டு. நம் ஆவிக்குரிய ஜீவிய வளர்ச்சியைத் தடை செய்யும் மானிடரும், காரியங்களும் உண்டு. நமது கஷ்டங்கள்—அசௌகரியமான வேலை, மாமிசத்திலுள்ள முள், நம் அன்றாடச் சிலுவை—நம்மைவிட்டு நீங்கினால், நாம் தூய, அன்பான, மாசற்ற ஜீவியம் செய்யலாம் என்று எண்ணுகிறோம். அடிக்கடி அவை நம்மை விட்டகலவேண்டும் என்றும் பிரார்த்திக்கிறோம்.

ஜீவியம் நம்மை உயர்த்த அல்ல, தாழ்த்தவே செய்யும். பரலோகம் நமக்கு மேலானது. ஆகையால், நாம் எப்போதும் மேல்நோக்கிய பார்வை உடையவர்களாயிருக்கவேண்டும். சில மனிதர் மகா உன்னத ஜீவியத்திற்கு அவசியமான சுய வெறுப்பு, இச்சை அடக்கம், தன்னேயே ஒப்புக்கொடுத்தல் முதலிய அரிய காரியங்களை வெறுத்து உழைப்பின் மூலமாகக் கஷ்டங்களின் மூலமாக, மேன்மையடைய விரும்புகிருர்கள். பச்சைப் புல் மைதானத்தில், மெத்தென்று போடப்பட்டிருக்கும் பாதை மூலமாய் மேன்மையடைய முடியாது. ஆனுல், உன் சொந்த கரங்களால் வெட்டியுண்டாக்கிய பாதையின் மூலமாய் மேன்மையடையலாம். நீ மலையின் உன்னத காட்சியைக் காண உச்சியை அடையப்போகிருயா?

### திடன்கொள்!

1 நாம் சொப்பன உலகில் விளையாடிச் செல்ல இங்கில்லை
நமக்குக் கடின உழைப்பும், பாரச் சுமையுமுண்டு.
போராடப் பின்வாங்காதே; எதிர்த்து நில்
அது தேவனுடைய ஈவு.

2 நாட்கள் பொல்லாதவை. இது யார் தப்பு என்று எண்ணுதே
கையைக் கட்டி வாளா விருத்தல் வெட்கம்
எழுந்து நில், தேவ நாமத்தில்
தைரியமாய்ப் பேசு.

3 பாவம் எவ்வளவு திடமாய் ஊன்றி நின்ருலும்
போர் பயங்கரமாய் நீடித்திருந்தாலும்
அஞ்சாதே! போரைத் தொடர்ந்து நடத்து,
வெற்றிக்கீதம் நாளைத் தினம் பாடலாம்.

—மால்ட்டீ டி. பாப்காக்

## ஆகஸ்ட் 4

'இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து, பிதாவே, நீர் எனக்குச் செவி கொடுத்தபடியினுல் உம்மை ஸ்தோத்தரிக்கிறேன்' என்ருர் (யோ. 11:41).

இது வழக்கமில்லாத புதுமையான முறை. லாசரு இன்னும் கல்லறையினுள் இருக்கிருன். உயிரோடெழுப்புமுன், இயேசு ஸ்தோத்திரம் செலுத்துகிருர். அந்த ஆச்சரியமான கிரியை முடிந்த பின், அதாவது லாசரு உயிரோடெழுந்தபின், அவர் நன்றி செலுத்தியிருக்கவேண்டுமென்று நான் எண்ணினேன். ஆனுல், இயேசு தாம் பெறப்போகும் ஈவிற்காக ஸ்தோத்திரம் செலுத்துகிருர். தயாளமான நன்கொடையை வாங்குமுன் நன்றி ததும்புகிறது. அந்த ஈவு கட்டாயம் கிடைக்கும் என்கிற நிச்சயத்தினுலேயே அவர் நன்றி செலுத்துகிருர். போர் நடக்குமுன் வெற்றிக்கீதம் பாடப்படுகிறது.

விதைக்கிறவன் அறுப்புக்கீதம் பாடுகிறுன். அது அற்புதத்திற்குமுன் ஸ்தோத்திரம் ஆகிறது.

சிலுவை வீரர் போர்களத்திற்குப் புறப்படுகையில், வெற்றிக்கீதம் பாடச்சொல்ல யாருக்கு நினைவு உண்டாகும். பெருத நன்மைகளுக்காக நாம் ஸ்தோத்திரக் கீதம் பாட எங்கே கேட்டிருக்கிறேம்? ஆனல், நமது ஆண்டவர் செய்த புது முறையில் புதுமை ஒன்றுமில்லை. காரணமில்லாத காரியம் ஒன்றுமில்லை. அற்புதம் நிகழுமுன் துதி செலுத்துவது அற்புதம் நிகழ்வதற்கு ஓர் அவசியம் ஆயத்த ஊழியமாகும். ஆவியின் வன்மையினுல் அற்புதங்கள் நடக்கின்றன. நம் விசுவாச அளவிற்கேற்றவாறு ஆவியின் வலிமையுமிருக்கும்.

—டாக்டர் ஜோவெட்

'துதி காரியங்களை மாற்றும்'

நம் ஜெபத்தில் தேவனுக்கு உகந்த பாகம் துதியே. ஒருவன் தன் ஜெபத்தில் ஏறெடுக்கும் துதியே ஆசீர்வாதத்தைக் கொண்டு வரும். நான் சீனுவில் ஒருகால் இவ்விதமாய் ஒரு பெரிய ஆசீர்வாதம் பெற்றேன். எங்கள் வீட்டிலிருந்து துக்க செய்தி வந்தது. என் ஆத்துமா ஆழ்ந்த துக்கத்தால் நிறைந்திருந்தது. நான் ஜெபித்தேன். என் துக்கம் மாறவில்லை. சகித்துக்கொள்ள முயற்சி செய்தேன், என் துக்கம் அதிகரித்தது. அப்போது நான் ஒரு உள்நாட்டு ஊழியனின் வீட்டிற்குச் சென்றேன். அங்கு ஓர் பலகையில் 'துதி செலுத்திப் பாருங்கள்' என்ற வாசகத்தைக் கண்டேன். நான் துதித்துக்கொண்டேயிருந்தேன். இமைப்பொழுதில் என் துக்கம் மறைந்தது. நான் என் துக்கத்தை மறந்தேன். 'ஆண்டவருக்குத் துதி செலுத்துவது நலமான காரியம்' என்று சங்கீதக்காரன் சொல்வது சரியே. —ஹென்றி டபுள்யூ ப்ராட்ஸ்

## ஆகஸ்ட் 5

'இருக்கிறது' (2 கொ. 12:9).

அதிக சோதனைகளும் வேதனைகளும் நிறைந்திருந்த நேரத்தில், தேவன் என் இளைய குழந்தையைத் தம்மிடம் எடுத்துக்கொள்ளச் சித்தமானர். என் சிறு குழந்தையின் சடலத்தைக் கல்லறையில் சேமித்துவிட்டுத் திரும்புகையில் சோதனைகளின் பயனைக் குறித்து ஜனங்களுக்கு ஒரு பிரசங்கம் செய்ய நான் கடமைப்பட்டிருப்பதை உணர்ந்தேன்.

மறு ஓய்வுநாளில் வாசிக்கும்படியாகக் குறிக்கப்பட்ட வேத பகுதியில் மேற்குறித்த் வசனம் இருந்தது. அவ்வசனமே என் ஜனங்களுக்கும் எனக்கும் தேவன் அனுப்பிய செய்தி என்று அதையே பிரசங்க வாக்கியமாய்த் தெரிந்தெடுத்தேன். பிரசங்கக் குறிப்புகளை ஆயத்தம் பண்ணுகையில், அந்த வசனம் சத்தியம் என்று மனதாரச்

'மந்தபுத்தியுள்ள மூடர்களே' தூய வாழ்க்கைக்குத் தீரா அவசிய மானவை அவைகளே! நமக்குக் கிடைக்க வேண்டுமென்று கெஞ்சும் கிருபை வரங்களும் குணலட்சணங்களும், நம்மில் உருவாகவே, மேற்சொன்ன கஷ்டங்கள் நம் ஜீவியத்தில் வைக்கப்பட்டுள்ளன. பொறுமைக்காக நீண்ட காலம் நீ ஜெபித்து வருகிறாய். நீ உனக்கு தாங்கக்கூடாதபடி கோபத்தை மூட்டும் ஒரு காரியமிருக்கிறது. நீ அதைவிட்டு ஓடுகிறாய். அதற்கு விலகிச் செல்கிறாய். நீ விரும்பு வதை அடைய முடியாததற்குக் காரணமே அதுதான் என்கிறாய். அது விலகினால் உனக்கு இரட்சிப்பும், ஜெயமும் கிட்டும் என்கிறாய்.

அப்படியல்ல! நீ பொறுமையை இழப்பதற்கான சோதனை நின்றுபோம். ஆனால், அது பொறுமையல்ல. இப்பொழுது சகிக்கக் கூடாதவைகளாக உனக்குத் தோன்றும் இச்சோதனைகள் மூலமாக மாத்திரமே நீ பொறுமையை அடைய முடியும்.

திரும்பிப்போ! அடங்கியிரு. இயேசுகிறிஸ்துவின் பொறுமையில் பங்குண்டு என்று உரிமைகொள். இயேசுவின் மூலமாய் உன் சோதனைகளைப் பார். நீ உன்னத நிலையடைய முடியாதபடி உன்னைப் பயமுறுத்தும், கோபப்படுத்தும் சோதனைகளே உன்னை உன்னத ஜீவியத்திற்கு அழைத்துச் செல்பவை. அவைகள் அவருடைய மலைகள், அவரே அவைகளை அங்கு வைத்தார். தேவன் தம் வாக்கை நிறைவேற்றத் தவறார் என்று நாம் நன்கு அறிவோம். 'தேவன் அவ்வழியையும் அவ்விடத்தையும் அறிவார். ஏனெனில், தேவன் பரலோகத்தின்கீழ் பூலோகிலுள்ள யாவையும் பூமியின் ஒரு முனையி லிருந்து மறு முனைவரை காண்கிறார்.' நாம் மலையடிவாரத்தை அடையும்போது பாதையைக் காண்போம்.

தேக்கு மரம் புயலினால் சோதிக்கப்படுவது மட்டுமன்றி உறுதி யாக்கவும்படுகிறது. அதுபோல் சோதனைகள் நம் தகுதியை விருத்தி செய்யவே உண்டாகின்றன.

## ஆகஸ்ட் 3

'புருஷராயிருங்கள், திடன்கொள்ளுங்கள்' *(1 கொ. 16:13).*

சௌகரியமான கஷ்டமில்லாத வாழ்க்கை வேண்டுமென்று ஜெபிக்காதீர்கள். கஷ்டங்களைச் சகிக்கப் பலமுள்ளவர்களாயிருக்க வேண்டுமென்று ஜெபியுங்கள். ஊக்கத்திற்கான உழைப்பிற்கல்ல. உழைப்புக்கவசியமான ஊக்கத்திற்காகப் பிரார்த்தியுங்கள். அப்பொழுது நீங்கள் செய்யும் ஊழியம் அற்புதமாயிராமல், நீங்களே ஒரு ஆச்சரியமான சக்தியாய் விளங்குவீர்கள். —பிலிப்ஸ் புருக்

சுலபமான சுயேச்சையான ஜீவியத்தின் மூலமாய்த் தேவன் நம்மை மகத்துவமான ஜீவியத்திற்கு நடத்துவதில்லை என்பதை நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும். சுலபமான, சௌகரியமான

சொல்ல முடியாதவனுயிருந்ததை உணர்ந்தேன். நான் முழந்தாளிட்டு, 'தேவனே, உமது கிருபை எனக்குப் போதுமானதாயிருக்கச் செய்யும்' என்று ஜெபித்தேன். இவ்வாறு ஜெபித்துக் கண் விழித்த போது என்முன் கண்ணுடிச் சட்டத்தில் எழுதப்பட்டுள்ள ஒரு வாக்கியத்தைக் கண்டேன். அதை என் அன்னையார் சில நாட்களுக்கு முன்னர்தான் எனக்கு அளித்தார்கள். நான் என் மகள் மரித்த இடத்திற்குச் சென்றிருக்கும்போது நான் இல்லாத வேளை என் அறையில் அவ்வசனத்தைத் தொங்கவிடும்படி என் வேலைக்காரனுக்குச் சொல்லியிருந்தேன்.

நான் வீட்டிற்குத் திரும்பினபோது அதைக் கவனிக்கவில்லை. நான் மேல்நோக்கியவண்ணம் என் கண்களைத் துடைத்துக்கொண்ட போது, என் பார்வை அவ்வெழுத்துக்களின்மேல் விழுந்தது. அதிலுள்ள வசனம் 'என் கிருபை உனக்குப் போதும்' என்பது. 'போதும்' என்ற வார்த்தை பச்சை நிறத்தில் பார்வையாய்ச் சித்திரிக்கப்பட்டிருந்தது. 'என்', 'உனக்கு' என்ற வார்த்தைகள் வேறு வர்ணத்தில் தீட்டப்பட்டிருந்தன.

ஒரு நொடியில் அச்செய்தி என்னுள்ளத்தில் பாய்ந்தது. 'உமது கிருபை எனக்குப் போதுமானதாயிருக்கட்டும்' என்று ஜெபித்த என்னைக் கண்டிப்பதுபோலிருந்தது. போதுமானதாய் அளிக்கப் பட்டிருக்கும் கிருபையை, நீ கேட்பது எவ்வளவு துணிகரம் என்று எச்சரிப்பதுபோலிருந்தது. இப்போது இருப்பதைவிட அவர் கிருபை இன்னும் போதுமானதாயிருக்கமுடியாது. நீ அதை நம்பு. அது உண்மை என்று காண்பாய். ஏனென்ருல், தேவன் மாறுபாடின்றி தெளிவாய் 'என் கிருபை உனக்குப் போதுமானதாயிருக்கிறது' என்று சொல்லுகிருர். 'என்', 'இருக்கிறது' 'உனக்கு' என்ற வார்த்தைகள் அந்த நேரத்தில் தானே அழிக்கக்கூடாதபடி என் மனதில் பதிந்துகொண்டன. கர்த்தருக்கே தோத்திரம். அந்நாள் முதல் இந்நாள் வரை அச்சத்தியத்தை என் வாழ்க்கையில் உணர்ந்து வருகிறேன். எனக்குக் கிடைத்த செய்தி இதுவே. அதை உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். தேவனுடைய சத்தியத்தை ஜெபமாகவோ அல்லது நம்பிக்கையாகவோ பிரயோகிக்க வேண்டாம். உண்மையாகவே நம்புங்கள். நீங்கள் நம்புகிற பிரகாரம் அதைச் சக்தி உள்ளதாகவே காண்பீர்கள்.

—எச். வெப்பெப்ளோ

1 பாரம் அதிகமானுல் அதிகக் கிருபை அளிப்பார்,
வேலை மிகுதியானுல் மிகுந்தபெலன் ஈவார்,
துக்கம் அதிகமானுல் இரக்கம் அதிகரிக்கும்,
சோதனை பெருகினுல் தேவபெலன் பெருகும்.

2 நமது பொறுமை குறையும் பொழுது
நாள் முடியுமுன் பெலன் குன்றும்போது,
சதா சேமித்து வைத்தவை குறைவுறும்பொழுது,
பிதாவின் பூரண ஈவு பொலிவுடன் விளங்கும்.

3 அவர் அன்பிற்கு அளவில்லை,
கிருபைக்குக் கங்கு கரையில்லை,
இயேசுவினிடமுள்ள அவரின் நிறைந்த ஐசுவரியத்திலிருந்து,
அவர் மேலும்மேலும் கொடுக்கிறார்.

## ஆகஸ்ட் 6

**'வாடையே! எழும்பு: தென்றலே; வா. கந்தப் பிசின்கள் வடிய என் தோட்டத்தில் வீசு' (உன். 4:16).**

இந்த ஜெபத்தின் கருத்தைச் சிறிது நேரம் சிந்தித்துப் பாருங்கள். இனிய கந்தமுள்ள வாசனைத் திரவியம் மரங்களில் மறைந்து கிடப்பதுபோல், நற்குணங்கள் விருத்தியடையாமலும், பயன் படுத்தபடாமலும், கிறிஸ்தவனின் இருதயத்தில் புதைந்து கிடக்க லாம் என்ற சத்தியத்தை மூலாதாரமாகக்கொண்டது அந்த ஜெபம். ஊழியத்திற்குரிய அநேக செடிகள் உண்டு. ஆனால், பூமியிலிருந்து தூய அன்பு அல்லது தெய்வீகக் கிருபை என்ற வாசனை கமழுகிற தில்லை. வாசனை மரங்கள்மீதும் முட்செடிகள்மீதும் ஒரே காற்று தான் வீசுகிறது. ஆனால், ஒருவகை மரம் மட்டுமே வாசனை அளிக்கிறது.

சிற்சில சமயங்களில் தேவன் துன்பங்களாகிய காற்றைத் தம்முடைய பிள்ளைகளின்மேல் நற்குணங்கள் விருத்தியடையும்படி அவர்கள்மேல் வீசச்செய்கிறார். நெருப்புப் பந்தம் அங்குமிங்கும் ஆட்டினால் நன்றாய் எரிவதுபோலும், அகில் கட்டை நெருப்பில் எரிக்கப்படுகையில் நற்கந்தம் அளிப்பதுபோலும், கிறிஸ்தவனின் உன்னதப் பண்புகளும் லட்சணங்களும் துன்பம், பகை முதலிய வாடையினால் வெளியேற்றப்படுகின்றன. நொறுக்கப்பட்ட ஆத்துமா தேவனுக்குகந்த சுகந்த வாசனையை அளிக்கிறது.

1 மனுஷீக அன்பு நிறைந்த விலையுயர்ந்த
தைலப்புட்டி ஒன்று நான் வைத்திருந்தேன்.
அதை இதயத்தின் ஆழத்தில் வைத்திருந்தேன்,
அதன் கந்தம் வீணாய்ப் போகுமென்று திறவாதிருந்தேன்.

2 ஒருநாள் ஒரு பெரிய துக்கம்
அதிகப் பாரமாய் என் இதயத்தை அழுத்தினது.
அரிதான இனிய விலையுயர்ந்த
தைலப் புட்டியின்மேல் விழ அது சுக்கு நூறாயிற்று.

3 இப்படி அது வீணானதற்காக—என்
இதயம் அதிகமாய்த் துக்கித்தது—இப்படி வருந்துகையில்,
தெய்வீகக் கிருபையின் அற்புதம் ஒன்று கண்டேன்.
என் மனுஷிக அன்பு தெய்வீக அன்பாக மாறி,
இதயம் மடிவுற்ற ஆன்மாக்கள் மீது,
சொஸ்தமாக்கும் தைலமாய் ஊற்றப்பட்டது.
அப்போது மெல்லிய அன்பான ஓர்குரல்
'என் பிள்ளேயே! இந்நேரமுதல் புறப்பட்டுப்போய்
நீ தேற்றப்பட்டபடியே, பிறரைத் தேற்று,
நொறுங்குண்ட இதயத்தின் அன்பால் உவகைக்குண மாக்கிய
என்னேடு ஐக்கியப்படுவாய்' என்று கூறியது.

## ஆகஸ்ட் 7

'அவர்கள் ஜெபம் பண்ணினபோது, அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்தது. அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினல் நிரப்பப்பட்டுத் தேவ வசனத்தைத் தைரியமாய்ச் சொன்னர்கள். கர்த்தராகிய இயேசுவின் உயிர்த்தெழுதலைக் குறித்து அப்போஸ்தலர்கள் மிகுந்த பலமாய்ச் சாட்சி கொடுத்தார்கள்' (அப். 4:31–33).

கிறிஸ்மஸ் இவான்ஸ் என்பவர் தம்முடைய நாட்குறிப்புப் புஸ்தகத்தில், பின்வருவாறு எழுதியுள்ளார்: ஒரு விஷயமாய் ஒரு ஓய்வு நாளன்று அதிகாலையில் தனித்தவராகக் குதிரைமீது சென்றுகொண்டிருக்கையில், தம் இருதயம் கடினப்பட்டிருப்பதுபோல் அவருடைய மனசாட்சிக்குத் தோன்றினதாம். அச்சமயம் நிகழ்ந்ததை அவர், 'குதிரையை ஓர் மரத்தில் கட்டிவிட்டுத் தனித்த இடத்திற்குச் சென்று, என் ஜீவியத்தை ஆராய்ந்தேன். துக்கத்தால் மனம் நொறுங்கித் தேவ சமுகத்தில் காத்திருந்தேன். பின் என் உள்ளத்தில் பாவ மன்னிப்பின் இனிய உணர்ச்சி உண்டாயிற்று. தேவனல் பரிசுத்த ஆவியின் ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டேன். கதிரவன் மேல் திசை நோக்கிச் செல்லுங்கால், ரஸ்தாவுக்குத் திரும்ப வந்து என் குதிரைமீதேறி, என் வேலைக்குச் சென்றேன். மறுநாள் மலையருகில் கூடிவந்த திரளான ஜனங்களுக்குப் புது வல்லமையுடன் பிரசங்கித்தேன். ஓர் எழுப்புதல் அந்நாளில் உண்டாகி, அநேகரை ஆவிக்குள் ஆக்கிற்று' என்று எழுதுகிறர்.

கிறிஸ்துவுக்குள் மறுபிறப்படைந்தவர்களை நாம் ஒரு கேள்வி கேட்கலாம். அதாவது, 'நீ விசுவாசிக்க ஆரம்பித்தபின் பரிசுத்த ஆவியைப் பெற்றிருக்கிறயா?' என்பதே. ஆதிச் சபையாரின் அடையாள வார்த்தை இதுவே.

1 உன் வாழ்க்கை பரிசுத்த ஆவி நிறைந்ததா?
உன் ஆத்துமா பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட்டிருக்கிறதா?
பரம இராஜாவின் பிள்ளேயே! அவர் உன்னுள் வசிக்கிறரா?
உன் முகத்தில் அவருடைய சாயல் தெரியுமாறு
அவர் உன் ஆத்துமத்தில் ஆளுகை செய்கிறரா?

2 கடலைப்போல் உன் ஆத்துமாவைச் சுத்திகரித்துள்ளாரா?
தேவ ஆவி நித்தமும் உன்மேல் தங்குகிறதா?
உன் கவலையை நீக்கி, உனக்குக் களிப்பு அளித்தாரா?
உன் ஜெபத்திற்கு விடையளித்து, உன்னை நடத்தி ஆசீர்
வதித்தாரா?
இயேசுவால் எங்கேயும் நடத்தப்படுவது உனக்கு இனிமையா?

3 ஒவ்வொரு மணிநேரமும், உன் அருகில் உன்துணையா
யிருக்கிறாரா?
அவர் உன்னில் வசித்து, உன்னை பலத்தால் இடைகட்டு
கிறாரா?
சிலுவையில் அறையுண்டவரின் கிருபையினால்
எல்லாக் காரியங்களையும் செய்யலாம் என்னும் அறிவைத்
தந்துள்ளாரா?
தமது மகிமையின் சுதனைக்குறித்து உனக்குச் சாட்சி
கொடுக்கிறாரா?

4 வான அக்கினியால் உன் களிம்பு நீங்கச் சுத்திகரித்திருக்
கிறாரா?
அவர் உன் நினைவில் முதல்வரா? உன் முழு அன்பும்
அவருடையதா?
சுய வெறுப்பும் அவர் சேவையும் உனக்கு இனிப்பா?
அவர் சித்தம் நிறைவேற்றுவது உன் போஜனமா?
அவர் கட்டளைப்படி, அவர் பணிசெய்ய உன்கால்
விரைந்துசெல்கிறதா?

5 உன் ஆசாபாசத்தினின்று உன்னை விடுவித்துள்ளாரா?
தேவையுள்ள உன் சகோதரனுக்கு சேவை செய்ய
முந்துகிறாயா?
இயேசுவின் போர்வீரனாய்த் துன்பம் சகிக்கிறாயா?
தேவன்பேரிலுள்ள உன் நம்பிக்கை உறுதியானதா?
உனக்குப் பொறுமை, தாழ்மை, அன்பு, தூய்மை, ஆகியவை
உண்டா?

6 உன்னத தேவ ஆவி நிறைந்த வாழ்க்கை உனதாகலாம்
உன்னத ஒளி பெற்று நீ வாழலாம்
தூய ஆவியால் நீ நிரப்பப்படலாம்
கர்த்தருடைய சித்தம் அதுவே.

## ஆகஸ்ட் 8

'தேவரீர் நீர் என்னுடைய இராஜா, யாக்கோபுக்கு இரட்சிப்பை (ஜெயத்தைக்) கட்டளையிடும்' (சங். 44:4).

நமது இரட்சகர் ஜெயிக்காத எந்த சத்துருவும், அவருடைய கிருபையின் வளர்ச்சியில் உனக்குப் பகைஞனாகவும் கிறிஸ்தவ ஊழியத்தில் உனக்கு எதிரியாகவும் வருவது கிடையாது.

நீ அவைகளைக் குறித்துப் பயப்பட அவசியமில்லை. நீ அவைகளைத் தொடும்பொழுது அவை பறந்துபோம். தேவன் அவைகளை உன் கையில் ஒப்புக்கொடுப்பேன் என்று வாக்களித்திருக்கிறார். பலமடைந்து திடமனதாயிரு, பயப்படாதே திகையாதே. அதிக வல்லவரோடு இருப்பதால் நீங்கள் பலசாலிகளே. ஆண்டவர் உங்களோடு இருக்கிறார். வெற்றிக்கு உரிமை கொண்டாடுங்கள்.

—ன் சத்துரு உன்னை அணுகுகையில் வெற்றி உன்னுடைய தென்று ஜெய கீதம் பாடு. உன் மனமும் மாமிசமும் தளர்ச்சியடையும்போது மேலே நோக்கிப் பார்த்து வெற்றியை உன்னுடைய தாக்கிக்கொள்.

கிறிஸ்து தமக்காகமட்டுமலல நம்மெல்லாருக்காகவும் வெற்றி அடைந்தார். அவ்வெற்றியில் உனக்கும் பங்குண்டென்று நிச்சயப் படுத்திக்கொள். அவர் வெற்றியடைகையில் நீ அவரில் இருந்ததை எண்ணி வெற்றியை உன் சொந்தமாக்கிக்கொள்.

வெற்றியைச் சொந்தமாக்கிக்கொண்டு கொள்ளைப் பொருளைச் சேர். அரணான பட்டணங்களைக் கண்டு நீ அதைரியப்பட வேண்டாம். வெற்றியடைந்த கோடாகோடி ஜனங்களில் நீயும் ஒருவன். இரட்சகரின் வெற்றியில் உன் பங்கைப் பெற்றுக்கொள்.

—யோசுவா மேயர்

நாம் இராஜகுமாரர், நாம் நம் உரிமைகளைப் பெறத் தவறுவதாலும் அவைகளைக் குறித்துச் சந்தேகிப்பதாலும், அவருடைய தெய்வீக இராஜரீகத்தைக் கனம்பண்ணுகிறவர்களாகமாட்டோம். இராஜ குடும்பத்தில் இராஜகுமாரனுக்குரிய உரிமைகளை நாம் உறுதிப்படுத்துவதாலும், வாரிசுரிமைகளை நாம் பெற்றுக்கொள்வதாலும் அவர் ஆளுகையைக் கண்யப்படுத்துகிறவர்களாவோம்.

## ஆகஸ்ட் 9

*'உம்மில் பெலன் கொள்ளுகிற மனுஷன் பாக்கியவான் . . . அழுகையின் பள்ளத் தாக்கை உருவ நடந்து, அதை நீரூற்றுக்கிக்கொள்ளுகிறார்கள்' (சங். 84:5,6).*

கவலையற்றுக் குதூகலமாயிருப்பவர்களுக்கு ஆறுதல் உண்டாகிறதில்லை. தேவ ஈவுகளில் விலைமதியா ஈவு. 'ஆறுதலே'. இதை அனுபவிக்கவும், இதனால் அவரோடு உடன் ஊழியராக ஆயத்தப் படவும், நாம் பள்ளத்தாக்கின் ஆழத்திற்குப் போகவேண்டும்.

நமது ஆத்துமாவாகிய சோலையில் இருள் சூழும்பொழுது இலைகள் மூடி, மலர்களும் ஒளியற்றுக் கூம்பியிருக்கும்பொழுது, தெய்வீகப் பனி துளித்துளியாக விழுகிறது. இப்பனி எத்தகைய காரிருளிலும் நமக்குக் கிடைக்கும். சூரிய ஒளி இல்லாதபோதுதான் இப்பனி விழும்.

1 நான் அழுகை துக்கம் வேதனை என்னும் பள்ளத்தாக்கைக்
கடந்து சென்றிருக்கிறேன்.
அப்போது என் அருகில் என்னைத்தாங்க
'சகல ஆறுதலின் தேவன்' என்னோடிருந்தார்.

2 பூமிக்கு மேகமும் சூரிய உஷ்ணமும் தேவையாயிருப்பதுபோல்
நமது ஆத்துமாவுக்கு இன்பமும், துன்பமும் தேவை.
களிம்பை நீக்கத் தங்கம் உலையிடப் படுவதுபோல்,
நம்மைத் தேவன் அடிக்கடி துன்பமாகிய உலையிலிடுகிறார்.

3 துன்பமாகிய பள்ளத் தாக்கினூடே, அவர் நம்மை
நடத்துகையில்
அவரின் சர்வ வல்ல கரத்தைக் காண்கிறோம்.
ஏனெனில் அவர் நமக்கனுப்பும் துக்கங்களும், சோதனைகளும்
அவர் கிருபைப் பாடங்களின் பகுதியே.

4 நம் துன்ப துக்கங்களைக் கண்டு நாம் அஞ்சுகையில்
பரம தகப்பன் அறிவார் என்பதை மறக்கிறோம்.
துன்ப துக்கங்களை அதிகம் அனுபவித்தோர்,
ஆசீர்வாதமாக அநேகருக்கு மிகுந்த ஆதரவாயிருப்பார்.

5 நமக்குத் துன்பம் மெத்த அவசியமென்று அவர் நன்கு
அறிவார்
ஓர் ஞானமான நல்ல இலக்கை அவர் முன் வைத்துள்ளார்.
இருண்ட பள்ளத்தாக்கில் அவர் இனிய குரல்
'நான் செய்ததை இனிமேல் நீ அறிவாய்' என்கிறதே.

6 வாழ்க்கையின் இருண்ட பள்ளத்தாக்கினூடே நாம்
செல்கையில்
அவரின் அன்பின் ஊற்றுகள் புதிதுபுதிதாய்க் கிளம்புகின்றன.
நமக்குக் கட்வுள் அனுப்பிய துக்கமும் சோதனையும்
மாறு வேடம் பூண்ட ஆசீர்வாதங்களே என்று அறிவோம்.

7 ஆகையால் நாம் அவர் நடத்துமிடமெல்லாம்
பின்செல்வோம்
பாதை இருளானாலும், வெளிச்சமானாலும் கவலையில்லை.
ஏனெனில் 'நமதாண்டவர் உதவி அளிக்க வல்லவர்
இரவிலும் கீதம் பாடச் செய்கிறவர்' என்றறிவோம்.

## ஆகஸ்ட் 10

*அவன் வியாதியாயிருக்கிறதாக அவர் கேள்விப்பட்டபொழுது, தாம் இருந்த இடத்தில் பின்னும் இரண்டு நாள் தங்கினார்' (யோ. 11:6).*

இந்த அதிசயமான அதிகாரத்தின் ஆரம்பத்தில் 'இயேசு மார்த்தாளையும் அவள் சகோதரியையும், லாசருவையும் நேசித்தார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. கர்த்தரின் செயல்கள் எவ்வளவாய் விளங்காதவைகளாயிருந்தாலும், முடிவில்லாத, மாறாத,

பாரபட்சமற்ற அவர் அன்பை நாம் நம்பவும், எடுத்துரைக்கவும் வேண்டுமென்பதே அதன் பொருள். அன்பு வேதனை உண்டாக இடம் கொடுக்கிறது. அந்தச் சகோதரிகள் இயேசு மற்றெல்லா வற்றையும் விட்டு விரைவாய் வந்து தங்கள் சகோதரன் மரண மடையாதபடி தடுத்துக்கொள்வார் என்பதைக் குறித்துக் கொஞ்சமும் சந்தேகங்கொள்ளவில்லை. ஆனால் அவன் வியாதியா யிருக்கிறதாக, அவர் கேள்விபட்டபொழுது தாம் இருந்த இடத் திலேயே பின்னும் இரண்டுநாள் தங்கினர்.

'கேள்விப்பட்டபொழுது' என்பது எவ்வளவு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. அவர்களை நேசியாததினாலல்ல, நேசித்ததாலேதான் அவர் போகாதிருந்தார். தமக்கு அருமையான குடும்பத்தார் கஷ்டத்திலிருக்கையில் அவர்கள்மேலுள்ள அவருடைய அன்பே அங்கு விரைந்து செல்லாதபடி தடுத்தது. அது அளவிடாத அன்பாயிராமல் குறைந்த அன்பாயிருந்தால் அவர் அவர்கள் துக்கத்தை மாற்றவும், கண்ணீரைத் துடைக்கவும், அவர்கள் பெரு மூச்சை நீக்கவும் உடனே விரைந்து சென்றிருப்பார். தெய்வீக அன்பு மாத்திரமே வேதனையின் தூதன் தன் வேலையைச் செய்து முடிக்கும்வரை அவருடைய பட்சம் நிறைந்த இதயத்தைத் தாமதிக் கச் செய்திருக்கும். நம் துன்பங்களுக்கும், வேதனைகளுக்கும், நாம் எவ்வளவாய்க் கடன் பட்டுள்ளோம் என்பதை யார் மதிக்கக் கூடும்? அவைகளினாலன்றி நம் கிறிஸ்துவ இலட்சணங்கள் நம்மில் இடம் பெறா. சோதனையில்லாவிட்டால் விசுவாசம் ஏது? சகிப்ப தற்குக் கஷ்டங்கள் இல்லாவிட்டால் பொறுமை உண்டாவ தெங்ஙனம்? துன்பமில்லாவிட்டால் அனுபவம் எவ்வாறு வளர்ச்சி யடையும்?

1 நேசிக்கப்பட்டவனே, நம்மை நேசிப்பவர் நாம்
நேசிக்கப்படுகிறோம் என்பதை நிரூபித்துக்கொண்டு
எப்போதும் அருகிலிருப்பதால்
உன் வழி கஷ்டமில்லை.

2 நமது மேகம் இருண்டிருக்கையில்
நமது நாட்கள் துக்கம் நிறைந்திருக்கையில்
'நாம் நேசிக்கப்படுகிறோம்' என்பதால்
எப்போதும் அவரை நம்புவோம்.

3 ஒருகால் பூமியின் காரியங்கள் யாவும் மாறிப்போம்,
ஆயினும்
ஒருகாலும் இயேசுவின் அன்பு மாறாது.
கிறிஸ்துவின் இதயம் அன்பால் நிறைந்து வழியும்
'நாம் நேசிக்கப் படுகிறோம்.'

## ஆகஸ்ட் 11

'அத்திமரம் துளிர் விடாமற்போனாலும், திராட்சச் செடிகளில் பழம் உண்டாகாமற்போனாலும், ஒலிவமரத்தின் பலன் அற்றுப்போனாலும், வயல்கள் தானியத்தை விளைவியாமற்போனாலும், கிடையில் ஆட்டுமந்தை முதலற்றுப்போனாலும், தொழுவத்தில் மாடு இல்லாமற்போனாலும் நான் கர்த்தருள் மகிழ்ச்சியாயிருப்பேன். என் இரட்சிப்பின் தேவனுக்குள் களிகூருவேன்' (ஆப. 3:17,18).

இந்த வசனங்கள் எத்துணை விபரீதமான பெருந் துன்பங்கள் நேரிடுவதாகக் கூறுகின்றன என்பதையும், எவ்வளவு வீரதீரமான விசுவாசத்தை இது காட்டுகிறது என்பதையும் உற்று நோக்குங்கள். அது, 'ஒரு வேளை உணவுக்கு என் செய்வோம் என்னும் அளவிற்குத் தரித்திரம் அடைந்தாலும், வீடு வெறுமையாகவும் வயல் விளைவற்றதாகவும் இருந்தாலும், தேவனுடைய பரிபூரண ஆசீர்வாதத்தால் நிறைந்த கனியுடன் இருந்த இடத்தில் கர்த்தருடைய சாபத்தின் அடையாளங்கள் காணப்பட்டாலும் நான் கர்த்தரில் மகிழ்ச்சியாய் இருப்பேன்' என்பதாகும்.

இவ்வசனங்கள் வைரத்தால் கல்லில் பதிக்கப்பட்டுச் சதா காலங்களிலும் இருக்கத் தகுதியானவை என்று நான் எண்ணுகிறேன்.

தெய்வ கிருபையால் அவைகள் நம் இருதயங்களில் ஆழமாய் எழுதப்படுவது எத்தனை நலம். இந்த வசனத்தில் காரியம் அதி சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அதில் அநேக விஷயங்கள் அடங்கியுள்ளன: முதலாவது, கஷ்டம்வரும்காலத்தில் அவன் தேவனண்டை போவான். இரண்டாவது, எவ்வளவு கொடிய துன்பம் வந்தாலும், மனங்கலங்காமலிருப்பான். மூன்றாவதாக, அவன் கஷ்டங்கள் மத்தியில் கர்த்தருக்குள் ஆவியில் மகிழ்ச்சியாயிருந்து, கர்த்தருடைய வேளைக்காகக் காத்திருப்பான். இது எவ்வளவு வீரதீரமான நம்பிக்கையாய், விசுவாசத்திற்கு அடையாளமாய்த் தோல்வியடையா அன்பு மயமாயிருக்கிறது.

—டாட்பிரிட்ஜ்

1 கடந்த இரவில் நான் ஒரு பட்சியின் பாடல் கேட்டேன்
சொட்டு சொட்டென்று மழை விழுந்தது
அப்பாட்டு மழையோடு இசைந்து இனிமையாயிருந்தது.

2 ஆகையால் வரவேண்டிய கஷ்டங்கள் வருங்கால்
ஏன் நான் கஷ்டங்கள் மத்தியிலும் பாடக்கூடாது
மலைக்கப்பால் பச்சைப்புல் வெளியில் சூரிய ஒளி இன்னும்
பிரகாசிக்கிறது.

3 துன்பத்தைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்கிறவன்
பாரத்தை லகுவாக்குவான். ஓர் சொட்டுக் கண்ணீர்
நாம் பாடும்பாட்டின் இசையை இன்னும் இனிமையாக்குமே.

4 வசந்த காலம் களிப்போடு பாடும் பட்சியே
உன்னிடமிருந்து ஒரு பாடம் நான் கற்றேன்
புயல் மேகம் கூடும் நேரமே பாடுவதற்கேற்ற நேரம்.
—ஏபென் ரெக்ஸ்போர்ட்

## ஆகஸ்ட் 12

'மகா மேன்மையும் அருமையுமான வாக்குத்தத்தங்களும் அவைகளினுலே நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது' (1 பே. 1:4).

கப்பல் கட்டுபவன் ஒரு கப்பலை உருவாக்கும்போது அதைக் கட்டும் சாரத்திலேயே வைத்துக்கொள்வதற்கென்ரு கட்டுவான்? புயலிலும், அலையிலும், கடலில் செல்வதற்காகவே அதைக் கட்டுகிருன். அவன் அதைக் கட்டுகையில், கடுங்காற்றும் புயல் இவைகளை மனதில் நினைத்துக்கொண்டுதான் கட்டுவான். அப்படி அவன் நினைத்துக் கட்டாவிடில் சிறந்த கப்பல் கட்டுகிறவனுகமாட்டான்.

தேவன் உன்னை விசுவாசிக்கும்போது உன்னைச் சோதிக்க எண்ணிஞர். உனக்கு வாக்களித்து அவற்றை நம்பும்படி கட்டளையிட்டபோது புயலிலும், அலையிலும் உதவக்கூடிய வாக்கு அளித்தார். இரட்சகக் கச்சைகள்போல் போலியாகச் செய்து கடையில் பார்வையாக வைத்திருப்பார்கள். அவை ஒன்றுக்கும் உதவா. தேவ வாக்குத்தத்தங்கள் அப்படிப்பட்ட பயனற்ற போலி வேலைகளல்ல.

யுத்தத்திற்குப் பயன்படாத பட்டயங்கள் உண்டு என்று கேள்விப் பட்டிருக்கிரேம். சில பாதரட்சைகள் விற்பனைக்காகச் செய்யப் பட்டுள்ளன. ஆனுல் அவைகளை அணியமுடியாது. தேவனுடைய பாதரட்சைகள் இரும்பும் வெண்கலமுமாம். அவைகள் தேய்ந்து போகாதபடி நாம் அவைகளை அணிந்துகொண்டு பரலோகம் சேரலாம். கடவுளின் இரட்சகக் கச்சைகளைக்கொண்டு, எந்த பெரிய கடலையும் அமிழ்ந்துபோவோம் என்கிற பயமின்றி நீந்திச் செல்லலாம். அவருடைய வாக்குகளைச் சோதித்து அறிந்து கொள்ளலாம்.

கிறிஸ்துவைக் கண்கார்ட்சியாக மாத்திரம் வைத்து, அவரைப் பிரயோகியாமலிருப்பதை அவர் வெறுக்கிருர். நாம் அவரைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டுமென்று அவர் விரும்புகிருர். உடன் படிக்கையின்படி மட்டும், ஆசீர்வாதங்களை நாம் பார்ப்பது போதாது. அதை ஆசீர்வாதமாக்கிக்கொள்ளவேண்டும். நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவும் நமக்கு ஈவாகக் கொடுக்கப் பட்டிருக்கிருர். போதுமான அளவு நீ அவரைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

மனிதனே! தேவனுடைய வாக்குத்தத்தங்களைப் பொருட்காட்சி சாலையின் ஓர் அரிய பொருளென்று நினையாதே. ஆனுல் அவை

களைத் தினசரி உன் ஆறுதலாக உபயோகி. உனக்கு அவசியம் உண்டாகும்போதெல்லாம் அவரை நம்பு. —சி. எச். ஸ்பர்ஜன்

தேவ வாக்குத்தத்தங்களை ஆழ்ந்து ஆராய்ந்து
நீ விரும்புவதைப் பெற்றுக்கொள்
தேவ ஆசீர்வாதங்கள் தவறாது கிடைக்கும்
தேவ வாக்கு நிச்சயம் நிறைவேறும்.

'தேவன் வாக்களித்ததை நிறைவேற்றாதிருப்பாரா?'

## ஆகஸ்ட் 13

'மேகங்கள் நிறைந்திருந்தால் மழையைப் பூமியின்மேல் பொழியும்' (பிர. 11:3).

அப்படியானால் நமது ஆகாயத்தை இருளாக்கும் மேகத்தைக் கண்டு நாம் ஏன் அஞ்சவேண்டும்? சிறிதுநேரம் அது சூரியனை மறைக்கிறது. உண்மையாயினும் சீக்கிரம் சூரியன் வெளியே வருமல்லவா? மேகங்கள் சூரியனை அழிக்கமுடியாதே. மேகங்கள் எவ்வளவிற்கதிகமாய் இருண்டிருக்கிறதோ, அவ்வளவிற்கு அதிகமான மழை பொழியும். அந்த மேகங்கள் மழையால் நிறைந்திருக்கின்றன.

மேகமின்றி மழை எங்ஙனம் உண்டாகும்? நமது துன்பங்களே நமக்கு ஆசீர்வாதங்களைக் கொண்டுவந்தன; இனிமேலும் கொண்டு வரும். துன்பங்கள் பிரகாசமான கிருபையைச் சுமந்து செல்லும் இருண்ட இரதங்களாகும். மேகங்கள் மழையாய்ப் பொழியும், இளஞ் செடிகள் யாவும் மழையைப் பெற்றுக் களிக்கும். அவர் நம்மைத் துக்கத்தால் நனைக்கலாம். ஆனால் தமது இரக்கத்தால் புதுப் பெலனடையச் செய்வார். அவருடைய அன்புக் கடிதங்கள் அடிக்கடி கருநிறம் தீட்டப்பட்ட உறைகளில் வரும். கடவுளின் வண்டிகள் கடகடவென்று சப்தம் செய்துகொண்டு வரும். ஆனால் அவை நிறை நன்மைகளைக் கொண்டுவரும். அவருடைய கோல் இனிய பூ பூத்து உண்பதற்கு உகந்த கனிகள் தரும். மேகத்தைக் குறித்துக் கவலைபடாதிருப்போமாக. மாரிகால மேகங்களாலும், மழையாலும், இளவேனிற்கால இனிய பூக்கள் உண்டாகின்றன. ஆகையால் நாம் பாடுவோம். மேகங்களைக் குறித்துக் கவலைகொள்ள வேண்டாம்.

ஆண்டவரே, மேகங்கள் உமது பாதத்தில் படிந்த தூசி, மேகத்தால் இருண்ட நாட்களில் நீர் எங்களுக்கு எவ்வளவு சமீபமாயிருக்கிறீர். அன்பு உம்மைக் கண்டு களிகூருகிறது. விசுவாசம், அந்த மேகங்கள் மலைகளைச் செழிக்கச்செய்ய எப்பக்கங்களில் மழை பொழிகின்றன என்பதைக் காண்கிறது. —சி. எச். ஸ்பர்ஜன்.

1 உன் குறுகின பார்வைக்கு இருளாய்த் தோன்றுவது
சரியாக உற்று நோக்கின் பிரகாசத்தை இரட்டிக்கும்
ஒரு நிழலாயிருக்கலாம்.

2 உனக்கு நிழலற்றுப் போகும்படி மரத்தைச் சாய்த்த இடி
முன் ஒருபோதும் காணுத வானின் நீல வெளியைக் காணச்
செய்கிறது.

3 உன் இதய நோவினிலெழுந்த அழுகை
பன்னுளாகப் பாதையை விட்டு அலைந்து திரியும் ஒருவனை
வீடு திரும்பச் செய்யும்
நீல வர்ணம் கார் முகிலும் மாணப் பெரிதே.

## ஆகஸ்ட் 14

'பரத்திலிருந்து உமக்குக் கொடுக்கப்படாதிருந்தால் என்மேல் உமக்கு ஒரு அதிகார முமிராது' (யோ. 19:11).

தேவனை நம்பி அவருக்குக் கீழ்ப்படிந்து இருக்கிறவர்களுக்குத் தேவ சித்தத்தினுலன்றி அவர்கள் வாழ்க்கையில் ஒன்றும் நேரிடாது. இந்தச் சத்தியம் வாழ்க்கையில் நம்மை முடிவிலா மகிழ்ச்சி, நன்றியும் உள்ளவர்களாக்கப் போதுமானதாகும். ஏனெனில் இவ்வுலகில் தேவ சித்தம் ஒன்றே நம்பிக்கையும், மகிழ்ச்சியும் மகிமையும் தரக்கூடியது. நாம் நம்மை ஒப்புக்கொடுத்துக் கடவுளின் பேரில் பூரண நம்பிக்கை வைத்தால், தன்னை ஒன்றும் தடையொன்றுமின்றித் தேவ சித்தம் தன் சர்வ வல்லமையினுலும் நமக்காக உழைக்கும்.

அதிகத் துன்பம் அனுபவித்த ஒருவர், தம் சிநேகிதனுக்குப் பின்வருமாறு எழுதினுர்; 'ஒரு காரியம் எவ்வளவு அநியாயமாய்த் தோன்றினுலும் அது நம்மை அணுகும்போது, அது தேவ சித்தமாகி நமக்கு நன்மையையே உண்டாக்குகிறது என்றறிவது அதிக மேன்மை அல்லவா? ஏனெனில் தேவனை நேசிக்கிறவர்களுக்கு யாவும் நன்மைக்கேதுவாய் நடக்கிறது. இயேசு காட்டிக்கொடுக்கப்பட்டபோது, 'என் பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம் பண்ணுதிருப்பேனு' என்று சொன்னுர். தேவ சித்தத்தின்படியே நாம் ஜீவித்தால், யாதொரு தீமையும் அணுகாதபடி அற்புத சக்தி பெற்று ஜீவியம் நடத்துகிறவர்களாவோம். பிறர் பாவத்தின்மூலம் சாத்தான் நம்மேல் வீசும் எதிர்ப்புகள் நம்மைக் கெடுக்கப் பயனற்றுப்போவது மாத்திரமல்ல, அவை நமக்கு ஆசீர்வாதமாகவும் மாற்றப்படுகின்றன. —எச். எஸ்.

1 தேவ சித்தம் என்னும் வட்டத்தின் மத்தியில் நான் நிற்கிறேன்
வேறு காரணத்தாலல்ல, 'எல்லாம் அவர் அன்பின் கரத்தி
லிருந்து வருகிறது' என்பதால்.
யாவும் எனக்கு நன்மையே
என் வாழ்க்கைத் திட்டத்தை வகுத்த பிதா அவரே.

2 நான் துக்க அலைகளைக் கடக்க வேண்டுமா?
அது தான் எனக்கு நன்மை,
அதற்குக் காரணம் கூறமுடியாவிடினும்,
நான் நம்புவேன், ஆகையால் நான் பாக்கியவான்;
தேவன் அன்புமயம்; அவர் சத்திய சற்குரு
ஆகையால் நான் பூரண சமாதானத்தில் அமர்ந்திருப்பேன்.

3 வெயிலிலும், நிழலிலும், களிப்பிலும், துக்கிப்பிலும்,
இரண்டும் தேவை என்று உம்மை நம்பியிருப்பேன்.
ஒவ்வொன்றும் உமது பிள்ளைகளுக்குப் பயிற்சி அளிக்கவே.
இவ்வுலக நஷ்டங்கள் பரலோக இலாபமாகுமே.

—ஐ. ஜி. டபுள்யூ

## ஆகஸ்ட் 15

'நாம் அநேக உபத்திரவங்களின் வழியாய்த் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்கவேண்டும்' (அப். 14:22).

கஷ்டத்தின் மூலமாய் உலகில் அநேக பயனுள்ள பொருட்கள் கிடைக்கின்றன. கோதுமை ரொட்டியாகுமுன் மாவாக்கப்படுகிறது. தூபவர்க்கம் நெருப்பில் போடப்படும்போதுதான் அதிலிருந்து வாசனை கமழுகிறது. நிலம் விதைப்புக்கேற்றதாக, அதை உழுது சீர்படுத்தவேண்டும். நொறுங்குண்ட இதயமே தேவனுக்குப் பிரியமானது. துக்கத்தின் பயனே மிக இனிய சந்தோஷமாகும். அநேகருக்கு ஆசீர்வாதமாயிருப்பதற்குப் பாடு அனுபவிக்கவேண்டும். இது உலக இயற்கை.

1 என் குடிசையின் கதவருகே
வனப்பு வாய்ந்த முள் ரோஜா ஒன்று மலர்ந்திருக்கிறது.

2 மாலை மயங்கும் வேளையிலும், பனி தோய்ந்த காலையிலும்
அதிக அபூர்வ மணம் அக்காட்டு ரோஜாவிலிருந்து வீசுகிறது.

3 மழைத்துளிகள் அம்மலரில் விழும்போது
என் பாதத் தண்டை அதன் வாசனை இன்னும் அதிகமாய்க்
கமழுகின்றது.

4 அடிக்கடி அதி அன்புடன் அதன் மரகத இலைகளை
இன்பமாய்த் தொட்டு மகிழுவேன்.

5 என் விரல்கள் அம்மலரை நசுக்குகையில்
இன்னும் இனிய கந்தம் பன்மடங்கதிகமாய் உண்டாகும்.

6 அன்புள்ள ஆண்டவரே என் ஜீவியமும்
துன்பமாகிய புயலில் சுழல்கையில், புது மணம் கமழச் செய்திடும்.

7 என் இதயத்தை அழுத்தும் துன்பத்தால் நிரப்புவது
உம் சித்தமாயின் நன்மையுண்டாக நன்ருக அழுத்தும்.

8 வாழ்க்கையின் இறுதி மணம் வீசுகையில்
'தாம் நசுக்கின காட்டு ரோஜாவை அவர் அறிவார், அதை அவர் நேசிக்கிருர்'
என்று கூறுவேன்.

நீ பிறர்க்கு ஆறுதல் அளிக்கக்கூடியவனுக வேண்டுமானுல், பரிந்து பேசும் இயேசுவின் அனுதாபத்தில் பங்குனக்கு வேண்டுமானுல், சோதிக்கப்பட்ட இருதயத்தை நன்ருய் தேற்ற நீ விரும்பினுல், உன் அன்ருடக வாழ்க்கையில் ஒருவரையும் மனம்நோகப்பேசாத ஞானம் உனக்கு வேண்டுமானுல், இயேசுவைப்போல் துன்பமாகிய பள்ளியில் நீ பயிலவேண்டும், அவரைப்போல் நீ பாடனுபவிக்கவேண்டும்.

—ராபர்ட்ஸன்

## ஆகஸ்ட் 16

'கர்த்தருக்காகப் பொறுமையுடன் காத்திருந்தேன்' (சங். 40:1).

நடந்துகொண்டிருப்பதைவிடக் காத்துக்கொண்டிருப்பது அதிகக் கஷ்டம். காத்திருத்தலுக்குப் பொறுமை தேவை. பொறுமை ஒரு அபூர்வமான குணம். தேவன் நம்மைச் சுற்றியடைக்கும் வேலியை அது நமக்குப் பாதுகாப்பு என்று எண்ணினுல் அது நன்மையாகும். ஆனுல் ஒருவனைச் சுற்றியுள்ள் அடைப்பு வளர்ந்து அப்பாலுள்ளதைக் காணக்கூடாதபடி செய்யும்போது அவன் தன்னுள்ளத்தில் இது தான் முடிவா! இதிலிருந்து நான் வெளியேற இயலாதா! என்று எண்ணுகிருன். தன் ஊழியத்தையும், திறமையையும் தான் வைக்கப்பட்டிருக்கும் சிறு இடத்தில்தானு பயன்படுத்தவேண்டும்? ஏன் தனக்குக் கடவுள் இதைவிட நல்ல இடம் கொடுக்கக்கூடாது என்று எண்ணுகிருன். தான் இருக்கும் சிறு மூலையை மட்டும் பிரகாசிப்பிப்பது கஷ்டமாய்த்தான் தோன்றுகிறது. ஆனுல் தேவன் இந்த அடைப்பை ஒரு நோக்கத்தோடுதான் வைத்துள்ளார். 'நல்ல மனுஷருடைய நாட்கள் கர்த்தரால் உறுதிப்படும்' என்றும் சங். 37:23இல் சொல்லி இருக்கிறது. இவ்வசனத்தினருகில் ஜியார்ஜ் முல்லர் என்பவர் 'அவன் தடைகளும்' என்று சேர்த்து எழுதி யுள்ளார். தேவனுடைய அடைப்பை உடைத்துச் செல்வது மனிதனுக்கு நன்மையுண்டாகாது. மேகஸ்தம்பம் அசைந்தாலன்றி தேவன்

தன்னை வைத்துள்ள என்று நிச்சயமாய் எண்ணும் இடத்தை விட்டு ஒருவன் அகலக்கூடாது. இது தேவ நடத்துதலுக்கு ஓர் முக்கிய விஷயமாகும்.

ஆண்டவரின் நட்த்துதலுக்கு நாம் ஒவ்வொரு காரியத்திலும் காத்திருந்தால், சாதாரண வாழ்க்கையிலும் நமது வலிமையின் உச்ச நிலையைக் கண்டு மேன்மையடையலாம். நாம் வேண்டும் என்று விரும்புகிற பெலன் நமக்கு இல்லை. ஆனால் தேவன் நமக்குக் கொடுக்கும் வேலைக்குத் தகுதியான பூரண பெலனைக் கொடுப்பார். அவருடைய நடத்துதலுக்குக் காத்திருப்பதுதான் பலனடையும் ரகசியம். கீழ்ப்படியாமல்போனால் நேரமும் பெலனும் வீணாகும். அவருடைய நடத்துதலுக்கு காத்திருங்கள். —எஸ். டி. கார்டன்

பிறர் வாழ்க்கை பொங்கி எழும்பும் அலைபோல் முன்னேறுவதைக் கண்டும், செயலற்று நிற்கவேண்டிய நிலைமையில் இருப்பவர்களின் வாழ்க்கை பயனற்றதோவென்று எண்ணுகிறோம். அப்படியல்ல, சும்மா நின்று அமைதியாய்க் காத்திருப்பதால் வெற்றிபெறலாம். ஓடியாடிப் பிற ஜீவன்களோடு வேலைசெய்வதைவிட அமர்ந்திருத்தல் கடினமாம். காத்திருந்து சோர்வடையாமலும் நம்பிக்கையிழக்காமலும், தேவ சித்தத்திற் கடங்கி, ஊழியத்தையும் கௌரவத்தையும், பிறர்க்குக் கொடுத்துவிட்டு, அவர்கள் சந்தோஷமாய் வாழ, நாம் நம்பிக்கையில் சந்தோஷிப்பது வெகு வீரத் தன்மையைக் காட்டும். 'எல்லாம் செய்து முடித்து நிற்பது' அதி உன்னத வாழ்க்கையே. —ஜே. ஆர். மில்லர்

## ஆகஸ்ட் 17

'எனக்குச் சொல்லப்பட்ட பிரகாரமே நடக்கும் என்று தேவனிடத்தில் நம்பிக்கையாயிருக்கிறேன்' *(அப். 27:25).*

சில ஆண்டுகளுக்குமுன், ஒரு பக்தியுள்ள கிறிஸ்தவ கப்பல் தலைவனோடு அமெரிக்கா சென்றேன். நியூபௌண்ட்லாண்டுக்கப்பால் செல்கையில், அவர் 'நான் ஐந்து வாரங்களுக்குமுன் இந்த இடத்தைக் கடந்தேன். அப்போது என் கிறிஸ்தவ ஜீவியம் முழுவதுமே மாறத்தக்கதான ஓர் சம்பவம் நேர்ந்தது. ஜியார்ஜ் முல்லர் கப்பலிலிருந்தார். நான் பாலத்தின் அருகில் 24 மணி நேரம் இருந்து, அதைவிட்டுக் கடக்க முடியாதிருந்தேன். ஜியார்ஜ் முல்லர் என்னிடம் வந்து, 'கப்பல் தலைவனே, நான் சனிக்கிழமை மத்தியானம் குவேபக் போய்ச் சேரவேண்டும். இதை உம்மிடம் சொல்ல வந்தேன்' என்றார். 'அது முடியாத காரியம்' என்று நான் சொன்னேன். அப்போது அவர் 'உமது கப்பல் என்னைக் கொண்டுபோய்ச் சேர்க்க முடியாவிட்டால், தேவன் வேறு ஏதாவது வழிகாட்டுவார். கடந்த 57 வருடங்களில் நான் சொன்ன நேரத்தில் போகத்

தவறினதில்லை. நாம் கடலின் படங்கள் உள்ள அறையில் போய் ஜெபிப்போம்' என்றார்.

நான் அந்தத் தேவனுடைய மனிதனைப் பார்த்து, 'இவன் பயித்தியக்காரன்' என்று எண்ணினேன். அவர் சொன்னதுபோல் முன் யாருமே சொன்னதில்லை. நான் அவரைப் பார்த்து, 'முல்லரே! இந்த மூடுபனி எவ்வளவு அடர்ந்து இருக்கிறது என்று நீர் அறிவீரோ? என்று கேட்டேன். அதற்கு அவர் 'எனக்குத் தெரியாது. என் கண்கள் மூடுபனி எவ்வளவு அதிகம் என்பதைக் காணா. ஆனால் என் வாழ்க்கையின் சுற்றுபுறத்தை ஆண்டு நடத்தும் ஜீவனுள்ள தேவனையே நோக்கும்' என்றார்.

அவர் முழந்தாளிட்டு ஒரு சாதாரண ஜெபம் செய்தார். அவர் ஜெபித்தபின் நான் ஜெபிக்க ஆரம்பித்தபோது, அவர் என் தோள் மேல் கையை வைத்து ஜெபிக்கவேண்டாமென்றார். பின்னுமவர் 'முதலாவதாகத் தேவன் விடையளிப்பார் என்று நீங்கள் நம்பவில்லை. இரண்டாவதாக, நான் இயேசு விடையருளிவிட்டார் என்று நம்பிக்கையோடிருக்கிறேன். ஆகையால் மேலும் அதைக் குறித்து ஜெபிக்க அவசியமில்லை' என்றார்.

நான் அவரை நோக்கிப் பார்த்தேன். பின்னும் அவர் 'கப்பல் தலைவனே, நான் என் ஆண்டவரைக் கடந்த 57 ஆண்டுகளாக அறிவேன். ஒரு நாளாகிலும் என் இராஜாவின் சமுகத்தில் என் ஜெபம் கேட்கப்படாதிருந்ததில்லை. நீர் எழுந்து கதவைத் திறவும், மூடுபனி நீங்கியிருப்பதைக் காண்பீர்' என்றார். நான் எழுந்து மூடுபனி நீங்கியிருப்பதைக் கண்டேன். சனிக்கிழமை மதியம் ஜியார்ஜ் முல்லர் தம் வேலையைச் செய்ய குவேபக் போய்ச் சேர்ந்தார்.

நம் அன்பு மாயமற்றதானால்  
அவர் வாக்கைப் பூரணமாய் நம்புவோம்  
அப்போது நமது ஆண்டவரின் இன்ப ஆளுகையில்  
நம் வாழ்க்கை முழுவதும் ஒளியுள்ளதாகும்.

## ஆகஸ்ட் 18

*'ஒருவரே' (உபா. 32:12).*

1 மலை செங்குத்தாயிருந்தது. ஆனால் இனிய சம்பாஷணையால்  
வழியின் கஷ்டம் தோன்றவில்லை  
உயரப்போகும்வரை இப்படியே இருக்கும் என்ற எண்ணத்தோடு சென்றேன்.  
ஆனால் திடீரென வளைந்து வளைந்து செல்லும் ஒரு குறுகிய  
பாதையைக் கடந்தோம்

அப்போது ஆண்டவர் என்னைப் பார்த்து, 'என் பிள்ளையே
இவ்வழியில் நீ என்னுடன் தனியே செல்வது உசிதமாகும்'
என்றார்.

2 நான் அஞ்சினேன். ஆனால் என் இதய ஆழத்திலுள்ள
நம்பிக்கையால்
'அப்படியே ஆகட்டும். ஆண்டவரே' என்றேன்.
எல்லாவற்றிலும் அவருக்கிணங்கி, எல்லாம் அவரே என்றிருந்
தால்
அவர் என் பலவீனமான கரத்தைத் தம் கரத்தால் பற்றினர்
ஒரு நிமிஷநேரம் நான் பயந்தேன். இயேசுவைத் தவிர வேறு
நண்பரைக் காணவில்லை.

3 அவர் என்னை அதிக அன்பாய் நடத்தினார்.
என்னை உற்சாகப் படுத்தும் வார்த்தைகளைப் புகன்றார்
தம் ஆச்சரிய அன்பை என் இருதயத்தில் இரகசியமாய்ச்
சொன்னார்
நான் என் பயத்தையும் துக்கத்தையும் மறந்தேன்
அவருடைய பலத்த கரத்தின்மேல் நம்பிக்கையோடு சாய்ந்து
கொண்டேன்.

4 அப்போது என்நடை வேகமாகக் கண்டேன்
தேவனோடு ஐக்கியப்படுவதால் மாத்திரம்
உண்டாகக்கூடிய பேரொளி
என் கரடுமுரடான வழிக்கு ஒளி வீசிற்று.

5 சின்னாட்களில் நம்மைவிட்டுப் பிரிந்த நம் அன்பர்களைக்
காண்போம்
இவ்வுலகில் அறிய முடியாத சந்தோஷத்தோடு
ஒருவரை ஒருவர் வரவேற்போம்
ஆனந்தப்பாட்டுடன் அன்பும் உண்டாகும்
நம் பழைய பிரயாண ஞாபகங்கள் உண்டாகும்
அதில் ஒன்று அதிக நன்றாய் ஞாபகமிருக்கும்
பொன்மயமான வீதியில் நாம் ஒன்று சேரும்போது
நன்றியறிந்த அன்புடன் நாம் இயேசுமேல் மாத்திரம் சார்ந்து
குறுகிய சறுக்கலான வழியில், போக அவர் வழிகாட்டி
னதையே பேசிக்கொள்வோம்
'உயர்ந்த மலையருகில் ஆழமான பள்ளத்தாக்கில்லாமலிராது
வேதனையின்றி பிறப்பு இல்லை.'

## ஆகஸ்ட் 19

*'துக்கப்படுகிறவர்கள் என்னப்பட்டாலும், எப்போதும் சந்தோஷப்படுகிறவர்களாகவும்' (2 கொ. 6:10).*

'துக்கம்' அழகாய் விளங்கினது. அது மரக்கிளையினூடே நிலவொளி ஆங்காங்கு நிழலும், ஒளியுமாய் புல்மெத்தைகளின் மேலே வெள்ளி நீர் நிலைகள்போலும் பிரகாசிப்பதுபோன்ற அழகுடையது.

'துக்கம்' பாடினபோது, இராப் பாட்டாளியின் இன்னிசைபோலிருந்தது. அதன் நயனங்களில் இனி சந்தோஷமில்லை என்பது போன்ற கருத்து தென்பட்டது. அது அழுகிறவர்களுடன் அழும். சந்தோஷப்படுகிறவர்களுடன் சந்தோஷப்பட அதற்கு இயலாது.

'சந்தோஷம்' சௌந்தரியமாய்த் துவங்கியது. அந்த அழகு கோடைகாலப் புலரொளிப்போல் எங்கும் ஒரே சீராய்ப் பரவியிருந்தது. அதில் இளமையும், நகை முகமும் ஆதித்த கிரணங்களால் ஆலிங்கனம் செய்யப்பட்டது போன்ற சுவர்ண கேசமும் தோன்றின. 'சந்தோஷம்' பாடினபோது அதன் குரல் வானம்பாடியின் குரலைப்போல் உயர எழும்பியது. அதன் நடை தோல்வியையே அறியாத வெற்றி வீரனின் கெம்பீரநடையை ஒத்திருந்தது, அது சந்தோஷப்படுகிறவர்களுடன் ஆனந்தித்தது. துக்கிப்பவர்களுடன் துக்கிக்க அதற்குத் தெரியவில்லை.

'நாமிருவரும் கூடிவாழமுடியாது' என்று 'துக்கம்' கவலையுடன் கூறினது.

'ஒருபோதும் கூடாது. என் வழி கதிரவன் ஒளிவிடும் புல் மைதானத்தினூடே செல்லும். நான் சேகரிக்க சுகந்தமுள்ள ரோஜாமலர்களுண்டு. என் வருகைக்காகக் களித்துக் கவிபாடக் குயில்களும், வனத்தின் பறவைகளும் காத்திருக்கின்றன' என்றது 'சந்தோஷம்.'

'துக்கம்' மறுபுறம் திரும்பி, 'என் பாதை இருட்டினூடே செல்லும். சந்திரகாந்த மலரே நான் பறிக்கும் மலர். உலகின் இன்ப கீதங்கள், அன்பின் கீதங்களே என்னுடையவைகள். நான் போய் வருகிறேன்' என்றது.

அப்போது ஓர் உருவம் தங்களருகில் நிற்பதை அவர்கள் உணர்ந்தனர். அவ்வுருவம் தெளிவாகத் தோன்றவில்லை. ஆனல் அது இராஜ அம்சம் பொருந்தியதாய்த் தோன்றியது. திகில் அவர்களைப் பிடித்தது. அவர்முன் அவை முழந்தாளிட்டன.

அவரை மகிழ்ச்சியின் அரசராக காண்கிறேன். ஏனென்றால் அவர் சிரசில் அநேகக் கிரீடங்கள் இருக்கின்றன. அவர் கால், கரங்களிலுள்ள அணியின் தழும்புகள் பெரிய வெற்றிக்கு அறிகுறி. 'அவர் சந்நிதிமுன் என் துக்கம் யாவும் அழிவிலா அன்பாகவும், மகிழ்ச்சியாகவும் உருகிப் பாய்கின்றன. அவருக்கே என்னை நித்திய காலத்திற்கும் ஒப்படைக்கிறேன்' என்று 'துக்கம்' கூறினது.

'அப்படியல்ல' துக்கமே! அவரை நான் துக்கத்தில் இராஜாவாகக் காண்கிறேன். அவர் கரங்கால்களில் ஆணி பாய்ந்த தழும்புகளை அவரடைந்த வேதனையின் அடையாளமாகக் காண்கின்றேன். நானும் என்னை முற்றிலுமாய் ஒப்படைக்கிறேன். ஏனென்றால் அவரோடிருந்து துக்கம் அனுபவித்தல், நான் இதுவரை அடைந்த

சந்தோஷத்திலெல்லாம் மேலான ஆனந்தமே' என்று 'சந்தோஷம்' சொல்லிற்று.

'நாமிருவரும் அவரில் ஐக்கியப்பட்டுள்ளோம். அவராலேயன்றி வேறொருவராலும் துக்கத்தையும், சந்தோஷத்தையும் இணைக்க முடியாது' என்று இரண்டும் கெம்பீரித்துக் கோஷித்தன.

கையோடு கைகோத்து, தோளோடு தோளிணைத்து, புயலிலும், கதிரோனொளியிலும்; மாரியிலும், கோடையிலும்; குளிரிலும் வெயிலிலும் துக்கப்படுகிறவர்களென்னப்பட்டாலும் சந்தோஷப் படுகிறவைகளாய், அவரைப் பின்பற்றின. துக்கம் தன் கையை உன் தோள்மீது வைத்து மௌனமாக வாழ்வாகிய பாதையில் உன்னருகில் நடந்து வந்தால், முன்பு உன் தோழனாக இருந்த இன்பம் நாள்தோறும் உன்னைவிட்டு விலகிச் சென்றால், துக்கத்தைக் கண்டு நீ அஞ்சி விலகவேண்டாம். ஏனெனில் அதுவும் தேவனுடைய தூதனே. நீ இப்பொழுது அறியாததைப் பின்பு அறிவாய். ஆகையால் பிற்காலத்தில் நீ தேவனுக்கு நன்றி செலுத்துவாய். துக்கம் தேவனுடைய தூதனே. ஆனால் அது இருள்போன்ற ஆடைகளை அணிந்து வருகிறது. நாம் அதனோடு செல்லும்போது அறிவினாலல்ல, நம்பிக்கையினாலேயே வழிநடந்து செல்கிறோம்.

## ஆகஸ்ட் 20

'யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான்; அப்பொழுது ஒரு புருஷன் பொழுது விடியுமளவும் அவனுடனே போராடி . . .' (ஆதி. 32:24).

யாக்கோபு தேவனோடு போராடுவதைவிட அதிகமாகத் தேவன் யாக்கோபுடன் போராடுகிறார். அவ்வாறு போராடியவர் ஒப்பந்தத்திற்கு அதிபதியாகிய மனித குமாரனே. தேவன் மனித ரூபத்தில் வந்து யாக்கோபுடைய பழைய வாழ்க்கையை ஒழிக்க முயல்கிறார். விடியுமுன் தேவன் மேற்கொள்ள, யாக்கோபு கால் சுளுக்கிக் கீழே சாய்ந்தான். ஆனால் அவன் விழும்போதும் தேவனுடைய கரங்களில் சாய்ந்து அவற்றைப் பற்றிக்கொண்டு ஆசீர்வாதம் கிடைக்கும் மட்டும் போராடினான். அதனால் அவனுக்குப் புது ஜீவன் உண்டாயிற்று. அவன் பூமியிலிருந்து பரலோகத்திற்கும், மனிதத் தன்மையிலிருந்து தெய்வீகத் தன்மைக்கும், இயற்கையிலிருந்து அதற்கு மேலான நிலைக்கும் உயர்த்தப்பட்டவனானான். அன்று காலை அவன் புறப்பட்டுப் போனபொழுது மிகவும் பலவீனமாயிருந்தான். ஆனால், தேவன் அவனோடிருந்தார். 'உன் பேர் இனி யாக்கோபு என்னப்படாமல் இஸ்ரவேல் என்னப்படும்; தேவனோடும் மனிதரோடும் போராடி மேற்கொண்டாயே' என்று ஒரு தெய்வீகக்குரல் கூறிற்று. பிரியமானவனே, இது புதுப்பிக்கப்பட்ட ஒவ்வொரு ஜீவியத்திலும், நடக்கவேண்டிய சம்பவமே. தேவன் நம்மை

உயர்ந்த, மிகச் சிறந்த ஒரு நிலைக்கு அழைக்கும்பொழுது நமது வாழ்க்கையில் ஒரு சிக்கலான நிலைமை ஏற்படுகின்றது. நமது சக்திகள் அனைத்தும் ஓய்ந்துபோகின்றன. அழிவோ அல்லது நாம் கனவிலும் அறியாத சிறந்த ஒரு நிலையோ நமக்கு எதிரில் இருக்கிறது. அப்பொழுது நாம் தேவனிடமிருந்து அளவற்ற உதவியைப் பெற்றுக்கொள்ளவேண்டும். ஆனால் அதைப் பெற்றுக்கொள்ளுமுன் நாம் நம்மை முழுவதுமாக அவருக்கு ஒப்புக்கொடுக்கவேண்டும். நமது சொந்த அறிவையும் பலத்தையும் நீதியையும் விட்டுவிட்டு கிறிஸ்துவோடு சிலுவையில் அறையப்பட்டு அவரில் ஜீவிக்கவேண்டும். இத்தகைய ஒரு சிக்கலான நிலைமைக்கு நம்மை அழைத்துச் செல்வது எப்படி என்பதைத் தேவன் அறிவார். அதற்குள்ளாக நம்மை வழி நடத்தும் வகையையும் அவர் அறிவார்.

அவர் உன்னை இவ்வாறு வழிநடத்துகிறாரா? உன்னுடைய துன்பத்திற்கும், கஷ்டமான சூழ்நிலைக்கும், உன்னால் சகிக்கமுடியாத நிலைமையில் நீ இருப்பதற்கும் பொருள் இதுதானா? அவருடைய உதவியின்றிக் கடந்து செல்ல முடியாத இடத்தில் நீ இருந்தபோதிலும், வெற்றி பெறுவதற்கு வேண்டிய உதவி அவரிடமிருந்து உனக்குக் கிடைக்காமலிருக்குமா?

நீ யாக்கோபின் தேவனிடம் திரும்பு. உதவியற்றவனாய் அவர் பாதத்தில் விழு. உன் ஞானத்திற்கும், பலத்திற்கும், அவர் கரத்துள் மரித்து, யாக்கோபைப்போல் அவருடைய பலத்தில் எழுந்திரு. உன் கஷ்ட நிலைமையிலிருந்து விடுபட மேலேதான் வழியுண்டு. நீ தேவனோடு புது அனுபவம், மேலான அனுபவம் கண்டால்தான் மீட்பு உண்டு. யாக்கோபுக்கு அவ்விதமான அனுபவத்தால் கிட்டினது எல்லாம் உனக்குக் கிட்டுவதாக.

எனக்குள்ள யாவும் படைத்து
உம்பாதம் பணிகிறேன்—சிலுவையில் மாண்ட
அவருக்காக ஜீவிப்பேன், சகிப்பேன்
அன்றி அவருக்காக மரிப்பேன்.

## ஆகஸ்ட் 21

*'அவர் விசாலமான இடத்திலே என்னைக் கொண்டுவந்து, என்மேல் பிரியமாயிருந்தபடியால் என்னைத் தப்புவித்தார்' (சங். 18:19).*

இந்த விசாலமான இடம் எது? இது கடவுள். அவர் தாமே காலவரையற்றவர். அவரில்தான் எல்லா ஜீவியங்களும் முடிவடையும். ஆம் தேவன் ஓர் விசாலமான இடமே; நிந்திக்கப்பட்டதாலும், ஒன்றுமில்லாமல் போகுமட்டும் ஒடுக்கப்பட்டதாலுமே தாவீது கடவுளின் அகன்ற கரத்துள் கொண்டுவரப்பட்டான்.

—மேடம் சயான்

'நான் உங்களைக் கழுகுகளுடைய செட்டைகளின்மேல் சுமந்து, உங்களை என்னண்டையில் சேர்த்துக்கொண்டேன்' (யாத். 19:4).

1 முற்றிலும் ஒப்புக்கொடுத்த ஜீவியத்தில் இறங்கி
அஞ்சி, 'இந்நதி என் சிறிய படகை எங்குக்
கொண்டு செல்லும்? பொங்கும் கடலுக்கோ?'
என என் ஆண்டவரைக் கேட்டேன்
'என்னண்டைக்கே' என்று அவர் பதிலுரைத்தார்.

2 கல்லறையருகில் கண்ணீர் சிந்தி நின்றேன்
கசப்பான என் துக்கத்தில் ஆண்டவரை நோக்கி
'நான் செல்லும் இத் துக்கபாதை, எங்கு என்னை நடத்தும்'
என்று அங்கலாய்த்தேன்
'என்னண்டைக்கே' என்று இயேசு பதிலுரைத்தார்.

3 ஆத்தும ஆதாய வேலையை ஆவலுடன் செய்தேன்
அதிலும் ஏமாற்றம் அடைந்தேன், காரணம் அறியாதிருந்தேன்
'நானே உனக்கு எல்லாம்; என்னண்டைக்கே உன்னை
அழைக்கிறேன்' என்றுரைத்தார்.

4 என் ஜீவியத்தில் யான் நேசித்த என் லட்சிய வீரர்கள்
சோதனையைச் சகிக்க முடியாது தவறினர்
இதன் மூலமாகவும் என் வியாகுலக் கண்ணீரிலும்
தம் அண்டைக்கே இயேசு என்னை நடத்தினர்.

5 இயேசுவண்டை அவர் இதயத்தில் நான் வாழ்வதால்
நான் அனுபவிக்கும் இன்பத்தை நாவால்கூற இயலாது
முன் எனக்கு அருமையாய்த் தோனறியதெல்லாம் வெறுமையாய்த் தோன்றுகிறது
இயேசுவண்டை நான் கொண்டுவரப்பட்டேன்.

## ஆகஸ்ட் 22

'மற்றவர்களில் சிலர் பலகைகள்மேலும், சிலர் துண்டுகளின்மேலும் போய்க் கரையேறவும் கட்டளையிட்டான். இவ்விதமாய் எல்லாரும் தப்பிக் கரை சேர்ந்தார்கள்' (அப். 27:44).

பரி. பவுல் ரோமாபுரி சென்ற பயணம் சோதனைகளும், வெற்றிகளும் நிறைந்திருந்தது. மனித வாழ்க்கையின் விசுவாசப் பாதையில் உண்டாகும் நிழலும் வெளிச்சமும் அதில் மாறிமாறி வந்தன. இதில் கவனிக்கவேண்டிய சில குறிப்புகள் உண்டு. மிகக் கடினமும், இடுக்கண்ணும் நிறைந்த வேளைகளில், தேவகரம் வந்து உதவுவதையும், அதில் தேவசித்தம் சேர்ந்திருப்பதையும் காண்கிறோம்.

விசுவாசப் பாதை மலர் நிறைந்த பாதை என்று பலர் எண்ணுவ துண்டு. தேவன் நமது ஜீவியத்தை ஆட்கொள்கையில், துன்பமாகிய பாதையில் அதிசயமாய் நம்மைத் தூக்கிச் செல்வாரென்று சாதாரணமாய் எண்ணுகிறார்கள். ஆனால் நம் எண்ணத்திற்கு நேர்மாறாகவே நடக்கிறது. ஆபேலிலிருந்து கடைசி இரத்தச் சாட்சிவரை உள்ள மேகம்போன்ற திரளான சாட்சிகளின் வாழ்க் கையை ஆராய்ந்தால் ஒவ்வொரு வாழ்க்கையிலும் துன்பமும், இன்பமும், தோல்வியும் வெற்றியும் மாறிமாறி வருவதைக் காண்போம்.

தேவனுடைய பிள்ளை பாடனுபவித்தும் சோர்ந்துபோகாதிருக்கக் கூடும் என்பதற்கு பவுலே நல்ல திருஷ்டாந்தமாயிருந்தார். தமஸ்குவில் சாட்சி பகர்ந்ததால் அவரைத் துன்பப்படுத்தினார்கள். கொலை செய்ய வகை தேடினார்கள். தம் ஜீவனைக்காக்க அவர் ஓடவேண்டியதாயிற்று. எப்படிச் சத்துருக்களின் கைக்குத் தப்பினார்? பரலோகத்திலிருந்து இவரைக் காக்க அக்கினி இரதம் வரவில்லை. அவர் சத்துருக்கள்பேரில் இடிவிழவில்லை. ஒரு கூடையில் வைக்கப்பட்டு ஜன்னல் வழியாய் இறக்கப்பட்டுச் சத்துருக்களின் கையினின்று தப்பித் தமஸ்குவினின்று வெளியேறினார். ஓர் அழுக் குக்கூடையில் ஒரு துணி மூட்டைபோல், அல்லது காய்கறிபோல் இயேசு கிறிஸ்துவின் தொண்டர் தம் சத்துருக்களின் கையினின்று அவமானமாக எண்ணப்படக்கூடிய முறையில் தப்பினார்.

திரும்பவும் இருண்ட சிறைச்சாலைகளில் தனியாகப் பல மாதங் களிருக்கவேண்டியதாயிற்று. அவர் தம் நிருபங்களில் தாம் காத் திருந்ததையும், பட்டினியாயிருந்ததையும், சிநேகிதரால் கைவிடப் பட்டதையும், கொடூரமாய் அடிக்கப்பட்டதையும் குறிப்பிடுகிறார். தேவன் அவரைக் காப்பதாய் வாக்களித்த பின்னும், அநேக நாட்கள் நுரைத்துப் பொங்கும் கடலில் அலைக்கப்படவும், மாலுமிகள் வஞ்சக செய்கையைக் கவனிக்கவும் விடப்பட்டார். இறுதியில் கஷ்டம் நிவர்த்தியானது. அப்போதும் அந்த மேன்மை பொருந்திய கைதியை மீட்கப் பரலோகப் படகு ஒன்றும் வரவில்லை. சீறி வீசும் கடலையும் காற்றையும் அமர்த்த நீரின்மீது நடந்துவரும் தூதன் அங்குத் தோன்றவில்லை. அசாதாரணமான அற்புதம் ஒன்றும் நடைபெறவில்லை. கட்டையைப் பிடித்துக்கொண்டும், உடைந்த பலகைகளின் உதவியினாலும் நீந்திக் கரை சேரவேண்டிய தாயிற்று. ஒவ்வொருவரும் தத்தம் உயிர்தப்ப நீந்திப் பிழைக்க வேண்டியதாயிற்று.

நமது வாழ்க்கைக்குரிய தேவ திட்டங்களும் இவ்வாறேயிருக் கின்றன. சாதாரண வாழ்க்கையில் தினந்தோறும் ஏற்படும் சந்தர்ப் பங்களில், சாதாரணமாய் நாம் நடந்துகொள்வதற்கு உதவும் நற்செய்தி இதுவே.

தேவ வாக்குத்தத்தங்களும், தேவனுடைய சித்தமும் இயற்கைக்கு மாருகப் பொது விதிக்கு விரோதமாகச் சாதாரண கஷ்ட நஷ்டங்களின்றி நம்மைத் தூக்கிச் செல்லா. சாதாரணக் கஷ்ட நஷ்டங்களின் மூலமாகவே விசுவாசம் பூரணப்படும். நம்முடைய அன்ருட வாழ்க்கையாகிய ஊடு நூலோடும், பாவுநூலோடும், தேவன் நமது அன்பாகிய பொன்னூலேயும் சேர்த்து நெய்ய விரும்புகிருர்.

## ஆகஸ்ட் 23

'தான் போகிற இடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்டுப்போனன்' (எபி. 11:8).

இதுதான் காணுமல் விசுவாசிப்பது; நாம் காண்பது விசுவாசம் அல்ல. அது பகுத்தறிவு. அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்தபோது இப்படிப்பட்ட விசுவாசத்தையே நாங்கள் கண்டோம். சமுத்திரத்தில் ஒரு பாதையும் காணப்படவில்லே. ஆனுல் நாங்கள் போகப்போக கடலில் சீமைச் சுண்ணும்பால் கோடுபோட்டதுபோல சரியான பாதையிலே போய்க்கொண்டிருந்தோம். நாங்கள் கரைக்கு இருபது மைல் தூரத்தில் வந்தபோது மூவாயிரம் மைலுக்கப்பாலேயே தெரிந்து அறிந்திருப்பதுபோல், எங்கே வந்திருக்கிருேம் என்பதை திட்டமாய்ச் சொல்ல முடிந்தது.

எங்கள் பாதையை எவ்வாறு அளந்து குறிப்பிட்டோம்? நாடோறும் கப்பல் தலேவன் தன் கருவியைக்கொண்டு ஆகாயத்தை உற்று நோக்கி சூரியனேக்கொண்டு தன் பாதையைக் கணித்துத் தந்தான். அவன் பூலோக வெளிச்சத்தைக்கொண்டு அல்ல, வானலோக ஒளியைக்கொண்டு தன் மரக்கலத்தைச் செலுத்தினுன்.

அதுபோலவே விசுவாசமும் தேவ சூரியனுகிய இயேசுவைக் கொண்டே வழியறிந்து செல்கிறது. கடற்கரையையும் கலங்கரை விளக்கின் ஒளியையும் வழியிலுள்ள பாதைகளேயும் அது காண்பதில்லே. அடிக்கடி அதன் வழி நிச்சயமற்ற இடத்துக்கும் இருளுக்கும் கேட்டுக்கும் கொண்டுசொல்வதுபோல் தோன்றுகிறது. ஆயினும் தேவன் வழிவிடுவார். இத்தகைய தினம் அறிவினுலல்ல, நம்பிக்கையினுல் வழிநடப்போம்.

நம்மில் அநேகர் ஒரு புதுக்காரியத்தைத் தொடங்குமுன் அதை நடத்துவிக்கும் வழி முழுவதையும் முன்பே அறிய விரும்புகிருேம். அப்படி நாம் அறியக்கூடுமானுல், அல்லது அறிந்தோமானுல், கிறிஸ்தவ நற்குணங்கள் எவ்வாறு நம்மில் உருவாகும்? விசுவாசம், நம்பிக்கை, அன்பு இம்மூன்றும் கனிந்த மரக்கனிகள்போன்று மரங்களிலிருந்து பறிக்கக்கூடியவை அல்ல. 'ஆதியில்' என்ற வார்த்தைகளுக்குப்பின் 'தேவன்' என்ற வார்த்தையிருக்கிறது.

இந்த முதல்படி தேவனுடைய மின்சார சக்தியுள்ள அறைக்குப் போகக் கதவைத் திறக்கிறது. தமக்குத்தாமே உதவுகிறவர்களுக்குத் தேவன் உதவி செய்வார் என்பது மட்டுமல்ல. அவர் தங்களுக் குரியவைகளைத் தேடிக்கொள்ள இயலாதவர்களுக்கும் உதவி செய்கிறார். எல்லாக் காரியங்களிலும் அவரைச் சார்ந்திருக்கலாம். கர்த்தருக்குக் காத்திருந்தால் நாம் நடந்து செல்வதைவிட வெகு சீக்கிரமே பிரயாணத்தின் அந்தத்தை அடைவோம்.

யோசித்துக்கொண்டு நிற்பதால் தருணத்தை இழந்துவிடுகிறோம்.

## ஆகஸ்ட் 24

'எல்லாம் எனக்குக் கிடைத்தது; பரிபூரணமும் உண்டாயிருக்கிறது' (பிலி. 4:18).

தோட்டவேலையைக் குறித்து எழுதியுள்ள அநேக புத்தகங்கள் என்னிடமுண்டு. அவை ஒன்றில் 'இருட்டில் வளரும் பூக்கள்' என்ற தலைப்புள்ள ஒரு பகுதியுண்டு. தோட்டத்தில் சூரிய வெளிச்சமே படாத பாகங்களில் வளரும் செடிகளைப்பற்றி அதில் எழுதப்பட்டிருக்கிறது. அவ்விடங்களில் சில பூக்கள் இருளுக்கு அஞ்சாதிருப்பதுமன்றி, இருளை விரும்பி அதில் செழித்தோங்கு கின்றன. ஆவிக்குரிய ஜீவியத்திலும் இப்படிப்பட்ட காரியங்க ளுண்டு. உலக சந்தர்ப்பங்கள் எவ்வளவு கடூரமாய் இருப்பினும் அவற்றின் மேன்மை வெளிப்படும். அவை சஞ்சலத்தில் வளரும். இவ்வாறன்றி, பரி. பவுலின் ஜீவிய அனுபவங்கள் சிலவற்றை நாம் எவ்வாறு அறிந்துகொள்ளக்கூடும்?

ரோமாபுரியில் அவர் சிறையிலிருக்கிறார். அவருடைய வாழ்க் கையில் அவர் தெரிந்துகொண்ட உன்னத ஊழியம் வீணானதுபோல் தோன்றுகிறது. இப்படிப்பட்ட இருளிலேதான் அந்தப் பூக்கள் அதிக அழகாய் மலர்கின்றன. அவைகளை அவர் முன்பு ரஸ்தாக் களின் ஓரங்களில் கண்டிருக்கலாம். ஆனால், அங்கு அவை இத்தனை வல்லமையோடும், அழகோடும் வெளிப்படக் கண்டிருக்கமாட்டார். இச்சமயத்தில்தான் அவர் முன்பு காணாத பிரகாரம் வாக்குத் தத்தங்கள் தங்கள் பொக்கிஷங்களைத் திறந்து காட்டின.

அப்பொக்கிஷத்தில் கிறிஸ்துவின் கிருபை, கிறிஸ்துவின் அன்பு, கிறிஸ்துவின் சந்தோஷம், சமாதானம் என்ற அதிசயப் பொருள் களும் உண்டு. இவைகளில் மறைந்துகிடக்கும் உள்ளான மகிமையின் இரகசியத்தை வெளிப்படுத்த, 'சூழ் இருள்' இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. எப்படியாயினும் அந்த இருள் சூழ்ந்த இடம் வெளிப்படுத்துதலின் வாசஸ்தலமாயிற்று. அங்கே பவுல் தமக் கிருந்த ஆவியின் ஐசுவரியத்தையும் நிறைவையும் அதிகமாய் அறிந்தார்.

ஒரு ஆணோ, பெண்ணோ கவலையிலாழ்ந்து தனிமையாய் இருக்க நேரிடும்போது நம்பிக்கையையும், திடத்தையும் ஆடைபோல் அணிந்துகொள்வதை நாம் கண்டதில்லையா? அவர்களை எந்த இடத்திலும் சிறை வைக்கலாம். ஆனால் அவர்களுடைய பொக்கிஷத் தோடுதான் அவர்களைச் சிறைப்படுத்த முடியும். அதை வெளியே விட்டுக் கதவை மூடமுடியாது. அவர்களுடைய இவ்வுலகப் பங்கைப் பாலைவனம்போலாக்கிவிடலாம் (ஏசா. 35:1). ஆனால் வனாந்தரமும் வறண்ட நிலமும் மகிழ்ந்து, காட்டுவெளிகளித்து புஷ்பத்தைப் போலச் செழிக்கும். —டாக்டர். ஜோவெட்

ஒவ்வொரு அழகிய பூவும், சூரிய ஒளியில் அசைந்தாடும்போது, அதனடியில் அதன் நிழல் விழும்

எங்கே அதிக வெளிச்சமோ, அங்கே அதிக நிழல் உண்டு.

## ஆகஸ்ட் 25

'விசுவாசத்திற்கு ஏதுவாக அடைக்கப்பட்டவர்களாய்' (கலா. 3:23).

பூர்வகாலத்தில் தேவன் நியாயப்பிரமாணத்தின்படி மனிதன் காவலிலிருந்து அதிவிசுவாச வழியை அதன் மூலமாய்ப் படிக்கும்படி செய்தார். நியாயப்பிரமாணமூலம் தேவனுடைய பரிசுத்தத்தின் நிலைமையையும், தன்னுடைய விசுவாச வழியையும் படித்துக் கொள்ள ஆவலாயிருப்பான்.

இப்போதும் தேவன் விசுவாசத்திற்கேதுவாக நம்மை அடைத்து வைக்கிறார். நம்முடைய இயல்புகள், சந்தர்ப்பங்கள், சோதனைகள், ஏமாற்றங்கள் யாவும் காவலில் வைத்து நம்மை அடைத்து, தேவனுடைய விசுவாச வழியினாலன்றிப் பிழைக்கமுடியாது என்பதை நமக்கு உணர்த்துகின்றன. மோசே தன் சுயமுயற்சியினாலும், தன் சுய சக்தியினாலும், தன் கண்டிப்பினாலும், தன் ஜனத்துக்கு இரட்சிப்புக் கொண்டுவர முயன்றார். தேவன் அவரை அந்த வேலையைச் செய்ய ஆயத்தப்பட நாற்பதாண்டுகள் வனாந்தரத்தில் அடைத்து வைக்கவேண்டியதாயிற்று.

தேவன் பவுலையும், சீலாவையும் ஐரோப்பாவில் போய்ச் சுவிசேஷ வேலை செய்யாதபடி கட்டளையிட்டார். அவர்கள் வந்திறங்கி பிலிப்புப் பட்டணத்தை நோக்கிச் சென்றார்கள். அவர்கள் அடிக்கப் பட்டார்கள். சிறையில் அடைக்கப்பட்டார்கள். அவர்கள் கால்களில் விலங்குகள் மாட்டப்பட்டன. அவர்கள் விசுவாசத்திற்கேதுவாகக் காவலில் வைக்கப்பட்டார்கள். அவர்கள் தேவன்மேல் நம்பிக்கையாயிருந்தார்கள். கஷ்டமான இரவு வேளையிலும் துதி பாடினார்கள். தேவன் விடுதலையும், இரட்சிப்பும் கட்டளையிட்டார்.

யோவான் நாடு கடத்தப்பட்டு பத்மூதீவில் இருந்தார். விசுவாசத்திற்கு ஏதுவாக அவர் அடைக்கப்பட்டார். அவர் அவ்வாறு அடைக்கப்பட்டிராவிட்டால், அவருக்கு அத்தனை அரிய காட்சி கிட்டியிராது.

இதை வாசிப்பவனே, நீ கஷ்டத்திலிருக்கிறாயா? ஏதோ ஒரு பெரிய துக்கம் உனக்கு வந்துள்ளதா? ஒரு பெரிய பொருளை இழந்து விட்டாயா? நீ இக்கட்டான இடத்திலிருக்கிறாயா? திடன்கொள்! கலங்காதே! விசுவாசத்திற்கேதுவாக நீ அடைக்கப்பட்டுள்ளாய்! உன் கஷ்டத்தை சரியானபடி அர்த்தப்படுத்து. அதைத் தேவனிடம் ஒப்புவி. 'அவர் எல்லாவற்றையும் நன்மைக்கென்றே நடத்துகிறார்' என்பதற்காக அவரைத் துதி. தேவன் தமக்காகக் காத்திருப்பவர்களுக்குக் கிரியை செய்கிறார். மற்றப்படி ஒருபோதும் வந்திருக்கக் கூடாத பாக்கியங்களும், தேவனுடைய உதவியும், வெளிப்படுத்துதலும் இக்கஷ்டத்தினால் உண்டாகும். நீ விசுவாசத்திற்கேதுவாக அடைக்கப்பட்டிருந்தால் நீ மட்டும் அன்றி வேறு அநேகரும் பெரிய ஒளியையும் ஆசீர்வாதத்தையும் அடைவார்கள்.

மனிதனும் மலையும் சந்திப்பதால்,
பெரிய காரியங்கள் செய்யப்படும்
தெருவில் மற்றவர்களோடு இடிபட்டுச்
செல்வதால் அவை செய்யப்படா.

## ஆகஸ்ட் 26

'அது என்னிடத்தில் இல்லை' (யோபு 28:14).

ஒரு கோடைகாலத்தில் நான் கடற்கரைக்குப்போவது அவசியம் என்று கடற்கரைக்குச் சென்றேன். அப்போது சமுத்திரம் 'அது என்னிடத்தில் இல்லை' என்பதுபோல் தோன்றினது. சமுத்திரம் எனக்குச் செய்யும் என்று நான் நம்பியிருந்த காரியங்கள் அங்குக் கிடைக்கவில்லை. மலை எனக்கு இளைப்பாறுதல் அளிக்கும் என்று சொல்லி மலைக்குப் போனேன். அதிகாலையில் நான் பார்க்க வேண்டிய மலைகளை ஆவலுடன் கண்டேன். அதுவும் 'அது என்னிடத்தில் இல்லை' என்றது. அது எனக்குத் திருப்தியளிக்கவில்லை. ஆம்! எனக்குத் தேவ அன்பென்னும் விரிந்த சமுத்திரமும், அவருடைய சத்தியம் என்னும் உயர்ந்த மலைகளுமே வேண்டியவை என்று கண்டேன். பொன், மணி, அணிகலன்கள் இவையெல்லாவற்றிற்கும் மேலானதாகிய ஞானத்தையே கடல் தன்னிடமில்லை என்று சொல்லிற்று. கிறிஸ்துவே நமது ஞானமாகவும் நமக்கு அது அவசியமான பொருளாகவும் இருக்கிறார். அவரது மாறாத சிநேகத்தையும் அன்பையும் அறிவதாலேயே நமது உள்ளத்தின் சஞ்சலத்தைத் தீர்க்கலாம்.

—மார்க்கரட் பாட்டம்

1 'என்க்கருமையானவர் வசிக்கும் லீலி புஷ்பங்களுக்குள்ளும்
பிசின் மரங்களுள்ள மலைகளிலும்
என் இதயத்தை வைத்துள்ளேன்,
அவருடைய வெண்சிம்மாசனத்தின் ஒளியிலும்,
அதில் வீற்றிருப்பவரின் புன்னகையிலும் மகிழுவேன்
அவருடைய நிறைந்த கேசத்தில் மிளிர்ந்து
அவருடைய சிறந்த முகத்தை அழகுபடுத்தும் மகிமையில்
என் பொக்கிஷம் உண்டு; அங்கே என் இதயமும் உள்ளதே.

2 தம் சிநேகத்தால் இவ்வுலக வாழ்வை இன்பமாக்கி
சாவை இன்னும் மதிப்புள்ளதுமாக்கிய
அவரிடமே என் இதயத்தை வைத்துள்ளேன்
அவர் உன்னதமானவரும், பட்சமானவரும் தைரியசாலியுமா
யிருக்கிறார்
மன்னிக்கத் தயாராயுள்ளார்; மீட்கப் பலமுடையவர்
அவருடைய அழகிய பரிசுத்த ஆவி பரலோகத்தை இனிமை
யாக்கும்
அவ்விடத்திற்கே என் ஜெபங்களை ஏறெடுக்கிறேன்
என் இதயமும் என் பொக்கிஷமும் அங்கேயே உண்டு.'

கழுகை நீ காட்டில் நிறுத்திவைக்க முடியாது. அதைச் சுற்றிலும் பட்சியை இனிமையாகப் பாடச் செய்யலாம். அது தங்க ஒரு சிறந்த சவுக்கு மரத்தைக் கொடுக்கலாம். ஆனால் அது அவைகளை எல்லாம் வெறுத்துத் தள்ளும். உன்னதமான மலைகளை நோக்கிச் செட்டை விரித்து, மலைகளின் மத்தியிலுள்ள தன்னுடைய முன்னோர்களின் இருப்பிடத்திற்கும் பாறைகளின் வெடிப்புக்களின் மத்தியில் உண்டாகும் புயல், நீர்வீழ்ச்சியின் கீதத்திற்கும் பறந்துபோய்விடும்.

மனிதனின் ஆத்துமாவும் கழுகைப்போல் உயரப் பறந்து நித்திய கன்மலையிலன்றி வேறெங்கும் தங்காது. அதன் முற்பிதாக்களின் வாசஸ்தலம் பரலோகமே. அதன் கன்மலைகள் தெய்வ இலட்சணங்களே. அது பறந்து செல்வது நித்தியத்தை நோக்கியே, 'தலைமுறை தலைமுறையாக தேவரீரே எங்களுக்கு அடைக்கலமானவர்.'

தேவனே என் இன்பமெல்லாம்
கிறிஸ்துவே என்னை அங்குக் கொண்டுவந்தார்

1 நான் அவர் கரத்தில் படுத்துக்கொண்டேன்
அவர் என்னைப் பயமின்றி தூக்கிச் சென்றார்
பரிசுத்தத்தில் அவரோடு வாழ
மனிதக் காலடி ஸ்தலத்திற்குக் கொண்டு சென்றார்
நான் அவரில் வாழ்ந்து களித்திருக்கச் சொன்னார்
பரிசுத்த ஸ்தலமே! அழகுள்ள வாசஸ்தலமே!
தேவனுடைய பிள்ளையாகிய நாங்கள் உன்னில் வாழுவோம்.

2 'என் இன்ப இல்லம் தேவனே' முன்பு அப்படியல்ல
வெகு தொலை தூரம் இரவும் பகலும் நான் நடந்து
என்னுள் ஒரு வழி கண்டுபிடிக்க நாடினேன்
என்னால் ஒன்றும் ஆகவில்லை, என்வழி நான் செல்லவேண்டிய
இடத்தை நெருங்கவில்லை
என் சுய முயற்சி தவறியது, நான் திகில் கொண்டேன்
பின்பு நான் கிறிஸ்துவே வழி என்று கண்டேன்
அவரிடம் வந்து தங்கித் தரிக்க வேண்டும் என்று
தேவன் என்னிடம் சொன்னார்.

3 இப்போது 'தேவனே என் இன்ப இல்லம்' அதன் அடைக்
கலத்தில்
தேவன் இவ்வுலக வாழ்க்கையில் கஷ்டங்களை நோக்கிப்
புயலிலும் மழையிலுமிருந்து தற்காக்கிறார்
தேவன் என் கவலைகளைத் தம்மேல் எடுத்துக்கொண்டார்
அது ஆச்சரியமான இடம், அது அழகுவாய்ந்த வாசஸ்தலம
கடவுளின் பிள்ளையான நான் அங்கே பத்திரமாயிருக்கிறேன்.
ஆண்டவரே, நீர் என்னிலும் நான் உம்மிலும் வசிப்பதால்
உமக்கின்றி மற்ற யாவற்றிற்கும் என்னை மரிக்கச் செய்யும்
இந்த அழகிய வீட்டில் தங்கும்போது
என் ஆத்துமா எல்லாவற்றிலும் எங்கும்
உம்மையே என்றும் காணட்டும்
தேவனே என் இன்ப இல்லம்.

## ஆகஸ்ட் 27

'அவர் அவனை ஜனக்கூட்டத்தை விட்டுத் தனியே அழைத்துக்கொண்டு போனார்' *(மா. 7:33).*

பவுல் கிறிஸ்துவுக்காக ஊழியம் செய்வதில் உண்டான கஷ்டங்களைச் சகித்தது மாத்திரமல்ல, அவற்றைச் சிறையில் தனிமையாய்ச் சகித்தார். நீ கடினமான உழைப்பை அதிக வேதனையோடும் சகித்துச் செய்யலாம். ஆனால், அதற்காக நீ சிறையில் வைக்கப்படும்போது, மார்க்க விஷயமான எல்லா ஊழியத்திற்கும் விலகி இருக்க நேரிடும்போது மனமுடைந்து போகலாம். தளர்வடையலாம். மேகங்களுக்கு மேலாக எவ்வளவு தூரமும் அயர்வின்றிப் பறந்து செல்லும் ஓர் பறவை அது கூட்டில் அடைப்பட்டு வீணாய்த் தன் செட்டைகளைத் தன்னைச் சூழ்ந்திருக்கும் கம்பகங்ளில் மோதும்போது வெகுவாய்த் தளர்ந்துவிடும். மகிமையான கழுகு அடைக்கப்பட்டிருக்கும் கூட்டில் செட்டைகளையும், தலையையும் தொங்க விட்டுக்கொண்டு பரிதாபமாய் ஏங்கி நிற்பதை நாம் பார்த்திருக்கிறோம். அப்போது அது செயலற்று நிற்பதால் ஏற்படும் துக்கத்தின் ரூபமாகவே காணப்படுகிறது.

பவுல் சிறையிலிருந்தார். அது அவருடைய வாழ்க்கையில் மற்ருெரு பகுதி. அதை அவர் எப்படிச் சகிக்கிருர் என்பதைப் பார்க்க விரும்புகிருயா? அவர் சிறையின் சுவருக்கு மேலாகவும் சத்துருக்களின் நிலேக்கு மேலாகவும் எட்டி நோக்குவதை நான் காண்கிறேன். அவர் தாம் பெஸ்துவின் கைதியென்ருே, இராயனின் கைதியென்ருே, அல்லது சனதரீம் சங்கத்தாரின் இரை என்ருே தாம் எழுதிய பத்திரத்தில் கையொப்பம் இடாமல் 'உன்னத தேவனின் கைதி' என்று கையொப்பமிடுவதைக் காண்கிறேன். அவர் அவற்றிலெல்லாம் தேவனுடைய கரத்தையே கண்டார். அவருக்குச் சிறை அரண்மனேயாய் விளங்குகிறது. அதன் முற்றங்க ளெல்லாம் துதியும் களிப்புமாய் எதிரொலித்து நின்றன.

பவுல் தாம் ஆவலாய் செய்துவந்த சுவிசேட ஊழியத்தைச் செய்யத் தடை ஏற்படவே ஒரு புதுப் பிரசங்க மேடை அமைத்தார். அது ஒரு சாட்சிப் பீடமுமாயிருந்தது. கட்டுக் காவலிலிருந்த அந்த இடத்திலிருந்து கிறிஸ்தவ சுயாதீனத்துக்குரிய இனிய மிகப் பயனுள்ள ஊழியம் நடைபெற்றது. சிறையின் இருளிலிருந்து அருமையான ஒளியின் செய்தி வருகிறது.

பவுலுக்குப் பின்வரிசையாய்ச் சிறைப்பட்ட பக்தரைப்பற்றிச் சிந்திப்போம். பனியன் என்பவர் பெட்போர்ட் சிறைக்கூடத்தில் காவலில் வைக்கப்பட்டபடியால் அவர் வாய் பன்னிரண்டு ஆண்டுகள் அடைக்கப்பட்டிருந்தது. அந்த இடத்திலேதான் அவர் மகா சிறந்த ஊழியத்தைச் செய்தார். வேத புஸ்தகத்திற்கு அடுத்தபடியாய் உலகெங்கும் அதிகமாய் வாசிக்கப்படும் ஒப்புயர்வற்ற 'மோட்ச பிரயாணம்' என்ற புத்தகத்தை அங்குத்தான் எழுதினுர். அவர் 'நான் சிறையில் வெகு சௌகரியமாயிருந்து உட்கார்ந்து எழுதினேன். மிகுந்த சந்தோஷமே என்னே எழுதச் செய்தது' என்று சொல்லுகிருர்.

அவர் கண்ட அதிசயக் கனவு களேப்படைந்த அனந்த யாத்ரீகர் களுக்குப் பாதையின் வெளிச்சமாய் விளங்கியிருக்கிறது. இனிய குணமுடைய பிரான்ஸ் தேசத்தாரான கையான் என்ற அம்மையார் சிறையில் அநேக ஆண்டுகள் இருந்தார்கள். கூண்டிலிருக்கையில் இனிய கீதங்களேப் பாடும் பட்சிகளேப்போல் அவருடைய ஆத்தும சங்கீதம் சிறையின் சுவர்களேத் தாண்டிச் சென்று மனமடிவுற்ற அநேக இதயங்களின் இருளேப்போக்கினது.

தனித்திருக்கும் இடங்களிலிருந்து ஊற்றப்பட்ட தெய்வீக ஆறுத லுக்கு ஓர் அளவுமுண்டோ?

1 களேப்பு மிஞ்சுங்கால் இளேத்த பாவியேன்
இளேப்பாறவும் இன்பக் கிறிஸ்துவின் கரத்தால்
என்றும் ஊக்கம் பெறவும்
அன்பின் இயேசுவால் தனித்து நடத்தப்படுவேன்.

2 தனித்து இருள் மிஞ்சிய நேரத்தினில்
இனியோர் ஆறுதலும் பெறேன், என் கையில்
இன்பக்குரல் கேட்டு ஆறுதல் அடைந்திட
அன்பின் இயேசுவால் தனித்து நடத்தப்படுவேன்.

3 அவருடன் தனித்துச் சந்தோஷிக்க
அவருடைய அன்பின் சத்தம்
என்றும் எவ்வமைதி இருளிலும் யான் கேட்க
அன்பின் இயேசுவால் தனித்து நடத்தப்படுவேன்.

4 அன்பின் இயேசுவால் தனித்து நடத்தப்படுகையில்
எந்த வனத்தைக் கண்டும் அஞ்சுவேனே?
முன் என்றும் கேட்டிராததுபோல் அவர் குரல் கேட்டு
என்றும் முகமுகமாய் அவரைத் தரிசிக்கையில்

## ஆகஸ்ட் 28

'அங்கே அவர்களைச் சோதித்தார்' (யாக். 15:25).

ஒரு உருக்கு இரும்பு ஆலையின் சோதனை அறையில் நான் ஒருநாள் நின்றேன். சுற்றிலும் பற்பல சிறு அறைகள் இருந்தன. உருக்கு நன்றாய்ச் சோதிக்கப்பட்ட பின்பு, அத்தகைய பாகத்தை அதனால் தாங்க முடியாமல்போயிற்று என்று அதன்மேல் குறித்திருந்தார்கள். சில துண்டங்களை உடையும் வகையில் திரித்து முறுக்கி எவ்வளவு பலத்தோடு முறுக்கினால் அது உடையும் என்பதை எழுதியிருந்தனர். வேறு சிலவற்றை உடையும் வரையில் இருந்து எவ்வளவு பலத்தோடு இழுப்பதை அவை தாங்கும் என்றும் குறித்திருந்தனர். இன்னும் சிலவற்றைப் பலமாக அழுத்திச் சோதித்து அவற்றை நசுக்க எவ்வளவு பலம் தேவை என்றும் காட்டியிருந்தனர். அந்த ஆலையின் அதிகாரி ஒவ்வொரு உருக்குத் துண்டும் எவ்வளவு வலிமையுள்ளது என்பதை நன்றாகச் சோதித்து அறிந்திருந்தார். அவற்றைப் பெரிய கப்பல்களில்—கட்டிடங்களில் அல்லது பாலங்களில் வைத்தால் எவ்வளவு பாரத்தை அவற்றால் தாங்கமுடியும் என்பதையும் அறிந்தனர். அவற்றைச் சோதனை அறையில் சோதித்ததனால் இது தெளிவாயிற்று.

அப்படியே தேவனுடைய பிள்ளைகளுக்கும் நடக்கிறது. தேவன் நம்மைக் கண்ணாடிப் பாத்திரங்கள் போன்றும், சீமை மண் பாத்திரங்கள் போன்றும் வைத்திருக்க விரும்புகிறதில்லை. முறுக்கேற்றினாலும் பார அழுத்தத்தினாலும் முறியாத உரம் பெற்ற உருக்குத் துண்டுகளாக நாம் இருக்கவேண்டுமென விரும்புகிறார்.

வெதுவெதுப்பான செயற்கை அறைகளில் வளரும் பலவீனமான செடிகளாய் நாம் இருப்பதை அவர் விரும்புகிறதில்லை. நாம்

புயலிலும் காற்றிலும் அடிபட்டு உரம் பெறும் தேக்கு மரமாயிருக்க வேண்டுமென விரும்புகிறார். காற்றில் வீசியெறியப்படும் மண் மேடுகளாயிராமல் எந்தக் கடும் புயலையும் பொருட்படுத்தாது நிற்கும் கருங்கற்பாறையாக நாம் இருக்கும்படி விரும்புகிறார். அப்படி நம்மை ஆக்கும்படி ஆண்டவர் நம்மைத் துன்பம் என்னும் சோதனை அறைக்குள் கொண்டுவரவேண்டியது அவசியமாகிறது. நம்மில் அநேகர் அனுபவத்திலிருந்தே துன்பம் என்பது நமது விசுவாசத்தைச் சோதித்தறியும் கடவுளின் சோதனை அறை என்று உணர்ந்திருப்போம்.

விசுவாசத்தைப்பற்றிப் பேசுவதும் அதைக் குறித்துக் கொள்கைகள் சொல்வதும் வெகு எளிது. தேவன் நம்மை அடிக்கடி உருக்கு உலையில் போட்டுக் களிம்பை நீக்கி நம்மிலுள்ள பசும் பொன்னை வெளிப்படுத்துகிறார். நம்முடைய வாழ்க்கையாகிய கொந்தளிக்கும் கடலைப் புயல் கிழித்து அலைக்கழிப்பதனால், இயேசு நமக்கு அருமையானவராக்கப்பட்டால் நாம் அதிர்ஷ்டசாலிகளே! கிறிஸ்து இல்லாமல் அமர்ந்த தண்ணீரில் செல்வதைவிடக் கிறிஸ்துவோடு கொந்தளிக்கும் கடலில் செல்வது மேல்.

'துன்பத்தால் தேவன் நமது வாழ்க்கையை விலையுள்ளதாக்காவிட்டால் என்ன நேரிடும்?'

## ஆகஸ்ட் 29

'அவர் தம்முடைய சிலுவையைச் சுமந்துகொண்டு போனார்' (யோ. 19:17).

'மாற்றப்பட்ட சிலுவை' என்று ஒரு ஆங்கிலச் செய்யுள் உண்டு. தன்னைச் சுற்றியுள்ளவர்களுடைய சிலுவையைவிடத் தன் சிலுவை அதிகக் கனமானதென்றும், அதனால் தன் சிலுவை தவிர மற்ற யாருடைய சிலுவையானாலும் தனக்கு எளிதாக இருக்கும் என்றும் எண்ணின ஒரு பெண்ணை பற்றிய கவியே அது. அவள் தூங்கும் பொழுது ஒரு கனவு கண்டாள். அந்தக் கனவில் ஒருவர் அவளை அநேக விதமான வடிவங்களும், உருவமும் உடைய பல சிலுவைகள் கிடந்த அறைக்கு அழைத்துச் சென்றார்.

அவற்றில் அழகான முத்துப் பதித்த தங்கச் சிறு சிலுவை ஒன்றிருந்தது. உடனே அப்பெண்: 'ஆகா நான் இச்சிலுவையை வெகு சௌகரியமாகச் சுமந்து செல்வேன்' என்று சொல்லிக் கொண்டே அதைத் தூக்கினாள். என்ன நேர்ந்ததென்றால் அவளுடைய பலவீனமான உடம்பு அதன் பாரத்தைத் தாங்காமல் நடுக்கம் கொண்டது. அதிலுள்ள முத்தும் பொன்னும் அழகாய்த் தான் இருந்தன. ஆனால், அவை தூக்கமுடியாத கனமாயிருந்தன.

அடுத்தாற்போல் அழகிய வேலைப்பாடுள்ள பூச் சுற்றப்பட்டிருந்த கண்ணுக்கினிய சிலுவையைக் கண்டாள். அதுதான் தனக்கு ஏற்றது என்று எண்ணினுள். அதைத் தூக்கினுள். அதில் சுற்றப்பட்டிருந்த மலர்களுக்கடியில் கூர்மையான முட்கள் இருந்தன. அவை அவளுடைய சதையைப் பீறிவிட்டன.

இப்படிப் பார்த்துக்கொண்டே இறுதியில் ஒரு சாதாரண சிலுவையைக் கண்டாள். அதில் வேலைப்பாடும் இல்லை. முத்துக்கள் பதிக்கப்பட்டும் இல்லை, அதில் சில அன்பு நிறைந்த வார்த்தைகள் பொறிக்கப்பட்டிருந்தன. அதுதான் அவளுக்கு ஏற்றதாய் எளிதில் தூக்கத்தக்கதாய் இருந்தது. அதை அவள் பரலோக திவ்ய ஒளியில் உற்று நோக்கினபோது, அது தன்னுடைய பழைய சிலுவை என்று கண்டாள். உடனே அவள் அதுவே தனக்குத் தகுதியானதென்றும், எளிதான பாரம் உடையதென்றும் திட்டமாகக் கண்டு கொண்டாள்.

ஆகவே, நாம் சுமக்கத்தகுந்த சிலுவை இன்னதென்று தேவன் நன்ருயறிவார். மற்றவர்களின் சிலுவை எவ்வளவு பாரமானது என்பதை நாம் அறியோம். பணமுடையவர்களாக இருப்பவர்களைப் பார்த்து நாம் பொருமை கொள்ளுகிருேம். அவளுடைய சிலுவை முத்துப் பதிக்கப்பட்ட சிலுவைதான். ஆனுல், அது எவ்வளவு பாரமானது என்று அறியோம். அங்கே மற்ருெரு பெண் இருக் கிருள். அவள் வாழ்க்கை வெகு அழகாயிருக்கிறது. பூச் சுற்றப் பட்ட சிலுவையை அவள் சுமக்கிருள். நாம் மற்றவர்களுடைய சிலுவையைச் சிறிதளவு சுமந்து பார்ப்போமானுல், நம்முடைய சொந்தச் சிலுவை நமக்கு ஏற்றது என்ற முடிவிற்கு வருவோம். அவற்றில் ஒன்றும் நம்முடையதைப்போல் நமக்குத் தகுதியானதல்ல என்று அறிந்துகொள்வோம்.

பொறுமையிழந்து உன் சிலுவையைக் கைதவற விடுவாயானுல்
இவ்வுலகில் நீ அதைத் திரும்பப் பெறமாட்டாய்
மறு உலகிலும் காணமாட்டாய். இங்கு மாத்திரமே
தேவனுக்காய் நீ கஷ்ட மனுபவிக்கக் கூடும்
வரும் உலகில் நீ அவரைப் பூரணமாய்
நேசித்துப் பணி செய்யலாம்.
களிப்போடு அவரண்டை நெருங்கி வரலாம்.

அங்கு இவ்வுலகிலடைந்த கஷ்டங்களை ஒருபோதும் அனுபவிக்க நேராது.

ஆகையால் நீ இரண்டொரு மணி நேரம் பாடனுபவிக்கக்
கூடாதா?

'நீ விடுதலை வேண்டும் என்று ஜெபிக்கிற
கடின சிலுவை முடிந்தது' என்று சொல்லி
அவர் உன் சிலுவையை விட்டுவர இன்று அழைத்தால்
நீ செய்ததற்காகச் சிறிது வருத்தம் உனக்கு உண்டாகாதா?

நீ அவரை நோக்கி இவ்வளவு சீக்கிரமாகவா வரவேண்டும்
'நான் திரும்பப்போய் என் சிலுவையை
இன்னும் சிறிது காலம் பொறுமையாய்ச் சகிக்கவிடும்,
நான் இன்னும் தேவனை துதிக்கவில்லையே' என்பாய்.
நாம் விரும்பும் அழைப்பு எப்பொழுது வந்தாலும்
அது சீக்கிரம் வந்ததாகவே தோன்றும்
ஆகையால் இப்பொழுதே தேவனை மகிமைப்படுத்துவோம்.

## ஆகஸ்ட் 30

*'கப்பலேறிக் கடல் யாத்திரைபண்ணித் திரளான தண்ணீர்களிலே தொழில் செய்கிறார்களே, அவர்கள் கர்த்தருடைய கிரியைகளையும், ஆழத்திலே அவருடைய அதிசயங்களையும் காண்கிறார்கள்' (சங். 107:23,24).*

வாழ்க்கையில் வீசும் எந்தக் காற்றும் பரலோகத்திற்கு ஏற்றது என்று அறியாதவன் தேறினவன் அல்ல, பழகுபவனே. எவனொருவனுக்கும் ஏற்காத காரியம் செயலற்று, அசைவற்று நிற்பதே யாகும். காற்றானது வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய திசையிலிருந்து வீசினாலும் பரவாயில்லை. ஒவ்வொன்றும் துறைமுகத்தை அடையச் செய்யும். கடலில் மத்தியில் வந்துகொள்! பயப்படாதே! கார்ன்வால் தேசத்து வயோதிகன் ஜெபித்ததுபோல, 'ஆண்டவரே! எங்களைக் கடலுக்குள்போகச் செய்யும். ஆழமான தண்ணீருக்குள்ளே அனுப்பும். இங்கே நாங்கள் பாறைக்குச் சமீபத்தில் இருக்கிறோம். சாத்தானிடமிருந்து வரும் முதல் காற்றால் எங்கள் கப்பல் பாறையில் மோதிச் சின்னபின்னமாகும். மகிமையான வெற்றி பெறும்படி ஏராளமான இடம் கிடைக்கத்தக்கதாய் எங்களை ஆழமான கடலுக்குள் அனுப்பும்' என்று நாம் ஜெபிக்கவேண்டும்.

—மார்க் கை பியர்ஸ்

நம்முடைய சோதனை காலத்தில்தான் நமக்கு விசுவாசம் அதிகம் உண்டு என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். சோதனைக்கு நிற்காமல் ஓடுவது சரீரப் பிரகாரமான நம்பிக்கையே. நமக்கு நல்ல காலமாக இருக்கும்பொழுது மட்டும் விசுவாசிப்பது விசுவாசமல்ல.

—சி. எச். ஸ்பர்ஜன்

## ஆகஸ்ட் 31

*'காணாதிருந்தும் விசுவாசிக்கிறவர்களே பாக்கியவான்கள்' (யோ. 20:29).*

பார்க்கின்ற வஸ்துக்கள் வீசும் வஞ்சக வலை எவ்வளவு பலமாயிருக்கின்றது. ஆகையால், தேவன் நம்மைக் காணாதிருக்கிற வஸ்துக்களில் வைத்திருப்பது எத்தனை அவசியமானது! பேதுரு தண்ணீர்மேல் நடப்பதானால் நடந்துதான் ஆகவேண்டும். நீந்துவ

தாஞல் நீந்தவேண்டும். ஆஞல், அவன் இரண்டையும் செய்ய முடியாது. ஒரு பறவை பறப்பதாஞல் வேலி, மரங்கள் முதலியவை களுக்கு மேலாக எழும்பித் தன் பலமுள்ள செட்டைகளை நம்பிப் பறக்கவேண்டும். அது தரைக்கு எளிதாய் வரத்தக்கவிதமாய்த் தன்னை வைத்துக்கொண்டால் அது திறமையாய்ப் பறக்கமுடியாது.

தேவன் ஆபிரகாமைப் பலத்தின் இறுதியையடையச் செய்து, தமது சரீரத்திஞல் ஒன்றும் செய்யமுடியாது என அவரை அறியச் செய்தார். அவர் தமது சரீரத்தை இறந்ததாகக் கருதி முழு வேலை யையும் தேவனிடமே விட்டுவிட வேண்டியதாயிற்று. அவர் தன்னை ஒரு பொருட்டாக எண்ணுது தேவனையே முற்றிலும் நம்பியபோது, தேவன் வாக்குத்தத்தம் செய்ததை நிறைவேற்றவல்லர் என்பதை அறிந்தார். இதையே தேவன் நமக்கும் கற்பிக்கின்ருர். முதலில் தைரியமளிக்கும் நல்ல பயன்களை நமக்குக் கொடாமல் அவற்றின் உதவியின்றியே தம்மை நம்பக் கற்றுக்கொடுக்கிருர். பின்பு நாம் நம்பியவாறே தாம் சொன்னவற்றை நமது வாழ்க்கையிலும் நிறைவேற்றி வைக்கிருர். —எ. பி. சிம்ப்ஸன்

அவர் வார்த்தை உண்மை என்று நிரூபிக்கவோ
அன்றி நான் நம்புமுன் அதை எனக்குக் காட்டவோ வேண்டு
மென்று நான் கேட்டதில்லை,
அவர் சொல்வதால் அது உண்மையென்று,
அறியும் அறிவே போதுமானது,
அவரின் மாருத வார்த்தையில் உறுதி கொண்டு
எனக்கு விளங்கும் வரை அதை நம்புவேன்.

—இ. எம். வின்டர்

## செப்டம்பர் 1

'நான் உன் கல்லுகளைப் பிர்காசிக்கும்படி வைப்பேன்' (ஏசா.-14:15).

அந்தச் சுவரிலுள்ள கற்கள், 'நாங்கள் தூரத்திலுள்ள மலையில் குன்றுகளின் பக்கங்களிலிருந்து வருகிருேம். அக்கினியும் தண்ணீரும் யுகாயுகங்களாக எங்கள்மீது வேலைசெய்து, எங்களைக் கரடுமுரடான கற்களாக்கின. மானிடக் கால்கள் எங்களை வீடுகளாகக் கட்டின. நித்திய ஜீவிகளான உங்கள் வம்சத்தின் பிள்ளைகள் இங்கே பிறக் கின்றன, மகிழ்கின்றன, இளைப்பாறுதல் காண்கின்றன. உங்களை யும் என்னையும் சிருஷ்டித்த கர்த்தரால் தமக்குக் குறிக்கப்பட்ட பாடங்களைப் படிக்கின்றன. ஆஞல், நாங்கள் இந்நிலைமைக்கு வர அதிகக் கஷ்டமடைந்தோம். வெடி மருந்து எங்களைத் தகர்த் தெரிந்தது. இரு முனையுள்ள குந்தாலிகள் எங்களைப் பிளந்து உடைத்தன. கல் வெட்டும் குழிகளில் நாங்கள் உருவமற்ற கற்க ளாகக் கிடக்கையில் எம் வாழ்வு திட்டமற்றதும், ஒழுங்கற்றதுமா யிருப்பதாகத் தோன்றிற்று. நாளடைவில் நாங்கள் துண்டு துண்டு

களாக வெட்டப்பட்டோம். எங்களில் சிலர் சிறு கூரான உளிகளால் வெட்டப்பட்டுக் கூரிய ஓரங்கள் உடையவர்களாக்கினுர்கள். ஆனுல், இப்பொழுது நாங்கள் பூரணமாகி எங்களுக்குரிய இடங்களில் பயனுள்ளவர்களாயிருக்கிரேும்.'

'நீங்கள் இன்னும் கல்வெட்டும் குழிகளிலேயே கிடக்கிறீர்கள். பூரணமடையவில்லே. ஆகையால், முன்ஞெருகால் எங்களுக்கு இருந்ததுபோல் உங்களுக்கும் ஒன்றும் புரியாதிருக்கலாம். ஆனுல், உங்களே ஒரு மேன்மையான கட்டடத்திற்காகவே வைத்துள்ளார். ஏதோ ஒருநாள் மனித கரத்தாலல்ல, தெய்வ கரத்தால் பரலோக ஆலயத்தில் உயிருள்ள கற்களாகக் கட்டப்படுவீர்கள்' என்று கூறின.

அசையாத ஆகாயத்தில் சங்கீதம் ஒலிப்பின்றிக் கிடக்கின்றது
செதுக்கப்படாத கல்லில் அழகு மறைந்திருக்கிறது
சங்கீதமும் அழகும் உண்டாக்கப்பட
பரம எஜமானரின் ஸ்பரிசமும் கூரிய ஒளியுமே தேவை
பரம எஜமானே, உம்முடைய திறமை வாய்ந்த கரத்தால்
என்னேத்தொடும்.
எங்களிலுள்ள கீதம் மடியாதபடி செய்யும்
பெரிய சிற்பியே வெட்டி மெருகு கொடும்
அரிய உம்முகம் எங்களில் வெளிப்படும்படி செய்யும்.

## செப்டம்பர் 2

'அவர் நிமித்தம் பாடுபடுவதற்கும் உங்களுக்கு அருளப்பட்டிருக்கிறது' (பிலி. 1:29).

தேவன் அதிகம் செலவாகும் ஒரு பள்ளிக்கூடம் வைத்திருக்கிருர். அதில் அநேக பாடங்கள் கண்ணீரோடே கற்கப்படவேண்டியவை. ரிட்சர்ட் பாக்ஸ்டர் என்பவர் 'ஆண்டவரே! கடந்த எண்பத்தைந்து வருட காலமாக என் சரீரத்துக்களித்த சிட்சைக்காக நான் உமக்கு நன்றி சொல்லுகிறேன்' என்ருர். கஷ்டத்தை வெற்றியாக்கியவர் இவர் ஒருவர் மாத்திரமல்ல.

நம்முடைய பரம பிதாவின் இந்தப் பள்ளிக்கூடம் சீக்கிரமே முடிந்துவிடும். ஏனெனில், அதன் நாட்கள் தினமும் குறைந்துக் கொண்டே வருகின்றன. கடினமான பாடத்திற்கு நாம் தயங்காமலும் அவருடைய சிட்சையின் கோலுக்குப் பயப்படாமலும் இருக்க வேண்டும். இதில் கடைசிவரை சகித்து, மகிமையில் பட்டம் பெற்று விடுவோமாஞல் மேன்மையான கிரீடம் நமக்குரியதாகும். மோட்சலோகம் அதிக இன்பம் நிறைந்த இடமாகும்.

அதிக மேன்மையான சீமை மண் பாத்திரங்கள் மூன்று முறை நெருப்பில் காய்ச்சப்படுகின்றன. 'டிரஸ்டன் சைஞ' என்னப்பட்ட விலேயுயர்ந்த பாத்திரங்கள் மும்முறை காய்ச்சப்படுகின்றன.

அத்தனை அதிக வெப்பமான அக்கினிக்குள் அவை ஏன் போகவேண்டும்? ஒரு தடவை அல்லது இரண்டு தடவை நெருப்பில் போட்டால் போதாதா? அவற்றிலுள்ள சிவப்பு நிறமும் பொன் நிறமும் துலக்கமாகத் தோன்றவும் அவை மாருமல் இருக்கவும் மூன்று முறை அக்கினியில் வேகவைக்கப்பட வேண்டியிருக்கிறது.

இவ்வாறே மனித வாழ்க்கையும் உருவாக்கப்படுகிறது. நம்முடைய சோதனைகள் நம்மை ஒருமுறையோ இருமுறையோ அல்லது மூன்று முறையோ வேகவைக்கின்றன. தேவனுடைய கிருபையால் அதில் உண்டாகும் அழகிய வர்ணங்கள் அதில் எப்பொழுதும் துலக்கமாக இருக்கும்.

பூமியிலுள்ள அழகுமிக்க மலர்கள் சமவெளியில் மலர்வதில்லை, பூமியதிர்ச்சியினுல் பிளக்கப்பட்ட நிலமே பின்பு செழிப்புள்ள நிலமாகும். சுழல் காற்று யாவற்றையும் அழித்துச் சென்ற பின்பு, எரிமலைக் குழம்பு, நிலத்தில் எங்கும் பரவி மூடிய பின்பு, தேவனுடைய அமைதியான வார்த்தை அந்த நிலத்தை மறுபடியும் பண்படுத்துகிறது. பிளக்கப்பட்ட கற்பாறைகளினின்றும் அழகான வெடிப்புகளினின்றும் நீர் ஊற்றுக்கள் எழுகின்றன. மாலை நேரத்தில் பனி பெய்கிறது. தேவ தூதர்கள் இரவில் அங்கு வளரும் காட்டு மலர்களைக் கவனித்துக்கொள்கின்றனர். காலையில் அவ்விடத்தைக் கடந்து செல்லும் அன்பர் அம்மலர்களைப் பறிப்பர்.

## செப்டம்பர் 3

**'அவர்கள் தண்டுவலிக்கிறதினுல் வருத்தப்படுவதை அவர் கண்டார்' (மா. 6:48).**

தேவன் மனிதனுக்கு அருளும் வேலையை மனிதன் அதிக உழைப்பினுலும், தன்னைக் கஷ்டப்படுத்திக் கொள்வதாலும் செய்து முடிக்க முடியாது. தம்மைக் கஷ்டப்படுத்தி உழைக்காதவரும், அளவுக்கு மிஞ்சி உழைக்காதவருமான தேவன் மாத்திரமே தம்முடைய பிள்ளைகளுக்குக் கொடுத்த வேலையைச் செய்து முடிக்க முடியும். அவர் செய்வார் என்று நம்பி, இளைப்பாறினுல் அது நன்ருகச் செய்து முடிக்கப்படும். கிறிஸ்துவில் விசுவாசத்தினுல் பூரண பங்குள்ளவர்களாகி, அவரை நம் வாழ்க்கையின் நிறைவாக்கிக்கொண்டால் அவரையே நம்முடைய வேலையைச் செய்யவிடுபவர்கள் ஆகிருேம்.

இந்த இரகசியத்தை அறிந்த ஒருவர் 'நான் கிறிஸ்துவண்டை வந்து பானம் பண்ணினேன். நான் இனி ஒருபோதும் தாகம் அடையமாட்டேன் என்று நம்புகிறேன். என்னுடைய சட்டவாக்கியம் மிதமிஞ்சிய வேலையல்ல, ததும்பி வழிதலே. இது என் வாழ்க்கையை முற்றிலுமாய் மாற்றிவிட்டது' என்ருர்.

ததும்பி வழிதலே பிரயாசம் ஒன்றுமில்லை. அது தன்னைமீறி வழி கின்றது. சர்வ சக்தியுள்ளதும் விடாது காரியத்தை நடப்பிப்பது மான சாதாரண வாழ்க்கையை நடத்தவே கிறிஸ்து நம்மை எப்போதும் அழைக்கிறார்.

1 நீ நன்றாய் அமர்ந்திரு! இதுவே ஆண்டவரை மகிமைப்படுத்தும் வாழ்க்கை.

எப்போதும் வேலைசெய்து கொண்டிருப்பவர் அல்லர்.
அவருடைய வார்த்தையை நம்பி ஓய்ந்திருப்போரே சிறந்த ஊழியம் செய்வோர்.

நீ நன்றாய் அமர்ந்திரு; உன் இருதயம் கலங்கி விடாதே
சிறிது கலங்கினாலும் அமைதலான
தண்ணீரில் பிரதிபலிக்கும் அழகிய பிம்பம்
மறைந்து போய் விடும்.
அமர்ந்திருந்து அவர் சாயலைத்தரித்துக்கொள்.

2 நன்றாய் அமர்ந்திரு, என் ஆத்துமாவே ஓய்வே ஊழியமாகும்.
அமைதியான இருதயத்திற்குத் தேவன் தமது இரகசியத்தைச் சொல்லுவார்.

அதனால் நீ காத்திருக்க, கவனிக்க, உழைக்கப் படித்துக் கொள்வாய்
கிறிஸ்து உன்னில் வசிப்பதால் சகிக்கப் பலமடைவாய்,

பலவீனமான மனித சரீரத்திலும் கிறிஸ்துவைப்போல் வாழ்ந்து, பிறரை நேசிப்பது பிறருக்குக்கொடுத்து, அவர்களுக்காக வாழ்க்கையைச் செலவிடுவதே தேவனுக்குகந்த ஊழியமாகும்.

3 'நீ அமர்ந்து ஓய்ந்திரு.' தேவன் யார்? என்று வினவுவோருக்கு
நீயே பதிலாவாய், ஏனென்றால் தேவனே இளைப்பாறுதல்
எப்போதும் அவர் இருக்கும் இடத்தில் அமைதியாம்.
அவரில் வசிப்போருக்கு அவ்வமைதியில் பங்குண்டு.
உன்னைச் சுற்றியுள்ள குழப்பத்தை அமர்த்த உதவும்
அவர் இதயத்தை நிரப்பிய தெய்வீக அமைதியே
ஏனெனில் இன்னும் இளைத்தோனை நோக்கி, ஓர் மெல்லிய சப்தம்
'என்னிடத்தில் வந்து இளைப்பாறு' என்று சொல்லுகிறது.
'உயிர்த்தெழுதலின் அமைதியில் உயிர்த்தெழும் வலிமை உண்டு.'

—பரேடா ஹஸ்பரி ஆலன்

## செப்டம்பர் 4

'நீங்கள் எக்காள சத்தத்தைக் கேட்கும்போது ஜனங்கள் எல்லாரும் மகா ஆரவாரத்தோடே ஆர்ப்பரிக்கக் கடவர்கள்; அப்பொழுது பட்டணத்தின் அரங்கம் இடிந்து விழும்; உடனே ஜனங்கள் அவரவர் தங்களுக்கு நேராக ஏறக்கடவர்கள்' (யோசு. 6:6).

உறுதியான விசுவாசத்தின் ஓங்கிய சப்தம் அவிசுவாசத்தின் முனங்கலுக்கும், அதைரியப்பட்ட இருதயத்தின் அழுகைக்கும் நேர் விரோதமாயிருக்கிறது. ஆண்டவருடைய இரகசியங்களில் இந்த விசுவாச சப்தத்தைப்போன்ற இரகசியம் வேறொன்றும் இல்லை என நினைக்கிறேன். ஆண்டவர் யோசுவாவை நோக்கி: 'இதோ எரிகோவையும் அதின் இராஜாவையும், யுத்த வீரரையும் உன் கையில் ஒப்புக்கொடுத்தேன்' என்றார். 'ஒப்புக்கொடுப்பேன்' என்று சொல்லவில்லை. 'ஒப்புக்கொடுத்தேன்' என்றார். ஆகையினால் ஏற்கனவே அது சொந்தமாயிற்று. அதை உரித்தாக்கிக்கொள்ள வேண்டியது அவர்கள் வேலை. ஆனால் அதை எப்படி உரித்தாக்கிக் கொள்வது என்பதே பெரிய பிரச்சினையாயிருந்தது. அது முடியாதது போல் தோன்றிற்று. கர்த்தர் தமது திட்டத்தைச் சொன்னார்.

அந்தச் சப்தம் சுவர்களை விழச் செய்தது என்று யாரும் எண்ண வழியில்லை. ஆயினும் அவர்களுடைய வெற்றியின் இரகசியம் அந்தச் சப்தத்தில்தான் இருந்தது. ஏனென்றால் அது விசுவாசக் கோஷம். வெற்றியின் அறிகுறியைக் காணுமுன் தேவனுடைய வார்த்தையை மாத்திரம் நம்பி, வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட வெற்றியைக் கொண்டாடத் துணிந்த வெற்றிச் சத்தம். அவர்களுடைய விசுவாசத்தின்படியே தேவன் அவர்களுக்குச் செய்தார். ஆகையால் அவர்கள் கோஷித்தபோது அவர் சுவர்களை விழச் செய்தார்.

தேவன் தாம் அந்தப் பட்டணத்தைக் கொடுத்துவிட்டதாகச் சொன்னார். விசுவாசம் அந்த உண்மை என்று கொண்டது. அநேக நூற்றாண்டுகளுக்குப்பின் பரிசுத்த ஆவியானவர் எபிரேயருக்கு எழுதின நிருபத்தில், அந்த விசுவாச வெற்றியை எழுதச் செய்தார். 'விசுவாசத்தினாலே எரிகோ பட்டணத்தின் மதில்கள் ஏழுநாள் சுற்றிவரப்பட்டு விழுந்தன (எபி. 11:30).

—ஹன்னா வொய்டால்

வெற்றியின் நன்றிகீதம் எழும்பும் வரை
விசுவாசம் உன்னத நிலையினை அடைய முடியாது
இரட்சிப்பாகிய பட்டணத்தின் கதவுகள்
துதியே என்று தேவன் சொல்லியுள்ளார்.

## செப்டம்பர் 5

'அவருக்குக் காத்திருக்கிற அனைவரும் பாக்கியவான்கள்' (ஏசா. 30:18).

கர்த்தரில் காத்திருத்தலைக் குறித்து நாம் அதிகம் கேள்விப் பட்டிருக்கிறோம். அவரில் காத்திருக்க நாம் எத்தனித்திருக்கும் போது நாம் தயாராகும் வரை அவர் நமக்காகக் காத்திருக்கிறார். அவருக்காக நாம் காத்திருக்கையில் அவர் ஆயத்தமாகும்வரை நாம் காத்திருக்கவேண்டும்.

ஏற்பட்ட நிபந்தனைகளைச் சரிவர நடப்பித்தவுடன், தேவன் நமது ஜெபங்களுக்கு விடையளிப்பார் என்று சிலர் சொல்லுகிறார்கள். அநேகர் அப்படித்தான் நம்புகிறார்கள். அவர்கள் தேவனை ஆதி அந்தமில்லாத, 'நிகழ் காலத்தில்' வசிக்கிறார் என்றும், அவரில் இறந்த காலம் இல்லை, வருங்காலமும் இல்லை என்றும், அவர் சித்தத் திற்குக் கீழ்ப்படிந்து, அவர் செய்யச் சொல்வதை எல்லாம் செய்து விட்டால், உடனே நம்முடைய தேவைகள் யாவும் நமக்கு அருளப் படுமென்றும், நம்முடைய ஜெபங்களுக்கும் பதில் உண்டாகும் என்றும், நம்முடைய ஆசைகள் நிறைவேறும் என்றும் சொல்லு கிறார்கள்.

இது அதிக உண்மையே. ஆயினும், இது ஒரு சார்பான உண்மை யையே சொல்லுகிறது. தேவன் ஆதியந்தமில்லாத நிகழ்காலத்தில் வசித்தாலும், தம்முடைய நோக்கத்தைக் காலம் என்பதை அடிப் படையாகக் கொண்டுதான் நடப்பிக்கிறார். கடவுளிடம் ஏறெடுக்கப் பட்ட ஒரு விண்ணப்பம் தரையில் ஊன்றப்பட்ட ஓர் விதையைப் போல் இருக்கிறது. நம்முடைய கட்டுக்கடங்காத உயர்ந்த ஒரு சக்தி விடை என்னும் கனி வரும்வரை அதில் கிரியை செய்ய வேண்டும்.

1 என் வீட்டின் அன்றாட வாழ்க்கையை விட்டு,
இலகுவான பாதையில் செல்ல விரும்பினேன்
மற்ற இடங்களில் தேவ ஊழியத்தைச் செய்ய நினைத்தேன்
ஆனால் இயேசு 'என் வேளை இன்னும் வரவில்லை' என்றார்.

2 என் வேலையில் தடங்கலின்றி, சுயாதீனமாயிருக்க,
வசனமாகிய விதையை, மற்றொரு நிலத்தில் தூவவும்,
மற்ற ஊழியக்காரரோடு சேரவும் எண்ணினேன்.
ஆனால், 'இது நான் எனக்குக் கொடுத்த வேலை அல்ல'
என்றார்.

3 வனாந்தரமான இடத்தை விட்டுப் பாவத்தினாலும்,
அவமானத்தினாலும்
ஆழ்ந்திருக்கும் ஆத்துமாக்களுக்கு ஊழியம் செய்ய
ஆசைப்பட்டேன்.

நான் அவர்களை ஆதாயம் செய்ய விரும்பினேன், ஆனால்
அவரோ,
'நான் உன்னை அதற்கழைக்கவில்லை, என் பெயரைப்
பிரஸ்தாபி' என்றார்.

4 என் இராஜாவின் போரில் ஈடுபட்டு, போர்க்களத்தில்
அவர் கொடியை உயர்த்திப் பிடிக்க விரும்பினேன்.
ஆனால் என் தலைவன் என்னைக் காத்திருந்து,
என் அமைதியான வாழ்க்கையில் அவரது வெற்றியைக்
குறித்துக் கீதம் பாடச் சொன்னார்.

5 நான் தனிமையில் காத்திருக்கும் ஒவ்வாத இடத்தை விட்டு,
மனித உதவி அருகிலிருக்கும் இடத்திற்குச்
செல்ல வாஞ்சித்தேன்; ஆனால் இயேசு என்னை,
'தனிமையாய் நீ கதவண்டை காவலிரு' என்றார்.

6 ஒருவரும் பொருட்படுத்தாத விளங்கிக்கொள்ளாத,
தினசரி வேலையை விட்டுவிட வாஞ்சித்தேன்,
ஆனால் இயேசு நீ அழகான மலராய் மலர்,
'உனக்கு இந்த இடத்தைத் தெரிந்தேன்' என்றார்.

7 இப்போது இங்கானாலும், வேறெங்கானாலும்,
அவர் சித்தம் செய்யவே ஆசைப்படுகிறேன்.
சிலராலும், பலராலும் அங்கே என் வேலை செய்வேன்.
தெரிந்தெடுக்காமையைத் தெரிந்தெடுத்தால் என் இருதயம்
அமைதியாயிற்று.
'பொறுமை' காத்திருக்க மனதாயிருந்தது—மோட்ச
பிரயாணம்

## செப்டம்பர் 6

*'நீரே நிலைத்திருப்பீர்' (எபி.1 :11).*

வெறுமையாயிருக்கும் குளிர் காயுமிடங்கள் எத்தனையோ உண்டு. அதன் பக்கத்தில் தனியே இருந்து, யாரோ ஒருவர் இறந்துபோனதால், வெறுமையான அவரது நாற்காலியைப் பார்த்துக்கொண்டிருக்க நேரிட்டவர்களுக்குக் கண்ணீர் அடக்கமுடியாமல் பொங்கிக் கொண்டுவரும். தனிமையாக இருப்பது கொடூரம். ஆனால் ஒருவர் நமக்கு அருகில் இருக்கிறார். அவர் அருகிலிருப்பதை நாம் உணருவதில்லை. உணர்வோமானால் அதுவே பாக்கியம். உணர்கிறவர்களோ சொற்பம். நம்முடைய மனக்கிளர்ச்சிக்கும், மன நிலைக்கும் ஏற்றவாறு அந்த உணர்ச்சி மாறுகிறது. சரீர நிலையையும், சீதோஷ்ண நிலையையும்கூட அது பொறுத்ததாயிருக்கிறது. மழை, மூடுபனி, நித்திரைக் குறைவு, சுருக்கென்னும் வலி இவைகளுக்குத் தக்கவாறு மனநிலை இருக்கிறது. அது கடவுள் அருகில் இருக்கிறார் என்ற

உணர்ச்சியை மறைக்கிறது. உணர்வதைவிட மேலானதொன்றுண்டு. அது இதைவிடப் பாக்கியமும் சிலாக்கியமுமானது. அது புறத்திலுள்ள காரியங்களைப் பொறுத்தது அல்ல. அது நிலையானதும், ஆச்சரியமானதும், அமைதியளிக்கக்கூடியதும், நம்மைச் சாந்தப்படுத்தக்கூடியதும், ஆறுதலளிக்கக்கூடியதுமான தேவசமுகத்தை அறிவதே நம்முடைய பரம எஜமானின் சுய பிரசன்னத்தை அறியவேண்டும். அவர் இங்கே நமக்கருகில் இருக்கிறார். அவருடைய சமுகம் நிஜமானதே. இதை அறியும் அறிவு உணர்ச்சியை உண்டாக்கும். ஆனால் உணர்ச்சியைப் பொறுத்திராது. இந்தச் சத்தியம் ஒரு பிரசன்னமே; ஒரு பொருளல்ல, ஒரு வாக்கியமல்ல, ஒருவர் நம்மோடு தற்போது இருக்கிறார். அவர் பட்சமான இதயமுள்ள நேசர். சர்வ வல்லமையுள்ள ஆண்டவர். யாரால் உன் துக்கம் உண்டாயிருந்தாலும், உன் கண்ணீர் என்ன காரணத்திற்காகச் சிந்தப்பட்டாலும், இதுவே உன் இதயத்தை மகிழச் செய்யும் சத்தியம்.

1 பூர்வகால மகிழ்ச்சி என் இதயத்தை விட்டகன்றபோதிலும்
என் பழைய பொக்கிஷம் கைமாறிப் போனபோதிலும்,
கர்த்தாவே, நீர் நிலைத்திருக்கிறீர் எப்போதும் மாறாதவரா யிருக்கிறீர்
என்ற சத்தியம் பசியுற்ற என் ஆத்துமாவுக்கு ஆகாரமாகும்.

2 இதயத்தை மகிழ்விக்கும் ஓடைபோன்ற
அருமையான சிநேகிதர் மாறிப்போனாலும்,
ஆதிபன் பிரகாசித்த வானம் மேகத்தால் இருண்டாலும்,
ஆண்டவரே, நீர் நிலைத்திருக்கிறீர், என் இதயத்தில் இருக்கிறீர்.

3 என் பலம்குன்றி, என் கால் தளர்ந்து,
மகிழ்பணி ஆற்ற இயலாதிருக்கையில்,
நான் ஏன் மனந்தளரவேண்டும், நான் ஏன் துக்கிக்கவேண்டும்.
ஆண்டவரே, நீர் நிலைத்திருக்கிறீர், வேறென்னவேண்டும்.

4 இவ்வாறே என் வாழ்நாளெல்லாம்,
சிநேகிதரும், சிநேகமும், குறைந்துபோனாலும்,
ஒரு துக்கமும் என்னைப் பாதிக்காது; நான் கீதம் பாடக்கூடும்
ஆண்டவரே, நீர் என் உள்ளத்தில் நிலைத்திருக்கிறீர்.

—ஜே. டி. சிமித்

## செப்டம்பர் 7

'தேவன் நமக்கு அடைக்கலமும், பலமும், ஆபத்துக்காலத்தில் அனுகூலமான துணையுமானவர்' (சங். 46:1).

'அவர் ஏன் இதற்கு முன்னாகவே எனக்கு உதவி புரியவில்லை?' என்ற கேள்வி அடிக்கடி கிளம்புகிறது. அது அவருடைய திட்டத்தின்

ஒழுங்கு அல்ல. அவர் முதலில் துன்பத்தைச் சகிக்க உன்னை ஆயத்தப்படுத்தி அதிலிருந்து நீ கற்றுக்கொள்ளவேண்டிய பாடத்தைக் கற்றுக்கொள்ளச் செய்கிறார். 'அவனுடைய இக்கட்டில் நான் அவனோடிருப்பேன். அவனை இரட்சித்து, மகிமைப்படுத்துவேன்' என்பதுதான் வாக்கு. முதலில் உன் இக்கட்டில் உன்னோடு இரவும் பகலும் இருப்பார். பின்பு உன்னை அந்த இக்கட்டிலிருந்து விடுவிப்பார். நீ இதைக் குறித்துக் கவலை கொள்ளாதே. கவலை விட்டோய்ந்து அமைதலடையும் வரை விடுதலை வராது. அமைதியடையும்போது 'அது போதும்' என்பார்.

தேவன் தம்முடைய பிள்ளைகளுக்கு அரிய பாடங்களைக் கற்பிக்கவே துன்பங்களைப் பயன்படுத்துகிறார். நம்மைப் பயிற்றுவிக்கவே துன்பங்கள் வருகின்றன. அவற்றின் வேலை முற்றுப் பெற்றபின் அவற்றின்மூலம் மகிமையான பிரதிபலன் வரும். அவற்றில் இனிமையான களிப்பும், மேன்மையும் விளங்கும். அவற்றை அவர் இக்கட்டுகள் என்று எண்ணுவதில்லை. உபயோகிக்கக்கூடிய நற்சமயங்கள் என்றே எண்ணுகிறார்.

இக்கட்டான வேளை கஷ்டம்
துன்பம் இவையின்றி அல்ல,
இவற்றின் மத்தியில்—நடுமத்தியில்
அவரில் நாம் சமாதானம் காணுவோம்.

—ஆனி ஜான்ஸன் பிளின்ட்

ஒருக்கால் ஒரு நீக்ரோவன் நாங்கள் இதுவரை மறக்காதிருக்கும் ஒரு காரியத்தைச் சொன்னார். 'கடவுள் உன்னைச் சோதிக்கும்போது அவருடைய வாக்குத்தத்தங்களின்மூலம் உன் அவசியத்திற்குத் தேவையானதைக் கேட்டால், அதுவே, நாம் அவரைச் சோதிக்க ஏற்ற காலமாகும்.'

ஒரு சோதனையிலிருந்து விடுபட இரு வழிகள் உண்டு. ஒன்று அந்தச் சோதனையை விட்டு விலகி, அது நீங்கியபின் நன்றியறிதலோடு இருத்தல். மற்றொன்று சோதனையைக் கடவுள் தம்மிடமிருந்து, நாம் இதுகாறும் பெற்றிராத பெரிய ஆசீர்வாதங்களை உரிமை கொண்டாடி, அவரிடமிருந்து நாம் பெற்றுக்கொள்ள ஏற்ற சமயம் என்று அதை அறிந்து, அதை ஒரு அறைகூவலாகச் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்வது மற்றொரு வழி. எதிராளிகூட இவ்வாறு நமக்குப் பக்கபலமாகிறான். நமக்கு இடைஞ்சலாகத் தோன்றிய காரியங்கள், நம் முன்னேற்றத்துக்கான காரியங்களாக மாறும். இப்படியே நாம் நம்மை நேசிப்பவர் மூலமாய் முற்றிலும் ஜெயங்கொள்ளுகிறவர்களாய் விளங்கலாம்.

—ஏ. பி. சிம்ப்சன்

## செப்டம்பர் 8

'நெருக்கத்திலிருந்த எனக்கு விசாலமுண்டாக்கினீர்' (சங். 4:1).

இது தேவனுடைய ஆவிக்குரிய அரசாங்கத்தைக் குறித்து மனிதன் கொடுத்துள்ள உன்னதமான நற்சாட்சிப் பத்திரங்களில் தலைசிறந்தது. ஒரு மனிதன் த்தான் பட்ட கஷ்டங்களிலிருந்து விடுபட்டதாகச் செலுத்தும் துதி அன்று. துன்பத்தின்மூலம் விடுதலையடைந்ததற்காகச் செலுத்தும் நன்றி. 'நெருக்கத்திலிருந்தபோது எனக்கு விசாலமுண்டாக்கினீர்' என்று சொல்லுவதாகும். வாழ்க்கையின் துக்கங்கள், வாழ்க்கைக்கு விசாலம் உண்டாக்கும் ஏதுகரங்களாயின என்கிறார்.

நீயும், நானும் இது அப்படித்தான் என்று அநேகமுறை கண்டதில்லையா? யோசேப்பு காவலில் இருந்ததைப்பற்றி எழுதியிருப்பதில், 'அவன் ஆத்துமாவை ஒரு பட்டயம் உருவிப்போயிற்று' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவனுடைய ஆத்துமாவுக்கு அது தேவை என்று எண்ணுகிறோம். அவன் தங்கத்தின் மினுக்கை மாத்திரம் கண்டிருந்தான். வாலிப தசைக்குரிய எண்ணங்களும் கனவுகளும் கண்டுகொண்டிருந்தான். கனவு காணுதல் இருதயத்தைக் கடினப்படுத்தும். ஒரு கதையின் சோகமான கட்டத்தை வாசித்துக் கண்ணீர் விடுகிறவன், காரியத்தைக் கவனித்துக் கஷ்டத்தில் உதவிபுரியக் கூடியவனல்லன். நிஜமான பாடுகள் அவனால் சகிக்க முடியாது. பட்டயம் உருவிச் செல்வதனால் நம்முடைய இயல்பு விசாலமடைய வேண்டும். பொன் வெறும் கனவாகும்; இரும்பே அனுபவம். என்னை மனித வர்க்கத்தோடு பிணைக்கும் சங்கிலிகள் இரும்புச் சங்கிலிகளாயிருக்கவேண்டும். உலகத்தையே ஒன்று சேர்க்கும் இயற்கை சந்தோஷத்திற்கல்ல துக்கத்துக்கே உண்டு. பொன் ஒரு பகுதியாரிடம் உண்டு; இரும்பு சர்வலோகத்திலும் உண்டு.

என் ஆத்துமாவே! நீ மனிதருடைய அனுபவத்தைக் காட்டக் கூடிய அளவு விசாலமடைய விரும்பினால் மனுஷனுக்குரிய பாடுகளை அனுபவித்தாக வேண்டும். யோசேப்பின் சிறைவாசமே அவன் சிம்மாசனம் ஏற உதவியாயிருந்தது. பட்டயம் உன் இதயத்தில் பாய்ந்திராவிட்டால், உன் சகோதரனின் இரும்புப் பாரத்தை நீ தூக்கமுடியாது. உன் குறைவே உனக்கு விசாலம் உண்டாக்கும். உன் வாழ்க்கையில் உண்டாகும் துன்பச் சாயையே மகிமையைக் குறித்து நீ காணும் கனவின் நிறைவேறுதலாகும். நிழலைக் கண்டு முறுமுறுக்காதே. உன் கனவுகளைவிட வெகு பெரிதான காரியங்களை அது உனக்குப் புலப்படுத்தும். சிறைக்கூடத்தில் நிழல் விலங்கிட்டது என்று சொல்லாதே. உன் விலங்குகள் இறக்கைகளே. மனித வர்க்கத்தின் மடிக்கு நீ பறந்து செல்லலாம். சிறைக்கூடத்தின் வாயில் சர்வலோகத்தின் இதயத்திற்குப் போகும் பாதையாகும். துக்கமாகிய சங்கிலியினால் தேவன் உன்னைப் பிணைத்து உன்னில் விசுவாசம் உண்டாக்குகிறார்.

—ஜார்ஜ் மத்தீசன்

யோசேப்பு எகிப்தில் சிறைப்பட்டிராவிட்டால் அவன் எகிப்தின் அதிபதியாயிருக்கமாட்டான். அவன் காலைச் சுற்றிய இருப்புச் சங்கிலி அவன் கழுத்திற்குப் பொன் சரப்பணியைக் கொண்டுவந்தது.

## செப்டம்பர் 9

'மண் ஆழமா யிராததினாலே' (மத். 13:5).

ஆழமில்லை! இநத உவமையைக் கற்குமிடத்து நிலத்தைப்பற்றி நாம் கொஞ்சம் அறியவேண்டும். பலன் கொடுக்க விதைகள் உத்தமமும் உண்மையுமான இதயத்தில் விழுந்தன. வேரில்லாத ஜனங்கள் மண் ஆழமாயிராத நிலத்தைப்போன்றவர்கள். இவர்களுக்கு ஆழ்ந்த நோக்கம் ஒன்றுமில்லை. ஒரு அன்பான வேண்டுகோள், ஒரு நல்ல பிரசங்கம், ஒரு உருக்கமான பாட்டு இவைகளினால் உள்ளக் கிளர்ச்சியடைவார்கள். ஏதோ அவர்களால் பயன் உண்டாகும் என்று முதலில் தோன்றுகிறது. ஆனால் அங்கு மண் ஆழமாயில்லை. ஆழ்ந்த நோக்கம், யோசனை கிடையாது. கடமையைச் சரிவரச் செய்ததற்காக, அதை நன்றாய் அறிந்துகொள்வோம் என்ற ஆசையில்லை. நம்முடைய இருதயம் எப்படிப்பட்ட நிலம் என்பதை நாம் ஆராய்வோமாக!

ஒரு ரோம வீரனுக்கு வழி காட்டிக்கொண்டு சென்றவர், அவ்வழிப் பயணம்போனால் உயிரை இழக்க நேரிடும் என்று சொன்னார். 'அதற்கு அந்த வீரன் நான் போகவேண்டியது அவசியமேயொழிய நான் உயிரோடிருக்கவேண்டியது அவ்வளவு அவசியமில்லை' என்று சொன்னான்.

இதுவே ஆழமான மண். அப்படிப்பட்ட எண்ணம் ஊர்ஜிதமாகும்போது நாம் பயனுள்ளவர்களாவோம். ஆழமற்ற இயற்கையுடையவர்கள் உணர்ச்சி, மனக்கிளர்ச்சி, இயற்கையறிவு, உள்ளத் தூண்டுதல், சூழ்நிலை இவற்றைக்கொண்டு வாழ்க்கை நடத்துகிறார்கள். ஆழ்ந்த சிரத்தையுள்ளவர்கள் இதற்கப்பால் நோக்கிப் பார்த்து, உறுதியாய் முன்னேறிச் சென்று புயலையும் மேகத்தையும் கடந்து, அப்பாலுள்ள சூரிய ஒளியைக் காண்கிறார்கள். பின்வரும் காரியங்களுக்காகக் காத்திருந்தால் துக்கம் மாறிக் களிப்புண்டாகும். தோல்விபோல் காணப்பட்டாலும், பின்னால் வெற்றியாக முடியும் என்று அவர்கள் அறிவார்கள்.

தேவன் நம்மை ஆழமாக்கியவுடன் ஆழ்ந்த சத்தியத்தையும், பெரிய இரகசியத்தையும், நம்பிக்கைக்குரிய பெரிய காரியங்களையும் நமக்குத் தருவார். ஆண்டவரே! வாழ்க்கையின் ஆழத்திற்கு என்னை அழைத்துச் சென்று ஆழமற்ற அனுபவங்களுக்கு என்னை விலக்கும்.

பரிசுத்த காட்சிகாணும் ஸ்தலத்திற்கும்,
அன்பு, விசுவாசம் இவற்றின் சிகரத்திற்கும்
முன்னேக்கி மேல் நோக்கிச் செல்ல,
என்னை உயர இருந்து அவர் அழைக்கிருர்.

—எ. பி. சிம்ப்ஸன்

## செப்டம்பர் 10

'கர்த்தர் எனக்காக யாவும் செய்து முடிப்பார்' (சங். 138:8).

துன்ப அனுபவத்தில் ஒரு தெய்வீக இரகசியம் இருக்கிறது. ஒரு புதிய இயற்கைக்கு மேலான வன்மை அதில் இருக்கிறது. மனித அறிவு அதன் ஆழத்தைக் கண்டறியவில்லை. அதிகப் பாடனுபவிக் காத எந்த ஆத்துமாவும் பரிசுத்தம் அடையவில்லை. பாடனுபவிக்கும் ஆத்துமா அதைப் பொருட்படுத்தாமல், அமர்ந்த இனிய நிலைமையை அடையும்போது, தன் பாடுகளை எண்ணி, தன்னுள்ளே புன்னகை புரியும்போது, தன் பாடுகளை விலக்கும்படி, தேவனிடம் வேண்டுதல் தானும் செய்யாதிருக்கும்போது அது தன் பாக்கிய ஊழியத்தை நிறைவேற்றி முடித்திருக்கும்; அப்பொழுது பொறுமை பூரணமாய்க் கிரியை செய்கிறது. சிலுவை ஒரு கிரீடமாக மாறுகிறது. இப்படிப் பாடுகள் நம்மைப் பூரணப்படுத்திய பின்னரே, பரிசுத்த ஆவியான வர், நம்முடைய ஆத்துமத்தில் ஆச்சரியமான கிரியைகளைச் செய் கிருர். அந்த நிலையில் நாம் முழுவதுமாக அவர் கரத்தின் கீழ்க் கிடப்போம். மனது, சித்தம், புத்தி, யாவும் அவருக்கு அடங்கி யிருக்கும். நித்தியத்தின் அமைதி நம்முன் நிலவும். நாவு பேசா திருக்கும். பேசினுல் கொஞ்சம் பேசும். தேவனைக் கேள்வி கேட்பது நின்றுபோகும்.

நமது ஆன்மா, மானசீகக் கோட்டைகள் கட்டுவதும் முட்டாள் தனமான காரியங்களில் செல்வதும் தடைபடும். அறிவு, அடக்கம் ஒடுக்கமாயிருக்கும். ஒன்றையும் தனக்கு வேண்டுமென்று தெரிந்து கொள்ளாது. தேவனுடைய சித்தத்தைச் செய்வதைத் தவிர வேறென்றையும் நாடாது. எல்லா சிருஷ்டிகளிடத்திலும் பொருள் களிடத்திலுமுள்ள ஆர்வம் நீங்கும்; ஒரு கஷ்டநஷ்டமும் அதைப் பாதிக்காதபடி மரணமடைந்திருக்கும். ஏனென்ருல் சூழ்நிலை எவ்வாருயினும் அது தேவனையும் அவருடைய சித்தத்தையுமே நாடித் தேடும். அது தேவன் கொடுப்பது நன்மையானுலும், தீமை யானுலும், போனவைகளும் இனி வரப்போகிறவைகளும், தன் னுடைய நன்மைக்காகவே இருக்கத் தேவன் செய்வார் என்று நிச்சயமாய் எண்ணுகிறது.

இவ்விதமாய் நாம் மேற்கொள்ளப்பட்டு நம்முடைய சுயபலனை யும், ஞானத்தையும், திட்டங்களையும், ஆசைகளையும் இழந்து,

'கிறிஸ்துவின் பாதத்தினடியில் கலிலேயாக் கடல்போல் அமர்ந்து கிடப்பது எத்தனை பாக்கியமான நிலைமை.'

பாடுபட்டும் மனந்தளராதிருத்தலே பெரிய காரியம்
ஊழியம்செய்து, அன்புகூர்ந்து, அவரில் சார்ந்திருக்கும் ஆத்துமா
எங்கும் தேவதூதரின் இறக்கையின் சப்தமே கேட்கும்.

## செப்டம்பர் 11

'அந்தப்படியே அவன் பொறுமையாய்க் காத்திருந்து வாக்குத்தத்தம்பண்ணப் பட்டதைப் பெற்றான்' (எபி. 6:15).

ஆபிரகாம் அநேக நாட்களாய்ச் சோதிக்கப்பட்டான். அதற்கு ஏராளமாய்ப் பரிசு பெற்றான். ஆண்டவர் தம்முடைய வாக்குத்தத்தம் நிறைவேறத் தாமதம் செய்து, அவனைச் சோதித்தார். சாத்தான் பல கண்ணிகள் வைத்துச் சோதித்தான். மனிதர் தங்கள் பொறாமையால் அவனைச் சோதித்தார்கள். நம்பாமல் அவனை எதிர்த்துச் சோதித்தார்கள். முறுமுறுக்கும் சுபாவத்தினால் அவனைச் சோதித்தார்கள். இவை யாவற்றையும் அவன் பொறுமையாய்ச் சகித்தான். தேவன் சொன்ன வாக்கு உண்மையா என்ற சந்தேகம் அவனுக்கு உண்டாகவில்லை. அவர் சக்தி அவ்வளவுதான் என்று அவன் எண்ணவில்லை. அவருடைய உண்மையைச் சந்தேகிக்க வில்லை. அவருடைய அன்பான இதயத்தை வருத்தப்படுத்தவில்லை. உன்னதமானவருடைய ஆட்சிக்குத் தலைபணிந்தான். அளவில்லாத அவர் ஞானத்திற்கு யாவற்றையும் ஒப்புவித்தான். தாமதமான போது ஆண்டவருடைய வேளை வரட்டும் என்று அமைதியாய்க் காத்திருந்தான். இப்படிப் பொறுமையாய்ச் சகித்ததால் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றுக்கொண்டான்.

தேவனுடைய வாக்குத்தத்தம் நிறைவேறாமல் போகாது. பொறுமையாய்க் காத்திருப்பவர்கள் ஏமாற்றம் அடையார்கள். நம்பி எதிர்ப்பார்த்தலுக்குப் பலனில்லாமல் போகாது.

அன்பனே, ஆபிரகாமின் நடத்தை பொறுமையற்ற ஆவியை எச்சரிக்கை செய்கிறது. முறுமுறுப்போரைக் கண்டிக்கிறது. பொறுமையாயிருக்க நம்மை ஏவுகிறது. தேவனுடைய சித்தத்திற்கு அமைதியாய் அடங்கியிருக்க நமக்கு ஊக்கம் அளிக்கிறது. ஆபிரகாம் சோதிக்கப்பட்டான். அவன் பொறுமையாய்க் காத்திருந்தான். வாக்குத்தத்தத்தைப் பெற்றான், திருப்தியடைந்தான் என்பதை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். அவனுடைய முன்மாதிரியைப் பின்பற்றுங்கள். அப்படிச் செய்தால் அவன் பெற்ற ஆசீர்வாதத்தை நீங்களும் பெறுவீர்கள்.

## செப்டம்பர் 12

'தன் நேசர்மேல் சார்ந்துகொண்டு வனாந்தரத்திலிருந்து வருகிற இவள் யார்?' (உன். 8:5).

ஒரு ஜெபக்கூட்டத்திலிருந்த ஒருவர் நல்ல படிப்பினை கற்றுக் கொண்டார். ஒரு நீக்ரோ சகோதரன் ஆண்டவரை நோக்கி, நம்மைப்போல் அநேக ஆசீர்வாதங்களுக்காக் வேண்டுதல் செய் தான். உன்னையும் என்னையும்போல் முன்பு பெற்றிருந்த அநேக ஆசீர்வாதங்களுக்காகத் துதி சொன்னான். ஆனால் தன் ஜெபத்தை அசாதாரணமான இந்தப் பிரார்த்தனையோடுமுடித்தான். 'இன்னும் ஆண்டவரே, எங்களைத் தாங்கும்', 'நாங்கள் சாயும் எல்லாப் பக்கங் களிலும் எங்களைத் தாங்கும்' என்று ஜெபித்தான். நீ சாயும் பக்கம் உண்டா? இந்த ஜெபம் உன்னுடைய குறைகளை வேறுவிதமாய்க் காணச் செய்கிறது. அதைத் தாங்குகிறவரையும், வேறுவிதமாய்க் காட்டுகிறது. ஒவ்வொரு பக்கத்திலும் சாயும்போதும், தம் வல்ல கரத்தை நீட்டித் திடப்படுத்த, ஒவ்வொரு கிறிஸ்தவனருகிலும் அவர் நடந்து சென்றுகொண்டிருக்கிறார்.

என் அருமைப் பிள்ளையே, நன்றாய்ச் சாய்ந்துகொள்
உன் கவலையாகிய பாரத்தின் கனத்தை நான் உணரட்டும்
உன் பாரத்தை நான் அறிவேன், அதை நானே உருவாக்கி னேன்

என் கையில் தூக்கிப் பார்த்தேன்;
உதவியின்றி நீ தூக்க முடியுமா? என்று நான் பார்க்கவில்லை
அதை நான் உன்மேல் வைத்த போது,
'அவன் பாரம் தாங்காமல் என்மேல் சாயும்போது
நான் அருகிலிருப்பேன். அப்போது பாரம் அவனதல்ல எனதாகும்
என் அன்பின் கரத்துள் அவனை அணைத்து வைத்துக் கொள்வேன்' என்றேன்.

உன் பாரத்தை என்மேல் வைக்க அஞ்சாதே
என் புயம் மூவுலகத்தையும் தாங்கி நிற்கிறது
என்னிடம் இன்னும் நெருங்கி கிட்டவா
நான் உன் பாரத்தை வாங்கிக் கொள்வேன்
என் பிள்ளையை என் மார்பில் இளைப்பாறச் செய்வேன்
நீ என்னை நேகிக்கிறாயா?' அது எனக்குத் தெரியும்
ஆகையால் நீ சந்தேகியாமல் என்மேல் சாய்ந்துகொள்.

## செப்டம்பர் 13

*'விடியற்காலத்தில் நீ ஆயத்தமாகிச் சீனாய் மலையின்மேல் ஏறி, அங்கே மலையின் உச்சியில் காலமே என் சமுகத்தில் வந்து நில்' (யாத். 34:2).*

நாம் ஆண்டவரைத் தரிசிக்கக்கூடிய நேரம் காலையே. 'காலை' என்ற வார்த்தையே ரசம் நிறைந்த ஒரு கொத்துக் கொடிமுந்திரிப் பழம்போல் நிறைவாயிருக்கிறது. அதை நசுக்கிப் பிழிந்து, பரிசுத்த ரசம்போல் பருகுவோமாக! 'காலையில்' தேவன் என்னைப் பலமும் நம்பிக்கையும் நிறைந்தவனாயிருக்க விரும்புகிறார். என் பலவீனத்தில் நான் ஏற முடியாது. இரவில் முந்தின தினத்தின் களைப்பு நீங்கிப்போயிற்று. காலையில் புதுச் சக்தி பிறக்கிறது. காலைநேரம் கடவுளுக்கென்று தனித்து வைக்கப்பட்டால் அந்த நாள் பாக்கியமுள்ள நாளாக இருக்கும். நம்முடைய அன்றாட முதல் வேலை, ஜெபத்தினால் உண்டானால் அந்த நாள் முழுவதும் ஜெயம் நிறைந்திருக்கும். அதிகாலையில் நீ மலையுச்சியில் தேவனண்டையில் இருந்தால், அந்த நாள் பரிசுத்தமான நாள்!

என் தகப்பனே இதோ வருகிறேன். நான் பரிசுத்த பர்வதங்களுக்கு வராதபடி, இந்த அற்ப சமவெளியில் ஒன்றும் என்னைத் தடங்கல் செய்ய முடியாது. நீர் கட்டளையிடுவதால் நான் வருகிறேன். ஆகையால் நீர் என்னைச் சந்திப்பீர். அதிகாலையில் நான் மலையுச்சியில் இருந்தால், அது என்னை அந்த நாள் பூராவும் பலமுடையவனாகவும், களிப்புடையவனாகவும் இருக்கச் செய்யும்.

—ஜோசப் பார்க்கர்

புட்கள் கண்விழிக்கும்பொழுது, இருள் நீங்கும் நேரத்தில் அதிகாலையில் செவ்வொளி படருங்கால் உம்முடன் அமைதியாய் இருப்பேன். உம்மோடு இருக்கின்றேன் என்ற இனிமையான எண்ணம் காலை நேரத்தையும் பகலின் ஒளியையும்விட அழகியது.

காலை நேரத்தின் மங்கலான ஒளியில் புத்துயிரடைந்த இயற்கையின் அமைதியில் நான் உம்மோடு தனித்திருப்பேன். காலையில் குளிர்ந்த பனி விழும்; புதிய அழகு பொலியும். அப்பொழுது என்னை மறந்து உம்மை வணங்கும் இன்பத்தில் ஆழ்ந்திருப்பேன்.

காலையில் அமைதியான கடலில் விடிவெள்ளியின் பிரதிபிம்பம் தோன்றும். அதுபோல் அமைதியான இந்த நேரத்தில் உமது உருவமே என் உள்ளத்தில் தோன்றவேண்டுமென விரும்புகிறேன். என் ஆத்மா உழைப்பால் அயர்வடைந்து துயில் ஆளும்பொழுது, நான் என் கண்களை மூடுவதற்கு முன்னால் உம்மை நோக்கி ஜெபம் செய்வேன். உமது பாதுகாவலின் கீழ் துயில் செய்வது இனிமையானதே. ஆனால் விழித்தெழுந்து என்னருகில் உம்மைக் காண்பது அதைவிட இனிமையானது.

என் தாயாருக்குக் காலை எழுந்தவுடன் ஒரு மணி நேரம் தம் அறையிலிருந்து வேதம் வாசித்துத் தியானம் செய்து, ஜெபித்து வருவது வழக்கமாயிருந்தது. அந்த ஒரு மணி நேரத்தில், நல்ல ஊற்றிலிருந்து எடுப்பதுபோல், பலத்தையும் பொறுமையையும் பெற்றுக்கொள்வார். அது அவர்களுக்குத் தம் கடமைகளை நிறை வேற்றப் பலமளித்தது. தம் அயலகத்தாரின் அற்பக் குணத்தால் ஏற்பட்ட சிறு கஷ்டங்களையும் கவலைகளையும் கலங்காது சகிக்கக் கூடியவராயிருந்தார். அவருடைய வாழ்க்கையைக் குறித்து எண்ணும்போதும், அவர் சகிக்கவேண்டியிருந்த சகல கஷ்டங்களையும் குறித்து நினைக்கும்போதும், ஒரு கிறிஸ்தவ மாது தன் கிறிஸ்தவக் குணங்களால் வெற்றியடைந்ததையே நான் காண்கிறேன். அவர் கோபங்கொள்ள நான் பார்த்ததேயில்லை. அவர் சினங்கொண்டு, பிறர் மனம் நோகக் கடூரமான வார்த்தை சொல்லக் கேட்டதில்லை. அவர் பிறர் குற்றமும், பிறரைப் பற்றிய அவதூறும் பேசினதில்லை. ஜீவ தண்ணீர் ஓடும் ஆற்றில் பருகி வனாந்தரத்தில் மன்னாவைப் புசித்த ஆத்துமாவைப்போல், தகாததொன்றையும் செய்யாதிருந்தார்.

அதிகாலையாகிய அரும் மலரை, ஆண்டவரின் அர்ச்சனைக்குக் கொடு. காய்ந்த மலர்கள் அவருக்குத் தேவையில்லை.

## செப்டம்பர் 14

'ஒருவன் என்னைப் பின்பற்றிவர விரும்பினால் அவன் தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன்' (மா. 8:34).

என் ஆண்டவர் என்னை எடுத்துச் செல்லும்படி சொல்லும் சிலுவை பலவகை உருவெடுக்கும். எனக்கு அதிக வேலைசெய்யத் திராணி உண்டென்று நான் நினைக்கும்போது, தாழ்ந்த அற்ப வேலை செய்யவேண்டியிருக்கலாம். ஒரு பயனும் அளிக்காத இடத்தில் வருஷா வருஷம் வேலைசெய்துகொண்டிருக்க நேரிடலாம். எனக்குத் தீங்கு செய்த ஒருவனைக் குறித்து அன்பான எண்ணங்கள் கொள்ளும்படி கட்டளை உண்டாகலாம். அவனை எதிர்க்கும் எல்லாருக்கும் விரோதமாய் அவன் பட்சத்தில் நின்று, அவனிடம் பட்சமாய்ப் பேச ஏவுதல் உண்டாகலாம். அவனை மீட்கவும், அவனுக்கு அனுதாபம் காட்டவும் கட்டளை பிறப்பிக்கலாம். என் ஆண்டவரைக் குறித்தும், அவருடைய உரிமைகளைக் குறித்தும் கேட்க விரும்பாதவர்கள் மத்தியில், அவரை அறிக்கை பண்ணவேண்டியிருக்கலாம். என் இதயம் துக்கத்தால் முறிந்துபோவதுபோல் இருக்கையில் என் ஜனத்தின் மத்தியில் சந்தோஷமான குளிர்ந்த முகத்தோடு திரிய ஏவப்படலாம்.

அநேக சிலுவைகள் உண்டு; ஒவ்வொன்றும் கசப்பாகவும் கனமாகவும் தோன்றுகிறது. நானாக என் விருப்பப்படி அவைகளில் ஒன்றை

யும் இஷ்டப்பட்டுத் தெரிந்துகொள்ளமாட்டேன். ஆனால் சிலுவையைத் தூக்கி அடக்கமாய் அதை என் தோள்மேல் வைத்துப் பொறுமையுள்ளதும், முறுமுறுப்பில்லாததுமான ஆவியுடன் நல்வரவு கூறி, அதை ஏற்றுக்கொள்கையில்தான் இயேசு எனக்கு வெகு சமீபத்திலிருக்கிறார்.

என்னை ஞானவானாக்க, என் சமாதானம் பெருக, என் தைரியத்தை அதிகரிக்கச் செய்ய, மற்றவர்களுக்குப் பயனுள்ளவனாயிருக்கும் சக்தியை என்னில் விசாரிக்க அவர் அருகில் நெருங்கி வருகிறார். இவை யாவும் துக்கமும் துன்பமும் அனுபவிக்கும்போதுதான் கிட்டும். பின்பு கிளாவர் ஹவுஸ் என்பவனால் கடல் சூழ்ந்து, தனித்த ஓரிடத்தில் சிறைவைக்கப்பட்ட சில ஸ்காட்லாந்து பக்தர்களின் முத்திரையில் கூறப்பட்டிருப்பதுபோல், நான் பாரத்தின் அடியில் வளருகிறேன் எனக் கூறலாம்.

உன் சிலுவை உனக்கு இடறுகல்லாயிராமல் நீ நடக்கும்போது ஊன்றுகோலாயிருக்க அதைப் பயன்படுத்து.

உன் சிலுவையைச் சந்தோஷமாய்ச் சுமந்தால் இன்பம் பிறர்க்கு ஈயக்கூடும்.

## செப்டம்பர் 15

*'கந்தப் பிசின்கள் வடிய என் தோட்டத்தில் வீசு' (உன். 4:16).*

இந்த அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கும் கந்தப் பிசின்கள் கவனிக்கத்தக்கவை. நளதம் ஒரு கசப்பான கந்தப் பிசின். அது கசப்பான காரியங்களிலிருந்து உண்டாகும் இனிமையைக் குறிக்கும். அதை அனுபவித்தவர்கள் மாத்திரமே அதை அறியக்கூடும். வெள்ளைப்போளம் மரித்த சடலத்தை வாசனைப்படுத்த உபயோகப்படுகிறது. அது ஏதோ ஒன்றுக்கு நேர்ந்த மரணத்தைப்பற்றிக் கூறுகிறது. தன்னலம், பெருமை, பாவம் இவைகளுக்குச் செத்த பின், இதயத்திற்கு வரும் இனிமையைக் குறிக்கிறது.

தாழ்மையைக் காட்டும் வதனத்திலும், கனிந்த ஆவியிலும், முன்னொருகால் தங்களிலிருந்த பெருமைக்குச் செத்து, இப்போது இயேசுவின் பாதத்தில் கிடக்கிறோம் என்பதை விளங்கச் செய்யும் ஒருவித இனிமையான கவர்ச்சிக்கும் தன்மை சில கிறிஸ்தவர்களிடம் விளங்குகிறது. அது நொறுங்குண்ட ஆவியிலிருந்தும், நறுங்குண்ட இருதயத்திலிருந்தும் வரும் தெய்வீகக் கவர்ச்சி, தாழ்ந்த ஸ்தாயியிலிருந்து உண்டாகும் இனிய சங்கீதம். கனிந்த பழத்தில் கடும்பனி விழுவதால் உண்டாகும் இனிமை.

தூப வர்க்கம் அக்கினியில் போடுவதால் மணம் கமழும் வஸ்துவாகிறது. எரிந்த தூள் அக்கினியின் மடியிலிருந்து, இனிய கந்தப் புகையாக மேலே வருகிறது. இது துன்பம் என்னும் நெருப்பினால்

இதயத்திலிருந்து வெளிவரும் இனிமையைக் குறிக்கும். துன்பம் இதயத்தின் பரிசுத்த ஸ்தலத்தை துதி பிரார்த்தனை என்ற மணம் கமழும் புகையால் நிரப்புகிறது. அன்பரே! நம்முடைய இதயத்திலிருந்து கந்தப் பிசின், கந்தவர்க்கங்களின் இனிய மணம் எழும்புகிறதா?

பாரசீகக் கதை ஒன்றில் கண்ட வரலாறு:—

1 ஒரு பிரயாணி ஒரு உருண்டைக் களிமண்ணைக் கண்டார்.
அது அதிக வாசனை நிறைந்திருந்தது.
அதன் மணம் அறையை நிரப்பிற்று.
'இது என்ன?' என்று அவர் வியந்தார்.
'சாமர்க்கண்டிலிருந்து வரும் முத்தோ,
பரிமள தைலம் மறைந்துள்ள வஸ்துவோ,
அன்றி என்ன விலையுயர்ந்த பொருளோ?' என்றார்.

2 பின் 'உன்னில் அதிசயக் கந்தம் எங்கிருந்து வந்தது?' என்றார்.
'சிநேகிதனே! நான் ரோஜா மலருள் வாழ்ந்தேன்
இதுவே என் கந்தத்தின் இரகசியம்' என்றது.
என்ன அருமையான உவமை! தாழ்மையானவர் ஆயினும்
சாரோனின் ரோஜாப் புஷ்பத்தோடிருக்க விரும்பினால்,
அதில் பெற்ற கந்தம் அவரில் வீசாதோ?
ஆண்டவரே! உம்மிலிருந்து புதியமணம் நாங்கள் பெற
நீர் எங்களிடம் என்றும் தங்கும்.

## செப்டம்பர் 16

'கேரீத் ஆற்றண்டையில் ஒளித்துக்கொள்' (1 இரா. 17:3).

மறைந்துள்ள வாழ்க்கையின் மதிப்பைத் தேவனுடைய ஊழியக்காரர் ஒவ்வொருவரும் அறிந்துகொள்ளல் அவசியம். மனிதனுக்கு முன்பாக உயர்ந்த இடத்திலிருக்கவேண்டியவன் தேவனுக்கு முன்பாகத் தாழ்ந்த இடத்தை எடுத்துக்கொள்ளவேண்டும். நமது பரமபிதா நம்மைப் பார்த்து, 'என் பிள்ளையே! இந்த அவசரமும் இந்த உற்சாகமும் நிறைந்த நாலுபேருக்கு முன்னால் நன்றாய் விளங்கின வாழ்வுபோதும்; இதைவிட்டு அப்பால் போய்க் கேரீத் ஆற்றண்டையில் ஒளித்துக்கொள். அந்த கேரீத் ஆறு வியாதிப் படுக்கையாயிருக்கலாம். அருமையானவர்களை இழப்பதாயிருக்கலாம். கூட்டம் குறைந்துபோய்த் தனிமையாய் இருப்பதாகலாம்' என்று கூறும் பொழுது நாம் ஆச்சரியப்படக்கூடாது.

அப்போது 'இது உம்முடைய சித்தம், ஆகையால் என்னுடைய சித்தமும் அதுவே. நான் ஒளித்துக்கொள்ள உம்மண்டையே ஓடி வருவேன். உம்முடைய ஆலயப்பிரகாரங்களில் உம்முடையசெட்டை

யின்கீழ் என்னை ஒளித்துவையும்,' என்று சொல்லுகிற மனிதன் பாக்கியவான்.

மனிதர்மேல் பெரிய சக்தியைப் பிரயோகிக்கக்கூடிய ஒவ்வொரு பரிசுத்தமான ஆத்துமாவும், அதை மறைவான ஒரு கேரீத் ஆற்றண்டையில்தான் பெற்றுக்கொள்ளவேண்டும்.

தாவரங்கள் அநேக யுகங்களாகச் சூரியனிடமிருந்து பெற்ற தன்மையை நிலக்கரியாக்கி எரியும் தணலாகத் திரும்பக் கொடுப்பது போல் நாம் மனிதரிடமிருந்து மறைந்திருக்கும் நித்திய தெய்வத்தின் வன்மையைப் பெற்றுக்கொண்டால்தான் நமக்கு ஆவிக்குரிய சக்தி உண்டாகும்.

பிஷப் அந்திரேயா என்பவர் ஒவ்வொரு தினமும் ஐந்துமணிநேரம் தியானத்திலும் ஜெபத்திலும் கழிப்பார். அது அவருடைய கேரீத். ஜான்வெல்ஸ் என்பவர் ஒவ்வொருநாளும் எட்டு அல்லது ஒன்பது மணிநேரம் தேவனோடு நெருங்கி ஐக்கியப்பட்டிராவிட்டால், அந் நாள் வீணாயிற்று என்றெண்ணுவார். டேவிட் பிரெய்னட் வட அமெரிக்கக் காடுகளில் திரிகையில் தம் கேரீத்தை அனுபவித்தார். கிறிஸ்மஸ் இவான்ஸ் என்பவர் வேல்ஸ் மலைகளில் அதிகத் தூரம் தனிமையாய்ப் பிரயாணம் செய்தார். அதுதான் அவருடைய கேரீத்.

நாம் நூற்றாண்டுகளைக் கணக்கிட ஆரம்பித்த ஆண்டுகளைப் பார்ப்போம். தற்கால உலகத்திற்கேற்ற போதனைகளைக் கொடுத்தவர்கள், பத்மூதீவு, ரோமாபுரிச் சிறை, அரேபியா வனாந்தரம், பலஸ்தீனா தேசத்து மலைகள், பள்ளத்தாக்குகள் முதலிய கேரீத்களண்டையில் ஒளிந்திருந்தவர்களே யாவார்.

நம்முடைய ஆண்டவராகிய கிறிஸ்து நாசரேத்தூர், யூதேயாவின் வனாந்தரம், பெத்தானியாவின் ஒலிவத்தோப்பு, கெதரோன் ஆற்றங்கரை முதலியவைகளில் தமது கேரீத்தைக் கண்டார். ஜனசந்தடியை விட்டு விலகி அவருடைய சிம்மாசனத்திலிருந்து வரும் அமைதியென்னும் நீரையடைய ஒரு கேரீத் நதி நம்மனைவருக்கும் அவசியம். அதன் மூலமாகவே நாம் கிறிஸ்துவில் மறைந்துள்ள வாழ்க்கையின் இனிமையை ருசித்து அதன் சக்தியைப் பெற்றுக் கொள்ளலாம்.

## செப்டம்பர் 17

*'அவர் கர்த்தர். அவர் தமது பார்வைக்கு நலமானதைச் செய்வாராக!' (1 சாமு. 3:18).*

'எல்லாக் காரியங்களிலும் தேவனைத் தேடு. தேவன் நீ காண்பதையெல்லாம் அமைதியாக்கி, அவற்றிற்கு அழகிய வர்ணம் தீட்டுவார்.' நம்முடைய துக்கங்களின் சந்தர்ப்பங்கள் மாறாதிருக்கலாம்.

அவைகளின் நிலை முன்போலவே இருக்கலாம். ஆனால் கிறிஸ்துவை நமது வாழ்க்கையில் ஆண்டவரும், எஜமானுமாக நமது துக்கங்களுக்குள்ளும், கஷ்டங்களுக்குள்ளும் வரவிடுவோமானால் 'அவர் நம்மை இரட்சண்ய பாடல்கள் சூழ்ந்துகொள்ளும்படி செய்வார்.' அவரை கண்டு அவருடைய ஞானம் ஒருபோதும் தவறாது என்றும் அவருடைய சக்தி நம்மைக் கைவிடாது என்றும் நிச்சயம் கொண்டு, அவருடைய அன்பு மாறாது என்றும், திடனாய் அவர் செய்வதெல்லாம் நமது ஆவிக்குரிய நன்மையை நாடியே என்றும் அறிந்தால், அப்போது நமக்கு அருமையானவர்களை இழந்துபோகும் போதும், துக்கத்திலும், வேதனையிலும், நஷ்டத்திலும் கர்த்தர் கொடுத்தார் கர்த்தர் எடுத்தார்; கர்த்தருடைய நாமத்திற்கு ஸ்தோத்திரம் என்று சொல்லக்கூடிய நிலைமைக்கு வருவோம்.

கர்த்தரை எல்லாக் காரியங்களிலும் கண்டால் மாத்திரமே, நமக்குத் தொந்தரவு கஷ்டம் கொடுப்பவர்களிடத்திலும், பொறுமையையும், பட்சத்தையும் நாம் காட்ட முடியும். அப்போது அவர்கள் தேவன் நம்மைக் குறித்துக் கொண்டுள்ள ஞானமான திட்டங்களை நிறைவேற்றும் கருவிகளாவார்கள். நாம் மனதிற்குள்ளே அவர்கள் நமக்குக் கொண்டுவரும் பாக்கியங்களுக்காக நன்றி செலுத்துவோம். அதுவன்றி வேறெதுவும் நம்முடைய முறுமுறுக்கும் சுபாவத்தையும் ஆணவமான எண்ணங்களையும் ஒழிக்காது.

1 நான் அரைத் தூக்கமாயிருக்கையில்,
'இவ்வுலகத்து மக்களுக்குப் பரம ஔஷதமாகக்கூடிய
ஒரு சிறந்த யோசனை எனக்குத் தாரும்.
அது மனிதரைப் பரலோக சிந்தனை கொண்டு,
ஊழியம் செய்யவும், அன்புகூரவும் செய்யவேண்டும்
தன்மையான எண்ணத்தை ஓட்டவேண்டும்
அவர்களுடைய பாவங்களைப் போக்கவேண்டும்' என்றேன்.

2 ஒருபுது யோசனை வந்தது. எப்படி என்று நான்சொல்லுவேன்
நம்துக்கம் நீக்கும் வழியை தீர்க்கமாய் அறிந்துள்ள
அவரை நாடிப் பணிந்து கெஞ்சினேன். அப்பொழுது இந்த
யோசனை உதித்தது.
சிறிதும் பெரிதுமான எல்லா விஷயத்திலும் கர்த்தரைத்தேடு
என்ன வந்தாலும் அவரைத்துதி
வாழ்விலும், சாவிலும், துக்கத்திலும், தேவனைப் பார்த்து
உன் சத்துருக்களை மேற்கொள்.

3 நான் புலரொளியில் அவரைக் கண்டேன்
அவர் காலை ஒளியைப் பிரகாசமாக்கினார்;
மதிய வேளையில் நான் அவரைக் கண்டேன்
அவரிடமிருந்து குளிர்ந்த மழை பெற்றேன்.

சாயுங் காலம் உழைத்துக் களைத்திருக்கையில்
அவர் எனக்கு உதவி புரிந்து மகிழ்வித்தார்.
இரவில் தூக்கமின்றிப் புரண்டு கொண்டிருக்கையில்,
களைத்த என் ஆத்துமாவை அவர் இளைப்பாறச் செய்தார்.

4 அதிக நஷ்டம் ஏற்பட்டபோது அவரைக் கண்டேன்.
அவர் எப்போதும் போல் என்னை நேசிப்பதை அறிந்தேன்.
நான் அதிகப்பாரம் தாங்க வேண்டியபோது
அவர் என் கவலைகளை இலகுவாக்கக் கண்டேன்.
வியாதி, துக்கம், துன்பம் இவைகளினூடே
அவர் என் மனதைத் தேற்றி அமரச் செய்தார்.
நான் அவரை நோக்கிப் பார்த்த நாள் முதல்
என் இதயத்தில் களிப்பும், துதியும் நிரம்பச் செய்தார்.

5 இந்த யோசனை சிலருக்குப் பழையதானாலும் எனக்குப் புதிதாயிருந்தது.
நம்வாழ் நாளெல்லாம் நாம் விரும்பிப்போக வேண்டிய
வழிக்காண நல்ல யோசனையாய்த் தோன்றிற்று.
ஒவ்வொரு நாளும் காலை ஒளி காணுவோம்.
நாம் காண்பதினாலல்ல, விசுவாசத்தினால் நடப்போம்.
எல்லாவற்றிலும் தேவனைக் கண்டால்,
வாழ்க்கை ஆசீர்வாதமாக இருக்கும். —எ. எல். பின்

## செப்டம்பர் 18

'தீர்க்கதரிசனம் இல்லாத இடத்தில் ஜனங்கள் சீர்கெட்டுப் போவார்கள்' (நீதி. 29:18).

தேவனைக் காணவேண்டுமானாலும் அவருடைய தரிசனத்தைக் காண விரும்பினாலும் அவருக்காக காத்திருக்கவேண்டும். 'காலம்' காட்சிக்கு அத்தியாவசியம். நம்முடைய இதயம், படம் எடுக்கையில் நம்முடைய உருவம் பதியும் தட்டுப்போல் இருக்கிறது. தேவன் அதில் துலக்கமாய்ப் பதிய நாம் அவருடைய பாதத்தண்டை நெடுநேரம் காத்திருக்கவேண்டும். ஒரு ஏரி கலங்கி அலைமோதிக் கொண்டிருந்தால் அதில் எப்பொருளின் சாயலும் பிரதிபலிக்காது.

நம்முடைய வாழ்க்கை அமைதியாய் இருந்தால்தான் நாம் தேவனைக் காணலாம். சில காட்சிகள் நம் வாழ்க்கையை மாற்றும் தன்மை வாய்ந்தவை. அமைதியான சூரிய அஸ்தமனக் காட்சி துன்புற்ற மனதுக்குச் சமாதானம் கொடுக்கும். அதுபோலவே தேவனைத் தரிசித்தால் நம்முடைய வாழ்க்கை முற்றிலுமாய் மாறும்.

யாக்கோபு யாப்போக்கு என்னும் ஆற்றின் துறையில் தேவனைக் கண்டு இஸ்ரவேலானான். கிதியோன் தேவனைத் தரிசித்தபடியால்

கோழையாயிருந்தவன் வீரமுள்ள போர்வீரனுக மாறினுன். தோமா கிறிஸ்துவைக் கண்டபோது சந்தேகத்தோடு பின் செல்லுபவனு யிராமல் வைராக்கியமும் பக்தியும் நிறைந்த சீடனுனுன்.

வேத புத்தகத்தில் கூறப்பட்ட காலத்திற்குப் பின்னும், மனிதர் தேவனைக் கண்டிருக்கிறுர்கள். வில்லியம் கேரி என்பவர் தேவனைத் தரிசித்தார். செருப்புத்தைக்கும் வேலையை விட்டு இந்தியாவிற்குச் சென்றுர். டேவிட் லிவிங்ஸ்டன் தேவனைக் கண்டார். எல்லா வற்றையும் விட்டு, இருண்ட ஆப்பிரிக்கக் காடுகளில் அவரைப் பின்பற்றிச் சென்றுர். நூற்றுக்கணக்கான பேர் தேவனைத் தரிசித்த தால் சுவிசேடத்தை அறியாதவர்களுக்கு அதை அறிவிக்க, உலகின் எல்லாப் பாகங்களிலும் தூர இடங்களிலும் ஊழியம் செய்து கொண்டு வருகிறுர்கள்.

ஆத்துமா பூரண அமைதியாயிருப்பது அபூர்வம். தேவன் நமக் குள்ளே மெதுவாய்ப் பேசிக்கொண்டேயிருக்கிறுர். இவ்வுலக சப்தங்கள் மறைந்து, அல்லது குறைந்து இருந்தால் தேவனுடைய சப்தத்தைக் கேட்கலாம். அவர் எப்பொழுதும் வெகு மெதுவாய்ப் பேசிக்கொண்டேதான் இருக்கிறுர். நாம் அதைக் கேட்பதில்லை. வாழ்க்கையின் சப்தமும், அவசரமும், ஆத்திரமும் அதைக் கேட்க விடாதபடி செய்கிறது. —ஈ. டபள்யூ. வ்பேபர்

1 நான் உமக்காகக் காத்திருக்கும் அமைதியான வேளையில்
ஆண்டவரே! நீர் என்னேடு பேசும்.
உம்முடைய சித்தத்தைக் கவனிக்க
என் ஆத்துமா அமர்ந்திருக்கிறது.

2 இந்த அமைதியான வேளையில்
ஆண்டவரே! நீர் என்னேடு பேசும்,
உம் திரு முகத்தை நான் காணட்டும்.
உம்வல்ல ஸ்பரிசத்தை நான் உணரட்டும்.

3 ஏனென்றுல் நீர் ஜீவவார்த்தைப் பேசுவீர்,
இன்றும், என்றும் அவை ஜீவனே,
அவை பரலோக ஜீவ அப்பமே.
என் ஆவிக்கு உணவாகுமே.

4 ஆண்டவரே, அடியேன் கவனித்திருக்கிறேன்
நீர் பேசும், மௌனமாயிராதேயும்.
உம்முடைய ஜீவனளிக்கும் வார்த்தைக்காக,
என் ஆத்துமா வாஞ்சையாய்க் காத்திருக்கிறது.

## செப்டம்பர் 19

*'என் பிதா திராட்சத்தோட்டக்காரர்' (யோ. 15:1).*

நமக்கு வரும் துன்பம் எதுவாயிருந்தாலும், அதைக் கடவுளிடமிருந்து ஏதோ ஒரு செய்தியைக் கொண்டுவரும், பரலோக தூதனுக எண்ணுவது மிகவும் ஆறுதலளிக்கும். அது இவ்வுலகப் பிரகாரமாய்ப் பார்த்தால், வருத்தப்படுத்துவதாகவும், நன்மையை அழிப்பதாகவும் தோன்றுகிறது. ஆவிக்குரிய பிரகாரமாய்ப் பார்த்தால், அதின் கிரியை ஆசீர்வாதம் கொண்டுவருகிறதாயிருக்கிறது. கடந்த காலங்களில் நமக்கு வந்துள்ள நிறைந்த பாக்கியங்கள் நாம் அடைந்த துக்கம், வேதனை இவற்றின் பயனேயாகும். இவ்வுலகம் அடைந்துள்ள மாபெரிய சிலாக்கியமான இரட்சிப்பு, இவ்வுலகில் அடைந்த மாபெரும் துக்கத்திலிருந்தே உண்டாயிற்று என்பதை நாம் ஒருபொழுதும் மறக்கக்கூடாது. நாம் கவாத்துப் பண்ணப் படுகையில் துக்கமாகிய கத்தி, நம்மை ஆழமாய் அறுத்து, அதிக வேதனை கொடுக்கையில், 'என் பிதா திராட்சத்தோட்டக்காரர்' என்ற வசனம் சொல்லரிய ஆறுதல் உண்டாகச் செய்யும்.

டாக்டர் வின்சன்ட் என்பவர் செயற்கை உஷ்ண அறைகளில் திராட்சப்பழங்கள் எங்கும் கொத்துக் கொத்தாய்த் தொங்குவதைக் கண்டார்.

தோட்டத்துச் சொந்தக்காரர், 'என் புதுத்தோட்டக்காரன் வந்தவுடன், திராட்சச் செடிகளை அடி வரை வெட்டி விட்டாலன்றி அதில் பயன் உண்டாகாது என்றார். அவ்வாறு வெட்டிவிட்ட பிறகு இரண்டு வருடம் கனியே கிடையாது. ஆனால் அதன் பயன்தான் இன்று கொத்து கொத்தாய்த் தொங்கும் இரசம் நிறைந்த கனிகள்' என்று கூறியதாகச் சொல்லுகிறார்.

இந்த கவாத்துச் செய்யும் காரியம் நம்முடைய கிறிஸ்துவ வாழ்க்கைக்கு நல்ல அர்த்தத்தைக் கொடுக்கிறது. கவாத்துச் செய்வது திராட்சச் செடியை நாசம் செய்வதுபோலிருக்கிறது. தோட்டக்காரன் எல்லாவற்றையும் வெட்டி அழிப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் அவன் எதிர்காலத்தைப் பார்க்கிறான். அதன் பயனாகச் செடியின் வாழ்க்கை பூரணமடைந்து ஏராளமான கனி கொடுக்கும் என்பதை அவன் நன்றாய் அறிவான்.

வேதனை என்னும் விலை கொடுக்காவிட்டால் நாம் அடையக்கூடாத பாக்கியங்கள் சில உள்ளன. பாடுகளின் வழியேதான் நாம் அவற்றைப் பெற்றுக்கொள்ளக்கூடும். —டாக்டர் மில்லர்

1 'களிப்பு' என்பதுடன் ஒரு கல் நடந்தேன்.
வழிப்பிரயாணம் தெரியாதபடி அது உரையாடினது
கொஞ்சநேரங் கழித்து அது பிரிந்தபோது
கிஞ்சித் தேனும் நன்மை நான் பெற்றிலேன்.

2 ‘துக்கம்’ என்பதுடன் ஒரு கல் நடந்தேன்
எக்காரணம் கொண்டும் அது ஓர் வார்த்தையும் கூறவில்லை.
எத்தனை அதிகமான காரியங்கள் கற்றேன்
சித்தனை போன்று ‘துக்கத்’ துடன் நடக்கையில்.

## செப்டம்பர் 20

*‘நீ விசுவாசித்தால் தேவனுடைய மகிமையைக் காண்பாய் என்று உனக்குச் சொல்லவில்லையா?’ (யோ. 11:40).*

மரியாளுக்கும் மார்த்தாளுக்கும் ஆண்டவர் என்ன செய்துகொண்டிருந்தார் என்று விளங்கவில்லை. இரண்டு பேரும் அவரைப் பார்த்து ‘ஆண்டவரே! நீர் இங்கே இருந்தீரானால், எங்கள் சகோதரன் மரிக்கமாட்டான் என்று சொன்னார்கள். இந்த வார்த்தையினால் அவர்களுடைய நினைவின் போக்கு நமக்கு விளங்குகிறது. ‘ஆண்டவரே’ நீர் ஏன் இவ்வளவு தாமதம் செய்தீர் என்று எங்களுக்கு விளங்கவில்லை. ‘நீர் நேசிக்கிற மனிதனைச் சாவு கொண்டுபோக எப்படி விட்டுக்கொண்டிருந்தீர் என்பதும் விளங்கவில்லை. நீர் இங்கிருந்திருந்தால் இந்தப் பாடும் துக்கமும் இந்த வீட்டை அணுகியிராது என்று அறிந்திருந்தும் ஏன் எங்களண்டை வரவில்லை என்று விளங்கவில்லை? இப்பொழுது காரியம் மிஞ்சிப்போயிற்று. லாசரு செத்து நான்கு நாளாயிற்று’ என்று அவரிடம் கேட்கப்போவதாகத் தோன்றுகிறது.

இவைகளுக்கெல்லாம் இயேசு ஒரே சத்தியத்தைச் சொல்லுகிறார், ‘உங்களுக்கெல்லாம் விளங்காதிருக்கலாம். நீங்கள் விசுவாசித்தால் காண்பீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்’ என்பதே.

தன் ஏகபுதல்வனைப் பலியிடும்படி கடவுள் ஏன் கேட்கவேண்டும் என்பது ஆபிரகாமுக்கு விளங்காத காரியமாயிருந்தது. ஆனால் அவன் நம்பிக்கையோடிருந்தான். தன் அன்பைத் திரும்பப்பெற்றதுடன் தேவனுடைய மகிமையையும் கண்டான். தன்னை ஏன் வனாந்தரத்தில் நாற்பது ஆண்டுகளாய்த் தேவன் அலையப் பண்ண வேண்டும் என்பது மோசேக்கு விளங்கவில்லை. ஆனால் அவன் நம்பிக்கையாயிருந்தான். அவனைத் தேவன் இஸ்ரவேல் புத்திரரை அடிமைத்தன வீட்டிலிருந்து அழைத்துவர அழைத்தபொழுது அதன் பயனைக் கண்டான்.

யோசேப்பு தன் தமையன்மாரின் கொடுமையையும், கெடுமதியுள்ள ஒரு பெண்ணின் பொய்ச் சாட்சியையும் அநேக ஆண்டுகளாக அநீதியாய்ச் சிறையில் அடைக்கப்பட்டிருந்ததையும் விளங்கிக்கொள்ளவில்லை. ஆனாலும் அவன் நம்பினான். இறுதியில் அவைகள் எல்லாவற்றிலும் தேவனுடைய மகிமையைக் கண்டான்.

யோசேப்பு தன் தகப்பன் வீட்டை விட்டுப்பிரிக்கப்பட்டபோது ஏனென்று யாக்கோபு அறிந்துகொள்ளவில்லே. ஆனால் யோசேப்பு அரண்மனேயில் ராஜ பிரதிநிதியாகவும், தன்னுயிரையும் ஒரு பெரிய ஜாதியின் உயிரையும் அழியாது காப்பாற்றும் கருவியாகவும் இருக்கக்கண்டபோது யாக்கோபு தேவனுடைய மகிமையைக் கண்டான்.

அப்படியே உன் வாழ்க்கையிலும் நடக்கலாம். 'எனக்கு அருமையான உயிரை ஏன் அவர் என்னே விட்டுப்பிரித்தார்? இது ஏன் என்று எனக்குப் புரியவில்லேயே. அநேகக் கஷ்டங்கள் என்னே வருத்த விடுவதின் இலாபத்தை அறிய முடியவில்லே, ஆண்டவர் என்னே ஏன் சுற்று வழியில் நடத்துகிறார்' என்று கேட்கிறாய். 'எனக்கு தன்மையாகத் தோன்றும் திட்டங்களும், நோக்கங்களும் ஏன் உருப்படியாகாமல் போகின்றன' வென்கிறாய். 'எனக்குத் தேவையான பாக்கியங்கள் இவ்வளவு நாளாய்த் தாமதிப்பதேன் என்று அறிய முடியவில்லே' என்கிறாய்.

சிநேகிதனே, கடவுள் உன்னே நடத்தச் சித்தமான வழிகள் யாவையும் நீ விளங்கிக்கொள்ளவேண்டும் என்கிற அவசியம் இல்லே. நீ அவைகளேப் புரிந்துகொள்ளவேண்டும் என்று அவர் எதிர்பார்ப்பதில்லே. உன் பிள்ளேயானது நீ செய்வதெல்லாம் விளங்கிக்கொள்ளும் என்று நீ எண்ணுவதில்லே. அது உன்னே நம்பவேண்டும் என்று நீ நினேக்கிறாய். உனக்கு இப்போது விளங்காதிருக்கிற விஷயங்களில் பின்னால் நீ தேவனுடைய மகிமையைக் காணுவாய்.

—ஜே. எச். மாக்

1 வாழ்க்கையின் கதவுகளேத் தள்ளித் திறந்து,
உள்ளே நின்று தேவனுடைய கிரியைகளேக் காணக்கூடுமானால்,
எல்லாச் சந்தேகங்களுக்கும் குழப்பங்களுக்கும் விளக்கம் காணலாம்.
எல்லா இரகசியத்தை வெளிப்படுத்தும் திறவுகோல் காணலாம்.

2 தற்பொழுது அது முடியாது. ஆகையால் அமர்ந்திரு.
கர்த்தருடைய திட்டங்கள் தூயலீலி போல் மலரும்.
மூடியிருக்கும் இதழ்களே விரித்து விடக் கூடாது.
கூடிய காலம் வரும்போது இதழ்கள் மலர்ந்து கந்தம் கமழும்.

3 பொறுமையாய் உழைத்து, நல் நாட்டைக் கிட்டி
அருமையாய் இளேப்பாறுதல் அடையுங்கால்,
எல்லாம் நன்றாய் விளங்கும்போது
வல்ல தேவன் நலமானதை அறிவார் என்று நாம் கூறுவோம்.

## செப்டம்பர் 21

*'என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன்' (பிலி. 3:8).*

இதுவே வயல் வெளிகளில் கதிர் முதிரும் காலம். அறுப்பவர்களின் மகிழ்ச்சிக் கீதம் கேட்கும் காலம். தானியம் அறுவடையாகிக் களஞ்சியத்தில் சேர்க்கும் காலம். வயல் வெளியின் பிரசங்கத்திற்கு நான் செவிகொடுக்கும் காலம். அதன் கருத்து நிறைந்த வசனங்கள் இவைகளே. நீ வாழ்ந்திருக்க, நீ மடியவேண்டும். உனது சௌகரியத்தையும், சுக வாழ்வையும் கருதக்கூடாது. பாவ பழக்கங்களையும், பாவ இச்சைகளையும் மாத்திரமல்ல, சரியாகவும் களங்கமின்றியும் தோன்றும் பலவற்றையும் நீ சிலுவையில் அறைய வேண்டும்.

மற்றவர்களை நீ இரட்சிக்க விரும்பினுல் உன்னை நீ இரட்சிக்க முடியாது. நீ அதிகக் கனி கொடுக்க வேண்டுமென்ருல், இருளிலும், தனிமையிலும் நீ புதைக்கப்படவேண்டும்.

இதைக் கேட்குங்கால் என் இதயம் சோர்ந்துபோகிறது. ஆனுல் கிறிஸ்து என்னை அவ்வாறு இருக்கச் சொல்லுகையில், அவரோடு அவருடைய பாடுகளில் ஐக்கியப்படுவது எனக்கு எத்தனை மதிப்பான காரியம் என்று எனக்குள் நான் சொல்லிக்கொள்ளவேண்டும். நான் அவ்வாருகையில் அவர் எனக்கு நல்ல தோழனுகிருர். என்னை அவருக்கு உதவத்தக்க பாத்திரமாக்கவே இவைகள் வந்தன என்று சொல்லிக்கொள்ளுவேன். வேதனையிலிருந்து லாபம், சாவிலிருந்து ஜீவன் பெறுதல், இதுவே பரலோக இராச்சியத்தின் சட்டம்.

மொக்கு பூவாக மலரும்போது, அது சாவென்று நாம் சொல்லுவோமோ?

'கண்டு பிடித்தண்டினேர்க்கு
கதியா ஈவார்?'
தூதர் தீர்க்கர் தூதர் யாரும்
'ஆம்' என்பர்.

## செப்டம்பர் 22

*'பின்னும் கர்த்தர்: கோதுமையைச் சுளகினுல் புடைக்கிறதுபோலச் சாத்தான் உங்களைப் புடைக்க உத்தரவு கேட்டுக்கொண்டான். நானே உன் விசுவாசம் ஒழிந்து போகாதபடிக்கு உனக்காக வேண்டிக்கொண்டேன் என்ருர்' (லூ. 23:31,32).*

தேவன் நம்மைச் சோதிக்கும்போது நமது விசுவாசத்தையே குறியாக வைத்து, தம் அம்புகளை எய்கிருர். மற்ற எந்த நற்குணங்கள் பரீட்சிக்கப்படாவிட்டாலும், விசுவாசம் கண்டிப்பாய்ப் பரீட்சைக்குத் தப்பாது. கைவிட்டு விடுதல் என்ற அம்புதான்

எலும்பினுள் நம்முடைய விசுவாசத்தை ஊடுருவிக் குத்தக்கூடியது. அது நம்முடைய விசுவாசம் நற்குணம் மற்றவர்களுடையதைப் போன்று நிலையானதா அல்லவா என்று பரீட்சிக்கிறது.

நாம் அனுபவிக்கும் இன்பங்கள் அகன்றுபோயினும், ஆண்டவருடைய பயங்கரங்கள் நமக்கு எதிர்வரினும் பழுதுபடாமல் தப்பும் விசுவாசமே தகுந்த விசுவாசமாகும். விசுவாசம் பரீட்சிக்கப்பட வேண்டும். கைவிடப்பட்டதுபோல் தோன்றுவதே ஏழு மடங்கு சூடாக்கப்பட்ட அக்கினி சூளை. அதனுள் தள்ளப்படும்போது அந்தப் பரீட்சையில் தவறிப்போகாதிருக்கிற மனிதன் பாக்கியவான்.

பரிசுத்த பவுல் அப்போஸ்தலன், 'நான் விசுவாசத்தைக் காத்துக் கொண்டேன்' என்கிறார். ஆனால் அவர் தம் தலையை இழந்தார். அவரைச் சிரச் சேதம் செய்தார்கள். ஆனால் அவருடைய விசுவாசம் நீங்கவில்லை. புறஜாதியாருக்குச் சுவிசேடத்தை அறிவித்த அந்த அப்போஸ்தலன் மூன்று காரியங்களுக்காகச் சந்தோஷப்பட்டார்.

(1) நல்ல போராட்டத்தைப் போராடினார். (2) ஓட்டத்தை முடித்தார். (3) விசுவாசத்தைக் காத்துக்கொண்டார். வேறொன்றும் அவருக்குப் பெரிதல்ல. பரிசுத்த பவுல் ஓட்டத்தில் பரிசு பெற்றார். பூலோகம் மாத்திரமல்ல. பரலோகமும் அவருடைய செய்கைகளைப் பார்த்து வியக்கும்படி செய்தார். கிறிஸ்துவைப் பெற்றுக்கொள்ளத்தக்கதாய் எல்லாவற்றையும் இழந்துவிடுவது மேல் என்று அறிந்துகொண்டவர்களாக நாம் ஏன் நடக்கக்கூடாது. நாம் ஏன் அவரைப்போல் உண்மையுள்ளவர்களாக இல்லை. அவர் கணக்கிடும் முறை நமக்கு இல்லை. நாம் கணக்கிடும் முறையை விட அது வித்தியாசமானது. அவர் நஷ்டமென்று எண்ணியதை நாம் இலாபம் என்று எண்ணுகிறோம். அவர் பெற்ற கிரீடத்தை நாம் பெறவேண்டும் என்றால், அவரைப்போல் விசுவாசித்து அந்த விசுவாசத்தைக் காத்துக்கொள்ளவும் வேண்டும்.

## செப்டம்பர் 23

'வேதவாக்கியம் சொல்லுகிறபடி என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ அவன் உள்ளத்திலிருந்து ஜீவதண்ணீருள்ள நதிகள் ஓடும் என்றார்' (யோ. 7:38).

பரிசுத்த ஆவியானவர் ஏன் நம்மை நிரப்புவதில்லை என்று நம்மில் சிலர் ஆச்சரியப்பட்டு நடுக்கங்கொள்ளுகிறோம். ஏராளமாய்ப் பரிசுத்த ஆவி உள்ளே வருகிறது, அதை நாம் வெளியே விடுகிறதில்லை. உங்களுக்குண்டாயிருக்கும் பாக்கியங்களை மற்றவர்களுக்கும் கொடுங்கள். ஊழியத்திற்கும் ஆசீர்வாதத்திற்கும் பெரிய திட்டம் போடுங்கள். சீக்கிரமாகப் பரிசுத்த ஆவியானவர் உங்கள் முன்னால் இருப்பதைக் காண்பீர்கள். ஊழியத்திற்கு வேண்டிய ஆசீர்வாதங்களை ஈவாக அருளுவார். நீங்கள் மற்றவர்களுக்கு எதைக்

கொடுப்பீர்களென்று அவர் எண்ணுகிருரோ, அவை யாவற்றையும் அவர் உங்களுக்குக் கொடுப்பார்.

இயற்கையில் ஆவிக்குரிய காரியங்களுக்கும் உவமையாகச் சொல்லக்கூடிய அழகான சத்தியம் ஒன்று உண்டு. 'காற்றுவீணை' எனப்பட்ட வாத்தியத்தைப்போல் இனிமையான இன்னிசை உண்டாக்கும் கருவி வேறென்றுமில்லை. இந்த வீணையின் அமைப்பைக் கவனிப்போம். இசை உண்டாக்கும் பல கம்பிகள் ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்டிருக்கும். கடந்துபோகும் காற்றுத்தான் அதைத் தொட்டு இன்னிசை உண்டாக்கும். அதன்மேல் காற்றுப் பட்டு அதை அசைக்கும்போது தெய்வலோகக் கீதம்போன்ற அபூர்வ இசை உண்டாகும். தேவதூதர்கள் தாமே அதைச் சுற்றிவந்து அதன் நரம்புகளைத் தொட்டு, அந்த இசையை உண்டாக்குகிருர்களோ? என்ற எண்ணம் உண்டாகும்.

அந்தப்படியே நம்முடைய இதயங்களைத் திறந்துவைத்தால் பரிசுத்த ஆவியானவர் உள்ளே வந்து, தொட்டு தமது இஷ்டப்படி அதில் வாசித்து இன்னிசை உண்டாக்குவார். நாம் அவருடைய சேவையில் காத்திருத்தல் வேண்டும்.

அப்போஸ்தலர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றபோது, அந்த மேல்வீட்டை வாடகைக்கு எடுத்துக் கூட்டங்கள் நடத்த அங்குத் தங்கிவிடவில்லை. ஆனுல் எங்கும் திரிந்து சுவிசேடத்தைப் பிரசங்கித்தார்கள்.

—வில் அவ்ப்

1 'நானும் என் ஆகாரத்தைத் தனியாய்ச் சாப்பிட்டால்'
அறிவீன மக்கள் உண்மைத் தெய்வத்தை அறியாது,
கிறிஸ்துவை அறியாது, போஷணையின்றி இருக்கையில்,
சபை தன் ஆகாரத்தைத் தானே புசித்துக்கொண்டு,
அதிக ஆகாரத்தால் வருந்துவதைக்
கண்டால் அவர் என்ன நினைப்பார்?
என்று பக்தர் ஏளனமாய்ச் சொன்ஞர்.

2 'இலவசமாய்ப் பெற்றீர்கள், இலவசமாய்க் கொடுங்கள்'
என்று எல்லாம் நமக்களித்தவர் கூறுகிருர்.
ஆண்டவருடைய இரத்தம் யாருக்காகச் சிந்தப்பட்டதோ?
அவருடைய சரீரம் யாருக்காகப் பிட்கப்பட்டதோ?
அவர்கள் பட்டினியாய் இருக்கிறேம் என்று,
சொல்லும் சப்தத்திற்கு நம் செவியை அடைத்து,
நாம் ஆகாரத்தைத் தனியே சாப்பிடுவோமென்ருல்,
நமக்குள் ஆத்துமா எவ்வளவு நாள் உயிரோடிருக்கும்?

—ஆர்ச் பிஷப் அலெக்ஸாண்டர்

## செப்டம்பர் 24

'மீசியா தேசமட்டும் வந்து பித்தினியா நாட்டுக்குப்போக பிரயத்தனம்பண்ணி னார்கள்; ஆவியானவரோ அவர்களைப் போகவொட்டாதிருந்தார்' (அப். 16:7).

'எவ்வளவு விந்தையான தடங்கல்' பித்தினியா நாட்டிற்குக் கிறிஸ்துவின் ஊழியத்தைச் செய்யத்தான் புறப்பட்டார்கள். கிறிஸ்துவின் சொந்த ஆவியானவரே அவர்களுக்கு எதிராய் வழியை அடைத்தார். நானும் சில சமயங்களில் இதை அனுபவித்திருக்கிறேன். நான் பிரயோஜனமுள்ள ஊழியம் நடப்பித்த காரியங்களில் தடைபண்ணப்பட்டிருக்கிறேன். எதிர்ப்பு ஏற்பட்டு நான் திரும்பிப்போக வேண்டியிருந்தது. வியாதி உண்டாகி, நான் ஊழியத்தைவிட்டு விலகியிருக்க வேண்டியதாயிருந்தது.

அது ஆவிக்குரிய ஊழியம் என்று நான் எண்ணிக்கொண்டிருக்கையில் என் வேலையை விடவேண்டி நேரிட்டது. அப்போது எனக்கு அதிகக் கஷ்டமாயிருந்தது. அப்போது நான் ஆவியானவருக்கு வேலை செய்வது மட்டும் ஊழியம் அல்ல, காத்திருத்தலும் ஊழியமே என்பதை ஞாபகப்படுத்திக்கொண்டேன். கிறிஸ்துவின் இராச்சியத்தில் ஊழியம் செய்யும் வேளையின்றி, ஊழியம் செய்யாதிருக்கவேண்டிய வேளைகளும் உண்டு என்பதை உணர்ந்தேன். பலவகைப்பட்ட மனிதர் வாழ்க்கையில் தனிப்பட்ட வனாந்தரமான இடமே மிகப் பயனுள்ள இடம் என்பதைக் கண்டேன். அங்கு தானியங்களும் திராட்சரசமும் அதிகமாயுள்ள நாட்டைவிட அறுப்பு அதிகம் உண்டு. நான் விரும்பியும் போகக்கூடாதிருந்த பித்தினியாபோன்ற சமயங்களுக்காக ஆவியானவரைத் துதிக்கவும் கற்றுக்கொண்டேன்.

ஆகவே, பரிசுத்த தெய்வீக ஆவியானவரே, நான் உம்மால் இன்னும் நடத்தப்படுவேன். இன்னும் நான் பிரயோஜனமான ஊழியம் செய்யலாம் என்று எண்ணியிருந்தபோது ஏமாற்றம் அடைந்தேன். ஒரு தினம் ஊழியம் செய்ய வழி திறந்திருப்பது போல் தோன்றுகிறது. மறு தினம் அதில் பிரவேசிக்கப் போகையில் அவ்வழி எனக்கு எதிராய் அடைக்கப்படுகிறது.

வேலை நடப்பிக்க முடியாமல் தடைப்படும் நேரத்தில் நான் மற்றொரு வழிகாணச் செய்யும். தடங்கல்களில் ஊழியத்திற்கான வழிகளைத் தெரிந்துகொள்ள எனக்கு உதவிபுரியும். ஒரு மனிதன் அமைதலாய்க் காத்திருப்பதாலும், ஊழியம் செய்யலாம் என்ற அறிவை எனக்குப் போதித்தருளும், மெதுவான சப்தத்தின் வல்லமையை நான் நினைக்கும்போது, ஆவியானவர் என் வேலையில் தடங்கல் உண்டாக்குகிறதைக் குறித்து நான் முறுமுறுக்கமாட்டேன்.

ஆண்டவருடைய நடத்துதல் எனக்கு விளங்காமலிருக்கும்
போது,
கொடூரமான வியாதி எனக்குத் தோன்றும் போது,
ஒரு மெதுவான சப்தம் என்னைக் கெஞ்சி,
தேவன் கிரியை செய்கிறார், தேவன் உண்மையுள்ளவர்,
நீ காத்திரு என்று சொல்லுகிறது.

## செப்டம்பர் 25

'நான் ஏன் துக்கத்துடன் திரியவேண்டும்' (சங். 42:9).

விசுவாசியே! நீ இந்தக் கேள்விக்குப் பதில் கூறமுடியுமா? நீ சந்தோஷப்படுவதற்குப் பதிலாய், அடிக்கடி துக்கத்துடன் அலைவதற்குக் காரணம் கூறமுடியுமா? கஷ்டம் வரும் என்ற எதிர்கால நினைவுக்கு நீ ஏன் இடம் கொடுக்கிறாய்? இரவானது பகலில் முடிவடையாது என்று யார் உனக்குச் சொன்னது? உன் அதிருப்தியாகிய குளிர்காலம், பனிகாலமாகி, உறை பனிகாலமாகி, கல்மழைக் காலமாகி நம்பிக்கையிழத்தல் என்ற புயலில் முடியும் என்று யார் உனக்குச் சொன்னது? இரவுக்குப்பின் பகல் வரும் என்பது உனக்குத் தெரியாதா? குளிர்காலத்துக்குப்பின் வசந்த காலம் வரும் என்பதும், நீர் எழுச்சிக்குப்பின் இறக்கம் வரும் என்பதும், உனக்குத் தெரியாத விஷயங்களா? நம்பிக்கைக்கொள். எப்பொழுதும் நம்பிக்கையோடிரு. கடவுள் உன்னை ஒருபோதும் கைவிடார்.

—சி. எச். ஸ்பர்ஜன்

1 என் நம்பிக்கைக கெல்லாம் மேலானவர் அவரே;
என் பயத்திலெல்லாம் உறு துணையும் அவரே;
என் அரை குறை வேலைகளைக்கொண்டு ஒரு பாலமும்
என் கண்ணீரைக் கொண்டு ஒரு வானவில்லும் அமைத்தார்
அலை சூழ்ந்த ஆழக்கடல் வழி நான் செல்கையில்
ஆண்டவர் அலைகளின் உச்சியில் என்னண்டை வந்தார்
நான் வனாந்தர வழி நடந்து செல்கையில்
அவரன்பில் சாய்ந்து இளைப்பாறினேன்.

2 என் அருமைப் பொக்கிஷங்களைப் போக்கி,
அன்பின் உடன்படிக்கையை எனக்குக் காட்டினார்.
சோர்ந்து நோவு மிகுந்த என் இதயக் காயத்தை
அவர் சுவாச ஔடதத்தால் குணமாக்கினார்,
அவர் கண்டிதம் பட்சமும் உண்மையுமானதே.
அது ஞானமாய்ப் படிப்பித்துப் பரீட்சித்து
அவர் தேடிய ஆத்துமா அவரையன்றி உலகில்
எவரையும் நம்பாதபடி செய்யமே.

3 நான் அறிந்திராத பாதைகளிலும்,
நான் காணக் கூடாத வழியிலும் என்னை நடத்தினார்.
கோணலான மேடு பள்ளங்களும்,
நான் அவர் பின் செல்கையில் சமமாயின.
வழியருகிலிருந்த குளிர் நிழல் மரங்களுக்காகவும்,
இனிய நீர் நிலைகளுக்காகவும்,
இரவிலிருந்த அக்கினி ஸ்தம்பத்திற்காகவும்,
பகலில் உண்டான நிழலுக்காகவும் அவரைத் துதிப்பேன்.

4 தளர்ந்து, சோர்ந்த வேளையில் நான் காத்திருக்கையில்
அவர் அன்பின் வாக்குத்தத்தம் என்னைத் தேற்றும்.
கடந்த காலங்களின் அனுபவங்களினால்
வருங்காலமும் நலமானதாகவே இருக்கும் என்றறிவேன்.
வனாந்தர அப்பமான மன்னாவை வைத்துள்ள பொன் கலசத்துடன்
துளிர்த்த கோலும் வைக்கப்பட்டிருந்ததுபோல்,
பெட்டியில் நியாயப்பிரமாணத்துடன்
திட்டமாய் என்னைக் கவனிப்பார் என்ற உடன்படிக்கையும் இருக்கிறது.

## செப்டம்பர் 26

'நாம் தரிசித்து நடவாமல் விசுவாசித்து நடக்கிறோம்' (2 கொ. 5:6).

காண்பதின்படியல்ல, விசுவாசத்தின்படியே; நம்முடைய உணர்ச்சிகளைப் பார்க்கும்படி தேவன் நமக்குச் சொல்லுகிறதில்லை. சுய நலமும் சாத்தானும் அதைப் பார்க்கும்படி ஏவலாம். தேவன் உணர்ச்சியை அல்ல, கிறிஸ்துவைப்பற்றிய உண்மைகளையும், நமக்காக அவர் முடித்துப் பூரணப்படுத்திய தொண்டின் உண்மைகளையும் நாம் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறார்.

அந்த அருமையான சம்பவங்களை நாம் பார்த்துத் தேவன் அவைகளை உண்மை என்று சொல்லுவதினால் நாம் அவைகளை நம்புவோமானால், தேவன் நமது உணர்ச்சிகளைக் கவனித்துக்கொள்ளுவார்.

தேவன், நாம் அவரை நம்புவதற்கான உணர்ச்சிகளைத் தருவதில்லை. தம்மை நம்பச் செய்யவேண்டும் என்பதற்கான உணர்ச்சிகளையும் தேவன் தருவதில்லை. நாம் ஏற்கனவே முற்றிலுமாய் நம்பிவிட்டோம் என்று காட்டக்கூடியதாகக்கூட அவர் நமக்கு உணர்ச்சிகளைத் தருவதில்லை. யாதொரு உணர்ச்சியையும் சார்ந்திராமல் அவருடைய வார்த்தையை மாத்திரம் நம்பியிருக்கிறோம் என்பதை அவர் காண்கையில்தான் அதைப்பற்றிய உணர்ச்சியைத் தருகிறார்.

அதுவரை தேவனிடத்திலிருந்து உணர்ச்சி ஏற்படுவது துர்லபம். தனித்தனி ஆளுக்கு ஏற்ற சமயத்தில், ஏற்ற வேளையில், தமது அன்பினால் நிதானித்து உணர்ச்சி அருளுவார்.

நமது உணர்ச்சியையோ, அன்றித் தேவனுடைய சத்தியத்தையோ, எதை நோக்குவதென்று நாம் தெரிந்துகொள்ளவேண்டும். நம் உணர்ச்சிகள் அலைக்கடலைப்போலவோ காற்றினுல் பறக்கப்படும் பாலைநில மணலைப்போலவோ நிச்சயமற்றவைகள். ஆனுல் தேவனுடைய சம்பவங்களோ நேற்றும் இன்றும் என்றும் மாருதிருக்கிற நித்திய கன்மலையாகிய கிறிஸ்துவைப்போலவே நிச்சயமானவைகளாக இருக்கின்றன.

இருள் அவரன்பின் முகத்தை மூடுகையில்
அருள் நிறைந்து மாருத அவர் கிருபையில் சார்ந்திருப்பேன்
வேகமாக புயற்காற்று வீசும்போதும் என்
நங்கூரம் உறுதியாய் நிலைத்திருக்கும்.

## செப்டம்பர் 27

'மீட்கும் பொருளை நான் கண்டுபிடித்தேன்' (யோபு 33:24).

தெய்வீகக் குணப்படுதல் தெய்வீக வாழ்வே. அதில் கிறிஸ்து சரீரத்திற்குத் தலையாகிருர். கிறிஸ்துவின் உயிர் நம்முடைய உடலாகிய சட்டத்திற்குள் வருவதாகும். நம்முடைய சரீரத்தின் ஒவ்வொரு அங்கமும், கிறிஸ்துவின் சரீரத்தோடு ஐக்கியப்பட நம்முடைய அங்கங்களில் அவருடைய உயிர் பாய்வதாகும். கிறிஸ்துவின் சரீரம் உயிரோடெழுந்து மகிமையுள்ள சரீரம் ஆனது போல் ஆகும். அவர் மரித்தோரிலிருந்து எழுந்து இப்போதும், எப்போதும் மெய்யான உடலோடும் ஆத்துமாவோடும் கடவுளின் வலது பாரிசத்தில் உயிருள்ள மனிதராக நிற்பது எவ்வாறு சத்தியமோ, அதுபோல் நம்முடைய சரீரம் உயிர்த்தெழுதலும் சத்தியம்.

உயிருடனிருக்கிற கிறிஸ்து தமது சகல குணங்களோடும், சகல வல்லமையோடும் நமக்குரிமை ஆகிருர். நாம் அவருடைய சரீரத்தின் அவயவங்கள். அவருடைய மாமிசமும் எலும்புமானவர்கள். நாம் அதை விசுவாசித்துப் பெற்றுக்கொள்ளுவோமானுல் மனித குமாரனின் வாழ்க்கையில் நாம் வாழலாம். ஆண்டவரே, 'சரீரம் ஆண்டவருக்கும், ஆண்டவர் சரீரத்துக்கும்' என்பதை அறிய எனக்குத் துணைபுரியும்.

'உன் தேவனுகிய கர்த்தர் உன் நடுவில் இருக்கிருர். அவர் வல்லமையுள்ளவர்' (செப். 3:17). இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னுல் இந்த வசனமே ஜெபத்தால் ஆத்தும சரீர சுகம் பெறலாம் என்ற எண்ணத்தை என் மனதில் உண்டாக்கியது. அதுவே வழி. இப்போதும் விரிவாய்த் திறக்கிறது. அதன் மூலமாய் உயிரோடிருக்கும் கிறிஸ்து கொஞ்சங் கொஞ்சமாய் மீட்கப்பட்ட என் சரீரத்துக்குள் புகுந்து, அதை நிரப்பி, அதை சக்தியுள்ளதாக்கித் தம்

முடைய பிரசன்னத்தாலும், வன்மையாலும், என் வாழ்க்கையை உயிருள்ளதாக்கிப், புதிய பூலோகமும் புதிய மோட்சமுமாக்குகிறுர். 'உன் தேவனுகிய கர்த்தர்', உன் தேவன், என் தேவன், அவரை யும், அவருக்குச் சொந்தமானவற்றையும், நான் எவ்வளவு ஏற்றுக் கொள்ள விரும்புகிறேனே, அவ்வளவாய்ச் சர்வ வல்லமையுள்ள தேவனில் உள்ளவைகள் என்னில் உள்ளவையாகும். 'வல்லமை யுள்ள' இந்தத் தெய்வம்; சர்வ வல்லமையுள்ள தெய்வம்; நம் உள்ளில் உள்ள தெய்வமானுர். சூரியன் ஆகாயத்தின் மத்தியில் இருப்பது போலவும் மின்சார சக்தி உண்டாக்கும் அறையின் மத்தி யில் மின்சார உற்பத்தி இயந்திரம் இருப்பதுபோலவும், மூன்று வகைப்பட்ட என் வாழ்க்கையின் மத்தியில் அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியாக இருக்கிறுர். என் சரீர பிரகாசமான வாழ்க்கை யின் மத்தியில் அவர் இருக்கிறுர். என் யோசனையின் மத்தியில் அவர் இருக்கிறுர். என் உணர்ச்சி நரம்புகளின் மத்தியில் அவர் இருக்கிறுர்.

கடந்த இருபத்தொரு ஆண்டுகளாக அது எனக்கு உயிருள்ள சத்தியமாக இருந்து வருகிறது. அது நாள்தோறும் மென்மேலும் வளர்ச்சியும் சத்தியமுமாயிருப்பதாக. இப்போது என்னுடைய எழுப தாவது வயதில் முப்பது வயது போன்ற இளமையும், ஊக்கமும் உள்ளவனுக இருக்கிறேன். தற்போது நான் தேவனுடைய பலத்தில் என் இளமையில் செய்வதைப்போல் மனதிலும் சரீரத்திலும் இரட்டிப்பான வேலை செய்கிறேன். இதற்குமுன் வேண்டியதா யிருந்ததைவிடப் பாதிப் பெலன்தான் வேண்டியதாய் இருக்கிறது. எப்பொழுதும் நீர் நிறைந்து வழிகிற 'ஆர்ட்டிஷியன்' கிணறுபோல என் சரீரம், ஆத்துமா, மனது இவைகள் இருக்கின்றன. மேட்டி லிருந்து கீழே தண்ணீர் விழத் தயாராயிருப்பதுபோலவும், தண்ணீர் ஏராளமாயிருக்கையில் மாவரைக்கும் இயந்திரத்தின் சக்கரம் திரும்ப ஆயத்தமாயிருப்பதுபோல் நான் பேசவும், போதிக்கவும், எல்லாக் காரியங்களிலும் இரவிலும், பகலிலும் பிரயாணம் செய்ய வும் ஆயத்தமாயிருக்கிறேன். எனக்கு இது சிரமமாகவே இல்லை.

என் ஆவி தேகம் ஆன்மா யாவையும்
மன்னு உமக்கே மீட்கப்பட்டதாய்
தூயதாக்கிக் குணமாக்கி என்றுமே
உமதாகப் பிரதிஷ்டை செய்திடுவேன்
இவ்வாறு நான் செய்கையில் என் முழு
வன்மையும் உம் தனி மகிமைக்கென்றே
ஒன்று சேர்ந்து துதிக்குமே.

—டாக்டர் ஹென்றி வில்சன்

## செப்டம்பர் 28

'என்னிடத்தில் உங்களுக்குச் சமாதானம்' (யோ. 16:30).

பாக்கிய நிலைமைக்கும் சந்தோஷத்திற்கும் வித்தியாசமுண்டு. பரிசுத்த பவுல் அப்போஸ்தலனுக்குக் காவல், வேதனை, தியாகம், சகிக்கமுடியாத துன்பம் இவைகள் இருந்தன. ஆயினும் அவை களின் மத்தியில் அவர் பாக்கியவானுயிருந்தார். இந்த நிலைமையில் அவர் மனதிலும் வாழ்க்கையிலும் சர்வ நற்குணங்கள் உண்டாயின.

பாகானினி என்ற பெயர்போன பிடில் வாத்தியக்காரன் ஒருநாள் அநேக ஜனங்களுக்குமுன் தன் திறமையைக் காட்டி வாசித்தான். ஜனங்கள் வெகு குதூகலத்துடன் கைதட்டி அவன் திறமையை மெச்சினுர்கள். இறுதியில் அவன் தன் பிடிலில் ஏதோ தவறு இருக்கிறது என்று கண்டுபிடித்தான். மறுமுறையும் அதை உற்று நோக்கி அது தன்னுடைய உலகப் பிரசித்திபெற்ற,'விலைமதியாத வாத்தியம் அல்ல என்பதைக் கண்டான். அவன் சிறிதுநேரம் செயலற்று நின்றுன். பின்பு ஜனங்கள் பக்கம் திரும்பி நின்று ஏதோ ஒரு தவறு நடந்திருக்கிறது. அது தன்னுடைய வாத்தியம் அல்ல என்று சொன்னுன். பின்பு திரைக்குப் பின்னுல் சென்று தான் வைத்த இடத்தில் அதைத் தேடினுன். ஆனுல் யாரோ அதைத் திருடிக்கொண்டு, ஒரு பழைய வாத்தியத்தை அங்கு வைத்திருப்ப தாகக் கண்டான். சிறிதுநேரம் திரைக்குப்பின் இருந்து வெளியே வந்து சபையோரை நோக்கி,

சீமான்களே, சீமாட்டிகளே, சங்கீதம் 'வாத்தியத்திலிருந்தல்ல; ஆத்துமாவிலிருந்து உண்டாகிறது என்பதை நான் உங்களுக்குக் காட்டப்போகிறேன்' என்றுன். முன்னெருகாலும் வாசித்திராத பிரகாரம் இனிமையாக வாசித்தான். அந்தப் பழைய வாத்தியத்தி லிருந்து இன்னிசை ஓடிப்பாய்ந்தது. சபையோர் தம்மை மறந்து களி வெறிகொண்டார்கள். கை தட்டுதலின் சப்தம் கூரையைப் பிய்த்துக்கொண்டு சென்றது. ஏனென்றுல் அம்மனிதன் இன்னிசை அக்கருவியிலல்ல, தன் ஆத்துமாவிலிருந்தே உண்டாயிற்று என்ப தைக் காட்டினுன்.

சோதிக்கப்பட்டுக் கஷ்டமடைந்த நீ சபைமுன் தோன்றி, பூலோகத்தாருக்கும் வானலோகத்தாருக்கும் முன்பாக, வாழ்க்கைச் சங்கீதம் பொருளையும் சூழ்நிலையையும் பொறுத்ததில்லை, ஆத்துமா வில்தான் வாழ்க்கையின் சங்கீதம் இருக்கிறது என்பதைக் காட்டு.

இதயத்தில் சமாதானம் உண்டானுல் கடும் வாடையும்
இன்பமாகும்
இரவின் மின்னெளி கடமையாகி பாதையைக் காட்டும்
ஒவ்வொரு ஜீவ பிராணியும் புது சந்தோஷ செய்தியை
அறிவிக்கும்.

மரங்களும் கற்களும் மகிமையாகத் தோன்றும்
இதயத்தில் சமாதானம் உண்டானல்
—சார்லஸ் பரான்டாஸ் ரிச்சட்ஸன்

## செப்டம்பர் 29

'நானே ஜெபம் பண்ணிக்கொண்டிருக்கிறேன்' (சங். 109:4).

நம்முடைய தியானங்களில் நாம் அடிக்கடி அவசரப்படுகிறோம். நாம் தினந்தோறும் தியானத்தில் எவ்வளவு நேரத்தைச் செலவிடுகிறோம்? அவைகளை நிமிடங்களாகச் செலவிடலாமா? ஜெபத்தில் மிகுதியான நேரத்தைச் செலவிடாத எவனும் உலகப் பிரசித்திப் பெற்ற பரிசுத்தவானுனதில்லை. தனித்திருந்து அதிகநேரம் ஜெபிக்காதவன் ஜெபத்தின் ஆவியைக் காட்டக்கூடுமா?

ஒய்ட்பீல்ட் என்பவர், 'நான் நாள் பூராவும் வாரம் பூராவும் நெடுஞ்சாண்கிடையாய்க் கிடந்து அமைதியாகவோ, சப்தமாகவோ ஜெபித்திருக்கிறேன்' என்கிறார். 'முழங்காலில் நின்று அங்கேயே வளருங்கள்' என்று இன்னொருவர் கூறுகிறார். தான் கூறியது சரியென்றும் அவர் அறிவார்.

தனிமையை விரும்பாத ஒரு மனிதனுவது, பாஷை அபிவிருத்திக்காக அன்றி, சாஸ்திர அறிவை விருத்தி செய்வதற்கான காரியங்களைச் செய்ததில்லை என்று சொல்லப்படுகிறது. தேவனோடு அடிக்கடி நீண்ட நேரம் தனித்திராத ஒருவனுக்குப் பரிசுத்த ஜீவியத்தின் வளர்ச்சி ஏற்படாது என்பதை மதாசாரத்தின் அடிப்படையான கொள்கையாக நாம் கூறலாம்.

வருத்தப் பட்டுப் பாரஞ் சுமக்கிற ஆத்துமாவே என்னண்டை வா
வனுந்தர வெளியில் இளைப்பாற என் நிழலில் வா,
வாழ்க்கையின் குழப்பங்களிலிருந்து என்னோடு நடந்து வா
சமாதானம் இன்னிசைப்போல் உன்னிதயத்தை நிரப்பும்.

## செப்டம்பர் 30

கழுகு தன் கூட்டைக் கலைத்துத் தன் குஞ்சுகளின்மேல் அசைவாடி, தன் செட்டைகளை விரித்து அவைகளை எடுத்து, அவைகளைத் தன் செட்டைகளின் மேல் சுமந்துபோகிறதுபோல் கர்த்தர் ஒருவரே அவனை வழி நடத்தினர். அந்நிய தேவன் அவனேடே இருந்ததில்லை' (உபா. 32:11,12).

நம்முடைய சர்வ வல்ல பிதா தம்முடைய பாதுகாப்புக்குள் அடைக்கலம் புகுந்த நம்மை மலையுச்சிக்குக் கொண்டுபோகவும், நம்மிடத்திலுள்ள பறக்கும் சக்தியை உணர்ந்து அதைப் பயன்படுத்த

ஆகாயத்தில் தள்ளிவிடவும் சித்தம் கொள்ளுகிறார். பறக்கும் முயற்சியால் அசாதரண அபாயம் ஏற்படும்போலிருந்தால் அவர் கீழே பறந்துவந்து தம்முடைய வன்மை மிகுந்த செட்டைகளில் நம்மைத் தாங்கி உயரக் கொண்டுபோகவும் ஆயத்தமாயிருக்கிறார். அதிகக் கஷ்டமான நிலைமைக்குத் தேவன் தமது பிள்ளைகளைக் கொண்டுவரும்போது அவர் தங்களை இரட்சிப்பார், விடுவிப்பார் என்று அவர்கள் நிச்சயமாய் எதிர்பார்க்கலாம்.

தேவன் உன்மேல் ஒரு பாரத்தைச் சுமத்தும்போது, தமது கரத்தை அதனடியில் வைக்கிறார்.

வளர்ச்சிக் குன்றின செடி ஒன்று அகன்று வளரும் ஆலமரத்தடியில் வளருகிறது. அந்தச் சின்னச் செடி தன்னை மூடியிருக்கும் நிழலை மதிப்பான பொருளாக எண்ணுகிறது. ஆனால் அந்தச் சின்னச் செடிக்கு ஒரு ஆசீர்வாதம் வைக்கப்பட்டிருக்கிறது.

ஒருநாள் மரம்வெட்டி கூர்மையான கோடரி கொண்டுவந்து அந்த ஆலமரத்தை வெட்டுகிறான். சின்னச் செடி அழுது தவிக்கிறது. 'என் அடைக்கலம் போய்விட்டதே. எல்லாக் கடூரமான காற்றும் இப்போது என்மீது வீசுமே. ஒவ்வொரு புயலும் என்னை வேரோடே பிடுங்கி எறிய முயலுமே' என்று ஏங்கினது.

அந்தச் செடியின் தூதன் அதைப் பார்த்து, 'அப்படியல்ல, நீ சூரியனொளியைப் பெறுவாய். மழை உன்மேல் முன்னிலும் அதிகமாய் விழும். உன் வளர்ச்சி குன்றிய உருவம் ஓங்கி வளரும். நன்றாய் விரிந்திருக்க முடியாத உன் மலர் சூரியனொளியில் நன்றாய் அழகாய் மலர்ந்து களிகூரும். உன்னைப் பார்க்கும் மனிதர், ''இது எவ்வளவு பெரிய செடியாகிவிட்டது. அதின் அழகு எத்தனை மகிமையாய் விளங்குகிறது. அந்தச் சின்னச் செடி தன் அடைக்கலம் என்று எண்ணி மகிழ்ந்திருந்த ஆலமரம் அகற்றப்பட்டதினால்தான் இதன் அழகு இவ்வளவு நன்றாய்ப் பெருகிற்று என்பார்கள்'' ' என்று கூறினது.

இதிலிருந்து தேவன் உன்னை ஒரு சிறந்த கிறிஸ்தவனாக்க உன் சௌகரியங்களையும், உன் வசதிகளையும் எடுத்துப்போடுவார் என நீ அறிந்துகொள்ளவில்லையா? ஆண்டவர் தம் சேனை வீரரைப் பஞ்சு மெத்தையில் படுக்கவைத்துப் பழக்குவிப்பதில்லை. அவர்களை வெளியே அனுப்பி கஷ்டமான வேலை செய்யச் செய்து பயிற்சி அளிக்கிறார். அதிக துக்கமாகிய பாரத்தை முதுகின்மேல் சுமந்து கொண்டு நீரோட்டங்களைக் கடந்து செல்லவும் ஆறுகளை நீந்திச் செல்லவும் அதிக தூரம் நடக்கவும் செய்கிறார். இவ்விதமாகவே அவர்களை நல்ல போர் வீரராக்குகிறார். அவர்களை நன்றாய் உடுத்தி, வாசலில் நிற்கவைத்து, பார்க்கிறவர்கள், 'இவர்கள் எவ்வளவு அந்தஸ்தான மனிதர்கள்' என்று சொல்லத்தக்கபடி வைப்பதில்லை. போர்க்களத்தில்தான் ஒருவன் நல்ல வீரனாகிறான்.

என்பதைத் தேவன் அறிவார். சமாதானக் காலத்தில் அவர்கள் பூரண வளர்ச்சியடைவதில்லை. போர் வீரனுக்குரிய தன்மைகளை வளரச் செய்யலாம். ஆனால் உண்மையான வளர்ச்சி துப்பாக்கி மருந்து வாசனைக்குள்ளும் துப்பாக்கி வெடிக்கும் சப்தத்தின் மத்தியிலும் போர்க்களத்தில்தான் வளர்கிறது. சமாதான காலங்களில் அந்த வளர்ச்சி ஏற்படாது. இது உன் கஷ்டங்களுக்குச் சரியான வியாக்கியானமாக இல்லையா? ஆண்டவர் உன் நற்குணங்களை வெளியே கொண்டுவந்து வளரச் செய்கிறதில்லையா? உன்னைப் போரின் மத்தியில் நிறுத்தி, உன்னில் போர்வீரனின் குணங்களை வளரச் செய்கிறதில்லையா? உனக்குக் கொடுக்கப்படும் ஒவ்வொரு பயிற்சியையும் நீ பயன்படுத்தி வெற்றிவீரனாக வேண்டாமா?

—சி. எச். ஸ்பர்ஜன்

## அக்டோபர் 1

*'நான் உபத்திரவப்பட்டது எனக்கு நல்லது' (சங். 119:71).*

வெகு அழகான நிறமுள்ள செடிகளை அதிகக் கொடுமையான வெப்ப தட்ப நிலையுள்ள உயர்ந்த மலை உச்சிகளில்தான் பார்க்கலாம். பாசங்களும், அழகான காளான்களும் வெறுமையான பாறைகளின் மீதே புயல் தங்கும் சிகரங்களின் உச்சியில்தான் உண்டு.

பத்தாயிரம் அடி உயரமான சென்னிபெட்டாஸ் என்ற சிகரத்தின் உச்சியில் சிறந்த பௌதீக நிற விந்தையைக் கண்டேன். அந்தப் பெரிய பாறையின் மேல்புறம் முழுவதும் ஒருவித மஞ்சள் பாசம் படர்ந்திருந்தது. அது சூரியனொளியில் ஒரு மந்திர பூமியிலுள்ள தங்கக் கோட்டைபோல் ஜொலித்தது.

அந்த உயர்ந்த சிகரத்தில் மொட்டையான இடத்தில் ஆகாயத்தின் கடும் புயல் வீசும் ஸ்தலத்தில் அந்தப் பாசம் அத்தனை மகிமையான நிறத்தைக் காட்டினது. அவ்விதக் காட்சியை எந்தப் பள்ளத்தாக்கிலும் காணமுடியாது. அந்தப் பாசத்தில் இரண்டுவிதங்களை வைத்திருக்கிறேன். ஒன்று செயின்ட் பெர்னாட் மலையுச்சியிலிருந்தது. மற்றொன்று ஸ்காட்டிஷ் அரண்மனை ஒன்றில் ஒரு மரத்திலிருந்து எடுக்கப்பட்டது. அவ்விரண்டிற்குமுள்ள வர்ண வித்தியாசம் வெகு தெளிவாய்க் காணலாம்.

மலையுச்சியில் புயலடிப்பட்டு வளர்ந்த பாசம் துலக்கமான வெண்சிவப்பு நிறத்தையும், மிருதுத் தன்மையையும், முழு வடிவத்தையும் பெற்றிருந்தது. ஆனால் பாதுகாப்பான பள்ளத்தாக்கிலிருந்து எடுக்கப்பட்டதோ, மங்கிய இரும்புத் துரு நிறமாயும் சுரசுரப்பாயும், முழு வடிவமடையாததாயும் காணப்பட்டது.

அதிகக் கஷ்டம் அனுபவித்து தேற்றப்பட்ர்த கிறிஸ்தவனுடைய ஜீவியமும் இப்படித்தானே? கடவுளுடைய சுத்தத்தால் மாறி மாறிக் கஷ்டம் உண்டாகும்போது அவர்களது நற்குணங்கள் மங்கி அழிந்தாற்போல் இருக்கிறது. ஆனால் சோதனைகள் அவர்களுடைய தன்மையைச் சீர்ப்படுத்தித் துலக்கி அவர்கள் வாழ்க்கையைப் பிரகாசம் பொருந்தியதும் ஆசீர்வாதம் நிறைந்ததுமாக ஆக்குகிறது.

என் இதயத்தில் நான் அனுபவித்த துயரமே
எனக்குக் கிடைத்துள்ள அளவற்ற ஆசீர்
வாதங்களிலும் சிறந்ததாக இருக்கிறது.
எல்லாவற்றிற்காகவும் உம்மைத் துதிப்பேன்.

—ஹக்மக்மிலன்

## அக்டோபர் 2

'அவர் அவர்களைக் கூட்டிக்கொண்டு, தனித்திருக்கும்படி வனாந்தரமான ஒரு இடத்திற்குப் போனார்' (லூ. 9:10).

நற்குணத்தில் நாம் அதிகமதிகமாய் வளர நாம் அதிகம் தனித்திருக்கவேண்டும். நம்முடைய ஆத்துமா ஜனக் கூட்டத்தில் நல்ல வளர்ச்சி அடையாது. மற்றவர்களுடைய கூட்டுறவோடு அநேக நாட்களில் வளர்ச்சியடைவதைவிட ஒருமணி நேர தனி ஜெபத்தால் ஏற்படும் வளர்ச்சியே அதிகமாம். வனாந்தர வெளியில்தான் ஆகாயம் சுத்தமாயிருக்கும். சுத்தமான பனி அங்குதான் பெய்யும்.

1 நெருக்கத்தினால் களைத்திருக்கிறாய் என்று அறிவேன்.
தனியே வந்து சற்றுநேரம் இளைப்பாறு;
உன் முகத்திலிருந்து வியர்வையையும் தூசியையும்
துடைத்துப்போடு
என் அமைதியான பலத்தால் புதுப் பெலன் பெற்றுக்கொள்.

2 உலகம் அருமையாய் எண்ணுவதை விட்டுத் தனித்து வா
என்னோடும், என் பிதாவோடும் தனித்திருக்க,
நீ தனியாய் அல்ல, என்னோடும் என் பிதாவோடும்,
உலகம் அறியாத சம்பாஷணை செய்ய வா.

3 நீ செய்தவற்றையும் கூறியவற்றையும் என்னிடம் சொல்
உன் வெற்றி தோல்வியையும், நம்பிக்கை பயத்தையும் கூறு
ஆத்துமாவைக் கவருதல் எவ்வளவு கடினம் என்றறிவேன்
என்னுடைய அழகிய மாலைகளெல்லாம் கண்ணீரால்
நனைந்திருக்கும்.

4 நீ வந்து இளைப்பாறு; பிரயாணம் தூரமே,
வழியில் களிப்படைந்து விழுந்துவிடுவாய்.
ஜீவ அப்பம் நீ சாப்பிட இங்குண்டு.
நீ பருக அன்பாகிய ரசம் உண்டு.

5 ஆண்டவரோடு பேசி விட்டுத் திரும்பு.
பின்பு காலையிலிருந்து மாலைவரை உழை.
உன் ஆண்டவரைப்பற்றியும் பரம இளைப்பாறுதலைப்பற்றியும்
நீ படிக்கும் கொஞ்சம் வேளையும் வீணாக்காதே.

## அக்டோபர் 3

*'பூமி அதிர்ச்சிக்குப்பின் அக்கினி உண்டாயிற்று. அக்கினிக்குப்பின் மெல்லிய அமர்ந்த சப்தம் உண்டாயிற்று' (1 இரா. 19:12).*

ஆண்டவரை அறியும் அறவில் வெகு துரிதமாய் வளர்ச்சியடைந்த ஒரு பெண் இருந்தாள். அவளுடைய வளர்ச்சிக்குக் காரணத்தைக் கேட்டபொழுது, அவள், 'தடங்கல்களைக் கவனித்துக்கொள்ளுங் கள்' என்றாள். ஆண்டவரை நம்மில் அநேகர் அறியாதிருக்கிற தற்குக் காரணம் அவர் கொடுக்கும் சாதுவான, மெதுவான, தடங்கல்களைக் கவனியாதிருத்தலேயாகும். அவருடைய சப்தம் அமர்ந்த மெல்லிய சப்தம். ஒரு அமர்ந்த சப்தம் செவியில் விழுவது கடினமாம். ஆனால் அதை உணரத்தான்வேண்டும். காலையில் மெல்லிய காற்றுபோல் உன் இதயத்தை, ஏதோ ஒன்று வெகு லேசாய் அழுத்தும். ஒரு சிறு சப்தம் அமைதியாய் உன் இதயத்துள் பேசும். அதைக் கவனித்தால் உன் மனதின் செவிக்கு நன்றாய்க் கேட்கும். அவருடைய சப்தம் தம்மை நேசிக்கிறவர்களின் காதுக்கேற்ற சப்தமே. நேசம் தன் நேசரின் மெல்லிய சப்தத்தைக் கேட்கக் கூர்ந்து கவனித்திருக்கும். நாம் அதற்குப் பதிலளியாமல், அதை நம்பாமலிருந்தால் நேசம் பேசாதிருக்கும் வேளையும் உண்டு. அவரே நேசம். அவரை அறியவும், அவர் சப்தத்தைக் கேட்கவும் விரும்பி னால், அவர் மெதுவாய் உன்னைத் தொடுவதைக் கவனி, நீ சம்பாஷிக் கும்போது உன்னுடைய வார்த்தையைச் சொல்லுமுன் அவருடைய மெல்லிய சப்தத்தைக் கவனி. நீ பேசவேண்டாம் என்று தடுப்ப தைக் கவனித்துப் பேசாதிரு. ஒரு வழி உனக்குச் சரியாகவும், தெளி வாகவும் தோன்றுகிறதால்; நீ அதில் செல்ல எத்தனிக்கும்போது அமைதியாய் உன்னுள்ளத்தில் ஒரு எண்ணம் ஏற்படுகிறது. அது உறுதியாய் உண்டாகிறது. அதைக் கவனி. உன் திட்டத்தை மாற்றுவது முட்டாள் தனமாகத் தோன்றினாலும் அதைக் கவனி. தேவன்தமது திட்டத்தை காட்டும்வரைகாத்திரு, உனக்காய் தேவன் உன் உள்ளத்தில் திட்டங்களை உண்டாக்க இடங்கொடு. பின்பு அவரையே அந்தத் திட்டங்களைக்கொண்டு செலுத்திவிடு. ஏனென் றால் அவர் கொண்டு செலுத்தும் முறை அவர் போட்ட திட்டத் திற்கு மாறாகச் சில வேலைகளில் போவதுபோல் தோன்றும். அவரை நம்புவது மதியீனம்போல் தோன்றினாலும் நீ கவனித்து நம்பிக் கீழ்ப் படியவேண்டும். இறுதியில் அவர் எல்லாம் சேர்ந்து நன்மையாகும் படி செய்வார். ஆனால் ஆரம்பத்தில் அவர் செய்வது, தம் 'உலகிலே

அவர் நஷ்டப்பட்டாலும் பரவாயில்லை என்று செய்கிறார்' என்பது போல் தோன்றும்.

ஆகையால் நீ அவருடைய சத்தத்தை அறிந்தால் அதன் பலன்களை யர்வது அதில் ஏற்படக்கூடிய விளைவையாவது குறித்துச் சந்தேகி யாதே. அவர் உன்னை இருட்டில் செல்லச் சொல்லும்போது நீ கீழ்ப்படி. அவரே உன்னில் மகிமையான ஒளியாய் விளங்குவார். உன் உள்ளத்தில் நீ அவருக்கு அறிமுகமாகி அவரோடு சிநேக மாவாய். அப்போது அது கடூரமான சோதனையிலும் உன்னையும் அவரையும் பிரியாதபடி இணைத்துவைக்கும்.

## அக்டோபர் 4

*'கர்த்தர் யோபின் முன்னிலைமையைப் பார்க்கிலும் அவன் பின்னிலைமையை அதிகமாய் ஆசீர்வதித்தார்' (யோபு 24:12).*

யோபு தன் துக்கத்தின் மூலமாக அதிக சுதந்திரம் பெற்றான். அவனுடைய தெய்வ பக்தி விளங்கத்தக்கதாய் அவன் சோதிக்கப் பட்டான். எனக்கு வரும் துன்பங்களுள் என் குணநலத்தை உறுதி படுத்தி, என்னில் முன்பு காணப்படாத நற்குணங்கள் என்னை அலங்கரிக்கும்படி வருவன அன்றோ? கண்ணீர், மரணம், மறைவு இவற்றின் மூலமாகவே நான் மகிமையடைவேன். என்னுடைய கனிந்த பழங்கள் கரடுமுரடான சிலருக்கெதிராய் விளைகின்றன. யோபு துன்பம் அனுபவித்தான். அதனால் தேவனைக் குறித்து அதிக மேன்மையான எண்ணமும், தன்னைக் குறித்து வெகு தாழ்மையான எண்ணமும் கொண்டான். 'இப்போது என் கண்கள் உம்மைக் காண்கின்றன' என்றான்.

தேவனை கஷ்டங்களின்மூலம் நான் தலைவணங்கி, 'உம்முடைய சித்தம் ஆகக்கடவது' என்று ஜெபிக்கக்கூடியவாறு அவ்வளவு அருகில் தேவன் இருப்பதை உணர்ந்தால், நான் அதிக இலாபம் அடைந்தவனே. தேவன் வரப்போகிற மேன்மைகளின் காட்சியை யோபு காணச் செய்தார். தான் வருத்தப்பட்டுக் களைப்படைந் திருந்த நேரங்களிலும், பகல் நேரங்களிலும், திரையை நீக்கி அப்பால் பார்த்து, 'என் இரட்சகர் உயிரோடிருக்கிறார் என்பதை நான் அறிவேன்' என்று சொல்லக்கூடியவனானான். நிச்சயமாகவே அவனுடைய முன்னிலைமையைப் பார்க்கிலும் பின்னிலைமை ஆசீர் வாதமானதுதான்.

'தன் கையில் ஒரு துண்டுப் பொன் கொண்டுவாராமல் துன்பம் மனிதரிடம் வருவதில்லை.'

நாம் ஊழியம் செய்துகொண்டே பொறுமையாய்க் காத்திருப்போ மானால், வெளிக்குக் கஷ்டம்போல் தோன்றுவதும் முடிவில்

நன்மையாயிருக்கும். சிறந்த வெற்றி வீரர்கள் பயமின்றித் தைரியமாய் விடாமுயற்சியாய் ஊழியம் செய்திருக்கிறார்கள்! நாம் கஷ்டத்தை வரவேற்று அதைச் சகித்தாலன்றி பெறமுடியாத சில ஆசீர்வாதங்கள் உண்டு. பூலோக வெளிச்சம் மாறும்போது மாத்திரம் காணக்கூடிய பரலோக சத்தியங்கள் உண்டு. கலப்பையினால் உழுதபின்தான் பலன் கிடைக்கக்கூடிய அறுவடைகளுமுண்டு.

துன்பத்திலிருந்து வெகு ஊக்கமான ஆத்துமாக்கள் எழும்பியுள்ளன. வெகு உறுதியான குணநலம் படைத்தவர்கள் அநேக பாடனுபவித்தவர்களே. இரத்த சாட்சிகளின் கிரீடாபிஷேக வஸ்திரம் நெருப்பினால் மினுங்குகிறது. கண்ணீரின் வழியாகத்தான் துக்கிப்போர் முதன் முதலாகப் பரலோக வாசலைக் காண்கிறார்கள்.

உன் கழுத்தில் அணிந்திருக்கும் தங்கச்
சங்கிலியின் மினுக்கினாலும் பிரகாசத்தினாலும்
உன் இதயம் அமர்ந்து உறுதியாய் நேசிப்பதாலும்
நீ அனுபவித்த கஷ்டங்களை அறிகிறேன்.
உண்மையான இதயமே சதா ஜீவித்திரு
தங்கச் சங்கிலிகளே சதா ஒளிருங்கள்
உங்களைச் சுத்திகரித்த நெருப்பையும்
வேதனை கொடுத்த சூளையையும் ஆசீர்வதியுங்கள்.

## அக்டோபர் 5

அந்த ஆறு வற்றிப்போயிற்று' (1 இரா. 17:7).

நஷ்டத்திலும் கடவுளுடைய சித்தம் நிறைவேறுகிறது. தவறுதல்களிலும் பொருள் கஷ்டமாவதிலும் ஊழியம் நடைபெறுகிறது. வெறுமையும் ஒரு ஈவாகும் என்பதைக் கற்றுக்கொள்ளாவிட்டால் விசுவாசத்தின் பயிற்சி பூரணப்பட்டதாகாது. இவ்வுலகப் பொருள்களின் அநித்திய தன்மை ஆவிக்குரிய காரியங்களை உறுதியானவை என்று நிலைநாட்டுகிறது. ஆறு வற்றிக்கொண்டு வந்தது. எலியா அதனருகில் யோசனை செய்துகொண்டிருப்பது நம் ஒவ்வொருவரின் வாழ்க்கையையும் விஸ்தரித்துக் காண்பிப்பது போலிருக்கிறது.

'அந்த ஆறு வற்றிப்போயிற்று' அதுவே நம்முடைய வாழ்க்கையின் கடந்தகாலச் சரித்திரமும் வருங்காலத் தீர்க்கதரிசனமுமாய் இருக்கிறது. ஈவுகளைக் கொடுப்பவருக்கும் அவர் கொடுக்கும் ஈவுகளுக்கும் உள்ள வித்தியாசத்தை எப்படியாவது நாம் படித்தாகவேண்டும். ஈவு கொஞ்ச நேரமே நல்லதாகத் தோன்றும். ஆனால், அந்த ஈவுகளை ஆளுபவரோ மாறாத நித்திய அன்பின் சொரூபி.

எலியா கேரீத் ஆற்றண்டை இருக்கும்போது அவனுக்கு மனக்கஷ்டம் இருந்தது சாரிபாத் ஊருக்குப் போனபின் முன்பு விளங்கா

திருந்ததெல்லாம் அவருக்குத் தெளிவாயிற்று. தேவனுடைய கண்டிப்பான வார்த்தைகள் அவருடைய முடிவான வார்த்தைகளல்ல. வாழ்க்கையின் வருத்தங்களும் கஷ்டங்களும் கண்ணீரும் சிறிது காலமே. அவை வாழ்க்கையின் முடிவாகா.

எலியா சாரிபாத் ஊருக்கு முதலிலேயே அழைத்துச் செல்லப்பட்டிருந்தால், அவனை ஒரு ஞானம் நிறைந்த தீர்க்கதரிசியாகவும் நல்ல மனிதனுகவும் ஆக்கிய ஒரு அனுபவம் விடப்பட்டிருக்கும். அவன் கேரீத் ஆற்றண்டை விசுவாசத்தினுல் வாழ்ந்து வந்தான். வாழ்க்கையில் நமக்கு ஆதரவாக இருந்த ஒன்று இல்லாமற்போனுல் அது நம்முடைய நம்பிக்கையை வானத்தையும், பூமியையும் படைத்த தேவன்மீது வைக்குமாறு படிப்பிக்கவே என்றறிய வேண்டும்.

1 நீயும் எலியாவைப்போல் ஒரு ஆற்றண்டை தங்கிச்
சந்தோஷமாய் ஆத்தும தாகத்தைத் தணித்திருக்கலாம்
அந்த ஆறு வற்றிக்கொண்டு வருவதை நீ காணலாம்.

2 உன்னை மகிழ்வித்து ஆற்றித்தேற்றி வந்த ஆத்துமாக்களும்
தங்கள் அன்பை உன்மேல் அபரிமிதமாய் ஊற்றினவர்களும்
உன் மகிழ்ச்சி யாவும் உன்னைவிட்டு எடுபட்டுப்போக
நீ தனித்திருக்கலாம்.

3 அப்படி உன் இதயத்திற் கருமையான ஆறு
வற்றி உன் தாகத்திற் குதவாமலிருந்தால்
அதன் இனிய தண்ணீர் மறைந்துபோனுல்
அவரை உன் இதயத்துள் வரவிடு.

4 அவர் உன்னைக் கைவிடார்; ஏமாற்றமாட்டார்
அவரளிக்கும் ஆறுதல் என்றும் மாருது
மகிழ்ச்சி என்னும் தைலத்தால் உன்னை அபிடேகம் செய்து
உன் கண்ணீர்களைத் துடைப்பார். —ஜே. டி. ஸ்மித்

## அக்டோபர் 6

*'தம்முடைய வாயை அவர் திறக்கவில்லை'* (ஏசா. 53:7).

ஒருவர் நம் வார்த்தையையோ, செய்கையையோ, தப்பாக அர்த்தம் பண்ணிக்கொள்ளும்போது அதைத் தாங்க அதிகக் கிருபை வேண்டியதாயிருக்கிறது. ஒருவர் நம்மைப்பற்றிக் கெடுதலான காரியத்தைச் சொல்லும்போது அதை இன்முகத்தோடு ஏற்றுக்கொள்ள எவ்வளவு நல்லகுணம் வேண்டும். ஒரு கிறிஸ்தவனைப் பற்றித் தீதான காரியம் சொல்லப்படும்போது, அது அவனுக்குப் பெரிய சோதனையா யிருக்கிறது. இந்த உரைகல்லே நாம் சுத்தப் பொன்னு, அன்றி முலாம் பூசப்பட்டவர்களா என்று நிரூபிக்கும்.

சோதனைகளினால் நமக்கு வரும் நன்மைகளை, நாம் அறியக்கூடுமானால், சீமேயி தன்னைத் தூஷித்தபோது, தாவீது 'அவன் தூஷிக்கட்டும், கர்த்தர் இந்த நாளில் அவன் நிந்தித்த நிந்தனைகளுக்குப் பதிலாக எனக்கு நன்மையைச் சரிக்கட்டுவார்' என்று கூறியதைப் போல் சொல்லக்கூடியவர்களாவோம்.

சிலர் தங்கள் உன்னத ஊழியத்தைவிட்டு விலகி, தங்கள் கோபத்தையும், பகையையும் தீர்க்க வழிதேடி யலைகிறார்கள். ஆகையால், அவர்கள் வாழ்க்கை சதா சண்டை நிறைந்ததாகிவிடுகிறது. அவர்கள் வாழ்க்கை ஒரு குளவிகூடுபோல் இருக்கிறது. அந்தக் குளவிகளை ஒருவன் கலைக்கலாம். ஆனால், அவன் கொட்டப்படுவான், அதனால் அவனுக்கு ஒரு நன்மையும் ஏற்படாது. அதில் தேன் தானும் இருக்காது.

'தாம் வையப்பட்டபோது பதில் வையாமலிருந்த' அவருடைய ஆவியை ஆண்டவரே எங்களுக்கு மேன்மேலும் தாரும். 'அவர் நியாயமாய் நியாயந்தீர்க்கப்படாத தம்மை ஒப்புவித்தார்.' 'இவ்விதமாகத் தமக்கு விரோதமான பேச்சுக்களைச் சகித்தவரை நினைத்துப் பாருங்கள்.' —எ. பி. சிம்ப்ஸ்ன்

'உனக்கு முன்னால் அவர் கஷ்டப் பாதை எல்லாம் கடந்தார்
அவர் கடூரமான பேச்சைக் கேட்டுத் தலைகுனிந்தார்.
அவர் அதிகப் பாடுகளையும், துக்கத்தையும், சஞ்சலத்தையும் அறிந்தார்;
அவர் விடுதலை இல்லாமல் வெகுநாள் சகித்திருந்தார்
மரணப் பாத்திரத்திலிருந்த கசப்பைப் பருகினார்
அவருடைய ஒவ்வொரு சொட்டு இரத்தத்தையும் சிந்தினார்
'உனக்கு முன்னால்' உனக்காகப் போரில் ஜெயம் பெற்றார்
உன்னை மகிமையான இராச்சியத்திற்குக் கொண்டுவரவே அப்படிச் செய்தார்.

## அக்டோபர் 7

'உங்களில் எவன கர்த்தருக்குப் பயந்து, அவருடைய தாசனின் சொல்லைக் கேட்டு நடப்பான்? எவன் தனக்கு வெளிச்சமில்லாததினால் இருட்டிலே நடக்கிறானே, அவன் கர்த்தருடைய நாமத்தை நம்பித் தன் தேவனைச் சார்ந்துகொள்ளக் கடவன்' (ஏசா. 50:10).

கலக்கம், சந்தேகம் என்னும் இருள் மனதில் உண்டாகும்போது விசுவாசி என்ன செய்யக்கூடும்? விசுவாசித்துக் கடவுளுடைய சித்தத்திற்குக் கீழ்படிந்து நடப்பவர்களுக்கும் இருள் உண்டாகிறது. அவர்களுக்குச் சில சமயங்களில் என்னசெய்வது, எங்குத் திரும்புவது என்று தெரியவில்லை. ஆகாயம் மேகத்தால் மூடப்பட்டிருக்கிறது. அவர்கள் பாதையைக் காண்பதற்குப் பரலோக வெளிச்சம் வீசவில்லை. அவர்கள் இருட்டில் பாதையைக் காண்பதற்குத் தடவிக்

கொண்டிருப்பதுபோல் அவர்களுக்குத் தோன்றுகிறது. அன்பனே! உன் நிலைமை அப்படிப்பட்டதாய் இருக்கிறதா? விசுவாசி இருளான சமயத்தில் என்ன செய்யலாம்? கவனியுங்கள்! 'அவன் கர்த்தருடைய நாமத்தை நம்பித் தேவனைச் சார்ந்துக்கொள்ளக்கடவன்.'

முதலில் செய்யவேண்டுவது ஒன்றும் செய்யாதிருத்தலே. இது மனித இயற்கைக்குக் கஷ்டமான காரியமே. மேற்கு நாடுகளில் ஒரு பழமொழி உண்டு. அது பின்வருமாறு, 'உன்னை யாரும் துரிதப் படுத்துகையில் நீ அவசரப்படாதே' என்பதே. அதாவது, 'உனக்கு என்ன செய்வதென்று தோன்றாதிருக்கையில் ஒன்றும் செய்யாதே' என்பதாம்.

ஆவிக்குரிய மூடுபனி உன் முன்னால் நிற்குங்கால் அதற்குள் விரைந்து செல்லாதே. உன் வாழ்க்கை ஓட்டத்தைச் சற்றுத் தாமதித்து ஓடச்செய். அவசியமானால் உன் கப்பலுக்கு நங்கூரம் பாய்ச்சி நிற்கச் செய். நாம் கர்த்தரையே நம்பிக்கொண்டிருக்க வேண்டும். நாம் நம்பிக்கையோடிருக்கையில்தான் தேவனால் கிரியை செய்யமுடியும். நம்முடைய கல் அவருடைய வேலைக்குத் தடங்க லாகும். நமது மனது கலங்கி, நமது இதயம் துக்கிக்குமானால் நமக்கு மேலிருக்கும் இருள் நமக்குப் பயத்தை உண்டாக்குமானால், தேவன் தமது சித்தத்தின்படி, நம்மை வைத்திருக்கின்ற சோதனை நிறைந்த இருண்ட இடத்தைவிட்டுத் தப்ப வீண்முயற்சி எடுத்து நாம் அங்கும் இங்கும் அலைந்தால் ஆண்டவர் நமக்காக ஒன்றும் செய்யமுடியாது.

தேவனுடைய சமாதானம் நம்முடைய மனதைச் சாந்தப்படுத்தி, நம்முடைய இதயத்தை அமர்ந்திருக்கச் செய்யவேண்டும். நாம் ஒரு சிறு பிள்ளையைபோல் நமது கரத்தை அவர் கரத்துள் வைத்து, அவருடைய அன்பாகிய பிரகாசத்துக்குள் நம்மை வழிநடத்திவிட வேண்டும்.

அவருக்குக் காட்டிலிருந்து வெளியேறும் வழி நன்றாய்த் தெரியும். நாம் அவருடைய கரத்துள் ஏறி உட்கார்ந்துகொண்டு, நிச்சயமான குறுக்கு வழியில் வெளியே கொண்டு செல்வார் என்ற நம்பிக்கையோ டிருக்கவேண்டும்.

—டாக்டர் பாடிஸ்டன்

நமக்கு கப்பலைச் செலுத்தத் தெரியாதிருக்கையில் நமக்கருகில் மாலுமி இருக்கிறார் என்பதை அறிந்துகொள்ளவேண்டும்.

1 உன் நம்பிக்கையில் உறுதியாய் நில்—
முடிவுபரியந்தம் நிலைநிற்பவனே கிரீடத்தைப் பெறுவான்.
புயல்காற்று வீசுகையில் நங்கூரத்தை
எடுத்துவிடுகிறவன் ஆழ்ந்து போவான்
இயேசுவைப் பிடித்திருக்கிறவன்
உலகும் வானும் வீழ்ந்தாலும் விழான்.

2 உறுதியாய் நில், உன் துக்கத்திற்கு இறுதி உண்டு.
தூசியிலிருந்து நம்பிக்கை வெற்றிகரமாய் எழும்பும்.
புயல் பின்வரும் கோடையை அறிவிக்கிறது.
சிலுவை பரதீசிக்கு வழிகாட்டும்.
நமது பிதா ஆளுகிறார், என்பதைச் சந்தேகியாதே,
என் இதயமே, உறுதியாய்ப் பற்றி நில்!

## அக்டோபர் 8

'நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாதிருங்கள்' (பிலி. 4:6).

அநேகக் கிறிஸ்தவர்கள் ஓயாது கவலையோடிருக்கிறார்கள். வாழ்க்கையையும் அவ்வாறே நடத்துகிறார்கள். வேறு சிலர் கலங்கித் தவிக்கிறார்கள். அன்றாட ஜீவியத்தின் அல்லல் தொல்லைகளின் மத்தியில் சமாதானமாய் இருப்பதின் இரகசியத்தை அறிவது அவசியம். கவலைப்படுவதினால் பிரயோஜனம் என்ன? கவலை ஒருவனையும் பலசாலியாக்கினதில்லை. அது தேவனுடைய சித்தத்தை நிறைவேற்ற உதவுகிறதில்லை. கவலைக்கிடமான நிலைமையிலிருந்து தப்ப நமக்கு உதவிபுரியாது, கவலை அதிக அழகான பயனுள்ளதான வாழ்க்கையைக் கெடுக்கிறது. 'என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம், என்னத்தை உடுத்துவோமென்று கவலைப்படாதிருங்கள்' என்று சொன்னவர், கவலை, கலக்கம், சந்தேகம் கூடாவென்று கண்டிப்பாய்க் கூறுகிறார். முன் யோசனையுள்ளவர்களாய் நாம் ஒரு திட்டப்படி வாழ்க்கை நடத்தவேண்டாமென்று அவர் சொல்லவில்லை. அவைகளைக் குறித்து கவலைப்படவேண்டாம் என்றுதான் சொல்லுகிறார். உன் கவலைச் சுருக்குகள் நிறைந்த முகத்தைப்பார்த்து, உற்சாகமில்லாத வாழ்க்கையினால், உண்டாகும் உன் தாழ்ந்த சப்தத்தைக் கேட்டு, ஜனங்கள் நீ கவலை என்னும் இராஜ்ஜியத்தில்தான் வாழ்கிறாய் என்று அறிந்துகொள்வார்கள். தேவனுக்கு ஒப்புக்கொடுத்த வாழ்க்கை என்னும் உயர்ந்த இடத்திற்கு ஏறிவா. அப்போது உன் காலடியிலுள்ள மேகத்தை நீ அற்பமாய் எண்ணுவாய். —டாலோ சார்ஜன்ட்

கவலைப்பட்டுக்கொண்டு அவநம்பிக்கைக்கொண்டு, அலப்பிக்கொண்டிருப்பது உன் பலவீனத்தைக் காட்டுகிறது. அதனால் நமக்கு ஒரு இலாபமும் வரப்போகிறதில்லை. நாம் அதனால் ஒன்றும் செய்ய இயலாதவர்களாகிறோம். நம்முடைய மனது ஒரு ஞானமான தீர்மானத்திற்கு வர்முடியாது போகிறது. விசுவாசத்தினால் மிதந்துகொண்டிருக்கவேண்டிய நாம், நமது கவலை கஷ்டங்களினால் அமிழ்ந்துபோகிறோம்.

அமர்ந்திருக்க கிருபை பெறவேண்டும். அமர்ந்திருந்து ஏகோவாவே தேவன் என்று அறிதல் எவ்வளவு மேன்மையானது. இஸ்ரவேலரின்

பரிசுத்தர், தமக்குரியவர்களுக்காகப் போரிட்டுக் காப்பாற்றுவார். மலைகள் பெயர்ந்துபோனாலும், அவருடைய வார்த்தை நிலைநிற்கும் என்பதை நிச்சயமாய் நம்பு. அவர் நம்பிக்கைக்குப் பாத்திரர்தான் வா! என் ஆத்துமாவே! உன் இளைப்பாறுதலுக்குத் திரும்பு. இயேசு வின் மடியில் நன்றாய்ச் சாய்ந்துகொள்.

'நீ அமர்ந்து படுத்திருந்தால் சமாதானம் உன் இதயத்தை நிரப்பும்.'

## அக்டோபர் 9

'ஆகையால் உங்களுக்கு இரங்கும்படி கர்த்தர் காத்திருப்பார்' (ஏசா. 30:18).

எங்கே மழை அதிகமாய் விழுகிறதோ 'அங்கே அழகான பச்சைப் புல் வளருகிறது. அயர்லாந்து தேசத்தில் பனியும், மூடுபனியும் விழுவதால்தான், அது 'மரகதத் தீவு' என்றழைக்கப்படத்தக்கதாய்ச் செழித்துப் பச்சையாயிருக்கிறது. உங்கள் வாழ்க்கையில் துன்ப மாகிய வெம்பாவும் துக்கமாகிய மூடுபனியும் உண்டாகும்போது, ஆறுதலும் தெய்வ அன்பும் நிறைந்த மரகதப் பச்சையான இருத யங்களைக் காண்பீர்கள். 'தகைவிலான் குருவிகள் எங்கே போயின' என்று கிறிஸ்தவனே! நீ சொல்லாதே! அவைகள் மடிந்துபோக வில்லை. அவை இருண்ட சமுத்திரத்தைத் தாண்டித் தூரதேசத் திற்குப் போயிருக்கின்றன. சீக்கிரம் திரும்பிவந்து சேரும். தேவ னுடைய பிள்ளையே, பூக்கள் மடிந்துபோயினவென்றும், குளிர்காலம் அவைகளைக் கொன்றுபோட்டது என்றும் எண்ணாதே. அப்படியல்ல, பனி அவற்றின்மேல் வெண்பட்டை விரித்து மூடியிருக்கிறது. அவைகள் திரும்பத் தங்கள் தலையைத் தூக்கும். சீக்கிரம் முன்போல் உயிரோடிருக்கும். தேவனுடைய பிள்ளையே, மேகம் சூரியனை மறைத்திருக்கும்போது சூரியன் அணைக்கப்பட்டதென்று சொல் லாதே. அப்படியல்ல, அது மேகத்திற்குப் பின்னால் இருக்கிறது. உனக்காக கோடை காலத்தை உண்டுபண்ணிக்கொண்டிருக்கிறது. அது வெளிவரும்பொழுது மாதத்து இனிய பூக்களின் தாயாகிய மேகத்தை மழையாகப் பொழியச்செய்யும். எல்லாவற்றிற்கும் மேலாகத் தேவன் தமது திருமுகத்தை உனக்கு மறைக்கும்போது அவர் உன்னை மறந்தார் என்று சொல்லாதே. உன்னைத் தம்மை அதிகமாய் நேசிக்கச் செய்யவே, அவர் சற்றுத் தாமதிக்கிறார். அவர் திரும்ப வரும்பொழுது சொல்லமுடியாத ஆனந்தத்தால், ஆண்டவரில் நீ களிகூருவாய். காத்திருத்தல் நமது நற்குணத்தைப் பலப்படுத்தும். காத்திருத்தல் நமது விசுவாசத்தைச் சோதிக்கும். ஆகையால், நம்பிக்கையோடு காத்திரு. வாக்குத்தத்தம் நிறை வேறத் தாமதமானாலும் வேண்டிய வேளைக்குப் பிந்தாது.

—சி. எச். ஸ்பர்ஜன்

1 ஒவ்வொரு வருஷமும் குளிர்காலமுண்டு.
ஒவ்வொரு ஆண்டிலும் மழை காலமுண்டு.
ஆனால் பட்சிகள் வடக்கு நோக்கித் திரும்பி வரும்
காலம் எப்போதும் வந்தே தீரும்.

2 மரங்களில் புதுத்தளிர் தோன்றும்,
பச்சைப்புல் வெளியில் முளைக்கும்;
பட்சிகள் புது அழகு பெற்று,
வடக்கு நோக்கிச் செல்லுங் காலம் வரும்.

3 ஒவ்வொருவருக்கும் துக்கிக்கும் காலமுண்டு.
இதயம் வேதனை அனுபவிக்கும்.
ஆனால் பட்சிகள் வடக்கே செல்லும்,
காலம் எப்படியும் வந்தே தீரும்.

4 மனமடி வடையும் காலத்தில்,
குளிரும், இரவும் விலகியபின்,
பட்சிகள் வடக்கே செல்லும்,
என்ற எண்ணம் இனிமையாயிருக்கும்.

## அக்டோபர் 10

'எரிச்சலடையாதே' (சங். 37:11).

'களவு செய்யாதிருப்பாயாக' என்பதுபோல் இதுவும் ஒரு தெய்வீகக் கட்டளையே. எரிச்சலடைவதென்றால் என்னவென்று பார்ப்போம். 'மேலே சுரசுரப்பாக்கப்படுதல்', 'தேய்க்கப்பட்டுக் கழிந்துபோகுதல்' என்ற பொருள்களைக் கூறலாம். தப்புக் கண்டு பிடித்துக்கொண்டே இருக்கும் கோப முகங்கள் தாங்கள் தேய்ந்து போகிறது மாத்திரமல்ல, மற்றவர்களையும் தேய்ந்துபோகச் செய்கின்றன. கோபப்படுவதே எரிச்சலடைவதாகும். இந்தச் சங்கீதத்தில் 'கொடுமை செய்கிறவர்களைக் குறித்து எரிச்சலடையாதே' என்று மாத்திரமல்ல, 'எதற்கும் எரிச்சலடையாதே' என்று சொல்லியிருக்கிறது. அது நம்மை நாமே கெடுத்துக்கொள்ளத் தேவன் விரும்புகிறதில்லை.

ஒருமுறை கோபப்படுவது காய்ச்சலைவிட, உடலுக்கு அதிக சேதம் உண்டாக்குகிறதென்று வைத்தியர் சொல்வர். எரிச்சலடையும் குணம் தேக சுகத்திற்கு ஏற்றதாகாது. வேறு விதமாகவும் அது நம்மைப் பாதிக்கிறது. எரிச்சலடைந்தால் பின்பு சிடுசிடுப்பு உண்டாகிறது. அது கோபப்படுவதாகும். இந்தக் காரியத்தை ஒரு ஒழுங்குக்குக் கொண்டுவரவேண்டும். எரிச்சலடையாதே என்ற கட்டளைக்குக் கீழ்ப்படியவேண்டும். —மார்கரட் போத்தமீ

## தோட்டத்தில் கேட்டது

சிட்டுக்குருவி அடைக்கலான் குருவியைப் பார்த்து, 'கவலை நிறைந்து, இந்த மானிடர்கள் ஏன் அங்கும் இங்கும் அலைகிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை' என்றது. அடைக்கலான்குருவி சிட்டுக்குருவியைப் பார்த்து, 'உனக்கும் எனக்கும் கவலைப்பட ஒரு பரமபிதா இருப்பதுபோல் அவர்களுக்கு இல்லை' என்று நான் எண்ணுகிறேன்' என்றது. —எலிசபெத்து செஞய்

## அக்டோபர் 11

'சாகிறவர்கள் என்னப்பட்டாலும் உயிரோடிருக்கிறவர்களாகவும்' (2 கொ. 6:9).

கிராமத்தில் உள்ள என் தோட்டத்தில் நான் ஒரு பாத்தி ஆஸ்டர் என்ற செடிகளை வைத்தேன். காலம் சற்று பிந்திற்று. முந்தின பூக்கள் விதையோடும், பக்கத்துப் பூக்கள் அப்போதுதான் மலர்ந்து கொண்டுமிருக்கையில் பனிவிழ ஆரம்பித்தது. ஒருநாள் அந்த அழகிய செடிகள் பூராவும் அழிந்துபோயிருப்பதைக் கண்டேன். நான் அதைப் பார்த்து, 'இந்தக் குளிரை அவைகளால் தாங்க முடியவில்லை. ஆகையால் அழிந்துபோயின' என்று எண்ணினேன். அந்தப் பாத்தியைப் பார்க்கவும் எனக்கு மனம் ஒப்பவில்லை. அது அந்த அழகிய பூக்களின் கல்லறைபோல் தோன்றிற்று.

சில வாரங்களுக்குமுன் என் வேலையாட்கள் அந்த பாத்தி முழுவதிலும் ஆஸ்டர் செடிகள் ஏராளமாய் முளைத்திருப்பதைக் காண்பித்தார்கள். நான் அதைப் பார்த்தபோது குளிர்காலத்தினால் அழிக்கப்பட்ட ஒவ்வொரு செடிக்கும் பதிலாக ஐம்பது செடிகள் முளைத்திருப்பதைக் கண்டேன். குளிரும் கடுங்காற்றும் சேர்ந்து என்னதான் செய்தன.

பூச்செடிகளின் வகையில் உள்ளவாறே தேவனுடைய இராஜ்ஜியத்திலும் நடக்கிறது. சாவினால் நித்திய ஜீவன் உண்டாயிற்று. சிலுவையில் அறையுண்டதாலும், கல்லறையில் வைக்கப்பட்டதாலும், சிம்மாசனமும் நித்திய தேவனில் அரண்மனையும் கிடைத்தன. மேற்கொள்ளப்பட்டதால் வெற்றியுண்டாயிற்று.

கஷ்டப்படப் பயப்படாதே, மேற்கொள்ளப்படவும் பயப்படாதே.

கீழே தள்ளப்பட்டு, அழிக்கப்படுபவதாலும், துண்டு துண்டாகக் கிழிக்கப்படுவதாலும், மனிதன் பலவானாகவும் ஒருவன் ஒரு சேனை வீரனாகவும் கூடும். ஆனால் உலகப்பொருளின் தோற்றத்தைக் கண்டு, அதற்கு இடங்கொடுத்து அதோடு ஒத்துப்போகிறவர்கள், சீக்கிரம் தங்கள் பலனை அடைந்து செழித்திருப்பார்கள். பின்பு அவர்கள் முடிவு நித்திய முடிவே.

அவை என் பூக்களை அழித்தன, அவற்றை நிலத்தில் போட்டு மிதித்தன. தம் வேலையை முடித்துவிட்டு 'இது உன் முடிவு' என்று சொல்லிச் சென்றன. ஆனால் அடுத்த வசந்தகாலம் வந்தவுடன் ஒவ்வொரு வேரிலிருந்தும் ஐம்பது செடிகள் தோன்றி மரத்தினால் நாம் வாழ்கிறோம் என்று கூறுகின்றன. —பிச்சர்

உன் வாழ்க்கையை நீ அடைந்த லாபத்தாலல்ல நஷ்டத்தைக் கொண்டு அளவிடு.

நீ குடித்த பானத்தின்படியல்ல, நீ கொடுத்த பானத்தின்படி அளவிடு.
அன்பின் உறுதி பிறருக்குக் கொடுப்பதினால்தான் உண்டு.
பாடனுபவிப்பவனே, மற்றவர்களுக்கு அதிகம் கொடுக்கக் கூடியவன்.

## அக்டோபர் 12

'யோசேப்பின் எஜமான் அவனைப் பிடித்துச் சிறைச்சாலையிலே அவனை ஒப்புவித்தான் . . . கர்த்தரோ யோசேப்போடே இருந்தார் . . . அவன் எதைச் செய்தானோ அதைக் கர்த்தர் வாய்க்கப்பண்ணினார்' (ஆதி. 39:20—23).

நாம் தேவனுக்காக உழைத்ததற்காக நம்மைச் சிறைச்சாலைக்குள் போகவிட்டால், தாமும் நம்மோடு வருகிறார். அப்போது சிறையே உலகில் நமக்கு அதிக பாக்கியமான இடமாகிறது. யோசேப்புக்கு அது தெரிந்திருந்ததுபோல் தோன்றுகிறது. எல்லாம் அவனுக்கு விரோதமாக திரும்பினபோதும், அவன் மனமடிவாகித் தைரியமிழந்து கோபப்படவில்லை. அவன் அப்படியிருந்திருந்தால், சிறைச் சாலைக் காவலாளி அவனை நம்பியிருக்கமாட்டான். யோசேப்பு தன் கதிக்காக வருந்திக்கொண்டிருந்ததாகக்கூடத் தெரியவில்லை.

நம்முடைய நிலைமையைக்குறித்து நாமே பரிதாபப்படுவோமானால் அதுவே நமக்கு முடிவாகும். அதை நம்மைவிட்டு முற்றிலுமாய் அகன்றுபோகச் செய்யவேண்டும். யோசேப்பு தன் வருத்தங்களையெல்லாம் சந்தோஷமாய் கர்த்தர்மேல் நம்பிக்கையாய் ஒப்புவித்தான், ஆகையால் சிறைச்சாலைத் தலைவன் எல்லாவற்றையும் அவனிடம் ஒப்புவித்தான். சிறைச்சாலைக் கதவுகள் என்னை உள்ளே விட்டு அடைக்கும்போது, தேவனே நான் உம்மேல் நம்பிக்கையாயிருக்கவும், நான் நிறைந்த சந்தோஷமுள்ளவனாய் இருக்கவும் உதவிசெய்யும். சிறையிலும் என் மூலமாய் உம் ஊழியம் நன்றாய் நடக்கச்செய்யும். அங்கேயும் என்னைச் சுயாதீனனாய் இருக்கச் செய்யும்.

1 சிறிய பறவையான யான்,
பரந்த வெளியிலிருந்து அடைப்பட்டிருக்கிறேன்.
என் கூட்டில் உட்கார்ந்து கொண்டு,

என்னை அங்கு வைத்தவரை நோக்கிப் பாடுவேன்,
என் தேவனே அது உமக்கிஷ்டமானதால்,
இன்பமாய் என் சிறையை அனுபவிப்பேன்.

2 என் கூடு என்னை அடைத்திருக்கிறது,
நான் வெளியே பறந்து செல்லமுடியாது.
என் செட்டை நன்றாய்க் கட்டப்பட்டிருக்கிறது,
என் ஆத்துமா கட்டப்பட்டு இல்லை.
ஏனென்றால் சிறைச்சாலைச் சுவர்கள்,
ஆத்துமாவின் சுயாதீனத்தைக் கட்டுப்படுத்த முடியாது.

'நான் இருளை நேசிக்கக் கற்றுக்கொண்டேன்; அங்கே தேவனுடைய முகப்பிரகாசத்தைக் காணலாம்.' —மேடம் கயர்ன்

## அக்டோபர் 13

'நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாதிருங்கள்' (பிலி. 4:6).

விசுவாசியினிடத்தில் யாதொன்றைப்பற்றியும் கவலை இருக்கக் கூடாது. நம்முடைய சோதனைகள், வருத்தங்கள், கவலைகள், கஷ்டங்கள் பலவகைப்பட்டிருக்கலாம். அநேகமாயிருக்கலாம். என்றாலும், எந்த நிலைமையிலும் கவலைக்கு இடங்கொடுக்கக் கூடாது. ஏனென்றால் பரலோகத்தில் ஒரு தகப்பன் இருக்கிறார். அவர் சர்வ வல்லவர். தம்முடைய பிள்ளைகளைத் தம்முடைய ஒரே பேறான குமாரனை நேசிப்பதுபோல் நேசிக்கிறார். அவருக்கு எல்லாக் காலங்களிலும், எந்த நிலைமையிலும் அவர்களைக் காப்பாற்றுவதே சந்தோஷம். 'ஒன்றுக்கும் கவலைப்படாதிருங்கள்' என்ற வார்த்தைகளை ஊன்றிக் கவனித்துப் பாருங்கள். 'நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாமல் எல்லாவற்றையும் குறித்து, உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடு கூடிய ஜெபத்தினாலும் வேண்டுதலினாலும் தேவனுக்குத் தெரியப்படுத்துங்கள்' என்றிருக்கின்றது.

'எல்லாவற்றிலும்' வீடு தீப்பற்றி எரியும்போது மாத்திரமல்ல, அன்பான மனைவியையும், பிள்ளைகளையும் சாகக்கொடுக்கும்போது மாத்திரமல்ல, வாழ்க்கையின் வெகு அற்பமான காரியத்திலும், நம்முடைய பரமபிதாவோடும் அருமையான இயேசுவோடும், நாள்பூராவும் பரிசுத்த ஐக்கியத்திலிருக்கவேண்டும். இரவில் விழிக்கும்போது அவர் முகமாய்த் திரும்பி, குடும்பக் கஷ்டம், தொழிலிலுள்ள கஷ்டம் இவைகளைக் குறித்து அவரோடு பேச வேண்டும். நமக்குக் கஷ்டம் கொடுக்கும் எல்லா விஷயத்தைக் குறித்து நாம் அவரோடு பேசவேண்டும்.

'ஜெபத்தினாலும், வேண்டுதலினாலும்' பிச்சைக்காரர்போல் ஊக்கமாக விடாமுயற்சியாக கர்த்தருக்காகக் காத்துக் கிடக்க வேண்டும்.

'ஸ்தோத்திரத்தோடே' ஸ்தோத்திரத்தோடு நாம் நல்ல அஸ்திவாரம் போடவேண்டும். எல்லாம் நமக்கு இல்லாமற்போனலும், அவர் நம்மை நரகத்திற்குப் போகாமல் காப்பாற்றுகிருர் என்பதை எண்ணவேண்டும். அவர் நமக்குத் தமது பரிசுத்த வசனங்களைக் கொடுத்துள்ளார். எல்லாவற்றிற்கும் மேலாகத் தமது குமாரனை ஈவாகக் கொடுத்துள்ளார். பரிசுத்த ஆவியைக் கொடுத்துள்ளார். ஆகையால் நமக்கு ஸ்தோத்திரம் செலுத்த ஏராளமான காரியங்கள் உண்டு. இதையே நோக்கமாகக் கொள்வோமாக!

'அப்போது எல்லாப் புத்திக்கும் மேலான தேவ சமாதானம் உங்கள் இருதயங்களையும் உங்கள் சிந்தனைகளையும் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகக் காத்துக்கொள்ளும்' இது பெரிய ஆசீர்வாதம். இது உண்மையான ஆசீர்வாதம். விலையேறப்பெற்ற இந்த ஆசீர்வாதத்தை அறியவேண்டும். இதை அனுபவித்தறியவேண்டும். ஏனென்ருல், இது எல்லாப் புத்திக்கும் மேலானது. இவைகளை நமது இதயத்திற்குள் வைத்துக்கொள்வோமாக. இதன் பயனுக இந்த ஆவியிலே நடப்போமென்ருல், நாம் இதுவரை செய்ததைவிட அதிகமாய்த் தேவனை மகிமைப்படுத்தலாம்.

உன் இதயம் ஏதாவது ஒன்றைக்குறித்து அமைதியற்றிருக்கிறதா என்று ஒரு முறை அல்லது இரண்டுமுறை சோதித்துப் பார்த்து அதை அமைதிக்குக் கொண்டுவரக் கவனமாயிரு.

—மார்ன்கிஸ் டீ சேல்ஸ்

## அக்டோபர் 14

'அப்பொழுது கர்த்தருடைய தூதன் அங்கே வந்து நின்ருன்; அறையிலே வெளிச்சம் பிரகாசித்தது. அவன் பேதுருவை விலாவிலே தட்டி, சீக்கிரமாய் எழுந்திரு என்று அவனை எழுப்பினுன். உடனே சங்கிலிகள் அவன் கைகளிலிருந்து விழுந்தது' (அப். 12:7). நடுராத்திரியிலே பவுலும் சீலாவும் ஜெபம்பண்ணி தேவனைத் துதித்துப் பாடினுர்கள். சடுதியிலே சிறைச்சாலையின் அஸ்திவாரங்கள் அசையும்படி பூமி மிகவும் அதிர்ந்தது. உடனே கதவுகளெல்லாம் திறவுண்டன. எல்லாருடைய கட்டுகளும் கழன்றுபோயின (அப். 16:25,26).

இதுவே தேவனுடைய வழி. இரவில் மகா இருண்ட வேளையில் அவர் பாதங்கள் கடலின்மேல் நடந்து நமது அருகில் வரும். சிரச்சேதம் பண்ணப்படவேண்டிய நாள் விரையப்போகிறது. பேதுருவின் சிறைக்குத் தேவதூதன் வருகிருன். மொர்தெகாயின் தூக்குமரம் தயாராயிற்று. அரசனின் தூக்கமின்மை நேசிக்கப்பட்ட ஜாதியாருக்குச் சார்பாய் அவனை நடக்கச் செய்கிறது.

ஆத்துமாவே, நீ மீட்கப்படுமுன் வெகு கஷ்டம் அனுபவிக்கலாம். ஆனல் நீ இரட்சிக்கப்படுவாய். தேவன் உன்னைக் காத்திருக்கச் செய்யலாம். ஆனல் அவர் தம் உடன்படிக்கையைக் கவனித்திருப்பார். மாருத தம் வார்த்தையை நிறைவேற்ற வெளிப்படுவார்.

—எப். பி. மேயர்

தேவன் தமது திட்டத்தைச் செய்யும்முறை சாதாரணமா யிருக்கும். ஆயினும் எல்லாக் கஷ்டத்திற்கும் ஈடு அதில் உண்டு. தம்மை நம்பும் பிள்ளைக்கு மாறுத சத்தியம் அதில் உண்டு. தம் நோக்கத்தை நிறைவேற்றும் விடாப்பிடி அதில் உண்டு. முதலில் உடன் இருந்த சிறை வாசியின் மூலமும், பின்பு ஒரு சொப்பனத்தின் மூலமும் யோசேப்பை அவர் ஒரு சிறையிலிருந்து பிரதம மந்திரி உத்தியோகத்திற்கு உயர்த்துகிறுர். அவன் அதிக காலம் சிறையி லிருந்ததால் அவன் பிரதம மந்திரியானபோது பெருமையாய் அவன் தலை திரும்பித் திரியவில்லை. ஆண்டவருடைய திட்டத்தைப் பார்த்து அவருடைய முறைப்பிரகாரம் செல்லுவதுதான் சரி.

—எஸ். டி. கார்டன்

தெய்வ சித்தம் கடுமையான கட்டத்திலிருக்கும் தம் பிள்ளையை இரட்சிக்க, ஆயிரம் கதவுகளைத் திறக்க ஆயிரம் திறவுகோலை யுடையதாயிருக்கிறது. நாம் அவருக்கு உண்மையாயிருப்போமாக. அவருக்காகப் பாடுபடும் நமது பங்கைக் கவனித்துக்கொண்டு, கிறிஸ்துவின் பங்கை அவர் செய்யுமாறு விட்டு விடவேண்டும்.

—ஜார்ஜ் மெக்டனல்ட்

ஒரு கஷ்டமான நிலைமையே அற்புதம் நிகழக்கூடிய ஒரு சந்தர்ப்பமுமாகும். அற்புதம் ஏற்படும் முதல் நிலை கஷ்டமே. ஒரு பெரிய அற்புதம் நிகழ்வதாக இருந்தால் அதற்கு முன்னுள்ள நிலைமை கஷ்டமானது என்றல்ல, முடியாது என்றே கருதக்கூடிய தாக இருக்கும்.

அதிகக் கஷ்டமான கட்டத்திலும் அவருடைய பிள்ளை அவர் கரத்தைப் பிடித்துத் தொங்கும்போது அவருக்கு அது அளவு கடந்த சந்தோஷத்தை அளிக்கிறது.

## அக்டோபர் 15

'நொறுக்கப்படுவதினுல் அவர்கள் தூயமையாக்கப்படுகிறுர்கள்' (யோபு 41:25).

நன்ருய் நொறுக்கப்பட்ட பொருள்களையும் ஜனங்களையுமே தேவன் தமக்கு மகிமையுண்டாகப் பயன்படுத்துகிறுர். அவர் ஏற்றுக்கொள்ளும் பலி நொறுங்குண்ட நருங்குண்ட இதயங்களே யாகும். யாக்கோபின் இயற்கைப் பலன் பெனியேலில் அற்றுப் போனதினுல், ஆவிக்குரியவன்மை கிட்டக்கூடிய இடத்திற்குச் சென்ருன் (ஆதி. 32:23–30). மோசேயின் கோலால் ஒரேப் மலையின் பகுதி உடைக்கப்பட்டதினுல்தான் தாகத்தினுல் வருந்திய ஜனங்களுக்குத் தண்ணீர் ஓடிவந்தது (யாத். 17:6).

கிதியோனேடு வந்த தெரிந்துகொள்ளப்பட்ட 300 வீரரும் தங்களையே நொறுக்கிக்கொள்வதுபோல் பானைகளை உடைத்த

போதுதான். பகைஞரைக் கலங்கச்செய்த ஒளி வீசியது (நியா. 7:30). அந்த விதவை தன் சிறிய எண்ணெய்க் குடத்தை மூடியிருந்த மூடியை உடைத்துத் திறந்து ஊற்றினபோது, தேவன் அதைக்கொண்டு கடன்களைத் தீர்த்துச் சாப்பாடு வாங்கிக்கொள்ளத் தக்கதாய் அதைப் பெருகச் செய்தார் (2 இரா. 4:1—7).

எஸ்தர் தன் உயிரைப் பெரிதாக எண்ணுமல், அந்நிய அரசனின் கட்டளையைமீறி அவனைக் காணச் சென்றதினுல்தான் தன் ஜனங்களைக் காக்கமுடிந்தது (எஸ். 5:2). இயேசு அந்த ஐந்து அப்பத்தை எடுத்துப் பிட்டபொழுது 5000 பேருக்குப் போஷிக்கத்தக்கதாய்ப் பெருகிற்று. மரியாள் இனிமேல் பிரயோஜனமில்லாது போகும்படி பரிமள தைலப் புட்டியை உடைத்துப் பூசியபொழுது அவ்வீடு முழுவதும் அதன் கந்தம் பரவிற்று. இயேசு தமது சரீரத்தை ஆணியாலும், முள்ளினுலும், ஈட்டியினுலும் குத்தும்படி கொடுத்ததினுல், பாவி பருகி ஜீவனடையக்கூடிய அவருடைய உள்ளான ஜீவன் பளிங்குக் கடல்போல் பெருகிற்று.

அழகான தானியமணி பூமியினுள் புதைக்கப்பட்டு இருக்கும் பொழுதுதான், அதனுள் இருந்து முளை எழும்பி நூற்றுக்கணக்கான தானியங்களை விளைவிக்கிறது. இப்படியே மனித சரித்திரத்திலும், தாவ்ர சரித்திரத்திலும், ஆவிக்குரிய வாழ்க்கையிலும் ஆண்டவர் உடைந்த பொருள்களையே விரும்புகிறுர்.

தங்கள் பணத்தை இழந்தவர்களையும், தான் என்ற ஆணவம் ஒடுங்கினவர்களையும், தங்கள் ஆசை சிதைந்தவர்களையும், தங்கள் உயர்ந்த எண்ணங்கள் நிறைவேறப் பெருதவர்களையும், உலகப் பேர் பிரஸ்தாபத்தில் மனக்கசப்படைந்தவர்களையும், தங்கள் அன்பிற்குகந்தவர்களால் கஷ்டம் அனுபவிப்பவர்களையும் தங்கள் சரீர சுகத்தை இழந்தவர்களையும், நாதியற்று எல்லோராலும் வெறுக்கப்புடுகிறவர்களையும் பரிசுத்த ஆவியானவர் பிடித்து, தேவனுடைய மகிமைக்காக அவர்களைப் பயன்படுத்துகிறுர். 'முடவர்கள் கொள்ளையைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்' என்று ஏசாயா கூறுகிறுர்.

என் இதயத்தை உடையும், உழவன் நிலத்தை
விதைப்பதற்காக உடைப்பதுபோல் உடையும்
அன்பின் எஜமானுக்கு
பூ மலருவதற்காகக் கீறுவதுபோல் உடையும்
அன்பின் எஜமானுக்கு என் அன்பை அர்ப்பணம் செய்ய
அதின் பரிமள புட்டியை உடைத்து வாசனையை வெளியில் விடும்
நித்திய வாழ்க்கையின் கிணற்றிலிருந்து தண்ணீர் பொங்கி வரும்
வெற்றியுள்ள தேவனே என் இதயத்தை உடையும்;

பனிக்கட்டியை உடைத்து அவற்ருல்
அடைப்பட்டிருந்த மரங்கள் வெளியேறுமாப்போலும்
சந்தோஷப்பட்சிகள் போன்றும் உம் வெற்றி பாடச்
செய்யும்.

## அக்டோபர் 16

*'பாரமான யாவற்றையும், நம்மைச் சுற்றி நெருங்கி நிற்கிற பாவத்தையும் தள்ளி விட்டு, நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறுமையோடே ஓடக்கடவோம்' (எபி. 12:1).*

பாவம் என்று சொல்லமுடியாத பாரங்களும் உண்டு. அவை நம்மை கிறிஸ்தவ வாழ்க்கையில் முன்னேறிச் செல்லவிடாமல் நமது கவனத்தை வேறு திக்கில் இழுப்பவைகளாகவும் இடறு கற்களாகவும் இருக்கின்றன. அவற்றில் வெகு மோசமான பாரம், நம்பிக்கை இழந்துபோகுதல் பாரமான இருதயம் நம்மைப் பயனற்றவர்களாகப் போகவும், பரிசுத்தத்தில் குறையவும் செய்ய நம்மைக் கீழே இழுக்கக்கூடியதாகும்.

இஸ்ரவேல் புத்திரர் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட தேசத்திற்குள் பிரவேசியாதிருந்ததற்குக் காரணம் அவர்களது முறுமுறுத்தலில் ஆரம்பித்தது. அதிருப்தி அடைந்து குறைகூற ஆரம்பித்தனர். இது மேலும் மேலும் வளர்ந்து கலகத்திலும், நாசத்திலும் முடிந்தது. தேவன் சதா காலமும் அன்புடையவராயிருக்கிருர். உண்மையுடையவரார்யிருக்கிருர். என்பதைக் குறித்து சந்தேகங்கொள்ள நாம் ஒருபோதும் இடங்கொடுக்கக்கூடாது. மற்ற எல்லாப் பாவத்திற்கும் விலகி நடக்க நமது இருதயத்தை உறுதிப்படுத்துவதுபோல சந்தேகத்திற்கு இடம் தரமாட்டோம் என்ற திடசித்தமும் உள்ளவர்களாயிருக்கவேண்டும். நாம் இதில் உறுதியாய் நின்று சந்தேகங்கொள்ள மறுக்கும்போது, பரிசுத்த ஆவியானவர் நமக்கு உதவியாக வந்து, நமக்கு விசுவாசம் அளித்து நம்மை வெற்றியால் முடிசூட்டுவார்.

சந்தேகங்கொண்டு கவலைப்படும் பழக்கம் நமக்கு எளிதில் உண்டாகிறது. கர்த்தர் நம்மைக் கைவிட்டுவிட்டாரோ, நமது நம்பிக்கை எல்லாம் வீண்போகுமோ என்ற சந்தேகம் இலகுவாய் உண்டாகிறது. மனத்தளர்ச்சியடையோம் என்று உறுதிகொள்ளவேண்டும். சந்தோஷம் இல்லாதிருக்க மறுத்துவிடுவோம். நமக்குச் சந்தோஷ உணர்ச்சி ஏற்படாதிருக்கையில் எல்லாம் சந்தோஷம் என்று எண்ணுவோமாக. விசுவாசத்தாலும், திடசித்தத்தாலும், நம்பிக்கையாலும் நாம் சந்தோஷிக்கவேண்டும். தேவன் நமது நம்பிக்கையை நிஜப்படுத்துவதைக் காண்போம்.

சாத்தானிடம் இரண்டு விசேஷித்த தந்திரங்கள் உண்டு: ஒன்று நம்மை மடிவாக்குகிறது. மனவடிவாகும்போது கொஞ்ச

காலமாவது மற்றவர்களுக்கு ஊழியஞ்செய்யமுடியாத நிலையிலிருக்கிறோம். ஆதலால் தோல்வியடைகிறோம். மற்றொரு தந்திரம் நம்மைச் சந்தேகிக்கச் செய்வது. சந்தேகிப்பதால் நம்மைப் பிதாவோடு இணைக்கும் விசுவாசமாகிய சங்கிலி அறுந்து போகிறது. இவ்விரண்டு விதத்தினாலும் நீங்கள் ஏமாற்றப்பட்டுப் போகாமல் கவனமாயிருங்கள். —ஜி. ஞ. எம்.

மனமகிழ்ச்சி! இந்த மனமகிழ்ச்சியின் ஆவியை வளரச் செய்வது எனக்குப் பிரியம். அது ஆத்துமாவைச் சரியான ஸ்திதிக்குக் கொண்டுவந்து சரியான நிலையில் இருக்கச்செய்கிறது. இதனால் சாத்தான் அதனைத் தொடமுடியாது. இருதய நாண்கள் பரம மின்சார சக்தியால் நிரப்பப்பட்டிருப்பதால் அதன்மீது தனது அசுத்த விரல்களை வைக்கமுடியாது. அவன் வேறிடம் தேடிச் செல்கிறான். பரிசுத்த ஆவியினால் என் இதயத்தில் சந்தோஷமும் களிப்பும் நிறைந்திருக்கும்போது சாத்தான் என்னைத் தொந்தரவு செய்ய நாணுவான்.

சாத்தானை அகற்றுவதுபோல், விசனத்தையும் அகற்றுவதே என் திட்டம். ஆனால் நான் அதில் எப்பொழுதும் வெற்றி பெறுவதில்லை. பிசாசைப்போலவே, அது நான் வெகு பிரயோஜனமாயிருக்கையில் என்னைத் தாக்கி, என்னை எதிர்த்து என் ஆத்துமாவை நிறம் மாறச் செய்கிறது.

விசனம் யாவற்றையும் நிறம் மங்கி அழகற்றுப்போகச் செய்கிறது. விசனத்தை உள்ளேவிட்டால் எதிர்கால வாழ்வு இருண்டு தோன்றும். இதயத்தின் நல்நோக்கம் யாவும் விலகும். அதன் சக்தியாவும் கட்டுப்படும். மனதில் திமிர்வாதம் கொண்டவர்களாய்ச் செயலற்றுப் போவோம்.

ஒரு வயோதிப விசுவாசி, 'ஒருவன் மார்க்கத்தில் மனமகிழ்ச்சியாய் இருப்பதால் அதன் ஊழியம் யாவும் களிப்பாய் நடைபெறுகிறது. களிப்பின் செட்டைகளால் பறந்து செல்லும்பொழுது நம்முடைய கடமையாகிய பாதையில் விரைந்து செல்லுவோம். துக்கம் அந்தச் செட்டைகளை வெட்டிப் போடுகிறது. உருவத்தையே மாற்றிப்போடுகிறது. கடமையாகிய இரதத்தின் சக்கரங்களைக் கழற்றிப்போடுகிறது. எகிப்தின் இரதங்களைப்போல் நமது கடமைகள் இழுப்பதற்குப் பாரமாகிவிடுகின்றன' என்றார்.

## அக்டோபர் 17

'நானோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் சிலுவையைக் குறித்தேயல்லாமல், வேறொன்றையும் குறித்து மேன்மை பாராட்டாதிருப்பேனாக. அவரால் உலகம் எனக்குச் சிலுவையிலறையுண்டிருக்கிறது. நானும் உலகத்திற்குச் சிலுவையிலறையுண்டிருக்கிறேன்' (கலா. 6:14).

அவர்கள் தங்களுக்காகவே வாழ்ந்துவந்தார்கள். சுயநலமும், அதன் நம்பிக்கைகளும், அதன் கனவுகளும் அவர்களைப் பற்றிக்

கொண்டேயிருக்கின்றன. ஆனால் ஆண்டவர் அவர்களுடைய ஜெபத்தைக் கேட்க ஆரம்பித்தார். அவர்கள் மனந்திரும்புதலுக்காக விண்ணப்பித்திருந்தார்கள். தங்களுக்கு எப்படியும் அது வேண்டுமென்று தங்களை ஒப்புவித்திருந்தார்கள். அவர் அவர்களுக்குத் துக்கத்தை அனுப்பினார். பரிசுத்தம் வேண்டும் என்று ஜெபித்தார்கள். அவர்களுக்கு மனதைத் தட்டி எழுப்பும் வேதனையைக் கட்டளையிட்டார். அவர்கள் தாழ்மையாயிருக்க வேண்டுமென்று ஜெபித்தார்கள். அவர் அவர்கள் இருதயத்தை நொருக்குகிறார். அவர்கள் உலகத்திற்கு மடிய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அவர் அவர்களுடைய நம்பிக்கைகளையெல்லாம் அழித்தார். அவரைப்போலிருக்கவேண்டுமென்று கேட்டார்கள். வெள்ளியைச் சுத்திகரிப்பதுபோல் அக்கினிச் சூளையில் போட்டு, தட்டான் உருக்கும் வெள்ளியில் அவன் சாயல் பிரதிபிம்பிப்பது போல் அவர்களில் தமது சாயல் பிரதிபலிக்கும்வரை அருகிலிருந்தார். அவருடைய சிலுவையைத் தூக்கவேண்டுமென்று விரும்பினார்கள். அதை அவர் அவர்களிடம் நீட்டியபோது அது அவர்கள் கைகளில் இரத்தம் கசியச் செய்தது.

தாங்கள் அறியாதவற்றைக் கேட்டார்கள். அவர்களுடைய வேண்டுகோளின்படியே அவர்களுக்கு அளித்தார். அவரை அவ்வளவு தூரம் பின்பற்றிச் செல்லவும், அவருக்கு அருகிலிருக்கவும் மனதில்லாதிருந்தார்கள். பெத்தேலிலும், எலிப்பாசிலும் இரவு கனவு கண்டபோது யாக்கோபு பயந்ததுபோலவும், நீரில் நடக்கும்போது அப்போஸ்தலர் அவரைக் கிறிஸ்து என்று அறியாது பயந்தது போலவும் அவர்களும் பயந்தார்கள். அவரைத் தங்களை விட்டுப் போகும்படியும் அவரது பயங்கர சொரூபத்தை மாற்றிக்கொள்ளுமாறும் ஜெபிக்கவேண்டும் என்ற நிலைமைக்கு வந்தார்கள். பாடனுபவிப்பதைவிடக் கீழ்ப்படிதலும், ஒரு காரியத்தை விட்டுவிடுவதைவிட அதைச் செய்வதும், குருசில் தொங்குவதைவிட அதைச் சுமப்பதும் எளிதென்று கண்டார்கள். ஆனால் அவர்கள் திரும்பிப்போக முடியாது, காணப்படாத சிலுவையண்டை வெகு சமீபித்து வந்துவிட்டார்கள். அதன் தன்மை அவர்கள் உள்ளத்தில் ஆழமாய்ப் பாய்ந்துவிட்டது. அவர்களுக்குக் கொடுத்த வாக்குத்தத்தங்களை அவர் நிறைவேற்றுகிறார். 'நான் பூமியிலிருந்து உயர்த்தப்பட்டிருக்கும்போது எல்லாரையும் என்னிடத்தில் இழுத்துக்கொள்ளுவேன்' (யோ. 12:32) என்பதே அவர்களுக்குக் கிடைத்த வாக்குத்தத்தம்.

கடைசியில் அவர்கள் முறை வந்தது. அவர்கள் அந்த இரகசியத்தைக் கேட்டு மாத்திரம் இருந்தார்கள். ஆனால் அதை இப்போது உணருகிறார்கள். மரியாளையும் பேதுருவையும் தம்மைப் பின்பற்றத் தெரிந்துகொண்டு அவர்களின்மீது தமது அன்பின் திருஷ்டியை வைத்தபோது அவர்கள் அவரைப் பின்பற்றுது வேறு செய்ய முடியாதிருந்ததுபோல் அவர்களும் அவரைப் பின்பற்றினார்கள்.

கொஞ்சம் கொஞ்சமாக நாளுக்குநாள் அப்போதைக்கப்போது, சிறு வெளிச்சங்களாக அவருடைய சிலுவையின் இரகசியம் அவர்கள் மீது பிரகாசிக்கிறது. அவரை உயர்த்தப்பட்டவராகக் காண்கிறார்கள். அவருடைய பரிசுத்த பாடுகளின் காயங்களிலிருந்து ஒளிரும் கதிர்களின் மகிமையைக் கண்டு லயித்திருந்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டே முன்னேறிச் செல்கிறார்கள். அவர்கள் அவருடைய சாயலாக மாறுகிறார்கள். அவர் அவர்களில் வசிப்பதால் அவர்கள்மூலம் அவர் நாமம் பிரகாசிக்கிறது. அவரோடே உன்னதங்களில் தனித்து வாசம் செய்கிறார்கள். அவரோடு சொல்லரிய ஐக்கியத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். மற்றவர்களுக்கு இருப்பதும் தங்களுக்கு இருந்திருக்க வேண்டியதுமாகியவற்றை விட்டுவிடவும், அவரைப்போல் இருப்பதற்காக மற்றவர்களைப்போல் இல்லாதிருக்கவும் மனப்பூர்வமாய் ஒப்புக்கொண்டார்கள். 'ஆட்டுக்குட்டியானவரைப் பின் பற்றுகிறவர்கள் அவர் எங்குச் சென்றாலும்' எல்லாக் காலங்களிலும் இவ்வாறே இருக்கிறார்கள்.

அவர்கள் தாங்களே தெரிந்துகொண்டிருந்தால் அல்லது அவர்களுடைய சிநேகிதர் தெரிந்துகொண்டிருந்தால் அவர்கள் வேறு வழியைத் தெரிந்திருப்பார்கள். அப்படி வேறு வழியை அவர்கள் தெரிந்துகொண்டிருந்தால் இவ்வுலகில் மிகுதியாய் துலங்கியிருப்பார்கள். ஆனால் அவருடைய இராச்சியத்தில் அவர்களது மகிமை குறையும். அவர்கள் ஆபிரகாமின் பாகத்தை அல்ல, லோத்தின் பாகத்தையே தெரிந்துகொண்டிருப்பார்கள். வழியில் தங்கித் தரித்திருப்பார்களேயானால்—கடவுள் தமது பிடியைவிட்டு அவர்கள் வழிதப்ப விட்டிருந்தாரேயானால்—எத்தனை நஷ்டமடைந்திருப்பார்கள்! உயிர்த்தெழுதலின் மகிமையில் விசேஷ பகுதியை இழந்திருப்பார்களே!

ஆயினும் அவர்களது மனதுக்குப் பிடியாதிருந்தும் அவர்களைச் சரியான வழியில் நிறுத்தியுள்ளார். அநேக தடவைகளில் அவர்கள் கால் சறுக்கி விழுவதுபோல் இருந்ததுண்டு. ஆனால் அவர் தமது இரக்கத்தால் அவர்களை நிலைநிறுத்தினார். இப்போதோ இந்த உலக வாழ்க்கையிலேயே அவர் செய்ததெல்லாம் நன்றாய்ச் செய்யப்பட்டது என்று அறிந்துகொள்ளுகிறார்கள். மறுமை அரசாள இங்கே பாடனுபவிப்பது நல்லது. அவர்கள் சித்தம் அல்ல, அவருடைய சித்தமே அவர்களில் நிறைவேறினது.

## அக்டோபர் 18

*'உன் சந்ததியார் தங்களுடையதல்லாத அந்நிய நாட்டிலே பரதேசிகளாயிருந்து . . . நானூறு வருடம் உபத்திரவப்படுவார்கள் என்று நீ நிச்சயமாய் அறியக்கடவாய் . . . பின்பு மிகுந்த பொருள்களுடனே புறப்பட்டு வருவார்கள்' (ஆதி. 15:13,14).*

கடவுள் நமக்கு நிச்சயமாகக் கொடுக்கிற ஆசீர்வாத வாக்குத்தத்தத்தில் தாமதமும் பாடுகளும் ஒரு பகுதியாகும். ஆபிரகாமின்

வாழ்க்கையிலே கொடுக்கப்பட்ட ஒரு வாக்குத்தத்தம், அது இனி மேல் நிறைவேருது என்று சொல்லக்கூடிய காலம் வரும்வரை தாமதித்தது, அதைத்தொடர்ந்து ஆபிரகாமின் சந்ததியாருக்குக் கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தம் சகிக்க முடியாத தாமதமாகத் தோன்றிற்று. ஆனல் அது தாமதமாத்திரமே. 'அவர்கள் மிகுந்த பொருள்களோடு புறப்பட்டு வந்தார்கள். அவருடைய வாக்கு நிறைவேறினது.'

கடவுள் என்னைத் தாமதங்களால் சோதிக்கப்போகிருர். தாமதங்களோடு பாடுகளும் உண்டாகும். ஆனுலும் இவைகளிற்கு ஊடாக அவருடைய வாக்குத்தத்தம் இருக்கிறது. அவர் கிறிஸ்துவுக்குள் எனக்கு அதிசயமான சிறு ஆசீர்வாதங்களை அளிப்பதாகக் கொடுத்த மாருத வாக்குத்தத்தமும் அவருடைய புது உடன்படிக்கையும் நிலை நிற்கின்றன. தாமதமும், பாடுகளும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பாக்கியத்தின் ஒரு பகுதியேயாகும். அவைகளுக்காக நான் அவரை இன்று துதித்து அவருக்காகக் காத்திருந்து தைரியமாயிருக்க வேண்டும். அவர் என் இதயத்தைப் பலப்படுத்துவார்.

—சி. ஜி. டிரம்புல்

1 பல வருடங்களாக நீ ஆத்தும வருத்தத்தில் ஏறெடுத்த
ஜெபங்களுக்கு விடை கிடையாது இருக்கிறதா?
விசுவாசம் தவறுகிறதா? நம்பிக்கை நீங்குகிறதா?
உன் கண்ணீர் யாவும் வீண் என்று எண்ணுகிருயா?
பிதா உன் ஜெபத்தைக் கேட்கவில்லை என்று சொல்லாதே!
ஏதோ ஒரு காலம் எங்காகிலும் உன் விருப்பப்படி உனக்கு நடக்கும்.

2 இன்னும் விடை இல்லையா? அனுமதிக்கப்படவில்லை என்று சொல்லாதே
உன் வேலை இன்னும் பூரணமாய்ச் செய்யப்படாதிருக்கலாம்
நீ உன் ஜெபத்தை ஏறெடுத்தவுடன் வேலை ஆரம்பித்தது,
தேவன் தாம் துவக்கினதை முடிப்பார்.
நீ தூபவர்க்கம் எரித்துக்கொண்டே இருந்தால்,
ஏதோ ஒரு காலம் எங்காகிலும் அவர் மகிமையைக் காண்பாய்.

3 இன்னும் விடை இல்லையா? விசுவாசத்துக்கு விடை கிடைக்காமல் போகாது
அதன் பாதங்கள் பாறையின்மேல் ஊன்றி நிற்கின்றன.
பெரிய புயலிலும் அது அசையாதிருக்கிறது
பெரிய இடியைக் கேட்டும் பயப்படுகிறதில்லை
சர்வ வல்லவர் தம் ஜெபத்தைக் கேட்டார் என்பதை அது அறியும்
'அது ஏதோ ஒரு காலத்தில் எங்காவது நடந்தே தீரும்' என்கிறது.

—மிஸ் ஒப்பீலியா ஜி. ப்ரௌனிங்

## அக்டோபர் 19

'ஆண்டவருடைய உடன்படிக்கைப் பெட்டி அவர்கள்முன் சென்றது' (எண். 10:33).

தேவன் நமக்கு எண்ணங்களைக் கொடுக்கிறார். அவற்றை வெறும் எண்ணங்களாகக்கொண்டு அவற்றின்படி நடக்கவேண்டுமென்பதில்லை. அந்த எண்ணங்கள் கடவுளிடம் இருந்து வந்தவையானால் உள்ளத்தில் சந்தேகமின்றி உறுதியாய்த் தோன்றும்படி அவரே செய்வார்.

ஆனதோத்தின் வயலை வாங்குமாறு எரேமியாவுக்கு உண்டாகிய எண்ணத்தைப்பற்றிய கதை எவ்வளவு நேர்த்தியானது! ஆனால் எரேமியா அந்த எண்ணத்தின்படி உடனே நடந்துவிடவில்லை. அடுத்தநாள் அவன் பெரிய தகப்பன் மகனாகிய அனாமயேல் 'என் நிலத்தை வாங்கிக்கொள்ளும். சுதந்திர பாக்கியம் உமக்குண்டு' என்று சொன்னான். இந்த வெளிப்படையான சான்று கிடைத்தபின் தான் அவன் தன் எண்ணத்தின்படி செய்தான். அந்த சான்று கிடைத்தபொழுது எரேமியா 'அது கர்த்தருடைய வார்த்தை என்று அறிந்துகொண்டேன்' என்றான்.

தேவன் கொடுத்த எண்ணம் மற்றொரு தெய்வ நடத்துதலால் உறுதிபண்ணப்படும்வரை அவன் காத்திருந்தான். தனக்கு மாத்திரமல்ல, மற்றவர்களுக்கும் நம்பிக்கை உண்டாகத்தக்கதாக அவன் அதன்படி நடந்தான். தேவன் தம் மனதின்படி நாம் நடக்கவேண்டுமென்று விரும்புகிறார். மேய்ப்பனின் சொந்தச் சத்தத்தைக் கேட்காதவர்கள்போலிருக்கக்கூடாது. ஆனால் துரோவா பட்டணத்திலிருக்கும்பொழுது பவுலும் அவனோடிருந்தவர்களும் செய்ததுபோல, நம்மிடம் பேசும் எல்லாச் சத்தங்களையும் கவனித்து வைத்துக்கொண்டு, அவர்களைப்போல் சகல சந்தர்ப்பங்களின் மூலமாகவும், ஆண்டவருடைய மனது இன்னது என்பதை நிதானித்து அறிந்து நடக்கவேண்டும்.

—டாக்டர் சிம்ப்ஸன்

'தேவனுடைய விரல் எங்கே காட்டுகிறதோ அங்கே தேவனுடைய கரம் வழியை உண்டாக்கும்.'

உன் இதயத்தில் நான் இன்னது செய்வேன் இன்னது செய்யமாட்டேன் என்று சொல்லாதே. தேவன் தமது வழியை உனக்குத் தெரியப்படுத்தும்வரை தேவனுக்காக காத்திரு. அந்த வழி மறைக்கப்பட்டிருக்கும்வரை நீ ஒன்றும் செய்ய அவசியமில்லை என்பதே தெளிவாகிறது. நீ இருக்கும் இடத்தில் உன்னை வைத்திருப்பதினால் உண்டாகும் பலாபலனுக்குப் பொறுப்பை அவர் ஏற்றுக்கொள்கிறார்.

## அக்டோபர் 20

*'எல்லாப் புத்திக்கும் மேலான தெய்வ சமாதானம் உங்கள் இருதயங்களையும், உங்கள் சிந்தனைகளையும் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக(பட்டாளம்போல்)க்காத்துக் கொள்ளும்' (பிலி. 4:7).*

'கடலின் மெத்தை' என்றழைக்கப்படும் ஒன்றுண்டு. புயலினாலும் அலைகழிக்கப்பட்டும் காற்றினாலும் அங்கும் இங்கும் மோதப்பட்டும், கடலில் ஒருபோதும் அசையாத ஒரு பகுதி இருக்கிறது. கடலின் அடிவாரத்திலுள்ள மண்ணைத் தூர்வை எடுத்துப் பார்த்தால், நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான வருடங்களாய் அசைக்கப் படாதிருந்த தாவரங்களும், மிருக ஜீவன்களும் இருந்தன என்பதற்கு அத்தாட்சிகளைக் காணலாம். இப்படிப்பட்ட கடல் மெத்தைகளைப் போன்ற தெய்வ சமாதானம் உள்ளத்தின் ஆழத்தில் கிடக்கிறது. மேல்பாகத்திலுள்ள எத்தொந்தரவுகளிலும் கலக்கங்களிலும் அது பாதிக்கப்படுவதில்லை. தெய்வ சமுகத்தில் பிரவேசிப்பவர்கள் அப்படிப்பட்ட கலங்காத கலைக்கப்படாத சமாதானத்தில் பங்குள்ள வர்களாவார்கள். —எ. டி. பியர்ஸன்

1 கடலின் மேல்பரப்பு காற்றால் கொந்தளிக்கும்போதும்
அலைகள் குமுறி மோதும் போதும்
இந்தக் குழப்பத்திற்கெல்லாம் அடியில்
சமாதானமான அமைதி நிலவுகிறது.

2 அதிக ஆழத்தில் புயலின் சப்தம் கேட்காது;
வெண்திரை அமைதியாய்க் கலகலக்கும்;
கடும்புயல் ஒருபோதும் அதன்மேல் வீசாது;
ஆழத்தின் ஓய்வுநாளைக் கலைக்காது.

3 பரிசுத்தரே! உம் அன்பை அறிந்த உள்ளத்தில்
பரிசுத்த ஆலயம் ஒன்றுண்டு,
வாழ்க்கையின் சகல மூர்க்க சப்தம்,
அதன் வாசலில் அமர்ந்து நிற்கின்றன.

4 வெகு தூரத்தில் ஆசையின் குரல் நின்றுவிடும்.
அன்பான எண்ணங்கள் சமாதானமாய் எழும்பும்;
குமுறிக் கடூரமாய் வீசும் புயலும்,
அவரில் வசிக்கும் ஆத்துமாவைக் கலங்கச் செய்யாது.

'மோட்ச பிரயாணியைச் சூரியன் உதிக்கும் திசைமுகமாயுள்ள பெரிய மேலறையில் படுக்கவைத்தார்கள். அந்த அறையின் பெயர் சமாதானம்.' 'பரதேசியின் மோட்ச பிரயாணம்.'

—ஜான் பனியன்

## அக்டோபர் 21

'பூமிக்குரிய கூடாரமாகிய நம்முடைய வீடு அழிந்துபோனாலும், தேவனால் கட்டப்பட்ட கைவேலையல்லாத நித்திய வீடு பரலோகத்திலே நமக்கு உண்டென்று அறிந்திருக்கிறோம்' (2 கொ. 5:1).

நான் அநேக வருடங்களாய்க் குடியிருக்கும் வீட்டிற்குச் சொந்தக்காரர் இனிமேல் நான் அந்த வீட்டைப் பழுதுபார்ப்பதற்கு ஒன்றும் கொடுக்கப்போவதில்லை என்று சொல்லிவிட்டார். அந்த வீட்டை விட்டுவிட ஆயத்தமாயிருக்கும்படியும் சொல்லிவிட்டார்.

முதலில் இந்த அறிவிப்பு எனக்கு மனதிற்கு அதிகம் கஷ்டத்தைக் கொடுத்தது. இவ்வீட்டைச் சுற்றியிருந்த இடங்கள் நன்றாய் இருந்தன. அந்த வீடு பழமையாகி இடிந்து விடும்போலிருந்தது தானே யொழிய அதற்கு வேறொரு குறைவும் சொல்ல முடியாது. காற்றும் அதை அதிரச் செய்கிறது. அதன் முட்டுகளும், தாங்கல்களும்கூட அதை விழாமல் தாங்கும் என்று தோன்றவில்லை. ஆகையால் நான் அந்த வீட்டை விட்டுவிட ஆயத்தப்படுகிறேன்.

இனிமேல் குடிப்புகப்போகும் வீட்டைப்பற்றிய எண்ணம் பழைய வீட்டைப்பற்றிய எண்ணத்தை எவ்வளவாய் மறக்கச் செய்கிறது. நான் குடிப்புகப்போகும் பிரதேசத்தின் படத்தை வாங்கி அதைப் படித்ததன்றி, அதில் வசிக்கும் ஜனங்களின் பழக்கவழக்கங்களையும் படித்தேன். அங்குபோய்த் திரும்பிவந்த ஒருவரை கண்டேன். அவரிடம் விசாரித்ததில் அந்நாடு சொல்லிமுடியாத அழகு வாய்ந்தது என்று கேள்விப்பட்டேன். அங்கு தங்கியிருக்கையில் அவர் கேள்வியுற்றவைகளைச் சொல்லப் பாஷை தானும் போதாது. அங்குள்ள சொத்தைப் பெற்றுக்கொள்வதற்காக இங்குள்ள அவ்வளவு சொத்தையும் இழந்ததாகச் சொல்லுகிறார். மற்றவர்கள் தியாகம் என்று சொல்லக்கூடியதைக் குறித்து அவர் சந்தோஷப்படுகிறார். கடுமையான சோதனையினால் என் உத்தம சிநேகிதர் என்று விளங்கின ஒருவர் இப்போது அங்கே இருக்கிறார். அவர் வெகு ருசிகரமான பழக்கொத்துகள் எனக்கு அனுப்பியுள்ளார். அவற்றை ருசிபார்த்தபின் இங்குள்ள மற்றெல்லா ஆகாரமும் ருசியற்றவையாகத் தோன்றுகின்றன.

இரண்டுமூன்று தடவை நான் அந்நாட்டின் எல்லையிலுள்ள நதிக்கரையில் நின்று அக்கரையின் இராஜாவுக்கு துதிபாடுபவரோடு கலந்துகொள்ள விரும்பியிருக்கிறேன். என் சிநேகிதரில் அநேகர் அங்கே போய்விட்டார்கள். போகுமுன் நான் அங்குப் போவதைப் பற்றி பேசியிருக்கிறார்கள். அவர்கள் மறையும்போது அவர்கள் முகத்தில் ஒளிர்ந்த இன்பப் புன்னகையை நான் கண்டிருக்கிறேன். இங்குச் சொத்து வாங்கிவைக்கும்படி அநேகர் எனக்குச் சொல்லுகிறார்கள். அவர்களுக்கு 'நான் வேறிடம் போகப்போகிறேன்' என்றே சொல்லியிருக்கிறேன்.

இயேசு உலகிலிருந்த கடைசி நாட்களில் 'பிதாவண்டை போகிறேன்' என்ற வார்த்தையே அடிக்கடி அவர் வாயில் வந்தது. கிறிஸ்துவின் ஜனமாகிய நாமும் இவ்வுலகக் கஷ்டங்களுக்கு அப்பாலுள்ளதைக் குறித்துக் காட்சி காண்கிறோம். நாம் நம்முடைய வாழ்க்கை விரிவடைய, பூரணப்பட்டு நிறைவேற அந்நாட்டை நோக்கிப் பிரயாணம் செய்கிறோம். நாமும் 'பிதாவண்டைதான் போகிறோம்' நம்முடைய நித்திய வீடு இருக்கின்ற பிரதேசத்தைக் குறித்து நமக்கு மிகக்குறைந்த அறிவுதான் உண்டு. ஆனால் இரண்டு விஷயங்கள் தெளிவாயிருக்கின்றன. 'அது பரமபிதாவின் வீடு.' அது ஆண்டவரின் சமுகத்திற்கு வெகு சமீபத்திலிருக்கிறது. நாம் எல்லாரும் வழிபோக்கர்கள். ஆனால் விசுவாசி அதை அறிந்து அதை ஏற்றுக்கொள்ளுகிறான். அவன் பிரயாணியேயல்லாமல் தங்குபவனல்ல.

—ஆர். சி. கில்லீய்

1 சிறு பறவைகள் தேவனை நம்புகின்றன. ஏனென்றால்,
அவைகள் காற்றுக் காலம் வந்தவுடன்
அதிக நம்பிக்கையோடு தங்களுக்குத் தெரியாத வழியில் வட நாட்டிலிருந்து
தங்களுக்குத் தெரியாத உஷ்ணப் பிரதேசத்திற்குக் களிப்பாய்ப் பாடிக்கொண்டு செல்கின்றன.

2 நம்முடைய காலங்கள் அவர் கையிலிருப்பது நிச்சயமாகையால்
நாம் துக்கத்தோடல்ல களிப்போடு செல்வோமாக.
நாம் சாவு என்று பயந்து துக்கித்து அழுவானேன்,
அது உஷ்ணப் பிரதேசத்திற்குப் பறந்து செல்வதாகும்.

## அக்டோபர் 22

'மோசே மீதியான் தேசத்து ஆசாரியனாயிருந்த தன் மாமனாகிய எத்திரோவின் ஆடுகளை மேய்த்துவந்தான். அவன் ஆடுகளை வனாந்தரத்தின் பின்புறத்திலே ஓட்டி, தேவ பர்வதமாகிய ஓரேப் மட்டும் வந்தான். அங்கே கர்த்தருடைய தூதனானவர் ஒரு முட்செடியின் நடுவிலிருந்து உண்டான அக்கினி ஜுவாலையிலே நின்று அவனுக்குத் தரிசனமானார்' (யாத். 3:1,2).

இந்தத் தரிசனம் சாதாரண வேலையின் மத்தியில் கிடைத்தது. ஆண்டவர் அந்த இடத்தில்தான் நமக்குத் தம்மை வெளிப்படுத்த விரும்புகிறார். சாதாரண ரஸ்தாவில் சென்ற ஒரு ஆளை அவர் கண்டுபிடிக்கிறார். தெய்வீக அக்கினி அவன் பாதத்தண்டை எழும்புகிறது. யாக்கோபுக்குத் தோன்றிய ஏணி நாடோடிய வாழ்க்கையின் மத்தியிலும் தோன்றலாம். இது தினசரிப் பாடாகிய இவ்வுலகத்தையும் அருள் நிறைந்த அவ்வுலகத்தையும் இணைப்பதாகிறது.

என் பிதாவாகிய தேவனே! என் சாதாரண வாழ்க்கைப் பாதையில் உம்மைக்காண உதவிபுரியும். விபரீதமான மயிர்கூச்செடுக்கும்

சம்பவங்கள் ஏற்படவேண்டுமென்று நான் உம்மை வேண்டவில்லை. என் சாதாரண ஊழியத்திலும் கடமையின் மூலமாகவும் நீர் என்னோடு பேசும். நான் சாதாரணமாய்ப் பிரயாணம் செய்யும்போது எனக்குத் துணையாயிரும். என் எளிய வாழ்க்கையை உம் சமுகத்தால் எழிலுறச் செய்யும்.

சில கிறிஸ்தவர்கள் அபூர்வ காட்சியைக் கண்டு விபரீத களி கொள்ள நினைக்கிறார்கள். அது கர்த்தருடைய வழியல்ல. உன்னத இடங்களுக்கு ஆவியில் செல்லுதல், நாம் காணாத உலகோடு பேசுதல் ஆகிய இவை வாக்குத்தத்தங்களில் இல்லை. தினசரி வாழ்க்கையில் அவரோடு சம்பந்தப்பட்டிருக்கிறதுதான் இருக்கிறது. நமக்கு அது போதும்; நமக்கு தேவையானால் விசேஷமான காட்சிகளும் கிடைக்கும்.

அவருடைய அன்பையும், வல்லமையையும் நம்பாமலே இருந்தால் அவருடைய திட்டத்தை மறுப்பது தேவனுக்குத் தமது சித்தத்தை நிறைவேற்றாதபடி இடைஞ்சல் உண்டாக்குவதாகும். அவரை நம்புகிறவர்களுக்கு எகோவாவே எதையும் செய்யக்கூடும்.

மூன்று சீடர்கள் மாத்திரமே கிறிஸ்துவின் மறுரூபக் காட்சியைக் கண்டார்கள். அந்த மூன்றுபேரும் இயேசு கெத்சமனேயில் துயரப்படும்போது கூடவே இருந்தனர். ஒருவரும் மறுரூப மலையுச்சியிலேயே தங்கிவிடமுடியாது. கீழே பள்ளத்தாக்கில் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் உண்டு. கிறிஸ்து மகிமையில் தமது வாழ்க்கை ஊழியத்தைக் காணவில்லை. தாழ்விலேதான் அவருடைய ஊழியம் இருந்தது. ஆகையால்தான் அவர் பூரண மேசியாவானார். தரிசனமும் மகிமையும் கொடுக்கும் பரிசு நம்மை ஊழியம் செய்யவும் சகிக்கவும் தக்கவர்களாக்குவதே.

## அக்டோபர் 23

'அவருடைய நல்வார்த்தைகளிலெல்லாம் ஒரு வார்த்தையாகிலும் தவறிப்போகவில்லை' *(1 இரா. 8:56).*

வாழ்க்கைப்பாதையில் நாம் மெதுவாகச் செல்லச்செல்ல, 'இல்லை' என்று தேவன் கூறிய ஒவ்வொரு காரியத்திற்கும் ஓர் காரணம் இருந்ததாக உணர்ந்துகொள்வோம். எவ்விதமாகவோ தேவன் நம்மை உணரச் செய்கிறார். அவருடைய ஜனங்கள் தங்களுக்குப் பதில் கிடைக்கவில்லை என்று கவலை கொள்ளும்போது, தேவன் அந்த ஜெபத்திற்கு இன்னும் நலமான உத்தரவை அருளிக்கொண்டிருக்கிறார் என்று அடிக்கடி காண்கிறோம். அதன் ஒரு பாகத்தை அப்போதைக்கப்போதே காண்கிறோம். ஆனால் பின்னால்தான் முழுவதும் காணப்படும்.

நம்முடைய ஜெபத்திற்குத் தேவன் ஆம் என்று விடையளித்
தால்
சூரியன் பிரகாசமாகி வான் வீதி நீலமாய்த் தோன்றினுல்,
வழி அதி சுலபமாகத் தோன்றும்போது,
நம் பாதையில் பட்சிகள் பாடும்போது,
நாம் காணும் நீரோடைகளில் பருகும்போது,
கால்களுக்கிடையில் காணும் மலர்களைப் பறிக்கையில்;
நம் பயணம் வெகு இன்பமாய்த் தோன்றும்
தேவன் நம் ஜெபத்திற்கு 'ஆம்' என்று பதிலளித்தால்,
தேவன் நமது ஜெபத்திற்கு இல்லை என்று பதிலளித்தால்.
மேகம் எங்கும் இருண்டு சூழ்ந்து இருந்தால்
பாறைகள், கற்கள் வழியில் இடைஞ்சல் செய்தால்
குளிர்ந்த காற்று வீசித் துன்புறுத்துங்கால்
பயண இறுதியில் நாம் வீடடைவோம்
தேவன் நமது ஜெபத்திற்கு இல்லை என்றுல்
நம்மை ஆடுகளைப்போல் தம் மந்தைக்குள் சேர்த்துக்
கொள்ளப்
பிதா நமக்கு அனுப்பிய சோதனைகள் இவைகளே.

விசுவாசம் அவசரப்படாது, ஆனுல் இறுதியில் அதற்குக் காரணங்களைக் கிறிஸ்து வெளியாக்குவார் என்று காத்திருக்கும். ஆண்டவர் மனிதனிடமிருந்து ஏதாவதொன்றை எடுத்துக்கொண்டால் அதற்கு அநேக மடங்கு அதிகமாய்த் திரும்பக் கொடுக்காமல் எப்போதாகிலும் இருந்ததுண்டா? அவர் கொடுக்கும் பதில் உடனே கிடைக்காவிட்டால் என்ன? இன்றுதாளு கடவுள் செய்தாகவேண்டும்? அவருக்கு இவ்வுலகு தவிர வேறு இராச்சியம் இல்லையா? கல்லறைக்குள் முடிவிலா இருளும் நித்திய அமைதியும்தாளு இருக்கின்றன?

இவ்வுலக வாழ்க்கைக் காலத்துக்குள்ளேயே என்ன நடக்கிறதென்று பார்ப்போம். பெரியதொரு வெகுமதியைக் கொண்டு வராமல் தேவன் நமது இதயத்தைச் சோதனைகளால் தேடுவதில்லை. காத்திருக்க அறிந்தவன் கிறிஸ்துவின் குணங்களில் உன்னத அளவை அடைந்தவனேயாவான்.

1 பள்ளத்தாக்கில் காடுகள் இருக்கையில்
மலை உச்சி மேகத்தால் மூடப்பட்டிருக்கையில்
அழகிய மொட்டுக்கள் தீய்ந்து போகுங்கால்
மலர்கள் அழியுங்கால்
அன்புள்ள பிதா மெதுவாய்
'இது என்னுல் நேரிட்டது' என்கிருர்
உனக்கு விளங்காதிருக்கையில் நீ நம்பினுல் பாக்கியவான்.

2 அநேக ஆண்டுகள் பாடுபட்டபின்
உன் ஐசுவரியம் பறந்து போய்
உன் கை வெறுமையாகி, கவலையாய்
உன் தலை நரைத்துப்போனால்
கடலும், தரையும் எல்லாம்
உன் ஆண்டவருடையவை என்று நினை
உனக்கு விளங்காதிருக்கையில்
நீ நம்பினால் நீ பாக்கியவான்.

## அக்டோபர் 24

'போரடிக்கிறதற்கு நான் உன்னைப் புதிதும் கூர்மையுமான பற்களுள்ள இயந்திரமாக்குவேன்' (ஏசா. 41:15).

ஐந்து வெள்ளி விலையான ஒரு உருக்குத் துண்டைக் குதிரை லாடங்களாகச் செய்தால் அது பத்து வெள்ளி மதிப்புடையதாகும். அதை ஊசிகளாகச் செய்தால் 350 வெள்ளி பெறும். பேனாக்கத்தி செய்வதற்குப் பயன்படுத்தினால் 32000 வெள்ளி பெறும். அதை கடிகாரங்களிலுள்ள சிறு 'வில்'களாகச் செய்தால் அதன் மதிப்பு 2,50,000 வெள்ளிகளாகும். இவ்வளவு விலை மதிப்பு உள்ளதாக்க அந்த உருக்குத் துண்டு எவ்வளவு கடையப்படவேண்டும். அதை எவ்வளவுக்கெவ்வளவு அடித்து வளைத்து நெருப்பில் போட்டு உருக்கித் தேய்க்கிறோமோ அவ்வளவுக்கு விலை உயர்ந்ததாகிறது.

இந்த உவமை பொறுமையாய் நம்முடைய கஷ்டங்களைச் சகிக்க நமக்கு உதவுகிறது. அதிக பாடனுபிப்பவர்கள் அதிகம் பயன் கொடுப்பவர்களாவார்கள். வேதனையின் மூலம்தான் தேவன் நம்மிடமிருந்து தம்முடைய மகிமைக்காகவும் மற்றவர்களுடைய ஆசீர்வாதங்களுக்காகவும் பெரும் பேறு பெற்றுக் கொள்ளுகிறார்.

பொறுமையாய் உமது சித்தத்தைச் சகிக்க
உமதடியானுக்கு அருள்புரியும்
எனக்குத் தீங்கு செய்யாத கரத்தை
நம்பி முன்னேற வீரம் தாரும்
உமது ஞானம் என்னை ஒருபோதும்
வழிதப்ப விடாது;
என்னைத் துன்புறுத்தும் அவ்வன்பிற்கு
நான் எப்போது இளைப்பாற வேண்டுமென்று தெரியும்.

வாழ்க்கை நமக்குப் புரியாத விஷயமாயிருக்கிறது. தேவன் நித்திய உலகத்திற்கான ஊழியத்திற்கு நம்மை ஆயத்தம் செய்கிறார். அவ்வுலகக் காட்சிகளை நம்முடைய ஐம்புலன்களால் உணர முடியாது. அங்கு விசேஷித்த ஊழியம் செய்ய அதிகம் பக்குவப்

படுத்தப்பட்ட ஆவிகள்தான் வேண்டும். இந் நம்பிக்கையைத் தவிர வேறொன்றும் வாழ்க்கை இரகசியத்தை நமக்குப் புலப்படுத்தாது. சுற்றிலும் கத்தி முனையுள்ள இயந்திரங்கள் உண்டு. இவற்றில் கூரிய கத்தி முனையுள்ளவைதான் நேர்த்தியான வேலைப்பாடு செய்யப் பயன்படுகின்றன.

## அக்டோபர் 25

'இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்திலே ஒன்றும் கேட்கவில்லை. கேளுங்கள், அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படி பெற்றுக்கொள்வீர்கள்' *(யோ: 16:24).*

அமெரிக்காவில் உண்டான உள்நாட்டுப் போரில் ஒரு மனிதனுடைய ஏகபுத்திரன் ஐக்கிய நாட்டின் சார்பாகப் பட்டாளத்தில் சேர்ந்துகொண்டான். அவன் தகப்பன் ஒரு பாங்குக்குச் சொந்தக்காரன். அவர் அவனை அனுப்பச் சம்மதித்தபோதிலும், அவனை அனுப்பிவைத்தது அவருக்கு அதிக வருத்தமாயிருந்தது.

அவர் போர்வீரனைக் கண்டால் தம் மகனை நினைத்துக்கொண்டு அவர்கள்மேல் அன்புகொள்ளுவார். சரியாக அவர் தொழிலைக் கவனிக்கவில்லை. வியாதியால் வீட்டிற்குத் திரும்பும் போர் வீரருக்குத் தம் பணத்தைச் செலவிட்டார். அவருடைய சிநேகிதர் அவர் தொழிலை விட்டதற்காக அவரைக் கண்டித்தார்கள். அப்பொழுது அவர் இனிப் போர்வீரருக்கு உதவிசெய்வதை விட்டுத் தம் தொழிலை நடத்தவேண்டும் என்ற தீர்மானத்திற்கு வந்தார்.

இந்தத் தீர்மானத்திற்கு வந்தபின் ஒருநாள் அவர் பாங்கிற்குள் கிழிந்த, சாயம்போன, பட்டாள உடுப்பணிந்திருந்த மனிதனொருவன் நுழைந்தான். அவன் முகத்திலும், கைகளிலும் வைத்தியசாலையிலிருந்தவன் என்று காட்டும் காயங்களின் அடையாளங்கள் இருந்தன. அந்த ஏழை மனிதன் தன் சட்டப்பையிலிருந்து ஏதோ ஒன்றை எடுப்பதற்குத் தேடிக்கொண்டிருந்தான். அதைக் கண்ட அவர்: அப்பா, தம்பீ! நான் உனக்கு இன்று ஒன்றும் செய்யமுடியாது. எனக்குஅதிக வேலை இருக்கிறது. நீ உன்னுடைய தலைமை ஆபீசுக்குப் போ. அங்கு உன்னைக் கவனித்துக்கொள்வார்கள் என்று சொன்னார். பின்னும் அந்தப் போர்வீரன் அவர் சொன்னது இன்னது என்று அறிந்துகொள்ளாதவன்போல் நின்றான். பின்பு தன் சட்டைப் பைகளையெல்லாம் தேடி அழுக்கடைந்த ஒரு துண்டு காகிதத்தை எடுத்தான். அதில் காகிதப் பென்சிலால் சில வரிகள் எழுதப்பட்டிருந்தன. அந்தப் போர்வீரன் அந்தக் காகிதத்தை அவர்முன் வைத்தான். அதில் பின்வரும் வார்த்தைகள் எழுதியிருக்கக் கண்டார்.

அன்புள்ள தகப்பனுருக்கு: இவன் என் தோழர்களில் ஒருவன். யுத்தத்தில் காயப்பட்டு ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டான்.

என்னைப்போல் நினைத்து அவனுக்கு உதவி செய்யுங்கள்—'சார்லி' என்று எழுதியிருந்தது.

இதை வாசித்த அந்த க்ஷணமே போர்வீரரிடம் இனிமேல் பாராமுகமாயிருப்பேன் என்று அவர் செய்திருந்த தீர்மானம் பறந்து போய்விட்டது. அரண்மனை போன்ற தம் இல்லத்திற்கு அவ்வீரனை அழைத்துச் சென்றார். தம் மகன் சார்லியின் அறையில் அவனுக்கு இடம் கொடுத்து, சார்லிக்குக் காட்டும் அன்பும் பராமரிப்பும் காட்டினார். அவன் இந்தப் பராமரிப்பினால் உடல் நலம்பெற்று மறுபடியும் யுத்தத்திற்குப் போனான்.

'நான் செய்வதை இப்பொழுது காண்பாய்' (யாத். 6:1).

## அக்டோபர் 26

'அவர் தனித்து ஜெபம்பண்ணும்படி ஒரு மலையின்மேல் ஏறி, சாயங்காலமான போது அங்கே தனிமையாயிருந்தார்' (மத். 14:23).

இயேசுகிறிஸ்து யாருமின்றித் தன்னந்தனியே இருப்பதின் அவசியத்தை உணர்ந்தார்.

1 நமது பயத்தைப் போக்க அவர் அவற்றின்மேல் நடந்து வந்தாலும்
அன்றி, நமது கூக்குரலுக்கு யாதொரு பதிலுமின்றி
நாம் தனியே விடப்பட்டாலும்
அவை அவருடைய அலைகளே.

2 புயல் ஓயாது வீசும் கடலின் வழியாக
ஆழத்தை ஆழம் கூப்பிட்டிரைந்து வந்தாலும்
அன்றி, அவர் வார்த்தையால் அவை அமர்ந்தாலும்
அவை அவருடைய அலைகளே.

3 கடலைப் பிளந்து நாம் நடந்து செல்லும்
காய்ந்த வழி உண்டாக்கினாலும்
அன்றி, அவைகள் குமுறிப் பாய்ந்தாலும்
அவை ஆண்டவரின் அலைகளே.

4 அவருடைய அலைகளே; அவரே நம்மை அவைகளைக் கடக்கச் செய்கிறார்.
அவர் வாக்குத்தத்தத்தை அவர் அன்பு நடப்பிக்கும்
காத்து, வழிநடத்தி கைதூக்கி
நம்மை அவர் மோட்சகரை சேர்ப்பார்.

அருமையான ஆண்டவர் உன்னை வைத்த இடத்தில் நின்று, உன்னாலானதைச் செய். தேவன் சோதனைகளாகிய பரீட்சைகளைக்

கொடுப்பார். வாழ்க்கையாகிய பாத்திரமே இவ்வுலகில் தனித்திருப்பதாக நீ உள்ளத்தில் பாவனே செய்து பார்த்ததுண்டா?

அப்படிப் பார்க்கும்போது உன் நினேவெல்லாம் நானும் தேவனும் என்றிருக்கும். அவர் உனக்கு அவ்வளவு சமீபத்திலிருக்கிருர். இந்த அகன்ற உலகில் உன் இதயமும், அவர் இதயமும் மாத்திரமே துடிப்பதுபோல் அவருக்கு அவ்வளவு அருகில் இருப்பாய். அப்படிப்பட்ட தனிமையைப் பழகிக்கொள்ளவேண்டும்.

கூட்டத்தை வெளியே விரட்டு. உன் இதயத்தை அமைதியாயிருக்கப் பழக்கு! நானும் தேவனும், தேவனும் நானும் என்ற பல்லவியைப் பாடு. உனக்கும் உன்னுேடு போராடும் தேவதூதனுக்கும் நடுவில் ஒருவரும் வராமல் பார்த்துக் கொள். நீ இயேசுவைத் தனியே சந்திக்கும்போது அவர் உன்னேக் கண்டித்து உணர்த்தி மன்னிப்பளிப்பார். —ஜார்ஜ் மத்தீசன்

## அக்டோபர் 27

'உமது அலேகளும் திரைகளும் எல்லாம் என்மேல் புரண்டு போகிறது' (சங். 42:7).

அலேகள் நுரைத்துப் பொங்கி நின்று
நம்மேல் சென்று அவர் முகத்தை மறைத்தாலும்
அன்றி, நமக்குமுன் பளிங்குப்பாறை போலிருந்து
நாம் கதிசேர நம்மைக் கொண்டு சென்ருலும் அவை அவர்
அலேகளே.

தனியே தம்மோடு மாத்திரமே தனித்திருந்தார். மற்ற மனிதரோடு நாம் சம்பந்தப்பட்டிருக்கும்போது அது நம்முடைய பெலனேக் குறைக்கிறது. கிறிஸ்து மனிதன் அதை அறிந்தார். ஆகையால் தனித்திருந்து தம் பெலனேக் கூட்டிச் சேர்க்கவேண்டுவது அவசியமென்று கண்டார். தம் உன்னத ஊழியத்தையும் தம்முடைய மனுஷீகமான பலவீனத்தையும் தாம் முழுவதுமாகப் பிதாவைச் சார்ந்திருக்கவேண்டுமென்பதையும் உணர்ந்தார்.

அப்படியானுல் தேவனுடைய பிள்ளே இன்னும் எவ்வளவு அதிகமாய் ஆத்துமார்த்த உண்மைத் தத்துவங்களேத் தியானித்து பிதாவோடு தனித்திருக்கவேண்டும். ஆண்டவர் ஒருவரே தாம் பிதாவோடு ஐக்கியப்படுதல், தனித்திருத்தல் இவைகளேத் தள்ளி வைத்திருக்கக்கூடியவர். ஆனுல் அவர் தாமும் தனித்திராமல் பிதாவோடுள்ள ஐக்கியத்தைச் சரி நிலேயில் வைத்துக்கொள்ளவும் நடப்பிக்கவும் முடியாதவராயிருந்தார்.

தேவன் தமது ஊழியர் ஒவ்வொருவரையும் இதையறிந்து இந்தப் பாக்கியக் கலேயைப் பழக்கத்திற்குக் கொண்டுவரச் செய்வாரென்ருல் எவ்வளவு நலமாயிருக்கும். ஒவ்வொரு விசுவாசிக்கும் தனித்திருப்பது ஒரு உரிமை என்பதையும், தேவனுேடு தனித்திருத்தல்

அவசியம் என்பதையும் சபை தன் பிள்ளைகளுக்குப் போதிப்பது அவசியம். நாம் தேவனை என்னோடு தனியாய் வைத்திருக்கிறேன், அவர் என்னை அவரோடு தனியாய் வைத்திருக்கிறார் என்ற இந்த எண்ணம் எத்தனை இனிமையானது. —ஆண்ட்ரூ மாரே

லேமர்டன் என்பவர் தாம் எழுதியுள்ள புத்தகங்கள் ஒன்றில் தம் தாய் ஒவ்வொருநாளும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் வழக்கமாய்த் தனியாய்த் தோட்டத்தில் உலவிச் செல்லும் பாதையைப்பற்றிக் கூறியுள்ளார். குடும்பத்தார் ஒருவரும் அந்நேரத்தில் அங்குப் போக மாட்டார்கள். அதுவே அவர்களுக்குத் தேவனுடைய பரிசுத்த தோட்டமாயிற்று. அப்படிப்பட்ட அழகான இடமில்லாத ஏழை ஜனங்கள் இயேசு சொன்னபிரகாரம் அறைவீட்டில் ஜெபிக்கிறார்கள். எல்லாப் பொருள்களின் இரகசியத்தையும் தனிமையில்தான் நாம் புரிந்து கொள்ள முடியும்.

## ஒரு தியானம்

என் ஆத்துமாவே கிறிஸ்துவோடு தனித்திருக்கும் பழக்கத்தை உண்டாக்கிக்கொள்! சீஷர்கள் தனிமையாய்க் கிறிஸ்துவோடிருந்த போது அவர் அவர்களுக்குக் காரியங்களை விளங்கச் சொன்னார் என்று எழுதியிருக்கிறது. அது உண்மையோ என்று சந்தேகியாதே. உன் அனுபவத்திலும் அது உண்மை என்று காண்பாய். உன்னைக் குறித்தே நீ அறியவேண்டுமானால் கூட்டத்தை அப்பால் அனுப்பு. அவர்கள் ஒவ்வொருவராய் போனபின் நீ கிறிஸ்துவோடு தனித்திரு. நமது எதிரியை நமக்கு முன் நிறுத்துவார். மிகுந்த போராட்டத்தில் அடிபட்டு நம்மைப் பெலனடையச் செய்கிறார். புயல்கள் மரங்களின் இலைகளை வளைத்து, அவற்றின் அடிமரத்தை ஒடியச் செய்யும்போது வீசும் இடங்களிலுள்ள மரங்களே பலமாக வேரூன்றி நிற்கும். கஷ்டம் ஒன்றுமில்லாத பாதுகாப்பான, பள்ளத்தாக்குகளில் வசிக்கும் மரங்களின் வேர்கள் அவ்வளவு ஆழமாகச் செல்லா. வாழ்க்கையிலும் இப்படியே நடக்கிறது. வெகு சிறந்த குணங்கள் கஷ்டத்திலிருந்து உண்டாகின்றன.

## அக்டோபர் 28

'தேவனோ இரக்கத்தில் ஐசுவரியமுள்ளவராய் நம்மில் அன்புகூர்ந்த தம்முடைய மிகுந்த அன்பினாலே, அக்கிரமங்களில் மரித்தவர்களாயிருந்த நம்மைக் கிறிஸ்துவுடனேகூட உயிர்ப்பித்தார் . . . நம்மை அவரோடேகூட எழுப்பி, உன்னதங்களிலே அவரோடேகூட உட்காரவும் செய்தார்' (எபே. 2:4–7).

'உன்னதங்களில் கிறிஸ்துவுடன் உட்கார்ந்திருப்பது நம்முடைய சரியான இடம்.' நாம் அங்கே 'அமர்ந்து உட்கார்ந்திருக்கவேண்டும்.' இது எத்தனை பேருடைய அனுபவமாக இருக்கின்றது! அதிகக் குழப்பமும் தொந்தரவும் நிறைந்த இந்த அன்றாட வாழ்க்கையில்

'உன்னதங்களில் அமர்ந்து உட்கார்ந்திருப்பது' முடியாது என்று அநேகர் சொல்லுகிறுர்கள்.

இப்படிப்பட்ட உன்னத இடங்களுக்கு ஓய்வுநாட்களிலும் ஆவிக்குரிய உற்சாகம் ஏற்படும்போதும் போவது ஒருவேளை சாத்தியப்படலாம் என்று நாம் நம்பலாம். ஒவ்வொரு நாளும், நாள் பூராவும் அங்கே 'உட்கார்ந்திருத்தல்' கூடுமான விஷயமல்ல என்று எண்ணுகிறேம். ஆனுல் அந்த வசனங்கள் ஓய்வுநாட்களைப்பற்றி மாத்திரமல்ல, மற்ற வேலை நாட்களைக் குறித்தும் சொல்லப்பட்டவையே என்பது தெளிவாயிருக்கிறது. வெளியரங்கமான கிரியைகளை நடப்பிப்பதற்கும் அமர்ந்த ஆவி இன்றியமையாதது. மறைந்துள்ள ஆவிக்குரிய சக்திகளைக்கொண்டே எல்லாக் காரியங்களையும் வெற்றிகரமாக நடப்பிக்க முடியும். அதனுடைய வேலையைக் கவலையும் கலக்கமுமான ஆவி தடங்கல் செய்யும்.

அமர்ந்திருப்பதில் அதிக வன்மை உண்டு. ஓர் சமயம் ஓர் பரிசுத்தவான் 'நம்பிக்கையோடு அமைதியாயிருக்கக் கற்றுக்கொண்டவனுக்கு எல்லாம் ஆகும்' என்று சொன்னுர். அந்த வார்த்தைகள் அதிகப் பொருள் நிறைந்தவை. இந்தச் சத்தியத்தை அறிந்திருந்தால் நாம் காரியங்களை நடப்பிக்கும் முறையில் மாறுதல் காணப்படும். கலக்கம் இல்லாமல், நாம் நம் உள்ளிந்திரியங்களில் ஆண்டவர் முன் 'உட்கார்ந்திருந்து' அவருடைய ஆவியாகிய பரலோக சக்தியை நாம் எண்ணும் எண்ணத்தை நடப்பிக்கவிட வேண்டும். அவருடைய அமைதியான சக்தி, கிரியை செய்வதை உன்னுல் உணர முடியாதிருக்கலாம். ஆனுல் அது எப்பொழுதும் வல்லமையாய்க் கிரியை செய்துகொண்டிருக்கிறது என்றும், அதன் சக்தியில் இழுத்துச் செல்லப்படுமாறு நீ ஆவியில் அமைதியாய் இருந்தால் அது உனக்காய்க் கிரியை செய்யும் என்று நம்பு.

—மன்னு ஒய்டால் ஸ்மித்

புயல் காற்றின் மத்தியில்
அமர்ந்திருக்கும் இடமுண்டு
அதன் இரகசிய ஆரம்பத்தில் அமைதியுண்டு
சுழல் காற்றின் மத்தியிலுள்ள அவ்வமைதியில்
யாதொரு தொந்தரவும் இல்லாமல்
ஒரு குழந்தை நன்றுய்த் தூங்கலாம்.

எப்படிப்பட்ட நிலைமையிலும் தேவனில் சமாதானமாய்ப் பத்திரமாய் இருக்கப் படிப்பது நீ செய்யவேண்டிய வேலை.

## அக்டோபர் 29

'அவர் உட்கார்ந்து வெள்ளியைப் புடமிட்டுச் சுத்திகரித்துக்கொண்டிருப்பார்' (மல். 3:3).

தம்முடைய பரிசுத்தவான்கள் பரிசுத்தத்தில் பூரணமடையவேண்டும் என்று விரும்பும் பிதா புடமிடும் அக்கினியின் உபயோகத்தை

நன்கு அறிவார். அதிக விலையுயர்ந்த உலோகத்தை அதிக சிரத்தை எடுத்துச் சுத்தப்படுத்துவார்கள். அதை எரியும் நெருப்பில் இடுவார்கள். ஏனென்றால் நெருப்பு அதை உருகச் செய்கிறது. உருகின நிலையில்தான் அதோடு சேர்ந்திருந்த மற்ற பொருள்கள் விலகுகின்றன. எந்த உருவத்தில் வார்க்க வேண்டுமென்றாலும் நன்றாய் வார்க்கலாம். உலோகம் உருக்கும் பழக்கமுடையவன் அதை உருக்கும்போது உருக்குழியருகேயே உட்கார்ந்திருப்பான். ஏனென்றால் அளவுக்கு மிஞ்சின உஷ்ணம் உலோகத்தைக் கெடுத்துவிடும். அது உருக உருகக் கழிம்புமேல் வரும். அதை அகற்றிக்கொண்டேயிருப்பான். இறுதியாக அழுக்கை நீக்கியவுடன் அதனுள் தன் முகம் தெரிந்தவுடன் நெருப்பை அணைத்துவிடுவான்.

ஏழுமடங்கு சூடான நெருப்பின் அருகில் உருக்கப்படும் உபயோகத்தைக் கவனித்தவாறு அவர் இருந்தார்.

அவர் அதை அதிகம் அதிகமாகச் சூடாக்கி அருகருகே வந்து கூர்ந்து பார்த்தார். அந்த உலோகத்தால் நெருப்பின் வன்மையைத் தாங்கக்கூடும் என்பதை அவர் அறிவார். அதைச் சிறந்த பொன்னாக்கவே விரும்பினார். அதைக் கொண்டு விலையுயர்ந்த மணிகள் பதித்த ஒரு அரசனுக்குரிய முடியைச் செய்ய எண்ணினார்.

ஆகவே அவர் நம் விருப்பத்திற்கு மாறாக அந்தப் பொன்னைச் சூளையில் இட்டார். நாம் காணாத வேற்றுப் பொருளை அவர் அதில் கண்டு உருக்கி அதை நீக்கினார். பொன் மேலும் மேலும் அதிகமாக ஒளிபெற்றுத் திகழ்ந்தது. நம் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்ததால் அக்கினியை மட்டும் கண்டோமேயன்றி அவர் கரத்தை நாம் காணவில்லை. ஆகையால் அச்சத்தோடும் கவலையோடும் பலவாறு வினவினோம்.

ஆனால் அந்தப் பொன் அதிக சுத்தமாகி மிளிர்ந்தது. மேலே இருந்த ஒரு உருவத்தைப் பிரதிபலித்துக் காட்டிற்று. அந்த உருவம் நமது கண்களுக்குத் தோன்றாமல் அழியா அன்போடு உலோகத்தை நோக்கியவாறே இருந்தது.

நமக்கு ஒரு கண நேரமாவது துன்பத்தை உண்டாக்குவது அவரது அன்பு நிறைந்த இதயத்திற்குகந்தது என்று நாம் எண்ணலாமா? இல்லை, ஆனால் இந்தத் துன்பத்திலிருந்து அழியாத பேராகிய இன்பத்தை அடைவோம் என்பதை அவர் அறிவார். ஆகவே அவர் மாறாத அன்போடு கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். அந்தப் பொன்னைச் சுத்திகரிப்பதற்கு வேண்டியதைவிட அதிகமான சூடு அதைத் தாக்குமாறு அவர் ஒருபோதும் அனுமதித்ததில்லை.

## அக்டோபர் 30

*'நாம் பொறுமையோடே ஓடக்கடவோம்' (எபி. 12:1).*

பொறுமையோடே ஓடுவது சிரமம். ஓட்டம் பொறுமையில்லை என்பதையே குறிப்பிடுகிறது. எல்லையை அடைய ஆத்திரப்படுகிறோம்.

பொறுமை என்றவுடன் படுத்திருத்தல் என்பதே ஞாபகம் வருகிறது. அதை வியாதியஸ்தனின் படுக்கையறையிலிருந்து கவனித்துக் கொள்ளும் தூதஞக எண்ணுகிறேம். வியாதியஸ்தனின் பொறுமை அடைய முடியாத காரியம் என்று நான் எண்ணுவதில்லே.

அதைவிடப் பெறமுடியாத பொறுமை பொறுமையுடன் ஓடுவதே. துக்கவேளேயில் படுத்திருந்து துர் அதிர்ஷ்டம் உண்டாகும்போது அமைதியாயிருப்பதற்கு வெகு பலம் தேவை. அதைவிடப் பலம் தேவையான மற்ெருரு காரியம் உண்டு. அது துக்கம் வரும்போது வேலே செய்வதேயாகும். உன் இதயத்தை ஒரு பாரம் அழுத்திக் கொண்டிருக்கும்போது ஓடுவதற்கும், ஆவியில் மிகுந்த வேதனே யுண்டாயிருக்கும்போது நாடோடிய வேலேயை நடப்பிப்பதற்கும் அதிக பலம் தேவை, கிறிஸ்துவைப்போன்ற தன்மையே அது.

நாம் கண்ணீர் விடாவிட்டாலும், துக்கத்தை மனதில் பேணி வைக்கிறேம். படுக்கையிலிருக்கும்போது பொறுமையாயிருப்பது அநேகருக்குக் கடினமல்ல. வீதியில் செல்லும்போது பொறுமை யைக் கையாளுவது வெகு கடினமாயிருக்கிறது. நம்முடைய துக்கத்தை விதி என்று சகித்துக்கொள்வதல்ல. வேலே செய்யும் இடத்தில் மற்றவர்களோடு சம்பாஷிக்கும் வேளேயில், மற்றவர்களேச் சந்தோஷிப்பிக்கவேண்டிய நேரத்தில் அப்படிப்பட்ட ஊழியங்களில் நாம் நமது துக்கத்தைப் புதைத்துப்போடவேண்டும். அப்படி நம்முடைய விசனத்தை மறந்திருப்பது கஷ்டம்தான். அதுதான் பொறுமையோடு ஓடுவதாகும்.

மனித குமாரனே! உம்முடைய பொறுமையும் இவ்வாறனதே, அது காத்திருத்தலும் ஓடுதலும் சேர்ந்ததாயிருக்கிறது. உன்னத நோக்கத்தை நிறைவேற்றக் காத்திருந்தீர். அதுவரை எதிர்ப்பட்ட சிறு காரியங்களேயும் சரிவர நடப்பித்தீர். உம்மைக் கானுவூர் கல்யாண வீட்டில் நடந்த விருந்தில் குறை ஏற்பட்டுவிடாதபடி தண்ணீரை இரசமாக்குகிறவராகக் காண்கிறேம். அப்போதெல் லாம், எப்போதும் ஒருவருக்கும் சொல்லப்படாத மாபெரிய துக்கம் உமது உள்ளத்தில் இருந்தது. மக்கள் மேகத்தில் ஒரு வானவில் காட்டும் என்று விண்ணப்பிக்கிறர்கள். நான் உம்மிடம் இன்னும் அதிகமாய்க் கேட்பேன். என் துக்கமாகிய மேகத்தில், மற்றவர் களுடைய சந்தோஷத்திற்காக ஊழியம் செய்யவேண்டுமென்று நானே ஒரு வானவில்லாயிருக்க உம்மை வேண்டிக்கொள்ளுவேன். உமது திராட்சத் தோட்டத்தில் வேலே நடத்தக்கூடிய பொறுமை என்னிடம் இருக்குமானுல் என் பொறுமை பூரணப்பட்டதாகும்,

—ஜார்ஜ் மத்தீசன்

நாம் நம்பிவந்த காரியம் யாவற்றையும் இழக்கும்போது மற்றவர் களுக்காக நம் கரம் ஊழியம் செய்துகொண்டிருப்பது நலம். கடமை செய்வதில் சகிக்கப் பலம் கிடைக்கும். மற்றவர்களுடைய சந்தோ ஷத்தைத் தன் துக்கத்தை மாற்றும் மருந்தாகக் கொள்பவனே பூரண மனிதன்.

## அக்டோபர் 31

'அந்தப்படியே ஆவியானவரும், நமது பலவீனங்களில் நமக்கு உதவி செய்கிறார். நாம் ஏற்றபடி வேண்டிக்கொள்ளவேண்டியது இன்னதென்று அறியாதிருக்கிற படியால் ஆவியானவர் தாமே வாக்குக்கடங்காத பெருமூச்சுக்களோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார். ஆவியானவர் தேவனுடைய சித்தத்தின்படியே பரிசுத்தவான்களுக்காக வேண்டுதல் செய்கிறபடியால் இருதயங்களை ஆராய்ந்து பார்க்கிறவர் ஆவியின் சிந்தை இன்னதென்று அறிவார்' (ரோ. 8:26,27).

இதுவே ஜெபத்தின் ஆழ்ந்த இரகசியம், இதுவே வார்த்தைகளால் சொல்லக்கூடாத தெய்வீக சூட்சுமம். வேத சாஸ்திரமும் இதற்குச் சரியான அர்த்தம் கொடுக்கமுடியாது. ஆனால் வெகு அற்பமான விசுவாசியும் இதை விளங்கிக்கொள்ளாவிட்டாலும் அறிந்திருப்பான்.

நாம் எத்தனையோ பாரங்களைச் சுமக்க ஆசைப்படுகிறோம். ஆனால் அவற்றை இன்னதென்று அறிந்துகொள்ளக் கூடுவதில்லை. நமக்குப் புலனாகாத, பல காரியங்களை நமது இதயம் நாடித் தேடுகிறது. ஆனால் அந்த ஆவல் தேவ சிம்மாசனத்திலிருந்து வரும் மெல்லிய சத்தமேயென்று அறிகிறோம். அது பாட்டாக அல்ல, பெருமூச்சாகக் கேட்கிறது. பறக்கும் செட்டையல்ல, அழுத்தும் பாரமே. ஆனால் அது பாக்கியமான பாரமே. பெருமூச்சில் துதியும், சொல்லி முடியாத ஆனந்தமும் தொனிக்கிறது. அது, 'வாக்குக்கடங்காப் பெருமூச்சு.' அதை நாமே தெரியச் சொல்லி முடியாது. தேவன் தமது கரத்தின் ஸ்பரிசம் தேவையான ஒன்றிற்காக நமக்குள் ஜெபிக்கிறார். அவருக்கு அது நன்றாய்த் தெரியும், இது மாத்திரமே நமக்கு விளங்குகிறது.

ஆகையால் அவரிடம் நம்முடைய இதயத்தில் உள்ள எல்லாவற்றையும் சொல்லிவிடலாம். நம்முடைய ஆவியின் பாரத்தை, நம்மை அழுத்தும் துக்கத்தை அவரிடம் ஊற்றிவிடலாம். அவர் கேட்கிறார், அவர் அன்புகூருகிறார், அவர் விளங்கிக்கொள்ளுகிறார். அவர் ஏற்றுக்கொள்ளுகிறார். நம்முடைய பிரார்த்தனைகளிலுள்ள குறைபாடுகளையும், அறிவீனத்தையும் தப்பிதத்தையும் அகற்றி, பெரிய பிரதான ஆசாரியனாகத் தூபவர்க்கத்தோடும், உன்னதத்திலுள்ள சிம்மாசனத்திற்குமுன் சேர்ப்பிக்கிறார். நம்முடைய ஜெபங்கள் அவருடைய நாமத்தில் ஏறெடுக்கப்பட்டு விடையளிக்கப்படுகின்றனவென்று நாம் அறிவோம்.

தேவனோடு ஐக்கியப்பட்டிருக்கச் சதா அவரோடு நாம் பேசிக்கொண்டும், அவரிடமிருந்து பதில் வாங்கிக்கொண்டும் இருக்க வேண்டிய அவசியமில்லை. பேசுவதைவிட இனிமையான, வார்த்தையற்ற, பரம ஐக்கியமுண்டு. அதிக வேலை செய்துக்கொண்டிருக்கும் தாயாருக்கு அருகில் குழந்தை உட்கார்ந்து கொண்டிருக்கிறது. இரண்டுபேரும் கொஞ்சம் பேசிக்கொள்ளுகிறார்கள். குழந்தை தன் விளையாட்டில் கவனம் செலுத்திக்கொண்டிருக்கிறது. தாய் தன்

வேலையில் ஈடுபட்டிருக்கிறாள். என்றாலும், இரண்டுபேருக்கும் ஒரு நெருங்கிய ஐக்கியமுண்டு. குழந்தைக்குத் தாய் அருகில் இருக்கிறாள் என்று தெரியும். தாய்க்குக் குழந்தை சௌகரியமாயிருக்கிறது என்று தெரியும். அவ்விதமாகவே பரிசுத்தவான்களும், இரட்சகரும் அன்பால் பல மணி நேரம் அன்பின் மௌன ஐக்கியத்தில் இருக்கக்கூடும். பரிசுத்தவான் வெகு சாதாரண காரியம் செய்துகொண்டிருக்கலாம். ஆயினும் தான் செய்யும் ஒவ்வொரு சிறு காரியத்திலும் அவருடைய பிரசன்ன ஸ்பரிசத்தையும், அவருடைய் விருப்பத்தையும், ஆசீர்வாதத்தையும் உணர்ந்தவனாக இருக்கிறான்.

அப்போது வெகு சிக்கலான கஷ்டங்களால் நாம் நெருக்கப்படும் போதும், அவை இன்னவை என்று விளங்கிக்கொள்ளாமல், அவற்றை வார்த்தைகளில் சொல்லவும் இயலாது இருக்கும்போதும், அவருடைய திருக்கரங்களில் நமது முகத்தைப் புதைத்து, நாம் வாய் பேசாது, நம் துக்கத்தை கண்ணீரால் அவருக்கு அறிவித்துவிடுவது எத்தனை இனிமையாயிருக்கும்.

## நவம்பர் 1

'மேகம் தங்கியிருக்கும்போது இஸ்ரவேல் புத்திரர் பிரயாணப்படவில்லை' (எண். 9:19).

இதுவே அவர்களுடைய கீழ்ப்படிதலைச் சோதிக்க உண்டாகிய பெரிய சோதனை. துகில் போன்ற மேகங்கள் ஆசரிப்புக் கூடாரத்தில் வெகு தூரத்தில் மெதுவாய்த் திரண்டு வரும்பொழுது கூடாரம் அமைப்பது எளிதாய் இருந்தது. மேகம் அந்தச் சேனைக்கெதிராய் மேன்மையுடன் மிதந்து நிற்கும். ஒரு காரியத்தைச் செய்வதை விட்டு ஒரு மாறுதல் கிடைப்பது எப்பொழுதும் உற்சாகமாகவே தோன்றுகிறது. அடுத்தாற்போல் போகப்போகும் வழியைக் குறித்தும், அடுத்தாற்போல் தங்கப்போகும் இடத்தைக் குறித்தும் குதூகலம் உண்டாகும். ஆனால் தங்கியிருக்கும்போது உற்சாகம் இருப்பதில்லை.

அந்த இடம் எப்படிப்பட்டதாயிருந்தாலும், மாம்சப் பிரகாரமாய் எவ்வளவு அசௌகரியங்கள் இருந்தாலும், காத்திருத்தல் எவ்வளவு சங்கடமாய்த் தோன்றினாலும், எவ்வளவு ஆபத்துக்கிடமானதாயிருந்தாலும், அவர்கள் தங்கியிருப்பதைத் தவிர செய்யக்கூடியது வேறு ஒன்றுமில்லை.

'நான் கர்த்தருக்காகப் பொறுமையாய்க் காத்திருந்தேன். அவர் எனக்குச் செவி சாய்த்து என் கூப்பிடுதலைக் கேட்டார்' என்று சங்கீதக்காரன் சொல்லுகிறான். பழைய ஏற்பாட்டுக் காலத்துப்

பரிசுத்தவான்களுக்கு அவர் செய்த பிரகாரமே எல்லாக் காலங்களிலும் விசுவாசிகளுக்கு அவர் செய்வார்.

இப்பொழுது தேவன் நம்மை அடிக்கடி காத்திருக்க வைக்கிறார். சத்துரு எதிரே நிற்கிறான். பயங்கரங்கள் சூழ இருக்கின்றன. பாறை நம்மீது விழும்போலிருக்கிறது.

நாம் அப்பால் செல்லவேண்டாமா? இது நாம் கூடாரம் அடிக்க வேண்டிய சமயம் அல்லவா? நம்முடைய சக்தி யாவும் இழக்கும் வரை பாடனுபவித்து விட்டோமல்லவா?

இந்த உஷ்ணத்திற்குத் தப்பி,
பசும்புல் வெளிகளண்டையும்,
அமர்ந்த தண்ணீரண்டையும்
நாம் போக வேண்டாமா?

இவற்றிற்குப் பதில் இல்லை. மேகங்கள் தரித்து நிற்கின்றன. நாம் இங்குத்தான் தங்கி இருக்கவேண்டும். மன்னாவும், பாறையின் தண்ணீரும், பாதுகாப்பும் நமக்கு நிச்சயமாய் உண்டு. தேவன் தம்முடைய பிரசன்னத்தை அருளாமலும், நமக்குத் தேவையானவைகளைக் கொடுக்காமலும் நம்மைத் தங்கி இருக்கச்செய்வதில்லை.

வாலிபனே! காத்திரு! மாறுதல் உண்டாக்க ஆத்திரப்படாதே! ஊழியம் செய். உன் ஸ்தானத்திலேயே இரு. மேகம் நன்றாய் உன் முன் செல்லும் வரை நீ தாமதிக்கவேண்டும். ஆண்டவருடைய திருச்சித்தத்திற்குக் காத்திரு. அவர் அதிகநேரம் கொடுப்பார்.

1 ஒரு மணிநேரம் தங்கியிருக்க வேண்டாமா?
அந்த உன்னத இடத்தை அடைய
நான் வெகுவாய் ஆசைப்படுகிறேன்.
ஆனால் அதிலும் அதிகமாய்—அவர்
வேளைக்காகக் காத்திருக்க ஆசைப்படுகிறேன்.

2 'என் மகளே! இன்னும் அமர்ந்திரு'—
நான் தங்கியிருக்கையில்
கிறிஸ்துவை அறியாதவர்கள் மாளுகிறார்களே
அவர்களண்டை செல்ல ஆசைப்படுகிறேன்
ஆனால் இன்னும் அதிகமாய்—அவர்
வழியை நம்ப ஆசைப்படுகிறேன்.

3 'வாங்குவது நலமே—கொடுப்பது
இன்னும் மிக நலமாகும்
அதிலும் அதிகமாய்—அகலத்திலும்,
ஆழத்திலும், உயரத்திலும்
அவர் சித்தத்தை நம்புவது நலமே.

## நவம்பர் 2

*'சபையார் அவனுக்காக ஜெபம்பண்ணினார்கள்' (அப். 12:5).*

ஜெபமே நம்மைத் தேவனோடு இணைக்கும் சங்கிலி. அதுவே இடையிலுள்ள ஆறுகளைக் கடக்கச் செய்கிறது; அபாயம், தேவை என்ற படுகுழிகளைத் தாண்டச் செய்வதுமான பாலமாகும்.

அப்போஸ்தலர் காலத்துச் சபை எத்தனை தெளிவாய் இதைக் காட்டுகிறது. பேதுரு சிறையில் இருக்கிறார். யூதர்கள் மேற்கொள்ளுகிறார்கள். ஏரோது அதிகாரத்தோடிருக்கிறான். இரத்தச் சாட்சிகளைக் கொல்லும் அரங்கம் அப்போஸ்தலனின் குருதியைப் பருக விடியும் வேளைக்காக காத்திருக்கிறது. மற்ற யாவும் அவர்களுக்கு விரோதமாக இருக்கின்றன. 'ஆனால் இடைவிடாமல் பிரார்த்தனைகள் ஏறெடுக்கப்பட்டன.' அதன் பிறகு என்ன நடந்தது? சிறை திறக்கிறது; அப்போஸ்தலன் விடுவிக்கப்படுகிறான்; யூதர்கள் திகைக்கிறார்கள்; அந்தக் கொடுமையான அரசன் சாகிறான்; மறைவாகத் தேவன் பழிவாங்குகிறார்; தேவனுடைய வார்த்தை வல்லமையாய்ப் பிரசங்கிக்கப்படுகிறது.

நம்முடைய இயற்கைக்கு மேலான ஆயுதத்தின் வன்மையை நாம் அறிவோமா? கேட்பது மாத்திரமல்ல; அதிகாரத்தோடு அதைப் பிரயோகிக்க நமக்குத் துணிபு உண்டா? தேவனே, எங்களுக்குப் பரிசுத்த துணிவையும், பரலோக மன உறுதியையும் தாரும். அவருக்குப் பெரிய் மனிதர்கள் தேவையில்லை. ஆனால் தேவனுடைய வல்லமையை நிரூபித்துக் காட்டத் துணியும் மனிதரே அவருக்கு வேண்டும். தேவன் வேண்டும். ஜெபம் வேண்டும்.

—எ. பி. சிம்ப்ஸன்

அவர் இன்னதுதான் செய்வார் என்று நீ அறிந்துகொண்டது போல் எண்ணிக்கொண்டு, அவிசுவாசத்தினால் அவருடைய கிரியையை மட்டுப்படுத்துவது போன்ற ஜெபங்கள் செய்வதை குறித்து எச்சரிக்கையாயிரு. நினைப்பதற்கும், கேட்பதற்கும், எதிர்ப்பார்ப்பதற்கும்மேலானகாரியங்களைச் செய்வார் என்று எதிர்ப்பார்த்திரு. தேவனிடம் ஜெபத்தில் வேண்டுகோள்களை ஏறெடுக்குமுன் முதலில் அமைதியாக இருந்து அவருடைய மகிமையில் அவரை வணங்கு. அவர் எவ்வளவு செய்யக்கூடியவர் என்பதைச் சிந்தித்துப் பார். கிறிஸ்துவின் வேண்டுதல்களுக்குச் செவி கொடுக்கத் தேவன் எவ்வளவு ஆவலாயிருக்கிறார் என்பதையும், கிறிஸ்துவில் உன் ஸ்தானத்தையும் சிந்தித்துப் பார்த்துப் பெரிய காரியங்களை அவரிடத்திலிருந்து எதிர்பார்.

நம்முடைய ஜெபங்களே தேவனுக்குக் கிரியை செய்ய ஏற்ற சமயங்களைக் கொடுக்கின்றன.

நீ துக்கிக்கப்படுகிருயா? ஜெபம் உன் துக்கத்தை இன்பமும் பெலனும் ஆகச்செய்யும்.

நீ சந்தோஷப்படுகிருயா? ஜெபம் உன்
சந்தோஷத்திற்குப் பரலோக வாசனை யூட்டும்.
உள்ளானவைகளும் புறம்பானவைகளுமான
சத்துருக்களால் உனக்கு ஆபத்து உண்டாகிறதா?
நீ ஜெபித்தால் உன் வலது பக்கத்தில் ஒரு தூதன்
வைக்கப்படுவான்
அவனுடைய கை தொட்டால் இயந்திரக் கல்லும்
தான் அரைக்கும் மாவைவிட தூளாய்ப் போகும்
அவனுடைய பார்வை ஒரு சேனையை மடக்கும்
ஜெபம் உனக்கு என்ன செய்யக்கூடும் என்று நீ
'என்னைக் கேட்டால் தேவன் செய்யக்கூடிய
யாவற்றையும் ஜெபம் உனக்குச் செய்யும்' என்று
விடையளிப்பேன் 'நான் உனக்குக் கொடுப்பதைக் கேள்'
போராடும் மாலைஜெபம் அதிசயங்களைச் செய்யும்.
அதிக நெருக்கடியில் விடுதலை கொண்டு வரும்;
ஜெபம் இரும்புக் கம்பிகளினூடும் வழி செய்யுமே. —ப்ரார்

## நவம்பர் 3

*'சகல மேடுகளிலும் அவர்களுக்கு மேய்ச்சல் உண்டாயிருக்கும்' (ஏசா. 49:9).*

விளையாட்டுச் சாமான்களையும், அற்பமான பொருள்களையும் எளிதாய்ப் பெறலாம். ஆனுல் பெரிய பொருள்களை உயர்ந்த விலை கொடுத்துத்தான் வாங்கவேண்டும். வல்லமையின் உச்ச நிலை இரக்கத்தால் கொள்ளப்படுகிறது. உனக்குத் தியாகம் செய்யக்கூடிய போதுமான இரத்தம் இருக்குமானுல் கொடு முடியை அடையலாம். பரிசுத்தமான மேடுகள் தேவையானுல் அவற்றைப் பிடிக்க நிபந்தனை அதுவே. வீரதீரமான செய்கைகள் எல்லாம் ஒருவன் தன்னை வெறுத்துச் செய்த தியாகச் செய்கைகளேயாகும். வாழ்க்கையின் மதிப்பும், நற்குணத்தின் மதிப்பும் காற்றினுல் அடிக்கப்பட்டு நமக்குக்கொண்டு வரப்பட்டவையல்ல. பெரிய மனிதருக்குப் பெரிய பாடுகள் உண்டு.

1 மேலான சத்தியங்களைப் பெறுவது அரிதாம்
அன்ருட வாழ்க்கையில் பெறும் சாதாரண அறிவு
காற்றடித்துக் கொண்டு வந்ததுபோல் வெகு
எளிதாய் நமக்குக் கிட்டிவிடும்.

2 மேலான சத்தியங்களை அறிவது அரிது
தற்செயலாய்ச் சொப்பனம் போல் கிடைப்பதில்லை
ஆனுல் எதிர்காற்றில் அடிபட்டுக் கஷ்டமடைந்து
ஆத்தும் வருத்தத்தின் பயனை அடையலாம்.

3 பயம், துக்கம், போராட்டம் உண்டாகுங்கால்
ஆண்டவர் தமது வல்லமையான கரத்தை நீட்டி,
இதயத்தை உழுது அடிமண்ணைக் கிளப்புங்கால்
அங்கு புதைக்கப்பட்டிருந்த சத்திய வித்துக்கள்
வெளிவரும்.

4 கஷடப்படும் ஆத்துமாவின் பலவீனம்
தனிமை, வேதனை இவற்றிலிருந்து பிழிந்து எடுக்கப்பட்டு
நன்ருய் உழப்பட்ட வயலின் விளைவுபோல் மெய்யறிவு
உண்டாகும்
ஆத்துமா தன் கண்ணீர் பயனற்றதாய்ப் போகவில்லை
என்று அறியும்.

நம்முடைய விசுவாசத்தைப் பயன்படுத்தவேண்டிய நிலைக்கு நாம் கொண்டுவரப்படும்போது, தேவனை அறியும் நமது அறிவு விசாலமாகும். ஆகையால் நாம் வழியில் கஷ்டங்கள் ஏற்படும்பொழுது தேவன் நமக்காகச் சிரத்தை எடுத்துக்கொள்ளுகிருர் என்று அறிந்து, அவருக்குத் துதி செலுத்தி, அவர்மீது நன்ருய்ச் சார்ந்துகொள்ள வேண்டும்.

## நவம்பர் 4

'நான் கேபார் நதியண்டையில் சிறைப்பட்டவர்கள் நடுவில் இருக்கும்போது வானங்கள் திறக்கப்பட, தேவ தரிசனம் கண்டேன் . . . அங்கே கர்த்தருடைய கரம் என்மேல் அமர்ந்தது' (எசே. 1:1–3).

சிறைவாசம்போல் அறிவைப் போதிக்கத்தக்கது வேறெதுவும் இல்லை. 'பாபிலோன் ஆறுகள் அருகே நாங்கள் உட்கார்ந்து' என்று தொடங்கும் துயரமான சங்கீதம், நம்முடைய சிறைவாசம், தெற்கிலுள்ள ஆறுகளைப்போல மாறியது சந்தோஷ கீதமாக நமக்குத் தொனிக்கிறது.

கஷ்டங்களை அதிகம் அனுபவித்தவன் தேவனுடைய திவ்விய வார்த்தை நிறைந்த புத்தகத்தை விட்டுப் பிரிந்திருக்கமாட்டான். மற்றவர்களின் இதர புத்தகங்கள் அவன் வைத்திருக்கும் புத்தகம் போலிருப்பதாகத் தோன்றும். ஆனுல் அவனுக்கு அப்படியல்ல, அவனுடைய கண்ணீரால் நனைக்கப்பட்ட கிழிந்த வேத புத்தகத்திலே அவனுடைய கண்களுக்கு மாத்திரம் புலப்படும் வண்ணமாய் அவனுடைய அனுபவங்கள் யாவும் பதிவு செய்யப்பட்டுள்ளன. திரும்பத் திரும்ப அவன் பெத்தேலின் தூணண்டையும், ஏலிமின் பேரீச்சந் தோப்புகளண்டையும் வருவான். அவை ஒவ்வொன்றும் அவன் சரித்திரத்திலுள்ள ஏதோ ஒரு இக்கட்டான பாகத்தின் ஞாபகச் சின்னங்களாகும்.

நம்முடைய சிறைவாசத்திலிருந்தும் நமக்கு நன்மை உண்டாகுமென்ருல் நாம் அதை ஏற்றுக்கொண்டு, அதை நன்ருகப் பயன்படுத்

திக் கொள்ளவேண்டும். நாம் விட்டு வந்தவைகளைப் பற்றியும், நம்மை விட்டுப் பிரிக்கப்பட்டவைகளைப் பற்றியும், கவலைப்படுவதினால் நன்மை ஒன்றும் உண்டாகாது. ஆனால் அது நம்மிடத்திலுள்ளவைகளையும் முன்னேறிச் செல்லவிடாமல் தடங்கல்பண்ணும். நம்மைக் கட்டியிருக்கும் கயிறுகளை அதிக நன்றாக இழுப்போமானால் கட்டுகள் இன்னும் இறுகலாகும்.

தன் சேணத்தைப் பொறுமையோடு சகித்துக்கொள்ளாத குதிரை அதின் வார்களால் கழுத்து இறுக்கப்பட்டு மடியும். தன் சேணத்தைப் பொறுமையாய் ஏற்றுக்கொள்ளும் உயர்ந்த ரகமான குதிரைக்கு, அதின் சேணம் முதுகைமாத்திரம் அழுத்தும். ஸ்டேர்ன் என்பவர் இரண்டு பறவைகளைப்பற்றி எழுதியுள்ளார். அவர் ஸ்டார்லிங் என்ற குருவி தான் அடைக்கப்பட்டிருக்கும் கூட்டின் கம்பிகளின்மேல் தன் செட்டைகளை அடித்துக்கொண்டு, 'என்னால் வெளியே வரமுடியவில்லை'., 'என்னால் வெளியே வரமுடியவில்லை' என்று கத்துகிறது. அமைதியான கனேரிப் பறவை தான் அடைக்கப்பட்டிருக்கும் கூட்டில் உட்கார்ந்து வானத்தின் வாசல்வரை பறக்கும் வானம்பாடியோடு போட்டியிடுவதுபோல் அழகாய்ப் பாடும் என்கிறார்.

நமக்கு வரும் எந்தத் தீங்கையும் நாம் ஊக்கமான ஜெபத்தில் நின்று, கடவுள் சமூகத்தண்டை கொண்டு செல்வோமென்றால் அதிலும் மேன்மையான நன்மைக் காண்போம். ஏனென்றால் மழைக்கு ஒதுங்கி, ஒருவன் மரத்தடியில் நிற்கையில், அவன் தேடாத கனிகளை அதில் காணுவதுபோல், நாம் கடவுளின் செட்டைகளின் கீழ் அடைக்கலம் புக ஓடுகையில் முன் நாம் காணாத, அறியாத பல நன்மைகளை அவரில் காண்போம்.

சோதனைகள், கஷ்டங்கள் மூலமாகத்தான் தேவன் தம்மை நமக்கு வெளிப்படுத்துகிறார். யாப்போக்கு என்கிற ஆற்றின் துறையே நாம் தேவனை முகமுகமாய்க் காணக்கூடிய பெனியேல் என்ற இடத்தை அடையச் செய்கிறது. இதனால் நாம் புத்துயிர் அடைகிறோம். இதை நீ உன்னுடையதாக்கிக்கொள். அவர் உன்னை இரவிலும் கீதம் பாடச்செய்வார். 'மரண இருளின் அந்தகாரத்தைக் காலை ஆக்குவார்.'

—வில்லியம் டெய்லர்

'தெய்வ சித்தத்திற்கு அடங்கி நடப்பதே நாம் சாய்ந்துகொள்ளக் கூடிய அதிமிருதுவான தலையணை.'

எனக்குத் தெரியாத ஒரு மகிமை
என் அறையையும் என் வாழ்க்கையையும் நிரப்பிற்று
அது என்னைப் போராட்டத்தில் அமர்ந்திருக்கச் செய்து
கடும் பனி காலத்தில் என் இருதயத்தைச் செழிப்பாக்கியது
கடலிலும், தரையிலும் புயல் அடிக்கத் தொடங்கியவுடன்
வாக்குத்தத்தம் என்னும் பட்சிகள் கிளைகளில் பாடிக்கொண்டிருந்தன.

## நவம்பர் 5

*'கர்த்தரால் ஆகாத காரியம் உண்டோ' (ஆதி. 18:14).*

இந்த வார்த்தைகளால் தேவன் அன்பாய் நம்மை எதிர்வாதத்திற் கழைக்கிறூர். நாம் அதிக ஆழமான, உன்னதமான, தகுதியான, இதய ஆசைகளில் ஒன்றைச் சிந்தித்துப் பார்க்கவேண்டுமென அவர் விரும்புகிறூர். அதை நமக்காகவே நாம் ஆசைப்பட்டிருக்கலாம். அன்றி, நமக்கு அருமையான ஒருவருக்காக ஆசைப்பட்டிருக்கலாம். அது இவ்வளவு காலமாய் நிறைவேறுதிருக்கலாம். அது பிரயோஜன மற்ற ஆசை என நாம் எண்ணலாம். அது ஒரு காலத்தில் நிறை வேறினூலும், நிறைவேறியிருக்கலாம். இப்பொழுது நிறைவேற முடியாது என்பதாயிருக்கலாம். ஆகையால், அது இவ்வுலக வாழ் நாளில் நிறைவேறும் என்ற எண்ணத்தை விட்டிருக்கலாம்.

அந்த விஷயம் ஆபிரகாமுக்கும், சாராளுக்கும் ஒரு மகன் கொடுப்பேன் என்று சொன்னதுபோல், அவருடைய சித்தத்திற்கு ஏற்றதாயிருந்தால் தேவன் அதைச் செய்யும் எண்ணமுடையவரே. அது இப்போது நடக்கக்கூடிய காரியமல்ல. நடப்பதாக யாரும் சொன்னூல், நகைப்புக்கேதுவான காரியமாயிருக்கலாம் என்று நாம் எண்ணினூலும், நாம் தேவனைச் செய்யவிட்டால், அவர் செய்யும் மனதுடன்தானிருக்கிறூர்.

ஆண்டவரால் ஆகாத காரியம் ஏதேனும் உண்டா? முன்னேறிச் சென்று அவரின் சித்தத்தை அவரையே நிறைவேற்ற விடுவோமானூல் கூடாத காரியமும் கூடும். ஆபிரகாமும், சாராளும், அவநம்பிக் கையை விடாதிருந்தார்களேயானூல், ஆண்டவருடைய திட்டம் நிறைவேறுதபடி முட்டுக்கட்டை போடத்தக்கவர்களா யிருந்திருப் பார்கள்.

அவருடைய அன்பையும், வல்லமையையும் நம்பாமலே இருந்தால் அவருடைய திட்டத்தை மறுப்பது தேவனுக்குத் தமது சித்தத்தை நிறைவேற்ருதபடி இடைஞ்சல் உண்டாக்குவதாகும். அவரை நம்பு கிறவர்களுக்கு எகோவாவே ஏதையும் செய்யக்கூடும்.

## நவம்பர் 6

*'நான் நேசிக்கிறவர்களெவர்களோ அவர்களைக் கடிந்துகொண்டு சிட்சிக்கிறேன்' (வெளி. 3:19).*

தேவன் அநேக பாடுகளை அனுபவிக்கத் தமது புகழ்பெற்ற தேர்ந் தெடுக்கப்பட்ட ஊழியர்களையே விடுகிறூர். தேவனிடமிருந்து அதிகக் கிருபை பெற்றவர்கள் அவரிடமிருந்து வரும் அதிகக் கஷ்டங் களையும் சகிக்கக்கூடியவர்களாயிருப்பார்கள். துன்பங்கள் பக்த னுக்குத் தற்செயலாய் உண்டாவதல்ல. தேவனூல் அனுப்பப்பட்டே வருகின்றன. அவர் குறிப்பில்லாமல் தம் வில்லை வளைக்கமாட்டார்.

அவருடைய அம்புகள் ஒவ்வொன்றும் விசேஷித்த வேலையைச் செய்கின்றன. அது யாருக்கு எதிராக அனுப்பப்பட்டதோ, அவனுடைய மார்பிலேதான் தைக்கும். உபத்திரவத்தை அமைதலாய் ஏற்றுக்கொண்டு, பொறுமையாய்ச் சகித்தால் விசுவாசியின் குண இலட்சணங்களை மாத்திரமல்ல, அவனுடைய மகிமையையும் விளக்கும்.

என் காலமெல்லாம் சந்தோஷமானதாயிருந்தால்
ஆண்டவர் பரலோகத்தில் என் கண்ணீரைத் துடைப்பார்
எனக் கூடுமோ?
நாம் ஒருபோதும் களைப்படையாவிட்டால்
கர்த்தர் தமக்குப் பிரியமானவர்களுக்கு
நித்திரையளிக்கிறார் என்ற எண்ணம் வருமோ?
எனக்கருமையானவர்கள் இறந்திராவிட்டால்
நித்ய ஜீவனைக் குறித்து எனக்கு எண்ணம் உண்டாகுமா?
என் கஷ்டமும் கண்ணீரும் என்னுடையவர்களின் சாவும்
அவர் என்னை ஆசீர்வதிக்கும் வழியாயிருக்கலாம்
அவைகளைக் கேடுகள் என்று எண்ணுகிறேன்.
ஆனால் அவைகள் ஆண்டவரை எனக்குக் காட்டும் அன்பாகும்.

ஆத்தும வருத்தமாகிய சோதிக்கும் அக்கினிக்குள் கொண்டுவரப்பட்டவர்களே நன்றாகப் போதிக்கப்பட்ட கிறிஸ்தவர்கள்; நீ கிறிஸ்துவை நன்றாய் அறியவேண்டுமென்று ஜெபித்திருப்பாயானால் அவர் உன்னைத் தனியே வனாந்தரத்திற்கு அழைத்துச் சென்றாலும், வேதனை என்னும் அக்கினிச் சூளைக்குள் நடத்திச் சென்றாலும் வியப்படையாதே!

ஆண்டவரே! என் சிலுவையை என்னை விட்டகற்றி, என்னைத் தண்டியாதேயும். என்னை உமது சித்தத்திற்குக்கீழ் அடங்கச் செய்து சிலுவையை நேசிக்கச் செய்து எனக்கு ஆறுதல் அளியும். உமக்கு நான் எதனால் நன்றாய் ஊழியம் செய்யமுடியுமோ அதை எனக்குத் தாரும். உம்முடைய சித்தத்தின்படி உம்முடைய நாமத்தை மகிமைப்படுத்துவதே நீர் எனக்குச் செய்யும் மாபெரிய இரக்கம் என்று உணர்ந்துகொள்ளச் செய்யும்.

## நவம்பர் 7

'ஆகிலும் எனக்கு இலாபமாயிருந்தவைகளெவைகளோ அவைகளைக் கிறிஸ்துவுக்காக நஷ்டமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன்' (பிலி. 3:7).

ஜியார்ஜ் மத்தீசன் என்னப்பட்ட குருட்டு பிரசங்கியை அடக்கம் செய்தபொழுது அவருடைய கல்லறையைச் சுற்றி, அவருடைய தியாக வாழ்க்கையின் ஞாபகார்த்தமாகச் சிவப்பு ரோஜாமலர் செடிகளை வைத்தனர். இவ்விதமாக மரியாதை செய்யப்பட்ட மனிதன் பின்வரும் கவிதையை எழுதியிருந்தார்.

என்னைப் பிரித்துச் செல்லவிடாத அன்பே சோர்வடைந்த என் உள்ளத்தை உன்மேல் சாய்த்து இளைப்பாறச் செய்வேன். உன்னிட மிருந்து பெற்ற ஜீவனைத் திரும்ப உனக்கே அளிக்கிறேன். உன் பெரு வெள்ளத்தில் கலந்து அதுவும் பெருகிப் பொங்கும்.

என் வழியிலெல்லாம் என்னை நாடிவரும் ஒளியே, என் சிறிய தீபத்தை உன்னிடம் சேர்ப்பிக்கிறேன். என் இதயம் தான் பெற்றுக் கொண்ட ஒளியைத் திருப்பிக் கொடுக்கிறது. உன் பேரொளியில் சேர்ந்தால்தான் அது இன்னும் அதிக அழகுடனும் ஒளியுடனும் இலங்கும்.

துன்பத்தின் மூலமாக என்னைத் தேடுகின்ற இன்பமே, என் இதயத்தினுள் நீ வருவதைத் தடுக்கமாட்டேன். மழையின் நடுவே வானவில்லைக் காண்கிறேன். பொழுது விடிந்ததும் துன்பம் நீங்கும் என்று நம்புகிறேன்.

என் தலையை நிமிர்த்தும் குருசே, உன்னைவிட்டு நீங்க நான் ஒருபோதும் விரும்பமாட்டேன். என் வாழ்விலுள்ள மகிமையனைத் தையும் மண்ணில் புதைத்துவிட்டேன். அழியாத நித்திய வாழ்வு அதிலிருந்து உண்டாகும்.

ஒரு அதிசயமான சிவப்பு வர்ணத்தை கண்டுபிடித்த ஒரு சித்திரக் காரனைக் குறித்து ஒரு கதை உண்டு. அந்த வர்ணக் கலப்பின் இரகசியம் அவனோடேயே மறைந்துவிட்டது. அவனுடைய சாவுக்குப் பின் அவனுடைய மார்பில் ஒரு பழைய காயம் காணப்பட்டது. இது அந்த ஒப்புயர்வில்லாத வர்ணச் சிவப்பு எங்கிருந்து வந்ததென்று காட்டினது. இந்தக் கதை ஒரு சத்தியத்தைப் போதிக்கிறது. அதாவது ஒரு பெரிய காரியத்தைச் சாதிக்க வேண்டுமென்றாலும், ஒரு உன்னத இலட்சியத்தை அடையவேண்டுமென்றாலும் இதய இரத்தத்தைச் சிந்தித்தான் ஆகவேண்டுமென்பது தெளிவாகிறது.

## நவம்பர் 8

'அவர் பேதுருவையும், யோவானையும், யாக்கோபையும் கூட்டிக்கொண்டு ஜெபம் பண்ணுகிறதற்கு ஒரு மலையின்மேல் ஏறினார். அவர் ஜெபம்பண்ணுகையில் அவருடைய முகரூபம் மாறிற்று. அவருடைய வஸ்திரம் வெண்மையாகிப் பிர காசித்தது. அவர்கள் அவருடைய மகிமையைக் கண்டார்கள்' (லூ. 9:28—30). 'ஆண்டவரே உம்முடைய கண்களில் எனக்குத் தயவு கிடைத்ததானால் எங்கள் நடுவில் ஆண்டவராக எழுந்தருளும்' (யாத். 34:9).

ஆண்டவரே உம்முடைய கண்களில் எனக்குத் தயவு கிடைத்த தானால் எங்கள் நடுவில் ஆண்டவராக எழுந்தருளும்' (யாத். 34:9).

இயேசு அந்த மூன்று சீடர்களையும் ஒரு மலைக்குத் தனியே அழைத்துச் சென்றபோது அவர்களைத் தம்மோடு ஐக்கியப்படும்படி செய்தார். அவர்கள் இயேசுவையன்றி வேறொருவரையும் காண

வில்லை. அங்கேயிருப்பது அவர்களுக்கு நலமாக இருந்தது. தங்கள் ஆண்டவரோடு தங்குபவர்களுக்கு மோட்சம் அதிக தூரம் இல்லை.

தியானத்தின்போதும் ஜெபத்தின்போதும் பரலோக வாசல்கள் திறப்பதைச் சிறிதளவேனும் காணுதவர்கள் யார்? அவருடைய இரகசியத்தில் ஐக்கியப்பட்டிருக்கும்போது உணர்ச்சி அலைகள் நம் உள்ளத்தில் வெண் திரையாக மோத, பாக்கியமுள்ளவர்களின் களிப்பை முன்ருசி பார்க்காதவர்கள் யார்?

ஒரு தடவை எர்மோன் மலையின் உச்சியிலும், பல தடவை பரிசுத்த ஒலிவ மலையின் சரிவிலும் அவர் தமது சீடரோடு அமர்ந்திருந்து சம்பாஷித்துள்ளார். ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் இப்படிப்பட்ட ஒரு ஒலிவ மலை இருக்கவேண்டும். நம்மில் அநேகர், விசேடமாய்ப் பட்டணங்களில் வசிப்பவர்கள், அதிக நெருக்கத்தில் இருக்கிறுர்கள். அதிகாலையிலிருந்து படுக்கும் நேரம் வரை சுழல் காற்று அடித்துக் கொண்டு போவதுபோன்று ஓய்வின்றி வேலைகளால் நடத்தப்படு கிறுர்கள். இந்தக் குழப்பத்தில் அவர்களுக்கு அமர்ந்திருந்து சிந்தனை செய்ய நேரமேது? கடவுளுடைய வார்த்தைகளைச் சிந்திக்கவும், ஜெபம் செய்யவும், ஐக்கியப்படவும், அவர்களுக்கு நேரமேது?

பாபிலோனில் விக்கிரக ஆராதனைக்காரருடைய மத்தியில் தானியேலுக்கு ஒரு ஒலிவ மலை அவசியமாக இருந்தது. அதை அவன் தன் அறையில் கண்டான். பேதுரு யோப்பாவில் அதை மேல் வீட்டில் கண்டான். மார்ட்டின் லூத்தரின் ஒலிவ மலை விட்டன் பர்க்கில் அவருடைய மேல் வீட்டிலுள்ள அறையே. அது இந்நாள் வரை பரிசுத்தமானதாக எண்ணப்படுகிறது.

டாக்டர் யோசேப்பு பார்க்கர் என்பவர், ஒரு தடவை 'காட்சிகளைக் காணுவிட்டால், பரலோகத்தின் மகிமையைக் காணுவிட்டால், உன்னத மகிமையை உணராவிட்டால், நம்முடைய மார்க்கத்தை இழப்போம். நம்முடைய பீடம் வெறுங் கல்லாகத் தோன்றும். பரலோகத் தூதன் இல்லாதுபோகும்' என்கிறுர். 'ஆண்டவரைக் கண்டவர்கள் அவருடைய ஊழியத்திற்குத் தேவையான ஆட்கள். தமது ஆண்டவரை தரிசித்த மக்களே இன்று உலகத்திற்குத் தேவை யானவர்கள்.'

அவரை நெருங்கிச் சேருங்கள். தவறிப் பேசி உளறிக்கொட்டும் பேதுருவையும், அவருடைய ஊழியத்தின் நோக்கத்தைத் தப்பர்த்தப் படுத்திய, இடி முழக்கத்தின் மக்களாகிய யாக்கோபையும் யோவானையும் மலையுச்சிக்கு அழைத்துச் சென்றதுபோல், நம்மையும் அழைத்துச் செல்வார். நம்மை அழைத்துச் செல்லக்கூடாது என்பதற்குக் காரணங்கள் இல்லை. ஆகையால் நீ 'இந்தக் காட்சிகளும், அதிசயவெளிப்படுத்துதல்களும், அபூர்வ ஆவிகளுக்குத்தான்' என்று சொல்லி ஒதுங்கி நில்லாதே! உனக்கும் அவை கிட்டலாம்.

## நவம்பர் 9

'அவன் நிழலில் குடியிருப்பவர்கள் திரும்புவார்கள். அவர்கள் தானிய விளைச்சலைப்போலச் செழித்து திராட்சைச் செடிகளைப்போலப் படருவார்கள்' (ஓசே. 14:7).

மாலையில் அதிக மழை பெய்தது. என் தோட்டத்திலிருந்த செடிகளெல்லாம் புயலில் அடிபட்டுக் கீழே சாய்ந்து கிடந்தன. அங்கே வெகு அழகும் இனிய கந்தமும் நிறைந்த ஒரு மலர் இருந்தது. அதன் மேல் எனக்கு அதிகப் பிரியம். அதுவும் புயலால் அடிபட்டது. அந்தப் பூ கீழே சாய்ந்து விழுந்ததால் அதன் இதழ்கள் மூடியிருந்தன. தலை கவிழ்ந்தது. அதின் மகிமை யாவும் மறைந்ததைக் கண்டேன். 'நான் இனி அந்த அழகான மலரைக் காண, அடுத்த வருடம் வரை காத்திருக்கவேண்டும்' என்று எண்ணினேன்.

இரவு கடந்தது. பகல் வந்தது. கதிரோனின் ஒளி பிரகாசித்தது. அது அந்தப் பூவிற்குப் பலனை அளித்தது. ஒளி அதை நோக்கவே அதுவும் ஒளியைப் பார்த்தது. அங்கே இருவருக்கும், சம்பந்தமும் ஐக்கியமும் ஏற்பட்டது. பூவிற்கு ஒளியிடமிருந்து சக்தி அனுப்பப்பட்டது. பூ தன் தலையை நிமிர்த்தித் தன் இதழ்களைத் திறந்தது. அப்போது அதன் மகிமையை அது திரும்பப்பெற்று முன்னிலும் அழகோடு விளங்கிற்று. அது எவ்வாறு நடந்தது. இந்தப் பலவீனமான பூ வன்மை நிறைந்த கதிரவனோடு சம்பந்தப்பட்டதால் பலமடைந்தது.

நான் தேவனோடு சம்பந்தப்பட்டிருந்தால் சகிப்பதற்கும், வேலையைச் செய்வதற்கும் வேண்டிய சக்தியை என்னுள் அடையக்கூடும் என்பது சத்தியமே. ஆனால், அது எவ்வாறு ஆயிற்று என்று அறியேன்.

பெரிதான சோதனையால் உண்டாகிய கஷ்டத்தைச் சகிக்கவேண்டியிருக்கிறதா? கிறிஸ்துவோடு ஐக்கியப்படு. அப்போது நீ வெற்றியடையக்கூடிய பலமடைவாய். 'நான் உன்னைப் பலப்படுத்துவேன்.'

### நேற்றையதின துக்கம்

1 நேற்றுப் பெய்த மழை ரோஜா மலரில்—மாணிக்கமாகவும்
அரச இலையில்—வெள்ளியாகவும், பொன்னரளியில் தங்க
மாகவும் இருக்கிறது
நேற்று வந்த துக்கம் அன்பே உள்ளே அடைத்துள்ள
அமைதியே
அதினால் காலமும் மாறுதலும் அவ்வன்பைப் பாதிக்கா.

2 நேற்றுப் பெய்த மழை மலைகளை ஜொலிக்கச் செய்கிறது
இள மாவிலையில் பவளமாகவும் புல்லில்படிகப் பச்சை
யாகவும் விளங்குகிறது

நேற்றுண்டாகிய துக்கம் ஆத்துமாவைக்
கடந்து போகும் எல்லாக் காற்றிலும் மெதுவான
சப்தத்தைக் கவனிக்கச் செய்கிறது

3 புயலால் அடிபட்டு மனம் சோர்ந்தவர்களே
நாளை இம்மழை செம்பருத்திப்பூவில் தீயாகவும்
முள்ளில் மினுங்கும் வைடூரியமாகவும், நீலப்பூவில் ஆகாய
நிறமாகவும் விளங்கும்!
துக்கமானது நாளையத்தினம் ஏதோ மந்திர சக்தியால்
அழகாக விளங்கும்
—காதரின் லீ. பாட்ஸ்

## நவம்பர் 10

'நம்புவதற்கு ஏதுவில்லாதிருந்தும், அதை நம்பிக்கையோடே விசுவாசித்தான்' (ரோ. 4:18).

ஆபிரகாமின் விசுவாசம் ஏகோவாவின் வன்மையோடும், உண்மையோடும், சதா சம்பந்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. வெளியரங்கமான சூழ்நிலையை நோக்கினுல், அந்த வாக்குத்தத்தம் நிறைவேறும் என்று எண்ண வழியேயில்லை. ஆயினும், அவன் ஆண்டவருடைய வார்த்தையை நம்பினுன். தன் வம்சம் வானத்தின் நட்சத்திரம் போல் அதிகமாய் உண்டாகும் நாளை எதிர்பார்த்திருந்தான்.

என் ஆத்துமாவே! உனக்கு ஆபிரகாமைப்போல் ஒரு வாக்குத்தத்தமல்ல, பல்லாயிரம் வாக்குத்தத்தங்கள் உண்டு. உனக்கு முன்னே அநேக விசுவாசிகள் உனக்கு முன்மாதிரியாய் வாழ்ந்திருக்கிருர்கள். ஆகையால், நீ தேவனுடைய வார்த்தையை நம்பிக்கையால் விசுவாசிப்பது தகுந்த காரியம். அவருடைய சகாயம் தாமதித்தாலும், தீமை பின்னும் பின்னும் அதிகரிப்பதாய்த் தோன்றினுலும், நீ பலவீனமடையாதே! தேவனுடைய வாக்குத்தத்தங்கள் நிறைவேருததுபோல் காணப்படும் தருணத்தில்தான் அவைகள் அதிசயமான விதமாய் நிறைவேறும். ஆகையால், பலனடைந்து சந்தோஷப்படு.

நமக்கு விடுதலை அவருடைய கரத்தால்தான் உண்டாயிற்று என்று நன்ருய் விளங்கும்படி, அதிக அவ்சரமான போதுதான் அவருடைய சகாயம் வரும். எப்போதும் நாம் செய்வதுபோல், நாம் பார்ப்பதும், உணருவதுமான எதின் மேலும் நம்பிக்கை வைக்காமல், நாம் நம்பிக்கை கொள்ளத்தக்க ஆதாரமாக அவருடைய வார்த்தையை மாத்திரமே கொள்ளத் தேவன் இந்த முறையைத் தெரிந்துள்ளார்.

நாம் பார்ப்பவைகளெல்லாம் அபத்தமாகக் காணும்போது விசுவாசம் கிரியை செய்ய ஆரம்பிக்கிறது. கஷ்டமதிகமானுல் விசுவாசிக்கிறது எளிதாகும். இயற்கையாக உண்டாகக்கூடிய வழி

வகை உண்டானுல் விசுவாசம் எளிதாக உண்டாகாது. இயற்கையாக நடக்கக்கூடாததானுல் விசுவாசம் எளிதாய் உண்டாகும்.

—ஜார்ஜ் முல்லர்

## நவம்பர் 11

'புல்லறுப்புண்ட வெளியின்மேல் பெய்யும் பனியைப்போல் இறங்குவார்' (சங். 72:6).

ஆமோஸ் தீர்க்கதரிசி இராஜாவின் புல்லறுப்பைப்பற்றிக் கூறியுள்ளார். நம்முடைய இராஜா அநேகம் புல்லறுக்கும் கத்திகள் வைத்திருக்கிருர், நம்முடைய புல் மைதானங்களை அறுத்துக் கொண்டே இருப்பார். கத்தியைத் தீட்டுக் கல்லின்மேல் வைத்துத் தீட்டும் சப்தம், அநேகமாயிரம் புல் துளிர்களும் அறுபடப்போவதை அறிவிக்கிறது. அதிகாலையில் அழகாய் விளங்கும் அவைகள் இன்னும் சிலமணி நேரத்தில் வெட்டுண்டு வாடி வதங்கி இருக்கும்.

இவ்வாறே மானிட வாழ்க்கையில், வேதனை, ஏமாற்றம், மரணம் இவை வருமுன் தைரியமாயிருப்பதுபோலிருக்கிருேம்.

அழகான, ஒழுங்கான, பட்டுப்போன்ற புல் மைதானம் வேண்டுமென்ருல், அடிக்கடி புல்லை வெட்டிவிடவேண்டும். கர்த்தர் அளிக்கும் வேதனைகளினுலன்றி, நம்மில் பட்சம், அனுதாபம் ஒரே சீராயிருத்தல் என்ற பட்டுப்போன்ற குணங்கள் வளரா. கர்த்தருடைய வார்த்தைகள் மனிதனைப் பலமுறை புல்லுக்கும், அவன் மகிமையைப் பூவிற்கும் ஒப்பிட்டிருக்கின்றன. புல் அறுக்கப்படத் துளிர்கள் தம் சாறுகளைச் சொட்ட, பூவிருந்த இடமெல்லாம் வெறுமையாயிருக்கலாம். அப்போது மெதுவாக விழுந்த மழைத்தூறல் அதற்கு அதிக அவசியமாகும்.

என் ஆத்துமாவே! நீ அறுக்கப்பட்டாய். அப்போதெல்லாம் இராஜா உன்னிடம் கத்தியோடு வந்தார். அவருடைய அரிவாளைக் கண்டு அஞ்சாதே! ஏனெனில், மழை உண்டாவது நிச்சயம்.

—எப். பி. மையர்

1 ஆழமான துக்க அலைகள் இதயத்தின்
காய்ந்த கரையில் மோதுவதுபோல் மோதுகையில்
நம்பிக்கை மறுநாளைக் கண்டு மகிழாமலிருக்கையில்
புயல் ஒருபோதும் ஒழியாதுபோல் அடிக்கையில்

2 இவ்வுலக சந்தோஷங்கள் யாவும்
ஜீவதண்ணீர்போல் ருசி கொடாதிருக்கையில்
நம்முடைய பெரிய நம்பிக்கைகள் யாவும்
சொப்பனம் போல் மறைகையில்

3 இளைத்த ஆத்துமாவிலிருந்து வரும் நொந்த துக்க
வார்த்தையை யாரால் அடக்கக்கூடும்?
அதன் வெறுமையை யார்தான் நிரப்பக்கூடும்?
நித்திய சமாதானத்தைக்கூறி எழும்பும் அலையை யாரால்
அமர்த்தக் கூடும்?

4 குருசாலும், முள்முடியாலும் காயப்பட்ட
அவர் இருதயம் மாத்திரமே இதைச் செய்யக்கூடும்
தமது ஜீவனைக் கொடுத்தவரின்
அன்பான ஆறுதலான வார்த்தையே அவ்வாறு செய்யும்

5 தெய்வீக மருத்துவரே! எங்கள் பாரத்தை இலகுவாக்கும்
உம்முடைய சமாதானத்தை எங்களுக்கீயும்
விடிந்து இருள் நீங்கும்வரை
உமதருகே எங்களை வைத்திரும்.

## நவம்பர் 12

'இவர்கள் குயவராயிருந்து, நெத்தாயிமிலும், கெதேராவிலும் குடியிருந்தார்கள். இராஜாவின் வேலையை விசாரிக்கிறதற்கு அங்கே வாசம் பண்ணினார்கள்' *(1 நாளா. 4:23)*.

'இராஜாவின் வேலைக்காக, நாம் இராஜாவோடு எவ்விதத்திலும் வசிக்கலாம்.' இதற்காகச் சாதகமற்ற வசதியற்ற இடத்திலிருக்க நேரிடலாம். நீ இருப்பது ஒரு குக்கிராமமாயிருக்கலாம். இராஜாவின் காரியம் எப்படி நடைபெறுகிறதென்று நீ அறியக்கூடாதிருக்கலாம். அந்த வேலைக்கு முட்டுக்கட்டைகள் அநேகமிருக்கலாம். முட்புதர்களிடையே வேலைசெய்ய நேரிடலாம். நம்முடைய அன்றாட வாழ்க்கைக்கான பாத்திரங்கள் வனைவதற்கே நமக்குப் பொழுது சரியாயிருக்கலாம்.

பரவாயில்லை, 'அங்கு' நம்மை வைத்த இராஜா அங்கும் வந்து நம்மோடு வசிப்பார். முட்டுக்கட்டைகளை விலக்குவார். ஒருவேளை அந்தப் புதர்கள் நமக்குப் பாதுகாவலாயிருக்கலாம். இல்லையெனில் அவைகளை அப்புறப்படுத்துவார். நாம் வனைந்துகொண்டிருக்கும் பாத்திரங்களையே தேவன் நாம் செய்யத்தகுந்தவை என்று காணலாம். ஆகையால் இப்போதைக்கு இது அவருடைய வேலையே.

1 அன்பே, திரும்பித் தோட்டத்திற்குப் போ,
சாயங்காலம்வரை அங்கிருந்து
பூக்களைக்கட்டு, செடிகளைக் கட்டிவிடு,
உன் எஜமான் உன்னை அழைக்கும்வரை நீ அங்கிரு.

2 உன் தோட்டத்தை நீ உன்னாலானவரை அழகுபடுத்து
நீ ஒருபோதும் தனியாய் வேலை செய்வதில்லை.
உனக்கு அடுத்த தோட்டத்தில் வேலைசெய்பவன் அதைப்
பார்த்துத்
தன் வேலையைச் சீர்படச் செய்வான்.

சூரிய அஸ்தமனக் காலத்திலுண்டாகும் வர்ண விந்தைகளும், நட்சத்திரம் நிறைந்த வான வெளியும் அழகான மலைகளும், கடல்களும், கந்தம் வீசும் மரங்களும், சித்தரிக்கப்பட்ட மலர்களும், இயேசுவின்மேலுள்ள அன்பினால், சாதாரண கஷ்ட, நஷ்டம் நிறைந்த சுவையற்ற வாழ்க்கையில் ஊழியம் செய்யும் ஒரு ஆத்துமாவின் அழகுக்கு ஒப்பாகா.

உலகத்தார் தங்களைப் புகழ்ந்து பேசக்கூடிய மேலான யாதொரு காரியத்தையும் செய்து இருக்காத சாதாரண மக்களிடையேதான் மிகவும் தூயதான ஆன்மஜீவியம் உண்டு. இருண்ட பள்ளத்தாக்கில் சிற்றோடையினருகில் மறைந்துகிடந்து தன் கந்தம் நிறைந்த மலர்களினாலேயே தான் இருப்பதைக் காண்பிக்கும் ஓர் சம்பங்கி மலர்போன்று ஓர் தேவதூதனின் வாழ்க்கைபோல உள்ள அவர்களது வாழ்க்கை தூய்மையுள்ளதாக இருக்கின்றது.

## நவம்பர் 13

*'அவன் தன் பிள்ளைகளுக்குக் கட்டளையிடுவான் என்பதை அறிந்திருக்கிறேன்' (ஆதி. 18:19).*

தேவன் தாம் நம்பக்கூடிய ஜனங்களையே விரும்புகிறார். ஆபிரகாமைக் குறித்து அவர் 'கர்த்தர் ஆபிரகாமுக்குச் சொன்னதை நிறைவேற்றும்படியாய் அவன் தன் பிள்ளைகளுக்கும், தனக்குப் பின் வரும் தன் வீட்டாருக்கும், நீங்கள் நீதியையும், நியாயத்தையும் செய்து கர்த்தருடைய வழிகளைக் காத்து நடவுங்கள் என்று கட்டளையிடுவான் என்பதை அறிந்திருக்கிறேன்' என்று சொல்லக்கூடியவராயிருந்தார். நாம் தேவனை நம்பலாம். நாமும் அப்படி நிலையானவர்களாகவும், நம்பப்படத்க்கவர்களாகவும் இருக்கவேண்டுமென்று தேவன் விரும்புகிறார். இதுவே விசுவாசத்தின் பொருள்.

ஆண்டவர் தமது அன்பு, வல்லமை, உண்மையான வாக்குத்தத்தங்களாகிய இவற்றின் பாரத்தைச் சுமத்தக்கூடிய ஒரு ஆளைத் தேடுகிறார். ஆண்டவருடைய இயந்திரங்கள் நாம் எவ்வளவு பாரத்தை ஏற்றினாலும், இழுக்கக்கூடிய பலமுள்ளவையாயிருக்கின்றன. நாம் அவற்றோடு இணைக்கும் கம்பி, நம்முடைய ஜெபத்தின் பாரத்தைத் தாங்கக்கூடாதபடி, அத்தனை பலவீனமானதாயிருக்கிறது. ஆகையால் தேவன் நம்மைப் பக்குவப்படுத்துகிறார். நாம் அப்போதனைகளைக் கருத்தாய்ப் படித்து, உறுதியாய் நிற்போமாக.

—எ. பி. சிம்சன்

உனக்கு அந்தச் சோதனையைத் தாங்கமுடியும் என்று அவர் அறிவார். உன்னால் முடியாத காரியம் என்றால், அதை அனுப்பியிருக்க

மாட்டார். வாழ்க்கையின் சோதனைகள் எத்தனை கசப்பானவையா யிருந்தாலும், அவை அவர் உன்னை நம்புவதால் அனுப்பப்பட்டவை என்று உணருவாய். ஆண்டவருக்கு நம்முடைய பலம் தெரியும். அதைத் திட்டவட்டமாய் அளவிட்டுள்ளார். தேவன் மூலமாய்ப் பெறும் மானிட சக்திக்கு மேற்பட்ட சோதனை ஒருபோதும் மனித னுக்குக் கொடுக்கப்பட்டதில்லை.

## நவம்பர் 14

'கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும். செத்ததேயாகில் மிகுந்த பலனைக் கொடுக்கும்' (யோ. 12:24).

நார்த்தாம்டன் என்னுமிடத்தில் உள்ள கல்லறைத்தோட்டத்தில் டேவிட் பிரெய்னுட் என்பவரின் கல்லறையிருக்கிறது. அதனருகில் ஜெரூசா எட்வர்ட்ஸ் என்பவளின் கல்லறையிருக்கிறது. அவளை அவர் நேசித்தார். ஆனால் அவளை மணம்புரியுமுன் இளமையில் காலஞ்சென்று விட்டார்.

அந்த மனிதன் உயிரோடு அநேக வருடங்கள் இருந்திருப்பா ரென்றால், கிறிஸ்துவுக்காக அதிக வேலைசெய்திருப்பார். ஆனால் அவர் இளமையிலே மரித்துவிட்டார். அவர் ஞாபகார்த்தமாகச் சில செவ்விந்தியரைக் குணப்படுத்தியுள்ளார். ஆனால் அவருடைய மாமனாக வேண்டியவரான யோனத்தான் எட்வர்ட் என்னும் பக்தன் அவருடைய ஞாபகார்த்தமாக அவருடைய வாழ்க்கையைபற்றி ஒரு புத்தகம் எழுதியுள்ளார். அந்தப் புத்தகம் செட்டை விரித்து எழும்பிக் கடல்கடந்து சென்று 'கேம்பிரிட்ஜ்' கலாசாலை மாணவரா யிருந்த ஹென்றி மார்ட்டின் என்பவரின் மேஜையின்மேல் அமர்ந்தது.

அவர் அதை வாசித்தார். தம் உபகாரச் சம்பளத்தையும், படிப் பையும், கலைஞானத்தையும், சந்தர்ப்பங்களையும் விட்டுவிட்டார். இந்தியாவில் ஊழியம்செய்து திரும்பினார். தம் சுயதேசம் திரும்பி னார். அப்போது சுகவீனனாகிவிட்டார். கருங்கடலுக்குச் சமீப மான கணவாய்வரை நடந்தே வந்து அங்கு அதிக ஜுரத்தினால் மாண்டார். இக்கஷ்டங்களினால் அவர் சாதித்தது என்ன?

இவ்விரு வாலிபரும் ஏன் இப்படித் தங்கள் வாழ்நாளை வீணாக்கி னர். இவர்களின் தியாக வாழ்விலிருந்துதான் அநேகமாயிரம் மிஷனெரிகள் தோன்றினர்.

தூதரின் தேவரீரே—நீர் என்னை
ஒரு வனாந்தரத்திற்குள் அன்றி அகண்ட ஆழிக்குள் அனுப்பு
கிறீரா?

ஒரு பெரிய மரத்தை வெட்டிச் சாய்த்து
ஒரு நிலத்தை உழுது உடைத்து
கைநிறைய விதை யள்ளித் தூவி
அது ஒன்று நூருகப் பலன்தர அதைக்கொண்டு
தெய்வத்தின் பிள்ளைகளைப் போஷிக்க அனுப்புகிறீரா?
அந்த வனந்தரத்தையும், சமுத்திரத்தையும் எனக்குக்
காட்டும்
அது உமது ஊழியமாஞல் ஆண்டவரே என்னை அனுப்பும்
என் சடலம் கடலின் ஆழத்தில் கிடந்தாலும்
என்னை விசுவாசிகளில் ஒருவனுகச் சேர்த்துக்கொள்ளும்.

## நவம்பர் 15

'கிறிஸ்துவின் வல்லமை என்மேல் தங்கும்படி (2 கொ. 12:9) எங்கள் பலத்திற்கு மிஞ்சின அதிக பாரமான வருத்தம் எங்களுக்கு உண்டாயிற்று' (2 கொ. 1:8).

பெனியேலில் யாக்கோபு வணங்கினபோது தேவனை முன்பு ஒரு போதும் பிடித்திரா வண்ணம் பிடித்துக்கொள்ளத்தக்கதாய், தேவன் அவனுக்கு ஆபத்துகள் நெருங்கும்படி செய்தார். அந்த ஆபத்தான நெருக்கடி வேளையில் அவன் தேவனைப்பற்றிய அறிவு, அதிகமடைந்து, விசுவாசத்தை அதிகப்படுத்திக்கொண்டான். புதிய ஜெப வாழ்க்கையை ஆரம்பித்தான்.

தாவீதை ஆண்டவர் அநேக ஆண்டுகள் கஷ்டங்களுக்குட்படுத்தி, தம்முடைய வல்லமையையும், உண்மையையும் அவனை அறியச் செய்தார். இவைகளே அவன் ஓர் சிறந்த இஸ்ரவேலின் அரசனுக விளங்கத்தக்கதாக, விசுவாசத்திலும் பக்தியின் அடிப்படை கொள்கைகளிலும் அவனை வளரச்செய்தன.

பவுல் அப்போஸ்தலன் தொடர்ந்து அதிக இக்கட்டான நிலைமைக்குள் ஆகாவிட்டால் 'என் பலம் உனக்குப் போதும்' என்ற சத்தியத்தை நன்கு உணர்ந்திருக்கமாட்டார்.

நம்மில் அநேகர் நம்முடைய கஷ்டங்களின் மூலமாகத்தான் நாம் தேவனை இப்பொழுது அறிந்திருக்கிற அளவு அறிந்திருக்கிறோம். நாம் இப்பொழுது நம்புகிற அளவு நம்புகிறோம். கஷ்டகாலங்களில் அவரிடமிருந்து கிருபை பெறவும் அறிந்திருக்கிறோம்.

கஷ்டங்களும், இடைஞ்சல்களும், நம்முடைய விசுவாசத்தை அறைகூவி அழைக்கின்றன. நம்முடைய ஊழியத்தில் நமக்கு இடைஞ்சல்கள் உண்டாகும்போது அவற்றைக் கிறிஸ்துவின் சம்பூரணத்திலிருந்து நாம் விசுவாசத்தால் நிரப்பிக்கொள்ள வேண்டிய பாத்திரங்களாகக் கொள்ளவேண்டும். அவரைப் பூரணமாய் விசுவாசித்து, முன்னேறிச் செல்லும்போது நமக்குப் பரி

சோதனை உண்டாகும். நாம் காத்திருந்து நமது பொறுமையின் அளவைக் காட்டவேண்டியதாயிருக்கலாம். ஆனால் இறுதியில் அது அப்பால் தள்ளப்படும். நாம் சோதிக்கப்பட்ட சமயங்களுக்காக இரண்டத்தனையாய்ப் பதிலளிக்க, ஆண்டவர் காத்துக்கொண்டிருப்பதைக் காண்போம். —எ. பி. சிம்ப்ஸன்

## நவம்பர் 16

'மரணம் நேரிடுவதாயிருந்தாலும் அதற்குத் தப்பும்படி, தங்கள் ஜீவனையும் பாராமல், ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினால் அவனை ஜெயித்தார்கள்' (வெளி. 12:11).

யாக்கோபும், யோவானும், தங்கள் தாயாரோடு வந்து, கிறிஸ்துவை நோக்கி, பரலோக இராச்சியத்தில், தங்களுக்கு முதன்மையான இடம் தரும்படி கேட்டபொழுது, அவர் அவர்கள் வேண்டுகோளை மறுக்கவில்லை. ஆனால் அவர் அவர்களைப் பார்த்து, தாம் குடிக்கும் பாத்திரத்தில் குடித்துத் தாம் பெற்ற ஞானஸ்நானத்தை அவர்களும் பெற்றுத் தம் ஊழியத்தை நடப்பிக்கக்கூடுமானால், அது அவர்களுக்குக் கொடுக்கப்படும் என்றார்.

இந்தப் பந்தயத்தில் ஈடுபட விரும்புகிறோம். பெரிய காரியங்களைச் சுற்றிக் கடினமான நெருக்கங்கள் உண்டு. நம்முடைய வழியிலும், காடுகளும், மலைகளும், இரும்பு இரதங்களும் எதிர்ப்படும். முடிசூட வேண்டுமென்றால் கஷ்டப்பட்டுத்தான் ஆகவேண்டும். வெற்றித் தோரணங்கள், ரோஜாமலராலும் பட்டுக்கயிறுகளாலும் கட்டப்பட்டவை அல்ல. அவைகள் கொடூரமான அடிகளாலும், காயங்களாலும் கட்டப்படுபவை. உன் வாழ்க்கையில் தற்சமயம் நீ அனுபவிக்கும் கஷ்டங்கள் உன் கிரீடத்தை யடையுமாறு தேவன் உனக்கு அருளினவைகளே.

தகுதியான சூழ்நிலைக்காகவும், விசேஷமான கஷ்டங்களுக்காகவும் பின்னால்வரும் அவசரங்களுக்காகவும் காத்திராதே. இன்றையத்தினம் தெய்வச்செயலாய் உனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் நிலைமையைச் சந்திக்க ஆயத்தப்படு. இவைகளின் மத்தியில்தான் உன் மகிமையின் கிரீடம் புதைந்து கிடக்கிறது. இந்த மணிநேரத்தில் இந்த வாரத்தில், இந்த மாதத்தில் உண்டாகும் கஷ்டங்களிலேயும், சோதனைகளிலேயுமே அது மறைந்து கிடக்கிறது. வெகு கஷ்டமான காரியங்கள் உலகறிந்த காரியங்களல்ல. இயேசுவேயன்றி வேறொருவரும் அறியாததும், வேறொருவருக்கும் அறிவிக்கக்கூடாததும், இரத்தச் சாட்சியாய் மரிப்பதைவிடக் கஷ்டமானதுமான ஒரு சின்ன சோதனை உன் இதயத்தின் ஆழத்திலிருக்கலாம்.

அன்புள்ள சகோதரனே! அங்கேதான் உன் கிரீடம் இருக்கிறது. அந்தச் சோதனையை மேற்கொண்டு, அந்தக் கிரீடத்தை அடைய தேவன் உனக்குச் சகாயம் செய்வாராக!

யுத்தம் அதிக காலம் நடந்துகொண்டிருந்தாலும்
எவ்வளவு கடூரமாய் இருந்தாலும்
தளராதே! போரைத் தொடர்ந்து நடத்து!
நாளையத்தினம் வெற்றிக்கீதம் பாடலாம்.

## நவம்பர் 17

'அநீதியுள்ள அந்த நியாயாதிபதி சொன்னதைச் சிந்தித்துப் பாருங்கள். அந்தப் படியே தேவன் தம்மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிறவர்களாகிய தம்மால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களின் விஷயத்தில் நீடிய பொறுமையுள்ளவராயிருந்து அவர்களுக்கு நியாயஞ் செய்யாதிருப்பாரோ? சீக்கிரத்தில் அவர்களுக்கு நியாயஞ் செய்வார்' (லூ. 18:6–8).

தேவனுடைய பருவகாலங்கள் நமது சொற்களுக்கு அடங்கியவை யல்ல. நெருப்புப் பற்றவைக்க, கல்லில் ஒருமுறை தட்டி நெருப்புப் பற்றவில்லை எனில், மறுபடியும் தட்டவேண்டும். தேவன் நம் ஜெபத்தைக்கேட்பார். ஆனால் அது நமக்கு எப்பொழுது கேட்கப் படவேண்டுமென்று நாம் எண்ணுகிறோமோ, அப்பொழுது கேட்கப் படாதிருக்கலாம். அவரைத் தேடுகிற நமக்குத் தம்மை வெளிப் படுத்துவார். ஆனால் நாம் நினைக்கிற இடத்திலும், நேரத்திலும், தம்மை நமக்கு வெளிப்படுத்தியிருக்கலாம். ஆதலால் வேண்டுதலில் விடாமுயற்சி அவசியம்.

நெருப்புக்குச்சி கண்டுபிடிப்பதற்கு முன்னால், நெருப்புப் பற்ற வைக்க கல்லின்மீது பஞ்சில் நெருப்புப் பற்றும்வரைக்கும் இரும்பினால் அடிக்கவேண்டும். நெருப்புப் பற்றிவிட்டால் மிகவும் சந்தோஷம் அடைவோம்.

இதைப்போலவே ஆத்மீக விஷயங்களிலும் நாம் நம்பிக்கையுடனும் விடா முயற்சியுடனும் இருக்கவேண்டாமா? நெருப்புப் பற்ற வைக்க முயல்வதைவிட இதில் நமக்கு அதிக நிச்சயம் உண்டே.

மனத் தளர்வடையாதிருப்போமாக! தேவனுடைய இரக்கத்தின் காலம் நிச்சயமாக வரும். ஏன்! அது வந்துவிட்டது. நமது நம்பிக்கைக்குரிய காலம் வந்துவிட்டது. திடசித்தமாய் விசுவாசத் தோடு கேட்போமாக. அவர் பதில் கொடுக்கத் தாமதிப்பதால் மனம் தளர்ந்து விண்ணப்பத்தை விடாதிருப்போம். மேன்மேலும் நெருப்பு வரும்வரை இரும்பைக்கொண்டு அடிப்போம். பொறி பறக்கும்; பஞ்சை ஆயத்தமாய் வைத்திருப்போம். சீக்கிரத்தில் நெருப்புக் கிடைக்கும். —சி. எச். ஸ்பர்ஜன்

சரியான உள்ளத்தோடு சரியான முறையில் செய்யப்பட்ட சரியான ஜெபம் உத்தரவு அருளப்படாமல் விடப்பட்டதாகத் தேவ இராச்சியத்தின் சரித்திரத்தில் எங்கேயாகிலும் காணப்பட்டால் நான் அதை நம்பமாட்டேன்.

## நவம்பர் 18

'என்னிடத்தில் இடறலடையாதிருக்கிறவன் எவனோ அவன் பாக்கியவான்' (லூ. 7:23).

கிறிஸ்துவில் இடறலடையாதிருப்பது சில சமயம் கஷ்டமே. இடறல்கள் சூழ்நிலையைப் பொறுத்திருக்கலாம். நான் அதிக சமயம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கும்போது, நான் சிறையில் இக்கட்டான இடத்தில் வியாதிப் படுக்கையில் ஜன சமூகத்தில் செல்வாக்கின்றி இருக்க நேரிடுகிறது. ஆம்! ஆனால் எனக்கு எது நல்லது என்பதை அவர் அறிவார். என் சூழ்நிலை அவர் நிச்சயித்ததே! அது என் விசுவாசத்தை உறுதிப்படுத்தி, என்னை அவருடன் நெருங்கிய ஐக்கியத்திற்கு இழுத்து, என் பலம் பூரணப்படச் செய்யும் வழியாகும். இருட்டறையில் என் ஆத்துமா களிகூருகிறது.

இடறல் மனதில் உண்டாவதாயிருக்கலாம். நான் விரும்பாத மனச்சஞ்சலங்களும், கேள்விகளும், சந்தேகங்களும் என்னுள்ளத்தில் தோன்றிக்கொண்டேயிருக்கின்றன. நான் என்னை அவருக்கு ஒப்புக்கொடுத்தபோது என் ஆகாயம் தெளிவாயிருக்குமென்று நம்பினேன். ஆனால் மூடுபனியும் மேகமும் அதை அடிக்கடி மறைக்கின்றன. கஷ்டங்கள் இருந்தால் நான் இன்னும் அவரை நன்றாய் விசுவாசிக்கவும், நம்பிப் பயப்படாதிருக்கவும் படிக்கவே அவை இருக்கின்றன என்று நம்பவேண்டும். என் மனதில் உண்டாகும் போராட்டங்களால் என்னைப்போல் போராடும் மனிதருக்குக் கற்பிக்கும் ஆசிரியனாகப் பயிற்சிபெறுகிறேன்.

இடறல் ஆவிக்குரியதாயிருக்கலாம். அவருடைய செட்டையின் கீழ் யாதொரு சோதனையும் என்னைத் தொடாது என்று நான் எண்ணி மகிழ்ந்திருக்கிறேன். ஆனால் இப்பொழுது இருக்கும் நிலைமையே மேலானது. அவருடைய கிருபை அதிகமாய் விளங்கும். என் குணங்கள் அதால் வளரும். அவருடைய மோட்சம் பாடுகளின் இறுதியில் இன்னமும் இன்பமாயிருக்கும். அங்கே நான் வரும் வழியில் ஏற்பட்ட சோதனைகளைத் திரும்பிப் பார்த்து என்னை வழி நடத்தினவருக்குத் துதிபாடுவேன். ஆகையால் என்ன வந்தாலும் வரட்டும். அவருடைய சித்தம் என் பாக்கியம். என் அன்பு நிறைந்த ஆண்டவரில் நான் இடறலடையமாட்டேன்.

1 நாளுக்கு நாள் தெய்வ சக்தி மற்றவர்களுக்கு
விடுதலை யளித்து வரும்போது
எவன் இடறலடையாதிருக்கிறானோ?
அவன் பாக்கியவான்.

2 அவன் ஆத்துமா ஒரு தனித்த சிறையில்
வாழ்க்கை பூராவும் கழிக்க நேர்ந்தாலும்
அவன் பிதாவின் அன்பை நம்பி
மனத்திருப்தியாயிருக்கலாம்.

3 ஊழியஞ் செய்ய முடியாது
அதிக நாள் கஷ்டப்பட நேரிடினும்
மற்றவர்களின் ஊழியத்தில் தன் ஜெபத்தால்
பங்கு பெறுகிறவன் பாக்கியவான்.

4 உன் கஷ்டங்களின் நோக்கம் விளங்காவிட்டாலும்
உன் வாழ்க்கையை முற்றிலும் சந்தோஷமாய்
அவர் கையில் விட்டு வைக்கும்போது
நீயே பாக்கியவான்.

5 வெற்றியின் எல்லையை அடையும் வரை
விளங்காத சோதனைகளாலும்
புரியாத இரகசியங்களாலும் இடறல்
அடையாதவன் பாக்கியவான். —ப்ரிடா

## நவம்பர் 19

'அநேக இக்கட்டுகளையும் விபத்துகளையும் காணும்படி செய்த என்னை நீர் திரும்பவும் உயிர்ப்பித்தீர்' (சங். 71:20).

தேவன் நமக்குக் கஷ்டங்களைக் காட்டுகிறார். இந்தக் கஷ்டங்கள் வருகையில் பூமியின் ஆழங்களுக்கு நாம் இறங்கவேண்டியதாயிருக்கும். பாதாளத்தில் இறங்கி, மரித்தோரோடு புதைக்கப்பட்டுக் கிடக்கவேண்டியதாயிருக்கும். ஆனால் ஒருபோதும் நம்மையும் தேவனையும் இணைக்கும் கயிறு அறுந்துபோகத்தக்கதாய் இழுக்கப்படாது. ஆழங்களிலிருந்து தேவன் நம்மைத் திரும்பக் கொண்டு வருவார்.

தேவனை ஒருபோதும் சந்தேகியாதே. அவர் மறந்தார், கைவிட்டார் என்று ஒருபோதும் சொல்லாதே! அவர் அனுதாபங் காட்டுகிறதில்லை என்று ஒருபோதும் எண்ணாதே! அவர் உன்னைத் திரும்பவும் உயிர்ப்பிப்பார். நூல் எவ்வளவாகச் சிக்கிக்கொண்டிருந்தாலும், அதில் விடுபட்டிருக்கும் ஒரு முனை இருந்தே தீரும். அதிக நீளமாகத் தோன்றும் பகலும், சாயங்காலப் பாட்டுடன் வந்து முடியும். கடும்பனி அநேக நாள் தரையை மூடியிருக்கலாம். ஆனால் இறுதியில் அது விலகியேதான் தீரும்.

உறுதியாயிரு! உன் ஊழியம் வீண்போகாது
தேவன் திரும்பிப் பார்த்து உன்னைத் தேற்றுவார்.

அவ்வாறு அவர் தேற்றும்போது பாட்டுக்களை மறந்திருந்த ஆத்துமா சந்தோஷ கீதம் பாடும். அப்போது சங்கீதக்காரனைப் போல் 'கர்த்தரை நான் ஸ்தோத்தரிப்பேன், அவர் துதி எப்போதும் என் வாயிலிருக்கும்' என்று பாடுவோம்.

மாரிகாலம் வந்து குளிர் காற்று வீச
வாடைக் காற்று அதிகமாகி
ஆகாயம் மேகத்தால் மூடப்பட
காய்ந்த உதிர்ந்த இலைகள் வேனிற்காலம் போயிற்றென்றுகூற
நான் முகத்தைப் பரலோகத்திற்கு நேராய் ஏறெடுப்பேன்
வேனிற்காலக் கடல்போல் என் இதயம் அமர்ந்திருக்கும்
கடவுள் கொடுத்தது எதுவானாலும்
சந்தோஷமாய் ஏற்றுக்கொள்வேன்
வாடை அடிக்கும்போது அவர் அதை அனுப்பினார் என்பேன்
அவர் காற்றுகள் ஆசீர்வாதம் வீசும்.
என் தேவை எல்லாம் அவர் கவனித்துக் கொள்வார்
காற்றடித்தாலும் என் இதயம் உற்சாகமாகவே இருக்கிறது,

## நவம்பர் 20

'காத்திருந்து சேருகிறவன் பாக்கியவான்' (தானி. 12:12).

காத்திருத்தல் எளிதாகத் தோன்றலாம். அநேக வருடங்கள் உபதேசிக்கப்பட்ட பின்புதான் ஒரு கிறிஸ்தவப் போர் வீரன் இந்த நிலையைக் கற்றுக்கொள்ளுகிறான். முன்னேறிச் செல்லுதலும், விரைவாய் முன்னேறிச் செல்லுதலும், அமைதியாய் நிற்பதைவிட, தேவனுடைய போர்வீரர்களுக்கு எளிதாயிருக்கிறது.

அதிக ஆவலாய்த் தேவனுக்கு ஊழியஞ் செய்யத் தேடும் பிள்ளைகள் எந்தப் பங்கை எடுத்துக்கொள்வது என்று உணரக் கூடாமல், பல மணி நேரங்கள் கலங்கித் தவிக்கிறார்கள். அப்பொழுது அவர்களால் என்ன செய்யக்கூடும்? அவநம்பிக்கை கொண்டு, தங்களை அலைக்கழித்துக்கொள்ளலாமா? திரும்பிச் செல்வது கோழைத்தனம். வலதுபுறம் செல்லப் பயம். முன்னேறிச் செல்வது அதிகப்பிரசங்கித்தனம்.

இவை ஒன்றும் வேண்டாம் காத்திரு. ஆனால் ஜெபத்தோடு காத்திரு. தேவனை நோக்கிக் கூப்பிட்டு அவர் முன் உன் காரியங்களைக் காரணங்களோடு வை. உன் கஷ்டங்களை அவருக்கு எடுத்துச் சொல்லு. நடுச் சாமம் வரை, அவர் உன்னைக் காக்கவைத்தாலும் அவர் சரியான வேளையில் வருவார். அப்பொழுது காட்சி வரும். ஆனால் அது தாமதியாது.

விசுவாசத்துடன் காத்திரு. அவர்மீது நீ கொண்ட அசைக்கப் படாத நம்பிக்கையை வெளியிடு. நடு இரவு மட்டும் நீ காத்திருக்க வேண்டியதிருந்தாலும், அவர் சரியான நேரத்தில் வருவார் என நம்பியிரு. கட்டாயம் அவர் காட்சி கிடைக்கும். அது காலம் தாழ்த்தாது.

அமர்ந்த நம்பிக்கையுடன் காத்திரு. மோசேக்கு விரோதமாய் இஸ்ரவேலர் முறுமுறுத்ததுபோல முறுமுறுக்காதே. உனக்கு விரோதமாய்க் காணப்படுபவற்றை அவை இருக்கும் முறையிலேயே ஏற்றுக்கொள். அதைச் சிறிதும் மாற்ருது, இருப்பதைப்போலவே யாதொரு சுயசித்தமுமில்லாமல் உன் உடன்படிக்கையின் தேவனின் கரத்தில் வை. 'என் சித்தமல்ல, பிதாவே, உம் சித்தமே ஆகட்டும். நான் யாது செய்வதென்று அறியேன். என் அறிவின் இறுதியை அடைந்துவிட்டேன். நீர் எனக்காகக் கடல்களைப் பிளக்குமட்டும், என் எதிரிகளை ஓட்டும்வரையிலும் நான் காத்திருப்பேன். எத்தனை நாட்கள் என்னைக் காத்திருக்க வைத்தாலும், என் இறைவா! நான் காத்திருப்பேன். ஏனென்ருல் என் இருதயம் உம்மையே சார்ந் திருக்கிறது. நீர் என் பலத்த அரணும், என் பாதுகாப்புமானவர். நீர் என் இரட்சிப்பும், என் சந்தோஷமுமாய் இருப்பீர் என்ற முழு நம்பிக்கையில் என் ஆவி காத்திருக்கிறது' என்று கூறு.

1 கர்த்திரு, பொறுமையுடன் காத்திரு
தேவன் ஒருக்காலும் பிந்தார்.
உன் திட்டமெல்லாம் உன் பிதாவின் கரத்தில் உண்டு
கர்த்திரு, கர்த்தர் யாவும் காட்டுவார்
ஆகையால் காத்திரு, காத்திரு
பொறுமையுடன் காத்திரு.

2 திடமனதாய் நம்பியிரு,
தேவன் யாவும் திட்டம் செய்வார்
உன் குழம்பிய வாழ்க்கையும், அதன் இருண்ட மறைவுகளும்
இறைவனின் இனிய சித்தத்தையே மிகத் தெளிவாய்க் காட்டுமே;
ஆதலால் நம்பியிரு
திடமனதாய் நம்பியிரு.

3 ஓய்ந்திரு, சமாதானமாய் ஓய்ந்திரு
உன் இரட்சகரின் மார்பிலே;
உன் பரிசுத்த உயர்ந்த நோக்கங்களை அவர் காதில் கூறிவிடு,
அவையாவும் பலமுடன் வாய்க்கப்பண்ணுவார்.
ஆதலால் ஓய்ந்திரு, ஓய்ந்திரு
சமாதானமாய் ஓய்ந்திரு.

## நவம்பர் 21

'உன் வழிகளைக் கர்த்தருக்கு ஒப்புவி' (சங். 37:5).

உன்னை நெருக்கும் எக்காரியத்தையும் பிதாவிடம் சொல்லு. சகல காரியங்களையும் அவர் கையில் வைத்துவிடு. அப்போது நீ, அவரிடமிருந்து உன்னைப் பிரித்து சஞ்சலப்படுத்தும் கவலையினின்றும் நீங்கியிருப்பாய். யாதொன்றை நீ செய்யவோ அனுபவிக்கவோ

புகும்போதும், ஒரு தொழிலை நடத்திக்கொண்டிருக்கும்போதும் அதைக் குறித்து இயேசுவிடம் போய்ச் சொல்லு. அச்சுமையை இயேசுமேல் சுமத்து. கவலையென்பது உனக்கு இல்லை. அமைதியும், கடமையில் சுறுசுறுப்பும், இனிமையும், உன் காரியத்தைக் கட்வுள் நடத்த அவர் பேரில் சார்ந்திருப்பதுமே உன் கடன். உன்னையும், உன் கவலையையும் ஒரு மூட்டையாக்கி அதை முற்றிலுமாய், உன் கடவுள்மேல் போடு.

இன்றைய தினத்தைச் சுற்றி
நம்பிக்கை என்ற வேலி போடு
இடைவெளியை அன்பின் கிரியையால் நிரப்பி
அங்கேயே தங்கியிரு.
உன்னைக் காக்கும் கம்பிளியினூடே
நாளையத் தினத்தை நோக்காதே
உன் நாளைய இன்ப துன்பத்தைச் சகிக்க
உனக்குப் பலம் தேவன் ஈவார்.

நம் வழி இயேசு ஒப்புக்கொள்ளக்கூடிய நேர்மையான வழியா பிராவிட்டால், அதை ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்கமுடியாது. விசுவாசத்தினாலேயே ஒருவன் தன் வழிகளை ஆண்டவருக்கு ஒப்பு விக்கக்கூடும். நம் வழி சரியானதல்ல என்று சிறிதளவு சந்தேகம் நம் உள்ளத்தில் உதித்தாலும், அங்கே விசுவாசம் உண்டாகாது. நம்முடைய வழியை அவருக்கு ஒப்புவித்தல் ஒரு தனிச் செயலாய் அல்ல, தொடர்ந்த செயலாய் இருக்கவேண்டும். எதிர்பாராத விதமாகவும், விபரீதமாகவும் தோன்றினாலும், எவ்வளவு அபாயகர மாகத் தோன்றினாலும், உன்னை நடத்தும் கடிவாளத்தை அவர் கையிலிருந்து நீ ஒருபோதும் பிடுங்கிக்கொள்ளாதே. நம்முடைய வழிகளையெல்லாம் தேவனுக்கு ஒப்புவித்து அவர் அதை நியாயந் தீர்க்க திடமனதாயிருக்கிறோமோ? தன் பழக்க வழக்கங்களையும் நீதிகங்களையும் ஒரு கிறிஸ்தவன் ஆராய்ந்து பார்க்கவேண்டும். நம் வழிகளைத் தேவன் செம்மையானவையென்று ஒப்புக்கொள்ளுவார் என்று இலேசாய் நினைக்கிறோம். சில கிறிஸ்தவர்கள் ஏன் கவலை கொண்டு பயந்துகொண்டிருக்கிறார்கள்? இதனால் அவர்கள் தங்கள் வழிகளைத் தேவனுக்கு ஒப்புவிக்கவில்லை என்பது தெளிவாகிறது. கவலைகளை அவர்கள் கடவுளிடம் கொண்டுபோய்விட்டுத் திரும்பவும் தங்களோடே கொண்டுவந்து விடுகிறார்கள்.

## நவம்பர் 22

'இயேசு அவர்களை நோக்கி: இதைச் செய்ய எனக்கு வல்லமை உண்டென்று விசுவாசிக்கிறீர்களா' என்று கேட்டார் (மத். 9:28).

கூடாதவைகளைக்கூடச் செய்வார் தேவன். கூடாத காரியங்களை அவரிடம் கொண்டுவந்தால் அது நிறைவேறுவது ஒருவனுடைய

வாழ்க்கையில் தேவன் மகிமைப்படுவதற்கு ஏதுவாகும். 'அக்கூடாத காரியம்' ஆகவேண்டியதாயிருந்தால், அதை விசுவாசத்துடன் இயேசுவண்டை கொண்டுவந்தால் ஏற்ற காலத்தில் ஆகும். என் வாழ்க்கையில் முறுமுறுத்தல், அவநம்பிக்கை, பாவம், சாபம் ஏதேனும் இருக்குமாயின், இவைகளின்மேல் வெற்றிகரமாய்க் கிரியை செய்யத் தேவன் எப்போதும் கூடியவராயிருக்கிறார். அவைகளை நாம் பூரண நம்பிக்கையுடன் இயேசுவின் கரத்தில் ஒப்புவித்தல் அவசியம். மனிதனுடைய கடந்துபோன வாழ்க்கையைச் செவ்வைப் படுத்துவது கிறிஸ்து மார்க்கமே என்பது உண்மையான காரியமே. 'முசுக்கொட்டைப் பூச்சிகளும், பச்சைப் புழுக்களும் பட்சித்த வருடங்களின் விளைவைத் திரும்ப உங்களுக்கு அளிப்பேன்' (யோவேல் 2:25) என்று தேவன் சொல்லியுள்ளார். நம்மையும் நம் நிலைமையையும் ஒன்றையும் ஒதுக்கிவையாமல் அவர் கையில் நம்பிக்கையோடு வைக்கையில் நமக்கு அவர் அப்படிச் செய்வார். 'தேவன் மன்னிக்கிறார், குணமாக்குகிறார், திரும்ப அளிக்கிறார். அவரே சகல கிருபைகளின் தேவன்' அவரைத் துதிப்போமாக. அவரை நம்புவோமாக.

'இயேசு கிறிஸ்துவால் ஆகாததொன்றுமில்லை, அவரைப்போல் கிரியை செய்யக்கூடியவனுமில்லை.'

'ஆகாதவைகளை ஆகச்செய்கிறதில் களிகூருகிறவர் நம் தேவன்' அவருக்கு கடினமானது ஒன்றுமில்லை. —ஆண்ட்ரு மாரே

## நவம்பர் 23

'உம்முடைய ஜனங்களுக்குக் கடினமான காரியத்தைக் காண்பித்தீர்' (சங். 60:3).

சில விஷயங்கள் கடினமானவை என்று தேவனிடம் சங்கீதக்காரன் சொல்லியிருப்பதைக் குறித்து எனக்குச் சந்தோஷம் எப்போதும் உண்டு. அதில் பிசகு ஒன்றுமில்லை. வாழ்க்கையில் கடினமான காரியங்கள் உண்டு. இந்தக் கோடை காலத்தில் எனக்குச் சில இளஞ் சிவப்பு வர்ண மலர்கள் கொடுக்கப்பட்டன. நான் அவைகளை எடுத்து 'இவைகள் என்ன?' என்று வினவினேன். 'இவைகள் பாறைப் பூக்கள். இவைகள் மணலில்லாத பாறைகளிலே வளர்ந்து புஷ்பிக்கும்' என்று பதில் கூறப்பட்டது. அப்போது நான் கடினமான இடங்களில் தேவனுடைய மலர்கள் மலருவதைக் குறித்துச் சிந்தித்தேன். லீலிப் புஷ்பங்கள், ரோஜா மலர்கள் இவற்றின் மீதுள்ள பட்சத்தைப் பார்க்கிலும் இம்மலர்கள் மீது தேவனுக்கு விருப்பம் இருக்குமென்று நான் எண்ணினேன்.

வாழ்க்கையின் சோதனைகள் நம்மை அழிக்க அல்ல, ஆக்கவே ஏற்பட்டுள்ளன. துன்பங்கள் ஒரு மனிதனின் வேலையைக் கெடுக்க

லாம். ஆனுல் அவனுடைய குணத்தை உருவாக்கும். வெளியரங்கமான மனிதனுக்கு வரும் கஷ்டம் உள்ளான மனிதனுக்குப் பெரிய ஆசீர்வாதமாயிருக்கலாம். ஆகையால் தேவன் நம்முடைய வாழ்க்கையில் கடினமான காரியங்களை வரவிட்டால் அதனுல் வரக்கூடிய பெரிய தீமை நாம் அதைக் குறித்து முறுமுறுப்பதால் பின் வாங்குவதால் நாம் இழப்பவைகளேயாகும்.

வீரர்கள் வேதனை என்னும் உலைக்களத்தில் உருவாக்கப்
படுகிறுர்கள்
சோதனையினுல் தைரியம் உண்டாகும்
இரத்தத்தால் நனைந்த மண்ணில் தான்
சில பண்புகள் முதிர்ந்து கனிதரும்
மரண இருள் சூழ்ந்திருக்கையில் தான்
சில ஆன்மாக்களின் பெருமை விளங்கும்.

'துன்பம் என்னும் மேட்டுப் பிரதேசத்திலிருந்துதான் தேவனின் சிறந்த வீரர்கள் பொறுக்கப்படுகிறுர்கள்.'

## நவம்பர் 24

'நீங்கள் அமர்ந்திருந்து நானே தேவனென்று அறிந்துகொள்ளுங்கள்' (சங். 46:10).

சங்கீத சுரங்களில் அழுத்தம் திருத்தமாய் நிறுத்துவதைப்போல் இனிமையானது வேறென்றுமில்லை. சங்கீதங்களை வாசித்துக் கொண்டே போகையில் சேலா என்ற வார்த்தையைப் பார்க்கிறேம். அதற்கு நிறுத்து என்று அர்த்தம். அது சங்கீதத்திற்குச் சிறப்பளிக்கிறது. கடும் புயல் வீசுமுன் ஏற்படும் அமைதிக்கும், ஏதோ ஒரு அசாதாரண அதிர்ச்சி ஏற்படுமுன் உண்டாகும் அமைதிக்கும் ஈடானது ஒன்றுமில்லை. அமைதியின் சக்தியைப்போல் நமது இருதயத்தைத் தொடக்கூடிய சக்தி வேறென்றிற்குமில்லை.

தன்னைவிட்டு ஓய்ந்திருக்கும் ஆத்துமாவுக்கு 'எல்லாப் புத்திக்கும் மேலான தேவ சமாதானமும்,' பலத்திற்குக் காரணமான 'அமர்ந்த நம்பிக்கையும், ஒன்றும் கொடுக்கக்கூடாத இன்பமான சமாதானமும்' உலகம் கொடுக்கக்கூடாததும், எடுக்கக்கூடாததுமான ஆழ்ந்த அமைதியும் உண்டு. ஆத்துமாவின் மையத்தில், ஆழத்தில், சமாதானம் என்ற அறை உண்டு. அங்கே தேவன் வாசம் செய்கிறுர். நாம் அதனுள் சென்று நாம் கேட்கும் மற்ற ஒவ்வொரு சப்தத்தையும் நிறுத்தினுல் இயேசுவின் அமைதியான சிறிய சப்தத்தைக் கேட்கலாம்.

அதிக விரைவாகச் சுற்றும் சக்கரத்தில் அசைவேயில்லாத மத்திப் பாகம் ஒன்றுண்டு. அவ்வாறே நெருக்கடியான நம் வாழ்க்கையிலும் நாம் அமைதியாக தேவனேடு தனிமையாக வாசம் செய்யுமிட

மிருக்கலாம். கடவுளை அறிய ஒரே வழியுண்டு. 'அமைதியாயிருந்து அறிந்துகொள்' 'தேவன் தமது பரிசுத்த ஸ்தலத்திலிருக்கிறார்; பூமியெல்லாம் அவர் சந்நிதிமுன் மௌனமாயிருப்பதாக.'

அன்புள்ள பிதாவே! நாங்கள் நட்சத்திரமில்லாத வானவெளியின் கீழ் இருள் மழைபோல் கீழ் இறங்கும் வேளையில் நடந்துள்ளோம். விண்மீன் வெண்ணிலா கதிரோன் இவை இல்லாமலே போயினவோ என்றுகூடத் தயங்கியுள்ளோம். அந்த அமைதியான இருள் படலம் ஒருபோதும் அகலாததுபோல் எங்களைச் சூழ்ந்துகொண்டது. எங்கள் ஆத்துமாக்களைத் தேற்றி அந்த இருளினூடே ஒரு ஆறுதலான சப்தமேனும் உண்டாகவில்லை. கவிந்த இருளின் கடின அமைதியை மாற்ற ஒரு பயங்கர இடி உண்டாயிருந்தால்கூடச் சற்று பயம் குறைந்திருக்கும்.

ஆனால் எங்கள் இருதயத்தைக் கவரும்படியான ஒரு மெல்லிய குரல் உம் மாறாத அன்பைக் குறித்துப் பேசிற்று. அந்தச் சப்தம் காயப்பட்ட சஞ்சலப்பட்ட எங்கள் ஆத்துமாக்களுக்குக் காற்று வீணையிலிருந்து உண்டாகும் இனிய சப்தத்தைவிட இனிமையாகத் தொனித்தது. 'உம்முடைய அமர்ந்த மெல்லிய இனிய குரலே எங்களோடு பேசினது. நாங்களதற்குச் செவிகொடுத்துக் கவனித்தோம். அன்பின் ஒளி உமது திருமுகத்தில் ஒளியாய் வருவதைக் கண்டோம். நாங்கள் உமது முகத்தைப் பார்த்து, உமது சப்தத்தைக் கேட்டபோது, கோடைகால மாரியைப்பெற்று, திருப்பி உயிர் பெறும் காய்ந்த மலர்களைப்போல் புத்துயிர் பெற்றோம்.

## நவம்பர் 25

'அம்புகளைப் பிடியும் . . . தரையில் அடியும் என்றான். அவன் மூன்றுதரம் அடித்து நின்றான். அப்பொழுது தேவனுடைய மனிதன் அவன்மேல் கோபமாகி, நீர் ஐந்து, ஆறு விசை அடித்திருக்கவேண்டும் என்றான்' (2 இரா. 13:18,19).

இவ்வசனத்திலடங்கியுள்ள செய்தி எவ்வளவு துல்லியமாகவும், அழகாகவுமிருக்கிறது. யோவாஸ் தான் மேலானது என்று நினைத்த விசுவாசத்தினால் தான் ஒரு காரியத்தை ஒரு முறை, இரண்டு முறை, மூன்று முறை செய்துவிட்டதாக எண்ணினான். ஆனால் ஆண்டவரும், தீர்க்கதரிசியும், அவன் பாதியில் நிறுத்தியதால் வெகுவாய் ஏமாற்றமடைந்தார்கள்.

அவன் கொஞ்சப் பயன் அடைந்தான். அதிகப் பயன் அடைந்தான் என்றுகூடச் சொல்லலாம். இறுதிச் சோதனையில் அவன் தனக்குக் கிடைக்குமென்று நம்பினவைகளைப் பெற்றான். ஆனால் ஆண்டவர் கொடுக்கவேண்டுமென்றிருந்த யாவையும் தீர்க்கதரிசி அவன் பெறவேண்டுமென்றிருந்த அவ்வளவையும் அவன் பெற

வில்லை. மனுஷீகத்தைவிடச் சற்று அதிகம் பெற்ருன். ஆனுல் தேவன் கொடுக்கச் சித்தமாயிருந்த எல்லாவற்றையும் அவன் பெற வில்லை.

இதன் படிப்பினையை உற்று நோக்கு. அதனுல் உன் இருதயத்தை ஆராய்ந்து பார். பூரணமாய் நாம் ஜெபிக்கக் கற்றுக்கொள்வது எத்தனை அவசியமான காரியம்! வாக்குத்தத்தத்தின் பூரண நிறை வேறுதலின் நம்பிக்கையோடு செய்யும் ஜெபத்தின் ஆற்றலையும் பெறுவோமாக.

—ஏ. பி. சிம்ப்ஸன்

'நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய் நமக்குச் செய்ய வல்லவராயிருக்கிற அவருக்கு' (எபே. 3:20).

'மிகவும் அதிகமாய்' என்று பரி. பவுல் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போகிருர். ஒவ்வொரு வார்த்தையும் தம்மை நோக்கி ஜெபிக்கிற பக்தர்களுக்குத் தேவன் செய்யக்கூடிய அளவிலா அன்பையும், ஆற்றலையும், நிறைவாக எடுத்துக் காட்டுகிறது. ஆயினும் அதற்கு ஒரு கட்டுப்பாடு உண்டு. அதாவது 'நமக்குள்ளே கிரியை செய்யும் வல்லமையின்படியே' நடக்கும் என்பதே. அவரை எவ்வளவாய் நமக்குள்ளே கிரியை செய்ய விடுகிருேமோ அவ்வள வாய் நமக்கு அவர் செய்வார். நம்மை மீட்டுத் தமது சொந்த இரத்தத்தால் நம்மைக் கழுவி தம்முடைய ஆவியின் வல்லமையினுல் நம்மை நிரப்பி அநேக சோதனைகளில் நம்மைப் பாதுகாத்துவந்த அந்த வல்லமை நம்முடைய அவசரங்களுக்கும், தேவைகளுக்கும் ஈடுகொடுத்து, எல்லாச் சத்துருவையும் மேற்கொண்டு நமக்குள் வல்லமையாகக் கிரியை செய்யும்.

## நவம்பர் 26

*காலேப் அவளைப் பார்த்து, 'உனக்கு என்ன வேண்டும்? என்ருன். அப்போது அவள், எனக்கு ஒரு ஆசீர்வாதம் தரவேண்டும். எனக்கு வறட்சியான நிலத்தைத் தந்தீர்; நீர்ப்பாய்ச்சலான இடத்தையும் எனக்குத் தரவேண்டும் என்ருள்; அப்பொழுது அவளுக்கு மேற்புறத்திலும் கீழ்ப்புறத்திலும் நீர்ப்பாய்ச்சலான இடத்தைக் கொடுத்தான்' (யோசு. 15:18,19).*

கீழ்ப்புறத்திலும், மேல்புறத்திலும் நீர்ப்பாய்ச்சலாயிருக்கிறது. அவைகள் கட்டுக்கடைத் தண்ணீர்களல்ல, நீரூற்றுகள், துக்கம், சோதனை என்ற வறண்ட பாலைவனங்களில் உன்னதத்திலிருந்து சந்தோஷங்களும், ஆசீர்வாதங்களும் பாயும். அக்சாளின் நிலங் களில் தென்புறமாயுள்ள நிலங்களில் கடூரமான வெயிலடிக்கும். அவைகள் வறண்ட நிலங்களாயிருந்தன. ஆனுல் மலையிலிருந்து

வற்ருத ஊற்றுக்கள் வந்தன. அந்த நீர்ப்பாய்ச்சல் அந்தப் பூமியைக் குளிர்ச்சியாக்கி; புதுப்பித்துச் செழிப்பாக்கிற்று.

வாழ்க்கையின் தாழ்ந்த இடங்களிலும், கடுமையான இடங்களிலும், தனிமையான இடங்களிலும், சாதாரண இடங்களிலும் நீர் ஊற்றுக்கள் உண்டு. நம் சூழ்நிலை எப்படிப்பட்டதாயிருந்தாலும், மேற்புறத்திலிருந்து நீர்ப்பாய்ச்சல் நிச்சயமாய் உண்டு.

ஆபிரகாம் அவைகளைக் கானுன் மலையில் கண்டான். மோசே மீதியான் தேசத்துக் கற்பாறைகளின் மத்தியில் நீர்ப்பாய்ச்சலைக் கண்டான். தாவீது தன் பொருட்களை இழந்து, அவன் குடும்பத்தார் சிறைப்பிடிக்கப்பட ஜனங்கள் தன்னைக் கல்லெறியத் தேடின போது சிக்லாவின் சாம்பலில் ஊற்றைக் கண்டான். ஆண்டவருக்குள் தாவீது தன்னைத் தைரியப்படுத்திக்கொண்டான். ஆபகூக் அத்திமரம் துளிர்விடாமல் இருந்தபோதும் வயல்வெளியில் தானியம் விளையாமற் போனபோதும் அந்த நீர்ப்பாய்ச்சலைக் கண்டான். அதில் தன் தாகத்தைத் தீர்த்துக்கொண்டு, 'என்ருகிலும் நான் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருப்பேன் என்றும், இரட்சிப்பின் தேவனுக்குள் களிகூருவேன்' என்றும் பாடினுன்.

சனகரீப் படையெடுத்து வந்த அந்தப் பயங்கரமான நாட்களில் ஏசாயா இந்த நீர்ப்பாய்ச்சல்களைக் கண்டான். ஆகையால் மலைகள் கடலுக்குள் உருட்டித் தள்ளப்படுவது போலிருந்தபோதும்கூட விசுவாசத்தினுல் 'ஒரு நதியுண்டு, அதின் நீர்க்கால்கள் தேவனுடைய பட்டணத்தை மகிழ்ச்சியாக்கும் தேவன் அதின் நடுவிலிருக்கிருர். அது அசைக்கப்படுவதில்லை' என்று பாடக்கூடியவனுயிருந்தான்.

இரத்தச் சாட்சிகள் அந்த நீரூற்றை அக்கினியின் நடுவிலும், சீர்திருத்தக்காரர் தங்கள் சத்துருக்கள், போராட்டங்கள் மத்தியிலும் கண்டார்கள். பரமதேற்றரவாளனை நம்முள்ளத்தில் கொண்டு தாவீதோடு சேர்ந்து 'என் நீரூற்றெல்லாம் உம்மிலேயிருக்கிறது' என்று பாடக் கற்றுக்கொண்டோமென்ருல், நாம் அந்த ஊற்றை எக்காலத்தும் நம் வாழ்க்கையில் காணலாம்.

இந்த அபூர்வ ஊற்றுகள் அநேகம் நமக்குண்டு. தேவனுடைய பரிபூரண நிறைவிலிருந்து இன்னும் எத்தனையோ ஊற்றுகளைப் பெற்றுக்கொள்ளலாம். —ஏ. பி. சிம்ப்ஸன்

1 பாலைவனத்தைப் பார்; விரிவாயிருக்கிறதே
வெறுமையாயிருக்கிறதே
என் தாகத்தைத் தீர்க்க நீர்ப்பாய்ச்சல் எங்கே?
புயலுக்கு நான் எங்கே ஒதுங்குவேன் என்றேன்.

2 வனந்தரம் தனியிடமாயிருக்கிறதே
இவ்விடத்தில் ஓர் அன்பான குரலும்
ஓர் இனிய முகமும் காணுமே
என்று அங்கலாய்த்து நிற்கையில்,

3 மறைவான நீரூற்றுக்களின் சத்தத்தைக் கேட்டேன்
என் முன் பேரீச்ச மரங்கள் ஓங்கி வளர்ந்தன;
பட்சி சாலங்கள் பாடின
ஆகாயம் தூதர் இறக்கையால் ஒளிமிளிர்ந்தது.

4 யாரோ ஒருவர் மெதுவாக
நாளைக்காக ஏன் கவலை கொண்டாய்?
மறுதினம் யாது வருவதெனக் கவலை கொள்வதேன்?
பரம தகப்பன் உன் தேவைகளை அறிவார்
இதை நீ அறியாயோ? என்றார்.

## நவம்பர் 27

'தேவனால் கூடாத காரியம் ஒன்றுமில்லை' (லூ. 1:37).

தூர தேசத்திலுள்ள ஆல்பைன் மலையில் தேவன் தமது அதிசயமான காரியம் ஒன்றை ஆண்டுதோறும் நடப்பிக்கிறார். ஆங்காங்கு பனித்திண்டுகளிருக்கும். அவைகளின் ஓரங்களில் சூரிய கதிர் படாமல் பனி உறைந்து கிடக்கும். அந்தப் பனிக்கட்டியில் யாதொரு பழுதுமின்றி மலர்கள் மலர்கின்றன.

வெகு நாளைக்கு முற்பட்ட கோடை காலத்தில் 'சோல்டனலி' செடிகள் தம் இலைகளை விரித்து, சூரிய கதிர்களைக் கவர்ச்சித்து அந்த உஷ்ணத்தைத் தம் கிழங்குகளில் சேர்த்து வைத்து கடும் பனி காலத்தில் அதை வெளிவிடாமல் பத்திரப்படுத்துகின்றன. இளவேனிற் காலம் வந்தவுடன் அது பனிக்கட்டியின் கீழுள்ள வேரைத் தட்டி எழுப்புகிறது. அது முளைக்கையில் அதிலிருந்து உஷ்ணம் வெளிப்படுவதால், தன்னை மூடியுள்ள பனிப் படலத்தைத் தூக்கிக் கொண்டு, மேல் கிளம்புகிறது. உயர உயரமாய் வளர்ந்து செல்கிறது. அதன் உச்சியில் உண்டாகும் காற்றுக் குமிழியில் பனி நிற்கிறது. அதனுள் பத்திரமாக அரும்புகள் உண்டாகின்றன. கடைசியாக அதன்மேல் நின்ற பனி விலக மலர்கள் கதிரோனைக் காண்கின்றன. அவை பளிங்குமேல் மிருதுவாகவும், கத்தரிப்பூ வர்ணமுடையனவாகவும் இருக்கும். அவற்றின் இதழ்கள் அவை கடந்து வந்த கஷ்டங்களின் சாயலைக் காட்டுவதுபோல மினுங்கும்.

காய்ந்த தரையிலும், மலைச்சரிவிலும் முத்துப்போல் விளங்கும் பல மலர்களைக் காணலாம். ஆனால் அவை யாவற்றையும்விட, இந்த மிருதுவான மலர்களைக் காணுங்கால், நமது இதயத்தின் ஆழத்தில், ஒரு சிந்தனை கிளம்புகிறது.. நடக்க முடியாத காரியம் நடப்பதைக் காண, வெகுவாய் ஆசைப்படுகிறோம். அவ்வாறே தேவனும் ஆசைப்படுகிறார்.

உன் கஷ்டங்களை முக முகமாய்ப் பார். மனிதர் உதவி செய்வார்கள் என்கிற நம்பிக்கையை உதறித் தள்ளு. தேவசித்தம் நிறைவேற

அவைகள் தடைகள் என்று எண்ணு. உன் சகல கஷ்டங்களையும் குவித்துவை. இயலாதது என்பதற்கு மேற்பட்ட கஷ்டம் இருக்க முடியாது. அவரை விசுவாசி, தேவன் இயலாதவைகளைச் செய்கிறவர்.

## நவம்பர் 28

'காலையையும் மாலையையும் களிகூரப்பண்ணுகிறீர்' (சங். 65:8).

அதிகாலை எழுந்து மலையுச்சி சென்று, தேவன் எவ்வாறு காலையை உருவாக்குகிறார் என்று பார். அவர் அடிவானத்திற்கு நேராய்க் கதிரவனைத் தள்ளும்போது இருள் படலம் நீங்கும். வெவ்வேறு வகையான வர்ணப் படங்கள் உண்டாகும். அவை யாவும் கதிரோன் வெளித்தோன்றவும், ஒளியில் ஒன்றாகக் கலந்துவிடுகின்றன. பகலோன் வெகு விமரிசையாய் கிளம்பி, உலகெங்கும், தன் ஒளி வெள்ளத்தைப் பரப்பும்போது, பரலோகப் பாடகரின் சங்கீதத்தை உற்றுக் கவனி. அச்சபை தேவனின் மகத்துவத்தையும், அதிகாலையின் மகிமையையும் குறித்துப் பாடும்.

அதிகாலையில் பரிசுத்த அமைதியில் நான் ஒரு சத்தம் கேட்கிறேன். 'நாள் முழுவதும் நான் உன்னோடிருப்பேன்.' 'களிகூரு' என்பதே அச்சப்தம்.

அதிகாலையின் புனித ஒளி இதயத்தில் உண்மையாயிருக்கவேண்டுமென ஆசைப்படும்படி என்னைத் தூண்டியது. இதய சுத்தமே என்னை அக்காலை நேரத்தைப்போல் சுத்தமாக்கி, துலக்கி, புனிதமாக்கி, இயற்கையின் கீதத்தோடு, என்னை இணைந்திருக்கச் செய்யும். புலரொளி வேளையில் வீசின காற்றானது, என் நாசியில் முதன் முதல் ஜீவசுவாசத்தை ஊதினவரை நம்ப ஏவுகிறது. அவர் இறுதியில் தமது மனதையும், ஆவியையும் ஊதி என்னை நிரப்புவார். அப்போது நான் அவர் நினைவுகளையே நினைப்பேன். அவர் வாழ்க்கையை நடத்தி, அதினால் என் வாழ்க்கை நித்திய மகிமையடைவதைக் காண்பேன் என்று நம்பச் செய்கிறது. தேவனுடைய காலையும், மாலையும் இல்லாவிட்டால் நரராகிய நாம் என்ன செய்யக்கூடும்.

1 அதிகாலை வேளையிலும்
இருள் நீங்கும் காலையிலும்
உலகை விட்டு அமைதியாக இருட்படலம் விலகுகையில்

2 உன் அறை வீட்டின் உள்ளிருந்து
இயேசுவோடு பேசுவது இனிமையே.
வரும் நாளுக்காகவும், அதன் கடமைகளுக்காகவும்
அவர் சித்தத்தைக் கேட்டு அறிந்துகொள்.

*3* அப்போது அவர் முன் செல்லுவார்,
மலைகள் தாழ்ந்து போம்;
வனாந்தரங்கள் புஷ்பிக்கும்,
மாராவின் தண்ணீர் இனிப்பாகும்.

*4* இவ்வெற்றி வாழ்க்கை நீ அறிவாயா?
வழியெல்லாம் வெற்றியடைய வேண்டுமா?
அப்படியானால் ஒவ்வொரு நாள் காலையிலும்,
தேவனை முன்னால் நிறுத்திச் செல்.

## நவம்பர் 29

'ஆகிலும் பிற்காலத்தில்' (எபி. 12:11).

ஓர் ஜெர்மானிய பிரபு ரைன் நதிக்கரையிலுள்ள தம் அரண்மனையில் கம்பிகளைக் கொண்டு காற்று வீணை செய்வதற்காக ஒவ்வொரு கோபுரத்திலிருந்தும் மற்றக் கோபுரங்களுக்குக் கம்பிகளைக் கட்டி வைத்தார் என்று ஒரு கதை சொல்லுவார்கள். மெதுவான காற்று அந்த அரண்மனையின்மேல் வீசிற்று. ஆனால் யாதொரு சப்தமும் உண்டாகவில்லை.

ஆனால் ஒரு நாள் இரவு ஒரு பெரும் புயல் வீசிற்று. அகோரமான காற்று அந்த மாளிகையின்மீது மோதி அடித்தது. அந்தப் பிரபு புயலின் கடூரத்தைக் காண மாளிகையின் முன் புறத்திற்கு வந்தார். அந்தக் காற்று வீணை இன்ப நாதங்களை உண்டாக்கிக் கொண்டிருந்தது. புயலின் குமுறலை மீறி, இவ்வினிய தொனி கிளம்பிக்கொண்டிருந்தது. அவ்வீணையில் இன்னிசை உண்டாக்கப் புயல் தேவையாயிருந்தது.

சில மனிதர் செழிப்பான, சந்தோஷமான, சமாதான காலங்களில் தம் வாழ்க்கையின் இனிய கீதத்தை வெளியிடுவதில்லை. புயல் போன்ற கஷ்ட காலங்களில் அவர்கள் நற்குணத்தின் வலிமை மற்றவர்களை ஆச்சரியப்படச் செய்வதை நாம் கண்டுள்ளோம்.

*1* மழை! மழை!! கதவில் அறையும் மழை
வெளியே எத்தனையாய் ஊற்றுகிறது
கருமேகத்திலிருந்து அஃதவ்வாறு பெய்வதேன்?

*2* மழைக்குப் பின் மலர்கள் எங்கும் புஷ்பிக்கும்
புதிதாய் அழகாய் எங்கும் விளங்கும்
மழை ஏன் பெய்ததென்று அப்போது ஆண்டவர் அறிவிக்கிறார்.

கஷ்டங்களைச் சரிவரச் சகித்தோமென்றால் முன் பகுதியைவிடப் பின் பகுதியே அதிக ஆசீர்வாதமுள்ளதாகக் கடவுள் ஆக்குவார் என்று உறுதியாய் எண்ணலாம். கண்டிப்பில்லாதிருத்தல் இன்பமாகத் தோன்றுகிறது. ஆகிலும் பிற்காலத்தில் அதன் பயன் யாது?

## நவம்பர் 30

'நீ உனக்குப் பெரிய காரியங்களைத் தேடுகிறாயா? தேடாதே! இதோ மாம்சமான யாவர்மேலும் தீங்கை வரப்பண்ணுகிறேன் என்று கர்த்தர் சொல்லுகிறார். ஆனால் நீ போகும் சகல ஸ்தலங்களிலும், உன் பிராணனை உனக்குக் கொள்ளைப் பொருளாகத் தருகிறேன்' (எரே. 45:5).

இது கஷ்டமான இடங்களுக்காகக் கொடுக்கப்பட்ட வாக்குத் தத்தம். இது அதிக இக்கட்டான நிலைமையில் 'உயிர் ஒரு கொள்ளைப் பொருளாகப்' பத்திரமாகக் காக்கப்படும் என்ற வாக்குத்தத்தமே. இவ்வசனம் நம் காலத்திற்கும் பொருந்தும். நாம் கடினமான துன்பங்கள் நிறைந்த இறுதிக் காலத்தை நெருங்குகிறோம்.

'பிராணனைக் கொள்ளைப் பொருளாக' என்று சொல்லப்பட்டிருப் பதின் அர்த்தம் யாது? அதாவது தாவீது சிங்கத்தின் வாயிலிருந்து ஆட்டுக்குட்டியைப் பிடுங்கினதற்கு ஒப்பாக 'அழிவினின்று தப்புவிக் கப்பட்ட பிராணன்' யுத்த இரைச்சலுக்கும், சத்துருவின் முன்னிற் பதற்கும் விலகியிருப்பது என்பதல்ல. சத்துருக்கள் மத்தியிலுள்ள பந்தி என்றே பொருள்படும். புயலுக்கும் ஒதுக்கிடம், சத்துருக்கள் மத்தியில் கோட்டை, தொடர்ந்த இக்கட்டுகளினூடே காக்கப்பட்ட வாழ்க்கை என்பதே அர்த்தம்.

பரி. பவுல் சொல்லுகிற பிரகாரம் ஜீவனுக்கு நம்பிக்கையற்றுப் போகும் விதமாய் நெருக்கப்படும்போது, உண்டாகும் சுகம் சரீரத்தில் முள் இருக்க நம்மில் விளங்கும் தெய்வ பலம் போன்றதாகும். ஆனால் கிறிஸ்துவின் வல்லமை அவர்மேல் தங்கினது; கிறிஸ்துவின் கிருபை அவருக்குப் போதுமானதாயிருந்தது. ஆண்டவரே, என் பிராணனை எனக்குக் கொள்ளைப் பொருளாகக் கொடும். இன்றைய தினத்தின் நெருக்கடியான கட்டத்தில் வெற்றி தாரும்.

ஆபத்திலிருந்து தப்புவிக்கும்படி நாம் அநேகமுறை ஜெபிக் கிறோம். ஆபத்திலிருந்து தப்புவிக்கப்படுவோம் என்று நம்பவும் செய்கிறோம். ஆனால் ஆபத்துக்கள் முன்னிற்கையில், நாம் எப்படி யிருக்கவேண்டுமோ அப்படியிருக்கச் செய்யும் என்று வேண்டிக் கொள்வதில்லை. அவைகள் நீடிக்கும்வரை ஆண்டவர் நம்மைப் பிடித்திருக்கிறார். நம்மைப் பாதுகாக்கிறார். ஆகையால் ஆபத்து நீடித்திருக்கும் காலம்வரை, தீமை வராமல் அதன் மத்தியில் வாழலாம் என்ற அறிவினால், அதன் மத்தியில் வசிப்பதற்கு நாம் வேண்டிக்கொள்வதில்லை. நாற்பதுநாள் காலையிலும், மாலையிலும்

நம் இரட்சகர் வனாந்தரத்தில் சாத்தான் முன் நிறுத்தப்பட்டார். அதுவுமின்றி அவர் நிலைமையும் கவனிக்கத்தக்கது. அவருடைய மனுஷீக உடல் உணவின்றி, ஓய்வின்றியிருந்ததால் பலவீனமாயிருந்தது. அக்கினிச்சூளை சாதாரணமாயிருப்பதைவிட ஏழுமடங்கு அதிகமாய் சூடாக்கப்பட்டது. ஆனால் அந்த மூன்று எபிரேய வாலிபரும் அக்கினியின் மத்தியில் அமைதியாய், ஆறுதலாய் நின்றார்கள். அந்தக் கொடூரமானது கடைசி தண்டனையின்போதும், விடுவிக்கப்படுமுன் அவன்முன் நின்றதுபோலவே நின்றார்கள். தானியேல் ஒரு இரவு முழுவதும் சிங்கங்களின் மத்தியில் உட்கார்ந்திருந்தான். அவன் வெளியே எடுக்கப்பட்டபோது, அவன் தேவனை நம்பினதால் அவனுக்கு யாதொரு சேதமும் நேராதிருந்தது. இவர்களெல்லாரும் தேவசமுகத்தில் இருந்ததால், சத்துருவின்முன் வெற்றியுள்ளவர்களாக வாசித்தார்கள்.

## டிசம்பர் 1

'தேவனுடைய பிள்ளைகளுக்கு இளைப்பாறுகிற காலம் இனி வருகிறதாயிருக்கிறது' (எபி. 4:9). இளைப்பாறுதலில் ஜெயமும் உண்டு. 'அவர்களைச் சுற்றிலும் யுத்தம் இல்லாமல் இளைப்பாறப்பண்ணினார் . . . அவர்கள் சத்துருக்களை எல்லாம் கர்த்தர் அவர்கள் கையில் ஒப்புக்கொடுத்தார் (யோசு. 21:44). சாந்த குணமுள்ளவர்களைக் கர்த்தர் இரட்சிப்பினால் அலங்கரிப்பார்' (சங். 149:4).

ஓர் உண்மைக் கிறிஸ்துவ ஊழியன் அதிகக் கவலையும் கலக்கமும் நிறைந்த கிறிஸ்தவர்களாகிய தம் தாயைப்பற்றி நமக்குச் சொல்லுகிறார். அவர் அவர்களோடு மணிக்கணக்காய் வாதாடி, கவலை கொள்வது பாவம் என்பதை உணர்த்தப் பிரயாசப்பட்டும் பயனில்லை. முன் ஒருகாலத்தில் தனக்கு வராத கஷ்டங்களால் தான் வேதனையடைந்ததாகச் சொன்ன மூதாட்டியை ஒத்திருந்தாள்.

ஆனால் ஒருநாள் காலையில் அவள் முகத்தில் புன்னகைத் தவழ, காலைப்போஜனம் அருந்தக் கீழே வந்தாள். அவர் அவளை என்ன சமாச்சாரம் என்று வினவியபோது, அம்மாது, இரவு தான் ஒரு கனவு கண்டதாக விளம்பினாள்.

அந்தக் கனவாவது: அதிகப் பாரம் சுமந்த ஒரு கூட்டத்தாரோடு அவள் ரஸ்தாவில் போய்க்கொண்டிருந்தாள். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு சிறு கறுப்பு மூட்டையைச் சுமந்து சென்றனர். பிசாசு போன்ற கறுத்த உருவங்கள் அம்மூட்டைகளை அவ்வழியில் போட்டுச் சென்றன. அவற்றை அவ்வழிச் சென்றோர் எடுத்துச் சுமந்து சென்றனர். மற்றவர்களைப்போலவே அவளும் அநாவசியமான மூட்டை ஒன்றைச் சுமந்துகொண்டிருந்தாள். பிசாசு தந்த அந்த மூட்டையின் பாரம் அவளை அழுத்திற்று. அவள் மேல்நோக்கிப் பார்த்தபோது, ஒளி பொருந்திய பட்சமான வதனத்தையுடைய

ஒரு மனிதர் கூட்டத்துள் அங்குமிங்கும் சென்று ஜனங்களைத் தேற்றுவதைக் கண்டாள். கடைசியாக அவர் அவளண்டை வந்தார். அவர்தான் தன் இரட்சகர் என்பதைக் கண்டுகொண்டாள். அவள் அவரைப் பார்த்துத் தான் அதிகக் களைப்படைந்திருப்பதாகக் கூறினுள். அவர் விசனத்தோடு புன்சிரிப்புக்கொண்டு:

'என் அருமைப் பிள்ளையே, நான் உனக்கு இந்த மூட்டையைத் தரவில்லை. இவைகள் உனக்குத் தேவையானவைகளுமல்ல. இவைகள் சாத்தானின் சுமைகள். அவைகள் உன்னைக் களைப்படையச் செய்கின்றன. அவைகளைக் கீழே போட்டுவிடு. அப்பொழுது வழி நடப்பது இலகுவாயிருக்கும். நீ கழுகுகளின் செட்டைகளை உடையவளாயிருப்பாய்' என்றார்.

அவர் அவள் கரத்தைத் தொட்டார். சமாதானமும், சந்தோஷமும் அவள் உள்ளத்தை நிரப்பின. அவள் பாரத்தைக் கீழே தள்ளிவிட்டு, நன்றியறிந்த களிப்போடு, அவர் பாதத்தில் விழப்போகும் போது, அவள் விழித்துக்கொண்டாள். அவள் கவலைகள் யாவும் மறைந்தன. அந்நாள் முதல் அவள் மரணமடையும்வரை அவள் சந்தோஷமாகவும் உற்சாகமாகவுமிருந்தாள்.

இரவில் கீதம் உண்டாகும்.
பகலில் வருத்தின கவலைகள்
அராபியரைப்போல் கூடாரத்தைச்
சுருட்டிக்கொண்டு மறைந்துபோய்விடும்.

## டிசம்பர் 2

'உபத்திரவங்களினுலே பூரணப்படுகிறது' (எபி. 2:10).

இரும்பும், நெருப்பும் சேர்வதினுல் 'உருக்கு' உண்டாகும். பாறையும் உஷ்ணமும் சேர்வதால் அல்லது பாறை உருண்டுவந்து மற்றொரு பாறையை மோதுவதால் உண்டாவது மணல். சணல் கழுவப்பட்டு, சிக்கறுபட்டு, அடிக்கப்பட்டு, யந்திரத்தால் நெய்யப்பட்டால் லினன் துணியாகிறது. மனித குணத்தோடும் எதோ ஒன்றுசேரவேண்டும். பெரிய மனிதர்களை உலகம் ஒருபோதும் மறக்காது. ஆனுல் இந்தப் பெரிய மனிதர்கள் சுகபோகத்தில் சிறந்து விளங்கவில்லை. கஷ்டங்களினுலேயே சிறந்து விளங்கினுர்கள்.

ஒரு தாய் தன் மகனுக்குத் தோழனுக ஒரு அங்கவீனமான கூன் முதுகுப் பையனைக் கொண்டுவந்தாள். அவனிடம் எப்படி நடந்துகொள்ளவேண்டுமென்று தாயார் தன் பையனை எச்சரித்துவைத்தாள். அவன் கூனன், அங்கவீனன் என்பதை ஒரு சிறிதும் காட்டிக்கொள்ளாது, ஒரு சாதாரணப் பையனுக பாவித்து அவனேடு விளையாடவேண்டுமென்று சொல்லிவைத்தாள். அவர்கள் விளையாடு

வதைக் கவனித்தாள். சில விஞடிகள் கழித்து அவள் மகன் தன் தோழனைப் பார்த்து, 'உன் முதுகில் என்ன இருக்கிறது?' என்று வினவுவதைக் கேட்டாள். அந்தச் சிறு கூனப் பையன் கொஞ்சம் வெட்கப்பட்டுத் திகைத்தான். அப்போது பையன் 'அதுதான் உன் இறக்கை வைத்திருக்கும் பெட்டி: ஓர்நாள் தேவன் அதை உடைத்துத் திறப்பார். அப்போது நீ பறந்து சென்று தூதனுயிருப்பாய்' என்ருன்.

இப்பொழுது நாம் கஷ்டம் என்று நினைக்கிறவைகளை ஓர் நாள் தேவன் விளங்கச் செய்வார். அதுவே நமது குணங்களைச் சீர்படுத்தி, பூரண உருப்பட அச்சில் வார்த்து அவருடைய கட்டடங்களுக்கு ஏற்றதாக மினுமினுங்கச் செய்கிறது என்பதை அறிவோம்.

நற்குணங்களின் வேர்களைச் செழிப்பாக வளரச் செய்வது துன்பமே. நற்குணங்களடைவதே வாழ்க்கையின் முக்கிய நோக்கம். அது ஒன்றைத்தான் நாம் நித்தியத்திற்கு நம்முடன் எடுத்துச் செல்லக்கூடும். தற்காலிகமான நம் வாழ்க்கையில் அதில் சிறந்தவற்றை அதிகமாய்ப் பெற்றுக்கொள்வதே நமது நோக்கம்.

'முள் நிறைந்த பாதை வழி சென்ருல்தான் மலைக்காட்சி காணலாம்.'

## டிசம்பர் 3

'உன் புருஷன் சுகமாயிருக்கிருனு?' 'அந்தப் பிள்ளை சுகமாயிருக்கிறதா?' அவள் சுகம்தான் என்ருள் (2 இரா. 4:26).

திடமனதாயிரு; என் ஆத்துமாவே!
நீ நேசிக்கிறவர்கள் செத்து மறைந்தாலும்
தேவன் உன்னுடையவராயிருக்கிருர், திடன் கொள்
சாவு நிழலிடும்போது, திடமனதாயிரு
உன் தேவன் இதோ இருக்கிருர்; உன்னைத் தாங்குவார்
திடமனதாயிரு.

ஜார்ஜ் முல்லர் என்பவர் பின்வரும் சம்பவத்தைக் கூறுகிருர்:— 'அறுபத்திரண்டு ஆண்டுகளும், ஐந்து மாதங்களும் நான் என் மனைவியோடு வாழ்ந்துவந்தேன். இப்போது நான் தொண்ணூற்று இரண்டு வயதுள்ளவனுயிருக்கிறேன். என் அருமை மனைவி என்னைத் தனியே விட்டுச் சென்றுவிட்டாள். ஆனுல் நான் சதாகாலங்களிலும் நம்மோடிருக்கும் இயேசுவண்டை திரும்பி, என் அறையில் தனிமையாக அங்குமிங்கும் நடந்துகொண்டு, ஆண்டவராகிய கிறிஸ்துவே, நான் தனியாயிருக்கிறேன். ஆனுல் நீர் என்னேடிருப்பதால் நான் தனியாயில்லை. நீர் என் தோழன்; இப்போதும் ஆண்டவரே, என்னைத் தேற்றும். எனக்குப் பலமளியும். உமது ஏழை அடியானுக்குத் தேவையானது இன்னது என்று நீர் காண்கிறதைக் கொடும்

என்று சொன்னேன்' என்கிறார். நாமும் கிறிஸ்துவை இவ்வாறு அனுபவமான பழக்கமான நண்பனாகக் கொள்ளும்வரை திருப்தி கொள்ளக்கூடாது. எல்லாக் காலங்களிலும், எந்த நிலைமையிலும், அவர் தம்மை நண்பனாகக் காட்டத் தயாராய் இருப்பதாய்க் காண வேண்டும்.

—ஜார்ஜ் முல்லர்

துன்பம் பணிவோடு இணைக்கப்பட்டு, ஏற்றுக்கொள்ளப்படும் போது அது நமக்குக் கெடுதி செய்யாது.

பனி மழை அநேக மரக்கிளைகளை முறிக்கிறது. அதுபோல் அநேக மனிதர் துன்பம் வரும்போது மனமடிவுற்றுச் சோர்ந்து போகிறார்கள். ஆனால் அவ்வப்போது, துன்பத்தில் பாடுகிற ஒரு சிலரையும் நான் அறிவேன். அப்போது நான் அவருக்காகவும் எனக்காகவும், தேவனுக்குத் துதி செலுத்துவேன். இரவில் பாடுவதுபோன்ற இனிமை எதிலும் இருப்பதில்லை. ஒரு பெண் தன் ஒரே பிள்ளை இறந்தபோது, தேவதூதனைப்போன்ற பிரகாசமான முகத்துடன் களிப்பாய் மேல்நோக்கிப் பார்த்து, 'என் கண்ணே, நான் உனக்கு நித்திய மகிழ்ச்சி அளிக்கிறேன்' என்றாளாம். அந்த ஒரு வாக்கியம் என் வாழ்நாள் பூராவும், என் மனதில் இருந்து, என்னை உயிர்ப்பித்து எனக்கு ஆறுதல் அளித்து வருகிறது.

மரணம் நேரிட்டாலும்
என் ஆத்துமாவைத் துக்கம் பிணைக்கவிடேன்;
மரணம் நம்மை வெகுகாலம் பிரித்து வைக்காது;
மரணமானது என் தோட்டத்துச் சுவரிலுள்ள ரோஜாச்செடி
சுவரின் மறுபுறத்தில் பூத்தது போன்றதல்லவா?
சாவு நமக்கருமையானவர்களை மறைக்கிறது;
ஆனால் அது பிரிக்கிறதில்லை.
மரித்தோர் கிறிஸ்துவோடு மறுபுறத்திலிருக்கிறார்கள்
கிறிஸ்து நம்மோடிருக்கிறார்
கிறிஸ்துவில் நாம் இணைக்கப்பட்டிருக்கிறோம்.

## டிசம்பர் 4

'அவர் ஒரு மலையின்மேல் ஏறி அங்கே தனிமையாயிருந்தார்' (மத். 14:23).

முன் காலத்தில் ஓய்வுநாளை அமைதியாக, ஆறுதலாக, சமாதானமாகக் கழிப்பது ஒரு பெரிய சிலாக்கியமாக இருந்தது. தனிமையில் ஒரு அபூர்வமான பலம் ஏற்படுகிறது. காக்கைகளும், ஓநாய்களும் கூட்டங் கூட்டமாகச் செல்லும். ஆனால் விலங்கு அரசனான சிங்கமும், பட்சி ராஜனான கழுகும் தனிமையாய்ச் செல்லும்.

சப்தத்திலும், உற்சாகத்திலும் வலிமை ஏற்படுவதில்லை. அமைதியில்தான் பலம் உண்டு. ஆகாயம் தண்ணீரில் பிரதிபலிக்கவேண்டு

மானுல் ஏரி அமைதியாயிருக்கவேண்டும். கிறிஸ்து ஜனங்களை நேசித்தார். ஆகிலும் கொஞ்சநேரம் அவர்களை விட்டு அப்புறம் செல்வதை அடிக்கடி வாசிக்கிறோம். அவ்வப்போது சிறிது வேளையாவது ஜனக்கூட்டத்தை விட்டு அப்பால் செல்லப் பிரயாசப்பட்டார். சாயங்கால வேளையில் அவர் எப்போதும் தனிமையாய் மலைக்குச் செல்வார். தம் ஊழியத்தை கடற்கரை ஓரங்களிலுள்ள பட்டணங்களிலும், ஊர்களிலும் நடப்பித்தார். ஆனால் அவருக்கு மலையே பிரியமாயிருந்தது. அடிக்கடி இரவில் அதன் அமைதியை நாடிச் செல்வார்.

இன்றையத் தினம், மற்ற எல்லாவற்றையும்விட அதி அவசியமானது ஆண்டவரோடு தனித்திருத்தலே. தியானம் என்ற மறைந்துபோன கலையைப் பயின்றால் எத்தனை இனிமையாயிருக்கும். அவரோடு இரகசியத்திலிருக்கும் பழக்கம் மறைந்துவருகிறதே. அது எத்தனை விசனிக்கப்படத்தக்கது. அவரோடு தனித்திருத்தல் ஒரு பலனூட்டும் மருந்து ஆகும்.

1 உலகின் ஊழியத்தை நடப்பிக்கின்ற
வயல் அறுப்போர் வெயிலில் உழைக்கும்போது
பாடிக்கொண்டிருக்கும் பள்ளத்தாக்கில்
வசிப்பது வெகு இன்பமாகும்.
ஆனால் அதற்கப்பால் ஒரு மலையுண்டு
அங்கே சகல சத்தமும் ஓயும்;
அவ்வமைதியான மலையுச்சியிலிருந்து
என்னை அழைக்கும் சத்தத்திற்குப் பின் செல்கிறேன்.

2 சூரிய அஸ்தமனம்வரை வேலை செய்து
அழகான பள்ளத்தாக்கில் வசிப்பது இனிமையே
ஆயினும் பொழுதுபோய் வேலை ஓயும்போது
மலை உச்சிக்குப்போக ஆசைப்படுகிறேன்
அங்கே ஒருவர் அமைதியான மலையுச்சியில் வசிக்கிறார்
அங்கே யிருப்பது இன்பமாயிருக்கிறது
ஒலிவ மலையில் திவ்விய அமைதியே
எல்லா மலைகளிலும் காணப்படுகிறது.

பலனடைய விரும்பும் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் தேவன் மாத்திரம் உள் பிரவேசிக்கக்கூடிய மகா பரிசுத்த ஸ்தலம் ஒன்று வேண்டும்.

## டிசம்பர் 5

'கர்த்தாவே, மனுஷனுடைய வழிகள் அவனாலே ஆகிறதல்லவென்றும், தன் நடைகளை நடத்துகிறது நடக்கிறவனாலே ஆகிறதல்லவென்றும் அறிவேன்' (எரே. 10:23). 'செவ்வையான பாதையில் என்னை நடத்தும்' (சங். 27:11).

தேவன் தங்களை நடத்தும்படி ஒப்படைத்துவிட்டுச் சிலர் தேவனை நடத்த விரும்புகிறார்கள். அவர் நடத்தும் வழியில் சாதுவாய்ப் போகாமல், அவருக்கு வழி காட்டுகிறார்கள். —மேடம் கயான்

1 என்னை வயல்வெளியில் நடக்கச் செய்யும் என்றேன்;
'அல்ல பட்டணங்களுக்குள் நட' என்று ஆண்டவர் கூறினர்
'அங்கே மலர்களில்லையே' என்றேன்
'மலர்களல்ல, மகுடம் உண்டு' என்ருர்.

2 'வானம் புகையினுல் காத்திருக்கிறது, அங்கு வெறும்
சப்தமேயன்றி வேறில்லையே' என்றேன்
'அது மாத்திரமல்ல, பாவமுமுண்டு' என்று மாறுத்தரம்
கூறினர்

என்னை அவர் அனுப்புகையில் கண்ணீர்
அவர் கண்களிலிருந்து வழிந்ததே.

3 'அங்கு சுத்த ஆகாயமில்லை மூடுபனி
சூரியனை மறைக்கிறதே' என்றேன்
'குணப்படாது இருளிலிருக்கும் நோயுற்ற
ஆத்துமாக்கள் அங்குண்டு' என்ருர்.

4 'அங்குப் போதிய வெளிச்சம் இல்லை
என் தோழர் என்னைக் காணுது வருந்துவார்' என்றேன்
'நான் உன்னைவிட்டு வருந்தவா? அன்றி
உன் தோழர் உன்னைவிட்டு வருந்தவா? சொல் என்ருர்.'

5 'ஓர் முடிவுக்குவர எனக்கு நேரம்தாரும்' என்றேன்
நிச்சயிப்பது உனக்குக் கடினமாயிருக்கிறதா?
உன்னை நடத்துகிறவர் அடிச்சுவட்டைப் பின்பற்றினது
நீ மோட்சத்திலிருக்கும்போது கஷ்டமாய்த் தெரியாது'
என்ருர்.

6 வயல் வெளிகளை ஒருமுறை பார்த்துவிட்டு
நகரத்துக்கு நேராய்த் திரும்பினேன்
'என் பிள்ளையே, இணங்குகிருயா?
மலர்களைவிட்டு மகுடம் அடைய மனம்கொண்டாயா'
என்ருர்.

7 அப்போது அவர் கரத்துள் என் கையை வைத்தேன்
அவர் என்னுள்ளத்தில் பிரவேசித்தார்;
நான் பார்க்கப் பயந்த பாதையில்
பரம ஒளி வழிகாட்ட நடக்கிறேன். —ஜார்ஜ் மாக்டனல்ட்

## டிசம்பர் 6

'இதோ சீக்கிரமாய் வருகிறேன், ஒருவனும் உன் கிரீடத்தை எடுத்துக்கொள்ளாத படிக்கு உனக்குள்ளதைப் பற்றிக்கொண்டிரு' (வெளி. 3:11).

ஜார்ஜ் முல்லர் என்பவர் பின்வருமாறு சாட்சி பகருகிருர். 1829ஆம் ஆண்டு ஜூலை மாதம் தேவன் எனக்கு ஒரு இரகசியத்தை வெளிப்படுத்தினர். 'உலகம் பூராவும் ஓர்நாளில் குணப்படுவது

கூடாது. அவருடைய இரண்டாம் வருகை ஒவ்வொருவனுள்ளத்திலும்தான் உண்டாகிறது' என்பதே அந்தச் சத்தியம். 'அதன் பயனுகக் குணப்படாது அழியும் பாவிகளின் மேலும், தீமையிலேயே உறங்கிக் கிடக்கும் இந்த உலகத்தின் பேரிலும், என்னுள்ளத்தில் பட்சபாதம் உண்டாயிற்று. அவர் தாமதிக்கும்போது, ஆண்டவராகிய கிறிஸ்துவுக்காகவும், தூங்கிக்கொண்டிருக்கும் திருச்சபை எழுப்புதலடையவும், நான் என்னுலியன்றதைச் செய்யவேண்டாமா? என்ற எண்ணம் உண்டாயிற்று' என்கிருர்.

உலகம் முடிவதற்குமுன் அதிகக் கொடூரமான காலங்கள் வரலாம். ஆனுல் எனக்கோ உலக அழிவின்நாள் நெருங்குவதின் அடையாளங்கள் தெளிவாயிருக்கின்றன இன்றையதினம் சாயங்காலம் எக்காளத்தை ஊதும் தூதனின் செட்டைகளைக் கண்டால், அது நிசமோ, பொய்யோ என்று நினைக்கமாட்டேன். நாளைய தினத்தில் தந்தியில்லாக் கம்பியில் செய்தி ஒன்று ஆண்டவராகிய கிறிஸ்து ஒலிவமலையில் அல்லது கல்வாரி மலையில் இறங்கியிருக்கிருர், தம்முடைய ஆளுகையைத் தெரியப்படுத்தியுள்ளார் என்று வந்தாலும், நான் ஆச்சரியப்படமாட்டேன். செத்த சபையே எழும்பு! கிறிஸ்துவே இறங்கும்! காயப்பட்ட சென்னியே, உன் கிரீடத்தைப் பெற்றுக்கொள்! குத்துண்ட கையே, உன் செங்கோலைப் பிடி! காயப்பட்ட பாதமே, சிம்மாசனத்தில் ஏறு! இராட்சியம் உன்னுடையதே.

நாளின் வேலையை முடித்து
மாலை மயங்கும் வேளையில் ஒய்ந்திருந்து
மறையும் கதிரவனை நோக்கும் வேளையில்
பகலோன் கடலில் மூழ்கி
பிரகாசமான பகல் முடிகையில்
அந்தவேளை என்னைத் தியானிப்பதால்
அமைதியாய்ப் பரிசுத்தமாயிருக்கும்
கிராமப் பிள்ளைகள் வீதியில் செல்லும்
சப்தத்தை நீ கேட்கையில்
கடந்து செல்லும் காலடி ஓசையில்
என் காலடிச் சத்தமும் நீ கேட்கலாம்
ஆகையால் கவனித்திரு
அந்தி விண்மீன் ஒளியில்
உன் அறையில் மேகம்போல்
இருள் சூழ்கையில்
உன் வீட்டின் தாழ்ப்பாளை உயர்த்திவை,
நான் வருவேன்.

## டிசம்பர் 7

'நீங்கள் காற்றையும் காணமாட்டீர்கள், மழையையும் காணமாட்டீர்கள்; ஆனாலும் நீங்களும், உங்கள் ஆடுமாடுகளும், உங்கள் மிருக ஜீவன்களும் குடிக்கும்படிக்கு, இந்தப் பள்ளத்தாக்கு தண்ணீரால் நிரப்பப்படும் என்று கர்த்தர் சொல்லுகிறார். இது கர்த்தரின் பார்வைக்கு அற்பமான காரியம். மோவாபியரையும் உங்கள் கையில் ஒப்புக்கொடுப்பார் (2 இரா. 3:17.18).

மனிதன் அது முடியாது என்று நினைக்கிறான். ஆனால் தேவனால் முடியாதது ஒன்றுமில்லை.

ஒரு சப்தமாவது, ஒரு அறிகுறியாவது இல்லாமல், காணாத இடத்திலிருந்து இரவிலே வெள்ளம் மெதுவாய் வந்தது. அதிகாலையில் அந்தப் பள்ளங்களெல்லாம் பளிங்குபோன்ற தண்ணீரால் நிரம்பியிருந்தன. அந்தத் தண்ணீர், ஏதோமின் மலைகளில் மேலிருந்து விழுந்த சூரிய கிரணங்களைப் பிரதிபலித்தது.

நம்முடைய அவநம்பிக்கையினால் நாம் வெளியரங்கமான அடையாளங்களைத் தேடுகிறோம். அநேகருடைய மார்க்கம், உணர்ச்சியைப் பொறுத்ததாயிருக்கிறது. வெளிப்படையான அறிகுறி இல்லாவிடில் அது உண்மையோ, அன்றோ என்று சந்தேகப்படுகிறார்கள். அறிகுறியில்லாமல் தேவன் அதைச் செய்கிறார். செய்வார் என்று விசுவாசிப்பதே விசுவாசத்தின் வெற்றி.

கடக்க முடியாத சிவந்த சமுத்திரத்தின் எதிராக நின்றுகொண்டு 'அமைதியாய் நின்று ஆண்டவருடைய இரட்சிப்பைப் பார்; முன்னேறிச் செல்' என்று சொல்லும் ஆண்டவரின் வார்த்தைகளைக் கேட்பதே, விசுவாசத்தின் வெற்றி.

ஒரு அற்புதமான சொஸ்தமாக்குதல், ஒரு ஆச்சரியமான விடுதலை இவற்றில் தேவனுடைய அற்புதமான கிரியையை நோக்குங்கால் எல்லாம் எவ்வளவு அமைதியாய் நடைபெறுகிறது என்பதே நாம் முக்கியமாய் கவனிக்கும் விஷயமாகும். அபூர்வமாய் ஒன்றும் நடக்கவில்லை. வியப்புற யாதும் நேரிடவில்லை. நாம் செயலற்று நிற்கையில் நம் உதவி சிறிதுமின்றி, அவரும் கொஞ்சமும் சிரமம் எடுத்துக்கொள்ளாமல் வெகு எளிதாய் நடப்பிக்கிறார் என்பதை உணருகிறோம்.

விசுவாசம் சந்தேகங்களை கிளப்பிக்கொண்டிருக்கமாட்டாது. உடனே கீழ்ப்படியும். பள்ளங்கள் வெட்டப்பட்டன, மனுஷன் அறியாத ஓரிடத்திலிருந்து தண்ணீர் ஓடிவந்தது, இது எத்தனை அருமையான விசுவாசப் பாடம்.

உனக்கு ஆவிக்குரிய ஆசீர்வாதம் வேண்டுமென்று விரும்புகிறாயா? பள்ளங்களை வெட்டு. தேவன் நிரப்புவார். நீ எதிர்பாராத இடத்திலும் நீ எதிர்பாராத சமயத்திலும் நடக்கும். பார்ப்பதினாலன்றி விசுவாசத்தினால் நடந்து நாம் காற்றையும் மழையையும் காணாவிட்டாலும், தேவன் கிரியை செய்வார் என்ற விசுவாசம் உண்டானால் நாம் பாக்கியரே. —எ. பி. சிம்ப்ஸன்

## டிசம்பர் 8

*'நீங்கள் தேவனால் தெரிந்துகொள்ளப்பட்ட உருக்கமான இரக்கத்தைத் தரித்துக் கொள்ளுங்கள்' (கொலோ. 3:12).*

ஒரு கிழவன் தான் செல்லுமிடமெல்லாம், தன்னோடு ஓர் எண்ணெய்ப் புட்டியைக்கொண்டு சென்றானும். தான் கடந்து செல்லுமிடங்களில் கதவு சத்தம் செய்யுமென்றால் கீல்முனையில் சிறிது எண்ணெய் ஊற்றுவானும். ஒரு கதவைத் திறக்க கஷ்டப் பட்டார்களென்றால் அதன் தாழ்ப்பாளில் எண்ணெய் ஊற்றுவானும். இவ்வாறு அவன் தன் வாழ்க்கையின் சிக்கலான இடங்கள் தனக்குப் பின்வருபவர்களுக்குச் சுலபமாக இருக்க எண்ணெய் ஊற்றிவந்தான்.

அவனைக் கண்ட ஜனங்கள் அவனைப் பைத்தியக்காரன் என்றெல்லாம் சொன்னார்கள். ஆனால் அந்தக் கிழவன் தன் தொழிலை விட்டுவிடவில்லை. புட்டியில் எண்ணெய் செலவழிந்து போனதும், மறுபடியும் அதில் எண்ணெய் ஊற்றி, சிக்கலான இடங்களை வழுவழுப்பாக்கும் வேலையைத் தொடர்ந்து நடத்தி வந்தான்.

அநேகருடைய வாழ்க்கைகள் இவ்வாறு சிக்கலாகவே இருக்கின்றன. அருவருப்பான சத்தம் உண்டாக்குகின்றன. அவர்களுக்கு ஒன்றும் சரிப்படுவதாகத் தோன்றவில்லை. இவர்கள் இயற்கை, மகிழ்ச்சி, பட்சம் நிதானம் எனப்படும் எண்ணெயால் வழுவழுப்பாக்கப்படவேண்டும். அதிகாலையில் உனக்கு அடுத்தவனுக்கு உதவி என்னும் எண்ணெய்போடத் தயாராயிரு. அது நாள் பூராவும் அவன் வாழ்க்கையை வழுவழுப்பாயிருக்கச் செய்யலாம். மனம் இளக்கரித்தோருக்கு உற்சாகம் என்னும் எண்ணெய் அவசியம். நம்பிக்கை இழந்தவனுக்கு ஊக்கம் அளிக்கும் வார்த்தைகளைச் சொல்வது அவசியம். ஆகையினால் அதைச் சொல்லு.

வாழ்க்கையாகிய பாதையில் நம் வாழ்க்கை மற்றொருவனுடைய வாழ்க்கையில் ஒரு தடவை மாத்திரம் நெருங்கலாம். பின்பு நாம் பிரிந்து சந்தியாதே போகலாம். அநேகருடைய வாழ்க்கையில் கூரான பாவத்தால் கடினப்பட்ட மூலைகளையும் ஓரங்களையும் பட்சம் என்னும் எண்ணெய் வழுவழுப்பாக்கி, இரட்சகரின் கிருபையைப் பெறத்தக்கவிதமாய், மிருதுவாக்கிப் பணியச் செய்கிறது.

இனிமையாய்ச் சொல்லப்பட்ட ஒரு வார்த்தை துக்கிக்கும் ஒரு இதயத்தில் சூரியனின் ஒளிக்கதிரொன்றைவிட்டுச் செல்லும். ஆகையால் மற்றவர்களுக்குச் சந்தோஷம் உண்டாக்கும். மற்றும் உன் காரியங்களை இயேசுவிடம் சொல்லு.

மனிதன் கடன் வாங்கும் துக்கத்தை
நாம் அறியோம்;
துக்கத்தால் மோதப்பட்ட
இதயத்தை நாம் காணமுடியாது;

ஆனுல் அன்பு இன்றும் என்றும்
வழியைப் பிரகாசிக்கும். ஆதலின்
நாம் அன்பா யிருப்போமாக
நோவு என்னும் சக்கரம் மோதி
அநேகரின் வாழ்வை சிதைக்கிறது
நம் பட்சத்தைக் காட்டாவிட்டால்
நம் வாழ்வு வீணும்
நாம் பட்சமாயிருப்போமாக.

'சகோதர சிநேகத்தில் ஒருவருக்கொருவர் பட்சமாயிருங்கள்' (ரோ. 12:10).

## டிசம்பர் 9

'அதி சீக்கிரத்தில் நீங்கும் இலேசான நம்முடைய உபத்திரவம் மிகவும் அதிகமான நித்திய கனமகிமையை உண்டாக்குகிறது' (2 கொ. 4:17).

'உண்டாக்குகிறது' என்னும் வார்த்தையைக் கவனி. 'மானிடரின் வாழ்வு ஏன் இரத்த வெள்ளத்தால் நனைந்து அதிகக் கண்ணீரால் நிறைந்திருக்கிறது' என்ற வினு பலமுறை கேட்கப்படுகிறது. இதன் விடை ஒன்றை 'அடைவதற்கே' என்பதே. இவைகள் நாம் ஒரு அரிதான பொருளை அடையச்செய்கின்றது. அது வெற்றிக்கு வழியைக் காட்டுவது மாத்திரமல்ல. வெற்றியடைவதற்கான விதியையும் காட்டுகிறது. ஒவ்வொரு துக்கத்திற்கும் ஒரு ஈடு கொடுக்கப்படும். அந்தத் துக்கமே அதற்கு ஈடான காரியத்தை உண்டுபண்ணுகிறது.

'உம்மண்டை தேவனே
நான் சேரட்டும்
சிலுவை சுமந்து நடப்பினும்'

என்ற பாட்டின் பொருளும் அதுவே.

களிப்பு பிறப்பதற்கு வேதனை அவசியமாகிறது. பானி கிராஸ்பி என்பவள் பச்சையான வெளியையும், அந்திவேளை ஆதவன் மறைதலையும் அன்பான தாயின் கண்களையும் பார்த்ததில்லை. ஆகையினுல் தான் அவள் 'நான் அவரை முகமுகமாய்த் தரிசிப்பேன்' என்ற திவ்விய கீதத்தை எழுதக்கூடியவளானுள். அவளுடைய சடலப் பார்வை அற்றுப்போனதால், ஆவிக்குரிய பார்வை தெளிவாயிருந்தது.

அதிகக் கஷ்டப்படும் மரமே அதிக மெருகு ஏற்கும். தச்சனுக்கு இயற்கையிலேயே அழகான வளைவு அமைந்துள்ள மரம் வேண்டுமானுல் முன்னுல் கோடாலியால் வெட்டப்பட்டு புயலால் திருக்கி முறுக்கப்பட்டுள்ள மரத்தையே வெட்டுகிறுன். இவ்விதமாக அவன் மெருகு ஏற்றக்கூடிய முடிச்சுகளையுடைய கடினமான மரத்தைப் பெறுகிறுன்.

துக்கம் இரவில் மாத்திரம் இருக்குமென்பது ஒரு ஆறுதலான காரியம். அது காலையில் நம்மைவிட்டு அகலுகிறது. இன்பம் நிறைந்த கோடை நாளையும், புயல் காற்றையும் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, புயல் சொற்ப நேரம் மட்டுமே இருப்பதைக் காண்போம்.

'அழுகை இரவில் இருக்கலாம். ஆனால் காலை களிப்புடன் ஆரம்பமாகும்.'

துன்பத்திற்குப் பிறகு ஏற்படும் சமாதானம் ஒன்று உண்டு. நம்பிக்கை நிறைவேறுவதனால் அல்ல. நம்பிக்கையை ஒப்புவித்து விடுவதால் அது ஏற்படுகின்றது. இச் சமாதானம் நாளைய தினத்தை எண்ணிப் பார்க்காது இன்று புயல் அமர்த்தப்பட்டதையே நோக்கும்.

இத்தகைய சமாதானம் மிகுந்த சந்தோஷத்தினாலும் அன்பினாலும் பாதுகாப்பிலும் சூழப்பட்ட வாழ்க்கையில் தோன்றுவதல்ல. துன்பத்தைச் சகிக்கக் கற்று வாழ்க்கைப் போரில் வெற்றியடைந்தவர்களின் இதயத்தில் அழியாத வலிமை உண்டு. அதிலிருந்தே இச்சமாதானம் தோன்றுகிறது.

தியாகத்தில் ஒரு சமாதானம் உண்டு. ஆணவமும் சுயசத்தியமும் நீங்கி அடங்கிய வாழ்விலும் அது உண்டு. ஏதேன் தோட்டத்தில் இருந்த சமாதானம் அல்ல; கெத்சமனேயில் வெற்றியடைந்த சமாதானமே அது...

## டிசம்பர் 10

'நாங்கள் உபத்திரவப்பட்டாலும் அது உங்கள் உறுதிக்கும், இரட்சிப்புக்கும் ஏதுவாகும் . . . நாங்கள் பாடுபடுகிறதுபோல நீங்களும் பாடுபட்டுச் சகிக்கிறதினாலே . . . நீங்கள் எங்களோடே பாடுபடுகிறதுபோல எங்களோடே ஆறுதலும் அடைகிறீர்களென்று நாங்கள் அறிந்து உங்களைக் குறித்து உறுதியான நம்பிக்கை உள்ளவர்களாயிருக்கிறோம்' (2 கொ. 1:6,7).

உனக்குத் துக்கம் சோதனை உண்டாகும்போது உன் சிநேகிதருள் ஒருவனிடமே போகிறாயல்லவா? அவன் எப்போதும் சரியான வார்த்தை சொல்லுகிறான். உனக்கு வேண்டுமென்று விரும்பிய படி சரியான ஆலோசனை சொல்லுகிறான். அப்படிப்பட்ட சிநேகிதர் அவ்வாறு காயங்களைக் கட்டிக் கண்ணீரைத் துடைக்கக் கெட்டிக்காரராயிருப்பதற்கு, அவர்கள் எவ்வளவு பாடனுபவித்திருப்பார்கள் என்பதை நீ அறிவாயா? அவர்களுடைய சரிதையை நீ ஆராய்வாயானால், அவர்கள் அநேகரைவிட அதிகப் பாடனுபவித்தார்களென்பது தெரியவரும். ஜீவனாகிய விளக்குத் தொங்கவிடப்பட்டிருந்த வெள்ளிக் கயிறு மெதுவாய் அறுந்து போவதைக் கண்டிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் சந்தோஷமாகிய பொற்பாத்திரம் தங்கள் காலடியிலேயே விழுந்து களிப்பு யாவும் சிதறிப் போவதைக் கண்டுள்ளார்கள். பின்வாங்கும் அலைகளையும், வாடித்

தொங்கும் காய்களேயும், மதியத்தில் சூரியன் மறைவதையும், கண்டுள்ளார்கள். இவைகள் யாவும் அவர்களேச் சிறந்தகைத் தாயாகவும் மருத்துவராகவும், போதகர்களாகவும் ஆகச் செய் தவை. இதர தேசங்களிலிருந்து வரும் சாமான் பெட்டிகள் அலங் கோலமாய்க் காணப்படுகின்றன. ஆனுல் அவைகள் ஆகாயத்தை கீழ்த்தேச நறுமணங்களால் நிரப்பக்கூடிய வாசனேப் பொருள்கள் அடங்கிய பெட்டிகள். அதுபோல் பாடுகள் சகிப்பது கஷ்டமாய்த் தோன்றுகிறது. ஆனுல் அதனுல் ஒழுங்கு, கல்வி, முன்னேறக்கூடிய சாதகம் எல்லாம் உண்டாகின்றன. அவைகள் நம்மைப் பெருந் தன்மையுள்ளவர்களாக்கி, நம்மை மற்றவர்களுக்கு உதவி செய்ய தக்கவர்களாய்ப் பூரணப்படுத்துகின்றன. நீ கவலேக்கொண்டு பாடு கள் நீங்கும்வரை பல்லேக் கடித்துக்கொண்டு, அவற்றைச் சகிக் காதே. அந்தப் பாடுகளிலிருந்து உனக்கு ஏற்படக்கூடிய பலன் களின்மேல் நோக்கமாயிருந்து, கடவுள் சித்தப்படி உனக்கானவை களேயும், உன் சந்ததியாருக்கு நீ செய்யும் ஊழியத்திற்கு உதவக் கூடியவைகளேயும் பெற்றுக்கொள்.

ஒருநாள் காலேநேரத்தில் காற்றில் மிதந்துவரும் இனிய கீதத்தைக் கேட்டேன்.

பரிபூரணமான அக்கீதம் ஒரு உருக்கமான ஜெபத்தைப் போலிருந்தது.

இந்த அழகிய கீதம் எங்கிருந்து வருகிறது. இதைப் பாடியது யார் என்றறிய விரும்பினேன். காயமுற்று முள்ளில் சிக்கிக்கொண்ட ஒரு பறவையே அதைப் பாடிற்று என அறிந்தேன். துன்பத்தில் இருக்கும் ஒரு ஆத்மா, வேதனேயால் தன் இறகுகள் மடக்கப்பட் டிருந்த போதும் நம்பிக்கையும் உற்சாகமும் அளித்துத் துன்பம் நிறைந்த இவ்வுலகை ஆசீர்வதிப்பதைக் கண்டுள்ளேன். துன்பத்தி லும் வேதனேயிலுமிருந்தே இனிமை நிறைந்த அவ்வாழ்க்கை உண் டாகின்றதென அறிந்தேன்.

அந்த ஆத்துமாவும் தன் இதயத்தை ஒருமுள் அழுத்திக்கொண் டிருக்கும்பொழுது பாடுகின்றது.

உங்களே நேசித்த இரட்சகர் சிலுவையில் அறையப்பட்டார் என்பதை அறிவீர்கள். அவர் கைகள் ஆணியால் பிணிக்கப்பட்டன என்றும் அவர் விலாவில் ஈட்டி பாய்ந்தது என்றும் அறிவீர்கள்.

அவரை சவுக்கினுல் அடித்தனர் என்பதையும் அவர் ஏற்ற நிந்தை களேப்பற்றியும் கேட்டிருப்பீர்கள்.

தமது சிரசை முட்கள் அழுத்த உங்கள் இரட்சிப்பிற்காக அவர் மரித்தார்.

உங்கள் எஜமானனேவிட நீங்கள் உயர்ந்தவர்களல்ல. நீங்களும் ஒரு இனிய கீதம் பாடலாமல்லவா?

உங்கள் இதயம் துன்பத்தினுல் வருத்தமுறும்பொழுதும் அவரது கிருபை உங்களுக்குப் போதுமானதாயிருக்கும்.

உங்கள் வாழ்க்கை காயமுற்றிருந்தாலும் அவரது அன்பிற்குரிய மக்களுக்கு ஆசீர்வாதமாக நீங்கள் வாழ்வீர்களா?

இனிமையாகப் பாடிய. அந்தப் பறவையைப்போல் நீங்களும் இருப்பீர்களா?

## டிசம்பர் 11

*'இராக்காலங்களில் சர்த்தருடைய ஆலயத்தில் நிற்கும் ஊழியரே . . . வானத்தையும் பூமியையும் படைத்த சர்த்தர் உங்களைச் சீயோனிலிருந்து ஆசீர்வதிப்பாராக' (சங். 134:1–3).*

இராக்காலங்களில் கர்த்தருடைய ஆலயங்களில் நிற்பதும் துக்கத்தில் தேவனுக்கு வணக்கஞ் செய்வதும், விகற்பமான வேளையாகவும், விகற்பமான காரியமாகவும் இருக்கிறது. ஆம் அது மிகவும் கடினமான காரியம். அதில்தான் ஆசீர்வாதம் இருக்கிறது. அது தன் பூரண விசுவாசத்தின் பரீட்சை. என் தோழனின் அன்பை அறியவேண்டுமானுல் கஷ்டகாலத்தில் அவனுடைய அன்பு எனக்கு என்ன செய்கிறது என்பதை அறியவேண்டும். பரம அன்பும் அப்படியே எனக்கு நல்ல காலமாயிருக்கையில், நான் கெம்பீர கீதம் பாடுகையில், வாழ்க்கை பயனுள்ளதாயிருக்கையில், கடவுளை வணங்குவது எளிதாயிருக்கிறது. வாழ்க்கை பயனற்றதாகி பாடல்கள் ஓயும்போது, என் இதயம் எனக்குள் பாடுமா? இராக்காலங்களில் நான் கர்த்தருடைய வீட்டில் நிற்பேஞ? அவருடைய இரவில் அவரை நேசிப்பேஞ? அவருடைய கெத்சமனேயில் ஒரு மணிநேரமாவது விழித்திருக்கக்கூடுமா? அவரது துக்க பாதையில் சிலுவையைச் சுமக்க நான் உதவிபுரிவேஞ? அவரது மரண வேளையில் மரியாளோடும், மற்றச் சீடரோடும் நிற்பேஞ? நிக்கோதேமுபோல், மரித்த கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வேஞ? அப்போது என் வணக்கமும், துதியும், பூரணமானவைகளே, அவருடைய தாழ்மையில் என் அன்பு சேர்ந்தது. அவருடைய தாழ்வில் என் விசுவாசம் அவரைக் கண்டது. அவருடைய ஈவுகளையல்ல, அவரையே விரும்புகிறேன் என்று அறிவேன். நான் அவரை அவருக்காகவே ஏற்றுக் கொண்டுள்ளேன்.

—ஜார்ஜ் மத்தீசன்

1 மகிழ்ச்சியும் சமாதானமும் ஆசீர்வாதமும் என் குறி அல்ல
என்குறி தேவன் ஒருவர் தாமே;
எத்தகைய கஷ்டத்திலும் எவ்விதப் பாதையிலும்,
என்னை நடத்துவது அவருடைய கடமை.

2 ஆகையால் விசுவாசம் தன் இலக்கை நோக்கி அவருக்குள் செல்கிறது
அதைச் சேர அவர் உதவுவார் என்று அன்பு நம்புகிறது
அவர் தாங்க, என் ஆத்துமா என் ஜெபங்கள்
நிறைவேறும்வரை அவரைத் தொடர்கிறது.

3 வழி சில வேளைகளில் இருண்டிருந்தாலும்,
கஷ்டம் அதிகமிருந்தாலும் பரவாயில்லை
இலக்கை அடையச் சரியான வழி அவர் அறிவார்
அவர் நடத்தும் பாதை நேர்பாதை.

4 அவர் உத்தரவுக்கு மறு பேச்சில்லை
அவருக்கு நேராகவே முன்னேறிச் செல்வேன்
அவரே தினமும் என் மகிமை
அப்பால் என் மகிமையும் என் வெகுமதியும் அவரே.

## டிசம்பர் 12

'நான் இப்பொழுதே பானபலியாக வார்க்கப்பட்டுப் போகிறேன். நான் தேகத்தை விட்டுப் பிரியும் காலம் வந்தது. நல்ல போராட்டத்தைப் போராடினேன். விசுவாசத்தைக் காத்துக்கொண்டேன்' (2 தீமோ. 4:6,7).

போர்ச்சேவகர்கள் தங்கள் வயது காலத்தில், தங்கள் வீட்டில், தங்கள், தேசத்தில் தங்கள் இறுதிக் காலங்களைச் செலவிட வருகையில், தங்கள் காயங்களைக் காட்டி, சண்டைகளைப்பற்றிப் பேசுகிறார்கள். நாமும் எந்த நாட்டை நோக்கி விரைந்து செல்கிறோமோ அந்த நாட்டை யடைந்தபின் வழியில் அநேக சோதனைகளில்தேவன் நடத்திய அன்பான செய்கையைக் குறித்துப் பேசுவோம். வெள்ளை யங்கி தரித்தோர் மத்தியில் நின்றுகொண்டு, இவர்களில் ஒருவன் தவிர மற்றவர்களெல்லாம் மிகுந்த துன்பத்திலிருந்து வந்தவர்கள் என்று என்னைக் குறித்து சொல்லக் கேட்க விரும்பேன்.

நீ அங்கிருந்துகொண்டு இந்த ஒரு பக்தன்தான் துன்பம் இன்னது என்பதை அறியாதவன் என்று சுட்டிகாட்டப்பட விரும்புவாயா? அல்ல! அந்தப் பரிசுத்த சங்கத்தில் நீ அந்நியனாக காணப்படுவாய். போரில் பங்கெடுப்போம். ஏனென்றால் சீக்கிரம் கிரீடம் பெறுவோம். வெற்றிக்கொடி வீசுவோம். —சி. எச். ஸ்பர்ஜன்

உயர்ந்த மலையினுச்சியில் போய்ச் சத்துரு வருகிறானாவென்று பார்க்கச் சென்ற போர்வீரன் காயமடைந்தான். வைத்தியர் அவனைப் பார்த்து, 'எவ்விடத்தில் காயமடைந்தாய்?' என்று கேட்டார். அதற்கவன் 'ஏறக்குறைய மலையுச்சியில்' என்றான். அவன் தன் காயத்தை மறந்தான். உச்சியை யடைந்துவிட்டதை மாத்திரம் ஞாபகம் வைத்திருந்தான். அவ்விதமாக நாமும் கிறிஸ்துவுக்காக அரிய காரியங்களைச் செய்யத் தேடவேண்டும். உச்சி செல்லும்

வரை விடாது ஓடி, உச்சியிலிருந்து 'நல்லப்போராட்டத்தைப் போராடினேன். ஓட்டத்தை முடித்தேன். விசுவாசத்தைக் காத்துக் கொண்டேன்' என்று சொல்லவேண்டும.

உன் ஊழியத்தை முடித்துப்பின் இளைப்பாறு,
அதுவரை ஓய்வை நாடாதே,
தேவனால் உனக்குக் கிட்டும் ஓய்வு
நித்திய ஓய்வாயிருக்கும்.

தேவன் நீ பட்டங்கள், பதக்கங்கள் பெற்றிருக்கிறாயா என்று பார்க்கமாட்டார். நீ காயப்பட்டிருக்கிறாயா? என்றுதான் நோக்கு வார்.

ஒரு வீரனைக்குறித்து ஒரு கவிஞன்,
'தனக்கு உதவியாகத் தன் பட்டயத்தை
எடுத்துச் சென்றான்,
அதில் உடைவுகள் வளைவுகளன்றி,
வேறே அலங்காரமில்லை' என்று பாடியுள்ளார்.

அவருடைய ஊழியத்தில் காயமடைந்து, நஷ்டமடைந்து கிறிஸ்துவுக்காய் நிந்தை அனுபவித்து, ஆண்டவருடைய சேவையில் வாழ் நாளைக் கழிப்பதைவிடப் பக்திமானுக்கு என்ன பரிசுவேண்டும்?

## டிசம்பர் 13

*'அந்தகாரத்திலிருக்கிற பொக்கிஷங்களை உனக்குக் கொடுப்பேன்' (ஏசா. 45:4).*

பிரஸ்ஸல்ஸ் என்னுமிடத்தில் வெகு நேர்த்தியான அபூர்வமான சித்திரத்தையல் ஆடை நெய்யப்படுவதற்கென்று தனிப்பட்ட விசேஷ அறைகள் உண்டு. இந்த அறையில் எங்கும் இருள் சூழ்ந் திருக்கும். ஒரு சிறுவழியாய் வெளிச்சம் அந்தச் சித்திரத்தில் மாத் திரம் விழும். அங்கே நெசவுவேலை செய்கிற ஒரு ஆள்மாத்திரம் உட்கார்ந்திருப்பான். அவன் நெய்கின்ற நூல்களின்மேல் விழும் வெளிச்சத்திற்கு எதிராய் உட்கார்ந்திருப்பான். இவ்விதமாக நாம் அபூர்வ வேலைப்பாடுள்ள ஆடைகளைப் பெறுகிறோம். சித்திர வேலைப்பாடுகள் செய்யப்படும்போது, வேலைசெய்பவர் இருட்டில் உட்கார்ந்து கொண்டு, தான்செய்யும் பூ வேலைப்பாட்டின்மேல் மாத்திரம் வெளிச்சம் வருவதாக வைத்து வேலைசெய்வதால் வேலைப் பாடு வெகுநேர்த்தியாய் இருக்கும்.

நம்முடைய ஊழியமும் அவ்வாறன்றோ? சிலவேளை அதிக இருளா யிருக்கிறது. நாம் செய்வது இன்னதென்றே நமக்குத் தெரியவில்லை. நாம் பின்னும் வலையை நாம் காண்கிறதில்லை. நம்முடைய அனுப வத்தில் ஓர் அழகோ, நன்மையோ இருப்பதாக நமக்குத் தெரிய வில்லை என்றாலும் நாம் உண்மையாயிருந்து, தவறாது இளக்கரித்துப்

போகாதிருக்கையில் நாம் இருளிலிருந்த அந்நாட்களில் நாம் வாழ்க்கையில் அரிய வேலேசெய்யப்பட்டது என்பது தெரியும்.

உனக்கு விளங்காத தெய்வ நடத்துதலால் உனக்கு எல்லாம் இருண்டு தோன்றினும் பயப்படாதே. விசுவாசத்தோடும் அன்போடும் சந்தேகியாமல் முன்னேறு. தேவன் உன்னைக் கவனித்துக் கொண்டிருக்கிருர். உன் வேதனையிலிருந்தும் கண்ணீரிலிருந்தும் நன்மை உண்டாகச் செய்வார். —ஜெ. ஆர். மில்லர்

1 அவருடைய திட்டத்தை நிறைவேற்ற
அவருடைய இயந்திர விசை அசைகிறது.
அவர் கரத்தின் கிரியை நல்லதல்ல என்று
அரைகுறையாயிருக்கும்போது சொல்லாதே.

2 அதில் ஒரு கறுப்புக்கோடு இருக்கையில்
அது அழகல்ல என்று நினையாதே!
ஏனென்ருல் ஒவ்வொரு கறுப்பு நூலுக்கூடேயும்
ஒரு சரிகை நூல்சுற்றிக் கொண்டிருக்கிறது.

3 சந்தோஷமாய் வேலே செய்,
கண்ணீரோடும் செய்யாதே!
நீ செல்லும் பாதை அவர் அறிவார்,
கவனமாய் செய், ஜெபத்தோடு செய்
வேலேயின் பயனைத் தேவன் கரத்தில் ஒப்புவி.

## டிசம்பர் 14

*அவருடைய சீடர்கள்: 'ஆண்டவரே எங்களுக்கு ஜெபம்பண்ணப் போதியும்' என்ருர்கள். அதற்கு அவர் 'நீங்கள் ஜெபம்பண்ணும்போது . . . உம்முடைய இராஜ்யம் வருவதாக என்று சொல்லுங்கள் என்ருர்' (லூ. 11:1,2).*

அவர்கள் 'எங்களுக்கு ஜெபம்பண்ணப்போதியும்' என்றுசொன்ன போது அவர் தம் கண்களை ஏறெடுத்து வானவெளி முழுவதையும் ஒரு தடவை நோக்கினுர். நித்தியமான தேவன் இறுதியில் செய்து முடிக்க விரும்புவதையும் மனிதர்களுடைய வாழ்க்கையில் அவர் செய்ய ஆசைப்படும் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து 'உமது இராச்சியம் வருவதாக' என்று மூன்று வார்த்தைகளில் அடக்கினுர். பின்பு நீங்கள் ஜெபம்செய்யும்போது இவ்விதமாய்ச் சொல்லுங்கள் என்ருர்.

இது நாம் செய்யும் பெரிய ஜெபங்களுக்கு எத்தனை மாருயிருக்கிறது. நம்முடைய இருதய விருப்பப்படி நாம் ஜெபிக்கும்போது என்னவெல்லாம் ஜெபிக்கிருேம். 'ஆண்டவரே! என்னை, என் குடும்பத்தை, என் சபையை, என் ஊரை, என் தேசத்தை ஆசீர்வதியும்' என்று ஜெபிக்கிருேம். அப்பால் உலகில் தேவனுடைய

இராச்சியம் வரவேண்டும் என்று சில வார்த்தைகளைச் சொல்லுகிறோம்.

நம்முடைய எஜமானனாகிய கிறிஸ்து வேறு விதமாக ஜெபம் செய்யும்படி சொல்லுகிறார். உலகம், முதலில் எனது தேவைகள் அதற்குப்பின்னால் என்பதே இந்த ஜெபத்தின் முறை. முதலில் என் ஜெபம் கண்டங்களையும் தீவுகளையும் தாண்டிச்செல்லவேண்டும். உலகில் எல்லா மக்களையும் மிகப் பிற்போக்கான குலத்திலுள்ள கடைசி மனிதனையும் உட்படுத்திக்கொள்ளவேண்டும். உலகத்திற்கு கடவுளின் சித்தம் எது அதை என் ஜெபம் நாடவேண்டும். அதற்குப் பிறகுதான் நான் எனக்காக சிறிது உணவு தாரும் என வேண்டிக் கொள்ளலாம் என அவர் கற்பித்திருக்கிறார்.

கிறிஸ்து தம்மையும் தமக்குள்ள யாவற்றையும், சிலுவை மரணத்தினால் நமக்குக் கொடுத்திருக்கையில், நம்மையும் அவ்வாறு செய்யச் சொல்லுவது மிகையாகாது. கிறிஸ்துவின் ஊழியமே வாழ்க்கையில் அதிக முக்கியமானது. தனக்குரிய காரியங்கள் எவ்வளவு அருமையானவையானாலும், எவ்வளவு முக்கியமானவையானாலும், அந்த மேலான காரியத்திற்கு அவை உபகாரியங்களே என்று எண்ணும் பொழுதுதான் ஒருவனுக்குத் தேவனுடைய இராச்சியத்தில் பங்குண்டு.

ஆப்பிரிக்காவில் சிறந்த தேவ ஊழியனாக இருந்த ராபர்ட் மோவட் என்பவர் ஒரு இளம்பெண்ணின் குறிப்புப் புத்தகத்தில் பின்வரும் வரிகளை எழுதி வைத்துள்ளார்.

இருளும் புயலும் நிறைந்த அடக்கமற்ற உள்ளமே என் குறிப்புப் புத்தகம். அதில் ஒரு சிறு ஒளிக் கதிருமில்லை.

ஆனால் அதில் கிறிஸ்துவின் பெயரை யெழுதி அதன் அடக்கமற்ற தன்மையை அவருக்கு அடிபணியச் செய்யவேண்டும். இன்னும் அதிக அழகும் ஒளியும் நிறைந்த உலகங்களைக் காணும்படியும் செய்யவேண்டும். இதுவே என் ஆத்துமாவுக்கு ஆனந்தமாகும்.

அவருடைய இராச்சியத்திற்கு எல்லையிராது (லூ. 1:33).

மிஷனெரி ஊழியம் சபை யோசனையல்ல (பழைய மோரேவியர் திருப்புதல்) அது கிறிஸ்துவின் முன்யோசனையே.

—என்ரிவேண்டைக்

## டிசம்பர் 15

'கர்த்தரை நம்பு' (சங். 37:5).

விசுவாசத்தின் முக்கிய வார்த்தை 'நம்பு' என்பதே. இது பழைய ஏற்பாட்டின் காலத்தில் விசுவாசம் விருத்தியடைவதற்கு முன்பே உபயோகிக்கப்பட்ட பதம். 'விசுவாசம்' என்பது நமது சித்த சக்தி

யின் செயலாகும். ஆனால் அறிவு என்பது மனதையும் புத்தியையும் சார்ந்த ஒன்று. முன்னது இருதயத்தின் தொழிலாவது. பின்னது நிகழ்ந்த அல்லது நிகழப்போகின்ற ஒரு விஷயத்தை இது இவ் வாறானது என அறிவதே.

நம்புவது என்ற சொல்லில் இன்னும் அதிகப் பொருள் அடங்கி யுள்ளது. அன்புநிறை பெரிய உள்ளம் படைத்த ஒருவரைக் கண்டு உணர்ந்து அவரைச் சார்ந்திருப்பது என்பதே அதன் பொருள்.

ஆகையால் அவர் தாமதித்தாலும், கஷ்டம் வந்தாலும், மறுத் தாலும், காணப்படுபவையெல்லாம் சாதகமாய்த் தோன்றுவிட்டா லும், வழியையும் பயனையும் அறிந்துகொள்ள நம்மால் கூடாவிட் டாலும் இன்னும் அவரை நம்புவோமானால் வழி திறக்கும் சரியான பயன் ஏற்படும்; இறுதியானது சமாதானமாய் முடியும்; மேகம் விலகும்; நித்திய பகலின் வெளிச்சம் வீசும்.

1 உன்னைச் சூழ்ந்துள்ள யாவும் உன்னைச் சோதிக்கையில்
நம்பிக்கையாய் இளைப்பாறு.
சத்துருக்களுக்குப் பயந்து கலங்காதே!
தேவனை நம்பி காத்திரு.

2 அவருடைய செட்டைகளின் கீழ்
பறவை கூட்டில் அடைவது போல்
உன் செட்டைகளை மடக்கி அமர்ந்து;
நம்பிக்கையாய் அமைதியாய்க் காத்திரு.

## டிசம்பர் 16

'அன்னாள் என்னும் தீர்க்கதரிசி இருந்தாள் . . . அந்த விதவை தேவாலயத்தை விட்டு நீங்காமல் இரவும் பகலும், உபவாசித்து, ஜெபம்பண்ணி ஆராதனை செய்துகொண்டிருந்தாள்' (லூ. 2:36,37).

ஜெபிப்பதினால் நாம் ஜெபிக்கக் கற்றுக்கொள்ளுகிறோம். அதிகம் ஜெபித்தால் அடிக்கடி ஜெபிப்போம். ஒழுங்கீனமாய் நினைத்த நேரத்தில், ஜெபித்தும் ஜெபியாமலுமிருந்தால் ஊக்கமான ஜெபத் தாலடையும் பயனை நாம் அடையமுடியாது. பெனியேலில் யாக் கோபு இரவு பூராவும் இருந்து கடவுளை தரிசித்தது முதல்தடவை அல்ல. அவன் அடிக்கடி இவ்வாறு தரிசித்து வந்திருக்கிறான். கிறிஸ்து பாடுபடுமுன் தம் சீடரோடு கடைசி முறையாகப்பண்ணின ஆச்சரியமான நேர்த்தியான ஜெபம், அவர் அநேக இரவுகளைத் தியானத்தில் கழித்து, விடியுமுன் அநேக நாட்கள் எழுந்து ஜெபித்த தின் பயனாகும்.

தாம் இஷ்டப்பட்ட நேரம் ஜெபித்தும், ஜெபியாமலுமிருக்கும் ஒருவர் ஜெபத்தில் வல்லவராகலாம் என்று எண்ணுவது தப்பிதம்.

எலியா வானங்கள் மூடும்படியும், பின் வானங்கள் திறக்கும்படியும் ஜெபித்தான். அது ஆயிற்று. இப்படி அநேகத் தடவைகள் அவன் ஜெபித்துக் காரியங்களை ஆகும்படி செய்ததினுல்தான் அது முடிந்தது. இது கிறிஸ்தவர்கள் மனதில் வைக்கவேண்டிய சத்தியம். ஜெபம் கேட்கப்படவேண்டுமானுல் விடாமுயற்சி வேண்டும்.

சபைக்காக மன்ருடி ஜெபிப்பவர்கள் இரத்தச் சாட்சிகள், சாட்சி பகருபவர்களைப்போல், சபைக்கு நன்மை செய்பவர்களாகக் கருதப் படவேண்டும். அவர்கள் இரக்க ஆசனத்திற்குமுன் காத்திருந்ததால் இப்படி மனிதருக்கு நன்மை செய்பவர்களாய் விளங்குகிருர்கள். ஜெபம் செய்வதற்கு நாம் ஜெபிக்கவேண்டும். நம் ஜெபம் தொடர்ச்சியாயிருக்கத் தொடர்ந்து ஜெபிக்கவேண்டும்.

—சி. எச். ஸ்பர்ஜன்

## டிசம்பர் 17

'சமாதானத்தின் தேவன் தாமே உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்குவாராக! உங்கள் ஆவி ஆத்துமா சரீரம் முழுவதும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும்போது குற்றமற்றதாயிருக்கும்படி காக்கப்படுவதாக; உங்களை அழைத்தவர் உண்மையுள்ளவர்; அவர் அப்படியே செய்வார்' (1 தெச. 5:23,24).

அநேக ஆண்டுகளுக்குமுன் 'பரிசுத்தமில்லாமல் தேவனை ஒரு மனிதனும் காணமுடியாது' என்பதை உணர்ந்தேன். நானும் என்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்ள வகை தேடினேன். என்னேடு சம்பந்தப் பட்ட யாவரையும் அப்படிச் செய்யுமாறு தூண்டினேன். பத்து வருடங்களுக்குப்பின் தேவன் அதை அடைவதற்குக் குமாரனை விசுவாசிப்பதே வழி என்று காட்டினுர்.

உடனே நான், 'நாம் மீட்கப்பட்டோம். நாம் நீதிமான்களாக்கப் பட்டோம்' என்ற சத்தியத்தைப் பிரஸ்தாபித்தேன். வீட்டிலும், வெளியிலும், புத்தகங்களின் வாயிலாகவும், இந்தச் சத்தியத்திற்குச் சாட்சி பகர்ந்தேன். தேவன் ஆயிரம் சாட்சிகளால் அதை உறுதிப் படுத்தினுர். முப்பது வருடமாய் நான் இதைச் சொல்லி வருகிறேன். தேவன் என் ஊழியத்தை உறுதிப்படுத்தி வருகிருர்.

—ஜான் வெல்லஸ்லி, (1771ஆம் ஆண்டில்)

'நான் இயேசுவை அறிந்தேன். அவர் என் ஆத்துமாவுக்கு மிக அருமையானவரானுர். ஆனுல், என்னுள் இனிமையற்ற, பொறுமை யற்ற, பட்சமற்ற ஏதோ ஒன்று இருப்பதாகக் கண்டேன். அதை விலக்க முயன்றேன். ஆனுல், அது அங்குதான் இருந்தது. எனக்கு உதவி செய்யுமாறு இயேசுவை வேண்டிக்கொண்டேன். அவர் என் உள்ளத்தில் வந்தார். என் சித்தத்தை அவருக்கு ஒப்படைத்தவுடன், இனிமையற்றவைகளையும், பொறுமையற்றவைகளையும், பட்சமற்ற வைகளையும், வெளியே தள்ளி கதவை அடைத்தார்.'

—ஜார்ஜ் பாக்ஸ்

இந்த க்ஷணத்தில் என் வேலையை ஆதரிக்க மற்றவர் வேண்டுமென்ற 'எண்ணம்' என் உள்ளத்தில் சிறிதேனும் இல்லை. நான் கடவுளோடு தனித்திருக்கிறேன். அவர் காலியிடத்தை நிரப்புகிறார். அவரிலன்றி எனக்கு யாதொரு விருப்பமும் ஆசையுமில்லை. அவர் என் கால்களை விசாலமான இடத்தில் வைத்தார். தேவன் அன்பால் என்னிலுள்ள யாவற்றையும் ஆட்கொண்டதை நினைத்து ஆச்சரியத்தில் மூழ்கி நிற்கிறேன். —ஹண்டிங்டன் அம்மையார்

உடனே என் நெற்றியில் சர்வ சக்தியுள்ள ஒரு கரம் கோபமாக அல்ல, அன்பாக வைக்கப்பட்டதை உணர்ந்தேன். வெளிப்படையாக அல்ல, அந்தரங்கத்தில் உணர்ந்தேன். அது என்னை அழுத்துவதுபோலவும், பாவத்தைப்போக்கும் சக்தியாகப் பரவுவதுபோலவும் உணர்ந்தேன். அது கீழே இறங்க இறங்க, என் இதயமும் புத்தியும், இந்தப் பரிசுத்தப்படுத்தும் சக்தியை உணர்ந்தன. அதன் சக்தியால் நான் தரையில் விழுந்து ஆச்சரியத்திலும் ஆனந்தத்திலும் சத்தமிட்டேன். பின்னும் அந்தச் சக்தி என்னை உள்ளும் புறமும் சுத்திகரித்தது. அது சென்ற இடமெல்லாம் இயேசுவின் திவ்விய சொரூபத்தை விட்டுச் சென்றது. சில நிமிட நேரம் நான் தேவனுடைய அன்பென்னும் ஆழியில் அமிழ்ந்து விடுவேன்போல் தோன்றியது. அதின் அலைகளும் திரைகளும் என்மேல் புரண்டோடின. —ஹாமலீன் பிஷப்

பரிசுத்தம் என்பதைக் குறித்து எனக்குண்டான தியானக் குறிப்புகளை எழுதினேன். அது இனிமை, அமைதி, மகிழ்ச்சி, சௌந்தரியம் முதலிய தன்மைகள் வாய்ந்ததாகவும், ஆத்துமாவிற்குச் சொல்லொண்ணாப் பரிசுத்தம், பிரகாசம், சமாதானம் ஆனந்தம் ஆகியவற்றை அளிப்பதாகவும் எனக்குத் தோன்றியது. ஆத்துமாவை அது தியான வனமாக்கியது. அதில் புனிதக் கனிகளும், பூக்களும் நிறைந்து இனிமையான சாந்தமான சூரிய கதிர்களில் களித்துத் திகழ்ந்தன. —யோனத்தான் எட்வர்ட்ஸ்

மறுக்கமுடியா அன்பின் அலைகள்
என் உள்ளத்தின் ஆழத்தில் புரண்டு
இப்போதும் ஒவ்வொரு விநாடியும் என் மனதைப் பரிசுத்த
மாக்குகின்றன.

பாவம் குற்றம் யாவும் தீர
பூரண இரட்சிப்பு உண்டாகும்.

## டிசம்பர் 18

'இவையெல்லாவற்றிலும் நாம் நம்மில் அன்புகூருகிறவராலே முற்றும் ஜெயங்கொள்ளுகிறவர்களாயிருக்கிறோம்' (ரோ. 8:37).

உன் சத்துருக்களையும் உன்னை எதிர்த்து வரும் சக்திகளையுமே கொண்டு தெய்வ சமுகத்திற்கும் மோட்சலோகத்திற்கும் செல்லக் கூடிய படிக்கட்டுகளாக்கும் விதமாய் தெய்வ கிருபை பெரிதாக

இருக்கிறது. சுவிசேடமும் அவ்விதமே ஒழுங்கு பண்ணப்பட்டிருக் கிறது.

பாறையில் உட்கார்ந்துகொண்டு, ஆகாயம் இருண்டு வருவதையும் மின்னல் தோன்றி, மறைவதையும் கண்டு இடத்தைவிட்டு அசையா மல் ஒரு கண்ணைத் திருப்பி, வரப்போகிற புயலைப் பார்த்துக்கொண் டிருக்கும் கழுகைப்போல் இருக்கலாம். காற்று பலமாய் வீசி புயல் தன்னை மோதும்வரை, கழுகு அவ்வாறே உட்கார்ந்திருக்கும். புயல் தன்மேல் மோதினவுடன் அது ஒரு சப்தமிட்டுக்கொண்டு எழும்பி அந்தப் புயலின் உதவியினாலேயே அதற்குமேல் கிளம்பி ஆகாயத்தில் அதன்மேலேயே செல்லும்.

தேவன் நாமும் இவ்விதமாக முற்றும் ஜெயங்கொள்ளுகிறவர்களா யிருக்கவேண்டுமென்று விரும்புகிறார். கழுகைப்போல் புயல் மேகத்தையே இரதமாக்கிக் கொள்ளவேண்டும். ஒரு சேனை சத்துருக்களை முற்றிலுமாய் ஜெயிக்கும்போது, அவர்களை யுத்தக் களத்திலிருந்து ஓடச் செய்து, யுத்த ஆயுதங்கள், ஆகாரம் யாவற் றையும் எடுத்துக்கொள்ளும். நம்முன் வைக்கப்பட்டிருக்கும் வசன மும் அத்தகைய சக்தியையே போதிக்கிறது. கொள்ளையிடப் பொருள்கள் இருக்கின்றன.

அன்பர்களே, அதைப் பெற்றுக்கொண்டீர்களா? துன்பம் என்னும் பயங்கரப் பள்ளத்தாக்கில் சென்றபோது, கொள்ளைப் பொருள் கொண்டு வந்தீர்களா? உங்களுக்குத் தீங்கு நேரிட்டபோது, எல்லாம் உங்களைவிட்டு எடுபட்டபோது, உள்ளே போனதைவிட வரும்போது, அதிக ஐசுவரியத்தோடு வரத்தக்கவிதமாய் தேவனை நம்பினீர்களா?

பகைவனைக் கொள்ளையிட்டு அவன் பொருளை உன்னுடையதாக்கிக் கொள்வதே முற்றிலும் ஜெயங்கொள்ளுதலாகும். சத்துரு உன்னைக் கீழே தள்ள ஒழுங்கு செய்துள்ளான். அதைத் தடுத்து அவனைக் கீழே வீழ்த்து.

இங்கிலாந்து தேசத்தில் பிரைட்டன் என்ற இடத்திலுள்ள டாக்டர் மூன் என்ற ஒரு மகான் தம் கண்களை இழந்தபோது, 'ஆண்டவரே! குருடாவதான இந்த ஈவை உம் கரத்திலிருந்து பெற்றுக்கொள்ளுகிறேன். நீர் திரும்ப வரும்போது அதை இலாபத் துடன் பெற்றுக்கொள்ளத் தக்கதாய் உமது நாமத்துக்கு மகிமையாய் அதைப் பயன்படுத்த உதவிபுரியும்' என்று சொன்னார். அப்போது தேவன் அவரைக் குருடர் வாசிக்கும் எழுத்தான 'மூன்' எழுத்துக்கள் என்பதைக் கண்டுபிடிக்கச் செய்தார். அதன் மூலமாய் அநேகமா யிரம் கபோதிகள், தேவனுடைய வார்த்தையை வாசித்து மகிமை யான இரட்சிப்பை யடைந்தார்கள்.

தேவன் பரிசுத்த பவுல் அப்போஸ்தலனின் முள்ளை எடுத்துப்போட வில்லை. அதற்கும் மேலான ஒரு காரியத்தைச் செய்தார். அதை அவர் மேற்கொண்டு பவுலுடைய சேவகனாக செய்தார். அரியணைச் சேவையைவிட முள்முனைச் சேவை பெரிதாயிருக்கிறது.

## டிசம்பர் 19

'அது உங்களுக்குச் சாட்சியாவதற்கு ஏதுவாயிருக்கும்' (லூ. 21:13).

வாழ்க்கை உயர்ந்த ஒரு மலை ஏறுவதுபோலிருக்கிறது. ஏறும்போது யாராவது பின்னாலிருந்து நம்மை யழைத்து, களிப்புாய் முன்னேறிச் செல்லும்படி சொல்லுவது, நமது மனதிற்கு உவப்பளிக்கும். நாம் எல்லாரும் ஒன்றாய் மலை ஏறுகிறவர்களாயிருக்கிறோம். ஒருவருக் கொருவர் உதவி புரிந்துகொள்ளவேண்டும். மலை ஏறுவது சிரமமான காரியமானாலும், மகிமையான காரியமாகும். உச்சியையடைய் பலமும், உறுதியான நடையும் வேண்டும். உயரச் செல்லச் செல்ல உன்னதக் காட்சியடைவோம். நம்மில் யாரேனும் ஒரு விசேடத்தைக் கண்டால் பின்னால் வருகிறவர்களைக் கூப்பிட்டுச் சொல்லவேண்டும்.

1 நீ எனக்கு முன் சற்றுத் தூரம் போய்விட்டால்
திரும்பிப் பார்த்து என்னைக் கூப்பிடு
அது என் இதயத்தை மகிழப்பண்ணி என் நடையை
உறுதிப்படுத்தும்

ஒருவேளை விசுவாசத்தின் ஒளி
எண்ணெய் குறைவதால் மங்குமானால்
நான் தளர்ந்து முன்னேறிச் செல்கையில் உன் குரல்
எனக்கு வழிகாட்டி ஊக்கமளிக்கும்.

2 என் தோழனே! உன் முகத்தை நான் காணக்கூட முடியவில்லை
திரும்பிப்பார்! உன் கால்கள் பந்தய ஓட்டத்தில்
ஈடுபட்டிருக்கையில், உன் முகத்தில்
வெற்றி மகிழ்ச்சி திகழ்கிறது என்கிறார்கள்
உனக்கும் எனக்கும் இடையே மூடுபனி இருக்கிறது
என் கண்கள் ஒளியிழந்திருக்கின்றன
அவருடைய வார்த்தையைக்கேட்க எனக்கு ஆவலிருப்பினும்
அவர் மகிமையைக் காணமுடியாதவனாயிருக்கிறேன்.

3 அவர் உன்னோடு புயலில் சென்றார் என்று எனக்குச் சொல்லு
காட்டு மரங்களின் மலர்கள் அடுக்கப்படுகையில்
வானத்தின் இடியும், பூமி அதிர்ச்சியும்
மலைகளை அதிரச் செய்கையில்
அவர் உன்னைக் காப்பாற்றினார்
ஆகாயம் அமைதியாயிருக்கையில்
உன்னைத் தாங்கி அரவணைத்தார்
என்பதை எனக்குச் சொல்லு.

4 உன் ஜெபம் ஒரு அழுகுரலாயிருக்கையில்
அவர் உன்னைக் கவனித்திருந்தார்;
பாவ இருள் என்னைச் சூழ்ந்திருக்கையில்
உன்னை அவர் வழி நடத்தினாரென்றால்

என்முன் செல்லும் தோழனே, அதை
என்னைக் கூப்பிட்டுச் சொல்லு
கல்லான பாதையில் நான் செல்ல
அது என் ஆத்துமாவைக் களிப்பிக்கும்.

## டிசம்பர் 20

'ஆனாலும் நான் தனித்திரேன். பிதா என்னோடே இருக்கிறார்' (யோ. 16:32).

நாம் சரி என்று எண்ணும் ஒரு காரியத்தைச் செயலில் நடப்பித்துக் காண்பிக்க, தியாகம் தேவை. அதற்காகச் சிலவற்றை விட்டொழிக்க வேண்டும். சிலவற்றை பிரிந்திருக்கவேண்டும். அது மனதிற்கு வருத்தத்தை உண்டாக்கலாம். மேகங்களுக்கு மேலாய்ப் பறக்கும் கழுகைப்போல் தேவனுடைய சூரியவொளியில் வாழ விரும்புவோன் தனிமையான வாழ்க்கை நடத்த மனமுள்ளவனாயிருக்கவேண்டும்.

கழுகைப்போல் வேறெந்தப் பறவையும் தனித்திருப்பதில்லை. கழுகுகள் கூட்டமாகப் பறப்பதில்லை. ஒன்றாக அல்லது இரண்டாகத் தான் பறக்கப் பார்க்கிறோம். தேவனுக்காக வாழும் வாழ்க்கையில், மனித சம்பந்தம் இல்லாவிட்டாலும் தெய்வீக ஐக்கியம் இருக்கிறது.

கழுகைப்போன்ற மனிதரையே தேவன் தேடுகிறார். தேவனோடு சம்பந்தப்பட்ட வாழ்க்கையில் தேவனோடு தனியாயிருக்கப் படிக்காத மனிதன் தேவனுடைய பூர்வகுண அலங்காரங்களை உணரான். ஆபிரகாம் ஒரேப் மலையுச்சியில் தனியாயிருந்தான். ஆனால், லோத்து சோதோமில் வசித்தான். எகிப்தியரின் ஞானத்தில் தேறிய மோசே நாற்பது ஆண்டுகள் வனாந்தரத்தில் தேவனோடு தனித்துச் செல்ல வேண்டியிருந்தது. கிரேக்க ஞானத்தில் வல்லவனும், கமாலியேலின் பாதத்தில் படித்துத் தேறியவனுமாகிய பவுல் அப்போஸ்தலன், அரேபியாவில் தேவனோடு வனாந்தர வாழ்க்கையைப் படிக்க வேண்டியதாயிருந்தது. தேவன் நம்மைப் பிரித்தெடுப்பாராக! மடங்களில் தனித்து இருக்கவேண்டுமென்று நான் சொல்லவில்லை. தனியாயிருக்கும் அனுபவத்தில் அவர் சுயாதீனமான விசுவாசியாக ஆக்குகிறார். விசுவாசியினுடைய ஆத்துமா, மற்றவர்களுடைய உதவி, ஜெபம், விசுவாசம், ஆதரவு, இவைகளையே நாடிச் சார்ந் திருக்கக்கூடாது. மற்றவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளும் உதவி, எழுப்புதல் இவை அவசியம்தான். ஆனால், அவை சில நேரங்களில் தனித்த ஆத்துமாவின் விசுவாசத்திற்கும், நலத்திற்கும் இடறலா யிருக்கின்றன. நமக்குத் தனி அனுபவம் அளிக்கவேண்டுமென்று தேவன் அறிவார். நாம் கடவுளுடைய நடத்துதலுக்கு இணங்க வேண்டும். அவர் சில அனுபவங்களை நமக்குக் கொடுப்பார். அதற்குப்பின் நம்மைச் சூழ உள்ளவர்களை நாம் முன்போல் நேசித்து வந்தாலும் நாம் அவர்கள்மேல் சார்ந்திருக்கமாட்டோம். அவர் நம்மில் பெரிய காரியங்களைச் செய்ததாக நாம் உணர்வோம்.

நம்முடைய ஆத்துமத்தின் இறக்கைகள் உன்னதத்தை நோக்கிப் பறக்கும்.

நாம் தனித்திருக்க துணிவு கொள்ளவேண்டும். தேவதூதரின் கர்த்தர் கூறும் வார்த்தைகளைக் கேட்க யாக்கோபு அவரோடு தனித்திருக்கவேண்டும். யோவான் பத்மூ தீவிற்கு நாடு கடத்தப்பட்டதால் புதிய வானத்தின் காட்சிகளை வருணிக்கக்கூடியவனானான். அவர் ஆலையைத் தனியாக மிதித்தார். அவரோடு தனித்திருந்து உதவிசெய்ய விரும்புகிறோமா?

## டிசம்பர் 21

'அவன் கர்த்தரை உத்தமமாய்ப் பின்பற்றினபடியால், நான் அவன் மிதித்துவந்த தேசத்தை அவனுக்கே கொடுப்பேன்' (உபா. 2:36).

உன் வாழ்க்கையிலுள்ள ஒவ்வொரு கடினமான கடமையிலும், நீ சிரமம் எடுத்துக்கொள்ளும் ஒவ்வொரு வேலையிலும், நீ செய்ய விரும்பாது செய்யும் ஒவ்வொரு கடமையிலும் ஒரு ஆசீர்வாதம் உண்டு. எதை முன்னிட்டாகிலும் அதை செய்யாதுவிட்டால் ஓர் பாக்கியத்தை இழந்தவனாவாய். பாதை எவ்வளவு கடினமானாலும், அதில் அவருடைய காலடிச் சுவட்டைக் காண்பாயானால், அதில் அவர் உன்னைப் போகச்சொல்வாரானால், அந்தப் பாதை உன்னை ஆசீர்வாதமான இடத்திற்கே கொண்டுசெல்லும். இப்படிப்பட்ட முள் நிறைந்த செங்குத்தான பாதையில் நீ செல்லாவிட்டால் உனக்கு அந்த ஆசீர்வாதம் கிட்டாது.

நீ சத்துருவுக்கு விரோதமாய் பட்டயம் எடுக்கவேண்டிய ஒவ்வொரு கட்டத்திலும் வெற்றியுண்டு. அந்த வெற்றி உனக்கு ஆசீர்வாதம் உண்டாக்கும். உன்னைத் தூக்கும்படி கடவுள் கட்டளையிடும் ஒவ்வொரு கனமான பாரத்தினடியிலும் ஒரு இரகசியப் பலன் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது.

—கே. ஆர். மில்லர்

1 அலைகள் உயர எழும்பி மோதுகின்றன
பனிசுற்றிலும் மூடிக்கொள்ளுகிறது
ஆகாய ஒளி மறைகிறது
இக்காரியம் என்னால் தனியே செய்யமுடியாது
நாங்கள் இருவருமாய், இயேசுவும் நானும் சேர்ந்து
இறுதியில் வெற்றிக் கொள்ளுவோம்.

2 நான் கோழை, உறுதியற்றவன்;
ஆகாயம் மாறுவதுபோல் மாறுவேன்;
இன்று அதிக ஆவலுண்டு
நாளை உழைக்க எனக்குப் பலமில்லை
ஆனால் அவர் ஒருபோதும் தளரார்
ஆகையினால் இயேசுவும் நானும் சேர்ந்து நிச்சயம் வெற்றி
கொள்ளுவோம்.

3 வாழ்க்கையாகிய பொங்கும் கடலில்
என் படகைச் செலுத்த அறியேன்;
ஆனால் ஒருவர் என் அருகில் உட்கார்ந்து
சுக்கான் பிடித்து நடத்துகிறார்
நாங்கள் இருவரும், இயேசுவும் நானும்
பத்திரமாய் கரை சேருவோம்.

## டிசம்பர் 22

'திகிலும் காரிருளும் அவனை மூடிக்கொண்டன' (ஆதி. 15:12).

சூரியன் அஸ்தமித்து இருள்படலம் எல்லாவற்றையும் மூடிற்று. தன் மனதில் ஏற்பட்ட போராட்டத்தினாலும், காத்திருந்ததாலும், நாளின் வேலையினாலும் களைப்படைந்து ஆபிரகாம் அயர்ந்த நித்திரை அடைந்தான். அந்தத் தூக்கத்தில் அவன் ஆத்துமாவைப் பயங்கர மான இருள் அமுத்தினது. இந்த இருளின் பயங்கரத்தை நீ அறிவாயா? ஆத்துமாவுக்கு அதிகத் துக்கம் ஏற்படும்போது, ஆத்துமா பூரண அன்பான கடவுளா இப்படிச் செய்வார் என்று எண்ணுகிறது. தேவன் இரக்கமுள்ளவர் என்ற நம்பிக்கையாலுண் டாகும் சமாதானத்தை இழந்து ஒரு சிறிதளவும் நம்பிக்கையில்லா தொழியும்போது, கடவுள் இதைப் பார்த்துகொண்டு இதை வரவிட்டுக் கொண்டிருக்கிறாரா என்ற எண்ணம் உண்டாகிறது. அப்பொழுது திகிலும், காரிருளும் நம்முடைய ஆத்துமாவை மூடிக் கொள்ளுகின்றன. மனித வாழ்க்கை இவ்வாறுதான் அமைக்கப் பட்டிருக்கிறது. ஒளியும், இருளும், வெயிலும், நிழலும், மேகம் மூடியிருக்கும் பாதையும், அப்பால் ஒளி நிறைந்த வழியும் வருகின்றன. இவைகளின் மத்தியில் தெய்வ நீதியின் திட்டம் நிறைவேறிக்கொண்டு வருகிறது. அது பாடனுபவிக்கத் தனி ஆத்துமாவை அல்ல, மற்றவர்களையும் அவ்விதமே பாவிக்கிறது. கடவுள் மனிதனுக்குச் செய்வதைப் பார்த்துத் திகிலடைபவர்களே, அவருடைய தவறு செய்யாத ஞானத்தில் நம்பிக்கை வையுங்கள். அவருடைய ஞானம் நீதியை நடப்பிக்கும், அவரையும் கல்வாரியில், திகிலும், இருளும் சூழ்ந்துகொண்டன. அவரும் கைவிடப்பட்ட தாக எண்ணிக் கதறினார். அவ்வளவும் அனுபவித்த அவர் உன்னை மரண இருளின் பள்ளத்தாக்கின் வழியில் நடத்தி, அப்பாலுள்ள ஆதித்தன் ஒளியைக் காணச்செய்ய ஆயத்தமாயிருக்கிறார். நமக்கு முன் இவ்வழி நடந்து வந்த அவர்மூலம் நம்பிக்கை என்னும் நங்கூரத்தை, நாம் காணக்கூடாதவற்றை மறைத்திருக்கும் திரைக்கு அப்பால் பாய்ச்சுவோமாக! அங்கே அது தரையில் பற்றிக் கொள்ளும். அசைந்து கொடுக்காது. அதை விடியும் வரை பற்றிக் கொண்டு, தேவனுடைய ஆலோசனையால் நடத்த வாக்களிக்கப் பட்டிருக்கும் நாட்டிற்குச் செல்வோமாக. —எப். பி. மையர்

அகோரமாக எழும்பிப் பொங்கின திரைகள் தங்களையும், இயேசுவையும் பிரித்துவிட்டதாகச் சீடர்கள் எண்ணினார்கள். பலர் இன்னும் மோசமான எண்ணம்கொண்டார்கள். இயேசு தங்களை மறந்துவிட்டார், தங்களைக் கவனிக்கவில்லை என்பதற்கு அடையாளமாக அந்தப் புயல் கிளம்பிற்று என்று எண்ணினார்கள். சிநேகிதரே! துன்பம் வரும்போதுதான் சாத்தான் நமது காதுக்குள், 'தேவன் உன்னை மறந்தார். தேவன் உன்னைக் கைவிட்டார்' என்று சொல்லுவான். அப்பொழுது நாம் நம்பிக்கையிழந்து கிதியோன் சொன்னதைப்போல், 'ஆண்டவர் எங்களோடிருந்தால் இது ஏன் எங்களுக்கு நேரிடுகிறது' என்று அங்கலாய்க்கிறோம். ஆண்டவரை உனக்கு சமீபத்தில் கொண்டுவரவே உனக்கு இந்தத் தீமை உண்டாயிருக்கிறது. இயேசுவை உன்னைவிட்டுப் பிரிப்பதற்காகக் கஷ்டங்கள் வரவில்லை. ஆனால், உன்னை அவரோடு இன்னும் நன்றாய் உறுதியாய், விசுவாசத்தோடு ஒட்டிக்கொள்ள செய்யவே துன்பம் வருகிறது.

தேவன் நம்மைக் கைவிட்டதுபோல் தோன்றும்போது, நாம் அவரில் நம்மைக் கைவிட்டுவிடவேண்டும். அவர் நமக்குச் சௌகரியமான காலங்களைக் கட்டளையிடும்போது, சந்தோஷமாய் அனுபவிப்போம். ஆனால், நாம் அவருடைய ஈவுகளையல்ல, அவரையே சார்ந்திருக்கவேண்டும். விசுவாசத்தைச் சோதிக்கும் இருளில் நம்மை அவர் தள்ளும்போது அதனூடே கலங்காது செல்வோமாக!

தோல்வி நெருங்கி வரும்போது
வெற்றிக்கொண்டு வரத்தக்க விசுவாசம் வேண்டும்
விசுவாசம் வெற்றிக் கொண்டுவரும்
வெற்றி கொண்டாடும் விசுவாசம், தோல்வி, பயம்
என்பதறியாது

## டிசம்பர் 23

'நீ பண்ணவேண்டிய பிரயாணம் வெகுதூரம்' (1 இரா. 19:7).

தேவன் களைத்திருந்த தம் ஊழியனுக்கு என்ன செய்தார்? அவனுக்கு நல்ல ஆகாரம் கொடுத்து அவனைத் தூங்கவைத்தார். எலியா நல்ல வேலை செய்தான். தன் உற்சாகத்தில் இரதத்தோடு பக்கத்தில் ஓடிவந்தான். அது அவனுடைய சரீர பலத்திற்கு மிஞ்சினதாயிருந்தது. அதன் பலனாக அவன் மனச்சோர்வு அடைந்தான். அவனுடைய சரீரக் களைப்புத் தீரவேண்டியது அவசியமாயிற்று. அநேக ஜனங்களுக்குத் தூக்கமும், சரீர சௌகரியமும் தேவையாயிருக்கின்றன. மாபெரிய மனிதராகிய ஆண்களும் பெண்களும் எலியாவின் நிலைமையை அடைகிறார்கள். அவன் சூரைச் செடியின் கீழ்ப் படுத்திருந்தான். அப்படிப்பட்டவர்களுக்கு ஆண்ட

வருடைய சப்தம் கேட்பது வெகு ஆறுதலாயிருக்கும். அவர், 'உன் பிரயாணம் வெகுதூரம் ஆகையால் நான் உன் களைப்பு மாறச் செய்வேன்' என்கிருர். நம்முடைய சரீரக் களைப்பை, ஆவியின் சோர்வு என்று எண்ணக்கூடாது.

1 'ஜெபிக்கவும், நம்பவும் முடியாதபடி களைப்படைந்திருக்கிறேன்'
என்று களைப்படைந்த ஒருவன் சொன்னுன்.
பேசாமல் படுத்து இளைப்பாற வேண்டும்
என்ற ஒரே எண்ணமே அவனை மேற்கொண்டது.

2 ஒரு குழந்தை படுக்கச் செல்வதுபோல்
ஜெபிக்காமல், தியானிக்காமல்
படுத்துக்கொண்டால்
தேவன் என்னை மன்னிப்பாரா?

3 நீ பேசத் தெரியா திருக்கையில்
உன் தாய் உனக்குத் தலையணை வைத்து
உன்னைத் தூங்கப் போடவில்லையா?
தேவன் உன்னை மன்னிப்பாரா என்ற சந்தேகமேன்?

4 நீ கேட்கத் தெரியா திருக்கையில்
உன் தாய் ஒன்றும் கொடுக்காதிருந்தாளா?
அன்றி தன் கையில் உறக்கங்காட்டி
நீ பயங் கொள்ளாமல் காக்கவில்லையா?

5 நீ நம்பி ஜெபிக்க முடியாமல்
களைத்துப் போயிருக்கையில்
உன் தாயின் அன்பு உன் களைப்பை
உடனே அறிந்து கொண்டதே.

6 உன் தாயின் மடியில் படுப்பதுபோல்
ஒன்றுக்கும் கவலைகொள்ளாமல் படுத்துக்கொள்,
ஆண்டவர் யாவற்றையும் அறிவார்
ஆகையால் குழந்தைபோல் நீ தூங்கு.

7 தன் பிள்ளை களைத்திருப்பதை
ஆண்டவர் அறிவார்;
சொன்ன ஜெபத்தை மாத்திரமல்ல
மனதில் நீ கொண்ட ஆசையையும் அறிவார்.

8 நீ ஜெபிப்பாய் என்றும், நம்புகிருய் என்றும் அவர் அறிவார்;
உன் சரீர பலவீனத்தையும் அறிவார்
நீ இரவில் கொண்ட ஆவலையும்,
கண்டு உன்மேல் அன்புகொள்வார்.

9 உலகின் பாவப்பாரம் அவரை அழுத்தினபோதும்
அவர்களை அவர் படுத்து நித்திரை செய்யச் சொன்னார்
நீ உன் வாழ்வை அவர் கையில் ஒப்புவித்தாய்
ஆகையால பயமின்றிப் படுத்துறங்கு.

## டிசம்பர் 24

'ஈசாக்கு சாயங்கால வேளையிலே தியானம் பண்ண வெளியிலே போயிருந்தான்' *(ஆதி. 24:63).*

நாம் தனித்திருந்தோமானால் சிறந்த கிறிஸ்தவர்களாவோம். நாம் அதிகப் பிரயாசை எடுத்துக்கொள்ளாமல் தனித்திருந்து தேவனுக்காகக் காத்திருந்தால்தான், நாம் அதிகம் செய்யக்கூடும். உலகம் வெகுவாய் நம்மை இழுக்கிறது. நாம் அங்குமிங்கும் ஓடித் திரியாவிட்டால் நாம் ஒன்றும் செய்யாதிருப்பதுபோல் நமக்குத் தோன்றுகிறது. அமைதியாய் நிழலில் தனித்திருப்பது பயனுள்ளதாய் நமக்குத் தோன்றுவதில்லை. நாம் செயலில் ஈடுபட்டு இருக்கிறோம். நம்முடைய பல காரியங்களையும் தாமதமின்றிச் செய்ய ஆசைப்படுகிறோம். நெருப்பிலிருந்து காய்ந்த இரும்பை அடிக்கல்லுக்குக் கொண்டுவருமுன் அதிகக் காலதாமதமாகிவிடுவதுபோலவும் எண்ணுகிறோம். நாம் தனியாய்த் தியானம் செய்து கடவுளோடு சம்பாஷித்து மோட்சலோகத்தை நோக்கிப் பார்க்கும் நேரமே நாம் நன்றாய்ப் பயன்படுத்தும் நேரமாகும். இப்படிப்பட்ட நேரம் அதிகம் தேவை. இந்த நேரத்தில்தான் கடவுள் கொடுக்கும் ஆலோசனையும் சக்தியும் நம்மை வந்தடையும்.

'சிந்தனை என்பது மனதின் ஓய்வுநாளாகும்' என்று சொல்லப்படுகிறது. நம்முடைய மனதிற்கு நாம் ஓய்வுநாள் கொடுப்போமாக! அந்த நாளில் அது வேலை ஒன்றும் செய்யாமல், அமர்ந்திருந்து மேல் நோக்கிப் பார்த்திருக்கவேண்டும். கிதியோன் வானத்தின் பனி, தோலை நனைக்கும்படி தோலை விரித்துப்போட்டதுபோல், நம் மனது பரலோகத்திற்கு நேராய் திறந்து வைக்கப்படவேண்டும். நாம் ஒன்றும் செய்யாது, ஒன்றும் நினையாது, ஒரு திட்டமும் போடாதிருக்கும் சமயங்களும் நம்முடைய வாழ்க்கையில் இருக்கவேண்டும். இயற்கை அன்னையின் செழுமையான மடியில் தலையை வைத்து சும்மா படுத்திருக்கவேண்டும்.

அப்படிப் பின்னிடும் நேரம் வீணானதல்ல. மீன் பிடிப்பவன் தன் வலையைச் செப்பனிடும்படி செலவிடும் நேரம் வீணானதல்ல. புல் வெட்டுபவன் தன் அறிவாளின் முனையைத் தீட்டும் நேரம் வீணாகும் நேரம் அல்ல. பட்டண வாசிகள் ஈசாக்கின் முன்மாதிரியைப் பின் பற்றலாம். வாழ்க்கையில் ஆட்ட ஓட்டத்தை விட்டு, வயல் வெளி

களுக்கு அடிக்கடி போகவேண்டும். உஷ்ணம், வேலை இவைகளினால் களைப்படைந்தவர்களுக்கு இயற்கையோடு ஐக்கியப்பட்டிருப்பது நலமளிக்கும். அது அவர்களைக் குணமாக்கி அமர்ந்திருக்கச் செய்யும். வயல் வெளிகளில் நடந்துசெல்வது, கடற்கரையில் அல்லது ஒரு புல் மைதானத்தில் சுற்றித் திரிவது, வாழ்வின் கசப்பைப் போக்கி, இதயத்தைப் புது மகிழ்ச்சியினாலும், நம்பிக்கையினாலும் குதூகலிக்கச் செய்யும்.

என்னை வருத்திய சிறு கவலைகளைத்
தேவனோடு வயல் வெளியில் திரிந்தபோது
போக்கடித்து விட்டேன்.

## கிறிஸ்மஸ் முன் மாலை

### பனி மலையினூடே மணியோசை கேட்டல்

1 கிறிஸ்மஸ் கிறிஸ்மஸ் திரும்ப வந்தது
அதோடு வாழ்த்துதல்களும், பழைய ஞாபகங்களும்
வேதனையும் மகிழ்வும்கூட வந்தன
பாட்டில் தாழ்ந்த ஸ்தாயி உண்டு
வெளிச்சத்தில் நிழல் விழும்.
மகிழ்மாலையோடு ஒரு துக்க மாலையுமுண்டு
அத் துக்க அமைதியை நகைப்பின் தொனி கலைக்காது
பனியினூடே மிதந்து வரும் மணியினோசையைக் கேட்கிறோம்.

2 சந்தோஷ கிறிஸ்மஸ் பண்டிகையே
கொஞ்ச நாட்களுக்கு முன்
எங்கள் கீத ஒலியோடு மற்றவர் ஒலியும் தொனித்தது
அவர்கள் இப்போது பாடுவதை
நாங்கள் கேட்கக் கூடுமானால்
அவர்கள் தலையில் இலங்கும் கிரீட
ஒளியை நாங்கள் காணக்கூடுமானால்
பனியினூடு வரும் மணியினோசை
கேட்குங்கால் உண்டாகும்
கண்ணீர் மாலைகளும் பெருமூச்சுகளும் இல்லாதிருக்கும்.

3 களிப்பான கிறிஸ்மஸ் பண்டிகையே
கடந்த மகிழ் காலங்களை
நாங்கள் மறுபடியும் காணமுடியாது.
ஆனாலும் களிப்பான கிறிஸ்மஸ் தினமே
மனிதர்மேல் பிரீதி கொண்டுவந்த தினமே

உன் இன்பகீதம் கேட்போம்.
நட்சத்திர ஒளியில்
பனியூடு வரும் மணியோசை கேட்குங்கால்
சமாதானமும் நம்பிக்கையும் பொறுமையான அன்பும்
மிளிரும்.

## டிசம்பர் 25

அவருக்கு இம்மானுவேல் என்று பெயரிடுவார்கள்—தேவன் நம்மோடிருக்கிறார் என்று அர்த்தமாம்' (மத். 1:23). 'சமாதானப் பிரபு' (ஏசா. 9:6).

ஆகாயத்தில் ஒளி இன்னிசை கேட்கிறது!
வானத்தில் ஒரு நட்சத்திரம் மின்னுகிறது:
ஒரு தாயாரின் ஆழ்ந்த ஜெபமும்,
ஒரு பாலகனின் அழுகுரலும் கேட்கின்றன.
நட்சத்திரம் ஒளி வீசுகிறது,
வானோர் சங்கீதம் பாடுகிறார்,
ஏனென்றால் பெத்லகேம் மாட்டுக் கொட்டிலில்.

### ஒரு இராஜன் பிறந்தார்

சில வருடங்களுக்குமுன் 'கிறிஸ்து வந்திராவிட்டால்' என்ற தலைப்புப் பொறிக்கப்பட்ட கிறிஸ்மஸ் வாழ்த்து அச்சிடப்பட்டு வெளியானது. 'நான் வந்திராவிட்டால்' என்று இரட்சகர் கூறிய வார்த்தைகளையே அடிப்படையாகக்கொண்டு அப்படி அச்சிடப்பட்டது. அந்தப் படத்தில் ஒரு தேவ ஊழியன் கிறிஸ்து ஜயந்தி திருநாள் காலையில் கிறிஸ்து வராவிட்டால் உலகம் எப்படி இருந்திருக்கும் என்று கனவு காண்பதாய்ச் சித்தரித்திருந்தது.

தம் கனவில் அவர் தன் வீடு பூராவையும் பார்த்தார். கிறிஸ்மஸ் மணி தொங்கவில்லை. கிறிஸ்மஸ் அலங்காரங்கள் இல்லை. ஆறுதலளிக்க, சந்தோஷப்படுத்த, இரட்சிக்க கிறிஸ்து அங்கில்லை. அவர் வீதியில் சென்றார். அங்கு வானளாவிய கோபுரங்களுடைய ஆலயங்களைக் காணோம். அவர் திரும்பித் தன் இல்லத்திற்கு வந்து தமது வாசகசாலையில் அமர்ந்தார். இரட்சகரைக் குறித்து எழுதப்பட்ட புத்தகங்கள் யாவும் மறைந்துவிட்டன.

கதவை யாரோ தட்டினார்கள். ஒரு சிறுமி மரணப்படுக்கையிலிருக்கும் தன் தாயை வந்து பார்த்துப்போகும்படி அழைத்தாள். அழுதுகொண்டு நிற்கும் அவளை அவர் உள்ளே அழைத்துச் சென்று, 'உன்னை ஆறுதல் படுத்தச் சில வார்த்தைகளை வாசிக்கிறேன்' என்று வேத புத்தகத்தைத் திறந்தார். அது மல்கியாவோடு முடிவுபெற்று நின்றது. சுவிசேடங்கள் அதில் இல்லை, நம்பிக்கையும் இரட்சிப்பும்

அருளும் வார்த்தைகள் அதில் இல்லை. அவருக்கு ஒன்றும் சொல்லத் தோன்றாமல் நம்பிக்கையற்றுச் சிறு பிள்ளையோடு சேர்ந்து அழுதார்.

இரண்டு நாட்களுக்குப்பின் அத்தாயின் அடக்க ஆராதனைக்குச் சென்று பிரேதத்தின் முன் நின்றபொழுது, சொல்வதற்கான தேறுதலான செய்தியாவது, உயிர்த்தெழுதலைப்பற்றிய செய்தியாவது இருக்கவில்லை. 'மண்ணுக்கு மண்ணும், சாம்பலுமாய்' என்று சொல்லி ஒரே நித்திய பிரிவுபசாரமாக முடிக்கவேண்டியிருந்தது. இறுதியில் அவர் இரட்சகர் வரவில்லை என்று உணர்ந்தார். அந்தத் துக்கமான சொப்பனத்தில் இதை நினைத்து அழுதார்.

திடீரென்று விழித்துக்கொண்டு அருகிலிருந்த ஆலயத்திலிருந்து பாடும் பாடல்களின் கீதம் கேட்டு சத்தமாய்—ஆனந்தமாய்த் தேவனைத் துதித்தார்.

பக்தரே வாரும் ஆசை ஆவலோடும்
நீர்பாரும், நீர்பாரும் இப்பாலனை
வானோரின் ராஜன் கிறிஸ்து பிறந்தாரே
சாஷ்டாங்கம் செய்ய வாரும் இயேசுவை.

நாம் இந்நாளில் சந்தோஷப்பட்டுக் களிகூருவோமாக! ஏனென்றால், 'அவர் வந்திருக்கிறார்' வானத்தில் தூதன் தோன்றி, 'இதோ எல்லா ஜனத்திற்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்' என்று சொன்ன செய்தியை ஞாபகப்படுத்திக்கொள்வோமாக! (லூ. 2:10,11).

சாபம் காணும் எவ்விடமும் தம் ஆசீர்வாதப் பெருக்கெடுத்து ஓடச்செய்ய வந்துள்ளார்.

இந்தக் கிறிஸ்து ஜயந்திநாளைக் கொண்டாடாதிருக்கும் புறமதத்தினரை நினைப்போமாக!

நீங்கள் போய்க் கொழுமையானதைப் புசித்து, மதுரமானதைக் குடித்து, ஒன்றுமில்லாதவர்களுக்குப் பங்குகளை அனுப்புங்கள் (நெகே. 8:10).

## டிசம்பர் 26

'நான் அங்கே போய் ஜெபம்பண்ணுமளவும் நீங்கள் இங்கே உட்கார்ந்திருங்கள்' (மத். 26:36).

ஆபத்து நெருங்கும் வேளையில் பின்னே ஒதுக்கி வைக்கப்படுவது வெகு கஷ்டமாகத் தோன்றும். கெத்சமனே தோட்டத்தில் பதினொரு சீடரில் எட்டுப்பேர் அப்படி ஒன்றும் செய்யாதிருக்க வேண்டியதாயிற்று.

இயேசு ஜெபிக்க முன்னே சென்றார். பேதுருவும், யாக்கோபும், யோவானும்கூட விழித்திருக்கப் பாதி வழி சென்றார்கள். ஏனையோர் ஓர் புறமாக உட்கார்ந்து காத்துக்கொண்டிருந்தார்கள். அப்படி வெளியே விடப்பட்டவர்கள் முணுமுணுத்திருக்கலாம். அவர்கள் தோட்டத்திலிருந்தார்கள். அவ்வளவுதான். அதில் மலர்களை யுண்டாக்கும் பயிர்த்தொழிலில் அவர்களுக்குப் பங்கில்லை. அது ஆபத்தான, இக்கட்டான வேலை. என்றாலும், அவர் அவர்களை யாதொன்றும் செய்ய் விடவில்லை.

உனக்கும் எனக்கும் இவ்விதமான சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கலாம். கிறிஸ்தவ ஊழியம் செய்ய ஏற்ற சமயம் வந்திருக்கலாம். சிலர் முன்னே அனுப்பப்படுகிறார்கள். சிலர் நடுவில் அனுப்பப்படுகிறார்கள். ஆனால் நாமோ அப்பால் ஒதுங்கி நிற்கவேண்டியிருக்கலாம். வியாதி வந்திருக்கலாம். தரித்திரம் வந்திருக்கலாம். ஏதோ ஒன்று தடங்கல் செய்துவிட்டதுபற்றி தள்ளப்படவேண்டுமென்று நமக்கு விளங்க வில்லை. இது ஒரு அநீதிபோல் நமக்குத் தோன்றுகிறது. தோட்டத் திற்குள் நாம் வந்திருக்க, நமக்கு ஒரு வேலையும் விடப்படவில்லை.

என் ஆத்துமாவே! அமர்ந்திரு! நீ நினைப்பது தவறு. கிறிஸ்தவ் வாழ்க்கையின் ஒரு பகுதியிலிருந்து நீ தள்ளி வைக்கப்படவில்லை. ஆண்டவரின் தோட்டத்தில் நிற்பவர்களுக்கும், நடப்பவர்களுக்குந் தானா இடம் உண்டு? இல்லை! சும்மா உட்கார்ந்திருக்கவேண்டி வந்தவர்களுக்கும் தனிப்பட்ட இடம் உண்டு. மூவகை வினைச்சொல் உண்டு. அவை செய்வினை, செயப் பாட்டுவினை, பொதுவினை என்பவை. கிறிஸ்துவினுடைய ‘ஜீவி’ என்ற வினைச்சொல்லில் மூன்று வகை உண்டு. சிலர் ஊழியம் நடத்திக்கொண்டு, கூட இருந்து, முன்னிலையில் நிற்பவர்கள். இவர்கள் விடியும்வரை போர் செய்பவர்கள்; வேறு சிலர் பாதிவரை வந்துகூட விழித்திருந்து, சண்டையின் போக்கை மற்றவர்களுக்கு அறிவிப்பவர்கள். இன்னும் சிலர், போரிடவும் போர் நடப்பதைக் காணவும் முடியாது சும்மா படுத்திருக்க வேண்டியவர்கள்.

அந்த அனுபவம் உனக்கு வரும்போது கிறிஸ்து, ‘நீ அங்கே உட்காரு’ என்று சொல்லுகிறார் என்பதை நினை. தோட்டத்தில் நீ உட்கார்ந்திருக்கும் பகுதியும் பரிசுத்தமாக்கப்பட்டதே. அதற்கு ஒரு விசேஷப் பெயர் உண்டு. அது போரிடும் இடம் அல்ல. விழித் திருக்கும் இடமும் அல்ல. அது காத்திருக்கும் ஸ்தலம். வேலை செய்யாமல், பாரம் சுமக்காமல் சும்மா இருப்பதற்கென்றே இவ் வுலகில் ஜனித்தவருமுண்டு. ஒரு வேலைக்கும் பயன்படாதிருக்கும் பூக்களும் தோட்டத்தில் இருந்தன. மாலை தொடுக்க உதவவில்லை; ஒரு வீட்டை அலங்கரிக்க உதவவில்லை; பேதுருவும், யாக்கோபும், யோவானும் அதைக் கவனிக்கவில்லை. ஆனால் இயேசு அந்தக் கண்டு களிப்படைந்தார். அவைகள் தங்களுடைய வாசனையாலும்,

அழகாலும் அவருக்குச் சந்தோஷம் உண்டாக்கின. அவைகள் தங்களுடைய அழகைக் காப்பாற்றினதால், ஆண்டவருடைய உள்ளத்தை எழுப்பின. நீ அப்படிப்பட்ட மலர்களில் ஒன்ருனல் முறுமுறுக்கவேண்டாம்.

## டிசம்பர் 27

*'அவன் பிராணன் இரும்பில் அடைபட்டிருந்தது' (சங். 105:18).*

இந்தக் கவியை வசன நடையில் வாசித்தால்: அவன் ஆத்துமாவில் இரும்பு சென்றது என்று வாசிக்கவேண்டும். இதில் ஒரு சத்தியம் அடங்கியிருக்கிறது. துக்கமும், ஆன்மமும், ஒடுக்கமும், கஷ்டப் படும் உன்னத குணதிசயங்கள் உண்டாகச் சரியான அஸ்திபாரமும் சாரமும் ஆகும்.

கஷ்டத்தைக் கண்டு மலேக்காதே. சாதுவாய், அமைதியாய், பொறுமையாய் அதைச் சகித்துக்கொள். அது உன் ஆவிக்குரிய வாழ்க்கையில் ஆண்டவர் செலுத்தும் இரு பங்காகும். உலக மனிதர் இரும்புச் சதையும், இரும்பு ஆயுதமும், இரும்புத் துடைகளும் வேண்டுமென்கிருர்கள். ஆண்டவருக்கு இரும்பு பக்தர்கள் வேண்டும். அழிந்துபோகும் மனித இயற்கையில் பாடுகளாலன்றி, இரும்பைச் செலுத்துவது கூடாது. ஆகையால் அவர் நம்மைப் பாடனுபவிக்க விடுகிருர்.

வாழ்க்கையின் சிறந்த வருடங்கள் சுவாரசியமற்றவையாயிருக் கின்றனவா? எதிர்ப்பும் தப்பர்த்தப்படுத்துதலும், ஏளனமும் உன்னைச் சூழ்ந்துகொள்ளுகின்றனவா? தைரியமாயிரு! உன் வாழ் நாட்கள் வீணுகவில்லை, தேவன் உன்னை இரும்பாட்சியில் வைக்கிருர். இரும்புக் கிரீடத்திற்குப் பின்னுல்தான் பொற்கிரீடம் கிடைக்கும். உன் ஆத்துமாவைத் தைரியப்படுத்திப் பலப்படுத்தவே உன் ஆத்து மாவில் இரும்பு செல்கிறது.

வழியின் கஷ்டத்தையும் மேடுபள்ளத்தையும் நினையாதே!
குளிர்ந்த களைப்பான, காலையைப் பொருட்படுத்தாதே!
இடதுபுறம் வலதுபுறம் சாயாதே;
இரவு நெருங்குவதைக் கண்டு பயப்படாது நேரே செல்;
அவ்வழி நித்திய வீட்டிற்குச் செல்லும்.

## டிசம்பர் 28

*'கர்த்தருக்குள் சந்தோஷமாயிருங்கள்; சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன்' (பிலி. 4:4).*

1 என் ஆத்துமாவே! ஒரு சிறு நம்பிக்கைப் பாட்டு பாடு!
நீ பாடவேண்டியிருப்பதால் பாடு
இலைகள் துளிர்த்து வருகையில்
பூக்கள் துளிரிலிருந்து கிளம்புகையில்
நீ பாட வேண்டியிருப்பதைப் பாடு.

2 உன்னோடு பிறர் சேர்ந்து பாடுவர் என்று எண்ணாதே!
பட்சிகள் அநேகம் பாடினாலும்
தனிமையாய்ப் பாடுவதே
தெளிவாய்க் கேட்கிறது.
அதிகாலையில் யாரும் பாடுவார்கள்
என் ஆத்துமாவே நீ இரவில் பாடு.

3 வாடைக்காலப் பனியில் பாடு;
மேகத்தைப் பிளந்து பாடு;
மூடுபனி இறங்கும்போது பாடு;
சுத்தமாய்த் தெளிவாய்ப் பாடு;
இருளில் வெகு இனிமையாய்ப் பாடு;
தூக்கமில்லாதவர் வெகுவாய்க் கவனிப்பார்.

அவர் நீ பாடுகையில் ஒரு புன்னகையோடு குனிந்து, கூர்ந்து கவனிக்கிறார். 'என் பிள்ளையே பாடு, நான் உன்னை விடுவிக்க வருகிறேன். உன் பாரத்தை நான் வாங்கிக்கொள்வேன். என்மேல் நன்றாய்ச் சாய்ந்துகொள். போகப் போக வழி இலகுவாகும்!' என்று சொல்லுகிறார்.

## டிசம்பர் 29

*'எழும்புங்கள், அந்தத் தேசத்தைப் பார்த்தோம். அது மிகவும் நன்றாய் இருக்கிறது. நீங்கள் சும்மா இருப்பீர்களா? அந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி அசதியாயிராதேயுங்கள். தேவன் அதை உங்கள் கையில் ஒப்புக்கொடுத்தார். அது பூமியிலுள்ள சகல வஸ்துவும் குறைவில்லாமலிருக்கிற இடம்' (நியா. 18:9,10). 'எழும்புங்கள்; நமக்குச் செய்யத் திட்டமானது ஒன்று இருக்கிறது. நாம் எடுத்துக்கொண்டாலன்றி ஒன்றும் நம்முடையதாகாது. 'இதை யோசேப்பின் புத்திரராகிய மனாசேயும், எப்பிராயீமும் சுதந்தரித்தார்கள்' (யோசு. 16:4). 'யாக்கோபின் வம்சத்தார் தங்களுடையதைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்' (ஒப. 1:17). 'நீதியுள்ளவர்கள் நன்மையைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.'*

தேவனுடைய வாக்குத்தத்தங்களைச் சுதந்தரித்துக்கொள்ளும் விசுவாசம் நமக்கு வேண்டும். தேவனுடைய வார்த்தைகளை நமக்கு உரிய சுதந்திரமாகப் பாராட்டவேண்டும். சுதந்தரித்துக்கொள்ளும் விசுவாசம் என்றால் என்ன என்று ஒரு சிறு பிள்ளையைக் கேட்ட போது, அது 'ஒரு எழுதுகோலை எடுத்து வேத புத்தகத்திலுள்ள, எனக்கு, என்னுடைய, என்னை, என்ற பதங்களை அடியில் கோடிட்டுக் குறித்து வைத்துக்கொள்ளுதல்' என்று சொன்னதாம்.

அவர் பேசியுள்ள எந்த வார்த்தையையும் எடுத்து 'இந்த வார்த்தை எனக்குச் சொல்லப்பட்டது' என்று சொல். ஒரு வாக்குத்தத்தின்மேல் உன் விரலை வைத்து 'அது என்னுடையது' என்று சொல். எத்தனை வார்த்தைகளில் கையெழுத்திட்டு உனக்கு முடித்ததாகக் காட்டியிருக்கிறது? எத்தனை வாக்குத்தத்தங்களை நீ காட்டி 'இது எனக்கு நிறைவேறியிருக்கிறது' என்று சொல்லக்கூடும்? 'மகனே! நீ எப்பொழுதும் என்னுடனே இருக்கிறாய். என்னுடையவைகள் யாவும் உன்னுடையவைகளே' நீ பெற்றுக்கொள்ளத் தவறி உன் சுதந்திரத்தைப் போக்கிக்கொள்ளாதே!

'விசுவாசம் கடைக்குச் செல்லுகையில்,
அது எப்போதும் கையில் ஒரு
கூடை எடுத்துச் செல்லும்.'

## டிசம்பர் 30

'பேதுரு சிறைச்சாலையிலே காக்கப்பட்டிருக்கையில் சபையார் அவனுக்காகத் தேவனை நோக்கி ஊக்கத்தோடே ஜெபம் பண்ணினார்கள்' (அப். 12:5).

பேதுரு சிறையிலிருந்தான். அவனைச் சிரச்சேதம் பண்ணும்படியாகக் காவலில் வைத்திருந்தார்கள். சபையாருக்கு அவனை தப்புவிக்கச் சக்தியில்லை. தப்புவிக்கக்கூடியவர்களின் தயவும் இல்லை. உலகப் பிரகாரமாய் உதவி செய்வாரில்லாவிட்டாலும், பரலோக உதவி கிட்டக்கூடியதாயிருந்தது. ஊக்கமாக, உருக்கமாக ஜெபித்தார்கள். தேவன் தமது தூதனை அனுப்பினார். அவன் பேதுருவை எழுப்பி, முதல் காவலையும், இரண்டாம் காவலையும் தாண்டி அழைத்துச் சென்றான். இரும்புக் கதவண்டை வந்தபோது, அது தானே திறந்து, பேதுரு விடுதலையடைந்தான்.

உன் வாழ்க்கையில் உன்னை முன்னேற விடாது தடைபண்ணும் இரும்புக் கதவு இருக்கலாம். கூட்டில் அடைப்பட்ட குருவிபோல் நீ கம்பிகளின்மேல் மோதியிருக்கலாம். உன் முயற்சியால் ஒன்றும்

நடவாமல் போனதுமன்றி, நீ களைத்து, வருந்தி விழுந்து கிடக்க லாம். நீ அறியவேண்டிய இரகசியம் ஒன்று உண்டு. அதுதான் நம்பிக்கையான ஜெபம். நீ இரும்புக் கதவண்டை வரும்போது, அது தானே திறக்கும். மேல் வீட்டில் ஜெபம் செய்துகொண்டு இருந்த சபையைப்போல், ஜெபம் செய்ய நாம் படித்துக்கொண்டோ மாகில், நம் சக்தி வீணுகாது. நாம் ஏமாற்றமடைவோம். கடக்க முடியாக் கஷ்டங்கள் மறைந்துபோம். தேவன்மேல் உள்ள விசு வாசத்தோடு ஜெபம் செய்தால் நமக்குப் பாதகமாகத் தோன்றும் காரியம் யாவும் சாதகமாகும். 'தேவனிடத்தில் விசுவாசமாயிருங் கள்' (மா. 11:22). சிறையிலடைப்பட்டிருக்கும் ஆத்துமாக்கள் கதவு திறக்கும்படி அநேக ஆண்டுகள் காத்திருக்கின்றன. சாத்தா ஞல் கட்டப்பட்டிருக்கிற கிறிஸ்துவின் பிள்ளைகள் தேவனை நம்பும் வரை நீங்கள் ஜெபித்தால் அவர்கள் விடுதலையடைவார்கள்.

அவசர காரியங்களுக்கு ஊக்கமான ஜெபம் தேவை. மனிதனே ஜெபம் ஆகும்போது அதன் சக்தியைத் தடைப்படுத்த ஒன்றுலும் முடியாது. கர்மேல் பர்வதத்தில் எலியா தன் முழங்கால்களுக்கு இடையில் தலையை வைத்துக்கொண்டு தரைமட்டும் குனிந்தான். அதுதான் அவன் ஜெபம். மனிதனே ஜெபரூபமானுன். வார்த்தை கள் இல்லை. வார்த்தை சொல்லக்கூடாதபடி அத்தனை ஊக்கமான ஜெபம் உண்டு. மனிதன் முழுமையாய்த் தேவனேடு உறவாடு கிறுன். தேவனேடு சேர்ந்து தீமைக்கு எதிர்த்து நிற்கிறுன். இவ் விதமான தத்ரூப ஜெபம் தேவை.

சொல்லமுடியாமல் வரும் பெருமூச்சுகள் தவிர்க்கமுடியாத ஜெபங்களாகும்.

—சி. எச். ஸ்பர்ஜன்

## டிசம்பர் 31

'இம்மட்டும் கர்த்தர் எங்களுக்கு உதவி செய்தார்' *(1 சாமு. 7:12).*

இம்மட்டும் என்ற வார்த்தை கடந்த காலத்தைச் சுட்டிக்காட்டும் கைபோலிருக்கிறது. 'இருபது வருடமோ, எழுபது வருடமோ, இம் மட்டும் கர்த்தர் எங்களுக்கு உதவி செய்தார்.' தரித்திரத்திலும், ஐசுவரியத்திலும், வியாதியிலும், துக்கத்திலும், புறத்திலும், வீட்டி லும், வெளியிலும், தரையிலும், கடலிலும், கனத்திலும், கனவீனத் திலும், கலக்கத்திலும், களிப்பிலும், சோதனையிலும், வெற்றியிலும், ஜெபத்திலும், கஷ்டத்திலும் இதுவரை கர்த்தரானவர் உதவி செய்வார்.

வரிசையாக மரங்கள் இருபுறமும் நிற்கும் அழகைப் பார்க்க நன்றுயிருக்கிறது. அதன் ஒரு கோடியில் நின்றுகொண்டு, மறு

கோடியைப் பார்த்தால் அது கிளைகளைத் தூண்களாகவும், இலைகளைக் கூரையாகவும் கொண்ட ஆலயம் போன்ற காட்சியளிக்கின்றது. அப்படியே முன்னால் நடந்துசென்ற ஆண்டுகளைப் பின்னால் திரும்பிப் பார்ப்போமாக! இரக்கமாகிய இலைகள் கூரையாகவும், பட்சமும், உண்மையும், நம்முடைய சந்தோஷத்தைத் தாங்கி நிற்கும் தூண்களாகவும் காட்சியளிக்கின்றன.

அந்தக் கிளைகளில் பாடும் பட்சிகள் இல்லையா? அநேகம் இருக்கும். அவை யாவும் 'இம்மட்டும்' பெற்ற இரக்கங்களைக் குறித்துப் பாடிக் களிக்கின்றன.

இந்த வார்த்தை முன்னோக்கிப் பார்க்கவும் செய்கிறது. ஒரு மனிதன் கொஞ்ச தூரம்போய் 'இதுவரை' என்று எழுதினால், அவன் இன்னும் முடிக்கவில்லை என்றும், போகவேண்டிய தூரம் இன்னும் இருக்கிறதென்றும் பொருள்படும். அதிகக் கஷ்டங்களும், சந்தோஷங்களும், அதிகச் சோதனைகளும், அதிகப் பலனும், அதிகப் போராட்டங்களும், அதிக ஜெபங்களும் இன்னும் உண்டு. நோய், முதுமை, வியாதி, மரணம் ஆகியவை பின்பு வரும்.

இப்பொழுது எல்லாம் முடிந்துவிட்டதா? இல்லை இன்னும் உண்டு. இயேசுவைப்போன்ற சாயலில் எழும்புதல், சிம்மாசனம், வீணை, பாட்டு, சங்கீதம், வெண் ஆடை, கிறிஸ்துவின் தரிசனம், பக்தரின் கூட்டத்தோடு ஐக்கியம், தேவ மகிமை காணல், நித்தியத்தின் பூரணம், எல்லையற்ற ஆசீர்வாதம் யாவும் உண்டு. விசுவாசியே திடன் கொள்! நன்றியறிந்த விசுவாசத்தோடு 'எபினேசர்' நாட்டு, ஏனென்றால்,

'இம்மட்டும்' உனக்கு உதவி செய்த கர்த்தர் முடிவுப்பரியந்தம் உனக்கு உதவி செய்வார். பரலோக ஒளியில் 'இதுவரை' என்ற வார்த்தையை வாசித்தால், உன் நன்றியுள்ள கண்களுக்கு அது எத்தனை மகிமையையும், அற்புதத்தையும் காட்டும்.

—சி. எச். ஸ்பர்ஜன்

ஆல்ப்ஸ் மலையில் ஆடு மேய்ப்பவர்கள் இரவு வீடு சேருமுன், பாட்டுப்பாடி, விடைபெற்றுக்கொள்ளும் ஒரு சிறந்த வழக்கம் வைத்திருக்கிறார்கள். ஆகாயம் தெளிவாயிருப்பதால் அவர்கள் பாட்டு வெகுதூரம் வரை கேட்கும். இருட்டு வரும்பொழுது, தங்கள் மந்தையைக் கூட்டிச் சேர்த்து, மலையிலிருந்து கீழ் இறங்குகையில் 'இதுவரை' கர்த்தர் நமக்கு உதவி செய்தார். 'அவரைத் துதிப்போமாக' என்று பாடிக்கொண்டு வருவார்கள்.

கடைசியில் ஒருவருக்கொருவர் 'நல்லிரவு நல்லிரவு' என்று பாடுவர். அந்த வார்த்தை நான்கு திக்கிலும் எதிரொலிக்கும். கடைசியில் அந்தச் சப்தம் வெகுதூரம்வரை கேட்டு நிற்கும்.

பிரயாணிகளான நாம் இருட்டில் ஒருவரையொருவர் கூப்பிடும் சப்தத்தின் எதிரொலி, அல்லேலூயா என்று இடிபோல் கோஷித்தெழும்புவதாக; விடியும் நேரத்தில் நாம் இரட்சிக்கப்பட்டவர்களின் திரள் கூட்டத்தில் நின்று,

'மகிமையும், கனமும், வல்லமையும், சிங்காசனத்தில் வீற்றிருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கே' என்று பாடுவோமாக!

இயேசு என்னை நடத்தினரென்பதே என் முடிவில்லாப் பாட்டாகும். 'மறுபடியும் அவர்கள் அல்லேலூயா என்று சொல்லி ஆர்ப்பரித்தார்கள்' (வெளி. 19:3).



